# ச‘ஹீ‘ஹ் பு’க’ாரீ

(தமிழில் பு’க’ாரீ சுருக்கம்)

ஷாஜஹான் புக் டெப்போ
சென்னை - 1

# ச'ஹீ'ஹ் பு'க'ாீ

## (தமிழில் பு'க'ாீ சுருக்கம்)

"தா்ருல் இஸ்லாம்" ஆசிரியரும்
:குர்ஆன் மொழிபெயர்ப் பாசிரியரு மாகிய
அல்ஹாஜ் பா. தாஊத்ஷா, பீ. ஏ.,
(கார்ப்பொரேஷன் ஆல்டர்மேன்)
அவர்களால் தையாரிக்கப்பட்டது




ஷாஜஹான் புக் டெப்போ
30, சாந்தோம் :: சென்னை, 4

இதன் விலை ] 1947 [ ரூ. 7–8–0

# முன்னுரை

பேரன்புடையீர்!

அஸ்ஸலாமு அலைக்கும். இதோ உங்கள் கரத்திடை மிளிர்வது ரசூலுல்லாஹ் (சல்அ'ம்) அவர்களின் புகழூடம்பு! இதைக் கண்ணியமாய்க் காப்பாற்றுங்கள்; இதிலுள்ள திரு வசனங்கட்குப் பணியுங்கள்; பிறர்க் கெடுத்துக் கூறுங்கள்; நம்மிடையுள்ள மாசை அகற்றுங்கள்; இதிலுள்ள மாட்சியைப் புகுத்துங்கள்.

ஆண்டவனளித்த வேதவாக்குத் திருக் குர்ஆன். அவன் திரு நபி திருவாய் மலர்ந்தருளியது இந்த ஹதீது ஷரீபு. நாமெல்லாரும் ஆண்டவனுக்குப் பயந்து, அவன் வேதத்தையும் பெருமைப் படுத்தக் கட்டுப்பட் டிருப்பதேபோல், அவனனுப்பிய இறுதிநபி யளித்துச் சென்றிருக்கும் இந்த ஹதீதைக் கௌரவப்படுத்து வதன் மூலம் நம் ரசூல் நாயகம் (சல்அ'ம்) அவர்களைக் கண்ணியப் படுத்தும் பெருமையைப் பெற்றுக்கொள்ளக் கடமைப்பட்டுள் ளோம்.

ஆசிரியரின் அல்லு பகல் அயராத பேருழியத்தின் உருவந் தான் இந்தப் புஸ்தகம். பல மாதங்களின் உழைப்பால் பிறந்த இதை ஊட்டிவளர்ப்பது உங்கள் கடமை. இதன் விலை கண்ணுக்கு அதிகமாய்த் தோன்றினாலும், தற்போதுள்ள கால நிலைமையில் (ரூபாய் ஒன்றுக்கு இரண்டரையணைக்கூட மதிப்பில்லாத இச்சம யத்தில்) இதன் கிரயம் மிகக் குறைவே. எனினும், இந்த ரூ. 7-8-0 கூடக் கொடுத்து வாங்க இயலாத பல முஸ்லிம்கள் இதுகாலை உங்களுள் இருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்களுக்கு நீங்களேதாம் வாங்கிக் கொடுக்கக் கட்டுப்பட் டிருக்கிறீர்கள்.

உங்கள் உற்றார், பெற்றார், உறவினர் அனைவரினும் மேலாக ரசூலுல்லாஹ்வை உவக்கக் கட்டுப்பட்டிருக்கிறீர்கள்— (பக்கம் 43 நோக்க). ஆண்டவனின் திருநபிக்கு நீங்கள் உண்மையாகவே செவிபணிகின்றீர்களா? என்பதற்கு இந்நூல் ஒரு சோதனையே யாகும். எங்களுக்கிருக்கும் ஒரு பேருணர்ச்சியின் அறிகுறியாக இதைப் பெரும் பாடுபட்டு, இக் காகிதப் பஞ்சகாலத்தில் கிடைக் கவே முடியாத காகிதத்தில், கூடியவரை பிழையின்றி, இதோ இங்குச் சமர்ப்பித்துவிட்டோம். இத்துடன் எங்கள் கடமை, ரசூ லுல்லாஹ்வை நாங்கள் எல்லோரினும் மேன்மையாக உவக் கின்றோம் என்னும் அத்தாக்ஷி முற்றுப்பெறுகிறது.

எங்கே, உங்கள் அத்தாக்ஷிகளை நிரூபியுங்கள்!

சென்னை,
30-4-'47.

இஸ்லாத்தின் ஊழியன்,
N. B. அப்துல் ஜப்பார்.

# நூன்முகம்

மெய்யன்பீர் !

இன்றே இத் தமிழ்நாட்டிற்கொரு நன்னிமித்த நாளாயிருக்கிறது; இன்றே நந்தமிழ்நாட்டு முஸ்லிம்களும், முஸ்லிம்களல்லாதாரும் பெருங் கொண்டாட்டங் கொண்டாட வேண்டிய ஒரு திருநாளா யிருக்கிறது. இன்றொரு மகிமை வாய்ந்த நாள்; மாஹாத்மியம் மிக்கநாள். ஏன்? எனின், இன்றுதான் 940 நாட் பிரயாசைக்குப் பின்னே லாஹுர் மௌலானா முஹம்மதலீயின் ஆங்கிலக் :குர்ஆன் இனியதமிழில் நனி மொழிபெயர்க்கப் பட்டு முடிவுற்ற நன்னாளா யிருக்கிறது என்பதனை யுன்னுக.* :குர்ஆன் ஷரீ'பைப் பைந்தமிழில் மொழிபெயர்த்தற்கென்றே யான்முன்னம் வகித்திருந்த சர்க்கார் உத்தியோகத்தை உதறித் தள்ளிவிட்டு, இங்கிலாந்துக்கு— வோக்கிங்குக்கு—க் காலஞ்சென்ற, கீர்த்தி மிக்க காஜா கமாலுத்தீனுடனே யாத்திரை சென்றேன் என்பது எல்லார்க்கும் இந் நாட்டிலே இனிது அறியக் கிடக்கின்றது. இதற்கும் முன்னே எனக்குப் பிராயம் 14 ஆகியக்கால், யான் கும்பகோணம் நேட்டிவ் ஹைஸ்கூலில் இரண்டாவது பாரத்திலே வாசித்துக்கொண் டிருந்தபொழுது, என்னுடைய இனிய இயற்றமிழாசிரியராய் விளங்கிவந்த மணலூர் வீ. இராமானுஜாசாரியரவர்கள் (பிற்காலத்தில் மஹாபாரத மொழிபெயர்ப் பாசிரியராய் விளங்கியுயர்ந்து மஹாமஹோபாத்யாயவா யிலங்கி, இப்பால் மரணமடைந்து போய்விட் டிருக்கும் பேராசிரியர்) என்னைப் பார்த்து, "ஏ சாஹிப் ஜீ! உமக்குத் தமிழில் நல்ல பயிற்சி

---

*மௌலானாவின் வியாக்கியான மகிமை அஃது அச்சாகி வெளிவருங்காலே செவ்விதிற் புலனாகும். "சப்" பென்றும் "வழவழா" வென்றும் தமிழல்லாத ஒரு தமிழெனப்படு மொழியிலே வியாக்கியானம் வரைவதால் இதுபொழுது யாதும் பயன்விளையமாட்டாது. இந்த இருபதாம் நூற்றாண்டில், ஒரு :குர்ஆன் ஷரீ'பின் மொழிபெயர்ப்பையும் அதன் வியாக்கியானத்தையும் படித்தால், தீ'னுல் இஸ்லாமே ஏனைச் சமயங்க ளெல்லாவற்றினும் மிகமிகச் சிறப்பு வாய்ந்த மதமென்று வாசிப்பவர்கள் பெருமையடைந்து, ஏனையவர்க்கெல்லாம் இவ்விறைவனது சத்திய சன்மார்க்கத்தை எடுத்துப் போதித் துணர்த்திப் பிரசாரம் புரிதற்குவேண்டிய சர்வ சக்தியும் வாய்க்கப் பெறுதல் வேண்டும். இத்தகைய உத்வேகமும் உணர்ச்சியுமேதாம் இக்காலத்திற்கு வேண்டப்படுவன. இவற்றினையே அளிக்கவல்லது லாஹுர் மௌலானாவின் மொழிபெயர்ப்பு வியாக்கியானம்.

ஏற்படும்.* இனியொரு பொழுது நீர் பீ. ஏ., பரீக்ஷையில் தேறி, சர்க்கார் உத்தியோகமும் பார்த்துவிட்டு, அப்பாலே உங்கள் திரு வேதமாகிய :குர்ஆனையும், ஏனைய ஆகமங்களையும் செந்தமிழில் மொழிபெயர்த்துத் தமிழ்மக்கட்குத் தந்துதவி புரிதல் வேண்டும்," என்று கூறி ஆசிர்வதித்தார்கள்.

ஆசிரியப் பெரியாரது ஆசீர்வாதத்துடனே, அல்லா(ஹ்) வின் நன்னாட்டமும் இருந்தவாறே, யான் எனது உத்தியோகத்தை உதறித்தள்ளினேன்; உலகமெல்லாம்—மேற்கே பர்லின் முதல் கிழக்கே சிங்கப்பூர் வரை, வடமேற்கில் டல்ஹவ்ஸீ முதல் தென் திசையில் சிலோன் வரை—சுற்றிவந்தேன்; துண்டு பிரசுரத்தி னின்று தழைத்தெழுந்த "தாருல் இஸ்லாம்" மாசிகையை வாரப் பதிப்பு, வாரமிருமுறைப் பதிப்பு, மும்முறைப் பதிப்பு, தினமுறைப் பதிப்பு, தினம் இருமுறைப்பதிப்பு ஆகவெல்லாம் நடாத்திப் பார்த்தேன்; பத்திரிகைகளில் பல்லாயிரக் கணக்கான பக்கங்களை யெல்லாம் வரைந்து தள்ளியதுடன், புத்தகங்க ளாகமட்டும் 1919 முதல் இன்றுகாறும் யான் 12,100 பக்கங்கள் வரை எழுதி யச்சிட் டுள்ளேன்; மார்க்க கிரந்தங்கள் வரைந்தேன்; மண வாழ்க்கை வரைந்தேன்; அரசியல் நூல்கள் எழுதினேன்; அல்புலைலா எழுதினேன்; மெஸ்மெரிஸம் பதிப்பித்தேன்; மேலான கட்டுக்கதைகள்—நவீனங்கள்—பதிப்பித்தேன். அச்சகமும் நிறுவி னேன்; அழகிய பல நூல்களும் வெளியிட்டேன். அவஸ்தைகளும் பல பட்டேன்; அடிகளும் சில பெற்றேன். 'பத்வாக்கள் பலப்பல வாங்கினேன்; சிற்சில சிவில், கிரிமினல் கேஸ்களில் சிக்கிச் சுழல விடப்பட்டேன்.† ஏசப்பெற்றேன்; பேசப் பெற்றேன்; இனியில்லா இழிவுகளெல்லாம் எய்தப் பெற்றேன். இப்பால் சுருக்கி முடிக்க வேண்டுமாயின், 1923-இல் (பிப்ரவரி மாதத்திலே) துவக்கப்பெற்ற :குர்ஆன் ஷரீ'பின் தமிழ் மொழிபெயர்ப்பு—"ஜவாஹிருல் 'புர்(க்):கான்—1942, பிப்ரவரி மாதம், 21-ஆந்தேதி சனியன்று தா. இ. தினசரி நின்றுவிட்ட காலம் வரை மூன்று

---

* 'செந்தமிழின் சுவை முன்னே தீந்தேனும் வேண்டேனே !' என்னுமா போன்று, யான் அவ் விளம்பிராயத்தே தமிழில் முதற்பரிசுபெற்று விளங்கி வந்தேன்.

† சிங்கைமாநகர் முஸ்லிம் மானநஷ்ட தஃ'வா உலகப்பிரசித்தியாயதும், அதில் எதிரி ஜே. மு'ஹம்மதிஸ்மாயீ'ல் மரிக்கான் 5,000 டாலர் மான நஷ்ட ஈடும், உயர்தரக் கோர்ட் செலவும் கட்டியதும் அனைவரும் அறிந்தனவே. யான் என்காரியத்தைச் செய்து வருகிறேன்; எதிரிகள் தங்கள் வேலையிலே தலையிட்டுக்கொண்டு திரிகிறார்கள்.

பாகங்களையே— அலி'ப் லாம் மீம், ஸப(க்):கூல், 'அ'ம்மயத்— முற்றுறப் பெற்று விளக்கிவைக்கலாயினேன். எனதூழியத்தையும் தமிழ் வளத்தையும் இம் மொழிபெயர்ப்புக்கெனப் பயன்படுத்திக்கொண்டு, "ஜவாஹிருல் 'புர்(க்):கானை" முடிவுற மொழிபெயர்த்துதவுமாறு தமிழ்நாட்டு முஸ்லிம் பிரமுகர்கள் பலப்பல பெரியார்கள்பா லெல்லாம் விண்ணப்பித்துப் பார்த்தேன். எல்லாரும் 'நல்லதுதான்' என்று சொல்லிச் செவிசாய்க்காது வெறுமனே இருந்து விட்டார்கள்.

எனினும், இறையருள் இருந்தவாறே, இறுதியிலே இத் தமிழ்நாட்டு மக்கள்மீது எல்லாம்வல்ல அல்லாஹுதஆலா வைத்துள்ள கிருபாகடாக்ஷ வீக்ஷண்யத்தின் காரணத்தால் பன்னூற்றுக் கணக்கான மைல்களுக்கப்பாலுள்ள பஞ்சாலநாட்டு லாஹூரி லுள்ள அஞ்சுமன் காரர்கள் தயைகூர்ந்து தமிழில் மௌலானா முஹம்மதலீயின் ஆங்கிலக் :குர்ஆனை மொழிபெயர்த்து முடித்துவிடுவ தென்னும் தீர்மானத்துடனே முன்வரத் துணிந்து, அதற்கு வேண்டிய நிதிகளையும் சேகரம் செய்துவந்து, இவ்வடியேனைக்கொண்டு அதனைப் பைந்தமிழில் பெயர்த்து முடித்துக்கொண்டு விட்டார்கள். 3–8–1944 வியாழன் மாலை 4 மணிக்குத் தொடங்கப்பட்ட இம்மொழிபெயர்ப்பு வேலை இன்றுகாறும் இறைவனருளால் இடையறுது நடைபெற்று வந்து, இன்று 28–2–1947 வெள்ளிக்கிழமையன்று பகல் 12-10 மணிக்கு எழுதி முடிக்கப்பட்டுவிட்டது. எல்லாப் புகழும் அவ் ஏக வல்லவனுக்கே! இத் தமிழ் மொழிபெயர்ப்பு வேலை ஆதியிலே 1923-இல் எடுத்துக்கொள்ளப்பட்ட பொழுது, இம் மஹா கிரந்தவேலையைத் துவக்கம் செய்த ஆலீ ஜனுப் மலங்கு அஹ்மத் பாக்ஷா சாஹிப், பீ. ஏ., இத்தமியேன், தா. இ. மானேஜர் ஜனுப் இ. அப்துர் ரஹ்மான் சாஹிப் ஆகிய யாங்கள் மூவருமே இருந்து இன்றுகாறும் இக் காரியத்தை யெழுதி முடித்து வைக்குமாறு எல்லாம் வல்ல இறைவன் அருள் பாலித்திருக்கிறுன். என்னே, இறையருள் இருந்தவாறு!

இச் சிறப்பேறப்பெற்ற மாபெருங் காரியத்தை யெடுத்து முடித்து வைக்கச் சற்றேறக்குறைய 23 ஆண்டுகள் கழிந்திருக்கின்றன* இதற்கென்று இதுபொழுது வரையப்பெற்றுள்ள

---

* எனக்கும் இதுபொழுது 62-ஆவது வயது பூர்த்தியாகின்றது. நபிகள் திலகம் (சல்அ'ம்) தங்கள் 40-ஆம் பிராயத்திலே நபிப்பட்டம் பெற்று, தங்கள் 63-ஆம் பிராயத்தில் ஆண்டவனது திருவடி நீழலையடையுமுன்னே இருபத்து மூன்று ஆண்டுகளுக்குள்ளே :குர்ஆன்ஷரீ'ப் முழுதையுமே

கையெழுத்துத் தாள்களின் எண்ணிக்கை 5,800; இவையெல்லாம் ஈராயிரம் பக்கங்களுள்ளே இறைவனருளால் இவ்வாண்டில் அச்சிடப் பெறலாம். இத்தனை ஏடுகளையும் சென்ற 31மாதங்களாக இடையறாது எழுதி முடித்துக்கொடுத்த இ. அ. ஐ இத்தமிழுலகம் என்றென்றும் மறக்கற்பாலதன்று. என் மைந்தர் அப்துல் ஜப்பாரும் இடையிடையே எழுதியுள்ளார்.*

ச'ஹீ'ஹ் பு'கா'ரீயைக் குறித்து நூன்முகம் வரையத் துணிந்த யான் இதுகாறும் ஏன் :குர்ஆன் ஷரீ'பின் மொழிபெயர்ப்பைப்பற்றி இத்துணை நீளமாய் எழுதிவந்தேனென்று நீங்கள் திகைப்புற்று வியப்புறுவீர்களென்பதை யான் அறியாது போய்விட வில்லை. ஏன் அவ்வாறு எழுதினேன்? எனின், யான் ஆதி முதற்கொண்டே 'கொண்டிருந்த :குர்ஆன்ஷரீ'ப் முதலிய பல கிரந்த மொழிபெயர்ப்பில் முக்கிய முதற் கிரந்தமாகிய அல்லா(ஹ்)வின் திருவேதம் அதிக சிரமத்துடனே அருந்தமிழில் ஆக்கப்பெற்று முடிவடைந்து விட்டதென்னும் சுபச்செய்தியை இத்தமிழ் நாட்டினர்க் கெல்லாம் செவ்விதிற் புலப்படுத்தற்கே யாம் என்க. இதில் இனியொரு கருத்தும் அடங்கியிராது போய் விடவில்லை: இத்தமிழ் நாட்டு முஸ்லிம்கள் எத்துணை மட்டும் இஸ்லாத்தின் மதகிரந்தங்கள் செந்தமிழில் வெளிவர வேண்டிய விஷயத்தில் அலக்ஷியமாகவும் அசிரத்தையுடனும் இருந்து வந்த போதினும்,† அல்லாஹுத் தஆ'லா மட்டும் இவர்கட்கு அனுக்

அல்லா(ஹ்)வின்பா விருந்து வ'ஹீயின் வாயிலாய் வருவித்துத் தந்ததோடு நின்றுவிடாது, அநேகவித இன்னல்களுக்கும் இடையூறுகளுக்கு மெல்லாம் உட்பட்டு வந்து, பலப்பல தற்காப்புப் போர்களை யெல்லாம் புரிந்து மாபெரும் வெற்றிபெற்று, இறுதியிலே இவ்வுலகினுக்கு எல்லாக் காலத்திற்கும், எல்லா நாட்டிற்கும், எல்லா ஜாதி மக்களுக்கும் என்றென்றும் சிகரமாய் நின்று விளங்கக்கூடிய இவ்வுயரிய "இஸ்லாம்" என்னும் இனிய மார்க்கத்தையும் என்றென்றும் அழிவுறா முறையிலே நிலைநிறுத்தி விட்டுச் சென்றார்கள். என்னே அன்னவர்கள் செய்து முடித்த செயற்கரிய மாபெரும் காரியம்!

"சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்"—என்பது குறள்.

* அல்லா(ஹ்)வின் வேத வாக்கியங்களை எழுதும் இலேககர்களைக் குறித்து இறைவனும், "நேர்த்தியாக்கப்பட்டவை, பரிசுத்தமாக்கப்பட்டவை, இலேககர்களின் கரங்களிலே; (அவர்கள்) சங்கையானவர்கள், நல்லொழுக்கமுள்ளவர்கள்," என்று இயம்பியுள்ளான் (:குர். 80 : 14—16).

† நந் தமிழ்நாட்டு முஸ்லிம் பெருமக்கள் இஸ்லாத்திற்காகவும், இதன் திருநபிக்காகவும் புராதன வழக்கப்படி மிகச் செல்வமே செலவிட்டு வரு

கிரஹம் புரியாது அலக்ஷியமாகவும் அசிரத்தையுடனும் இருந்து விடவில்லை.

ஆதியிலே யான், :குர்ஆன்ஷரீ'ப், 'ஹதீ':து ஷரீ'ப் நபிகட்டிலகத்தின் உண்மைச் சரிதை ஆகியவை செந்தமிழில் வெளிவர வேண்டுமென்று விழைந்து நின்றேன். நபிகட்டிலகத்தின் மெய்யான, சரியான சரிதை—"நபிகள் நாயகமான்மியம்"—1932-இல் எழுதிமுடிந்து, முதல் வால்யூம் அச்சில் வெளிவந்தும், இதுவரை நந்தமிழ் முஸ்லிம்களின் உபேக்ஷையால் எஞ்சியுள்ள இரு வால்யூம்களும் அச்சாகாமலே உறங்கிக் கிடக்கின்றன. இதுபொழுது தான் ஒரு சில முஸ்லிம் கனவான்களின் சொந்த முயற்சியால் ஒரு தொகை நிதிவசூல் செய்யப்பட்டு, சேமத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. அச்சக வசதியும், காகிதப் பஞ்சநிவர்த்தியும் ஏற்பட்டவுடனே அந்தக் கிரந்தம் முழுவதுமே அச்சுக்கு எடுத்துக்கொள்ளப்படும், இன்ஷா அல்லா(ஹ்). இவ்வளவே போதும் இது பொழுது ந. நா. மா. குறித்து.

அடுத்தபடியில், யான் நபிபெருமானுடைய சொல் செயல்களடங்கியுள்ள, சரியான, நம்பத்தக்க, மெய்யான— ஸ'ஹீ'ஹான— 'ஹதீ':து ஷரீ'பக் குறித்து எடுத்துப் பேசக்கடவேன். 'ஹதீ':து சம்பந்தமாயுள்ள கிரந்தங்கள் அநேகமுள. அவற்றுள்ளெல்லாம் சி'ஹா'ஹ் சித்தா—"ஆறு நம்பத்தக்க கிரந்தங்கள்"—என்னும் நாமம் பூண்டுள்ள தொகுதிகளே மகா முக்கியமானவைகளாம். இவற்றுள்ளும் புக்'ஹாரீ— இதனை முழுமையாய்ச் சொல்ல வேண்டுமாயின், "மு'ஹம்மத்' இஸ்மாயீ'ல் அல் புக்'ஹாரீ சேகரித்துள்ள ஜாமிஃ'" என்றழைக்கப்படுவதாகிய— கிரந்தமே முதன்மையான உச்சஸ்தானத்தை வகித்துக்கொண்டிருக்கிறது; இத்தகைய முக்கியத்துவத்துடனேயும் இதுதான் முதன்முதலில் தொகுக்கப்பட்ட 'ஹதீ':து சம்பந்தமாயுள்ள ஆதிகிரந்தமாயிருந்து வருகிறது. இத்தொகுப்பு நூலுள்ளே உத்தேசம், 9,082 ஸ'ஹீ'ஹான 'ஹதீ':துகள் உண்டென்ப. இந்த இமாம் அறிந்திருந்தவை ஆறிலக்ஷம் 'ஹதீ':துகள்; இவற்றுள்ளே இரண்டிலக்ஷம் வரை மனப்பாடம் பண்ணியிருந்தார்.— என்னே ஆச்சரியம்! என்னே

கின்றனர். ஆனால், செந்தமிழ் நூல்கள் வாயிலாய்ப் பிரசாரம் புரிவதன் பெருமையை இன்னம் இவர்கள் நன்குணரவில்லை. கிறிஸ்தவர்கள், ஆரியசமாஜிகள், ஹிந்துமஹா சபாக்காரர்களெல்லாம் நூல்கள், பிரசுரங்கள் ஆதியவற்றால் பிரசாரம் புரிந்து நற்பயன் பெறுகின்றார்கள். முஸ்லிம்கள் இத்துறையில் ஈடுபடுவதன் நற்பயனை இன்னம் அறியவில்லை; அறிந்தால் விடமாட்டார்கள்.

அன்னாரின் ஞாபகசக்தி!! இவ்வாறே ஏனைய ச'ஹீ'ஹான ஐந்து கிரந்தங்களிலும், இவையல்லாத வேறு நம்பத்தக்க கிரந்தங்களிலும் இன்னம் எத்தனை எத்தனை மெய்யான 'ஹதீ':துகள் இருந்திடுதல் கூடும்? இவற்றுள் ளெல்லா மிருந்து, இஸ்லாம் குறித்து எம்பெருமானார் (சல்அ'ம்) எவ்வாறு தங்கள் சொந்தத் திருவாக்கால் போதித்துச் சென்றுளார்களென்றும், எம் முஸ்லிம்கள் அப்பெருமானாரின் அடியொற்றி நடந்து—(ஸுன்னத்தைக் கடைப்பிடித்து) எவ்வாறு மிக்க நல்ல முறையிலே இத்தரணியில் ஒழுகிவர வேண்டுமென்றும் அறிந்துணர்தற்குரிய 'ஹதீ':துகளைப் பொறுக்கி யெடுப்பதென்பது ஒரு கஷ்டசாத்தியமான காரியமாயிருந்து, பல்லாண்டுகளாகவே என் மூளையைக் கலக்கி வந்து கொண்டிருந்தது.

இவ்வாறாக யான் 1933 முதலே தத்தளித்து வந்தக்கால், நல்லதிருஷ்ட வசமாக '44-இல் ஆங்கிலத்தில் வெளியான 'ஹதீ':துகைக்கிரந்தம்— A Manual of Hadith என்றொரு சுருக்கத் தொகுப்பு நூல்— என் கைக்குக் கிட்டிற்று; இதுவும், அந்த லாஹூர் மௌலானா முஹம்மதலீ சாஹிபவர்களாலே 31 அத்யாயங்களாகத் தொகுக்கப்பட்டு, 690 'ஹதீ':துகளை யுள்ளடக்கியதாய், அன்னாரின் ஆங்கிலக் :குர்ஆன் மாதிரிகை போலே, ஒவ்வொரு பக்கத்தின் வலப் பாதியிலே அரப்'ஹதீ':தும்— [ம(த்)தன், அஃதாவது, 'ஹதீ':தின் "அயன் பகுதி"] இடப் பாதியிலே ஆங்கில மொழிபெயர்ப்பும், அடியிலே வழக்கம்போலே அப்பெரியாரின் அரிய ஆராய்ச்சி விரிவுரையும் கூடியுள்ளதாய் வெளி வந்துள்ளது. இச்சிறந்த நூலில் சரித்திர சம்பந்தமா யுள்ள, அல்லது தீர்க்கதரிசன சம்பந்தமா யுள்ள 'ஹதீ' :தொன்றும் காணப்படாது, அனைத்தும் நம் முஸ்லிம்களின் அனுஷ்டான வாழ்க்கைக் குரிய அத்தியாவசிய விஷயங்களாகவே யிருந்து வருகின்றன. இதில் காணப்படும் 690 'ஹதீ':தில் சற்றேறக் குறைய 513 பு'கா'ரீ ஷரீ'பிலிருந்து எடுத்தாளப்பட்டிருக்கின்றன; ஏனைய வெல்லாம் ஏனைக் கிரந்தங்களிலிருந்து — முக்கியமாக அந்தக் கீர்த்தி வாய்ந்துள்ள "மிஷ்காத்"திலிருந்து — பொறுக்கி யெடுக்கப்பட் டுள்ளன. மௌலானாவின் அத்யாயங்க ளெல்லா மும்கூட, பு'கா'ரீயின் அடுக்கினையே அநேகமாய்ப் பின்பற்றி நிற்கின்றன.

யான் எனது நோக்கத்திற்கு இதுவே தகுதிவாய்ந்த கிரந்தமெனத் தேர்ந்தெடுத்துக் கொண்டேன். எனவே, இச்சிறு நூலில் அந்த லாஹூர் மௌலானாவின் மொழிபெயர்ப்பும்

வியாக்கியானக் கருத்துமே நந் தமிழில் மிகவழகாய் வெளி வந்துள்ளன வென்று தாராளமாகவும் தைரியமாகவும் யான் கூறத் துணிகின்றேன்.* இத்தமிழ் நாட்டிலே காணப்பட்டுவரும் சிற்சில அனுசாரங்கள் சம்பந்தப்பட்ட மட்டிலே மட்டும் என்னுற் சிறிது சேர்க்கப்பட்டிருப்ப தன்றி, ஏனையவெல்லாம் அந்த மௌலானு வின் சொந்த விஷயங்களேயாம். எனவே, இக் கைக்கிரந்தத்தில், பிற்கால வியாக்கியானங்களுக்கு முன்னே, ஆதியி லிருந்துவந்த இஸ்லாத்தின் கலாசாரமும் ஒழுக்காசாரமும் எவ்வாறு "அப்பட்டமாக" இருந்து வந்தன வென்பதை நீங்கள் நன்கறிந்து கொள்ளலாம்; அஃதாவது, நபிகள் பெருமானுர் (சல்அ'ம்) என்ன சொல்லி வந்தார்கள்? எவ்வாறு நடந்து காட்டினுர்கள்? அப்பெருமானுரின் தோழர்களெல்லாம் என்ன வாழ்க்கை வாழ்ந்து வந்தார்கள்? என்பனவற்றை யெல்லாம் செவ்விதா யறிந்துகொள்ளலாம் என்பதேயாம்.

இந்த 'ஹதீ':து கிரந்தத்தில் இரு விஷயங்கள் முக்கியமாய்க் கவனிக்கப்பட வேண்டுவனவா யிருக்கின்றன: முதலாவதாக, இந்நூலின் ஒவ்வோர் அத்யாயத்தின் ஆரம்பத்திலும் அந்த அந்த அத்யாயத்திற்கு ஏற்றவாறுயுள்ள :குர்ஆன் ஷரீ'பின் ஆயாத்கள் பொறிக்கப்பெற் றிருப்பதைக் காணலாம். பு'க'ாரீ ஷரீ'பிலும் முக்கியமான அத்தியாயங்களுக் கெல்லாம் :குர்ஆன் ஷரீ'பின் ஆயாத்கள் ஒன்றிரண்டு வரையப்பட்டே யிருக்கின்றன. இதனுல் விளக்கமாவது யாதெனின்: 'ஹதீ':து ஷரீ'பென்பது :குர்ஆன் ஷரீ'பின் வியாக்கியானமாகவே இருந்துவருகிற தென்பதும், இஸ்லாத்தின் போதனைக்குரிய மூலாதாரங்களில் :குர்ஆன் ஷரீ'புக்கு அடுத்தபடியில் இரண்டாவதாக நிற்பது இந்த 'ஹதீ':து ஷரீ'பே என்பதும் நன்கு விளக்கமாகின்றன என்பதேதாகுகும். இன்னம், இந்நூலில் காணப்படும் இரண்டாவது விஷயம் வேறெந்த 'ஹதீ':து கிரந்தங்களிலும் காணப்படாத ஒரு நூதன விசேஷமா யிருந்து வருகிறது; அஃதாவது, ஒவ்வோர் அத்யாயத்தின் ஆரம்பத்திலும் :குர்ஆன் ஷரீ'பின் ஆயாத்கள் வரையப் பெற்றிருப்பதன் பின்னே ஒருவகைத் தலைப்புக் குறிப்புப் பொறிக்கப்பெற் றிருப்பதைக் காணலாம்; அக்குறிப்பிலே அவ்வத்யாய விஷய சம்பந்தமாகக் :குர்ஆன் ஷரீ'பிலும் 'ஹதீ':து ஷரீ'பிலும் கூறப்பெற்றுள்ள விஷயங்களின் சுருக்கமொன்று யிருந்து

---

* இக் கிரந்தத்தில் அரபு மூலம் இல்லை; எனினும், அரபுக்குப் பொருத்தமான தமிழ் மொழிபெயர்ப்பே செய்யப்பட்டுள்ள தென்று செப்பலாம்.

வருகிறது அங்குள்ள விஷயம். அவ்வவ் அத்யாயத்திலுள்ள ஒவ்வொரு 'ஹதீ':தின் சுருக்கமும் அத்தலைப்புக் குறிப்பிலே வரையப்பெற் றிருக்கின்றமையால், இக்கிரந்தத்தைப் படிப்பவர் நற்பயனைப் பெற்றுக்கொள்ள வசதி ஏற்பட்டிருக்கிறது: அவரவரும் தத்தமக்கு வேண்டிய 'ஹதீ':தைக் கண்டு பிடித்தற்கு அஃதோர் அட்டவணையேபோல் அமைந்திருக்கின்றது. ஆகையால், ஓரத்யாயத்தி லுள்ள எல்லா 'ஹதீ':துகளையும் புரட்டிக் கொண் டிராமல் அத் தலைப்புக் குறிப்பைமட்டும் பார்ப்பதைக் கொண்டே தத்தமக்கு வேண்டிய 'ஹதீ':தினைக் கண்டு பிடித்து விடலாம். இதனால், இக்காலத்தில் மக்களெல்லாம் ஆகாய விமான வேகத்திலே இவ்வுலக காரியங்களில் பறந்துகொண் டிருக்கிறபடியால், அதிகமான அவகாசத்தை ஆத்மார்த்தத்துக் கென்று அடையப் பெறுதவரெல்லாம் எளிதிலே இந்நூலிலுள்ள குறிப்பிட்ட 'ஹதீ':தைச் சட்டெனக் கண்டுபிடித்துத் தமக்கு வேண்டிய விஷயத்தை விளங்கிக் கொள்வார்களாக. "ஆடுந் திரிகை அரைச்சுற்று வருமுன்னே ஓடுங் கவலை ஒரு கோடி" என்னுமாறே உலகாயத வாழ்க்கை யென்பது ஒவ்வொருவரையும் இதுகாலைப் பீடித் தலைத்துக்கொண் டிருக்கிறது.

எனக்கு இதுபொழுது வயது 62 ஆய்விட்டதென்று யான் முன்னமே தெரிவித்துளேன். எனவே, எனக்குரிய எஞ்சிய ஆயுட்காலத்தை இஸ்லாத்தின் பிரசாரத்திற்காகவும், இதன் உயர்விற்காகவுமே அர்ப்பணம் செய்துவிட் டிருக்கின்றேன். இதற்கு முன்னே ரூ'ல'பாயெ ராஷிதீ'ன் வரிசையில் ஐந்து நூல்களை வெளியிட் டிருக்கின்றேன். இனிக் :குர்ஆன் ஷரீ'பின் சுருக்க மொன்று இந்த 'ஹதீ':து (பு'க'ாரீ) சுருக்கம்போன்ற மாதிரிகையில் வெளிவரல் வேண்டும்; :குர்ஆன் ஷரீ'புக்கொரு முன்னோட்டம், இஸ்லாத்தின் மூலாதாரங்கள்,* இஸ்லாத்தின் சித்தாந்தங்கள்,† இஸ்லாத்தின் ஏனை விஷயங்கள் என்பன வெல்லாம் எழுதி அச்சிட்டு வெளிவரல் வேண்டும். இவை யெல்லாவற்றினோடும் "மோ(ன்)த்தே கிறிஸ்தோவின் முடிசூடா மன்னன்"—The Count of Monte Cristo‡—என்னும் நவீனம் அச்சிடப்படல்

---

* இந்நூல் எழுதி முடிக்கப்பெற் றுள்ளது. இனி அச்சாக வேண்டும்.

† இஸ்லாத்தின் அனுஷ்டானங்கள் என்பனவே எமது **இஸ்லாம்** என்னும் நூல்.

‡ அலெக்ஸாந்தர் துமாவென்னும் ஆசிரியப் பெரியாரால் 6 வால்யூமில் பிரெஞ்ச் மொழியில் வரையப்பட்டு உலகப் பிரசித்திபெற்றுள்ள **லெ கோ(ன்)த் த மோ(ன்)த்தே கிறிஸ்தோ** வென்னும் நாவல் 1885 கையெழுத்துத் தாளில்

வேண்டும் ;—(இஃதொரு சிறந்த, இனிய அறிவூட்டும், நல்ல நவீனம்). இத்தனை நூல்களுள் எத்தனையை இத்தமியேனால் வெளியிட்டப்பட வேண்டியவையென்று எல்லாம்வல்ல இறைவன் தனது திருவுளச் சித்தத்திலே எண்ணியிருக்கிறானோ யானறிகிலேன். யான் இத் தமிழ்நாட்டு முஸ்லிம்களுக் கென்று என தாயுளைத் தத்தம் செய்து விட்டேன். என்னை இனிப் பயன் படுத்திக்கொள்ள வேண்டுவது இங்குள்ள எம் முஸ்லிம்களின் கடமையேயாம். இது நிற்க.

இதுபொழுது இந்த ‘ஹதீ’:து கிரந்த நிதிக்கென்று பண உதவி புரிந்துள்ள பிரமுகர்களின் பெயரும், அவரவர் உதவியுள்ள தொகையும் வருமாறு :—

1. சென்னை, அங்கப்ப நாய்க்கன் தெரு; ஆலீஜனாப் அல் ஹாஜ் எஸ். முஹம்மத்ஜான் சாஹிபும், குடந்தையை யடுத்துள்ள சோழபுரம், ஆலீஜனாப் அல்ஹாஜ் சி. அ. முஹம்மத் இஸ்மாயீல் சாஹிபும் ரூ. 1,500.— (இது கடனாக உதவப்பட்டது).

2. யாழ்ப்பாணம், ஹாஜீ வீ. எம். எம். எஸ். அப்துல் காதிறு தம்பதிகள் ரூ 250

3. சிலோன், பதுளை, மஹ்பூப் சொஸைட்டி ரூ. 100.

4. சிலோன், பண்டாரவளை, முஸ்லிம் லீக் ரூ. 100.

5. திருநெல்வேலி ஜில்லா, கடையநல்லூர், ஆலீ ஜனாப் அ. செ. மு. ஷாஹுல் ஹமீத் அவர்கள் ரூ......

6. திருநெல்வேலி ஜில்லா, புளியங்குடி முஸ்லிம் ஜமாஅத் ரூ. 50.

இந்தக் கிரந்தத்தில் காணப்படும் ( ) இம் மாதிரியான பிறை வளைவுகளுள்ளும், [ ] இம் மாதிரியான ப வளைவுகளுள்ளும் (சல் அ’ம்) என்பது ஒன்று நீங்கலாக ஏனை வளைவுகளெல்லாம் என்னுடைய சொந்த வளைவுகளேயாம்; (சல்அ’ம்) என்பது மட்டும், அவ்வவ் விடத்திலே சல்லல்லாஹு அ’லைஹி வஸல்லம் என்று மூல கிரந்தத்திலே காணக்கிடக்கும் வாக்கியத்தின் சுருக்கமா யிருக்கிறது. (ரலி’) என்பது மூல ‘ஹதீ’:துகளில் எங்குமே காணப் படவில்லை; எனினும், ஒரு சில முக்கியமான பெயர்களுடனே

---

தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு, 2-6-1940 முதல் அச்சுவாகன மேறக் காத்து நிற்கின்றது. இந் நவீனத்தின் அருமையும் அழகிய பெருமையும் அறிந்தவர்களே முன்வந்து இதனை அச்சியற்ற உதவிபுரிதல் வேண்டும், எந்தப் பிரமுகர் இதற்கென்று காத்துக்கொண் டிருக்கிறாரோ, யானறிகிலேன்.

யானே இந்த (ரலீ) என்பதை இணைத் திருக்கிறேன். :குர்ஆன் சம்பந்தப்பட்டவரை 2 : 177 போல வருமிடங்களி லெல்லாம் முதல் இலக்கம் ஸூராவையும், இரண்டாமிலக்கம் ஆயத்தையும் குறித்துக் காட்டும்; ('ஹதீ'. 10) என்றுற்போன்ற இலக்கங்கள் அந்த அந்த அத்யாயத்தின் 'ஹதீ':துக்குரிய இலக்கத்தைக் குறிக்கும். இந்நூலிலுள்ள, நபிபெருமான் கூறியுள்ள திருவசனங்களெல்லாம் இவ்வாறு "......" இரட்டை யடையாளங்களுக்குள்ளே நுழைக்கப்பட் டிருக்கின்றன. 'ஹதீ':துகளின் இறுதியில் காணப்படும் (பு'க'ா. 2 : 20) போன்ற இலக்கங்களில் பு'க'ா. என்பது பு'க'ாரீ ஷரீஃபயும், 2 : 20 என்பன இரண்டாம் புத்தகம், இருபதாம் அத்யாயம் என்பவற்றையும் குறித்துக் காட்டும்; அ'ஹ்ம தி'ப்'னு 'ஹன்பலின் (ர'ஹ்) மஸ்னதி'ல் மட்டும் முதல் இலக்கம் வால்யூமையும், இரண்டாமிலக்கம் பக்கத்தையும் குறித்துக் காட்டும். மிஷ்காத்திலிருந்து எடுக்கப்பட்டுள்ள 'ஹதீ':துகளுக்கெல்லாம் அந்த "மிஷ்காத்" எந்தக் கிரந்தத்திலிருந்து அந்த 'ஹதீ':தை எடுத்திருக்கிறதோ, அந்தக் கிரந்தத்தின் நாமமும் உடன் பொறிக்கப்பட்டே யிருக்கின்றது.

| | | |
|---|---|---|
| அபூ'த'ா. | அ'பூ'த'ாவூதை'க் | குறிக்கும். |
| இப்'னுமா. | இப்'னுமாஜாவைக் | ,, |
| த'ார். | த'ாரகுத்னீயைக் | ,, |
| 'திர்மி. | 'திர்மி'தீயைக் | ,, |
| நஸா. | நஸாயீயைக் | ,, |
| நிஹா. | நிஹாயாவைக் | ,, |
| 'பரா. | 'பராயிது'த்'து'ர்ரிய்யாவைக் | ,, |
| பு'க'ா. | பு'க'ாரீ ஷரீஃபக் | ,, |
| பை''ஹ:க். | பை''ஹ(க்):கீயைக் | ,, |
| மஸ். | அ'ஹ்மதி'ன் மஸ்னதை'க் | ,, |
| மிஷ். | மிஷ்காத்தைக் | ,, |
| மு. ரா. | மு'ப்ரத'ாத் ரா:கிபை'க் | ,, |
| முவத். | முவத்தாவைக் | ,, |
| முஸ். | முஸ்லிமைக் | ,, |

இந்தக் கிரந்த முழுதையும் யானே அநேகமாய் மொழி பெயர்த்து வரைந்துளேன்; சிற்சில சந்தர்ப்பங்களில் ஜனாப்களான இ. அ., என். பீ. அப்துல் ஜப்பார் பீ. ஏ., இருவரும் இலேககர்களாக உதவி புரிந்துள்ளார்கள். என் மைந்தர் அப்துல் ஜப்பார் இதன் கையெழுத்துப் பிரதியை முழுமையாய்ப் பரிசீலனை செய்து உதவினர்; பற்பல திருத்தங்களும் கூறினர். மீக் கூறிய

வர் இதன் அச்சுப்பிரதியைப் பிழையறப் பரிசோதித்ததிலும் எனக்குப் பேருதவி புரிந்துள்ளார். சென்னை, திருவல்லிக் கேணி, "கபீர் பிரிண்ட்டிங் வொர்க்ஸ்" சொந்தக்காரர் சிரமம் பாராட்டாது இதனை அதிசீக்கிரத்திலே அச்சியற்றித் தந்துளார். சென்னை "நூருல் இஸ்லாம்" ஆசிரியர் ஆலீ ஜனாப், ஏ. என். ஹாபிஸ் முஹம்மது யூசுப் (பாஜில் பாகவீ) அவர்கள் எனக்கு ஏற்பட்டுவந்த ஐயங்களை யெல்லாம் அப்போதைக் கப்போது சிறிதும் சிரமம் பாராது களைந்து வந்துளார்கள். இவர்கட் கெல்லாம் எனது மனமார்ந்த நன்றி உரித்தாகுக. எனது வயது முதிர்ச்சியாலேனும், வேறு அயர்ச்சி மறதிபோன்ற காரணத்தா லேனும் இந்நூலில் பிழை ஏதும் காணப்படின், அதனை அன்புடன் வரைந்தனுப்பும் நண்பருக்கு நன்றிகூறி, அத்திருத் தத்தினை அடுத்த பதிப்பிலே செப்பஞ் செய்துவிடக் கடவேன். இத்துணை மட்டும் இத்தமியேனைத் தனதூழியத்திலே நற்பயன் படுத்திவரும் எல்லாம்வல்ல அல்லாஹுத் தஆ'லாவை யான் அன வரதமும் சிந்தித்து வந்திக்கின்றேன். எனவே, இத்தமிழ் நாட்டு முஸ்லிம்களை இந்நூல் நபிபெருமானது அடியொற்றி நடக்குமாறு ஒருவாறே செய்துவிடினும், யான் இதனை மொழி பெயர்த்து அச்சிட்டு வெளியிட்டுள்ள பாக்கியத்தை நிரம்பப் பெற்றதா யெண்ணி இறுமாந்து விடக்கடவேன்.

அ'ரப்'மூலம் சேர்ப்பது அப்பாலே கவனிக்கப்படும், இன்ஷா அல்லா(ஹ்).

கவியால் உரைத்தபுகழ் பெறுவார் மிகுத்தகவி
அடைவார் கலக்கம் அறவே
செவியார மெய்ப்பொருளை யறிவார் மனத்தினுறு
செயல்கே(டு) அகற்றி விடுவார்
புவியார மொய்த்தநெறி மறைநாவி னுக்குமொரு
பொறியாய் உதித்த வடிவார்
நவியார் சுவர்க்கபதி நயினார் பதத்துணையை
நடுநாவில் வைத்த வர்களே— சீறா.

"தாருல் இஸ்லாம்"
30, சாந்தோம், சென்னை 4.
28—2—1947.

இன்னணம்:
இஸ்லாமிய ஊழியன்,
[signature]

# பொருளடக்கம்

---

[குறிப்பு: 408-ஆம் பக்கத்திலுள்ள அடிக்குறிப்பில் 4-ஆவது வரியில் உள்ள "கம்மிஷன் ஏஜெண்ட்"டின் என்னும் வார்த்தைகளை நீக்கிவிட்டு, "தரகனின்" (Broker) என்று திருத்திக் கொள்க.]

# அரபுக்குத் 'தமிழை ஒப்பாக்கும் விதம்

| உச்சரிப்பு | உச்சரிப்பின் சப்தம் | அரபுக்கொத்த தமிழ் எழுத்து' |
|---|---|---|
| அலி'ப் | அகர சப்தம் .... .... | அ |
| பே' | தம்பி என்பதிலுள்ள பி சப்தம் (B) | ப' |
| ·த | தலை என்பதிலுள்ள த சப்தம் .... | ·த |
| :த | நுனிநா மேல்வாய் முன்பல்லின் முனையை மிருதுவாகப் பொருந்த அழுத்தமாக உச்சரிக்கும் சப்தமாகும்—Nothing .... | :த |
| ஜீம் | .... .... .... .... | ஜ |
| 'ஹயெ | ஹ வை அடித் தொண்டையால் உச்சரிக்க வேண்டும் .... | 'ஹ |
| க'யெ | தொண்டையைக் காறுவதால் உண்டாகும் சப்தம் .... | க' |
| த'ால் | தானம் என்பதிலுள்ள த சப்தம் .... | த' |
| 'தால் | மனிதன் என்பதிலுள்ள த சப்தம்.... | 'த |
| ரே | .... .... .... .... | ர |
| 'ஜ | ஜ சப்தத்தை நுனி நாவால் உச்சரிக்க வேண்டும் (Z) .... | 'ஜ |
| ஸீன் | .... .... .... .... | ஸ |
| ஷீன் | .... .... .... .... | ஷ |
| ஸ்'வாத்' | ஸ்உவா என்பதைச் சேர்த்தாற் போல் அழுத்தி உச்சரிக்க வேண்டும் .... .... | ஸ'–ச |
| ல்'வாத்' | ல்உவா என்பதைச் சேர்த்தாற் போல் இதழ் குவித்து உச்சரிக்க; இதன் சப்தம் ளகாரத்துக்கும் லகாரத்துக்கும் இடையிலிருக்கும் .... | ல' |

| உச்சரிப்பு | உச்சரிப்பின் சப்தம் | அரபுக்கொத்த தமிழ் எழுத்து |
|---|---|---|
| ;த்ஒயெ | த்ஒயெ என்பதை நெருக்கி உச்சரிக்க வேண்டும் .... | ;த |
| ள்'ஓயெ | ள்ஓயெ என்பதை நெருக்கி உச்சரிக்க வேண்டும்; இது ளகரத்தினும் மெல்லிய சப்தமாகும் .... | ள' |
| அ'ய்ன் | அகர சப்தத்தை அடித்தொண்டையால் ஆழமாக உச்சரிக்க வேண்டும் .... | 'அ' |
| ஷை | ஷை மெய்யெழுத்து உச்சரிப்பு .... | ஂ' |
| ;கய்ன் | கனம் என்பதிலுள்ள வடமொழி க சப்தத்தை அடித் தொண்டையால் உச்சரிக்க வேண்டும்: "காக்கை யிருந்து க;க;கெ;கண" .... | ;க |
| ஃபே | இங்கிலீஷ் ய'ப் என்னும் சப்தம் இது (F) .... | 'ப |
| ;கா'ப் | தமிழ்க் ககரத்தை அடித் தொண்டையால் உச்சரிக்க வேண்டும் .... | ;க |
| கா'ப் | கவலை என்பதிலுள்ள க சப்தம் .... | க' |
| லாம் | .... .... .... .... | ல |
| மீம் | .... .... .... .... | ம |
| நூன் | .... .... .... .... | ந(ன) |
| வாவ் | .... .... .... .... | வ |
| ஹே | .... .... .... .... | ஹ |
| ஹம்'ஜா | கால் மாத்திரையாக அகரத்தைக் குறுக்கி உச்சரிக்க வேண்டும் .... | 'அ |
| ஷை | ஷை மெய்யெழுத்து உச்சரிப்பு .... | 'உ |
| ஏ | .... .... .... .... | ய |

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 8 | ஜீப்’ரீ லுக்குப் | ஜிப்’ரீ லுக்குப் |
| 50 | 11 | விடுகிறுன்.” | விடுகிறுன்.”[15] |
| 52 | 11 | சுவ்ர்கத்துள் | சுவர்க்கத்துள் |
| 62 | 26 | ‘ஹதீ’ து:து | ‘ஹதீ’:து |
| 78 | 20 | யுகழும்.[11] | புகழும்.” |
| 94 | 17 | இம்பி | இயம்பி |
| 95 | 26 | பார்க. | பார்க்க. |
| 99 | 2 | நல்லாதா | நல்லதா |
| 106 | 5 | பிநகள் | நபிகள் |
| 114 | 12 | மாட்டார்கள். | மாட்டார்கள்.[4] |
| 274 | 3 | மில்லே.”[8] | மில்லே.”[18] |
| 522 | 9 | சோதருனுக்குத் | சோதரனுக்குத் |
| 533 | 26 | ஸஜத்’ | ஸஜத்’ |
| 537 | 28 | கணவருக்கு | கணவருக்கு |
| 540 | 26 | நிச்சமாக | நிச்சயமாக |
| 545 | 23 | ஒருத்தியோகத்துக் | ஒருத்தியோகத்துக் |
| ” | 26 | நிறைவேறுபாடும் | நிறவேறுபாடும் |
| 546 | 22 | நியாப்பிரமாண | நியாயப்பிரமாண |
| 557 | 12 | செல்வார்.[31] | செல்வார்.[13] |
| 558 | 8 | முன்னேன் | முன்னே |
| 560 | 21 | உள்ளவர்களுக்கே | உள்ளவர்களுக்கே |

“உண்மையாகவே, உங்களுக்கு அல்லா(ஹ்)வின் திருத்தூதரிடத்தில், அல்லா(ஹ்)வின்மீதும் இறுதித் தீர்ப்பு நாளின்மீதும் ஆதரவு வைத்து, அல்லா (ஹ்) வை அதிகம் சிந்தனையும் செய்கிறவனுக்குப் பின்பற்றுதற்குரிய அழகான முன்மாதிரிகை இருக்கின்றது”—(:குர். அல் அ‘ஹ்ஜாப்’, ஆயத் 21).

بسم الله الرحمن الرحيم

نحمده ونصلي ونسلم على رسوله محمد خاتم النبيين

# ச‘ஹீ‘ஹ்

# பு’க’ாரீ சுருக்கம்

## அத்யாயம்—1

### நபிகள் திலகத்துக்கு வ‘ஹீ யென்னும் வேதஞான வெளிப்பாடு அல்லா(ஹ்)விஞல் எவ்வாறு அருளப்பட்ட தென்பது

1. “இன்னம், வ‘ஹீயை—(உதிப்பை)க் கொண்டே, அல்லது திரைக்குப் பின்னிருந்தே, அல்லது தூதரொருவரை அனுப்பியும், தனது அனுமதி கொண்டு தான் நாடியதை வ‘ஹீ யறிவிப்பதுங் கொண்டே யன்றி, (வேறு முறையால்) அல்லா(ஹ்) அ(டிய)வனுடனே வார்த்தை யாடக்கூடு மென்பது எந்த மனிதனுக்கும் உரித்தாயில்லை” (:குர்ஆன் 42 : 51).

2. “இன்னம், நிச்சயமாகவே இஃது—(இந்தக் :குர்ஆன்) பிரத்தியக்ஷமான அரபு பாஷையில், சகல லோகங்களுக் குமுரிய ரக்ஷகன்பா லிருந்து அருளப்பட்டதா யிருக்கிறது;— நீவிர் அச்சமூட்டி யெச்சரிப்பவருள்ளே (ஒருவரா) யிருப்பான் வேண்டி, நம்பிக்கைக் குரிய ஆன்மா—(ஜிப்’ரீல் என்னும் அமரர்) அதனுடனே உமது ஹிருதயத்தின்மீது இறங்கி யிருக் கின்றூர்” (:குர். 26 : 192—195).

3. “இன்னம், அன்ன வண்ணமாயே உமக்கு நாம் ஓர் அரபு மொழிக் :குர்ஆனை அருளி யிருக்கின்றோம்” (:குர். 42 : 7).

4. “பரிசுத்த ஆன்மா—(ஜிப்’ரீல்) இதனை உம்முடைய ரக்ஷகன்பா லிருந்து உண்மையைக் கொண்டே இறக்கிக் கொண்டு வந்துளார்” (:குர். 16 : 102).

5. “எவனொருவன் ஜிப்’ரீலுக்குப் பகைவனா யிருக் கிறானோ [அவன் அல்லா(ஹ்)வுக்கே பகைவனா யிருக்கிறான்;] என்னெனின், நிச்சயமாக அன்னவர் அல்லா(ஹ்)வின் கட்டளை கொண்டே உம்முடைய ஹிருதயத்தின் மீது இதனை இறக்கி வைத்தார்” (:குர். 2 : 97).

6. “நாம் இதனைப் பகுதி பகுதியாய் வெளிப்படுத்தி யருளி யிருக்கின்றோம்” (:குர். 17 : 106).

:குர்ஆன் ஷரீ‘பின் பிரகாரம் வ‘ஹீ யென்பது இப் பூவுலகில் எங்குங் காணப்படும் ஒரு சர்வ வியாபக சம்பவமாகவே யிருந்து வருகிறது. வானம், பூமிபோன்ற அசேதனப் பொருள்களுக்கும் வ‘ஹீ யனுப்பப்படுவ துண்டென்று அவ்வேதம் அறைகின்றது (41 : 11, 12; 99 : 5) ; அப்பால் கீழ்த்தரப் பிராணிகட்கு வ‘ஹீ யறிவிக்கப்படும் விஷயம் விவரிக்கப்பட் டுள்ளது (16 : 68, 69). ஆனால், மானிடருக்கு அறிவிக்கப்படும் வ‘ஹீ மேற்கூறிய வ‘ஹீகளி னின்று முற்றிலும் வேறாயதாயே யிருந்துவருகிற தென்பதில் கிஞ்சித்தும் சந்தேகமிருக்கக் காரணமில்லை ; எனவே, இப்படிப்பட்ட வ‘ஹீயைக் குறித்தே யாம் இங்கு ஆராய்ச்சி செய்ய வேண்டியவர்களா யிருக்கிறோம். மேலே குறிக்கப் பட்டுள்ள தலையங்க ஆயாத்களுள் முதலாவது ஆயத் கூறுவ தாவது: அல்லா(ஹ்) அடியவருடனே மூன்று விதத்திலேயே சம்பாஷணம் புரிகிறான் ; அஃதாவது, அடியவனுக்கு ஆண்டவன் மூன்று வகையைக் கொண்டே வ‘ஹீயை யருள்கின்றான் :— (1) அடியானுடைய உள்ளத்தி னுள்ளே ஆண்டவன் ஒரு விஷயத்தை உதிப்பின்வாயிலாய் உற்பத்தியாக்குகிறான் ;—இங்கு

வழங்கப்பட்டுள்ள •வ‘ஹீ யென்பது தனது தாதுப் பொருளுக்குரிய “துரிதமாய், அல்லது சயிக்கினையாய் அறிவித்தல்” என்னும் தன்னுடைய ‘அசல்’ தாத்பர்யத்தையே சுட்டிக் காட்டுகின்றது. (2) ஒரு திரைக்கு அப்பாலிருந்து பேசுவதேபோல் அல்லா(ஹ்) மறைவிலிருந்தே அறிவிக்கிறுன்; இதில், ரூயா (கனு) என்பதும், இதன் உயரிய காட்சி யெனப்படும் கஷ்‘ப் (சூக்ஷ்ம தர்சனம்) என்பதும், இன்னம் உயரிய நிலை யெனப்படும் இல்ஹாம் (சுழுத்தி நிலையிலே—புலன்கள் செயலற்று உறங்கு நிலையிலே—குரல்கள் பேசக் கேட்கப்படுவது) என்பதும் அடங்கும். (3) வானவர் ஜிப்’ரீலென்பார் (அ’லை) வ‘ஹீ யறிவிக்கப்பட வேண்டியவர்பால் அல்லா(ஹ்)வின் தூதுச் செய்தியுடனே பட்டவர்த்தனமான வசனங்களைக் கொண்டு அறிவித்து வைக்குமாறு அனுப்பப்படுகின்ருர். வ‘ஹீயின் வகைகளுள் ளெல்லாம் இம் மூன்ருவது வகையே மிகவு முயரிய வ‘ஹீயா யிருந்துவருகிறது; அல்லா(ஹ்)வின் இத் தூதுச்செய்தி முதல்வகையி லனுப்பப்படுவதே போல் உதிப்பா யில்லாமலும், இரண்டாம் வகையி லனுப்பப்படுவதேபோல் சொப்பனமாக, சுழுத்தியாக இல்லாமலும், வானவர் ஜிப்’ரீல் வாயிலாய் வெளிப்படையான வார்த்தைகளாகவே அருளப்பட்டு வருகிறது. இது நபிமார்களுக்கே யுரிய சொந்த வ‘ஹீயா யிருக்கிறது. :குர்ஆன்ஷரீ‘ப் அரபு பாஷைக்குரிய வசனங்களாகவே நபிகளுதருக்கு(சல்) அருளப்பட்டு வந்தது (தலையங்க ஆயாத் 2, 3); வானவர் ஜிப்’ரீலே அதன் ஆயாத்களைச் சுமந்து கொண்டு வந்தார்; அன்னவர் “நம்பிக்கைக் குரிய ஆன்மா” வென்றும், “பரிசுத்த ஆன்மா” வென்றும் அழைக்கப்படுகிருர் (தலை. ஆயாத் 2, 4, 5); அவ் வானவர் நபிகளுயகரின் ஹிருதயத்தின்மீது விஜயம் செய்துகொண்டிருந்தார் (தலை. ஆயாத் 2, 5). இறுதி ஆயத், :குர்ஆன் ஷரீ‘ப் துண்டு துண்டாகவே (23 ஆண்டுகளில்) வெளியாக்கப்பட்டு வந்ததென்று கூறிக்கொண்டிருக்கிறது.

இவ் வத்யாயத்தில் வரையப்பட் டுள்ள ‘ஹதீ’:துகள், :குர்ஆன் ஷரீ‘பில் மிகவிளக்கமாய் விவரிக்கப்பட்டுள்ள விஷயங்களையே செவ்விதாய் ஊர்ஜிதப்படுத்திக்கொண் டிருக்கின்றன. நபிமார்களுக் குரிய துரியாதீத வ‘ஹீயைப் பெறுமுன்னே

நம்முடைய நபிபெருமானுர் (சல்அ’ம்) சொப்பனத்திலே தான் முதல்வித வ‘ஹீகளைப் பெற்றுவந்தார்கள். நபிகள் திலகம் முதன் முதலில் உயரிய துரியாதீத—மூலாதாரத்தில் ஆன்மா தங்கி, அவிச்சை (ஆத்ம அஞ்ஞான) மாத்திரையை விஷயீகரிக்கும் ஐந்தாம் ஆன்ம நிலைக்குரிய—வ‘ஹீயைப் பெற்றுக்கொண்ட அனுபூதி வானவர் ஜிப்’ரீல் விஜயம் செய்வதைக் கொண்டே நிறைவேற லாயிற்று; அவர், :குர்ஆன் ஷரீ‘பின் 96-ஆவது அத். முதலைந்து ஆயாத்களிலுள்ள விஷயத்தை—அல்லா(ஹ்)வின் தூதுச் செய்தியை—அரபு மொழிகளால் அறிவித்துவைத்தார். அதனை நபிபெருமானுர்(சல்) வர(க்):காவிடம் அறிவித்தார்கள்; அக்கணமே அப் பெரியார் அவர்கள்மீது உறுதிகொண்டு, ‘மூஸா’ நபிக்கு அல்லா(ஹ்)வின் வ‘ஹீயைக் கொணர்ந்த அந்த வானவர் ஜிப்’ரீலே இப்பொழுதும் அல்லா(ஹ்)வின் தூதுச் செய்தியைக் கொண்டுவந்துளா ரென்றுங் கூறலுற்ருர் (‘ஹதீ’. 2). நபிகள் நாயகம் இரண்டாமுறை ஒரு துரியாதீத வ‘ஹீயைப் பெற்றுக்கொண்டதும் முதல் வ‘ஹீயைப் பெற்றுக்கொண்ட அனுபூதியைப் போலவேதான் இருந்ததெனல் வேண்டும் (‘ஹதீ’. 3). :குர்ஆன் ஷரீ‘பிற்குரிய உயரிய துரியாதீதவ‘ஹீ வானவர்ஜிப்’ரீல் வாயிலாய் அரபு வார்த்தைகளாகவே அருளப்பட்ட தென்றும் அறிவிக்கப்பட்டுள்ளது (‘ஹதீ’. 4, 5). அவ்வுயரிய வ‘ஹீ வந்திறங்குங்கால், நபிகள்பிரான் கடும் பிரயாசைக் குள்ளானுர்க ளென்றும் நாம் அறிந்து கொள்கிருேம்: நளிர் மிகுந்துள்ள நாட்களிலும் வ‘ஹீ வருங்கால், அப்பெருமானுர் வேர்த்துப்போய் நனைந்துவிடுவார்கள்; சரீரம் கனத்தும் போய்விடும்; இன்னம், அன்னவர்கள்மீது ஒரு வெளிப்படையான மாறுதலும் வந்து தோன்றலாகும் (‘ஹதீ’. 5–8). இதனுல் விளக்கமாவது யாதெனின்: அல்லா(ஹ்)வின் இத்தகைய ஆன்மவுலக அனுபூதியை அடையப் பெறுதற்காக அப் பெருமானுர்(சல்) இந்த ஜாக்ர (விழிப்பிற்குரிய) நிலையைவிட்டு, அப்பால் தொலைவிலுள்ள துரியாதீத நிலைமைக்கு மாற்றப்பட்டு விடுவது வழக்கமென நாம் நன்கறிந்துகொள்ள வேண்டியவர்களா யிருக்கிருேம்; ஆகவே, அவர்கள் இப் பௌதிகவுலக சம்பந்தத்தை அடியுடன் அறுத்துவிட்டு, அவ் வான்மிவுலகத் தொடர்புடைய

வர்களாய் உயர்த்தப்பட்டு விடுவது எத்துணை உண்மையுள்ள சம்பவமாய்க் காணப்பட்டதெனின், அஃது அவர்களுடைய புற வுறுப்புக்களிலும் புறத் தோற்றத்திலும் முற்றிலும் மெய்யான மாற்ற மொன்றனையே கொண்டுவந்து சேர்ப்பித்த தென்க.

1.[1] உ'மருப்'னுல் க'':த்:தாப்'(ரலி') கூறினர்கள்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் [அல்லா(ஹ்)வின் ஆசியும் சாந்தியும் அன்னவர்கள்மீது அமையக் கடவன] (இவ்வாறு) கூறியதை யான் கேட்டேன் :—

"செய்கைக ளெல்லாம் நோக்கத்தைக் கொண்டே தீர்மானிக்கப்படும்;[2] மேலும், மானிடன்

---

1. 'இமாம் பு'க'ாரீ இந்த 'ஹதீ'ஃதைக் கொண்டே தாங்கள் சேகரித்துள்ள ஜாமிஃ' என்னும் மகா கிரந்தத்தைத் துவக்கியுள்ளார்கள்; "வ'ஹீயின் துவக்கம்" என்னும் அத்யாயத்தின் ஆரம்ப 'ஹதீ':தா யிருக்கிறது இது. ஆனல், இவ் வத்யாயத்தில் விளக்கப்படும் விஷயத்திற்கு இந்த 'ஹதீ':து பொருத்தமாயில்லை யென்பது வெள்ளிடை மலை. எனினும், உண்மையிலே இப் பெரியார் சேகரித்துள்ள கிரந்தத்திற்கே இஃதொரு முகவுரையே போலக் காணப்படா நின்றது; மெய்யாகவே இஃதொரு சரியான முன்னுரையாகத்தான் அமைந்து கிடக்கிறது என்னலாம்: இந்தக் கிரந்த கர்த்தாவின் நோக்கத்துக்குரிய உள்ளப் பரிசுத்தத்தை இது நன்கு விளக்கிக் காண்பிப்பதோடு, நபிகள் நாயகத்தின்(சல்) சொற்களைக் கொண்டும் செயல்களைக் கொண்டும் அவற்றினைப் படிப்பவன் எத்தகைய உன்னத ஒழுக்கக்குன்றுக்கு உயர்த்தப்பட வேண்டுமென விழைகின்றனரோ, அத்தகைய உன்னதத்துக்கு உயர்த்தப்படப் போவது அவனுக்கு அவற்றின்பாலுள்ள உண்மையான உள்ளப் பரிசுத்தத்தையே பெரிதும் பொறுத்து நிற்கிற தென்னும் மெய்ம்மையினையும் நன்கெடுத்து நிரூபிக்கின்றது.

2. "செய்கைகள்" என்பன, நபிபெருமான் எவற்றின்பால் மானிடர்களை அழைக்கின்றனர்களோ, அப்படிப்பட்ட உயரிய

தான் கோருகிறதையே பெற்றுக் கொள்ளுகிறான்; ஆகையால், அல்லா(ஹ்)வுக்காகவும் அவனுடைய தூதருக்காகவும் எவனொருவன் தனது வீட்டைத் துறந்து வெளி யேறுகிறானோ,[3] அவனது வெளி யேற்றம் அல்லா(ஹ்)வுக்கும் அவனுடைய தூதருக்கும் பொருத்

---

நல்ல ஒழுக்கங்களையே சுட்டிக்காட்டும். எத்தகைய சத்தொழுக்கமும், அதற்குரிய அந்தரங்கநோக்கம் உள்ளப் பரிசுத்தமுள்ளதாயில்லா திருப்பின், ஒரு சிறிதும் பயனளிக்க மாட்டாதென்பது வெளிப்படை. எனவே, முஸ்லிம்கள் (ஒழுக்கத்தில்) முன்னேறுதற்கு முக்கிய அம்சமா யிருந்துவருவது உண்மையான உள்ளப் பரிசுத்தமே யென்று நாம் இங்கு நன்கு தெரிந்துகொள்ளுகிறோம்.

3. அரபு மூலத்தில் ஹிஜ்ரத் என்னும் சொல் வழங்கப்பட்டுள்ளது; இதன் பொருள், "ஊரை, அல்லது உறவினரைத் துறந்து 'வெளியேறல்', அல்லது 'ஓடுதல்', அல்லது இழிய இச்சைகளைத் 'திரஸ்கரித்தல்'" என்பதா யிருக்கிறது; இழிவந்த குணம், தீய மனப்பான்மை ஆதியவற்றைத் துறத்தலும் இந்த ஹிஜ்ரத்திலே சாரும். எனினும், இஸ்லாத்தின் சரித்திரத்திலே நபி பெருமானார் மக்காவைத் துறந்து மதீனா சென்று சேர்ந்ததே ஹிஜ்ரத்தென்று பிரபலமாய்ச் சொல்லப்பட்டு வருகிறது; முஸ்லிம்களின் ஆண்டுக் கணக்கும் இச் சம்பவத்தினின்றே ஆரம்பிக்கப்பட்டுள்ளது. அவர்கள் அந்நகரிலே—(மக்காவிலே) மத சுதந்தரமும் மனச்சாக்ஷி சுதந்தரமும் பெற்றுக்கொள்ள முடியாமற் போய்விட்டபடியால், அன்னவர்கள் மக்காவிலிருந்த தங்கள் வீடு வாசல்களையும், உற்றார் பெற்றார்களையும் அடியுடனே துறந்து வெளியேற வேண்டியவர்க ளாய்விட்டார்கள்; அம் முஸ்லிம்கள் பலதெய்வ விக்ரக வணக்கத்தை விட்டு, ஏகேசுவரக் கொள்கையாம் இஸ்லாத்தின்பக்கல் சார்ந்து நின்றமையால், மக்காவிலிருந்த மறமாக்களாய :குறைஷியர் அவ்வேழை முஸ்லிம்களையெல்லாம் சொல்லொணா விதத்தா லெல்லாம் துன்புறுத்திவரலாயினார்கள். எனவே, ஹிஜ்ரத் தென்பது, மனிதன் தனது மனச்சாக்ஷியின் காரணத்தால் இவ்வுலக சம்பந்தமாயுள்ள

தமா யிருக்கிறது ; இன்னம், எவனொருவன் தான் அடைய விரும்பும் உலக சம்பந்தமான இலாபத்தி னிமித்தமாக, அல்லது தான் விவாகம் செய்துகொள்ள விழையும் ஸ்திரீயி னிமித்தமாகத் தனது வீட்டைத் துறந்து வெளியேறுகிருனே, அவனது வெளியேற்றம், அன்னவன் எதற்காக வெளி யேறுகிருனே, அதற்காக விசாரிக்கப்படும்."—(பு'க'ா. 83 : 23 ; 1 : 1)

2. ஆ'யிஷா பிராட்டியார்(ரலி') கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதருக்கு (அ. ஆ. சா. அ. அ.) ஆதியில் அருளப்பட்ட ஞான அறிக்கை நித்திரையின் போது அளிக்கப்பட்ட உண்மையான கனவாகவே யிருந்து வந்தது ;[4] ஆகவே, அதன் உண்மை விடியற்

---

தொடர்புகளையும் சுகபோகங்களையு மெல்லாம் அடியுடன் திரஸ்கரித்து, அதனுல் விளையும் எல்லாவிதத் துன்பங்களையும் பரம சங்கடங்களையும் திருப்தியுடனே சகித்துக்கொண் டிருப்பதைக் குறிக்கத் தலைப்பட்டுவிட்டது.

4. எனவே, உண்மைக் கனு (மனும்) அல்லா(ஹ்)வின் ஒருவித வ'ஹீ யாகவே யிருந்துவருகிற.தென்பது கண்கூடு. வேருெரு 'ஹதீ':தின் பிரகாரம் அர்ருயா அஸ்ஸ'ாலி'ஹா (சத்யமாய சூக்ஷ்ம தர்சனம்) நபித்துவத்தின் ஓரம்சமா யிருந்துவருகிறது : " 'முப'ஷ்ஷிராத்தை (நன்மாராயத்தை) யன்றி, நபி'த்துவத்தில் வேறெதுவும் எஞ்சி யிருக்கவில்லை,' என்று நபி பெருமானுர்(சல்) நவின்றருளினுர்கள்." அதுகேட்டுத் தோழர்கள், " முப'ஷ்ஷிராத் என்பது யாது?" என்று வினவலுற்ருர்கள். அதற்கு விடையில், " உண்மைக் கனு " என்று எம்பிரான் (சல்அ'ம்) மறுமொழி கூறினுர்கள் (பு'க'ா. 92 : 5) . இஸ்லாத்தில் விசுவாசங் கொண்டவர்கள் காணுங் கனு நபி'த்துவத்தின் ஓரம்சமா யிருக்கிறதென்று மிக வெளிப்படையாய்க் கூறப்பட் டிருக்கிறது (பு'க'ா. 92 : 26). :குர்ஆன் ஷரீ'பிலும் அல்பு'ஷ்ரா (சத்யமாய சூக்ஷ்ம தர்சனங்கள்) மூமினுனவர்

காலத்தின் உதயத்தைப் போலே' பிரகாசித்தே யொழிய (வேறு விதமாக) அன்னவர்கள் கனவொன் றையும் ஒருபொழுதும் கண்டது கிடையாது. பிறகு தனித்திருப்பதே அவர்களுக்குப் பிரியமாய்விட்டது; இன்னம், அன்னவர்கள் 'ஹிராவின் குகையி னுள்ளே[5] தங்களைத் தனிமையாகச் செய்துகொள்ளப் பழகிக் கொண்டார்கள்; அவர்கள் தங்கள் குடும்பத் திற்குத் திரும்பிவந்து, அதற்கு வேண்டிய ஆகாராதி களையும் எடுத்துச் செல்லு முன்னே, அதில் அநேக இரவுகள் மட்டும் (தங்கியிருந்து) ஆண்டவனது வணக் கத்திலே தங்களை ஈடுபடுத்திக் கொண்டு மிருப்பார்கள்; பிறகும் க'தீ'ஜா(ரலி') பிராட்டியாரிடம்[6] திரும்பி வந்து, அதே மாதிரியான (காலத்)துக்கு வேண்டிய

---

களுக்கு—இஸ்லாத்தின் விசுவாசிகளுக்கு—இவ்வுலக வாழ்க் கையிலும் அருளப்படு மென்னும் உறுதிமொழி கூறப்பட்டுள்ளது (10:64). ஆகவே, நபி'த்துவ மென்பதும், வ'ஹீ யென்பதும் ஒன்றென்றே எண்ணிவிடற்க. நபி'த்துவ மென்பது முடிவடைந்து விட்டது; ஆயின், முதலிரண்டுவித வ'ஹீயும் (:குர். 42:51) என்றென்றும் மூமின்களுக்கு அருளப்படவேவரும்.

5. 'ஹிரா வென்னும் (6 அடிக்கு 4 அடியுள்ள) மலைப் பொதும்பு மக்காவுக்கு வடகிழக்கில் சுமார் 3 மைல் தூரத்தி லிருக்கிறது ஒரு செங்குத்தான குன்றின்மீது.

6. க'தீ'ஜா பிராட்டியார் (ரலி') 40 வயது சென்றிருந்த விதவையா யிருந்தபொழுது, 25 பிராயமே எய்தியிருந்த எம்பிரா னவர்கள்(சல்) முதல் மனைவியாக மணமுடித்துக் கொண்டார்கள். அப் பெருமானார் ஐம்பதாவது பிராயத்தை அடைந்தபொழுது, அப் பெருமாட்டியார் காலகதியால் 65-ஆவது வயதிலே தேக வியோக மாய்விட்டார்; அதுவரை அப் பிராட்டியே நபிபெருமா னுக்குரிய ஏகபத்தினியா யிருந்துவந்தனர்.

ஆகாராதிகளை (அதிகம்) எடுத்துச் செல்வார்கள்; (எதுவரையிலென்றால்) அவர்கள் 'ஹிராவின் குகையில் இருந்த பொழுது, அன்னவர்கள்பால் சத்யம்[7] வந்து சேர்ந்த வரையிலே; ஆகவே, வானவர்—(ஜிப்'ரீல்) அவர்கள்பால் வந்து, ஓதுமென்றுங் கூறலுற்றார். அவர்கள்—(நபிகள் திலகம்) "நான் ஓதக்கூடிய ஒருவ னல்லேன் என்று சொன்னேன்," என்று சொன்னார்கள்; மேலும், தொடர்ந்து சொன்னார்கள்: "பிறகு அவர்—(வானவர்) என்னைப்பிடித்து, என்னால் இனிமேல் தாங்க முடியாத அத்துணைக் கடினத் துடனே என்னை அழுத்திவிட்டு, அப்பா லென்னை விலகவும் விட்டு, ஓதுமென்றுங் கூறினார்; நான் ஓதக் கூடிய ஒருவனல்லேன் என்று சொன்னேன். பிறகும் அவர் என்னைப் பிடித்து, என்னால் இனிமேல் தாங்க

---

7. சத்யம் என்பது, "சத்ய தேவர்," அல்லது "பரிசுத்த ஆன்மா," அஃதாவது, ஜிப்'ரீல்(அ'லை) என்னும் வானவரைச் சுட்டிக் காட்டும்; அவர் "வானவர்" என்றே அடுத்த மூச்சில் அழைக்கப்பட் டுள்ளார். நபிமார்களுக் குரிய முதற்றரமாகிய துரியாதீத வ'ஹீ வானவர் ஜிப்'ரீல் வாயிலாய் முதன் முதலில் நபிகள் திலகத்துக்கு அருளப்பட்டது, ஒரு செய்தியின்படி, ரமலா'ன் பிறை 25-இ லாம். மற்றும் பலர், அது ரமலா'ன் 17-ஆவது பிறையென்று கூறுவர்; இஃது 27 என்பதற்குமாறாய்த் தவறாக 17 என்று கூறப்பட்டுள்ளது போலும். என்னெனின், குர்ஆன் ஷரீ'பில் கூறப்பட் டுள்ளவண்ணம் முதல்வ'ஹீ லைலத்துல்:கத்'ர் இரவிலேதான் அருளப்பட் டிருக்கிறது (அத். 97); இம் மாட்சிமிக்க இரவு ரமலா'ன் பிறை 25, 27, 29 என்னும் மூன்றிரவில் ஓரிரவிலே வருகிறது. இப்'னு அ'ப்'பா'ஸ்(ரலி') அவர்களது கூற்றுப்படி, நபிகள் திலகம்(சல்) அதுபொழுது தங்கள் 40-ஆவது பிராயத்தை யடைந்திருந்தார்கள் (பு'கா'. 63 : 28).

முடியாத அத்துணைக் கடினத்துடனே என்னை இரண்டா முறையாகவும் அழுத்திவிட்டு, அப்பா லென்னை மறுமுறையும் விலகவிட்டு, ஓதுமென்றுங் கூறினர்; நான் ஓதக்கூடிய ஒருவனல்லேன் என்று சொன்னேன்." (மேலும், நபி பெருமான்) தொடர்ந்து சொன்னார்கள்: "பிறகு அவர் என்னைப் பிடித்து, மூன்றா முறையாகவும் என்னை அழுத்திவிட்டு, அப்பா லென்னை விலகவும்விட்டு, 'சிருஷ்டித்த உம்முடைய ரக்ஷகனது திருநாமத்தைக் கொண்டு, ஓதுவீராக;— அவன் மனிதனை ஓர் உதிரக் கட்டியினின்று சிருஷ்டித்தான்.—ஓதுவீராக; மேலும், உம்முடைய ரக்ஷகன் மகா கண்ணியமுள்ளவனா யிருக்கிறான்,'[8] என்றும் சொன்னார்."

அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்)[9] தங்கள் ஹிருதயம் துடித்துக் கொண்டிருக்க, இதனுடனே *

8. இவை :குர்ஆன் ஷரீ‘பின் 96-ஆவது அத்யாயத்திலுள்ள முதல் மூன்று திருவாக்கியங்களாம்; ஆனால், அவ்வத்யாயத்தின் முதலைந்து திருவாக்கியங்களே அதுபொழுது நபிபெருமானுக்கு அருளப்பட்டன வென்பதே எல்லோரின் ஏகோபித்த அபிப்பிராயமா யிருந்துவருகிறது. :குர். 96:1—5 ஆயாத்கள் அருளப்பட்டதன் பின்னால், அடுத்துவரும் 'ஹதீ':து விளக்குவதேபோல், :குர். 74-ஆவது அத்யாயத்திலுள்ள முதலைந்து ஆயாத்களுமே அடுத்தபடியா யருளப்பட்டன வென்று நாம் நன்கு தெரிந்துகொள்ளுகிறோம்.

9. "அல்லா(ஹ்)வின் ஆசியும் சாந்தியும் அன்னவர்கள்மீது அமையக்கடவன" என்பதற்குரிய அரபு வாழ்த்து, சல்லல்லாஹு அ’லைஹி வ ஸல்லம் என்பதா யிருக்கிறது; இதன் அரப்சுருக்கம் சல்அ’ம் என்பதாகும். எனவே, இனி இந்நூல் முழுதிலும் இஃ

* அத்தூதுச் செய்தியுடனே.

திரும்பிவந்து, கு'வய்லித்'ன் குமாரியாகிய க'தீ'ஜா விடம் பிரவேசித்து, "என்னைப் போர்த்துங்கள், என்னைப் போர்த்துங்கள்," என்றும் கூறினார்கள்; அவர்கள், அவரை விட்டு விம்மிதம் நீங்குமட்டும்[10] அன்னவரைப் போர்த்தியும் வைத்தார்கள். அப்பால் அவர்கள்—(நபி பெருமான்) க'தீ'ஜாவின்பால் என்ன நிகழ்ந்ததென்று விவரித்துக் கூறியபொழுது, "எனக்காகவே யான் அஞ்சுகின்றேன்,"[11] என்று அவருக்குச் சொன்னார்கள். (அப்பொழுது) க'தீ'ஜா பிராட்டியார் கூறினார்: 'அப்படியில்லை; உங்களை அல்லா(ஹ்) ஒருபொழுதும் அவமானத்திற்குக் கொண்டு வரமாட்டான் என்பதற்குச்சாக்ஷியாக யான் அல்லா(ஹ்)

---

வாழ்த்தை இவ்வாறு (சல்அ'ம்) என்றே யாம் எழுதிவருவோம்; கவனித்துக்கொள்க.

10. விம்மிதம் (அச்சம்) ஏற்பட்டதற்குக் காரணம், நபி'த்துவத்துக்குரிய வ'ஹீ முதன்முறையாய் வரத்துவக்கியதால் விளைந்துள்ள அதிசயத்தால் நேரிட்ட ஆச்சரியமேயாகும்.

11. "எனக்காகவே யான் அஞ்சுகின்றேன்," என்றது, நபிபெருமான் தங்கள் தோள்மீது சுமத்தப்பட்ட, மன்பதைகளைச் சீர்திருத்தி முன்னுக்குக் கொண்டுவருவதென்னும், அம்மாபெருங் காரியத்தில் தங்களால் வெற்றிபெற முடியுமோ வென்று ஆதியிலே சிறிது ஐயங்கொண்டுவிட்டதைக் குறித்துக் காட்டும். என்னெனின், க'தீ'ஜா பிராட்டியார் கூறிய விடை இக்கருத்தையே ஊர்ஜிதப்படுத்துகிறது; மன்பதைகளைச் சீர்திருத்துவதென்னும் அம் மாபெருங் கைங்கரியத்துக்கு அருகதை வாய்ந்தவர் இக் குவலயத்தில் எவரேனும் இருக்கத் தகுமாயின், அப்படிப்பட்டவர் இப்பெருமானாரே யென்று க'தீ'ஜா பெருமாட்டி(ரலி') எடுத்துக் காட்டினார்; என்னெனின், மன்பதையின் ஊழியத்திற்காக இதற்குமுன்பே இம் மஹானுபாவர் தங்களை அர்ப்பணம்

வையே அழைக்கின்றேன்; ஏனென்றால், நீங்கள் உறவு முறையின் தளைகளைப் பிணித்து வைக்கின் றீர்கள்; பலஹீனர்களின் சுமையையும் சுமக்கின் றீர்கள்; ஆதரவற்றவர்களுக்காக அனுதாபமும் காட்டு கின்றீர்கள்; விருந்தினரைக் கண்ணியமும் படுத்து கின்றீர்கள்; உண்மையான சங்கடத்தில் (சிக்கியவர் கட்கு) உதவியும் புரிகின்றீர்கள்.'

பின்பு க'தீ'ஜா பிராட்டியார் அப்பெருமானாரைத் தம்முடைய பெரிய தந்தையின் குமாரராகிய— அ'ப்'து'ல் உ''ஜ்'ஜாவின் மகனாகிய அஸதி'ன் குமார ராகிய நவ்'பலின் புத்திரராகிய—வர(க்):காவின் பால் அழைத்துக் கொண்டு உடன் சென்றார்; இன்னம்,

---

செய்துவிட் டிருந்தார்கள்: "என் கடன் மக்கட் பணிசெய்து கிடப்பதே," என்னுந் தியாகபுத்தியுடனே இன்றுகாறும் காலங் கழித்து வந்துளார்கள். நபிப்பட்டம் அருளப் பெறுமுன் னேயே நம்பெருமானார் எவ்வாறு நானிலத்தாரின் நன்மையின் பொருட்டே உயிர்வாழ்ந்து வந்தார்க ளென்னும் உண்மையும் இதனால் இனிது விளங்காநின்ற தன்றோ? இந்த 'ஹதீ':திலாதல், அல்லது வேறெந்த 'ஹதீ':திலாதல், நபிகள்திலகம்(சல்) ஜின்னால் தாங்கள் கொல்லப்பட்டு விடக்கூடு மென்றோ, அல்லது தங்க ளுக்குப் புத்திஸ்வாதீன மில்லாது தடுமாறிப் போய்விட்ட தென்றோ அச்சங்கொண்டு விட்டார்க ளென்று அறைவதற் கொன்றும் ஆதாரம் அணுத்துணைகூட அகப்படவில்லை யென்பது அதிக திண்ணமேயாம். முதல்வ'ஹீ வந்துற்றபொழுதே தாங்கள் நபியின் உன்னத அந்தஸ்துக்கு உயர்த்தப்பட்டு விட்டார்க ளென்றும், மன்பதைகளை யெல்லாம் சீர்திருத்தி முன்னுக்குக் கொண்டுவர வேண்டிய பொறுப்பு முழுதும் தங்கள் தோள்மீது சுமத்தப்பட்டு விட்டதென்றும் நபிகள்திலகம்(சல்) நன்கு தெரிந்து கொண்டு விட்டார்கள்.

அன்னவர் அஞ்ஞான காலத்தில்[12] கிறிஸ்தவராக மாறிவிட்டிருந்த மனிதராயிருந்தார்; அவர் இ'ப்'ரானீ மொழியை எழுதும் பழக்க முடையவரா யிருந்து, சுவிசேஷத்தி—(இன்ஜீலி)லிருந்து இ'ப்'ரானீ மொழியில், அன்னவர் வரைய வேண்டுமென்று அல்லா(ஹ்) நாடியதை வரைந்துகொண்டு மிருந்தார்; அவர் கண் தெரியாமற் போய்விட்டிருந்த ஒரு தளர்ந்த வயது முதிர்ந்தவராயும் இருந்துவந்தார். 'ஏ என் பெரிய தந்தையின் மைந்தரே! உம்முடைய சகோதரர் குமார்ர்[13] என்ன சொல்லுகிறாரென்று நீர் செவி தாழ்த்திக் கேளும்,' என்று க'தீ'ஜா பிராட்டியார் அவருக்குச் சொன்னர். அப்பொழுது வர(க்):கா அவர்களை நோக்கி, 'என் தம்பி மைந்த! நீர் என்ன கண்டீர்?' என்று வினவினர். ஆகவே, அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) தாங்கள் என்ன கண்டார்களென்று அவருக்கு விவரித்துக் கூறினர்கள். (அப்பால்) வர(க்):கா அவர்களுக்குச் சொன்னர்: 'இவர்தாம் மூஸாவின்பால் அல்லா(ஹ்) இறக்கிவைத்த

12. இஸ்லாத்துக்கு முன்னேயிருந்த காலம் அல் ஜாஹிலிய்யத் (அஞ்ஞானம்) அல்லது அய்யாமுல் ஜாஹிலிய்யத் (அஞ்ஞானகாலம்) என்றே அழைக்கப்பட்டு வந்தது; இஸ்லாத்தில் உதயத்துக்குப் பின்னே ஞானமும் கல்வியும் நல்லவிதமாய் எங்கும் பரவத் தலைப்பட்டுவிட்டமையால், அதற்கு முந்தியுள்ள காலம் அவ்வாறு "அஞ்ஞான கால"மென்று அழைக்கப்பட லாயிற்று.

13. "சகோதரர் குமாரர்" என்பதும், இனியப்பால் "தம்பி மைந்தர்" என்பதும் உண்மையிலே உடன்பிறந்தார் மைந்தனை இங்குக் குறிப்பிடுவ தில்லை; அரபிகள் மரபில் அவ்வாறு உறவு கூறி அழைப்பது வழக்கம். இது கரிசனத்தால் கூறப்படுவது.

ஜிப்'ரீ லென்னும் வானவரா யிருக்கிறார்;[14] இந்த வேளையில் யானோர் இளவலா யிருக்க வேண்டிற்றே; உம்முடைய ஜனங்கள் உம்மை வெளியேற்றுங்கால், யான் உயிருடனிருக்க வேண்டிற்றே.' (அப்பொழுது) அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) "அவர்கள் என்னை வெளியேற்றுவார்களோ?" என்று வினவினார்கள். (இதற்கு) அவர் சொன்னார்: 'ஆம்; நீர்

---

14. அரப் மூலத்தில் நாமூஸ் என்று அவ் வானவர் நாமம் கூறப்பட்டிருக்கிறது. இங்கு நாமூஸ் என்பவர் ஜிப்'ரீலாகவே யிருக்கிறார் ('பராஇது'த் து'ர்ரிய்யா). "அரசன் தனது அந்தரங்கத்தை எவன்பால் நம்பி ஒப்படைக்கிறானோ, அவன் நாமூஸ்" என்று அழைக்கப்படுவான்; ஆயின், அப்பெயர் 'ஹதீ':தில், "அல்லா(ஹ்) தன்னுடைய அறிவிப்புக்களை எவர்பால் ஒப்படைக்க நாடியுள்ளானோ, அப்படிப்பட்ட வானவர் ஜிப்'ரீலையே" சுட்டிக் காட்டுவதா யிருக்கிறது (நிஹாயா). இவ் வியாக்கியானமே இமாம் பு'கா'ரீயாலுங்கூட 60 : 22-இல் இதே 'ஹதீ':து மீட்டுங் கூறப்படு மிடத்திலே கொடுக்கப்பட் டிருக்கிறது. ஆகாயத்திலிருந்து வ'ஹீயுடனே வானவர் ஜிப்'ரீல் (அப் பரிசுத்த ஆன்மா) தங்கள்பால் விஜயம் செய்தாரென்று நபிகள்திலகம் கூறியது மெய்யான சம்பவ மென்றுதான் வர(க்):காவும் உண்மையிலே ஊர்ஜிதம் செய்கின்றார்; இன்னம், அன்னவரே மூஸாநபிக்கு வ'ஹீ கொணர்ந்தவ ரென்றும் அறிவிக்கின்றார்; வர(க்):கா அவ்வாறு கூறத் துணிந்ததன் நோக்கம், ப'னீ இஸ்மாயீ'ல்களில் (இஸ்மவேல ருள்ளே) அஃதாவது, அரபிகளுள்ளிருந்து "மூஸாவைப் போன்ற" ஒரு தீர்க்கதரிசி எழுப்பப்படுவா ரென்று பைபிள் வேதம் (உபாகமம் 18 : 18) கூறியுள்ள தீர்க்கதர்சனத்தைச் சுட்டிக் காட்டுவதாயே யிருந்துவருகிறது. அது வருமாறு: "உன்னைப்போல ஒரு தீர்க்கதரிசியை நான் அவர்களுக்காக அவர்கள் சகோதரரிலிருந்து எழும்பப்பண்ணி, என் வார்த்தைகளை அவர் வாயில் அருளுவேன்......"

கொண்டுவந் திருப்பதைப் போன்ற தொன்றுடனே எந்த மனிதனும், அன்னவன் விரோதப் பான்மை யுடனே கொள்ளப்பட்டேயன்றி, (வேறு விதமாகத்) தோன்றியது எப்பொழுதுமே யில்லை; இன்னம், உமது காலம் என்னை (உயிருடனிருக்க)க் கண்டு கொள்ளுமாயின், நான் உமக்கு முழு உதவியையுங் கொண்டு உதவிபுரியக் கடவேன்.' அதன் பிறகு வர(க்):கா மரணமாகாது (அதிகநாள்) தாமதித்திருக்க வில்லை; (பின்பு) வ'ஹீயும் தாற்காலிகமாய் நின்று போய்விட்டது.[15]—(பு'க'ா. 1:1)

---

15. அதுபொழுது வ'ஹீ தாற்காலிகமாய் நின்றுபோய் விட்ட வைபவம் நெடுநாள்மட்டும் நீடித்திருக்க வில்லை; நிச்சய மாக அஃது ஆறுமாத காலத்துக்குமேலே நீடிக்கவில்லை யென்பது திண்ணமேயாம். மூன்றுவருட காலமட்டும் அவ் வ'ஹீ ஓய்ந்து போய்விட்டதென்று இப்'னு இஸ்'ஹா:க் கூறியிருப்பது சரித்திரச் சான்றுக்கு நேர்மாறு யிருக்கிறது. நபிப்பட்டம் அருளப்பட்டு மூன்றாண்டுகளுக்கு நெடுநாட்கள் முன்னேயே :குறைஷியரின் கொடுமை அவ்வாதிகால முஸ்லிம்களை அளவுக்கு மீறிய இன்னல் களுக்கும் இடையூறுகளுக்கு மெல்லாம் ஆளாக்கிவிட்ட தென் பதும், அதற்குள்ளே :குர்ஆன்ஷரீ'பின் பெரும்பாகம் அருளப் பட்டு விட்டதென்பதும் சரித்திரமறிந்துள்ள உண்மைகளேயாம். :குறைஷிகளின் கொடுமை மிகமிகப் பெருகிப்போய், நுபு'வ்வத்—(நபிப்பட்டம்) வந்து நான்காவ தாண்டிலே அது பொறுக்க முடியாது பொங்கிப் போய் விட்டமையால், நபிபெருமானார் அர்(க்):கம்(ரலி') என்பாரின் வீட்டினுள்ளே புகலிடம் தேடிக் கொண்டு, அங்கேயே கூட்டமான—(ஜமாஅ'த்) தொழுகையையும் தொடர்ந்து நடாத்தி வந்தார்களென்பதும் சரித்திரம் கண்டுள்ள சான்றாகவே யிருந்துவருகிறது; இன்னம், ஆதிமுதற்கொண்டே அம் முஸ்லிம்களின் ஐங்காலத் தொழுகைகளில் :குர்ஆன்ஷரீ'பி

3. வ'ஹீயின் தாற்காலிக நிறுத்தத்தைக் குறித்துப் பேசப் புகுந்துள்ள ஜாபி'ர் கூறினர்: (நபிகள் திலகம்) தங்கள் விருத்தாந்தத்தில் சொன்னர்கள் :—

"நான் (வீதி வழியே) நடந்துகொண் டிருந்த பொழுது, வானத்திலிருந்து ஒரு குரலைக் கேட்டு, என் நேத்திரங்களையும் உயர்த்திப் பார்த்தேன்; அப்பொழுது பாருங்கள்! 'ஹிராவில் என் முன்னே (அன்று) தோன்றிய அந்த வானவர் வானத்துக்கும் பூமிக்கும் இடைநடுவே ஒரு சிம்மாஸனத்தின் மீது அமர்ந்துகொண் டிருந்தார்; மேலும், அவரது நிமித்தமாக நான் அச்சமடைந்து (வீட்டுக்கும்) திரும்பிவந்து, என்னைப் போர்த்துங்கள், என்னைப் போர்த்துங்கள், என்றுங் கூறினேன். அப்பால் அல்லா(ஹ்) 'ஏ ஆடை கொண்டு போர்த்துகிறவரே! எழுந்து (சென்று) அப்பால் அச்சமூட்டி எச்சரிக்கக்கடவீர்; இன்னம், நும்முடைய ரக்ஷகனை மகிமைப்படுத்தக் கடவீர்; உம்முடைய உடைகளையும் பரிசுத்தம் பண்ணிக் கொள்ளக் கடவீர்;* (ஏனை எல்லா) அசுத்தத்தையும் ஒழித்துவிடக் கடவீர்,' என்று (வ'ஹீ) இறக்கி வைத்தான்." 16

---

லிருந்து ஆயாத்கள் பல ஓதிவரப்பட்டன வென்பதும் சரித்திரம் கூறும் சாக்ஷியமேயாம்.

16. சென்ற 'ஹதீ':து நபிகணோருக்கு (சல்) முதல் வ'ஹீ வந்து சேர்ந்த அனுபூதியை அணுவாய் விவரித்திருப்பதேபோல், இந்த 'ஹதீ':து அன்னவர்களுக்கு இரண்டாவது வ'ஹீ வந்தெய்திய

---

* "கந்தையானலும் கசக்கிக் கட்டு, கூழானலும் குளித்துக் குடி," என்பது பழமொழி.

அப்பால் வ'ஹீயானது மிகவாகப் பெருகி, அடுத் தடுத்தும் வரத் தொடங்கிற்று. [17]—(பு'க'ா. 1 : 1)

---

விருத்தாந்தத்தை விளக்கிக் கூறி யிருக்கிறது. இம்முறை :'சூர். 74-ஆவது அத்.தின் முதலைந்து ஆயாத்கள் அருளப்பட்டன. இந்த 'ஹதீ':தின் இப்பகுதி நபிபெருமானது சொந்த நாவால் நவிலப்பட்ட ஒரு செய்தியா யிருந்து வருகின்றமையால், இதில் கூறப்பட்டுள்ள சம்பவம் அப்பெருமானார்பால் ஜிப்'ரீல் இரண்டா முறை விஜயஞ்செய்த விருத்தாந்தத்தையே சுட்டிக்காட்டுகிற தென்பதில் சிறிதும் சந்தேகமிருக்கக் காரணமில்லை. ஆதலால், பு'க'ா. 92 : 1-இல் (அங்கே இங்குள்ள 2-ஆவது 'ஹதீ':து திருப்பிக் கூறப்படுகிறது) நபிகள் திலகத்துக்கு முதல் வ'ஹீ வந்த பிறகு அது தாற்காலிகமாய் நின்றுவிட்ட நேரத்திலே நம்பெருமான்(சல்அ'ம்) தங்களைக் கீழே உருட்டிக்கொள்வான் வேண்டி மலைச்சிகரங்களுக்கு ஏறிச்செல்வதுண்டென்றும், அப்படிப்பட்ட வேளைகளில் வானவர் ஜிப்'ரீல் வந்து, அப்பெருமானார் அல்லா(ஹ்)வின் மெய்யான திருத்தூதரே யென்று ஆறுதன்மொழி கூறிச் சமாதானம் செய்துவைப்ப துண்டென்றும் 'ஜுஹ்ரீ யென்பவரால் சேர்த்துச் சொல்லப்பட்டிருப்பது மெய்யான விஷயமென்று ஏற்றுக்கொள்ளப்படுவது முடியாது. வ'ஹீ தாற்காலிகமாய் நின்றிருந்த நேரத்திலே நபிகள்திலகம் ஜிப்'ரீலை ஒரு முறையேனும் கண்டது கிடையா தென்றும், அப்பால் அவரை நம்பெருமானார் இரண்டா முறையாய்க் கண்டபொழுது, முதன் முறையில் கொண்டுவிட்ட விம்மிதத்தைப் போலவே இம்முறையிலும் கொண்டுவிட்டார்க ளென்றும் இந்த 'ஹதீ':து நன்கு விளக்கிக் காண்பித்திருக்கிறது. மேலும், பு'க'ா. 92 : 1-இல் 'ஜுஹ்ரீ சேர்த்துக் கூறியிருப்பதற்கு ஆதாரமும் ஏதும் கொடுக்கக் காணோம்.

17. முதல் வ'ஹீயால் 96-ஆவது அத்.தின் முதலைந்து ஆயாத்கள் அருளப்பட்டன. இரண்டாவது வ'ஹீயால் 74-ஆவது அத்.தின் முதலைந்து ஆயாத்கள் அருளப்பட்டன. அப்பால் அல்லா(ஹ்)வின் வ'ஹீ மிகவும் பெருக்கெடுத்தும், அடுத்தடுத்தும்

4. இப்’னு அ’ப்’ப’ாஸ் (ரலி’)..........சொன்னார்கள்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) ஆண்டவனது வ‘ஹீயை அருளப் பெறுவதில் கடுமையான சிரமத்தையே எடுத்துக் கொள்வார்கள்; அதன் நிமித்தம் தங்கள் உதடுகளையும் அசைப்பார்கள்........ ஆகையால், அல்லா(ஹ்) (இவ்வாறு) இறக்கி வைத்தான்: "அதனுடனே துரிதப்படுதற்காக நீர் உமது நாவை அதனோடு அசைக்காதிருக்கக் கடவீர். நிச்சயமாக அதைச் சேகரிப்பதும், அதை ஒப்பிப்பதும் எம்மீதே சார்ந்திருக்கின்றன" (:குர். 75 : 16, 17)........ஆகவே, அதற்குப் பின்னால் அவர்கள்பால் ஜிப்’ரீல் (அ’லை) வரும்பொழுது அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) (மவுனத்துடனே) செவி மடுப்பார்கள்; அப்பால் ஜிப்’ரீல் சென்றுவிட்ட பொழுது, நபிபெருமான் (சல்அ’ம்) அவர்—(ஜிப்’ரீல்) அதனை ஒப்பித்த வண்ணமே ஒப்பித்து வந்தார்கள். [18]—(பு’க’ா. 1 : 1)

---

வரத் துவக்கினவென்று நாம் அறிவிக்கப் பெறுகிறோம். மூலத்தில் காணப்படும் ‘ஹமிய என்னும் அரபுபதம், "சூடடைந்துவிட்டது," என்று அர்த்தம் கொள்ளக்கூடியதா யிருக்கிறது; அஃதாவது, அதிகமாக வரத்தலைப்பட்டது என்பதே யாம். அஃது அடுத்தடுத்தும் வரத் துவக்கிற்று. முதல் வ‘ஹீக்கும் இரண்டாவது வ‘ஹீக்கும் இடையிலே ஓய் வுண்டாயதேபோல் அப்பால் எப்பொழுதுமே ஓய்வென்பது உண்டாயதில்லை யென்க.

18. எத்தகைய விலக்குமில்லாது எல்லா வ‘ஹீகளுமே வானவர் ஜிப்’ரீலாலேதான் நபிகள் நாயகத்தின்பால் கொண்டு வந்து சொரியப்பட்டன வென்றும், அன்னவர் கொணர்ந்து சொரிந்த விதமெல்லாம் ஒரேமாதிரிதான், அஃதாவது, அவர் கொணரும் வ‘ஹீயை அன்னவரே முதலாவதாக ஒப்பிப்பார்; ஆவலுடன் அதனைச் செவிமடுத்துவரும் நபிகள்திலகம் அவ்

5. ஆ'யிஷா பிராட்டியார் (இவ்வாறு) கூறினர்: "ஹாரி:திப்'னு ஹிஷாம் அல்லா(ஹ்)வின் திருத்தூதரை (சல்அ'ம்) நோக்கி, 'ஏ அல்லா(ஹ்)வின் திருத்தூதரே! தங்கள்பால் எவ்வாறு வ'ஹீ வருகிறது?' என்று வினவினர். (அதற்கு) அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) (பின்வருமாறு) விடையளித்தார்கள்:—

"சில வேளைக்ளில் அஃதொரு மணியடிப்பதே போல் (ஓசை மயமாய்) என்பால் வருகிறது; மேலும், அத்தான் ஏன்மீது மிகக் கொடியதொரு சிரமத்தை

---

வானவர் சென்றுவிட்ட பின்னல் அவர் ஒப்பித்துச் சென்ற வசனங்களை அப்படியே திருப்பி யொப்பிப்பார்களென்றும் இந்த ஹதீ':து விளக்கிக் காண்பிக்கிறது. முதன்முறையிலும் இரண்டா முறையிலும் ஐந்தைந்து சிறுசிறு ஆயாத்களே அருளப்பட்டமையால், அவற்றினை நினைப்பில் நிறுத்திக்கொள்வ தென்பது நபிபெருமானுக்குச் சிறிதும் சிரமமா யிருந்திராது. அப்பால், சென்ற 'ஹதீ':தில் கூறப்பட்டிருப்பதேபோல, வ'ஹீ யென்பது மிகவாகப் பெருக்கெடுத்தும், அடுத்தடுத்தும் வரத் துவக்கிய பின்னல், :குர்ஆன்ஷரீ'பின் பெரும்பெரும் பகுதிகளெல்லாம் வ'ஹீயின் வாயிலாய் ஓரே தொடராய் வந்திறங்கத் தலைப்பட்டு விட்டன. ஆகையால், ஜிப்'ரீல் ஒப்பிக்கத் தொடங்கியவுடனே நபிபெருமானும், அதினின்று ஏதேனுமொரு வசனம், அல்லது வாக்கியம் விடப்பட்டுப் போய்விடாதிருக்கும் பொருட்டுத் தாங்களும் உடனொப்பிக்கத் துரிதப்பட லாயினார்கள். ஆகவே தான், அப்பெருமானார்(சல்) அதனுடனே துரிதப்பட வேண்டா மென்றும், அதனை ஜிப்'ரீல் முழுவதும் ஒப்பித்து முடிக்குமட்டும் மௌனத்துடனே வாளா செவிமடுத்து வரவேண்டு மென்றும், அப்பால் அவ் வ'ஹீயைத் திருப்பி ஒப்பிக்கலா மென்றும் அறிவுறுத்தப் பெற்றார்கள்; ஈதெல்லாம் இறைவனது ஏற்பாடே யென்றும், எனவே அல்லா(ஹ்)வின் வ'ஹீயிலிருந்து ஏதொன்றும்

ஏற்படுத்துவதா யிருக்கிறது; அப்பால் அவர் என்னை விட்டுச் சென்று விடுகிறார்; மேலும், அவர் என்ன கூறுகிறா ரென்று நான் அவரிடத்திருந்து நினைப் பில் நிறுத்திக் கொள்ளுகிறேன்; இன்னம், சில வேளைகளில் அவ்வானவர் ஒரு மனிதனைப் போலே என்பால் வருகிறார்; மேலும், அவர் என்ன கூறு

---

நழுவிப்போக விடப்பட மாட்டாதென்றும் ஆறுதன்மொழியுங் கூறப் பெற்றுளார்கள் (:குர்ஆன் 75 : 16, 17). இன்னம், முன்னமே அருளப்பட்ட ஆதிகால அத். ஒன்றிலே; “நாம் நும்மை ஓப்பிக்கச் செய்வோம்; ஆகையால், நீர் மறந்துவிட மாட்டீர்,” (87 : 6) என்று இன்னம் தெளிவாக அல்லா(ஹ்) அப்பெருமானாருக்கு அறிவுறுத்தி யுள்ளான். நபிகள்திலகத்துக்கு ஒரே சமயத்திலே முழுமுழு அத்யாயங்களாக வ‘ஹீ யிறக்கப்பட்ட ஸூராக்கள் பல :குர்ஆன்ஷரீ‘பிலே காணப்பட்டு வருகின்றன; அவற்றி லொன்று :குர்ஆனில் முப்பதிலொரு பகுதிக்கு மேற்பட்ட தாகவே இருந்து வருகிறது. எனினும், ஜிப்’ரீல் அவற்றினை யெல்லாம் ஒரே முறைதான் ஓதிக் காண்பிப்பார்; அப்பா லுடனே நபிபெருமானார் (சல்அ’ம்) அவ் வாயாத்களை யெல்லாம் ஓரக்ஷரமும் பிசகாமல் அப்படியே ஓதிக் காட்டவல்ல ஏகசந்த கிராஹியா யிருந்துவந்தார்கள்; ஏனையோர் மறந்துவிடாதிருக் குப்பொருட்டு அக்கணமே அவைகளை வரிவடிவில் வரைந்து கொள்ள ஏவுவார்கள்.

இந்த ‘ஹதீ’:திலிருந்து இன்னமொரு நுட்பமும் வெளி யாகின்றது: நபிகள்நாயகம் வானவர்பாலிருந்து வ‘ஹீயைப் பெறுங்கால், அவர்களுடைய உதடுகள் அசைவதை மற்றைய ச‘ஹாபாக்கள் பார்த்திருக்கிறார்கள்; இதனால் அப்பெருமா னாருக்கு அருளப்பட்டுவந்த வ‘ஹீகளெல்லாம் அந்தரங்க உதிப் பல்ல வென்றும், ஆனால் வெளியிலிருந்து கொண்டுவந்து கொடுக் கப்பட்ட அல்லா(ஹ்)வின் அனுக்கிரகமே யென்றும் நாம் நன் குணர்ந்து கொள்ளுகிறோம்.

கிரு ரென்று நான் (என்) நினைப்பில் நிறுத்திக் கொள்ளுகிறேன்." [19]

19. இருவிதமா யறிவிக்கப்படும் வ'ஹீயிலும் ஜிப்'ரீல்(அ'லை) எடுத்துக்கொள்ளும் தோற்றத்திலேதான் வேற்றுமை காணப் படாநின்றது. முதல் விதத்தில் வானவர் ஜிப்'ரீல் என்னவித மான உருவத்தை யெடுத்துக்கொள்கிறு ரென்று கூறப்படவில்லை. நிச்சயமாகவே அஃதொரு வருணனைக்கு அப்பாற்பட்ட வானவர் தோற்றமே போலத்தான் இருந்திருத்தல் வேண்டும். அப்பொழுது அவர் கூறுமொழிகள் வெண்கலமணியில் உண்டுபண்ணப்படும் கடிய ஓசையேபோல் கணீரென மிக விளக்கமாய்ப் புலப்படும். இரண்டாவது விதத்தில் அவ்வானவர் ஆடவர் உருவினை எடுத்துக் கொள்வார்; அதுபொழுது ஒரு மனிதன் வேெருரு மனித னுடனே சம்பாஷிப்பதேபோல் சாதாரணப் பேச்சால் ஓதிக் காண்பிப்பார். இந்த 'ஹதீ':தின் வசனங்களிலிருந்து, ஜிப்'ரீல் அறிவித்த வ'ஹீ யெல்லாம் ஓதப்படும் வார்த்தைகளாகவே ஓதிக் காண்பிக்கப்பட்டு வந்தனவென்பது நன்கு நிரூபணமாகின்றது. அவ்விருவித வ'ஹீயிலும், "அவர் என்ன கூறுகிருரென்று நான் நினைப்பில் நிறுத்திக்கொள்கிறேன்," என்றே இரசூல் நாயக மவர்கள் இயம்பியிருக்கின்றுர்கள். முதல்வித வ'ஹீயில் அ'ன்ஹு (அவரிடத்திருந்து) என்னுஞ் சொற்கள் சேர்க்கப்பட்டிருப்பதி லிருந்து, அவ் வசனங்களை வ'ஹீயின் வாயிலா யறிவிப்பவர் வானவர் ஜிப்'ரீலென்றே நாம் நன்குணர்ந்து கொள்கிறேம்; இதற்காகவே அ'ன்ஹு என்பது அங்கே சேர்க்கப்பட்டிருக்கிறது. அவ்விருவித வ'ஹீயிலும் நபிகள்திலகம் வானவர் ஜிப்'ரீலைப் பார்க்கிருர்கள்; அவ் விரண்டிலும் அவர்பாலிருந்து வ'ஹீயின் வசனங்களைக் கேட்கிருர்கள். அப்பால் அவ்வசனங்களைத் தங்கள் ஞாபகத்திலே அப்படியே நிலைநிறுத்திக்கொள்கிருர்கள். ஆயின், அவ்விரண்டு விதத்துக்கும் இடையிலுள்ள வேற்றுமை, வானவர் ஜிப்'ரீல் எந்தஉருவத்தி லிருந்தாரென்னும் விஷயமாகவே இருந்து வருகிறது; எனவேதான், இரண்டற்கு மிடையே தொனியில் வித்தியாசம் காணப்படலாயிற்று.

ஆ'யிஷா பிராட்டியார் கூறினர் : இன்னம், ஒரு நளிர்மிக்க தினத்திலே அவர்கள்மீது வ'ஹீ வந்து இறங்கி, அப்பால் அஃது அவர்களை விட்டுவிட்டுச் சென்ற பொழுது, நான் அவர்களைப் பார்த்தேன் ; அப்பொழுது அவர்களது நெற்றி வேர்வை நீரால் வழிந்துகொண் டிருந்தது.[20]—(பு'க'ா. 1 : 1)

---

20. வ'ஹீ வந்திறங்குங்கால், நபிகள்நாயகத்தின்மீது ஒருவித மெய்யான புறத்தோற்ற மாறுதல் ஏற்பட்டு வந்த தென்பது பற்பல 'ஹதீ':துகளால் உறுதிப்பட் டிருக்கிறது. ஒரு நளிர் மிக்க தினத்தில் வ'ஹீ வந்துற்ற பொழுது, அவர்களது நெற்றியிலிருந்து வேர்வைநீர் வழிந்தோடிற் றென்று இந்த 'ஹதீ':து எடுத்துக்காட்டுகிறது. 6-ஆவது 'ஹதீ':தின் பிரகாரம், வ'ஹீ வந்திறங்கியக்கால், நபிபெருமானது தொடையின்கீழிருந்த தமது தொடை நசுங்கிவிடக்கூடுமோ வென்று 'ஜய்த்' பெரிதும் அச்சம் பூண்டுவிட்டா ரென்பது வெளியாகின்றது. வ'ஹீ வந்து நபிபெருமான்மீது தோன்றுங்கால், அம் மஹானுபாவரின் "வதன கமலம் சிவப்பா யிருந்தது," என்று யஃ'லா கண்டனரென்று 7-ஆவது 'ஹதீ':து எடுத்தோதுகின்றது. 8-ஆவது 'ஹதீ':து இயம்புவதாவது : அப் பெருமானர்மீது வ'ஹீ வந்திறங்கும் பொழுது, அந் நாயகமவர்கள், துயருழந்தவராகக் காணப்படு வார்கள் ; அவர்களது வதன கமலத்தில் மாறுத லொன்றும் ஏற்பட்டு விடும். எனவே, இப்படிப்பட்ட 'ஹதீ':துகளா லெல்லாம் ஏற்படும் உண்மை யாதெனின் : நபிபெருமானர்(சல்) வெளியிலிருப்பினும், வீட்டுக்குள்ளே அந்தப்புரத்தி லிருப்பினும், அன்னவர்கள்மீது வ'ஹீ வந்து இறங்குந்தோறெல்லாம் அவர்கள் பால் ஒருவிதப் புறத்தோற்ற மாற்றம் உண்மையிலே உண்டாய்க் கொண் டிருந்தது என்பதேயாம் ; அத்தகைய தோற்றத்தை அப் பெருமானர் வேண்டுமென்றே மாறுபாடாக வருவித்துக் கொண் டிருப்பது சாலாது. என்னெனின், அம் மாற்றமென்பது அவர்களது திருமேனியில் இயற்கையான ஒரு வேற்றுமையையே

6. 'ஜய் தி'ப்'னு :தாபி'த் சொன்னார் : அல்லா(ஹ்) தன்னுடைய திருத்தூதர்மீது (சல்அ'ம்) வ'ஹீயை இறக்கி வைத்தான் ; அப்பொழுது அவர்களுடைய தொடை எனது தொடைமீது இருந்து வந்தது ; இன்னம், அஃது எனக்குத் தனது பளுவை யுணர்த்தத் துவக்கிற்று ; (எத்துணைக் கனமாக வென்றால்) அதனால் எனது தொடையே நசுக்குண்டு போய்விடக் கூடுமோ வென்று யான் (பெரிதும்) அஞ்சிவிட்டேன்.—(பு'க'ா. 8 : 12)

---

உண்டுபண்ணுவதா யிருந்துவந்தது. இதிலிருந்து விளக்கமாவது யாது? நபிகளுதர் ஜாக்ரத்தில் (விழிப்புள்ள நிலையில்) இருந்து வருங்காலே அல்லா(ஹ்)வின் வ'ஹீ வந்து விடுமாயின், அக்கணமே அப் பெருமானார்(சல்) அதியுச்ச ஆன்ம நிலையாகிய துரியாதீத நிலைமைக்குத் திடீரென மாற்றப்பட்டு விடுவார்கள் ; அம் மாற்றத்தின் வேற்றுமை அவர்களது திருமேனியில் பிரத்தியக்ஷ மாய்க் காணப்பட்டே வந்தது. அந்த வ'ஹீயைப் பெற்றுக் கொள்ளுதற்கு அத்தியாவசியமா யிருந்த ஆன்ம இந்திரியங்கள் திடுமென நூதனமாய்த் தோற்றத் தலைப்படுங்கால், அவர்களுடைய பௌதிகப் புறஇந்திரியங்களில் ஒருவித மரணத்தை அவை உண்டுபண்ண வேண்டிய அவசியத்தை ஏற்படுத்தி விடுகின்றன. வ'ஹீ வருங்கால், 'நபிபெருமான்(சல்அ'ம்) வாயிலிருந்து நுரை தள்ளுவதுண்'டென்று ஒருசிலர் கூறத் துணிந்தது யாதோர் ஆதாரமுமற்ற வெறும் பொய்க்கூற்றே யாகும். வ'ஹீயின் வேளையில் நபிபெருமானுக்கு மணியோசை போன்ற சப்தங் கேட்ப துண்டென்ற செய்தியைச் செவிமடுத்தவுடனே அஃது அபஸ்மார ரோகத்தின் (காக்கைவலியின்) அடையாள மென்று பிதற்றத் துணியும் ஒருசில அறியாத மாக்களின் மடமையுரையைப் போலத்தான் இருக்கிறது மேலே கூறப்பட்ட கூற்றும்.

7. ச'ப்வான் இப்'னு யஃ'லா (இவ்வாறு) கூறியுள்ளார் :

'அன்னவர்கள்பால் வ'ஹீ இறக்கப்படும்பொழுது, எனக்கு நபிகள் நாயக (சல்அ')மைக் காண்பிப்பீராக,' என்று யஃ'லா உ'மரிடம் கோரினர். ஆகையால், நபி பெருமான் (சல்அ'ம்) ஜிஃ'ரானவில்[21] இருந்த பொழுது,—அதுகாலை அவர்களுடைய தோழர்கள் பலரும் அன்னவர்களுடனே இருந்து வந்தார்கள்.... அவர்களுக்கு வ'ஹீ வந்தது. அதுபொழுது உ'மர் யஃ'லாவுக்குச் சயிக்கினை செய்தார்; ஆகவே, யஃ'லா வந்து சேர்ந்தார். அப்பொழுது அல்லா(ஹ்)வின் திருத்தூதர்மீது (சல்அ'ம்) ஒரு மேலாடை இருந்தது. அதனைக் கொண்டு அவர்கள் போர்த்தப் பட்டார்கள்; மேலும், அன்னவர்கள் தங்கள் சிரத்தை (அவ்வங்க வஸ்திரத்தி னுள்ளே) நுழைத்துக் கொண்டார்கள்; அப்பொழுது அல்லா(ஹ்)வின் திருத்தூதரின் (சல்அ'ம்) வதனம் சிவப்பாயிருந்தது; மேலு மவர்கள் குறட்டை விட்டுக்கொண் டிருந்தார்கள்;[22] அப்பால் அந்த நிலைமை அவர்களைவிட்டு நீங்கிப் போய்விட்டது.—(பு'கா'. 25 : 17)

---

21. இந்த இடம் மக்காவுக்கும் தாயி'புக்கும் இடையிலே இருக்கிறது.

22. ஜாக்ரத்திலிருந்து திடுமெனத் துரியாதீத நிலைமைக்கு உயர்த்தப்பட்டுவிட்டமையால், அஃதொரு சுழுத்தி நிலைக்கப்பாற் பட்ட அயர்ந்த நித்திரையேபோலத் தோற்றிற்று. ஆனால், அஃதோர் உண்மையுறக்க மன்று; என்னெனின், இந்த 'ஹதீ'தே விளக்கியிருக்குமாபோல், அப்பெருமானர் அதுபொழுது தங்கள் தோழர்களுடனே சல்லாபம் செய்துகொண் டிருந்தார்கள்.

8. உ'ப'த'ா இப்'னுஸ்'ஸ'ாமித் கூறினர்: நபி பெருமான் (சல்அ'ம்) தங்கள்மீது வ'ஹ்ஹீ இறக்கப்படுங் கால், துயரத்தி லாழ்ந்திருக்கும் ஒருவரைப் போலே இருந்து வந்தார்கள்; அவர்களது வதனத்தில் மாறுத லொன்றும் ஏற்பட்டு விட்டது.

இன்னம், ஒரு செய்தியின்படி, அன்னவர்கள் தங்கள் சிரத்தைத் தொங்கப் போட்டார்கள்; மேலும், அவர்களுடைய தோழர்களும் தங்கள் சிரங்களைத் தொங்கப் போட்டார்கள். [23] இன்னம், அந்நிலைமை நீங்கியதன் பின்னே அன்னவர்கள் தங்கள் சிரத்தை உயர்த்தினர்கள்.—(முஸ்—மிஷ். 27 : 5)



23. நபிபெருமான்மீது (சல்அ'ம்) விஜயஞ் செய்திருந்த வ'ஹ்ஹீயின்பாலும், நபிகள் நாயகத்தின்பாலும் காட்டிய மரியாதை யால் தோழர்க ளெல்லாம் தங்கள் சிரங்களைத் தொங்கப் போட்டார்கள் என்க.

# அத்யாயம்—2

## ஈமானும் (உறுதி கொள்ளலும்) இஸ்லாமும் (அடிபணிதலும்)

1. "(நம்முடைய) தூதர் தம்முடைய ரக்ஷகனிடத்திருந்து தம்பால் இறக்கி வைக்கப்பட்டதைக் கொண்டு ஈமான் கொள்ளுகின்றார்; இன்னம், ஈமான் கொண்டவர்களும் (அவ்வாறே அதை ஏற்றுக் கொள்ளுகிறார்கள்). அவர்களனைவரும் அல்லா(ஹ்)வைக் கொண்டும், அவனுடைய அமரர்களைக் கொண்டும், அவனுடைய வேதங்களைக் கொண்டும், அவனுடைய தூதர்களைக் கொண்டும் ஈமான் கொள்ளுகிறார்கள். 'நாங்கள் அவனுடைய தூதர்களுள்ளே எவரிடையேயும் வேறுபாடு பாராட்டமாட்டோம்,' (என்றும் கூறுகிறார்கள்)" (:குர். 2: 285).

2. "இன்னம் (அன்னவர்கள்) உம்பால் அருளப்பட்டதையும், உமக்கு முன்னே அருளப்பட்டதையுங் கொண்டு ஈமான் கொள்கிறவர்கள்; இன்னம், இறுதி வாழ்க்கையைக் கொண்டும் அன்னவர்கள் உறுதிகொண்டவர்களா யிருக்கிறார்கள்" (2: 4).

3. "ஏ ஈமான் கொண்டவர்காள்! அல்லா(ஹ்)வையும், அவனுடைய தூதரையும், அவன் தன்னுடைய தூதருக்கு அருளியுள்ளதையும்...கொண்டு ஈமான் கொள்ளக்கடவீர்கள்" (4: 136).

4. "காட்டரபிகள், 'நாங்கள் ஈமான் கொண்டோம்,' என்று கூறுகிறார்கள். (ஆயின்) நீர் சொல்வீராக: 'நீங்கள் ஈமான் கொள்ள வில்லை; ஆனால், (அதைவிட) நாங்கள் அடிபணிந்தோம் என்று கூறுங்களே; மேலும், ஈமான் (என்பது) உங்கள் ஹிருதயங்களுக்குள்ளே (இன்னம்) நுழையவில்லை'" (49: 14).

5. "அல்லா(ஹ்)வையும் அவனுடைய திருத்தூதரையுங் கொண்டு ஈமான்கொண்டவர்களே (உண்மையான) மூமின் களா யிருக்கிறார்கள்; அதன்பின்பு அவர்கள் ஐயங்கொள்வது கிடையாது; இன்னம், அன்னவர்கள் அல்லா(ஹ்)வின் பாதையிலே தங்கள் ஐசுவரியத்தையும் ஆன்மாக்களையுங் கொண்டு பெரும் பிரயாசை யெடுத் துழைக்கின்றார்கள்" (49: 15).

6. "இன்னம், வானங்களிலும் பூமியிலும் உள்ளவர்கள் (யாவரும்)... அவனுக்கே அடிபணிந்து நடக்கின்றார்கள்" (3: 82).

7. "எவனொருவன் தன்னையே அல்லா(ஹ்)வுக்கு (முற்றிலும்) அடிபணியச் செய்து, மேலுமவன் (ஏனையோருக்கு) நன்மை புரிகிறவனா யிருக்கிறானோ, அவனுக்கு அவனது சம் மானம் அன்னவனுடைய ரக்ஷகனிடத்தே யிருக்கிறது" (2: 112).

8. "மேலும், நீங்கள் பகைவர்களா யிருந்தபொழுது, உங்கள் மீது சொரியப்பட்ட அல்லா(ஹ்)வின் அருட் கொடையை நினைவுகூரக் கடவீர்கள்: அப்பா லவன் உங்க ளுடைய ஹிருதயங்களை ஒன்றாய்ப் பிணைத்து வைத்தான்; ஆகையால், அவனது அருட்கொடையைக் கொண்டு நீங்கள் சோதரர்க ளாய்விட்டீர்கள்" (3: 102).

9. "இன்னம் (இஸ்லாமிய முறைப்படி) உங்களுக்கு ஸலாம் சொல்லும் எவனுக்கும், 'நீ யொரு மூமினானவனல்லை,' என்று (பதில்) கூறாதீர்கள்" (4: 94).

உயர்தரமான எல்லா உண்மைச் சமயங்களுக்கும் அடிப் படையா யிருந்து வருவது அல்லா(ஹ்)வின் வ'ஹீயின் (ஞான வெளிப்பாட்டின்) மீது உறுதிகொள்வதாகவே இருக்கிறது; என்னெனின், வ'ஹீயின் வாயிலாகத்தான் ஆண்டவன் ஒருவன் இருக்கிறானென்னும் உண்மை அடியானுக்கு நேரில் அறியக்

கிடக்கின்றது; இன்னம், அன்னதன் மூலமாகத்தான் ஆண்டா னுக்கும் அடியானுக்கும் இடையிலே தொடர்புண்டாகக்கூடியதா யிருக்கிறது. எல்லைகோலப்பட் டுள்ள இப்பிரபஞ்ச வட்டா ரத்திலே மனிதன் எல்லாவித அதிசயங்களையும் (பரமாணுவைப் பிளப்ப துட்படக்) கண்டுபிடித்துக் கொண்டே செல்லலாம்; ஆனால், எல்லையற்ற பரம்பொருளா யிலங்கிவரும் (அப் பரமாணுவுக்கும் அப்பாற்பட்டுள்ள) அந்தப் பராபரக் கடவுளைக் கண்டுபிடிப்பது மட்டும் இவ் வெல்லைக்குட்பட்ட மனிதனால் இயல்வதில்லை. அடியவன் ஆண்டவனைக் கண்டுபிடிப்ப தில்லை; ஆயின், அவ்வாண்டவனே அடியவனுக்குத் தானிருப்பதை வெளி யாக்கி யறிவிக்கிறான்; ஆதலால், அல்லா(ஹ்)வின் வ'ஹீயின் வாயிலைக் கொண்டேதான் அடியவன் ஆண்டவனை அறிந்துகொள்வது சாத்தியமாகிறது.

இமாம் பு'கா'ரீ மதவிஷயங்களில் ஆழிய ஆராய்ச்சி ஞானம் மிகவாக அருளப்பெற் றிருந்தமையால், வ'ஹீயின் சார்பான அத்யாயத்தைக் கொண்டே தாங்கள் கோவை செய்த ஜாமிஃ' என்னும் கிரந்தத்தைத் துவக்கி, அப்பால் ஈமான் (சமய உறுதி) என்பதற்குரிய அத்யாயத்தை நிறுவி யிருக்கிறார்கள். இஸ் லாத்தில் "ஈமான் கொள்வ" தென்பது இருபெரும் பகுதிகளாகப் பிரிக்கப்பட் டிருக்கிறது: முதலாவதாக, இங்கு "ஈமான்" என்பது ஒருவருக்கு, அல்லது ஒரு தலைமுறையாருக்கு மட்டுமே அறிவிக்கப்பட்ட வ'ஹீயில் உறுதிகொள்வதாக மட்டுமே நின்றுவிடாது, எல்லாக் காலங்களிலும் எல்லா ஜனங்களுக்கும் அருளப்பட்ட வ'ஹீயிலெல்லாம் உறுதிகொள்வதாகவே இருந்து வருகிறது (தலை. ஆயத் 1). அஃது அல்லா(ஹ்)வின் வேதங்கள் மீதும், அல்லா(ஹ்)வின் தூதர்கள் மீதும், நபிகள் திலகத்துக்கு முன்னே தோன்றியுள்ள எல்லா வேதங்கள் மீதும் எல்லாத் தூதர்கள் மீதும் விசுவாசம் கொள்வதா யிருக்கிறது (தலை. ஆயத் 2). இரண்டாவதாக, இம் மதத்தில் "ஈமான்" என்பது, "நம்பி உறுதிகொள்ளல், செயலளவில் செய்துகாட்டல்" என்னும் இரண்டையும் உளப்படுத்திக் கொண்டிருக்கிறது. தலை. ஆயத் 3-இல் மூமினானவர்கள் ஈமான் கொள்ளுமாறு ஏவப்

படுகிறார்கள் ; இதன் தாத்பரியம், அவர்கள் தங்கள் ஈமானைச் சற்கருமங்களைக் கொண்டும் தியாகங்களைக் கொண்டும் பூர்த்தி செய்து நிறைவேற்ற வேண்டுமென்பதாகவே இருந்து வருகிறது ; ஈமானின் முதற்படி இஸ்லாத்தைச் சாதாரணமா யேற்றுக் கொள்வதாகவே இருந்துவருகிற தென்றும், அதன் இரண்டாம் படி அவ்ஈமான் உள்ளத்தினுள்ளே நன்கு புகுந்து உறுதியான வேரைப் பெற்றுக்கொண்டதன் பின்னே துவக்கமாகிற தென்றும் தலை. ஆயத் 4 விளக்கிக் காட்டுகிறது ; அத்தகைய பரிபக்குவம் ஏற்பட்டு விடுங்கால், இஸ்லாமியன் தியாகத்துக் குரிய மஹோன்னத காரியங்களை யெல்லாம் செய்துமுடிக்கச் சித்தமாய் விடுகிறான் (தலை. ஆயத் 5). இஸ்லாம் [அல்லா(ஹ்)வின் சட்ட திட்டங்களுக்கு முற்றிலும் அடிபணிந்து நடத்தல்] என்பது, இயற்கையில் காணப்பட்டுவரும் ஒரு தவிர்க்க முடியாத நியாயப்பிரமாணமா யிருக்கிறது (தலை. ஆயத் 6); அடியான் ஆண்டானுடைய வ'ஹீயின்வாயிலா யறிவிக்கப்பட்டுள்ள நியாயப் பிரமாணங்களுக்குத் தன்னை முற்றிலும் அடிபணியச் செய்து விடுங்காலே தனக்குரிய பரிபூரணத்தை யடைந்துகொள்கிறான் (தலை. ஆயத் 7). எனினும், இஸ்லாம் அவரவரின் தனித்தனியான பரிபூரணத்தைமட்டுமே குறிக்கோளாய்க் கொண்டு நிற்கவில்லை ; என்னெனின், எல்லா மன்பதைகளும் ஓரேசகோதர கோஷ்டியைச் சார்ந்தவர்கள்தா மென்னும் ஒருவகை விசேஷ விசுவசகோதரத்வத்தை இஸ்லாம் ஏற்படுத்தி வைத்திருக்கிறது ; இஸ்லாமிய முறைப்படி ஸலாம் (வந்தனம்) கூறும் ஒரு சர்வசாதாரண காரியத்தைச் செய்து காண்பிப்பவனுக்குங்கூட அவ் வகண்டாகாரமான விசுவ சகோதரத்துவத்தில் அங்கம் வகிக்க அருகதை யுண்டாய் விடுகிறது (தலை. ஆயாத் 8, 9).

இவ் வத்யாயத்தில் கூறப்பட்டுள்ள 'ஹதீ'ஸின் தொடக்கத்திலே, மதமென்பது கடுமையான சமயக் கிரியைகளிலே சார்ந்து நிற்கவில்லை யென்றும், ஆனால் ஏனையவர்களின் உரிமைகளுக்குப் போதிய மரியாதை காட்டக்கூடிய விதத்திலே உயிர் வாழ்ந்து வருதற்குரிய நல்ல விதமான வாழ்க்கையையே சார்ந்து நிற்கிற தென்றும் விளக்கிக்காண்பிக்கும் அடிப்படைக் கொள்

கையே பிரஸ்தாபிக்கப்பட் டிருக்கிறது (‘ஹதீ’.1—3). இன்னம், சற்கருமங்கள் பரிசுத்த ஹிருதயத்தினின்றே முளைத்தெழுகின்றன வென்றும், ஆகையால் ஹிருதயத்தை அடக்கியாளக் கூடிய ஈமானே அத்தியாவசிய மென்றும் அடுத்த ‘ஹதீ’:து (‘ஹதீ’. 4) எடுத்துக் காட்டுகிறது. ஈமான் (உறுதி கொள்ளல்) இஸ்லாம் (இறைவனது ஏவலுக்கு அடிபணிந்து நடத்தல்) என்னுமிரண்டும் அடிக்கடி ஒன்றுக் கொன்று பரிவர்த்தனை யாகவே மாற்றி உபயோகிக்கப்பட்டு வருகின்றன; ஆனால், “ஈமான்” என்பது தன்னளவிலே, செய்கைகளுக்கு மூலாதாரமா யிருக்கும் ஒரு கொள்கையினை ஏற்றுக்கொள்வதையே குறிக்கின்றது; அதுதான் சித்தாந்த பாகமாகும்; “இஸ்லாம்” என்பது, அந்தச் செய்கை யினையே சுட்டிக் காட்டும்; அதுதான மனித வாழ்க்கையின் அனுஷ்டான பாகமாகும் (‘ஹதீ’. 5, 6.) ஆனால், சித்தாந்தமும் அனுஷ்டானமும் இம் மார்க்கத்தில் ஒன்றாகவே இணைக்கப் பட்டிருக்கின்றன; எனவேதான், சித்தாந்தத்திலிருந்து முளைக்கும் செய்கைகள் (அனுஷ்டானங்கள்) கூட ஈமானென்றே அழைக்கப் படுகின்றன. ஆகையால், ஒருவனுடைய செயல்கள் ஏனையவர் களுக்கு எத்துணைமட்டும் மிகுதியாகவாதல் குறைவாகவாதல் பயன்பட்டு வருகின்றனவோ, அத்துணைக்குத் தக்கவாறே அவனது ஈமானும் பெரிதாக, அல்லது சிறிதாக இருந்து வருகிறது. ஈமான் அன்பு (பிரியம்) என்றுகூட அழைக்கப்படுகிறது: அல்லா(ஹ்)வின் மீது உறுதிகொண்டவன் தன்னருகிலே நடந்துசெல்லும் ஒரு வழிப்போக்கனுக்கு நன்மை செய்யப் பின்வாங்க மாட்டான்; என்னெனின், மன்பதையின்பால் அவனுக்குள்ள பேரன்பு அத்துணை விரிவுள்ளதா யிருக்கிறது (‘ஹதீ’. 7); அத்தகைய மதஉறுதி பெற்றவன் மன்பதைகளை யெல்லாம் நேசித்து வருவதோடு, நபிகள் திலகத்தை எல்லாவற்றிற்கு மேலாய் நேசித்து வருவான்; என்னெனின், அப் பெருமானாரே மன்பதைக் கெல்லாம் மாபெரும் மகோபகாரியா யிருக்கிறார்கள் (‘ஹதீ’. 8); அத்தகைய மூமின் தன்சகோதரன்பால் காட்டும் அன்பு வெறு வாயுபசாரமா யிருப்பதில்லை; ஆயின், அவனுடனே தான் பழகி வரும் ஒவ்வொரு நாட் டொடர்பிலும் அத்தகைய அன்பைக்

கொண்டே தூண்டப்பெற்று வருகிறான் ('ஹதீ'. 9); அவன் எல்லாவற்றினும் மேலாக அல்லா(ஹ்)வையே நேசிக்கிறான்; அந்த அல்லா(ஹ்)வி னிமித்தமே மன்பதையை நேசிக்கிறான்; ஆகவே, மக்கள்பால் அவனுக்குள்ள அன்பு (பிரீதி) சுயநயமற்ற பரிசுத்த பரோபகார நோக்கத்தையே தனக்குரிய அடிப்படையாய்க் கொண்டு நிற்கிறது ('ஹதீ'. 10).

அடுத்துவரும் மூன்று 'ஹதீ':துகளும் "இஸ்லாம்" என்பது என்னவென்பதை விளக்கிக் காண்பிக்கின்றன. வாய்மொழியால் ஒருவிதக் கொள்கையை உச்சரிப்பதுமட்டும் போதாது; இறைவன் ஏகனே யென்றும் மு'ஹம்மத்' நபீ' (சல்அ'ம்) அவனுடைய திருத்தூதரே யென்றுமட்டும் நாவினால் நவில்வது ஒருவனை இஸ்லாத்தின் எல்லைக்குள்ளே கொண்டுவந்து சேர்த்துவிடும்; ஆனால், ஒரு முஸ்லிமா யிருப்பதற்கு அன்னவன் திண்ணமாக முஸ்லிமுக் குரிய வாழ்க்கையினையே வாழ்ந்துவரல் வேண்டும்; அஃதாவது, எல்லாருடனும் அதிக சமாதான முறையிலே வாழ்ந்து வருவதுதான் அம் முஸ்லிமுக்குரிய சரியான வாழ்க்கை யாயிருக்கிறது. அத்தகைய வாழ்க்கைக்கு வேண்டிய முதல் நிபந் தனை, அவன் தனது வாயைக் கொண்டேனும் கையைக் கொண்டே னும் எந்த மனிதனுக்கும் எத்தகைய தீங்கையும் விளைக்காதிருப் பதே யாகும் ('ஹதீ'. 11). அவ்வாறு தீங்கிழைப்பது இஸ்லாத்தின் எல்லையைக் கடப்பதா யிருக்கிறது; இல்லை, இஸ்லாத்தையே திரஸ்கரிப்பதா யிருக்கிறது ('ஹதீ'. 12, 13). ஆயின், அதன் நேர் எதிர்க்கோடிக்குச் சென்று, ஒரு முஸ்லிமை, அவனோர் ஈமானுக்கு மாற்றமாயுள்ள சிறு காரியத்தைச் செய்துவிட்டா னென்னும் காரணத்தைக் கொண்டு கா'பிரென்று கூறுவதோ, இஸ்லாத்தின் எல்லையை விட்டு அன்னவனை வெளியேற்றி விடுவதோ, கூடாத செய்கையாகும். ஒருவன் இறைவனது ஏகத்துவத்திலும் மு'ஹம்மத்' நபியின் (சல்அ'ம்) நபித்துவத் திலும் தனக்குள்ள உறுதியைக் கூறிவிடுவானாயின், அவ் னொரு முஸ்லிமாகிவிடுகிறான் ('ஹதீ'. 16, 17). அம்மட்டு மில்லை; முஸ்லிம்களைப் போலே தனது முகத்தைக் :கிப்'லாவின் (மக்காவின்) பக்கல் திருப்பிக் கொண்டு தொழுது கொள்ளும்

மனிதனொருவன் முஸ்லிம் சகோதர கோஷ்டியில் சேர்ந்துள்ள அங்கத்தினனைப் போலத்தான் நடத்தப்படுவா னென்று அல்லா(ஹ்) வும் அவனுடைய திருத்தூதரும் கொடுத்துள்ள உறுதிமொழி யொப்பந்தம் அவனுக்கு அபயமாகவே யிருந்துவருகிறது ('ஹதீ'. 15). இன்னம், :குர்ஆன்ஷரீ'ப் ஒருபடி முன்னே சென்று, ஒரு மனிதனுக்கு மற்றவர்களுடனே எத்தனைவித வித்தியாசங்கள் இருந்துவந்த போதினும், அம்மனிதன் இஸ்லாமிய முறைப்படி (ஸலாம்) வந்தனங் கூறுவானாயின், அஃதொன்றே அப்படிப்பட்ட மனிதனை ஒரு முஸ்லிமென்று கூறப்போதிய சாக்ஷியமாயிருக்கிற தென்று கூறிவிட்டிருக்கிறது (தலை. ஆயத் 9). அனுஷ்டானத்தில் "இஸ்லாம்" என்னவா யிருக்கிறதென்று 18-ஆவது 'ஹதீ':து வேறோர் இலக்ஷணத்தைக்கொண்டு எடுத்தோதி யிருக்கின்றது.

1. நபிகள் நாயகர் (சல்அ'ம்) (பின்வருமாறு) சொன்னார்க ளென்று அபூ' ஹுரய்ரா கூறி யிருக்கின்றார் :—

"மதமென்பது இலேசா யிருக்கிறது; இன்னம், அஃதொருவனை மிகைத்துவிடா திருக்கு முறையிலே அன்னவன் மதவிஷயத்தில் அதிகம் (கிரியைப்) பிரயாசை எடுத்துக் கொள்வது இயலாது; ஆகையால், சீர்மையாய் நடந்து, மத்திப மார்க்கத்தைக் கடைப்பிடிக்கக் கடவீர்கள்; மேலும், முகமலர்ச்சி யுடனே இருந்து கொண்டு, காலையிலும் மாலையிலும், இரவின் ஒரு பகுதியிலும் (ஆண்டவனது) உதவியைக் கோரக் கடவீர்கள்."[1]—(பு'க'ா. 2 : 29)

---

1. மதமென்பது என்னவென்று இஸ்லாம் கொண்டிருக்கும் சித்தாந்தம் இன்ன தென்று இந்த 'ஹதீ':து எடுத்துக் காட்டுகிறது. மதமென்பது வணக்க சம்பந்தமான கிரியைகளை அளவுகடந்து அனுஷ்டித்து வருவதில் பொதிந்து நிற்கவில்லை; உண்மையிலே அளவுகடந்த அனுஷ்டானக் கிரியைகள் வேண்டுவ

2. ஆ'யிஷா பிராட்டியார் (இவ்வாறு) கூறி யுள்ளார்: நபிகட்டிலகம் (சல்அ'ம்) அப்பிராட்டி யர்பால் (ஒரு முறை) வந்த பொழுது, அவருடனே ஒரு பெண்மணி இருந்தாள். "இவர் யார்?" என்று அ(ப்பெருமான)வர்கள் விசாரித்தார்கள்; (அதற்கு ஆ'யிஷா) அவர் இன்னாரினையாரென்று கூறி, இன்னம் அன்னவரின் தொழுகையைக் குறித்து (அதிக சிலாக்கியமாய்)ப் புகழ்ந்து பேசத் துவங்கினர். (அது கேட்டு, நபிகள் நாயகம்) சொன்னார்கள் :—

"போதும்; நீங்கள் செய்யக் கூடிய அ(வ்வள வின)தே உங்கள்மீது கடமையா யிருக்கிறது; அல்லா(ஹ்) வின் மீது ஆணையாக, அல்லா(ஹ்) அயர்ச்சியடைந்து

---

தின்றென்றே ஈண்டுக் கூறப்படுகிறது; என்னெனின், இறுதியிலே அளவிறந்த அனுஷ்டானக் கிரியைகள் அவற்றிற்குரிய அடியானை மிகைத்து விடுகின்றன. மதமென்பது நேர்மையாகநடந்து மத்திப மார்க்கத்திலே நிலைத்து நிற்பதையே குறிக்கின்றது. இதுதான் மனிதர்களை உற்சாகமான நிலையிலே நிறுத்திக்கொண் டிருக்கும். உண்மையான மதபக்தியுள்ள மனிதன் நபிகள்நாயகம் செய்து வந்ததேபோல், எவரைக் கண்டாலும் இன்முகத்துடனே புன் முறுவல் பூப்பான். ஆண்டவனது வணக்கமென்று பொதுப் படையாய் எது கருதப்பட்டுவருகிற தெனின், அதுதான் நேராக நடப்பதற்கும் சீராக மத்திப மார்க்கத்திலே நிலைநிற்பதற்கும் வேண்டிய இறைவனது உதவியை உண்மையிலே எதிர்பார்த்து நிற்பதா யிருக்கிறது. இவ்வாறாகத்தான் ஒவ்வொரு முஸ்லிமும் ஒவ்வொரு நாளும், இல்லை, ஒவ்வொரு நாழிகையும் பிரார்த்தனை புரியுமாறு கற்பிக்கப்படுகிறான்: "ஏ ஆண்டவனே! எங்களை நீ நேரானபாதையிலே சீராக நடாத்திவைக்கக் கடவாய்; எவர்கள் மீது நீ அருட்கொடை சொரிந்தனையோ, அவர்களுடைய பாதையிலே" (:குர். 1:5,6).

போவ தில்லை ; ஆயின், நீங்களோ, அயர்ச்சியடைந்து போவீர்கள் ; மேலும், அவனுக்குப் பிரியமாயுள்ள வாஞ்சை (அடியவனுன) மனிதன் உறுதியான கடைப் பிடியுடனே ஒழுகி வருவதன் மீதே (சார்ந்து) இருக்கிறது."[2]—(பு'க'ா. 2 : 31)

3. அ'ப்'து'ல்லா ஹிப்'னு 'அ'ம்ர் கூறினுர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) எனக்குச் சொன்னுர்கள் :—

" ஏ அ'ப்'து'ல்லா(ஹ்) ! நீர் பகலெல்லாம் நோன்பு நோற்கிறீ ரென்றும், இரவெல்லாம் வணக்கத்தில் நிற்கிறீ ரென்றும், நான் கேள்விப் படுகிறேனே !" (அதற்கு) நான், ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! ஆம், என்று பதில் கூறினேன். (அது கேட்டு) அவர்கள் சொன்னுர்கள் :—

---

2. ஆ'யிஷா பிராட்டியார் ஒரு ஸ்திரீயின் வணக்கக் கிரியைகளைக் குறித்து அதிகம் சிலாகித்துக் கூறினுர் ; ஆனுல், நபிகள் திலகம் அத்தகைய அளவிறந்த அனுஷ்டானக்கிரியைகளைக் குறித்து எச்சரிக்கை செய்தார்கள் ; என்னெனின், மத அனுஷ்டானங்களில் அளவுக்குமேலே ஆழ்ந்து செல்கிறவர்கள் அப்பால் அவற்றிலிருந்து அயர்ச்சியடைந்து விடுகிருர்கள் என்று நபிபெருமானுர் (சல்அ'ம்) நவின்றருளினுர்கள். இந்த 'ஹதீ':தின் இறுதியிலே விளக்கப்பட்டிருப்பதேபோல், மத அனுஷ்டானத்தின் முக்கிய நோக்கம் மனிதனுடைய குணதிசயத்தில் உறுதியான கடைப்பிடியை உண்டுபண்ணுவ தாகவே இருந்துவருகிறது. ஆதலால், மத அனுஷ்டானத்தில் விடாப்பிடியுடனே என்றும் ஒழுகிவருதற் குரிய அப்படிப்பட்ட மிதவழியையே எல்லாரும் மேற்கொண் டொழுகுதல் வேண்டும்.

" அவ்வாறு நீர் செய்யாதீர்; நோன்பு நோற்று, அதனைத் திறந்து கொள்ளவுங் கடவீர்; இன்னம், நீர் (இரா நேரத்திலே) வணக்கத்திலும் நிற்கக் கடவீர்; உறங்கவுங் கடவீர்; என்னெனின், உம்மீது உமது சரீரத்திற் கோர் உரிமை இருக்கிறது; உம்மீது உமது நேத்திரத்திற்குமோர் உரிமை இருக்கிறது; இன்னம், உம்மீது உம்முடைய மனைவிக்குமோர் உரிமை இருக்கிறது; உம்மீது உம்மை வந்து காண விரும்பும் மனிதனுக்குமோர் உரிமை இருக்கிறது." [3]—(பு'க'ா. 30 : 55)

---

3. இந்த 'ஹதீ':துக்குப் பல்வேறு விதமான பாடபேதங்கள் காணப்படுகின்றன; அவற்றிலெல்லாம் நபிகளுதரால் விளக்கப் பட்டிருப்பது யாதெனின்: அடியா னொருவன் இத்தரணியில் அநேகங் கடமைகளைச் செய்துமுடிக்க வேண்டியவனாயிருக்கிறான்; ஆகவே, மத அனுஷ்டானங்களில் மூழ்கியிருக்கும் போழ்து அன்னவன் அக்கடமைகளனைத்தையும் தனது உள்ளத்தினுள்ளே ஊன்றிப் பதித்துக்கொள்ளுதல் வேண்டும் என்பதே யாம். அன்றாடம் நோன்பு நோற்பதா யிருப்பினும், தொழுகையிலே எப்பொழுதும் நீளமாக நிலைநிற்பதா யிருப்பினும், அதற்குரியவன் தனக்குரிய இகலோக சம்பந்தமான கடமைகளை அலக்ஷியம் செய்துவிடுவ னாயின், எப்படிப்பட்ட மத அனுஷ்டானமும் அன்னவனுக்கு நன்மை பயக்கமாட்டாது. உண்மையிலே ஒருவன் மற்றவர்களுக்குச் செய்யவேண்டிய தன்னுடைய கடமைகளைச் செவ்விதாய் நிறைவேற்றிவைக்கத் தகுதியான யோக்கியதை தனக்குக் கிடைக்கவேண்டு மென்றே மத அனுஷ்டானங்களை மேற்கொள்ள வேண்டியவனா யிருக்கிறான். ஆத்மார்த்த அபிவிருத்தியில், சரீர சம்பந்தமாயுள்ள, இப்பௌதிக உலகினருக்குரிய கடமைகளை ஒருவரும் ஒழுகவிடா திருத்தல் வேண்டும்.

4. நுஃ‘மானிப்‘னு ப‘ஷீர் கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) (இவ்வாறு) சொல்ல யான் கேட்டேன்:—

“சட்டபூர்வமா யுள்ளது வெட்ட வெளிச்சமா யிருக்கிறது; சட்டவிரோதமா யுள்ளதும் வெட்ட வெளிச்சமா யிருக்கிறது; இன்னம், இவ்விரண்டற்கு நடுவே, அதிகமான மக்கள் அறியாத சந்தேக விஷயங்கள் (பல) இருந்து வருகின்றன. ஆகவே, எவனொருவன் சந்தேகாஸ்பதமான விஷயங்களை விட்டுத் தன்னைத் தற்காத்துக் கொள்கிறானோ, அன்னவன் தன்னுடைய மதத்தையும் கண்ணியத்தையும் தற்காத்து வைக்கிறான்; இன்னம், எவனொருவன் சந்தேகாஸ்பதமான விஷயங்களுள்ளே தடுமாறி விழுந்து விடுகிறானோ, அன்னவன், ஒதுக்கிவைக்கப் பட்டுள்ள காட்டின் எல்லை யோரத்திலே தன்னுடைய கால் நடைகளை மேய்த்து வரும் இடையனைப் போலே இருக்கிறான்;—அவன் அதனுள்ளே (அறியாமலே) பிரவேசித்து விடுதல் கூடும். ஒவ்வோர் அரசனுக்கும் ஒதுக்கப்பட்டுள்ள காடுண்டு என்று அறிந்து கொள்ளக்கடவீர்; அல்லா(ஹ்)வின் நிலத்திலே அவனுக்குச் சொந்தமாய ஒதுக்கப்பட்ட இடம்—(காடு) அவன் விலக்கியுள்ள விஷய மென்று(ம்) அறிந்து கொள்ளக் கடவீர். சரீரத்திலே ஒரு துண்டு இறைச்சி யிருக்கிறதென்று அறிந்துணரக் கடவீர்; அது சவுக்கியமா யிருந்தால், சரீர முழுதுமே சவுக்கியமா யிருக்கிறது; அது கெட்டுப் போகுங்கால், சரீரமடங்கலுமே கெட்டுப்போய் விடுகிறது. அது தான் ஹிருதய (கமல)

மென்பதை நீர் அறிந்து கொள்ளக் கடவீர்."[4] —(பு'கா. 2 : 38)

5. அபூ' ஹுரய்ரா கூறினர்: நபி பெருமானர் (சல்அ'ம்) ஒருநாள் மனிதர்களுடனே வெளியில் அமர்ந் திருந்தார்கள்; அதுகாலை மனித ரொருவர் அவர்களிடம் வந்து, 'ஈமான் (மதநம்பிக்கை) என்பது யாது?' என்றும் வினவலுற்ரூர். (இதற்கு) அவர்கள் சொன்னர்கள் :—

"ஈமான் என்பது, அல்லா(ஹ்)வின் மீதும், அவ்னுடைய அமரர்கள் மீதும், அவனைச் சந்திப்பதன் மீதும், அவனுடைய தூதர்கள் மீதும் நீ உறுதி கொள்வதா யிருக்கிறது; (மரணத்துக்குப் பின்னே) உயிர்ப்பித் தெழுப்பப்படுவதிலும் நீ உறுதி கொள் வதா யிருக்கிறது."

---

4. உண்மையான மதத்தத்துவத்தை நிரம்பப்பெற்றுள்ள மனிதன் சட்டவிரோதமாயுள்ள வெளிப்படையான காரியங்களை மட்டுமே விலக்கிக்கொள்வதோடு மட்டும் நிற்பதில்லை; ஆனல், சட்ட விரோதமான காரியங்களில் தன்னை ஈர்த்துக்கொண்டு போய்ச் சேர்த்துவிடக் கூடிய அப்படிப்பட்ட சந்தேகாஸ்பதமான காரியங்களையும் கைவிட்டு விடுகிருன். இந்த 'ஹதீ':தின் இறுதிப்பகுதி கூறுவது என்னவென்ருல், ஒருவன் அனுஷ்டித்து வரக்கூடிய அனுஷ்டானங்கள் மட்டுமே மதமாய்விட மாட்டா; ஆயின், அவன்பால் சரியான மத மனப்பான்மை இருப்பதேதான் அத்தியாவசிய மாய்க் காணப்படாநின்றது என்பதே யாம்; அஃதாவது, நேரிய பாதையிலே நடக்கவும், கோடிய பாதையை விலக்கிக் கொள்ளவுந் தக்க மனப்பரிபக்குவம் இருந்துவரல் வேண்டும். மதத்தின் முக்கிய அம்சம் மனப்பரிசுத்தமே யாகும்; எனவேதான், :குர்ஆன்ஷரீ'பும், "பாபத்தை விட்டுப் பரிசுத்தம் பெற்றுள்ள உள்ளத்துடனே அல்லா(ஹ்)வின்பால் வருகிறவன்," என்று கூறியிருக்கிறது (26 : 89).

'இஸ்லாம் என்ப தென்ன ?' என்று அவர் (அப்பால்) வினவினர். (அதற்கு நபிகள் திலகம்) சொன்னர்கள் :—

" இஸ்லாம் என்பது, அல்லா(ஹ்)வையே நீ வணங்க வேண்டு மென்பதும், அவனுடன்கூட வேறெதையும் நீ இணையாக்கக்கூடா தென்பதும், தொழுகையை நீ நியமமாய்க் கடைப் பிடித்து வரவேண்டு மென்பதும், விதிக்கப்பட்டுள்ள வண்ணம் ஏழை விகிதத்தை நீ ஈந்துதவ வேண்டுமென்பதும்,[5] ரமல'ானில் நீ நோன்பு நோற்க வேண்டு மென்பதுமே யாம்.

' இ'ஹ்ஸான்—(நற்செய்கை) என்பது யாது ?' என்று அவர் (அப்பாலும்) வினவினர். (அது கேட்டு, நபிகள் நாயகம்) சொன்னர்கள் :—

5. " ஏழை விகிதம் "—'ஜ(க்)காத்—என்பது அவரவருக்கு முரிய சில்வகையான ஆஸ்தியிலிருந்து பொதுவாக நாற்பதில் ஒரு பங்கா யிருக்கிறது. ஏழைகளின் உதவிக்காகப் பணக்காரர்களால் ஆண்டுக் கொருமுறை கொடுக்கப்படும் தானத்துக்கு " 'ஜ(க்)காத் " தென்று பெயர் கூறப்படுகிறது. அது :குர். 9 : 60-இல் விதிக்கப்பட்டுள்ள வண்ணம் கொடுக்கப்படல் வேண்டும். இந்த " ஏழை விகிதம் " ஆதிகாலத்தில் முஸ்லிம்களின் முன்னேற்றத்திற்காக உபயோகிக்கப்பட்டு வந்தது. ஏழைகளின் மிடிமையைப் போக்குவதுதான் இதன் நோக்கமன்றி, யாசகர்களை அபிவிருத்தியடையச்செய்வதன்று. முஸ்லிம் அரசாங்கமும், " பை'த்துல்மால் " என்னும் பொதுப் பொக்கிஷமும் இல்லாத இக்காலத்தில் முஸ்லிம் பொதுஜனப் பெரியார்கள் இத் தொகையை வசூல் செய்து, :குர்ஆன் ஷரீ'பிலே கூறப்பட்டுள்ள வண்ணம் இஸ்லாத்தின்,முஸ்லிம்களின் முன்னேற்றத்திற்குரிய துறைகளிலே செலவு செய்யலாம். ஏனை விவரங்களை எம்மால் வெளியிடப்பட்டுள்ள இஸ்லாம் என்னும் நூலிலே விரிவாகக் கண்டு கொள்ளலாம்.

"அல்லா(ஹ்)வை நீ காண்பதேபோல் அவனை நீ வணங்குவதா யிருக்கிறது; என்னெனின், நீ அவனைப் பார்க்காவிட்டாலும், நிச்சயமாக அவன் உன்னைப் பார்க்கிறான்."[6]—(பு'க'ா. 2 : 36)

---

6. இந்த 'ஹதீ':தின் இறுதியிலே, மனிதர்களுக்கு அவர்களுக்குரிய சன்மரர்க்கத்தைப் போதிக்கவந்த அவர் வானவர் ஜிப்'ரீலே (அ'லை) என்று நபிகள்திலகம் (சல்) கூறியதாக ஒரு செய்தி காணப்படுகிறது. இந்த 'ஹதீ':து உ'மர் (ரலி') அவர்களால் சிறிது வேற்றுமையுடனே கூறப்பட்டிருக்கிறது; ஆனால், இமாம் பு'க்'ாரீ அதனை அங்கீகரிக்கவில்லை. உ'மரின் (ரலி') வாசகத்தில் ஈமானைக் குறித்துக் கூறுமிடத்தில், "அவனைச் சந்திப்பதன்மீதும்" என்பதற்கு மாறாக, ":கத்'ரில்—அதன் நன்மையிலும், அதன் தீமையிலும் — நீ உறுதிகொள்வதா யிருக்கிறது," என்று நபிகளார் கூறியதாகக் காணப்படுகிறது. ஆனால், :கத்'ரில் ஈமான்கொள்வதென்பது பிரத்தியக்ஷமாகப் பிற்காலத்திலே கொண்டுவந்து நுழைக்கப்பட்ட ஒரு நூதனக் கொள்கையா யிருந்து வருகின்றமையால்தான் உ'மர்(ரலி') அவர்கள் பேரால் வரையப்பட்டுள்ள 'ஹதீ':தை இமாம் பு'க'ாரீ ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார்கள் போலும். ஆனால், அப்பெரியார் கூறியதாய்க் கூறப்படும் 'ஹதீ':தில் இஸ்லாத்தைப்பற்றி விவரிக்கப்பட்டுள்ள இடத்திலே மக்காவுக்கு 'ஹஜ்ஜு செய்யச்செல்லும் விஷயமும் காணப்படுகிறது. அபூ' ஹுரய்ராவின் (ரலி') 'ஹதீ':தில் இந்த 'ஹஜ்ஜின் விஷயம் மறதியாய் விடப்பட்டிருக்கலாம். அபூ' ஹுரய்ராவின் 'ஹதீ':தில், "அல்லா(ஹ்)வையே நீ வணங்க வேண்டுமென்பதும், அவனுடன்கூட வேறெதையும் நீ இணை வைக்கக்கூடா தென்பதும்," என்று காணப்படு மிடத்தில், உ'மர்(ரலி') 'ஹதீ':தில், "அல்லா(ஹ்)வைத் தவிர்த்து வணக்கத்திற்குரியவன் (வேறெவனும்) இல்லை யென்றும் மு'ஹம்மத்' அல்லா(ஹ்)வின் தூத ரென்றும் நீ சாக்ஷியம் கூறவேண்டும் என்பதும்" என்று காணப்படாநின்றது.

6. இப்'னு உ'மர் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

---

இந்த 'ஹதீ':து 5 ஈமானுக்கும், இஸ்லாத்துக்கும் இடையிலே உள்ள வேற்றுமையை நன்கெடுத்துக் காட்டுகிறது: "ஈமான்" என்பது உள்ளத்தால் உறுதிகொள்ள வேண்டிய விசுவாச நம்பிக்கைகளைக் குறித்தும், "இஸ்லாம்" என்பது அனுஷ்டான பாகங்களைக் குறித்தும் காட்டிக்கொண்டிருக்கின்றன. மூன்ருவது விஷயமாகிய இ'ஹ்ஸான் என்பது ஒரு குறிப்பிட்ட விஷயத்தைச் சுட்டிக்காட்டவில்லை; அடியாளொருவன் அல்லா(ஹ்)வின் திரு முன்பினில் நிற்பதாகவே தன்னை வைத்துக்கொண்டு வணங்க வேண்டுமென்பது, அன்னவனுக்குரிய ஈமானிலும் இஸ்லாத்திலும் திரிகரண சுத்தியுடனே இருந்துவர வேண்டு மென்பதையே எடுத்துக் காண்பிக்கிறது. "ஈமான்", "இஸ்லாம்" என்பன அடிக்கடி ஒன்றன் ஸ்தானத்திலே மற்றென்ருக மாறியும் வழங்கப்பட்டு வருகின்றன. ஆயின், ஈமான் என்பது அல்லா(ஹ்)வின் மீதும், அமரர்கள்மீதும், தூதர்கள்மீதும் (அவர்களுக்கு அருளப் பட்ட வேதங்கள்மீதும்) உறுதிகொள்வதா யிருக்கிறது; இன்னம், லி:காஅல்லா(ஹ்) [அல்லா(ஹ்)வுடனே அன்னியோன்னிய தர்சனம் பெறுதல்] என்பதன்மீதும், மரணத்துக்குப்பின் மற்றொரு வாழ்க்கை உண்டென்பதிலும் உறுதிகொள்வது மாகும். இஸ்லாம் என்பது அல்லா(ஹ்)வை இ'ப'ாத'ச்செய்வதும் (அவனை வணங்குவதும்) தொழுகையை நியமமாய்க் கடைப்பிடித்தொழுகுவதும், ரமல'ான் மாதத்தில் ஆண்டுக் கொருமுறை நோன்புநோற்பதும், 'ஜ(க்)காத் தென்னும் ஏழை விகிதத்தை இரண்டரை சதவிகிதம் ஈவதும், மக்காவுக்குச் சென்று 'ஹஜ்ஜை நிறைவேற்றி வருவதுமா யிருக்கிறது.

மேற்கூறிய கொள்கைகளை ஏற்றும் இஸ்லாத்திற் குரிய கிரியைகளை அனுஷ்டித்தும் வருகிறவன் முஸ்லிமா யிருக்கிருன்; இன்னம், அன்னவன் இஸ்லாத்தின் விசுவ சகோதரத்துவத்தில் ஓர் அங்கத்தினனுகவும் இடம்பெற்றுவிடுகிருன்.

"இஸ்லாம் ஐந்து (தூண்களின்) மீது நிறுவப் பெற்றிருக்கிறது: அவை, அல்லா(ஹ்)வைத் தவிர்த்து வணக்கத்திற் குரியவன் (வேறெவனும்) இல்லையென்றும், மு'ஹம்மத்' அல்லா(ஹ்)வின் தூதரென்றும் சாக்ஷியம் கூறுவதும், தொழுகையை நியமத்துடனே நிலை நிறுத்துவதும், ஏழைவிகிதத்தை ஈந்துதவுவதும், (மக்காவுக்கு) யாத்திரை செல்வதும்; ரமல'ானில் நோன்பு நோற்பதுமாம்."[7]—(பு'க'ா. 2 : 1)

7. அபூ' ஹுரய்ரா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"ஈமானுக்கு எழுபதுக்கு, அல்லது அறுபதுக்கு மேற்பட்ட சாகைகள் உண்டு: இவற்றில் மிகவு மேலானது அல்லா(ஹ்)வைத் தவிர்த்து வணக்கத்திற் குரியவன் (வேறெவனும்) இல்லையென்று சொல்வதாயிருக்கிறது; இன்னம், அவற்றில் மிகவுங் கீழானது பாதையை விட்டுத் தீங்கிழைக்கக் கூடிய (முள் கல் போன்ற)தை விலக்கி வைப்பதாகும்; இன்னம், 'ஹயா

7. இந்த 'ஹதீ':து சென்ற 'ஹதீ':தில் கூறப்பட்டுள்ள இஸ்லாத்தின் இலக்ஷணம் இன்னதுதானென்பதையே உறுத்திக் கூறியுள்ளது. உண்மையிலே அல்லா(ஹ்)வைத் தவிர்த்து வணக்கத் திற் குரியவன் (வேறெவனும்) இல்லையென்றும் மு'ஹம்மத்'நபி (சல்அ'ம்) அல்லா(ஹ்)வின் திருத்தூதரென்றும் சாக்ஷியங் கூறும் முதல் நிபந்தனையிலே ஏனைய நான்கும் அடங்கிக்கிடக்கின்றன; என்னெனின், நபிகள்திலகம் கற்றுக்கொடுத்துள்ள போதனை களின் பகுதிகளாகவே அவையெல்லாம் இருந்துவருகின்றன. எனினும், அவற்றிற்குரிய முக்கியத்துவத்தின் காரணத்தினலேயே முதல் முக்கிய அம்சத்துடனே அவைகளும் சேர்த்துக் கூறப் படுகின்றன.

—(லஜ்ஜை) என்பது ஈமானின் ஒரு கிளையா யிருக்கிறது."[8]—(மூஸ். 1:58)

8. அனஸ் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள்:—

---

8. அரபு பாஷையில் "எழுபது" என்னுஞ் சொல் ஒரு பூர்த்தியான எண்ணை (70-ஐ)க் குறிப்பதோடு, "பெரிய எண்ணிக்கை" என்றும் பொருள்படுகின்றது. ஈமான் என்பது, அதன் இலக்ஷணத்திற்காகக் கூறப்படும் பொதுப்படையான வர்ணனையைக் காட்டினும் மிகவும் விரிவான தாத்பரியத்தையே குறித்துக்கொண் டிருக்கிறது. மதநம்பிக்கைக் குரிய சிற்சில அம்சங்களை மட்டுமே அது சுட்டிக்காட்டுவ தில்லை; சிற்சில கொள்கைகள் மெய்யேயென்று மனத்தினல் ஒத்துக்கொள்வது மட்டும் மதநம்பிக்கையாய்விட மாட்டாது; ஆனல், அத்தகைய கொள்கைகளையெல்லாம் செயலளவில் கொண்டுவந்து, அவற்றினை நடைமுறையில் நடாத்திக் காண்பிப்பதும் ஈமானகவே இருந்து வருகிறது. சிற்சில மத அனுஷ்டானங்களை, அல்லது சமயக் கிரியைகளை (வணக்கங்களை) நிறைவேற்றி வைப்பதோடு அது நின்றுவிடுவ தில்லை; ஆனல், மனிதவர்க்கத்திற்கு நன்மை பயக்கக் கூடிய எல்லாச் சற்குணங்களும் ஒழுக்கங்களுங்கூட ஈமானிலே வந்து சேர்கின்றன.

ஈமான் என்பது ஒரு பெரிய விருக்ஷத்திற்கு ஒப்பிடப்பட்டிருக்கிறது; அதன் கிளைகள் எல்லாத்திசைகளிலும் விரிந்து படர்ந்து நிற்கின்றன; இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கையாகிய அல்லா(ஹ்)வின் ஏகத்துவத்தை ஏற்றுக்கொள்வது அவ் விருக்ஷத்தின் உயரிய உச்சிக்கிளையா யிருக்கிறது; ஆனல், வழி நடப்பவனுக்குத் தீமை பயக்கக்கூடிய எப்படிப்பட்ட சிறு சிறு கல் முள் முதலியவற்றை அப்புறப் படுத்துவதும் அவ் விருக்ஷத்தின் ஒரு சாகையாகவே யிருந்துவருகிறது; ஆதலால், பொதுஜன நன்மைக்காக ரஸ்தாக்களை நிருமிப்பதும் மத நம்பிக்கைக் குரிய ஒரு காரியமாகவே காணப்படாநின்றது. எனவே, மனித கோடிகளுக்கு நன்மை பயக்கக்கூடிய எல்லாக்

*"உங்களில் எவனுமே, அவனுக்கு அன்னவனுடைய தந்தையையும் தனயனையும் இன்னம் எல்லா மனித கோடிகளையும் பார்க்கினும் நான் அதிக உகப்பா யிராதவரையில் ஈமானை(ப்பெற்று)க் கொள்ள மாட்டான்."[9]—(பு'க'ர. 2 : 7)*

---

காரியங்களும் அந்த ஈமானென்னும் மரத்திற்குரிய கிளைகளாகவே யிருக்கின்றன; எனவே, ஈமான் என்பது உண்மையிலே அவனவனுக்கு முரிய எல்லா நற்குணங்களையும் போதுமான அளவும் அபிவிருத்திசெய்து பரோபகாரத்தையே மேற்கொண் டொழுகுவதா யிருக்கிறது. "பரோபகாரம் இதம் சரீரம்" என்பது ஒரு முதுமொழி. 'ஹயா (லஜ்ஜை யென்று மொழி பெயர்க்கப்பட்டிருப்பது) இங்குச் சிறப்பாகக் குறிக்கப்பட்டிருப்ப தன் காரணம், அச்சொல் அசலிலே "ஒருவனை எல்லாத் தீய வஸ்துக்களையும் திரஸ்கரித் தொழிக்குமாறு செய்யக் கூடிய குணவிசேஷத்தைக்" குறித்துக் காண்பிப்பதே யாகும் (மு'ப்ரத'த் ரா:கிப்').

9. இவ் விடத்தில் நபிபெருமானார்பால் காட்டவேண்டிய உவப்புமட்டுமே கூறப்பட் டிருப்பினும், 10-ஆவது 'ஹதீ:து விளக்கியிருப்பதேபோல், அல்லா(ஹ்)வின்பாலும் அவனுடைய திருத்தூதர்பாலும் காண்பிக்க வேண்டிய உவப்பே இங்கும் கொள்ளப்படல் வேண்டும். ஒரு மனிதன் நமக்குச் செய்யும் நன்மையிலிருந்தே, அல்லது அவனிடத்திருந்து நாம் பெற்றுக் கொள்ளும் பிரயோஜனத்திலிருந்தே நமக்கு அன்னவன்பால் அபிமானம் பிறப்பது வழக்கம். நபிகள்பெருமான்(சல்) இவ்வுலக மக்களுக்கெல்லாம் பொதுவாகவும், முஸ்லிம்களுக்குச் சிறப்பாகவும் அதிகமான நன்மையை அளவிலாதுசெய்திருக்கும் மஹானுபாவரா யிருக்கிறார்கள். எனவே, ஒவ்வொரு முஸ்லிமும் வேறெந்த மனிதப் பிராணியின்பால் காண்பிக்கக்கூடிய கரிசனத்தைக் காட்டினும் அம் மஹானுபாவர்பாலே அதிகமான அபிமானத்தைக் காட்டக் கட்டுப்பட் டிருக்கிறார். நபிகள் திலகத்தின்பால் காண்பிக்கக் கூடிய மகோன்னத அபிமானமே ஈமானுக்குரிய உண்மையான

9. நபிகள் நாயகத்தின் (சல்'அ'ம்) ஆதாரத்தைக் கொண்டு அனஸ் கூறியுள்ளார்: அவர்கள் சொன்னார்கள் :—

"உங்களில் எவனுமே, அவன் தனக்கென்று எதை விழைகிறானோ, அதையே தன்னுடைய சகோதரனுக்காகவும் விழையாத மட்டில் ஈமானை(ப் பெற்று)க் கொள்ள மாட்டான்."[10]—(பு'க'ா. 2 : 6)

---

ஓர் உரைகல்லா யிருக்கிறது. என்னெனின், அன்னவர்கள்பால் அடியானொருவனுக்கு எத்துணைக் கெத்துணை நெருங்கிய அபிமானம் ஏற்படுகின்றதோ, அத்துணைக்கத்துணைப் பலத்துடனே அவர்களுடைய அடிச் சுவட்டைப் பின்பற்றி நடக்கவும், அத்துணைக் கத்துணை மனிதகோடிகளுக்கு நன்மை புரியவும் சக்தியை அதிகமாகப் பெற்றுக்கொள்வான்.

உண்மையிலேயே இற்றைநாள் முஸ்லிம் உலகம் முழுவதுமே இந்தச் சோதனையின் பரீக்ஷைப் பிரகாரம் முற்றிலும் தவறிப் போய்க் கிடக்கின்றதென்றே கூறிமுடித்தல் வேண்டும். நபிகள் பெருமானும் அவர்களுடைய நல்லுபதேசங்களும் இவ்வுலக முழுதுமே திரித்துப் புரட்டிக் காண்பிக்கப்பட்டு வருகிறார்கள்; இன்னம், நம் பெருமானாரைப் போலே வேறெந்த மதத்தலைவரும் இதுகாலை அத்துணை இழிவாய் நிந்திக்கப்படவில்லை; ஆயினும், அத்தகைய உருட்டுப் புரட்டுக்களை யெல்லாம் அறவே யொழித்து இஸ்லாத்தின் அரிய போதனைகளை அஞ்ஞானாந்த காரத்தில் ஆழ்ந்து தாழ்ந்துபோய்க் கிடக்கும் இப்பூவுலகின் கோணங்களுக்கெல்லாம் கொண்டு செல்லவும் இக்கால முஸ்லிம்கள் தங்கள் ஒரு கடைவிரலைக் கூடக் கிளப்பத் துணியாது, ஆழிய உறக்கத்திலே மூழ்கிப்போய்க் கிடக்கிறார்கள். அந்தோ பரிதாபம்! பரிதாபம்!!

10. உண்மையான ஈமானுக்கு வேண்டிய மற்றொரு பரீக்ஷை இங்கே காணப்படா நின்றது: ஒருவன், மற்றவர்கள் தனக்கு என்ன செய்ய வேண்டுமென்று எதிர்பார்க்கிறானோ, அதனையே அவர்களுக்கும் செய்வது மட்டும் போதாது; உண்மையான

10. நபிகள் நாயகத்தின் (சல்அ'ம்) ஆதாரத்தைக் கொண்டு அனஸ் கூறியுள்ளார்: அவர்கள் சொன்னார்கள் :—

மூன்று குண விசேஷங்கள் இருந்து வருகின்றன; எவனிடத்தில் அவை காணப்படுகின்றனவோ, அவன் ஈமானின் இனிமையைச் சுவைத்தவனாய் விடுகிறான்;—அஃதாவது, அல்லா(ஹ்)வும் அவனுடைய தூதரும், அவர்களை யன்றி வேறு எதனைப் பார்க்கினும், அவனுக்கு அதிக உகப்பாயிருப்பார்கள்; அன்னவன் ஒரு மனிதனை நேசிக்கிறான்; ஆயின், அல்லா(ஹ்)வி னிமித்தமாகவே யன்றி (வேறு காரணத்துக்காக) அவனை நேசிக்க மாட்டான்; இன்னம், தான் தீயிலே எறியப்படக்

---

ஈமான் அதைப் பார்க்கினும் அதிகமா யிருக்கிறது; அஃதாவது, ஒருவன் தனக்கென்ன வேண்டுமென்று விழைகிறானோ, அதனையே ஏனையோருக்கும் விழைவதா யிருக்கிறது. தன்னுயிரைப் போலவே மன்னுயிரையும் பாவித்தல் வேண்டும். சுயநயமென்பது அடியுடனே நசித்துப் பரநயமென்பது மேலோங்கி உச்சத்தை யடைந்துவிடுங் காலேதான் அப்படிப்பட்ட மனப்பான்மை உதயமாகும். முஸ்லிம்கள், சிற்சில விசுவாச சித்தாந்தங்களை ஒப்பிப்பதைக் கொண்டும் சிற்சில கொள்கைகளை ஏற்றுக்கொள்வதைக் கொண்டுமே ஒருவரை யொருவர் முஸ்லிம்க ளென்று தீர்மானிக்கிறார்கள்; ஆனால், நபிகள் திலகமோ, அடியவருக்கு அல்லா(ஹ்)வின்பாலும் அவனுடைய திருத்தூதரின் பாலும் கொண்டுள்ள அத்தியந்த அபிமானத்தைக் கொண்டும், மனித கோடிகளின்பால் அன்னவர்களுக் குள்ள அத்தியந்த பிரீதியைக் கொண்டுமே உண்மை முஸ்லிம்களின் உயரிய நிலை உரைகல்லில் தேய்த்துப் பரீக்ஷிக்கப்பட வேண்டுமென்று நவின்றருளி யிருக்கின்றார்கள்.

கூடுமென்பது அவனுக்கு அருவருப்பைத் தருவதே போலத்தான் கு‘புருக்கு—(இஸ்லாத்தை நிராகரிக்கு நிலைமைக்கு)த் திரும்பிச் சென்றுவிடலா மென்பது (அத்துணை) அருவருப்பா யிருக்கும்.”—(பு’க’ா. 2 : 8)

11. நபிகள் திலகத்தின் (சல்அ’ம்) ஆதாரத்தைக் கொண்டு அ’ப்’து’ல்லா ஹிப்’னு அ’ம்ர் கூறியுள்ளார்: அவர்கள் சொன்னார்கள் :—

“எவனுடைய நாவையும் கையையும் விட்டு முஸ்லிம்கள் க்ஷேமமா யிருக்கிறார்களோ, அன்னவனே முஸ்லிமாவான்;[11] இன்னம், அல்லா(ஹ்)

---

11. இங்கு இஸ்லாத்தின் இலக்ஷணம் இன்னமொரு வகையாய் வர்ணிக்கப்பட் டிருக்கிறது. ஒரு மனிதன் இறைவனது ஏகத்துவத்தில் உறுதிகொண்டு விட்டதாய்க் கூறியவுடனே முஸ்லிமென்று அழைக்கப்படுகிறன்; ஆனால், அன்னவன் ஒரு முஸ்லிமைப்போலே தனது வாழ்க்கை நிலையைச் செப்பஞ்செய்து கொள்ளத் துணியுங்காலே அவன் உண்மை முஸ்லிமாக உயர்ந்து விடுகிறன்; அவன் சாந்திமயமான வாழ்க்கையை நடாத்த வேண்டும்; அஃதாவது, அவனுடைய நாவைவிட்டும் கையைவிட்டும் ஏனை முஸ்லிம்கள் க்ஷேமமாயிருத்தல் வேண்டும். இஸ்லாத்தின் எல்லைக்குள்ளே புகுந்து விடுவது மிகவும் எளிய காரியமே. ஆயின், ஓர் உண்மை முஸ்லிமாக உயிர் வாழ்ந்து நடந்து வருவதென்பது வேறு விஷயம். அவரவரும் சாந்தியுடனும் சமாதானத்துடனும் உயிர் வாழ்ந்து வருவதானல் அவரவரின் சொந்த குணதிசயம் உச்சநிலையை அடைந்து விடுவதோடு, அவரவரும் ஒரு பரிசுத்தமான விசுவ சகோதரத்துவத்துக்கு அடிகோலியவ ராகின்றார். இந்த ‘ஹதீ’ஃதைக் கொண்டு முஸ்லிமொருவர் தமது வாயைக் கொண்டும் கையைக் கொண்டும் முஸ்லிமல்லாதவர்களுக் கெல்லாம் தீங்கு விளைக்கலா மென்று கருத்துக்கொள்வது கூடாது. இங்கு முஸ்லிம்களென்று கூறப்பட்டிருப்பது ஏனென்றல், முஸ்லிம்கள்

விலக்கி யிருப்பதை எவனொருவன் விட்டு விடுகிறானோ, அவனே முஹாஜிராக—(தன் வீட்டைத் துறந்து வெளியேறுகிறவனாக) இருக்கிறான்."[12]—(பு'க'ா. 2 : 3)

12. நபிகள் திலகம் (சல்அ'ம்) (இவ்வாறு) சொன்னார்கள் என்று அ'ப்'து'ல்லா(ஹ்) கூறி யிருக்கின்றார் :—

"ஒரு முஸ்லிமைத் திட்டுவது (சன்மார்க்க) எல்லையைக் கடப்பதாகும்; மேலும், அவருடனே சண்டை செய்வது கு'புராயிருக்கும்."[13]—(பு'க'ா. 2 : 35)

---

பெரும்பாலும் தங்கள் சமுதாயத்தின ருடனேயே அன்றாடம் அதிகம் பழகிவர வேண்டியவர்களா யிருக்கிறார்கள் என்பதனாலென்க. இதன் நோக்கமாவது: 'எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓரினம்' என்னுமா போன்றே உலக சகோதரத்துவமொன்று இஸ்லாத்தினால் உண்டுபண்ணப்பட்டிருக்கிறது; அதிலே ஒவ்வொரு மனிதனும் தான் அச்சமற் றிருப்பதாகவே உணர்ந்துவருதல் வேண்டும்; ஒரு முஸ்லிமின் வாயினின்றும் கையினின்றும் தாங்கள் க்ஷேமமா யிருப்பதாக எண்ணினால் மட்டுமேதான் அன்னவர்களை அந்த உலக சகோதரத்துவம் தனக்குள்ளே வசீகரித்துக் கொள்ளுதல் சாலும். எனவேதான், இந்த 'ஹதீ':தின் மற்றொரு பாடபேதத்தில் "முஸ்லிம்கள்" என்பதற்கு மாறாகப் பொதுப் படையாய் "மக்கள்" என்னும் சொல் வழங்கப்பட் டிருக்கிறது: "எவனுடைய நாவைவிட்டும் கையைவிட்டும் மக்கள் க்ஷேமமா யிருக்கிறார்களோ, அப்படிப் பட்டவனே முஸ்லிமாகிறான்" (இப்'னு 'ஹப'ான்).

12. இவ்வாறாகத்தான் இஸ்லாம் இவ்வுலக சம்பந்தமான சாதாரண வார்த்தைகளுக் குள்ளே ஆத்மார்த்த சம்பந்தத்தை நுழைத்துவிட் டிருக்கிறது: ஹிஜ்ரத் (வீட்டைத் துறந்து வெளியேறல்) என்பது, "தீமையைவிட்டு நெடுந்தூரம் விலகி யோடல்" என்று கருத்துக்கொள்ளத் துவக்கிக் கொண்டது.

13. இவ்விடத்தில் ஒரு முஸ்லிமைத் திட்டுவது (அஃதாவது,

13. மஃ’ரூர் சொன்னார் :

நான் ரப’‘தாவில் அபூ’‘தர்ரைச் சந்தித்தேன் ; இன்னம், அன்னவர் ஓரழகிய ஆடையணிந்திருந்தார்; அவருடைய அடிமையும் (அதேமாதிரியான) ஓரழகிய ஆடையை அணிந்திருந்தான். நான் அது குறித்து அவரை வினவினேன். அவர் சொன்னார் :

நான் ஒரு மனிதனைத் திட்டி, அவனுடைய மாதா வினிமித்தம் அன்னவனைத் தீய நாம மொன்றைக் கொண்டு அழைத்தேன் ; ஆகையால், நபி‘ பெருமானார் (சல்அ’ம்) எனக்குச் சொன்னார்கள் :—

---

அவரை வாயைக்கொண்டு நோவச் செய்வது) இஸ்லாத்தின் எல்லையைக் கடப்பதாகு மென்றும், இன்னம் அன்னவருடனே சண்டை செய்வது—(அஃதாவது, அவரைக் கையைக்கொண்டு நோவச்செய்வது) கு‘ப்ராயிருக்கு மென்றும் கூறப்பட்டிருக்கிறது. இதனால் அப்படிப்பட்ட குற்றமிழைத்தவன் உண்மையிலே கா‘பிராய் மாறிப்போய் விட்டானென்றோ, அல்லது இஸ்லாத்தின் எல்லையை விட்டுப் புறம்பாகி விட்டா னென்றோ கருத்துக் கொள்வது கூடாதாகும்; என்னெனின், :குர்ஆன் ஷரீ‘பிலே, முஸ்லிம்களுள்ளே இரு சாரார் ஒருவரோடொருவர் சண்டை செய்யும் விஷயம் காணப்படாநின்றது (:குர். 49 : 9). அவ்வாறு சண்டை செய்வது இஸ்லாத்தின் எல்லையைவிட்டு அப்புறப் படுத்தப்படக் கூடியதாயிருப்பினும், அவ்வாறு சண்டைபோடும் முஸ்லிமொருவன் உண்மையிலே கா‘பிராய் விடுவதில்லை ; என்னெனின், இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கையாய் விளங்கிவரும் கலிமாவில் — அஃதாவது, அல்லா(ஹ்)வின் ஏகத்து வத்திலும் மு‘ஹம்மத்’ நபியின் (சல்அ’ம்) நபித்துவத்திலும்— உறுதிகொண் டிருக்கு மட்டிலே அவன் ஒருபொழுதும் இஸ்லாத்தின் எல்லையைவிட்டு வெளியிலே சென்று விட்டவனாக மாறிவிட மாட்டான்.

"ஏ அபூ"தர்! நீர் அவனுடைய மாதாவினிமித்த மாக அன்னவனைத் தீய நாம மொன்றைக் கொண்டா அழைத்தீர்! மெய்யாகவே நீர் நும்பால் அஞ்ஞானத் தையே (இன்னம்) வைத்துக்கொண் டிருக்கிறீர்."[14]—(பு'க'ா. 2:21)

---

14. அடிமைகளுக்கு எஜமானர்கள் தங்களுக்குச் சமமான அந்தஸ்தையே அளித்திடுதல் அத்தியாவசியமென்று கூறியுள்ள பகுதி இந்த 'ஹதீ':தில் விடப்பட்டுவிட்டது; இதில் நபிகள் திலகம்(சல்) கூறிய பகுதிமட்டுமே வரையப்பட்டிருக்கிறது; அவர்களது கூற்றுப்படி ஒருவனைத் திட்டுவது அஞ்ஞானமா யிருக்கிறது; இவ் வஞ்ஞானமென்பது முஸ்லிம்களின் சம்பிரதாய பரிபாஷையில் கு'பு ரென்பதற்குச் சமமா யிருந்து வருகிறது. அபூ'தர் ரென்பார் ஒருவனை "இப்'னுஸ் ஸவ்த'ா" (நீகிரோவ ஸ்திரீயின் மகன்) என்று அழைத்தார்; அஃதொரு நிந்தனைக்குரிய தொனியிலே கூறப்பட்டமையால், ஒரு முஸ்லிமை மற்றொரு முஸ்லிம் திட்டியதற்குச் சமமென்றே அவ் வசைமொழி கருதப் பட லாயிற்று. ஆகவே, அந் நிந்தனைச் சொல் "அஞ்ஞானம்," அல்லது "கு'புர்" என்றே கொள்ளப்படும். உண்மையிலே, நபிகள் திலகத்தின் நல்லபிப்பிராயப் பிரகாரம், ஒவ்வொரு நல்ல காரியமும் ஈமானின் ஓரம்சமா யிருந்து வருவதே போல, ஒவ்வொரு தீய காரியமும் கு'புரின் ஓரம்சமா யிருந்து வருகிறது. ஆயின், கா'பிரானவன் ஒரு நல்ல காரியத்தைச் செய்து விடுவதால் மூமினனவனாய் மாறிவிட முடியாததேபோல், மூமினனவன் ஒரு தீய காரியத்தைச் செய்துவிடுவதால் கா'பிரானவனாய் மாறிப் போய்விட மாட்டான். ஆயின், மூமினனவனுக்கும் கா'பிரான வனுக்கும் இடையிலே யுள்ள வேற்றுமை முன்னவன் கூறும் கலிமா :தய்யிபே' யாகும்; அஃதாவது, லா இலாஹ இல்லல்லா(ஹ்) மு'ஹம்மது'ர்ரஸூலுல்லா(ஹ்)—[அல்லா(ஹ்)வைத் தவிர்த்து வணக்கத்திற்குரியவன் (வேறெவனும்) இல்லை; மு'ஹம்மத்' (நபி') அல்லா(ஹ்)வின் திருத்தூதரா யிருக்கிறார்கள்] என்று உறுதிகொள்வதா யிருக்கிறது.

14. நபிகள் நாயகத்தின் (சல்அ'ம்) ஆதாரத்தைக் கொண்டு அபூ' ஹுரய்ரா கூறியிருக்கின்றார்: அவர்கள் சொன்னார்கள்:—

"முனா'பி:க்கின்—(கள்ள நய வஞ்சகனின்) அடையாளங்கள் மூன்றாகும்: அவன் பேசும் பொழுது பொய் பேசுகிறான்; மேலும், அவன் உறுதி மொழி கூறுங்கால், அதனை முறித்து விடுகிறான்; இன்னம், அன்னவன்பால் அடைக்கலமொன்று ஒப்படைக்கப் படுங்கால், அவன் நம்பிக்கைத் துரோகம் செய்து விடுகிறான்." —(பு'கா'. 2 : 23)

15. அனஸ் கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத் தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள்:—

"எவனொருவன் நாம் தொழுவதே போல் தொழுது, தனது வதனத்தை நமது :கிப்'லாவை நோக்கியுந் திருப்புகிறானோ, இன்னம் நம்மால் அறுக்கப்பட்ட பிராணியையும் புசிக்கிறானோ, அன்னவன் ஒரு முஸ்லிமே; அவனுக்கு அல்லா(ஹ்)வின் உறுதிமொழி யொப்பந்தமும், அல்லா(ஹ்)வின் திருத் தூதரின் உறுதிமொழி யொப்பந்தமும் இருக்கின்றன;

---

15. அஃதாவது, பொய் சொல்லிக் கொண்டும், வாக்குறுதிகளை முறித்துக் கொண்டும், நம்பிக்கைத் துரோகம் புரிந்து கொண்டும் இருக்கிற ஒருவன் தன்பால் ஈமான் இருக்கிறதென்று—இஸ்லாத்தின் போதனை ஏதேனுமொன்று இருக்கிறதென்று—கூறிக்கொள்வது சாலாது; எனவே, அன்னவன் தன்பால் ஈமான் இருக்கிறதென்று கூறத்துணிவது வெறு நயவஞ்சகத்தனக் கேலிக்கூத்தே யாகும்.

ஆதலால், அல்லா(ஹ்)வின் உறுதிமொழி யொப்பந்தத்தை மீறிவிடாதீர்கள்.''[16]—(பு'க'ா. 8 : 28)

16. நபிகள் ஞாதரின் (சல்அ'ம்) ஆதாரத்தைக் கொண்டு அனஸ் கூறியுள்ளார்:........ அவர்கள் சொன்னார்கள் :—

"அவன் நெருப்பை நோக்கிச் செல்வதை அல்லா(ஹ்) தடுத்திராத முறையிலே, அல்லா(ஹ்)வைத்

---

16. இவ்விடத்தில் மற்ரோர் அனுஷ்டான பூர்வமாயுள்ள பரீக்ஷாமுறை கூறப்பட்டிருக்கிறது: இஸ்லாமிய முறைப்படி தன்னுடைய தொழுகையைத் தொழுதுகொண்டும், தன்து வதனத்தைக் :கிப்'லாவின் திசையை நோக்கித் திருப்பிக்கொண்டும் இருக்கிற ஒரு மனிதனை நீங்கள் காண்பீர்களேல், அவனொரு முஸ்லிமென்பதற்கு அஃதொன்றே போதிய சான்ருயிருக்கிறது; அன்னவனுக்கு அல்லா(ஹ்)வின் உறுதிமொழி யொப்பந்தமும், அல்லா(ஹ்)வின் திருத்தூதரின் (சல்) உறுதிமொழி யொப்பந்தமும் இருக்கின்றன; ஆதலால், அவனைக் கா'பிரென்று கூறுவது அல்லா(ஹ்)வின் உறுதிமொழி யொப்பந்தத்தை மீறி நடப்பதாயிருக்கிறது. :குர்ஆன் ஷரீ'பா, மற்ரோர் அனுஷ்டானபூர்வமான, இன்னம் விரிவான பரீக்ஷா முறையை ஏற்படுத்தி வைத்திருக்கிறது: "உங்களுக்கு இஸ்லாமிய வந்தனத்தை யளிக்கும் எந்த ஒருவனையும், 'நீயொரு மூமினனவ னல்லை,' என்று கூருதீர்கள்" (:குர். 4 : 94). ஒருவன் தானொரு முஸ்லிமென்பதை அறிவிப்பான் வேண்டி நம்மை நோக்கி, "அஸ்ஸலாமு அ'லைக்கும்," என்று கூறுவானுயின், அன்னவனை நாம் கா'பிரென்று கூறுவது கூடாது. "மவா(க்):கி'பின்" ஆசிரியர் இவ்வாறு கூறுகின்ருர்: "மத நிபுணர்களுள், சட்ட நிபுணர்களுள் பெரும்பான்மையோர்கள் ஏகோபித்த அபிப்பிராயத்தை இவ்வாறு இயம்பியிருக்கின்ருர்கள்: அஹ்லெ :கிப்'லாவிலிருந்து — (தங்கள் தொழுகைகளில் :கிப்'லாவை—கஃ'ப'ாவை—முன்னோக்கி நின்று தொழும் மனிதர்களிலிருந்து) ஒருவரையும் கா'பிரென்று கூறுவது கூடாது" (மவா:க். பக். 600).

தவிர்த்து வணக்கத்திற் குரியவன் (வேறெவனும்) இல்லை யென்றும், மு‘ஹம்மத்’ அல்லா(ஹ்)வின் தூத ரென்றும் ஹிருதய பரிசுத்தத்துடனே சாக்ஷியம் கூறக்கூடியவன் ஒருவனுமில்லை.”[17]—(பு’க’ா. 3 : 49)

17. உ’:துமான் (ரலி’) சொன்னார்கள் : அல்லா(ஹ்) வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னார்கள் :—

“அல்லா(ஹ்)வைத் தவிர்த்து வணக்கத்திற் குரியவன் (வேறெவனும்) இல்லையென்று தான் அறிந்துள்ள நிலையிலே எவனொருவன் மரித்து விடுகிறானோ, அவன் சுவர்கத்துள் புகுந்துவிடுகிறான்.”[18]—(முஸ்—மிஷ். 1)

18. “அல்லா(ஹ்)வின் பாலும், அவனுடைய தூதரின் பாலும், முஸ்லிம்களின் தலைவர்களின் பாலும், பொதுவாக (எல்லா) முஸ்லிம்களின் பாலுமே

---

17. அஃதாவது, அவ்வாறு அல்லா(ஹ்)வைக் கொண்டும் மு‘ஹம்மத்’ நபி’யைக் கொண்டும் ஈமான் கொண்டு விட்டதாய் உள்ளப் பரிசுத்தத்துடனே உறுதி கூறும் ஒருவனுக்கு ஆண்டவன் நரகத்தை விலக்கிவைத்து விடுகிறான் என்பதேயாம்.

18. இந்த ‘ஹதீ’:தும், சென்ற ‘ஹதீ’:தும் விளக்கிக் காண்பிப்பதாவது : வணக்கத்திற் குரியவன் ஒரே ஆண்டவன்தா னென்றும், மு‘ஹம்மத்’ நபி’ அவனுடைய திருத்தூத ரென்றும் திரிகரண சுத்தியுடனே கூறி ஒத்துக்கொள்ளும் மனித னொருவன்—தன்னாற் கூடியவரை அல்லா(ஹ்)வின் கட்டளைகளை மேற்கொண்டும் அவனுடைய திருத்தூதரின் அடிச்சுவடுகளைப் பின்பற்றியும் நடக்க முயல்வானாதலின் — நரகத்தை விட்டுக் காப்பாற்றப்பட்டு, சுவர்க்கத்தி னுள்ளே நுழைத்து வைக்கப் படுவான்.

நம்பிக்கைக் குரியவராய் நடந்து கொள்வதே (சன்)மார்க்கமா யிருக்கிறது."[19] —(பு'க'ா. 2 : 42)



---

19. அல்லா(ஹ்)வின் பால் நம்பிக்கைக் குரியவராய் நடப்பதென்பது, அவனுடைய விலக்கல்களைத் தவிர்த்து, ஏவல்களை மேற்கொண் டொழுகுவ தாகும்; அவனுடைய தூதரின் பால் நம்பிக்கைக் குரியவராய் நடப்பதென்பது, அவர்களுடைய அடிச்சுவடுகளைப் பன்பற்றி யொழுகுவ தாகும்; முஸ்லிம் தலைவர்கள் பால் நம்பிக்கைக்குரியவராய் நடப்பதென்பது, அவர்கள் அல்லா(ஹ்)வுக்கும் அவனுடைய திருத் தூதருக்கும் மாறு செய்யாதிருக்கிற வரையில் அவர்களுடைய கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதாகும்; பொதுவாகச் சகல முஸ்லிம்கள் பாலும் நம்பிக்கைக்குரியவராய் நடப்பதென்பது, அவர்களுடைய நன்மைக்காகத் தம்மாலியன்ற மட்டில் பாடுபடுவதே யாகும். இதுதான் இஸ்லாமார்க்கத்தின் வடிக்கட்டிய சாராம்சமா யிருந்துவருகிறது.

எனவேதான், நபிகள் நாயகத்தின் இந்த 'ஹதீ'ஃதையே இமாம் பு'க'ாரீ தங்கள் இந்த அத்யாயத்திற்குத் தலைப்பிலே வரைந்து வைத்திருக்கிறார்கள்.

# அத்யாயம்—3

## அறிவு—விவேகம்

1. "சிருஷ்டித்துள்ள உம்முடைய ரக்ஷகனது திரு நாமத்தைக் கொண்டு ஓதக் கடவீர்; அவன் மனிதனை ஓர் உதிரக் கட்டியிலிருந்து சிருஷ்டித்தான். ஓதுவீராக! இன்னம், உம்முடைய ரக்ஷகன் மகா கண்ணியமுள்ளவனு யிருக்கிறுன்; அவன் எழுதுகோலைக் கொண்டு எழுதக் கற்றுக்கொடுத்தான்; மனிதனுக்கு அறியாதிருந்ததை அறிவித்து வைத்தான்" (குர். 96 : 1—5).

2. "உங்களுள்ளே ஈமான் கொண்டவர்களையும் அறிவு நிரம்பப் பெற்றவர்களையும் அல்லா(ஹ்) உன்னத அந்தஸ்துக்கு உயர்த்திவிட்டிடுவான்" (58 : 11).

3. "இன்னம், நீர் சொல்லக்கடவீர்: 'ஏ என் ரக்ஷகா! அறிவில் என்னை நீ அபிவிருத்தி யடையச் செய்வாய்'" (20 : 114).

4. "இன்னம், எவனொருவன் அறிவை யளிக்கப் பெறுகிறுனே, உண்மையிலே அன்னவன் பெரும் சிரேஷ்ட(ச் செல்வ)த்தையே அளிக்கப் பெறுகிறுன்" (2 : 269).

"ஈமான்" என்பது மனிதனுடைய ஒழுக்கத்தையும் பாரமார்த்திகத்தையும் அபிவிருத்தியடையச் செய்துவருவதேபோல், அறிவென்பது அவனது மூளையின் சக்தியை அதிகம் வளரச் செய்கிறது; எனவேதான், ஈமானுக்கு அடுத்தபடியிலே அறிவென்பது முக்கியத்துவம் பெற்று நிற்கிறது. இமாம் பு'கா'ரீ தங்கள் அத்யாயங்களை அடுக்கி வைத்திருப்பது பகுத்தறிவுக்கு மிகவும் பொருத்தமுள்ள தாகவே யிருந்துவருகிறது. நபிகள் திலகத்துக்கு முதன் முதலில் வ'ஹீயின் வாயிலா யறிவிக்கப்

பட்ட அந்த ஐந்து ஆயாத்துமே தலையங்கத்தில் 1-இலே வரையப்பட் டிருக்கின்றன. அவ்வாயாத்கள், படிப்பதையும் எழுதுவதையும் உறுத்திக் கூறுவதோடு, கல்வியின் சார்பாய்க் கூறுமிடத்து, "கண்ணியமுள்ள ரக்ஷகன்" என்றும் குறிப்பிட் டிருக்கின்றன; என்னெனின், மனிதன் கண்ணியம் பெற நாடுவானாயின், அறிவின் வாயிலாகத்தான் அவன் அதனைப் பெற்றுக் கொள்ளுதல் சாலும் என்க. இவ்விஷயம் தலை.ஆயத் 2-இல் வெளிப்படையாய்க் கூறப்பட்டிருக்கிறது. :குர்ஆன்ஷரீ'ப் நபிகள் நாயகத்தையே மேலும் மேலும் அறிவைத் தேடிக் கொள்ளுமாறு ஏவியிருக்கின்றது (தலை. ஆயத் 3). யஃ'லமூன் (உணர்ந் தறிகிறவர்கள்) ய'த'பக்கரூன் (ஆலோசித் தறிகிறவர்கள்) ய'த'தக்கரூன் (சிந்தித் துணருகிறவர்கள்) என்பன போன்ற அறிவுக்குரிய சொற்கள் :குர்ஆன்ஷரீ'பின் ஒவ்வொரு பக்கத்திலும் காணப்பட்டே வருகின்றன; சுருக்கிச் சொல்லுமிடத்து, நந் தெய்வத் திருமறை அறிவுக்கு அதிகமான கௌரவத்தையே அளித்துக்கொண் டிருக்கிறது. தலை. ஆயத் 4, அறிவென்பது பெருஞ் சிரேஷ்டச் செல்வமா யிருக்கிறதென்று கூறிக்கொண் டிருக்கிறது. இதுதான் இவ் வத்யாயத்தில் முதன் முதலாய்க் குறிக்கப்பட்டிருக்கும் 'ஹதீ':தின் மூலக்கருத்தா யிருந்து வருகிறது; அந்த 'ஹதீ':து செல்வத்தையும் ஞானத்தையும் மனிதன் இயற்கையாய்த் தேடக்கூடிய வஸ்துக்க ளென்றே விஸ்தரித்துக் காட்டுகின்றது. இவ்விரண்டிலும் சகல மனிதர் களும் ஒருவரை யொருவர் மிக்க நல்ல முறையிலே போட்டி யிட்டுக் கொள்ளலாம் ('ஹதீ'. 1). நபிகள் திலகம் தங்கள்பால் நெருங்கியவர்களை யெல்லாம் பார்த்து, அறிவைத் தேடிக் கொள்ளும்படியும், அதனைப் பிறருக்குப் போதிக்கும்படியும் கட்டளையிட் டனுப்புவார்கள். ('ஹதீ'. 2, 3); இன்னம், சமுதாயத்தின் மிகவும் அடிப்படையான கீழ்ப்படித்தரத்திலே இருந்துவந்தவர்க ளென்று கருதப்பட்டவர்களுங்கூடக் கல்வியின் வாயிலாய் மிகவு முயரிய அந்தஸ்திற்கு உயர்த்திவிடப்பட வேண்டுமென்றும் விழைந்து நின்றூர்கள் ('ஹதீ'. 4). உண்மையிலே இஸ்லாம் பொதுமக்கட் கல்விக்கு அஸ்திபாரத்தைப்

போட்டிருக்கிறது; அஃதாவது, ஆண்களும் பெண்களும் பெரியவர்களும், சிறியவர்களும் கல்வி கற்பிக்கப்படல் வேண்டும். நபிகள் திலகம் (ஸல்அ’ம்) அவர்களே பெண்களின் கல்விக்காக ஏற்பாடு செய்து வைத்தார்கள் (‘ஹதீ’. 5). எழுதுவதும் அவசியமேயென எடுத்தோதப்பட் டிருக்கிறது (‘ஹதீ’. 6—9); அறிவை அடையப் பெறுதலே மேன்மைக்குரிய அளக்குங் கோலாய்க் கருதப்பட்டு வந்தது (‘ஹதீ’. 10). அறிவென்பது மிகவும் மேலான புகழ்ச்சியுடனே வர்ணிக்கப்பட் டுள்ளது (‘ஹதீ’. 11—14); எனவேதான், ஆதிகால முஸ்லிம்கள் அறிவைத் தேட அத்துணை அளவுக்கு மீறியவர்களாய் விடாய்த்து நின்றார்கள். ‘ஹதீ’. 15, ஒவ்வொரு முஸ்லிமின் மீதும்—அன்னவர் ஆணேயாயினும் பெண்ணேயாயினும், வயது முதிர்ந்தவராயினும் வாலிபராயினும்—அறிவு பெறுவதை அவசியக் கடமையாக்கி யிருக்கிறது; இதனால் கட்டாயக் கல்விக்குரிய வித்து இதில் காணக் கிடப்பதைக் கண்டுகொள்ளலாம். ஒரு ஜாதியார் அறிவு தேடுவதைக் கைவிட்டு விடுவார் களாயின், அவர்களின் வீழ்ச்சி நிச்சயமேயாம் என்றோர் எச்சரிக்கை இறுதியாக விடுக்கப்படுகிறது (‘ஹதீ’. 16).

1. அ’ப்’து’ல்லா ஹிப்’னு மஸ்ஊ’த்’ கூறினார்: நபிகள் நாயகம் (ஸல்அ’ம்) சொன்னார்கள்:

“பொறாமையென்பது இருக்கக்கூடாது; ஆனால், இருவரை (வெல்லப் பார்ப்பீர்களாக)[1]: அல்லா(ஹ்)

---

1. அரப் மூலத்தில், லா‘ஹஸத’ இல்லா ‘பி:த்ன(த்)தைனி என்னும் வாக்கியம் காணப்படா நின்றது; இதனை, “இரு விஷயங்களிலன்றி (வேறொன்றிலும்) ‘ஹஸத்’ என்பது இருக்கத்தகாது,” என்றும் மொழி பெயர்க்கலாம். ஆனால், வேறொருவனுக்குக் கிடைத்திருக்கும் பாக்கியம் அவனைவிட்டுப் பிடுங்கப்பட்டுப் போகவேண்டு மென்று பொறாமை கொள்ளும் ‘ஹஸத்’ இஸ்லாத்தின் ஒழுக்கச் சட்டத்தால் அடியுடனே தடுக்கப்பட்டிருக்கிறது; “அழுக்கா(று) எனவொரு பாவி திருச்செற்றுத் தீயுழி உய்த்து

எவனுக்கு ஐசுவரியத்தைக் கொடுத்து, சத்தியத்தின் ஊழியத்திலே அதனைச் செலவு செய்யச் சக்தியும் அளித்திருக்கிறானோ, அவனும், அல்லா(ஹ்) எவனுக்கு வஸ்துக்களின் ஞானத்தை[2] அளித்து, அதைக் கொண்டு அவன் (நல்ல) தீர்மானம் செய்து கொண்டும் அதனை(ப்பிறருக்கு)க் கற்பித்துக் கொண்டும் இருப்ப

---

விடும்," என்றார் வள்ளுவரும். இன்னம், இல்லா என்னுஞ் சொல் இவ்விடத்தில் இஸ்தி:த்னா'உ முன்:க.திஃ' என்பதாக உபயோகிக்கப்பட்டிருக்கிறது; அஃதாவது, லா என்பதற்குத் "தவிர" என்று கருத்துக் கொள்ளாது, "ஆனால்" என்றே தாத்பரியம் கொள்ள வேண்டும். 'ஹஸத்' (பொறாமை) என்பதும், :கிப்':தா (ஒருவரையொருவர் வெல்ல முயலும் போட்டி) என்பதும் ஒரு விஷயத்தில் ஒன்றேபோலக் காணப்படுகின்றன: அஃதாவது, வேறொருவன் பெற்றுக்கொண்டிருக்கும் பாக்கியத்தைப் போன்றதொன்றை நாமும் பெற்றுக்கொள்ள வேண்டுமென்று விழைவதாகும்; ஆனால், 'ஹஸதி'ல் (பொறாமையில்) அவனுக்குள்ள பாக்கியம் ஒழிந்துபோக வேண்டுமென்னும் புழுக்கக் குணம் குடிகொண்டிருக்கிறது; ஆயின், :கிப்':தா என்பதில் விரும்புகிறவன் வேறொருவனுக்குள்ள சிறப்பைப் போன்றதொன்று தனக்கும் கிடைக்க வேண்டுமென்று விழையும் குணம் காணப்படுகிறது. இமாம் பு'க'ாரீ தங்களுடைய இந்த அத்யாயத்துக்குத் தலையங்கமாக, :கிப்':தா என்னும் சொல்லையே வழங்கி யிருப்பதிலிருந்து, அப் பெரியார் 'ஹஸத்' என்பது இவ்விடத்தில் தடுக்கப்பட்டிருக்கிறதென்றும், :கிப்':தா என்பது இரு சந்தர்ப்பங்களில் அனுமதியளிக்கப்பட்டிருக்கிறதென்றும் அபிப்பிராயம் கொண்டிருப்பதாகவே கருதக் கிடக்கின்றது.

2. அரபு மூலத்தில் வழங்கப்பட்டிருப்பது 'ஹிக்மத்' தென்னும் சொல்லாகவே காணப்படாநின்றது. இதனை "விவேகம்", அல்லது "அறிவு" என்று மொழிபெயர்க்கலாம். ஆயின், இமாம் ரா:கிப்', "வஸ்துக்களின் அறிவையும், நன்மை புரிவதையும் இது குறிக்கும்" மென்கிறார்.

வன் எவனே, அவனும்[3] (அவ்விருவராவர்).''—(பு'கா'. 3 : 15)

2. மாலிக் இப்'னு 'ஹுவய்ரி:த் கூறினர்: நபிகள் திலகம் (சல்அ'ம்) எங்களுக்குச் சொன்ஞர்கள் :-

"நீங்கள் உங்களுடைய ஜனங்கள்பாலே திரும்பிச் சென்று, அவர்களுக்குக் (கல்வியைக்) கற்றுக் கொடுக்கவுங் கடவீர்கள்.''[4]—(பு'கா'. 3 : 25)

---

3. ஒவ்வொரு மனிதனும் செல்வத்தைத் திரட்டவே இயற்கையாக விழைந்து நிற்கிறுன்; அவ்வாறு ஐசுவரியத்தைப் பெற நாடும் விழைவைப் போலத்தான் அறிவைப் பெற நாடும் விழைவும் இருக்கவேண்டு மென்று இவ்விடத்தில் விளக்கப்பட்டிருக்கிறது. எனவே, அறிவைத் தேடுவதும் ஐசுவரியத்தைத் தேடுவதைப் போலவே ஒரு முக்கியத் தொழிலா யிருக்க வேண்டு மென்று இந்த 'ஹதீ':து விளக்கிக் காண்பிக்கிறது; எனவே, ஒவ்வொரு மனிதனும் அவ்விரண்டையுமே சேகரிக்க முயிலவேண்டும். ஆனுல், அவ்விரண்டையும் பெற்றுக்கொள்வதில் ஒவ்வொன்றுக்கும் ஓரொரு நிபந்தனை விதிக்கப்பட்டிருக்கிறது: செல்வத்தைச் சேகரிப்பவன் சத்திய பிரசாரத்திற்காகச் செலவு செய்தல் வேண்டும்; அறிவைத் தேடுகிறவன் அதனைப் பிறருக்குப் போதித்து வருதல் வேண்டும். ஆகவே, அவ்விரண்டையும் சேகரிக்கும் முக்கிய நோக்கம் மன்பதைக்கு நன்மை புரிவதாகவே இருந்து வருகிறது. :குர்ஆன் ஷரீ'பில் அறிவென்பது மாபெருஞ் செல்வமென்றே வர்ணிக்கப்பட்டிருக்கிறது: "இன்னம், எவனொருவன் அறிவை ('ஹிக்மத்தை) அளிக்கப் பெறுகிறுனே, அவன் மெய்யாகவே பெரியதொரு செல்வத்தையே அளிக்கப் பெற்றவ னுகிறுன்" (2 : 269).

4. பாரசீக வளைகுடாக் கரையிலுள்ள ப''ஹ்ரைனிலிருந்து நபிகள் திலகத்திடம் ரபீ'ஆ' என்னும் கூட்டத்தினர் தூது கோஷ்டியாக வந்து சென்றபொழுது, இவ்வாறு அவர்கள்

3. இப்'னு அ'ப்'பா'ஸ் நபிகள் நாயகத்தின் (சல்அ'ம்) ஆதாரத்தைக் கொண்டு கூறினர்:—

"பிரசன்னமா யிருப்பவன் (இங்குப் பிரசன்ன மாய்) இராதவனுக்கு அறிவைப் புகட்டக் கடவன்."—(பு'க'ா. 3 : 37)

4. அபூ' மூஸா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத் தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள்:—

"மூன்று மனிதர்கள் இருக்கின்றார்கள்; அவர் களுக்கு இரண்டு மடங்கான சம்மான முண்டு:........ எவனுக்கு ஒருபெண்ணடிமை யிருந்து, அவளை அவன் வளர்த்தும், மிகவும் நல்ல முறையிலே பழக்கியும், அவளுக்கு அன்னவன் படிப்புப் புகட்டியும், மிகவும் மேலான கல்வியை அவளைப் பெற்றுக் கொள்ளச் செய்தும், பின்பு அன்னவளை விடுதலை செய்தும் விவாகம் செய்தும் கொடுக்கிறானே, அப்படிப்பட்ட வனுக்கு இரண்டு மடங்கு சம்மான முண்டு."[5]—(பு'க'ா. 3 : 31)

---

அறிவுறுத்தப் பெற்றார்கள். அவர்கள் மதீனவில் தங்கியிருந்த பொழுது நபிபெருமா னிடத்திருந்து கற்றுக்கொண்ட வற்றை யெல்லாம் நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொண்டு, தங்கள் ஜனங்களிடம்—(அரப் தேசத்தின் கிழக்குக் கோடியி லுள்ள வர்கள்பால்) சென்று சேரும்பொழுது, அவற்றினை யெல்லாம் அவர்களுக்கும் போதித்து வைத்தல் வேண்டுமென்று கட்டளை யளிக்கப்பட்டது. 'ஹதீ'. 3-இல், வந்திருப்பவர் வராதவர்பால் சென்று அறிவைப் புகட்ட வேண்டுமென்று கூறப்பட்டிருத் தலினல், அவ்வாறு அறிவைக் கற்றுக்கொடுப்பது எல்லா முஸ்லிம்கள்மீதும் கடமையாக்கப் பட்டிருப்பது வெள்ளிடை மலையே யாகும்.

5. கல்வி சம்பந்தப்பட்ட மட்டில் அடிமைப் பெண்களுங்

5. அபூ' ஸஈ'து'ல் குத்'ரீ கூறினர்: ஸ்திரீகள் நபிபெருமானிடம் (சல்அ'ம்) 'தங்களை அண்மிக்கொள்வதில் ஆடவர்கள் எங்கள்மீது மிகைத்து நிற்கிறார்கள்; ஆகையால், தாங்களே பார்த்து எங்களுக்காக ஒரு தினத்தை ஏற்படுத்துங்கள்,' என்று சொன்னார்கள்; ஆதலால், அவர்களுக்காக அப்பெருமானர் ஒரு நாளை ஏற்படுத்த வாக்களித்து, அதில் அவர்களை—(அந்த

---

கூட அலக்ஷியமாய் விடப்படக் கூடாதென்று நாம் இவ்விடத்தில் அறிவுறுத்தப் பெறுகிறோம். அவ்வடிமைப் பெண்கள் மிக்க நல்ல முறையிலே பழக்கப்பட்டு, மிகவும் மேலான கல்வியைக் கற்றுக் கொடுக்கப் பெறுதல் வேண்டும். இதுதான் இஸ்லாத்தின் நோக்கமா யிருந்து வந்தது; இதுவே முஸ்லிம்களின் மகா மேலான இலக்ஷியமாயிருக்க வேண்டுவதாயிற்று. சுயேச்சையான ஆண்களும் பெண்களும் நல்லவிதமாய்ப் பழக்கப்பட்டு, நல்ல கல்வியும் புகட்டப் பெறுதல் வேண்டுவதா யிருந்ததோடு, அடிமைகளுங்கூட—அரபிகளால் மிகவுந் தாழ்ந்த நிலையிலிருந்தவர்களென்று கருதப்பட்டு வந்தவர்கள்—(ஆனாலும் இந்தியாவில் ஒதுக்கி வைக்கப்பட் டிருக்கும் ஒரு வகைத் தீண்டப்படாத ஜாதியார்களைப் போலே அவ்வடிமைகள் ஒருபொழுதும் அத்துணை யிழிவாக நடத்தப்பட்டதில்லை) சரியான கல்வியைக்கொண்டும் உயரிய பழக்க வழக்கங்களைக் கொண்டும் சுயேச்சா புருஷர்களுக்குரிய சரிசமமான அந்தஸ்திற்கே உயர்த்தப்பட வேண்டியவர்களா யிருந்தார்கள்; 'பயலடிமை'களும் பெண்ணடிமைகளும் ஒரே விதமாகவே உயர்த்தப்படுதல் வேண்டும். பொதுஜனக் கல்வியும், பெண் கல்வியும், அடிமைகளின் விடுதலையும், "இது பொழுதுள்ள நவநாகரிகம் உதயமாவதற்குப் பதின்மூன்கு நூற்றாண்டுகளுக்கு முன்னரே நபிகள் திலகத்தால் (சல்) நன்கு விதை விதைக்கப் பெற்றுப் பயிரேற்றவும் பட்டிருந்தன என்பது கண்கூடு. "கற்கை நன்றே கற்கை நன்றே! பிச்சை புகினும் கற்கை நன்றே!!" என்றார் ஒரு பெரியாரும்.

ஸ்திரீகளை)த் தாங்கள் சந்தித்தும், அவர்களுக்கு இனிய உபதேசம் புரிந்தும், அன்னவர்களுக்குக் கட்டளைகளை யளித்தும் வந்தார்கள்.[6]—(பு'க'ா. 3 : 35)

6. அபூ' ஹுறைய்ரா (இவ்வாறு) கூறியுள்ளார்: கு''ஜாஆ'க்கள், மக்கா பிடிபட்ட வருடத்திலே, தங்கள் வர்க்கத்தினின்று அவர்கள்—(ப'னூலய்:த்கள்) ஒருவனை (அதற்கு முன்னே) கொன்றுவிட் டிருந்த தற்கு ஈட்டுப் பரிகாரமாக ப'னூ லய்:தினின்று ஒரு மனிதனைக் கொலை செய்து விட்டார்கள். நபிகள் திலகம் (சல்அ'ம்) இது குறித்து அறிவிக்கப்பட்டார்கள்; ஆகவே, அவர்கள் தங்களுடைய சவாரி யொட்டகத்தின்மீது ஏறியமர்ந்து கொண்டு, அப்பால் ஒரு சொற்பொழிவை நிகழ்த்தினார்கள்........அதுபொழுது எமன் தேசத்து மக்களினின்று ஒரு மனிதன் (நெருங்கி) வந்து, 'ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! அதனை எனக்காக எழுதித்தரக் கடவீர்கள்,' என்றுங் கூறினான். ஆகவே, அவர்கள் சொன்னார்கள் :-

---

6. இமாம் பு'க'ாரீ இந்த 'ஹதீ'ை:த, "ஸ்திரீகளின் கல்விக்காக ஒரு பிரத்தியேக தினம் நியமிக்கப்பட வேண்டுமோ?" என்னும் தலையங்கத்தின் கீழே வரைந்திருக்கிறார்கள். இதிலிருந்து விளக்கமாவது யாதெனின்: இஸ்லாத்தின் அபிப்பிராயப் பிரகாரம் ஆண்களுக்கும் பெண்களுக்கும் கல்வி முறைக்குரிய தனித்தனியான ஏற்பாடுகள் செய்யப்படுவதே உசிதமெனக் காணப்படாநின்றது என்க. வயதுவந்த ஆண்களும் பெண்களும் கலந்தே ஒரு கல்லூரியில் கல்வி கற்கலாமென்பது, பஞ்சுடனே நெருப்பை வைத்துப் "பற்றிக் கொள்ளாதீர்!" என்பது போலாயிருக்கிறது.

“இன்னான் இனையானுக்காக எழுதிக் கொடுக்கக் கடவீர்கள்.”[7] —(பு’க’ா. 3 : 39)

---

7. நபிகள் திலகம்(சல்) படிக்கவேனும் எழுதவேனும் அறியாதவர்களா யிருந்தும், அவ்விரு அருங்கலைகளையும் நன்கு பயிலச் சொல்லி உற்சாகமூட்டி வந்தார்கள். என்னெனின், அன்னவர்கட்கு ஆதியில் ஓதச் சொல்லியே ஆண்டவன் வ‘ஹீ யனுப்பி வற்புறுத்தினான் என்பதனை லென்க. ‘ஹதீ’:துகளை வரைந்து கொள்வதை நபிகள் நாயகம் அடியுடன் தடுத்துவிட்டிருந்தார்களென்று ஒரு தவறான அபிப்பிராயம் இருந்து வருகிறது. ஆயின், இந்த ‘ஹதீ’:து விளக்கியிருப்பதே போல், நபிகள் பெருமானே அவசியம் நேரிட்டபொழுது, ‘ஹதீ’ை:த வரைந்து வைத்துக் கொள்ளுமாறு அனுமதி யளித்திருக்கிறார்கள். எனினும், சர்வ ஜாக்கிரதையுடனே இருந்துகொள்ளாதவர்கள் நபிகள் நாயகத்தின் ‘ஹதீ’ை:தக் :குர்ஆன் ஷரீ‘பின் ஆயாத்களுடனே கலந்து குழப்பத்தை உண்டுபண்ணிவிடக் கூடுமென்று அஞ்சிய காரணத்தால் ‘ஹதீ’ை:த வரைந்து வைத்துக்கொள்வது பொதுவாகவே உசிதமான தல்லவென்று கருதப்பட்டுவந்தது; ஆனாலும்’ அடுத்துவரும் ‘ஹதீ’:து எடுத்துக் காட்டுவதேபோல், ‘ஹதீ’:துகளை ஒழுங்காய் வரைந்து கொள்ளும் வழக்கத்தை வைத்துக் கொண்டிருந்த ஜனங்களும் ஒருசிலர் இருந்துவந்தார்களென்று அறியக் கிடக்கின்றது.*

---

*பு’க’ாரீ இமாமைக் குறித்து, கில்லெளம் என்னும் ஆராய்ச்சியாளர் இவ்வாறு எழுதியிருக்கின்றார்: “இந்த வியக்கத்தக்க மனிதர் ஆறிலக்ஷம் ‘ஹதீ’:துகளை அறிந்திருந்தார் என்றும், இவர் தாமே இரண்டிலக்ஷத்துக்கு மேலே மனப்பாடம் பண்ணியிருந்தார் என்றும் ‘ஹதீ’து:து (ஆராய்ச்சி) கூறியிருக்கின்றது. இவற்றிலிருந்து அ(ப்பெரிய)வர் நமக்காக 7,397-ஐ, அல்லது, வேறு பலர் கூறியுள்ளபடி 7,295-ஐச் சேமித்து வைத்துளார். இவற்றுடனே தர்ஜ¬மாவில் வரையப்பட்டுள்ள துண்டுகளாயுள்ள ‘ஹதீ’:துகளையும் ஒருவர் சேர்த்துக் கூட்டினால், மொத்தம் 9,082 ஆகின்றன......”

7. அபூ' ஹுரய்ரா கூறினர்: நபிகணயகரின் (சல்அ'ம்) தோழர்களுள்ளே என்னைப் பார்க்கினும் அதிகமான 'ஹதீ':துகளை அப்பெருமானர் பாலிருந்து கூறியவர் ஒருவருமில்லை; ஆனல், அ'ப்'து'ல்லா ஹிப்'னு அ'ம்ர் வரையும் வழக்கத்தை வைத்துக் கொண்டிருந்தார்; யானே, (எதையும்) எழுதுவதில்லை. —(பு'க'ா. 3 : 39)

8. 'ஜய்தி'ப்'னு :தாபி'த் (இவ்வாறு) கூறியுள்ளார்: நபிகணதர் (சல்அ'ம்) என்னை எஹூதிகளின் எழுத்தை—(ஸூர்யானீ[8] பாஷையை)க் கற்றுக் கொள்ளுமாறு கட்டளையிட்டார்கள்; ஆகையால், நான் நபிகள் நாயகத்திற்காக (சல்அ'ம்) அவர்களுடைய திருமுகங்களை வரைந்து வந்தேன். அவர்கள்—(எஹூதிகள்) அப்பெருமானருக்கு வரையுங்கால், அவர்களுடைய நிருபங்களை நம் பெருமானுக்கு நான் வாசித்தும் காண்பிப்பேன்.—(பு'க'ா. 93 : 40)

9. அபூ' ஹுரய்ரா கூறியுள்ளார்: அன்சார்களிலிருந்து ஒரு மனிதன் வந்து........'ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! நான் தங்கள்பாலிருந்து ஒரு 'ஹதீ'ஃதக் கேட்கிறேன்; அஃதெனக்கு அத்தியந்த பிரீதியை அளிக்கின்றது; ஆனல், என்னல் அதனை நினைவில்

8. "ஸூர்யானீ பாஷை" என்னும் சொற்கள் ச'ஹீ'ஹ் பு'க'ாரீயில் காணப்படவில்லை; ஆனல், அபூ'த'ாவூது'ம், திர்மி'தீயும் கூறியுள்ள ஆதாரத்தைக் கொண்டு அச்சொற்கள் இங்குப் பிறை வளைவுகளுக்குள்ளே சேர்க்கப்பட்டிருக்கின்றன. இந்த 'ஹதீ':திலிருந்து அரபு பாஷையையன்றி, ஏனை மொழிகளையும் கற்றுக்கொள்ள வேண்டுமென்று நபிகணதர் (சல்) கட்டளையிட்டிருப்பதா யறியக்கிடக்கின்றது.

வைத்துக் கொண்டிருக்க முடியவில்லை,' என்று சொன்னான். (அதற்கு) அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னார்கள் :—

"நீ உனது வலக்கரத்தின் உதவியை நாடக் கடவாய்."[9]

இன்னம், அன்னவர்கள் தங்கள் கரத்தைக் கொண்டு எழுதவேண்டிய சயிக்கினையைச் செய்து காண்பித்தார்கள்.—(·திர்மி. 39 : 12)

10. அபூ' ஹுரய்ரா கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னார்கள் :—

"ஜனங்கள் தங்கத்தினதும் வெள்ளியினதுமாகிய சுரங்கங்களைப் போன்ற சுரங்கங்களா யிருக்கிறார்கள் ; அஞ்ஞான (கால)த்தில் அவர்களில் மகா சிரேஷ்டர்களாய் விளங்கியவர்களே, இஸ்லாத்தில் அன்னவர்கள் அறிவைப் பெற்று விடுங்கால், அவர்களிலே மகாசிரேஷ்ட மானவர்களாய் மாறிவிடுகிறார்கள்."[10]—(முஸ்—மிஷ். 2 : 1)

---

9. அம்மனிதன் முதலில் எழுதக் கற்றுக்கொண்டு, பிறகு 'ஹதீ':துகளை வரைந்துகொள்ள வேண்டுமென்று அறிவிக்கப் பட்டுளான்.

10. முஸ்லிம்களே யாயினும், அவர்களல்லாதார்களே யாயினும், மனிதர்கள் தங்கக் கனிகளைப் போலவும் வெள்ளிக் கனிகளைப் போலவும் இருந்துவருகிறார்க ளென்று இயம்பப்பட்டிருத்தலினால், ஒரு ஜாதியார் மற்றொரு ஜாதியாரைப் பார்க்கினும், ஒரு கோத்திரத்தார் மற்றொரு கோத்திரத்தாரைப் பார்க்கினும் சிறந்து விளங்குகிறார்க ளென்பது வெள்ளிடைமலையே யாம்; ஆனால், இந்தச் சிறப்பு அறிவின் விசாலத்துக்குத் தக்கவாறே அமைந்திருக்கிற தென்றும் இங்கு அறையப்பட்டிருக்கிறது. மேற்

11. அபூ' ஹுரய்ரா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"ஞானத்தின் வசனம் மூமினனவரின் இழக்கப்பட்ட பொருளாயிருக்கிறது; ஆதலால், அவர் எங்கெல்லாம் அதனைக் காண்கின்ருரோ, (அங்கெல்லாம்) அவருக்கு அதன்பால் அதிகமான உரிமை யிருக்கிறது."[11]—('திர்மி. 39 : 19)

12. அனஸ் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சென்னர்கள் :—

"அறிவைத் தேடிச் செல்கிறவன், அவன் திரும்பி வருகிற மட்டில், அல்லா(ஹ்)வின் பாதையிலே இருக்கிருன்."—('திர்மி. 39 : 2)

---

குலத்தவரென்று, அல்லது உயர்ந்த ஜாதியினரென்று ஆணவம் பேசிக்கொள்ளும் மனிதர்கள் கல்வியறிவை இழந்துவிடுவார்களாயின், தங்கள் மேன்மையைவிட் டிழிந்து தாழ்மை யடைந்து போய் விடுவார்கள். "கல்லா வொருவன் குலநலம் பேசுதல், நெல்லினுட் பிறந்த'பதரா கும்மே," என்பது ஒரு தமிழ்க் கவியின் கூற்று. ஆதலால், ஜாதி யிறுமாப்போ, குலப் பெருமையோ, கல்வியறி வில்லாதபொழுது, வீண் ஆடம்பரங்களாகவே போய் முடிகின்றன.

11. இந்த 'ஹதீ':து ஒவ்வொரு முஸ்லிமும் அறிவைத் தேட வேண்டுவது அத்தியாவசிய மென்னும் கடமையை நிலைநிறுத்துகின்றது. 'ஹிக்மத் என்னும் அரபுச் சொல் இவ்விடத்தில், "ஞானம்," அல்லது "அறிவு" என்று கருத்துக் கொள்கிறது. ல'ால்லத் என்பது, "ஓர் இழக்கப்பட்ட பிராணி," அல்லது, "விடா முயற்சியுடன் தொடர்ந்து தேடக்கூடிய ஒரு பொருள்," என்று தாத்பரியம் கொள்கின்றமையால், மூமினனவர், தனது மிருகமொன்றை இழந்துவிட்ட சொந்தக்காரன் அதனைத் தேடித் திரிவதேபோல், ஞானத்தைத் தேடிக்கொண்டு அலைந்து திரியக் கட்டுப்பட் டிருக்கிருர் என்று நாம் நன்கு தெரிந்துகொள்கிருேம்.

13. நபிகள் நாயகர் (சல்அ’ம்) நவின்றருளி னார்கள் :—

“எவனுக்கு அல்லா(ஹ்) நன்மை செய்ய நாடு கிறானோ (அவனுக்கு) அன்னவன் சமயத்தை—(தீ’னை)ச் சரியான முறையிலே அறிந்து கொள்ளும் சக்தியை அளிக்கிறான்;” இன்னம்,

“அறிவென்பது கற்பிப்பதன் மூலமாகத்தான் நிலைபெற்று நிற்கிறது.”[12]—(பு’க’ா. 3 : 10)

14. “கற்றறிந்தவர்கள் நபிமார்களின் வாரிஸ்களா யிருக்கிறார்கள்;—அவர்கள் அறிவை(யே) தங்களுக்குரிய அனந்தரச் சொத்தாக விட்டுச் செல்லுகிறார்கள்; அதனைச் சுதந்தரித்துக் கொள்கிறவன் பெரியதொரு சவுபாக்கியத்தையே சுதந்தரித்துக் கொள்கிறான்.”[13]—(பு’க’ா. 3 : 10)

15. அனஸ் கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னார்கள் :—

---

12. இந்த ‘ஹதீ’:தில் காணப்படும் இரு விஷயங்களும் இமாம் பு’க’ாரீயால் அவரது “அறிவின் சுவடி” என்பதிலுள்ள 10-ஆவது அத்தியாயத்தின் தலைப்பிலே பொறிக்கப்பட்டிருக்கின்றன. இவ்விரண்டில் பிந்தியது, அறிவைத் தேடுவதன்மீது மட்டும் தனது வற்புறுத்தலைக் கூறாது, அதனை ஏனையோருக்குக் கற்றுக் கொடுப்பதும், அல்லது அவர்கள்பால் சுமந்து செல்வதும் அத்தியாவசிய மென்பதை வற்புறுத்திக் கூறியிருக்கிறது.

13. இதுவும் நபிகள் திலகத்தின் ஒரு திருவாக்கியமாயிருந்து வருகிறது; இன்னம், பு’க’ாரீ 3: 10-இன் தலைப்பிலுள்ள ‘ஹதீ’:தின் ஒரு பகுதியாகவும் இருந்து வருகிறது. திர்மி‘தீயில் இஃதொரு தனி‘ஹதீ’:தாகவே வரையப்பட்டிருக்கிறது. இவ்விடத்தில் அறிவென்பது நபிமார்களின் அனந்தரச் சொத்தாக வர்ணிக்கப்பட்டிருப்பதோடு, அஃதொரு சௌபாக்கியமென்றுங்கூடக் கூறப்பட்டிருக்கிறது.

"அறிவைத் தேடுவது ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் கடமையா யிருந்துவருகிறது."[14]—(ப'ய்'ஹ:க்—மிஷ். 2)

16. அனஸ் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத் தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள்:—

"அந்த (இறுதி) நேரத்துக்குரிய அடையாளங் களுள், அறிவென்பது பறிக்கப்பட்டுப் போவதும், அறியாமையென்பது தலை தூக்கித் தாண்டவமாடு வதும் (முக்கியமானவையாக) இருக்கும்."[15]—(பு'க'ா. 3 : 21)

---

14. இந்த 'ஹதீ':து மிகவு நன்ருய்ப் பேர்போன நாயக வாக்கியமே யென்று ப'ய்'ஹ:கீயில் வரையப்பட் டிருப்பினும், இதற்குரிய ஆதாரங்கள் பலஹீனமாகவே யிருந்து வருகின்றன. ஆயினும், இந்த 'ஹதீ':தின் மற்ருெரு பாட பேதம் வேறு பல கிரந்தங்களில் குறிக்கப்படாது போகவில்லை; ஆணேயாயினும் பெண்ணேயாயினும், முஸ்லிம்களாயுள்ள அனைவருமே அறிவைத் தேடிக்கொள்ள வேண்டுவது கடமையென்று ஆங்கெல்லாம் வற்புறுத்தப்பட் டிருக்கின்றமையால், இந்த 'ஹதீ':தைப் பொய் யென்று நிராகரித்தொதுக்க அவசியமில்லை யென்றே யாம் எண்ணுகிறோம்.

15. "அந்த (இறுதி) நேரம்" என்பது இஸ்லாத்தின் பரி பாஷையில், தனி மனிதன் சம்பந்தப்பட்டவரை அவனது "அஜல்" முடிவதை (மரணத்தை)க் குறிக்கின்றது; ஜாதியார்கள் சம்பந்தப் பட்டவரை அவர்களது அழிவுக் காலத்தைக் குறிக்கும்; மனித கோடிகளனைவரையும் குறித்துக் கூறுமிடத்து, எல்லா மன்பதை களின் ஒடுக்கத்தின் ஒழிவையே சுட்டிக்காட்டுவதா யிருக்கிறது. ஆனால், இவ்விடத்தில் கூறப்பட்டிருப்பது நிச்சயமாக ஒரு ஜாதியாரின் அழிவையே எடுத்து விளக்குவதா யிருக்கிறது. எனவே, இந்த 'ஹதீ':தின்படி முஸ்லிம்கள் தங்களுக்குரிய மரண நிலையையே அடைந்து கிடக்கிறார்க ளென்பது திண்ணமேயாம். ஆதிகால முஸ்லிம்கள் அறிவைத் தேடுவான்வேண்டி அளவுக்கு மீறிய வேட்கை கொண்டு அங்கங்கே திரிந்தார்கள்; அதற்கு நேர்மாருய் இற்றைநாள் முஸ்லிம்களை அறியாமையும் அலக்ஷிய புத்தியுமே எங்கும் பிடித்தலைத்து வருகின்றன.

# அத்யாயம்—4

## பரிசுத்தம்

1. "இன்னம், நும்முடைய ரக்ஷகனே மகிமைப்படுத்தக் கடவீர்; உம்முடைய உடைகளேயும் பரிசுத்தம் பண்ணிக் கொள்ளக் கடவீர்; (ஏனையெல்லா) அசுத்தத்தையும் ஒழித்து விடக் கடவீர்" (:குர். 74 : 3—5).

2. "நிச்சயமாக அல்லா(ஹ்) அவன்பால் அடிக்கடி திரும்புகிறவர்களை (அதிகம்) உவக்கிருன்; இன்னம், தங்களேப் பரிசுத்தம் பண்ணிக் கொள்ளுகிறவர்களையும் (அதிகம்) உவக்கிருன்" (2 : 222).

3. "ஒவ்வொரு தொழுகைக்குரிய வேளையிலும் உங்கள் அலங்கரிப்பைக் கவனித்துக் கொள்ளுங்கள்" (7 : 31).

4. நாம் நுங்கள்மீது மெய்யாகவே மர்மஸ்தானங்களை மறைக்கின்ற உடையையும், அலங்காரத்திற்குரிய உடையையும் இறக்கியிருக்கிறோம்" (7 : 26).

5. "ஏ ஈமான் கொண்டவர்காள்! நீங்கள் தொழுது கொள்ள எழுந்து நின்ருல், உங்கள் முகங்களையும், முழங்கை (முட்டுவரை) உங்கள் (இரு) கரங்களையும் கழுவிக் கொள்ளக் கடவீர்கள்; மேலு முங்கள் சிரங்களை (நீரால்) தடவிக் கொள்ளக் கடவீர்கள்; இன்னம், உங்கள் (இரு) கால்களையும் கணுக்கால்வரை (கழுவிக்கொள்ளக் கடவீர்கள்); இன்னம், நீங்கள் முழுக் குளியலை எடுத்துக்கொள்ள வேண்டிய அவசியத்தி லிருந்தால், (அம்முழுக் குளியலால்) சுத்தமாக்கிக் கொள்ளக் கடவீர்கள்; மேலும், நீங்கள் நோய்வாய்ப்பட்டோ, அல்லது பிரயாணத்தின்மீதோ இருந்தால், அல்லது உங்களுள்ளே ஒருவர் (மலஜலக்) கக்கூஸிலிருந்து வெளிவந்தால்

அல்லது நீங்கள் ஸ்திரீகளைத் தீண்டியிருந்தால், மேலும் நீங்கள் தண்ணீரைப் பெற்றுக் கொள்ளக்கூட வில்லையேல், அப்பொழுது சுத்தமான மண்ணை நாடக் கடவீர்கள்; ஆகவே, உங்கள் முகங்களையும் உங்கள் கைகளையும் அதினின்று தடவிக் கொள்ளக் கடவீர்கள்; உங்கள்மீது எத்தகைய கஷ்டத்தையும் வருத்த அல்லா(ஹ்) விழைய வில்லை; ஆனால், உங்களைப் பரிசுத்தப்படுத்தவும், நீங்கள் நன்றி செலுத்துவான் வேண்டி உங்கள்மீது தனது அருட்கொடையைப் பூர்த்தி செய்யவும் அவன் விழைகின்றான்." (5 : 6).

பரிசுத்தமென்பது தொழுகைக்கு முன்னே செய்து கொள்ளப் பட வேண்டிய ஒரு முக்கிய புனிதத்தன்மையைச் சுட்டிக் காட்டுவதா யிருப்பினும், அஃதொரு தனிவிஷயமாகவே இருந்து வருகிற படியால், 'ஹதீ':து தொகுதிகளில் ஒரு பிரத்தியேகமான ஸ்தானத்தையே வகித்துக்கொண் டிருக்கிறது. தலைப்பில் கூறப் பட்டுள்ள :குர்ஆன் ஷரீ'பின் ஆயாத்களில் முதல் மூன்றும், அடியான் தன்னுடைய ஆண்டவன்பால் முகந் திரும்பும்பொழுது உடம்பிலும் உடையிலும் பரிசுத்தமுள்ளவனா யிருக்க வேண்டு மென்று பொதுப்படையாய்க் கூறிக்கொண் டிருக்கின்றன. தலை ஆயத் 4 அம்மணத்தை மூடுவதற்காகவும் அலங்காரத்திற்காகவும் உடை உடுக்க வேண்டுமென்று ஓதிக் காண்பிக்கின்றது. 5-ஆவது ஆயத் தொழுகைக்கு முன்னே அவசியமாய்ச் செய்யப்பட வேண்டிய அர்த்தஸ்னானத்தின் நுட்பங்களை விவரித்திருக்கிறது. எனவே, உடம்பின் பரிசுத்தம் உள்ளத்தின் புனிதத்திற்குரிய முதற் புற அடையாளமா யிருந்து வருகிறது என்பது வெளியாகின்றது; இன்னம், ஒவ்வொருநாளும் எல்லா முஸ்லிம்களும் ஐந்து வேளையும் ஆண்டவனைத் தொழவேண்டி யிருத்தலினால், தம்முடைய உடலையும் உடைகளையும் எப்பொழுதுமே பரிசுத்தமாக வைத்துக் கொண்டிருக்கக் கடமைப்பட் டிருக்கின்றார்கள்.

பரிசுத்த மென்பது இன்னதுதா னென்பதை அறிவாளி யொருவன் சொல்லாமலே அறிந்துகொள்வான் என்பது மெய்யே யாயினும், மதமென்பது ஆரம்பப் படித்தரத்தி லுள்ள மனிதருக்

கும் அதிக உச்சத்தை அடைந்துள்ள மனிதருக்கும், அஃதாவது, எல்லாப் படித்தரங்களிலு முள்ள எல்லா மனிதர்களுக்குமே விவரங் கூறவேண்டி யிருத்தலினால், ஒவ்வொன்றையும் விளக்க மாகவே நுணுகியுரைகக வேண்டுவதா யிருக்கிறது. இன்னம், எல்லா ஜாதியாரிலும் பொதுமக்க ளென்பார் சாதாரண அறிவையே பெற்றுக்கொண் டிருத்தலினால், அவர்களுக்கு நுணுக்கமான விளக்கங்கள் அத்தியாவசியமாகவே காணப்படா நின்றன ; எனவேதான், :குர்ஆன் ஷரீ‘ப் மனிதர்கள் பரிசுத்தமா யிருக்கவேண்டிய பொது விதிகளை ஸ்தூலமாய்க் கூறியிருக்க, நபி நாயகத்தின் ‘ஹதீ’:துகளே பரிசுத்தத்தின் விளக்கத்தை விவரித்துக் காண்பிக்கின்றன. உண்மையிலே இஸ்லாம் மார்க்கம் மனிதர்களின் பரிசுத்தத்திற்கு வேண்டிய பற்பல நுணுக்கங் களையும் விவரித்துக் கூறியிருப்பதைக் கண்டு, நாகரிக மக்க ளென்று தங்களைக் கூறிக்கொள்ளும் இற்றைநாள் மனிதர்கள் தாங்களும் கற்றுக்கொள்ள வேண்டிய பற்பல நுணுக்கங்களைத் தெரிந்து கொள்வார்கள்.

யாம் இவ் வத்யாயத்தை ஐந்து பகுதிகளாகப் பிரித்துக் கொண் டிருக்கிறோம். அவற்றுள் முந்தியது ஜலமல விஸர்ஜன சம்பந்தமா யிருக்கிறது. பரிசுத்தமென்பது ஈமானில் சரிபாதி யென்று சொல்லப்படுகிறது (‘ஹதீ’. 1) ; இன்னம், தொழுகைக்குத் திறவுகோலாகவு மிருக்கிறது (‘ஹதீ’. 2, 3). உடலின் பரிசுத்தம் உயிரின் பரிசுத்தத்திற்கு முன்னறிகுறியா யிருக்கிற தென்னும் விஷயம் மறக்கப்பட லாகாது (‘ஹதீ’. 4). தனிப் பரிசுத்தத்தில் முழுக் கவனமும் செலுத்துவதேபோல் பொதுச் சுகாதாரத்திலும் செலுத்தப்படுதல் வேண்டும் (‘ஹதீ’. 5–13). பொது ஸ்தலங்களில் எச்சில் துப்புவது தடுக்கப்பட்டிருக்கிறது (‘ஹதீ’. 16, 17).

இரண்டாவது பகுதி பற்கொம்பிடுதலைக் குறித்துக் கூறு கின்றது ; தந்த சுத்தியென்பது முஸ்லிம்களின் உடற் பரிசுத் தத்தில் முக்கியமான முதலிடத்தைப் பெற்றுக்கொண்டிருக்கிறது. பற்கொம்பிடுவது—(மிஸ்வாக் செய்வது) வாயைப் பரிசுத்தம் பண்ணுவதாகவும், அல்லா(ஹ்)வின் பிரீதியை அடைவதாகவும் இருந்து வருகிறது (‘ஹதீ’. 18) ; இதனால் ஆண்டவனும் அடி

யானின் உடற் பரிசுத்தத்தை உவக்கிறுனென்பது வெளிப்படக் கிடக்கின்றது. எனவே, மிஸ்வாக் செய்வது மிகவும் அழுத்தமாய் வற்புறுத்தப்படுகிறது ('ஹதீ'. 19, 20); குறைந்தபக்ஷம் உறக்கத்தைவிட்டு எழுந்தவுடனே மிஸ்வாக் செய்து கொள்வது அத்தியாவசியமா யிருக்கிறது ('ஹதீ'. 21, 22). உண்மையிலே வாயின் பரிசுத்தம் சரீரத்தின் சுகத்தைப் பாதுகாப்பதற்கு மிகவும் உதவிபுரிந்து வருகிறது. ஆகவே, அதன் அவசியம் 'ஹதீ'. 23-இல் மேலும் வலியுறுத்தப்படுகிறது.

மூன்ருவது பகுதி அர்த்தஸ்னைத்தின்—(வுலூ'வின்) நுணுக்கங்களை விவரித்துக் கூறுகின்றது ('ஹதீ'. 25—36); புதிதாக வுலூ' செய்ய வேண்டிய அவசியம் எப்பொழுதென்பதை 'ஹதீ'. 37—41 விளக்கிக் கூறுகின்றன. வுலூ' செய்து முடிந்தபிறகு உள்ளப் பரிசுத்தத்திற் காக ஓத வேண்டிய பிரார்த்தனை யொன்று 'ஹதீ'. 43-இல் காணப்படுகிறது.

நான்காவது பகுதி முழு ஸ்னைம், அல்லது "முழுக்கு" என்பதைக் குறித்துக் கூறுகின்றது. முழுக் குளியல் வாரத்திற்கு ஒருமுறையேனும் அத்தியாவசியமாய்ச் செய்யப்பட வேண்டுவதா யிருக்கிறது ('ஹதீ'. 44—46). முழு ஸ்னைம் செய்யப்பட வேண்டிய அவசியமான காலங்கள் 'ஹதீ'. 47—50-இல் விளக்கப் பட்டுள்ளன. ஜனுப'த்தில் இருந்து வருவதனுலும் மாதவிடாயி லிருந்து வருவதனுலும் முழு ஸ்னைம் செய்ய வேண்டுவது அத்தி யாவசியமே யாயினும், அப்படிப்பட்ட ஆடவரோ பெண்டிரோ அசுத்தமானவர்களாய்க் கருதப்படார்கள் ('ஹதீ'. 51, 52). இன்னம், சில விவரங்கள் 'ஹதீ'. 53, 54-இல் விளக்கப்பட்டுள்ளன; திறந்த இடத்தில் நிர்வாணமாய்க் குளிப்பது முற்றிலும் தடுக்கப் பட் டிருக்கிறது ('ஹதீ'. 55).

ஐந்தாவது பகுதி 'தயம்மும் என்னும் மிருத்யு ஸ்னைத்தைக் குறித்துக் கூறுகிறது; அஃதாவது, அர்த்த ஸ்னைத்திற்கோ, அடங்கல் குளியலுக்கோ தண்ணீர் கிடைக்காத பொழுது— குடிப்பதற்காக, அல்லது வீட்டுப் புழக்கத்திற்காக மட்டுமே தண்ணீர் கிடைப்பதா யிருந்தாலும், அல்லது நீரில் நனைவதால்

சரீரத்திற்குத் தீங்கு நேரக்கூடியதா யிருந்தாலும்—பரிசுத்தமான மண்ணைத் தொட்டு முகத்தையும் கைகளையும் தடவிக் கொள்வதாகும் ('ஹதீ'. 56—58). இச் செய்கையால் கருதப்படும் நோக்கம் யாதெனின்: தொழுகைக்கு முன்னே பரிசுத்தம் பண்ணிக் கொள்ள வேண்டுவது அத்தியாவசிய மென்பதை நினைப்பூட்டிக் கொள்வதாகவே யிருந்துவருகிறது.

## பகுதி 1—ஜலமல விஸர்ஜனம்

1. அபூ' மாலிக் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"பரிசுத்தமென்பது பாதி ஈமானாயிருக்கிறது."[1]—(மூஸ்—மிஷ். 3)

2. ஜாபி'ர் கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"சுவர்க்கத்தின் திறவுகோல் தொழுகையா யிருக்கிறது; மேலும், தொழுகையின் திறவுகோல் பரிசுத்தமா யிருக்கிறது."—(மஸ்—மிஷ். 3)

3. இப்'னு உ'மர் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"பரிசுத்த மில்லாது தொழுகை அங்கீகரிக்கப் படுவதில்லை ; இன்னம், சட்டவிரோதமான வழிகளால் சேகரிக்கப்படும் பொருளிலிருந்து செய்யப்படும்

---

1. உள்ளம் புனிதமாயிருப்பதற்கு உடலும் பரிசுத்தமாகவே இருக்கவேண்டு மென்பதே இஸ்லாத்தின் இலக்ஷியம். எனவே, பரிசுத்தமென்பது, ஏனையோர் கூறுமாபோன்று, தெய்விகத்துக்கு அடுத்தபடியில் இருக்கவில்லை ; ஆயின், இஸ்லாத்தில் அதுவே தெய்விகத்தில், அல்லது ஈமானில் சரிபாதியா யிருக்கிறது.

தர்மமும் (அங்கீகரிக்கப்படுவ தில்லை)."[2]—(மூஸ் — மிஷ். 3 : 1)

4. அனஸ் கூறினர்: நபிகள் திலகம் (சல்அ'ம்) கக்கூஸுக்குச் செல்லுங்கால், (இவ்வாறு) சொல்வது வழக்கம் :—

"ஏ அல்லா(ஹ்) யான் அசுத்தமான செயல்களை விட்டும் அருவருப்பான பழக்கங்களை விட்டும் நின் பாலே தஞ்சந் தேடுகிறேன்."[3]—(பு'க'ா. 4: 9)

---

2. இந்த 'ஹதீ':தும், சென்ற 'ஹதீ':தும், பரிசுத்தம் என்பது தொழுகைக்கு அத்தியாவசியமான ஒரு முக்கிய முதல் நிபந்தனையா யிருக்கிறதென்று பொதுப்படையாய்க் கூறி யிருக்கின்றன; அஃதாவது, முஸ்லிம்கள் ஒவ்வொரு நாளும் ஐந்து வேளையும் தொழுதுவர வேண்டியவர்களா யிருத்தலினால், அன்னவர்கள் எப்பொழுதுமே உடைப் பரிசுத்தத்துடனும், உடற் பரிசுத்தத்துடனும், உள்ளப் பரிசுத்தத்துடனுமேயே இருந்துவரக் கட்டுப்பட்டிருக்கிறார்கள். இஸ்லாத்தில் புறப்பரிசுத்தம் சாஸ்த்ரீய முறைப்படி அனுஷ்டிக்கப்பட வேண்டியிருத்தலினால், உள்ளப் பரிசுத்தம் உண்டாவதற்கு அஃதொரு முதற்படியா யிருக்கிறது; ஆகையால், உள்ளப் பரிசுத்தத்தை விழையும் ஒருவன் தனதுடையையும், உடம்பையும், இருப்பிடத்தையும் பரிசுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டியவனாகிறான். தர்மமும் தொழுகையைப்போலவே உள்ளப் பரிசுத்தத்தை உண்டுபண்ணக் கூடியதா யிருக்கிறது; சட்டவிரோதமான வழிகளால் சம்பாதிக்கப்படும் பொருளும் சட்டவிரோத முள்ளதாகவே இருந்து வருகின்ற படியால், அதனைக்கொண்டு உள்ளப் பரிசுத்தத்தை உண்டு பண்ணிக் கொள்வதென்பது சிறிதும் சாலாது; என்னெனின், அசுத்தத்தைக் கொண்டு ஆத்மாவைச் சுத்திகரித்துக் கொள்ளலா மென்பது கூடாத காரியமேயாம்.

3. அரபு மூலத்தில் கு'பு':த் க'ப'ாயி:த் என்னும் இரு சொற்கள் வழங்கப்பட்டுள்ளன. கு'பூ':த் என்பது க'பீ':த் (தீயவன்) என்பதன்

5. அனஸ் கூறியுள்ளார்: நபிகள் பெருமான் (சல்அ'ம்) ஜலமல விஸர்ஜனத்துக்குச் செல்லுங்கால், நானும் மற்றொரு பையனும் உடன் செல்வது வழக்கம்; எங்களுடனே ஒரு வாளியில் தண்ணீரும் அங்கே (கொண்டு செல்வது) இருக்கும்.[4]—(பு'க'ா. 4: 15)

6. அ'ப்'து'ல்லா(ஹ்) கூறினர்: நபிகள் திலகம் (சல்அ'ம்) மலங்கழிக்கச் சென்றூர்கள்; அதுபொழுது

---

பன்மைச்சொல்லா யிருக்கிறது; இன்னம், க'ப'ா'யி:த் என்பது க'பீ':தா (தீயவள்) என்பதன் பன்மைச்சொல்லா யிருக்கிறது. இச்சொற்கள் பொதுவாகப் "பைசாசங்க" ளென்றே கருத்துக்கொள்வ துண்டு; ஆனால், நிஹாயாவின் பிரகாரம் கு'பு':த் என்பதை கு'ப்'லெ:தன்றும் வாசிக்கலாம்; அப்பொழுது அதன் பொருள், "அசுத்தச் செயல்கள்" என்பதாயிருக்கும். க'ப'ாயி:த் என்னுஞ் சொல்லுக்குத் "தீயபழக்கங்கள்" என்றும் பொருள் கொள்ளலாம். ஆகவே, இவ்விடத்தில், வெளிப்படையான அசுத்தத்தினின்று அந்தரங்க அசுத்தத்தின் பக்கல் நமது கவனம் ஈர்க்கப்படுவதைக் கண்டு கொள்வீர்கள்.

4. வேறு 'ஹதீ':தில், கற்றுண்டுகள் சுத்தஞ் செய்வதற்கு உபயோகிக்கப்பட்டன வென்று கூறப்பட்டிருக்கிறது; ஆனால், தண்ணீர் கிடைக்கு மிடத்து, மண்கட்டியை அல்லது கற்றுண்டுகளைக் கொண்டு மலந்துடைத்துக் கொண்ட பிறகு அந்த நீரைக்கொண்டு அலம்பப்பட்டதும் உண்டென்று அறியக் கிடக்கின்றது. இவையெல்லாம் அத்தியாவசியத்திற்கு மேற்பட்ட நுணுக்க விவரங்களெனக் கருதப்படலாம்; ஆனால், பரிசுத்தத்திற் குரிய பழக்கவழக்கங்களை உண்டுபண்ணிக் கொள்ளுதற்கு மிகவும் நுணுக்கமான விவரங்களும் அத்தியாவசியமாகவே கருதப்பட்டு வருகின்றன. சிறுநீர் பெய்தபின்பும் தண்ணீர், அல்லது மண்கட்டி உபயோகிக்கப்பட்டு வந்திருக்கிறது.

என்னை நோக்கி மூன்று கற்(றுண்டு)களைக் கொண்டு வருமாறு ஏவினார்கள்.[5]—(பு'க'ா. 4: 21)

7. ஆ'யிஷா பிராட்டியார் கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) அறையலுற்றார்கள் :—

"உங்களிலொருவன் மலங்கழிக்கச் செல்லுங்கால், அன்னவன் தன்னைச் சுத்திசெய்து கொள்ளும் பொருட்டு மூன்று கற்(றுண்டு)களைத் தன்னுடனே கொண்டு செல்லக் கடவன்; என்னெனின், இவை அவனுக்குப் போதும்."—(அபூ'த'ா—மிஷ். 3: 2)

8. ஜாபி'ர் கூறினார்: நபிகணாதர் (சல்அ'ம்) மலங்கழிக்க வேண்டி யிருப்பின், அப் பெருமானார் தங்களை ஒருவரும் காணக்கூடாதமட்டில் (அத்துணை நெடுந்தூரம்) சென்று விடுவார்கள்.[6]—அபூ'த'ா—மிஷ். 3: 2)

---

5. இந்த 'ஹதீ':தும் அடுத்து வரும் 'ஹதீ':தும், கற்றுண்டுகளை (அல்லது மண்கட்டிகளை)க் கொண்டு மலத் துவாரத்தைத் துடைத்துப் பரிசுத்தம் பண்ணிக்கொள்வதைக் கூறுகின்றன. இற்றைநாளில் அதற்கென்று தையாரிக்கப்பட்டுள்ள "கக்கூஸ்தாள்"களையும் உபயோகித்துக்கொள்ளலாம்.

6. ஆகவே, மலங்கழிக்கச் செல்லும் மனிதன் மற்றவர்களால் காணக்கூடிய சமீபதூரத்திலே குந்துவது கூடாது. அஃதாவது, திறந்த இடங்களுக்குச் செல்வோருக்கு இவ்விதி கூறப்பட்டிருக்கிறது; இக்காலத்தில் கக்கூஸ்களைக் கட்டும்பொழுதும் மற்றவர்கள் காணக்கூடாத முறையிலேதான் மறைவாகக்கட்டி முடித்தல் வேண்டும். ஏககாலத்தில் பலமனிதர்கள் ஒன்றாய்க் குந்துவதும், அவ்வாறு குந்தக்கூடிய முறையிலே கக்கூஸ்கள் கட்டுவதும் லஜ்ஜையற்ற காரியங்களேயாம். இது பெண்களுக்கும் ஒக்கும்.

9. அபூ' மூஸா கூறியுள்ளார்: நபிகளுயகர் (சல்அ'ம்) நவின்றருளினர்கள் :—

"உங்களிலொருவன் சிறுநீர்விட நாடுவாளுயின், அன்னவன் அச் சிறுநீர் பெய்தற்குரிய சரியான இடத்தைத் தேடிக் கொள்ளட்டும்."[7]—(அபூ'த'ா—மிஷ். 3: 2)

10. ஆ'யிஷா பிராட்டியார் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதரின் (சல்அ'ம்) வலக்கரம் அன்னவர் வுலூ' செய்வதற்கும், உண்டியருந்துவதற்கும் உ'தவும். ஆனல், அவர்களுடைய இடக்கரம் மலவிஸர்ஜனத்[8]துக்குப் பின்னே தங்களைச் சுத்தஞ் செய்து கொள்ளவும், அசுசியான வஸ்துக்களை அப்புறப் படுத்தவும் உதவும்.—(அபூ'த'ா—மிஷ். 3: 2)

11. மூஆ''து கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

---

7. சிறுநீர் பெய்வதற்கு உரிய முறையிலே ஒழுங்காகச் சிற்றறைகள் தனித்தனியே கட்டப்படுதல் வேண்டும்; அல்லது திறந்த இடமாயின், மற்றவருக்குத் தெரியக்கூடிய, அல்லது அருவருப்பைத் தரக்கூடிய இடத்திலே குந்திச் சிறுநீர்பெய்வது கூடாது. மஸ்ஜிதைச் சுற்றியே மலஜலம் கழிப்பவர்கள் இதனைக் கருதிப் பாரார்களா?

8. வலக்கரத்தின் பெருமை இவ்வாறிருக்க, இக்கால நவநாகரிகத்துள் மூழ்கித்திளைப்பதாய்த் தங்களைக் கருதிக் கொள்ளும் ஒருசிலர் இடக்கரத்தினலே ஏதொன்றையும் எடுத்துப் புசிக்கக் கற்றுக்கொண்டுவிட்டார்கள். இடக்கரம் எதற்குதவுகிறதென்பதை இந்திய ரனைவரும் நன்குணர்ந்தேயிருக்கின்றனர். எம்பெருமானரும் இதனை உணர்ந்தே நன்கெடுத்து உதஹரித்துள்ளார்கள்.

"சாபக்கேடான மூன்று காரியங்களை விட்டுத் தவிர்ந்து கொள்ளக் கடவீர்கள்: (அவை) நீரூற்றுக் களுக் கருகிலேயும், ரஸ்தாக்கள்மீதும், (மனிதர்கள் குந்த உதவு மரத்தின்) நிழலுக்குக் கீழேயும் ஜலமல விஸர்ஜனம் செய்வதாகும்."[9]—(அபூ'த'ா—மிஷ். 3:2).

12. 'ஹு'தய்'பா கூறியுள்ளார்: நானும் நபிகள் திலகமும் (ஸல்அ'ம்) ஒன்றாய்ச் சென்று கொண்டிருந்ததைக் கண்டேன். அதுபொழுது ஒரு சுவருக்குப் பின்னே பொதுஜனங்கள் போட்டு வைத் திருந்த குப்பை மேட்டுக்கு அவர்கள் சென்றார்கள்; அப்பால் உங்களிலொருவர் நிற்பதேபோல் அவர்கள் நின்றுகொண்டு, பின்பு சிறுநீர் பெய்தார்கள்.[10]—(பு'க'ா. 4: 61)

13. அபூ' ஹுரய்ரா கூறினர்: நபிகள் நாயகம் (ஸல்அ'ம்) கக்கூஸுக்குச் சென்றபொழுது, நான் அவர்களுக்கு ஒரு சிறிய பாத்திரத்திலோ, அல்லது

---

9. இதனால், பொதுஜன செளகரியமும், பொதியில்களும்—(பொதுமன்றங்களும்) தண்ணீர்த் துறைகளும அசுசியாகாது எவ்வாறு பாதுகாக்கப்பட வேண்டுமென்பதும் சர்வஜாக்கிரதை யுடனே கவனிக்கப்பட வேண்டுமென்பது விளக்கமாகின்றது. குடிதண்ணீர்க் குளத்தை, அல்லது குளிக்குங் குளத்தைச் சுற்றிக் கரைகள்மீது குந்தி ஜலமலம் கழிக்கும் பழக்கமுடையவர்கள் இதனைச் சிறிது சிந்தித்துப்பார்க்க மாட்டார்களா? ஐயகோ! ஆபாசமே!!

10. இந்த 'ஹதீ':தால், ஆடைகளிலேனும் மேனியிலேனும் ஒரு சிறிதும் மூத்திரம் தெறிக்காமல், நின்ற நிலையில் சிறுநீர் பெய்வது தடுக்கப்பட்டில்லை யென்பது அறியக் கிடக்கின்றது என்று இமாம் பு'க'ாரீ இதனை எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

தோற் பையிலோ தண்ணீர் கொண்டு வந்தேன்; அப்பொழுது அப்பெருமானர் (கால்கழுவிச்) சுத்தஞ் செய்துகொள்ள அத்தண்ணீரை உபயோகித்தார்கள்; பிறகு தங்கள் (இடக்)கரத்தைத் தரையில் தேய்த்தார்கள்; [11] அப்பால் நான் அவர்களுக்கு (அப்பாத்திரத்தில்) மறுமுறையும் தண்ணீர் கொண்டுவந்தேன்; பின்னர் அவர்கள் வுழூ' செய்துகொண்டார்கள்.—(அபூ'த'ா—மிஷ். 3 : 2)

14. ஆ'யிஷா பிராட்டியார் கூறினர்: நபிகணயகர் (சல்அ'ம்) கக்கூஸை விட்டு வெளியில் வருங்கால், (இவ்வாறு) சொல்வார்கள் :—

"நான் உனது பாதுகாவலைத் தேடுகிறேன்."—(திர்மி—மிஷ். 3 : 2)

15. அனஸ் கூறினர்: நபிகணதர் (சல்அ'ம்) கக்கூஸை விட்டு வெளியில் வருங்கால், (இவ்வாறு) சொல்வார்கள் :—

"என்னைவிட்டு இன்னல்தரும் அசுசியை நீக்கியும் ஆரோக்கியத்தை அளித்துமுள்ள அல்லா(ஹ்)வுக்கே எல்லாப் புகழும்.[11]—(இப்'னுமா—மிஷ். 3 : 2)

16. அனஸ் கூறினர்: நபிகணயகர் (சல்அ'ம்)

---

11. நீரைவார்த்து மலங்கழுவிக் கொண்ட பிறகு, ஏதேனும் அசுசி இடக்கரத்தில் ஒட்டியிருக்கக் கூடுமென்றே அவ்வாறு தரையில் தேய்க்கப்பட்டது என்க. சவர்க்காரத்தையும் (ஸோப்பை) இதற்காக உபயோகிக்கலாம். மலத்தைச் சுத்தமாய்த் துடைத்து, தண்ணீர்கொண்டு நன்றாய்க் கழுவிக் கையையும் தேய்த்துக் கழுவவேண்டும் என்க. கெட்ட வீச்சம் கூடாது.

தங்கள் ஆடையொன்றிலே துப்பிக்கொண்டார்கள்.[12] —(பு'க'ா. 4 : 70)

17. அனஸ் (இவ்வாறு) கூறியுள்ளார்: நபிகள் திலகம் (சல்அ'ம்) (மஸ்ஜிதி'ன் முன்சுவரின்) முன்பிலே சளியைக் கண்டார்கள்; அதுபொழுது அவர்களுக்கு அஃது எத்துணை மனவேதனையை அளித்துவிட்ட தென்றால், அதன் (அறிகுறி) அவர்களது திருவதனத்திலே காணப்படலாயிற்று........

பின்பு அப்பெருமானர் தங்கள் மேலாடையின் மூலையொன்றை யெடுத்து, அதில் துப்பி, அப்பால் அதன் ஒரு பகுதியை மற்றொரு பகுதியின்மீது வைத்தும் தேய்த்தார்கள்; மேலும், சொன்னர்கள் :—

"அதைவிட ஒருவன் இதுபோற் செய்யட்டுமே." [13]—(பு'க'ா. 8 : 33)

---

12. பிறமனிதர்கள் பலர் குந்தியிருந்த பொது இடமாக அஃது இருந்திருத்தல் வேண்டுமென்பது வெளிப்படையா யறியக் கிடக்கிறது. எனவே, நபிபெருமானர் அவ்வாறு தங்கள் அங்க வஸ்திரத்திலே (கையுருமாலில்) துப்பியது கொண்டு பகிரங்க ஸ்தலங்களிலே தரையில் எச்சில் துப்புவது கூடாதென அறிவித்திருக்கிருர்கள் என்பது வெள்ளிடைமலை.

13. தொழுகையி லிருக்குங்கால், சளியோ எச்சிலோ, சிந்தவோ துப்பவோ அவசியம் நேர்ந்துவிடின், பள்ளிவாசலின் சுவரிலோ சாளரங்களிலோ அதனைச் சிந்தி அல்லது துப்பி அசுசி செய்வதைப் பார்க்கினும் கையுருமாலில் சிந்தி, அல்லது துப்பிக் கொள்வது சாலச்சிறந்ததா யிருக்கிறது என்றறிக. "சுத்தமே சோறு போடும்."

## பகுதி 2—பற்கொம்பிடுதல்

18. *நபிகள் திலகத்தின் (சல்அ'ம்) ஆதாரத்தைக்கொண்டு ஆ'யிஷா பிராட்டியார் கூறினர் :—*

"*மிஸ்வாக் (செய்வது) வாயைச் சுத்தம் செய்கிறது ; மேலும், அது ரக்ஷகனது பொருத்தத்தைப் பெற்றுக்கொள்ள வழியாகவும் இருக்கிறது.*" [14]—(பு'க'ா. 30 : 27)

19. *நபிகள் திலகத்தின் (சல்அ'ம்) ஆதாரத்தைக்கொண்டு அபூ' ஹுரய்ரா கூறினர் :—*

"*என்னைப் பின்பற்றுவோர்கள் மீது தாங்க முடியாதசுமையை நான் சுமத்திவிடக் கூடுமென்பது இல்லா திருக்கின், ஒவ்வோர் வுழூ'வின் போதும் மிஸ்வாக்கை உபயோகுக்குமாறு அவர்களுக்கு நான் கட்டளையிட் டிருப்பேன்.*"—(பு'க'ா. 30 : 27)

20. *அனஸ் கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—*

"*நான் உங்களுக்கு மிஸ்வாக் (செய்வது) குறித்து அதிகமே கூறியிருக்கின்றேன்.*" —(பு'க'ா. 11 : 8)

---

14. *புறப்பரிசுத்தத்தைப் பேணிக்கொள்வதும் அல்லா(ஹ்)வின் திருப்தியை அடையப்பெறக் கூடியதாயே யிருக்கிறதென்றும், புறத்திலே அசுத்தமா யிருப்பது அவனுக்கு அருவருப்பையே அளிக்கவல்லதா யிருக்கிறதென்றும் நபிகள் திலகம் 'இந்த 'ஹதீ':தின் வாயிலாய் அறிவுறுத்தி யுள்ளார்கள். மேலும், தந்தத்தின் சுத்தமே சரீர சுகத்துக்கு அவசியமா யிருக்கிறதென்றும், அதன் ஊத்தை அசுத்தமே சகல வியாதிகளுக்கும் மூலகாரணமா யிருக்கிற தென்றும் ஆயுர்வேதம் அறைந்து கொண் டிருக்கிறது. "நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்."*

21. 'ஹு'தய்'பா கூறினர்: நபிகள் திலகம் (சல்அ'ம்) நள்ளிரவில் ('தஹஜ்ஜுத்' தொழ) எழுந்திருக்கும் பொழுது தங்கள் வாயை மிஸ்வாக்கைக் கொண்டு சுத்தம்செய்யும் வழக்கத்தை வைத்துக் கொண் டிருந்தார்கள்.—(பு'க'ா. 4:73)

22. ஆ'யிஷா பிராட்டியார் கூறினர்: நபிகள் திலகம் (சல்அ'ம்) இரவிலோ பகலிலோ, உறங்கி விழித்த பின்பு, அவர்கள் வுழூ' செய்துகொள்ளு முன்னே மிஸ்வாக்கை உபயோகிக்காது ஒருபொழுதும் இருந்ததில்லை.[15] —(அபூ'த'ா—மிஷ். 3:3)

## பகுதி 3—அர்த்தஸ்ஞனம் (வுழூ)

23. ஷுரய் 'ஹிப்'னு ஹானீ கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) தங்கள் இல்லத்தி னுள்ளே நுழையும்பொழுது, அப்பெருமானர் செய்யும் முதற்காரியம் யாது? என்று நான் ஆ'யிஷா பிராட்டியாரைக் கேட்டேன்.

15. உறங்கிவிழித்த பின்னுல் மிஸ்வாக் செய்வது (அல்லது பல்பிரஷ் உபயோகிப்பது) அத்தியாவசியமேயாம்; என்னெனின், அயர்ந் துறங்குங்கால் வாயினுள்ளே காற்றும் வெளிச்சமும் நுழைய இடமில்லாது தடுக்கப்பட்டுப் போய்விடுகின்றன; இன்னம், தந்தபந்தியின் இடுக்கிலே சேரும் அசுத்தமும் விலக்கப்படல் வேண்டும். இக் காரணத்தினுலேதான் ஒவ்வோர் ஆகாரத்தின் பிறகும், குறைந்த பக்ஷம் இராப் போஜனத்திற்குப் பிறகேனும் பல்விடுக்குக்களைக் குத்தி, அங்குள்ள துண்டு துணுக்குக்களையெல்லாம் அப்புறப்படுத்திவிட்டுப் பல்பிரஷ் கொண்டு தந்தசுத்தி செய்துகொள்ள வேண்டுமென்று பல்வைத்திய சாஸ்திரமும் பகர்கின்றது. தந்த சுத்தியே தேக சுகத்திற்கு வழிகோலுகின்றது.

மிஸ்வாக் செய்வதுதான் என்று அம்மாதரசி கூறினர்.—(முஸ்—மிஷ். 3 : 3)

24. ஸஈ’ தி’ப்’னு ‘ஜய்த்’ சொல்லலுற்றார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்ஞர்கள்:—

“வுஹூ செய்வதில் அல்லா(ஹ்)வை நினைவில் வைத்துக் கொள்ளாத மனிதன் அதனைச் செய்து முடித்தவனாகமாட்டான்.”[16]—(திர்மி—மிஷ். 3 : 4)

25. ய‘ஹ்யல் மா‘ஜினீ (இவ்வாறு) கூறியிருக்கின்றார்:

‘அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) எவ்வாறு வுஹூ' செய்தார்களென்று நீ எனக்குக் காண்பிக்க

---

16. வுஹூ' வென்பதென்ன? சாதாரணமாய் எப்பொழுதும் திறந்திருப்பனவும், சர்வசாதாரணமாய்த் தூசி அல்லது புழுதி படியக்கூடியனவுமா யுள்ள புற உறுப்புக்களைக் கழுவிச் சுத்தி செய்து கொள்வதே இந்த அர்த்தஸ்னமாயிருக்கிறது; அல்லா(ஹ்)வின் திருமுன்பினில் செல்வதற்கு (தொழுகைக்கு) இப் புறப் பரிசுத்தம் அத்தியாவசியமா யிருந்துவருகிறது. எனவே, வுஹூ' செய்துகொள்வதால், ஒருவன் புறப்பரிசுத்தத்தை யடைகிறான்; அல்லா(ஹ்)வின் திருச் சன்னிதானத்திற்குச் செல்ல வேண்டிய பரிசுத்தத்தை யடைந்து கொண்டா னென்னும் சாந்தியையும் பெற்றுக் கொள்கிறான் என்னும் இருவித நோக்கங்கள் பூர்த்தி யடைகின்றன. இதற்கு அல்லா(ஹ்)வின் ஞாபகம் அவசியம் வேண்டப்படுகின்றது; எனவேதான், அல்லா(ஹ்)வின் ஞாபகமில்லாது செய்யப்படும் வுஹூ' பூர்த்தியாவதில்லையென்று பொதுப்படையாய் இந்த ‘ஹதீ':தின் வசனங்கள் வியாக்கியானம் செய்யப்பெற்று வருகின்றன. முஸ்லிம்கள் எல்லா முக்கிய காரியங்களையும் தொடங்கும்பொழுது சொல்லியாரம்பிக்கும் பி’ஸ்மில்லா(ஹ்) “அல்லா(ஹ்)வின் திருநாமத்தைக் கொண்டு”—என்பதையே கூறியாரம்பித்தல் வேண்டும் இந்த வுஹூ'விலுங்கூட.

மாட்டாயா?' என்று ஒரு மனிதன் அ'ப்'து'ல்லா ஹிப்'னு 'ஜய்தை' வினவினன். (அதற்கு) அ'ப்'து'ல்லா ஹிப்'னு 'ஜய்த்' காண்பிக்கிறேனென்று கூறினர். ஆகையால், அன்னவர் தண்ணீரைத் தருவித்து, அதனைத் தம்முடைய கைகளின்மீது வார்த்து, அவருடைய கரங்களை (மணிக்கட்டுவரை) இருமுறை கழுவியுங் கொண்டார். பிறகு அவர் தமது வாயைக் கொப்புளித்துத் தம்முடைய நாசிக்குள்ளே மூன்றுமுறை தண்ணீரைச் செலுத்தியும் சிந்தினர்; பின்பு தமது வதனத்தை மூன்றுமுறை கழுவிக் கொண்டார்; பிறகு தம்முடைய (முன்) கைகளை முழங்கைவரை இருமுறை கழுவினர்; பின்பு தமது சிரத்தைத் தம்முடைய இரு (உள்ளங்) கைகளையுங் கொண்டு துடைத்துக் கொண்டார்; ஆகையால், அவர் அக் கைகளை(ச் சிரத்தின்) முன்புறத்திலிருந்து (பின்புறம்வரை) தடவிக்கொண்டு சென்று, அவற்றினைத் திருப்பியுங் கொணர்ந்தார்;—அவர் தமது நெற்றியிலிருந்து ஆரம்பித்துப் பிடரிவரை அவற்றினைக் கொண்டு சென்றார்; பிறகு அவர் அவைகளைத் தாம் முதலில் தொடங்கிய இடத்திற்கே திருப்பிக்கொண்டுவந்து சேர்த்தார்;—பிறகு அன்னவர் தம்மிரு பாதங்களையும் கழுவிக் கொண்டார்.—(பு'க'ா. 4:38)

26. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினர்: நபிபெருமான் (சல்அ'ம்) (ஓரோர் அவயவத்தையும்) ஒருமுறை கழுவியே வுழூ' செய்துகொண்டார்கள்.—(பு'க'ா. 4:22)

27. அ’ப்’து’ல்லா ஹிப்’னு ‘ஜய்த்’ கூறியுள்ளார்: நபிபெருமான் (சல்அ’ம்) (ஓரோர் அவயவத்தையும்) இருமுறையே கழுவி வுலூ’ செய்து கொண்டார்கள்.—(பு’க’ா. 4 : 23)

28. உ’:துமான் (ரலி’) அவர்களைக் குறித்து (இவ்வாறு) ஒரு செய்தி சொல்லப்படுகிறது :

அவர்கள் ம:காஇ’தி’ல் வுலூ’ செய்தார்கள்; இன்னம், ‘அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) அவர்களின் வுலூ’வை நான் உங்களுக்குக் காண்பிக்க வேண்டாமா?’’ என்று சொன்னர்கள்; பிறகு அவர்கள் (ஓரோர் அவயவத்தையும்) மூன்றுமுறை கழுவி வுலூ’ செய்தார்கள்.[17]—(முஸ்—மிஷ். 3 : 4)

29. ஆ’யிஷா பிராட்டியார் (ரலி’) கூறினர் : நபிகள்திலகம் (சல்அ’ம்) தங்கள் பாதரக்ஷைகளை மாட்டும் பொழுதும், தங்கள் கேசத்தை வாரிக்கொள்ளும் பொழுதும், தங்கள் வுலூ’வைச் செய்து கொள்ளும் பொழுதும், (உண்மையிலே) அவர்களுடைய எல்லாக் காரியங்களிலும் வலப்புறத்தி

---

17. இக் காரியங்களில் அக்காலத்தில் அதிகமான சுதந்தரம் அளிக்கப்பட் டிருந்த தென்று இதன் சார்பாயுள்ள பற்பல ‘ஹதீ’:துகளிலிருந்து அறியக்கிடக்கின்றது. வுலூ’ செய்யுங்கால், அப் புறவுறுப்புக்களை ஒரே முறை கழுவுவதே சில சமயங்களில் போதுமானதாயிருக்கும்; வேறு சில வேளைகளில் இரண்டுமூன்று முறையும் கழுவத்தேவைப்படலாம். ஆதலால், அப்பொழுது உசிதம்போலே செய்துவந்தார்கள். ம:காஇ’த்’ என்பது மதீனவிலுள்ள ஓரிடமென்று இப்’னு ‘ஹஜர் இயம்பியிருக்கின்ருர்; மற்றும் பலர், ஜனங்கள் குழுமி யமரக்கூடிய மன்றமென்று அதற்குப் பொருள் கூறியுள்ளார்கள்.

னின்று ஆரம்பிப்பதையே உவந்திருந்தார்கள்.—(பு'க'ா. 4 : 31)

30. அபூ'ஹுரய்ரா கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர்(சல்அ'ம்) சொன்னார்கள் :—

"நீங்கள் ஆடையணியும் பொழுதும், நீங்கள் வுஹூ' செய்துகொள்ளும் பொழுதும் வலப்பக்கத்தினின்றே தொடங்கக் கடவீர்கள்."[18]—(அபூ'த'ா—மிஷ். 3 : 4)

31. இப்'னு அ'ப்'ப'ாஸ் (ரலி') கூறியுள்ளார் : நபிகள்நாயகம்(சல்அ'ம்) தங்கள் சிரத்தையும், தங்களுடைய இரு காதுகளையுங் கூட, அவற்றின் உட்புறங்களைத் தங்கள் இரு ஆட்காட்டி விரல்களைக் கொண்டும், அவற்றின் வெளிப்புறங்களைத் தங்களிரு பெருவிரல்களைக் கொண்டும் துடைத்துக் கொண்டார்கள்.[19]—(நஸா—மிஷ். 3 : 4)

32. அ'ம்ரிப்'னு உ'மய்யா கூறினர்: நபிகளுதர்(சல்அ'ம்) தங்கள் கைகளைத் தங்கள் தலைப்

---

18. வுஹூ' செய்யத் தொடங்குங்கால், வலப்புறங்களையே முதலில் கழுவிக்கொள்ளல் அவசியமாம்; இடப்புறம் இரண்டாவதாய்க் கழுவப்படல் வேண்டும். உண்பதிலும், உடுப்பதிலும், சீவிச் சிக்கறுப்பதிலும், செருப்பை யணிவதிலும், ஏனை எல்லாக் காரியங்களிலும் எம்பெருமானுர் வலப்புறமிருந்தே ஆரம்பம் செய்வது வழக்கமென அறியக்கிடக்கிறது. எனவே, வுஹூ'வின் இறுதியில் பாதங்களை யலம்பும்பொழுதும் வலக்காலை முன்னும், இடக்காலைப் பின்னுமே கழுவுதல் முறையாம்.

19. எனவே, சிரத்துக்குரிய முழு மஸ்'ஹ்—(துடைத்துக் கொள்வது) என்பது, செவிகளின் உட்புறம் வெளிப்புறம் ஆகிய இருபுறங்களையும் சேர்த்துத் துடைத்துக்கொள்வதா யிருக்கிறது.

பாகையின் மீதும், தங்களுடைய பாதகவசங்கள் மீதும் தடவிக்கொண்டார்கள்.—(பு’க’ா. 4 : 48)

33. மு:ஙீரா கூறினர்: நான் ஒரு பிரயாணத்தில் நபிகள் நாயகத்துடனே (சல்அ’ம்) இருந்தேன்; அப்பொழுது நான் அவர்களுடைய பாதகவசங்களை—(மோ‘ஜாவை)க் கழற்றக் குனிந்தேன்; ஆனல், “அவற்றைச் சும்மா விட்டு விடும்; ஏனென்றால், பரிசுத்தமான நிலையிலேயே நான் அவற்றை அணிந்து கொண்டேன்,”[20] என்று அவர்கள் சொன்னர்கள்; பிறகு அப்பெருமானர் தங்கள் கைகளை அவ்விரண்டன் மீதும் தடவிக் கொண்டார்கள்.—(பு’க’ா. 4 : 49)

---

20. :தாஹிர(த்)தய்ன்—(இரண்டும் பரிசுத்தமாயிருத்தல்) என்னுஞ்சொல்லே அரபுமூலத்தில் வழங்கப்பட்டிருக்கிறது. இங்கு இரண்டென்பது இருபாதங்களையும் குறிக்கும்; அஃதாவது, வுலூ’ செய்துகொண்டிருந்த நிலையிலேதான் நபிபெருமான் தங்கள் பாதகவசங்களை அணிந்துகொண் டிருந்தார்களென்றே பொதுப்படையாய் இதற்கு வியாக்கியானம் செய்யப்படுகிறது. அடுத்துவரும் ‘ஹதீ’:தில் காலுறைகளும் இவ்வாறே மஸ்’ஹ் செய்யப்பட்டனவென்று கூறப்பட்டுள்ளது; அஃதாவது, வுலூ’வுட னிருந்து, பாதகவசங்களும், பாத உறைகளும் அணியப்பட்டால், அப்பால் வுலூ’ செய்யப்பட நேருங்கால், அவற்றின்மீது ஈரக்கைகளைக் கொண்டு மஸ்’ஹ் செய்வதே போதும். பிரயாணஞ் செல்லாது ஊரிலிருப்பவன் அவ்வாறு ஓரிரவும் பகலும் அவற்றைக் கழற்றாது மஸ்’ஹ் செய்து கொள்ளலாம்; அஃதாவது, 24 மணி நேரத்திற்கொருமுறை அவசியமாக அவற்றினைக் கழற்றிப் பாதங்களைக் கழுவிக்கொள்ளுதல் வேண்டும்; ஆனல், பிரயாணத்திலிருப்பவன் மூன்றுபகல் மூன்றிரவுகள் மட்டும் பாத கவசங்களையும் பாத உறைகளையும் கழற்றாமலே மஸ்’ஹ் செய்து கொள்ளலாம் ‘ஹதீ’. 35 நோக்க.

34. மு'கீரா சொன்னார்: நபிகள் திலகம் (சல்அ'ம்) வுலூ' செய்தார்கள்; மேலும், தங்கள் கைகளைக் காலுறைகள்மீதும் பாதரக்ஷை கள்மீதும் தடவிக் கொண்டார்கள்.—(அபூ'த'ா—மிஷ். 3 : 9)

35. நபிகள் திலகத்தின் (சல்அ'ம்) ஆதாரத் தைக்கொண்டு அபூ'ப'க்ரா கூறினர்:

ஒருவன் பாத கவசங்களைப் பரிசுத்தமான நிலையிலிருந்து அணிந்துகொள்ளும்பொழுது, அவன் பிரயாணத்தி லிருந்தால் மூன்று பகல்களும் மூன் றிரவுகளும், அவன் பிரயாணத்தி லில்லாதிருந்தால் ஒரு பகலும் ஓரிரவும் (பாதங்களைக் கழுவிக் கொள்ளாமலே) தன்னுடைய பாத கவசங்கள்மீது துடைத்துக்கொள்ள அப் பெருமானர் அனுமதி யளித்தார்கள்.—(த'ார்—மிஷ். 3 : 9)

36. அபூ' ஹுரய்ரா கூறினர்: அல்லா(ஹ்) வின் திருத்தூதர்(சல்அ'ம்) சொன்னர்கள் :—

"வாயு (அல்லது சிறுதுடக்குப்) பறியவிட்ட மனிதன்[21] வுலூ' செய்துகொள்ளுமட்டில் அவனது

21. அரபு மூலத்தில் காணப்படும் அ'ஹ்த'த் என்னுஞ் சொல், "அவனொரு காரியத்தைச் செய்தான், அல்லது ஏற்படுத்தி னன்," என்று அசலில் பொருள் படுகின்றது; அஃதாவது, சமயப் பரிபாஷையில் "மலங் கழித்தல்" என்று கருத்துக் கொள்ளப்படுகிறது. 'ஹத'த்' என்பதென்ன வென்று அபூ'ஹுரய் ராவை வினவியபொழுது, அவர், "வாயு பறியவிடல்" என்றே சாதாரணமாய்க் கூறிவிட்டார்; ஆனல், அது, மூத்திரம் மலம் வாயு ஆகியவற்றை வெளிப்படுத்துவதைச் சுட்டிக் காட்டுகின்றது. இதனுடனே அயர்ந்த நித்திரையையும் ('ஹதீ'. 39) வாந்தி.

தொழுகை அங்கீகரிக்கப்பட மாட்டாது.”—(பு’க’ா. 4 : 2)

37. அனஸ் கூறினர்: நபிகள் திலகம்(சல்அ’ம்) ஒவ்வொரு தொழுகையின்பொழுதும் வுலூ’ செய்து கொள்வார்கள். (அவர்களுடைய சிஷ்யனுயிருந்த) யான், ‘தாங்கள் (ஏன்) இவ்வாறு (அடிக்கடி) நடந்து கொள்கிறீர்கள்?’ என்று வினவினேன்; (இதற்கு) அவர்கள் சொன்னர்கள்: “நம்மி லொருவனுக்கு, அவன் எதையேனும் பறிய விட்டாலன்றி, ஒரு வுலூ’வே போதும்.”—(பு’க’ா. 4 : 55)

38. அனஸ் கூறினர்: நபிகள் திலகத்தின்

---

யெடுத்தலையும் (‘ஹதீ’. 40) சேர்த்துக் கொள்க. வாந்தி விஷயத்தில் அபிப்பிராயபேதம் இருந்தே வருகிறது; ஆனல், அயர்ந்த உறக்கத்தில் ஒருவனுக்கு வாயு பறிந்ததா இல்லையா வென்பது தெரியமாட்டா தாதலின், புதிதாக வுலூ’ செய்ய வேண்டுவது அத்தியாவசியமாய் விடுகிறது. எனினும், இமாம் பு’க’ாரீ மக்’ரஜைன் என்னப்படும் (ஜலமலவிசர்ஜனத்துக்குரிய) இரு துவாரவழியே ஏதேனும் வெளிப்பட்டால் மட்டுமே வுலூ’செய்து கொள்ளவேண்டிய அவசியம் ஏற்பட்டுவிடுகிற தென்று மிகத் தெளிவாய் விளக்கி யுள்ளார்கள். ஆகையால், அவர்களது அபிப்பிராயப்படி காயங்களினின்று உதிரம் வடிவதும், வாயில் இரத்தம்ஊறித் துப்புவதும் புதிய வுலூ’வுக்குரிய அவசியத்தை உண்டுபண்ணுவனவா யில்லை. ஒருவன் பாதகவசங்களின் மீதே னும் காலுறைகளின் மீதேனும் மஸ்’ஹ் செய்து வுலூ’செய்து கொண்டதன்பின்னல், அவற்றைக் கழற்றிவிட்டால், புதிய வுலூ’ செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டுவிடுவதில்லை (‘ஹதீ’. 32, 34). ஆகாரம் செய்துகொள்வதாலோ பாலருந்துவதாலோ புதிய வுலூ’ செய்துகொள்ளவேண்டிய அவசியமில்லை (பு’க’ா. சுருக். 28 : 21); ஆனல், வாயைக் கொப்புளிப்பது அவ்விரு சமயங் களிலும் அவசியமாகிறது (பு’க’ா. 4 : 50, 51, 52).

(சல்அ'ம்) தோழர்கள் இரா(இ'ஷா)த் தொழுகைக் காகத் தங்கள் சிரங்கள் (தூக்க மயக்கத்தால்) ஆடிவிழுகிறமட்டிலே காத்துக்கொண்டிருப்பார்கள்; பிறகு அவர்கள் தங்கள் தொழுகைகளைத் தொழுது கொள்வார்கள்; ஆயின், (புதிதாக) வுலூ' செய்து கொள்வ தில்லை.—(அபூ'த'ா—மிஷ். 3 : 1)

39. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினர்: அல்லா(ஹ்) வின் திருத்தூதர்(சல்அ'ம்) சொன்னர்கள்:—

"சாய்ந்துகொண்டு உறங்குகிறவனுக்கு வுலூ' அவசியமாய் விடுகிறது; என்னெனின், அன்னவன் சாய்ந்து கொள்ளுங்கால், அவனுடைய பூட்டுக்கள் நெகிழ்ந்து விடுகின்றன."[22]—(திர்மி—மிஷ். 3 : 1)

---

இன்னம், வேறுசில சமயங்களில் வுலூ' செய்துகொள்ள வேண்டிய அவசியங் குறித்துள்ள சிற்சில 'ஹதீ':துகள் காணப் படாது போகவில்லை. உதாரணமாக, ஒருவன் தன் மனைவியை முத்தியிட்டு விட்டால், வுலூ' செய்துகொள்ள வேண்டுமென்று கூறும் 'ஹதீ'தொன்று எடுத்தோதப்படுகிறது; ஆனால், வேறு சில 'ஹதீ':துகள் அதை மறுத்துக் கூறுகின்றன. முன்பின் துவாரங்கள் வழியே ஏதேனும் வெளிப்படுங்காலே புதிய வுலூ' செய்துகொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டு விடுகிறதென்று இமாம் பு'க'ாரீ இயம்பியுள்ள சட்டமொன்றே புத்திசாலித்தன மான விதியா யிருந்துவருகிறது; இவ்விதிக்கு விலக்கு வாந்தி யெடுத்தலும், அயர்ந்துறங்குவதுமாயே யிருந்துவருகின்றன.

22. ஒருவன் சாய்ந்துகொண் டுறங்கினல், அவனுடைய பூட்டுக்கள் நெகிழ்ச்சியடைந்து விடுமாதலின், அவனது ஆழிய தூக்க மயக்கத்தினல் வாயுபறிவது தெரியாது போய்விடலாம். ஆகவே, வுலூ' முறியவில்லை யென்னும் நிச்சயபுத்தி அவனுக்கு இருக்கமாட்டா தாதலின், அன்னவன் புதிய வுலூ' செய்து கொள்ள வேண்டுவது அத்தியாவசியமாய் விடுகிறது.

40. அபு’த்’த’ர்த’ா கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) வாந்தியெடுத்தார்கள்; பிறகு வுலூ’ செய்து கொண்டார்கள்.—(‘திர்மி. 1 : 64)

41. இப்’னு உ’மரைக் குறித்து (இவ்வாறு) சொல்லப்படுகிறது: அவர் (தம்முடைய ஏனை உறுப்புக்களைக்) கழுவிக்கொண்ட தண்ணீர் உலர்ந்த பிறகு தம்முடைய பாதங்களைக் கழுவிக் கொண்டார்.[23]—(பு’க’ா. 5 : 10)

42. உ’மர்(ரலி’) கூறினார்கள்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர்(சல்அ’ம்) சொன்னார்கள்:—

“எவனொருவன் வுலூ’ செய்து கொண்டு, இன்னம் அதனைச் செவ்வையாச் செய்துகொண்டு, பிறகு, ‘அல்லா(ஹ்)வைத் தவிர்த்து வணக்கத்திற்கு உரியவன் (வேறெவனும்) இல்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு இணை எவனுமில்லையென்றும், மு‘ஹம்மத்’ அவனுடைய அடியவரும் அவனுடைய தூதருமா யிருக்கிறாரென்றும் நான் சாக்ஷி சொல்கிறேன்; ஏ அல்லா(ஹ்)! உன்பால் மீட்டும் மீட்டும் திரும்புகிறவர்களுடனே என்னைச் சேர்த்துவைக்கக் கடவாய்; இன்னம், தங்களைப் பரிசுத்தமாக்கிக் கொள்கிறவர்களுடனேயும் என்னைச் சேர்த்து வைக்கக் கடவாய்,’ என்று கூறுகிறானோ, அவனுக்

23. வுலூ’ செய்தலென்னும் தொழில் தொடர்ந்து நடந்து வருவதா யிருப்பின், சிற்சில அவயவங்களைக் கழுவுங்கால், இடையில் சிறிது அவகாசம் நேரிட்டுவிடுவதால் குற்றமொன்றும் ஏற்பட்டுவிட மாட்டாதென்க.

குச் சுவர்க்கத்தின் எட்டு வாயில்களும் திறக்கப் பட் டிருக்கின்றன; அன்னவன் அவற்றினின்று தனக்கிஷ்டமான எந்தவழியாலும் அதனுள்ளே நுழைந்து கொள்கிறான்."—(திர்மி. 1 : 42)

## பகுதி 4—ஸ்னானம்

43. அ'ப்'து'ல்லா ஹிப்'னு உ'மர் கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள்:—

"உங்களிலொருவன் வெள்ளிக்கிழமைக் கூட்டத்திற்கு—(ஜு—மு ஆ'வுக்கு) வரும்பொழுது, அவன் ஸ்னானம் செய்துகொள்ள வேண்டும்."—(பு'க'ா. 11 : 2)

44. அ'ம் ரிப்'னு ஸு—லய்ம் கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள்:—

"பருவ வயதை எய்திவிட்ட ஒவ்வொருவன் மீதும் வெள்ளிக் கிழமையில் ஸ்னானம் செய்வது அவசியமா யேற்பட்டிருக்கிறது; மேலு மவன் மிஸ்வாக் செய்துகொள்ளக் கடவன்; இன்ன மவன் சுகந்தத்தை, அஃதவனுக்குக் கிட்டக் கூடுமாயின், அணிந்துகொள்ளக் கடவன்."—(பு'க'ா. 11 : 3)

45. அபூ' ஹு—ரய்ரா கூறினார்: அல்லா(ஹ்) வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள்:—

"ஒவ்வொரு முஸ்லிமின்மீதும், அவன் ஏழு நாட்களுக்கு ஒருமுறையேனும் ஸ்னானம் செய்து, தனது சிரத்தையும் முழுச் சரீரத்தையும் கழுவிக்

கொள்ள வேண்டுவது அவசிய மாக்கப்பட்டிருக்கிறது."[24]—(பு'க'ா., மூஸ்—மிஷ். 3 : 11)

46. அபூ' ஹுரய்ரா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர்(சல்அ'ம்) சொன்னர்கள் :—

"பிரேதத்தைக் குளிப்பாட்டும் மனிதன் (தானும்) குளித்துக் கொள்ளக் கடவன்."[25]—(இப்'னுமா—மிஷ். 3 : 11)

---

24. வேறு காரணங்களுக்காக ஸ்னனம் செய்துகொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டாலும் ஏற்படா விட்டாலும், வாரத்துக் கொருமுறை வெள்ளிக்கிழமையன்று ஸ்னனம் செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டு விடுகிறது. இதனால் முஸ்லிம்கள் வாரத்துக் கொருமுறைதான் ஸ்னனம் செய்யவேண்டு மென்று நினைக்கத் துணிவது கூடாது. வாரத்துக் கொருமுறை யென்பது குறைந்தபக்ஷக் கணக்கே; அப்பொழுது ஆடவரும் பெண்டிரும், பணக்காரரும் ஏழைகளும் வித்தியாசமில்லாது, தங்கள் முழுச் சரீரத்தையும் தலையுட்பட ஸ்னனம் செய்வித்துக் கொள்ளுதல் அவசியமாம். பரிசுத்த மென்பது பாதி ஈமா னென்று இதற்கு முன்னமே இயம்பப்பட்டுள்ளது. அதியுஷ்ண மண்டலத்திலும் சம சீதோஷ்ண மண்டலத்திலும் வசிப்பவர்கள் தினமொருமுறை ஸ்னனம்செய்ய வேண்டியவர்களா யிருப்பர்; ஆனல், குளிருள்ள களிர்ப் பிரதேசங்களில் வசிப்பவர்களும், தினமொரு முறை ஸ்னனம் செய்யும் வசதியற்றவர்களும் கட்டாயமாய் வாரமொரு முறை வெள்ளியன்று முழு ஸ்னனம் (தலையுட்படச்) செய்து கொள்ள வேண்டுவது அத்தியாவசியமாய்க் காணப்படாநின்றது. "கூழென்ருலும் குளித்துக் குடி, கந்தையென்ருலும் கசக்கி யுடு," என்பது பழமொழி.

25. பிரேதத்தைக் குளிப்பாட்டும் மனிதன் குளிக்க வேண்டுமென்று நபிபெருமான்(சல்அ'ம்) நவின்றருளி யுள்ளார்கள். என்னெனின், வியாதியின் அசுத்தம், விஷக்கிருமி போன்றவையெல்லாம் அவன்மீது படிந்திருக்கக் கூடுமன்ரோ? ஓட்டுவா

47. :கய் ஸிப்'னு ஆ'ஸிம் (இவ்வாறு) கூறியுள்ளார்: அவர் இஸ்லாத்தில் சேர்த்துக்கொள்ளப் பட்டார்; அதுபொழுது நபிகள்திலகம் (சல்அ'ம்) இலந்தை யிலைகள் கலந்திருந்த தண்ணீரைக் கொண்டு ஸ்னானம் செய்துகொள்ளுமாறு அவருக்குக் கட்டளையிட்டார்கள்.[26]—(திர்மி—மிஷ். 3 : 11)

48. ஆ'யிஷா பிராட்டியார் கூறியுள்ளார்: நபிகள் திலகம் (சல்அ'ம்) நான்கு சமயங்களில் ஸ்னானம்செய்துகொள்ளுமாறு கட்டளையிட்டார்கள்: ஜனப'த்துக்காகவும்,[27] வெள்ளிக் கிழமை யன்றும், கிண்ணம்வைத்து இரத்தங்குத்தி வாங்கியபொழுதும், பிரேதத்தைக் குளிப்பாட்டியபொழுதும்.—(அபூ'த'ா—மிஷ். 3 : 11)

---

ரொட்டி யென்னப்படும் தொத்து நோய் போன்றவை வெளியில் பரவாதிருக்க அன்னவன் அக்கணமே ஸ்னானம் செய்வது அத்தியாவசியமா யிருக்கிறது; (மேல் 'ஹதீ'. 48-ம் பார்க்க.)

26. இலந்தையிலை சுத்திகரிக்கும் சக்தியுடையதா யிருக்கிறது. சவர்க்காரமும் இலந்தையிலைக்குப் பதிலாக உபயோகிக்கலாம். பரிசுத்த இஸ்லாத்தில் புதிதாய்ச் சேருமனிதன் புறப் பரிசுத்தத்துக் காகவும் ஸ்னானம் செய்ய வேண்டியவனா யிருக்கிறான். இதனால் கருதப்படும் தாத்பரியம் யாதெனின்: அகப் பரிசுத்தத்தை நாடும் ஒவ்வொரு முஸ்லிமும் புறப் பரிசுத்தத்திலும் கண்ணுங் கருத்துமா யிருக்கக்கடவன் என்பதாயே யிருக்கிறது; உள்ளப் பரிசுத்தத்துக்கு உடற் பரிசுத்தமே முதற்படியா யிருக்கின்ற தன்றோ?

27. ஜனப'த் (ஜன்ப்'—பாரிசம், அல்லது பக்கம்—என்பதிலிருந்து தோன்றியிருப்பது) அசலில், "ஒரு பொருளை ஒருபக்கமாய் ஒருக்கணித்து வைத்தல்," அல்லது "ஒரு மனிதனை ஒரு வஸ்துவைத் தவிர்த்துக் கொள்ளுமாறு செய்தல்," என்று பொருள்

49. ஆ'யிஷா பிராட்டியார் கூறியுள்ளார்: ஸ்திரீயொருத்தி வந்து, மாதவிடாய்க்குப் பின்னே தான் ஸ்னானம் செய்ய வேண்டுவதுகுறித்து நபிகள் திலகத்தை (சல்அ'ம்) வினவினாள்; ஆகவே, அவர்கள் எப்படி ஸ்னானம் செய்வதென்பதை (அவளுக்கு)ச் சொல்லிக் காண்பித்தார்கள்.[28] —(பு'க'ா. 6 : 13)

---

கொள்கிறது. இஸ்லாமிய பரிபாஷையில் ஜனப'த் தென்னும் நிலைமை, ஆணுக்கேயாயினும், பெண்ணுக்கேயாயினும், கனவில் ஸ்கலிதமாதல் (இ'ஹ்திலாம்) என்பதனாலும், சதிபதிமுயக்கம்—(வீடு கூடுதல்) என்பதனாலும் ஏற்படலாம். சதிபதி முயக்கத்தில் இந்திரியம் வெளிப்படாமற் போய்விடுங்கால், ஸ்னானம் செய்ய வேண்டுவது அவசியந்தானா? என்பதில் ஒன்றுக்கொன்று மாறான 'ஹதீ':துகள் காணப்பட்டு வருகின்றன. அப்படிப்பட்ட சந்தர்ப் பங்களில் வுழூ' செய்துகொள்வதே போதுமானதென்று இமாம் பு'க'ாரீ இம்பி விட்டு, ஸ்னானம் செய்வது உசிதமென்றும் உரைத் திருக்கிறார்கள். ஜனப'த்தி லிருப்பவன் ஜுனுப்' என்றழைக்கப் படுகிறான். அன்னவன் தொழப்போகு முன்னே ஸ்னானம் செய்து கொள்ளக் கட்டுப்பட்டுள்ளான். ஜனப'த் தென்பது ஒரு பாபமான, அல்லது வேறு அசுத்தமான அழுக்கு (ஆபாச) நிலைமை யன்று.

28. பெண்களுக்கு 'ஹய்ழு'க்கு—(மாதவிடாய்க்கு)ப் பின்னா லும், நி'பாஸுக்கு—(புனிறு—மகப்பேற்றாலாய இரத்த ஓட்டத் துக்கு)ப் பின்னேயும் ஸ்னானம் செய்ய வேண்டுவது அவசிய மாகின்றது. 'ஹய்லி'ன் போதும், நி'பாஸின் போதும் பெண்கள் தொழுகையினின்று விடுதலையளிக்கப் பெற்றுள்ளார்கள்; அப் பொழுது நோன்பு நோற்பதும் கட்டாய மில்லை. பொதுவாக மாதவிடாய் மூன்று முதல் பத்து நாள்வரை இருப்பதுண்டு; குறைந்தபக்ஷ மூன்றுநாளுதிர ஓட்டம் நின்றபின்னர் ஸ்னானம் செய்தல் ஆவசியகமாம்; பத்துநா ளென்னும் அதிகபக்ஷ காலம் வரை அவ்வோட்டம் நிகழ்ந்துவருமாயின், அவ்வத் தவணை முடிந்த

50. அபூ' ஹுரைய்ராவின் ஆதாரத்தின்மீது (இவ்வாறு கூறப்படுகிறது) :

நபிகள் பெருமானார் (சல்அ'ம்) மதீனாவின் வீதியொன்றிலே அவர் (அபூ' ஹுரைய்ரா) ஜுனுப'ாயிருந்தபொழுது, அன்னவரைச் சந்தித்தார்கள். 'நான் அசுத்தமா யிருந்ததா யெண்ணிக் கொண்டு, அவர்களை விட்டுச் சென்றுவிட்டேன்; பின்பு நான் சென்று ஸ்னானம் செய்துகொண்டேன்.' பிறகு அவர்—(அபூ' ஹுரைய்ரா) வந்து சேர்ந்தார்; அப்பொழுது (அப்பெருமானார்) "ஏ அபூ'ஹுரைய்ரா! நீர் எங்கே சென்றிருந்தீர்?" என்று வினவினார்கள். இதற்கு அவர் சொன்னார்: 'நான் ஜுனுப'ா யிருந்தேன்; ஆதலால், நான் அசுத்தமான நிலையிலிருந்தபடியால், தங்களுடனே அமர்ந்துகொள்ள நான் விழைய வில்லை.' (அது கேட்டு, நபிபெருமான்) சொன்னார்கள் :—

"தூய்மையனைத்தும் அல்லா(ஹ்)வுக்கே! மூமினானவன் அசுத்தமாகிற தில்லையே!"[29]—(பு'க'ா. 5 : 23)

---

வுடன் ஸ்னானம் செய்தல் வேண்டும். அதற்கு மேலும் உதிர ஓட்டம் நிற்கவில்லை யாயின், அஃது இஸ்தி'ஹாலத்—(பெரும்பாடு) என்று அழைக்கப்படும்; அந் நிலைக்கு 'ஹய்லு'க்குரிய சட்டம் செல்லாது. மகப்பேற்றால் ஏற்படும் இரத்த ஓட்டத்திற்குக் குறைந்தகாலத் திட்டமென்பது இல்லை; அதிகமான அளவு நாற்பது நாட்களாம். (எமது இஸ்லாம் 8-ஆம் பதிப்புப் பார்க.)

29. ஜனுப'த் தென்பது ஓர் அசுத்தமான நிலையன் றென்று இந்த 'ஹதீ'து விளக்கிக் காண்பிக்கிறது. ஜுனுப'ா யிருப்பவன் எதையும் செய்யலாம்;—(சிலதை எதைச் செய்யக் கூடாதென்று

51. அனஸ் கூறினார் :

எஹூதிக ளுள்ளே ஸ்திரீ யொருத்தி மாதவிடாயி லிருந்தால், அவர்கள் அவளுடனே கூடி யுண்ண மாட்டார்கள் ; அவளுடனே அதே அறையில் (சேர்ந்து) இருக்கவு மாட்டார்கள் ; ஆதலால், நபிகள் திலகத்தின் (சல்அ’ம்) தோழர்கள் அந் நபி பெருமானாரை (சல்அ’ம்) வினவினார்கள் ; அப்பொழுது, “நும்மிடம் மாதவிடாயைக் குறித்து அவர்கள் வினவுகிறார்கள்,” என்று அல்லா(ஹ்) அருள்வாக் களித்தான் (:குர். 2 : 222). அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னார்கள் :—

“ (மாதவிடாயின் காலத்திலே) வீடு கூடுவதைத் தவிர்த்து வேறெல்லாக் காரியங்களையும் செய்து கொள்ளுங்கள்.”[30]—(முஸ்—மிஷ். 3 : 12)

---

எமது “இஸ்லாம்” 8-ஆம் பதிப்பு, பக்கம் 37-இல் காண்க. அவீன் தொழப் போகு முன்னே ஸ்னானம் செய்துகொள்ள வேண்டியவனா யிருக்கிறான்.

30. இந்த ‘ஹதீ’:து மற்றொரு முக்கியமான தப்பபிப்பிராயத்தை எடுத்துக்கூறி விலக்கி யிருக்கிறது. ஏனைச் சில சமயங்களில் இருப்பதேபோல், இஸ்லாத்தில் ‘ஹய்லு’டையவள்—(மாதவிடாயி லிருப்பவள்) பரிசுத்தக் குறைவான தீயவளாய்க் கருதப்படுவதில்லை. வீடு கூடுவதைத் தவிர்த்து (:குர். 2 : 222) மற்றெல்லாக் காரியங்களையும் அவள் சர்வ சாதாரணமாய்க் கவனித்து வரலாமென்று இங்கு நாம் அறிவிக்கப் பெறுகிறோம். (இன்னவளும், பிள்ளைப்பேற்றி லிருப்பவளும் இன்னம் என்னென்ன காரியங்களைச் செய்யக் கூடாதென்று “இஸ்லாம்” பக்கம் 37-இல் கண்டு கொள்ளலாம். ஆனாலும், இப்படிப்பட்ட ஸ்திரீகளுக்கு இளைப்பாறச் சில தினங்களுக்கேனும் ஓய்வு கொடுக்க வேண்டு மென்று ஆயுர்வேதமும் அறிந்துகொண் டிருக்கிறது.

52. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினர்: மய்மூன சொன்னர்:

நான் நபிகள் திலகத்திற்கு (சல்அ'ம்) ஸ்நானம் செய்யத் தண்ணீர் (கொணர்ந்து) வைத்தேன்; அப்பொழுது அப் பெருமானர் தங்கள் கையை இரண்டு அல்லது மூன்றுமுறை கழுவிக் கொண்டார்கள்; பிறகு தங்கள் இடக்கரத்தில் தண்ணீரை வார்த்தார்கள்; அப்பால் தங்கள் மர்மஸ்தானங்களைக் கழுவிக் கொண்டார்கள்; பிறகு தங்கள் கரத்தை மண்ணில் தேய்த்தார்கள். பின்பு தங்கள் வாயைக் கொப்புளித்தும் தங்கள் நாசிக்குள்ளே நீரைச் செலுத்திச் சிந்தியும் கொண்டதன் பின்னல், தங்கள் வதனத்தையும் தங்கள் இரு கரங்களையும் (முழங்கைகள் வரை) கழுவியுங் கொண்டார்கள்; பிறகு தங்கள் திருமேனிமீது தண்ணீரை வார்த்துக் கொண்டார்கள்; பிறகு தங்க ளிடத்தை மாற்றிக் கொண்டு, இரு பாதங்களையும் கழுவிக் கொண்டார்கள்.—(பு'க'ா. 5 : 5)

53. ஆ'யிஷா பிராட்டியார் கூறினர்: நபிகள் திலகம் (சல்அ'ம்) ஸ்நானம் செய்துகொண்ட பிறகு வுனூ' செய்து கொண்டதில்லை.—(·திர்மி—மிஷ். 3:5)

54. யஃ'லா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத் தூதர் (சல்அ'ம்) ஒரு திறந்த இடத்திலே ஒரு

---

கர்ப்பாசயம் நெகிழ்வுற்று நிற்கு நேரத்திலே அந்த ஸ்திரீகள் கடினவேலை பார்ப்பது தகாதென்பர். அத் தகையினருடனே வீடு கூடுவதால் இரத்தம் விஷமாக மாறிவிடல், மாரடைப்பு, ஜன்னி போன்ற ஆபத்தை விளைக்கும் வியாதி களெல்லாம் விளையக்கூடு மென்று ஆயுர்வேதம் அறைந்துகொண் டிருக்கின்றது.

மனிதன் (நிர்வாணமாய் நின்று) குளித்துக் கொண்டிருந்ததைக் கண்டார்கள்; ஆகவே, அன்னவர்கள் பிரசங்கமேடைமீது ஏறிநின்று, அல்லா(ஹ்)வைப் புகழ்ந்தும் மகிமைப்படுத்தியும் கூறியதன் பின்னர்ச் சொல்லித் துவக்கினார்கள் :—

"நிச்சயமாக அல்லா(ஹ்) லஜ்ஜைக்கு உறைவிடமாகவும், குற்றங்குறைகளை மறைப்பவனாகவும் இருக்கிறான் ;—அன்னவன் லஜ்ஜையையும், எதில் நாண மிருக்கிறதோ அதனை மறைப்பதையும் உவக்கிறான் ; ஆதலால், உங்களுள் ஒருவன் ஸ்நானம் செய்ய நேருங்கால், அன்னவன் (பகிரங்கமாய்ப்) பார்க்கப்படாமல் தன்னை மறைத்துக் கொள்ளக் கடவன்."[31]—(அபூ'த'ா—மிஷ். 3 : 5)

## பகுதி 5—தயம்மும்

55. அபூ"தர் கூறினார் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"பரிசுத்தமான மண் முஸ்லிமின் வுழூ'வைச் செய்து கொள்ள, அவனுக்குப் பத்தாண்டுகள் மட்டும் தண்ணீர் கிடையாமற் போயினும், போதுமானதா யிருக்கிறது. அவன் தண்ணீரைக் காணுங்கால், தனதுடலைக் கழுவிக் கொள்ளக் கடவன் ;

---

31. அஃதாவது, ஏனையோரால் பார்க்கப்பட முடியாத மூடிய அறைக்குள்ளிருந்து ஸ்நானம் செய்தல் வேண்டும்; திறந்த இடத்தில் முழுக நேர்ந்தால், அப்படிப்பட்டவன் தனது கொப்பூழிலிருந்து முழங்கால் மறைய ஆடையுடுத்தவனா யிருக்க வேண்டும்.

என்னெனின், அது மெத்த நல்லாதாயிருக்கிறது."[32]
—(அபூ'த'ா—மிஷ். 3 : 10)

56. அ'ம்மார் கூறலுற்றார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) என்னை ஒரு காரியத்தினிமித்தமா யனுப்பினார்கள். அவ்வாறு யான் (பிரயாணஞ் செல்லுங்கால்) ஜுனுப'ாய் விட்டேன்; ஆனால், தண்ணீரைக் கண்டுகொள்ள வில்லை; ஆதலால், யான் தரையின்மீது (நாற்காற்) பிராணியொன்று படுத்துருள்வதேபோல் உருண்டு புரண்டெழுந்தேன்; அப்பால் இதனை யான் நபிகள் நாயகத்திடம் (சல்அ'ம்) சொன்னேன்; அவர்கள் சொன்னார்கள்:—

"நீ இவ்வாறு செய்துகொண் டிருந்தாலே, அஃதுனக்குப் போதுமானது;" இன்னம், அன்னவர்கள் தங்கள் கரத்தைப் பூமியின்மீது ஒருமுறை அடித்து, அப்பால் அதன் மண்ணை உதறிவிட்டு, அதன்பின்பு அதனைக் கொண்டு (வலக்)கரத்தின் புறத்தை இடக்கரத்தால், அல்லது இடக்கரத்தின் புறத்தை (வலக்)கரத்தால் துடைத்துக் கொண்டு,

32. 'தயம்மும் என்பது அம்ம—(ஒரு வஸ்துவின்பால் அண்மினன்) என்பதிலிருந்து தோன்றி யிருக்கிறது. வுலூ' செய்யவோ, ஸ்னனம் செய்யவோ போதுமான தண்ணீரைப் பெற்றுக்கொள்ள முடியாத பொழுது, அல்லது வியாதியின் காரணத்தால் நீரை உபயோகிக்க முடியாத பொழுது, அல்லது தொத்துநோய் வந்துவிடக் கூடுமென்று அஞ்சப்படும் பொழுது மண்ணின்பால் மனிதன் நெருங்கிக் கொள்ளக்கடவன். பருகுவதற்கோ, ஆகாரம் தையாரிப்பதற்கோ பற்றியும் பற்றுமலுமாய்த் தண்ணீர் அருகிக் கிடைக்கும் பொழுதும் ஒருவன் வுலூ'வுக்கு, அல்லது முழுக்குக்குப் பதிலாய்த் தயம்மும் செய்து கொள்ளலாம்.

பிறகு இரு (கரங்களாலும்) தங்கள் வதனத்தைத் துடைத்துக் கொண்டார்கள்.[33]—(பு'கா'. 7 : 8)

57. அ'ம் ரிப்'னுல் ஆ'ஸ்' ஒரு குளிர்மிக்க இரவிலே ஜுனுப'ாய் விட்டாரென்று (ஒரு செய்தி)

---

33. இந்த 'ஹதீ':து, வுலூ'வுக்குப் பதிலாக மட்டுமின்றி, முழுக்குக்குப் பதிலாகவும் 'தயம்மும் செய்து கொள்ளலா மென்று அனுமதி யளித்திருக்கிறது; இன்னம், இதில் 'தயம்மும் செய்து கொள்ள வேண்டிய முறையும் கூறப்பட்டிருக்கிறது; இதன்படி உள்ளங் கைகளிரண்டும் பரிசுத்தமான மண்மீது அடிக்கப்படல் வேண்டும்; பின்பு அக்கைகளில் ஒட்டியுள்ள மண்ணை உதறி விட்டு, அல்லது ஊதிவிட்டு, அப்பால் ஒவ்வொரு புறங் கையையும் மற்றோ ருள்ளங்கையைக் கொண்டு தடவ வேண்டும்; அதன் பிறகு இரு உள்ளங் கைகளையுங் கொண்டு முகத்தைத் துடைத்துக்கொள்ள வேண்டும். இந்த முறையில் வேறு சில (சிறிது மாறுதலுடன்) வகையாகவும் 'தயம்மும் செய்து கொள்ளலா மென்று மற்றுஞ்சில 'ஹதீ':துகளில் காணப்படாநின்றது. ஆனால், 'தயம்மும் செய்து கொள்வதன் நோக்கம் யாதெனின்: அடியா னொருவன் ஆண்டவன் திருச் சன்னிதானத்திற்குச் செல்லு முன்னே தான் பரிசுத்தத்துடனே இருந்துவருகிறா னென்னும் எண்ணத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதாயே யிருந்து வருகிறது; எனவே, இந்த 'ஹதீ':தின் பிரகாரம் இவ்வளவே 'தயம்முமுக்குப் போதுமாயிருக்கிறது.—(முழு விவரமும் தெரிந்து கொள்ள விரும்புவோர் எமது "இஸ்லாம்" எட்டாம் பதிப்பிலே கண்டு கொள்ளலாம்.) ய'ஹ்யா இப்'னு சஈ'த்' கூறி யுள்ள 'ஹதீ'ெ:தான்றை இமாம் பு'கா'ரீ எடுத்தெழுதி யிருக் கின்றார்: அஃதாவது, ஸப்'க'ாவின்—(உப்புப் பூத்திருக்கும் தரை யின்) மீது அடித்துத் தயம்மும் செய்துகொள்வதில் தோஷமொன்று மில்லை (பு'கா'. 7 : 6). இதைக் கொண்டு பொதுவாய் நோக்கு மிடத்து, புழுதி படிந்துள்ள எந்தப் பரிசுத்த இடமும் இதற்கு லாயிக்குள்ளதா யிருக்கிறது என்று அறியக் கிடக்கிறது.

சொல்லப் படுகிறது; ஆதலால், அவர் ·தயம்மும் செய்து கொண்டு, "நீங்கள் உங்களையே கொலை புரிந்து கொள்ளாதீர்கள்; என்னெனின், அல்லா(ஹ்) உங்களுக்குக் கிருபை யளிக்கிறவனு யிருக்கிறுன்," (:குர். 4 : 29) என்னும் ஆயத்தையும் ஓதினர். இவ் விஷயம் நபிகள் திலகத்திற்கு (சல்'அம்) அறி விக்கப்பட்டது; இன்னம், அன்னவர்கள் (அவரைக்) கண்டிக்க வில்லை.[34]—(பு'க'ா. 7 : 7)

58. ஜர்பி'ர் கூறினர்: நாங்கள் ஒரு பிரயா ணத்தில் புறப்பட்டோம்; அதுபொழுது எங்களுள் ளிருந்த ஒரு மனிதனுக்குக் கல்லொன்று இடித்து, அவனுடைய மண்டையையும் காயப்படுத்திவிட்டது; இன்னம், அன்னவனுக்கு இரவில் இந்திரிய ஸ்கலிதமும் ஆய்விட்டது....(அப்பொழுது நபிகள் திலகம்) சொல்ல லுற்றூர்கள் :—

"........·தயம்மும் செய்து கொள்வதும், காயம் பட்ட இடத்தின்மீது ஒரு கட்டைக்கட்டி, அப்பால் அதன்மீது துடைத்துக் கொள்வதும், மிகுதியுடம்

---

34. இன்னமொரு 'ஹதீ':தில் அந்த இரவு அளவுக்கு மீறிய குளிருள்ளதா யிருந்ததென்றும், ஆகையால் [illegible]பெருமானுர் அந்தச் சமாதானத்தைப் பொருத்தமுள்[illegible] [illegible] ஏற்றுக் கொண்டார்களென்றும் காணப்ப[illegible]கின்றது. அப்[illegible]து அ'ம்ரென்பார் அந்தத் தயம்முத்து[illegible] அதிகாலைத் தொ[illegible] கையை இமாமாக நின்று நடாத்[illegible]வைத்தா ரென்றும் கூற[illegible] பட்டுள்ளது.

யைக் கழுவிக் கொள்வதும் அவனுக்குப் போது மானதா யிருந்தது.”[35]—(அபூ’த’ா—மிஷ். 3 : 10)



35. இந்த ‘ஹதீ’:தால் விளக்கமாவது யாது? சரீரத்தின் ஓருறுப்பின்மீது, அல்லது ஒரு ரணத்தின்மீது தண்ணீர்படுவதால் தீங்குண்டாகக் கூடுமாயின், அதன்மீது இலேசாய் மஸ்‘ஹ் செய்வதே போதுமா யிருக்கிறது. இந்த ‘ஹதீ’:தில் கூறப்பட்டுள்ள மனிதன் தன்னுடைய நண்பர்களின் ஆலோசனையின்மீது அந்த மண்டைக் காயத்துடனே தண்ணீருள் மூழ்கி ஸ்னானம் செய்து கொண்டான்; அதனால் அந்த ரணம் விஷங் கொண்டு, அவனும் இறந்து போய் விட்டான். அதுகேட்டு நபிகள்திலகம், அம் மனிதனுக்கு அவ்வாறு (ஆயுர்வேத அறிவில்லாது) ஆலோசனை கூறிய அத் தோழர்களைக் கண்டிக்க லாயினார்கள்.

# அத்யாயம்—5

## மஸ்ஜித்'—(பள்ளிவாசல்)

1. "நிச்சயமாக, மனிதர்களுக்கு ஏற்பாடு செய்யப்பட்ட முதல்வீடா(ய ஆலயமா)னது ப'க்கா விலுள்ளதே யாகும்; (அஃது) ஆசீர்வதிக்கப் பெற்றதாகவும், உலகத்தவர்களுக்கு நேர்வழிகாட்டியாகவும் (அமைந்து) இருக்கிறது" (:குர்.3 : 95).

2. "இன்னம்; நீர் எங்கிருந்து (புறப்பட்டு) வரினும், பரிசுத்த மஸ்ஜிதி"ன் பக்கலே நுமது வதனத்தைத் திருப்பக் கடவீர்; மேலும், நீங்கள் எங்கிருப்பினும், அதன் பக்கலே நுங்கள் முகங்களைத் திருப்பக் கடவீர்கள்" (2: 150).

3. "இன்னம், சில ஜனங்களை மற்றுஞ் சிலரைக் கொண்டு அல்லா(ஹ்) தடுத்திராமற் போயிருப்பின், நிச்சயமாக மடாலயங்களும், மாதா கோயில்களும், யூதர் வணக்க ஸ்தலங்களும், அல்லா(ஹ்)வின் நாமம் அதிகம் தியானிக்கப்பட்டுவரும் மஸ்ஜித்'களும் தகர்க்கப்பட்டே போயிருக்கும்" (22 : 40).

4. "இன்னம், அல்லா(ஹ்)வின் ஆலயங்களில் அவனது திருநாமம் தியானிக்கப்படுவதைத் தடுத்து, அவற்றினை நாசப் படுத்துவதில் எவனொருவன் முயற்சியெடுத்துக் கொள்கிறானோ, அவனைப் பார்க்கினும் அதிக அக்கிரமக்காரன் எவனோ?" (2 : 114).

5. "மஸ்ஜித்'கள் அல்லா(ஹ்)வுக்கே உரியன" (72 : 18).

6. "(அல்லாஹ்வுக்கு) இணை வைப்பவர்களுக்கு அல்லா(ஹ்)வின் ஆலயங்களைத் தரிசிக்க உரிமையில்லை" (9 : 17).

இப் பாருலகில் முதன்முதலாய் நிருமிக்கப்பட்ட பரிசுத்த மஸ்ஜித்' கஃ'பா' ஷரீ'பாகவே—இது மக்காவில் (ப'க்கா என்றும் அந் நகர் அழைக்கப்படுகிறது) கட்டப்பட் டுள்ள ஆதி ஆலய

மாகவே இருந்து வருகிறது (தலை. ஆயத் 1); ஆதலால், மற்றெல்லா மஸ்ஜித்’களும் மக்காவிலுள்ள அவ் ஆதிப் பரிசுத்த ஆலயத்தை நோக்கியே நிருமிக்கப்படல் வேண்டும் (தலை. ஆயத் 2; ‘ஹதீ’. 3). மதீனுவில் முதலில் நிர்மாணிக்கப்பட்ட நபிகள் திலகத்தின் மஸ்ஜித்’ கரடுமுரடான சாமக்கிரியைகளைக் கொண்டே எழுப்பப் பட்ட ஒரு சர்வ சாதாரணப் “பள்ளிவாச”லாகவே யிருந்து வந்தது; மூன்றாவது க’லீ‘பாவாய் விளங்கிய உ’:துமான்(ரலி’) அவர்கள் அதனைப் புதுப்பித்து நிருமித்தபொழுது, நேர்த்தியான சாமான்களைக் கொண்டு அதனைக் கட்டியபோதினும், அஃதொரு சர்வ சாதாரணத் தோற்ற முடையதாகவே யிருந்துவந்தது (‘ஹதீ’. 4). தொழுகைக்குரிய பள்ளிவாசல் ஒரு சர்வ சாதாரண நிர்மாணிப்பாகவே இருந்துவரல் வேண்டும்; அதனை அனுவசிய மாக அலங்காரம் செய்துவைப்பது கூடாது (‘ஹதீ’. 5); இன்னம், அதனுள்ளே உருவப் படங்களேனும் உருவச் சிலைகளேனும் இருப்பது கூடாது (‘ஹதீ’. 8). பள்ளிவாசல் பரிசுத்தமாகவும் (‘ஹதீ’. 9, 10), வாசனையூட்டப் பெற்றுங்கூட இருத்தல் வேண்டும் (‘ஹதீ’. 9). அதனுள்ளே மின்ப’ர் என்னப்படும் உபதேசமேடை யொன்றுமட்டுமே யுண்டு; அதன்மீது ஏறி நின்று இமாமானவர் வெள்ளிக்கிழமைகளில் ஜு‘முஆ’ப் பிரசங்கத்தைச் செய்கின்றார்; ஏனை அத்தியாவசியமான காலங்களிலும் அந்த இமாம் அதன்மீது நின்று சொற்பொழிவாற்றுகின்றார்; இன்னம், தொழுகைக்காகத் தரைமீது பாய்களும் விரிக்கப்பட்டிருக்கும் (‘ஹதீ’. 11, 12); பரிசுத்தமான வெறுந் தரைமீதும் நின்று தொழுது கொள்ளலாம் (‘ஹதீ’. 13).

இப்பாருலகு முழுதுமே பள்ளிவாசலா யிருந்துவருகின்றமை யால் (‘ஹதீ’. 1), முஸ்லிம்கள் எங்கும் நின்று இறைவனைத் தொழுது கொள்ளலாம்; அப்படித் தனியாகவும் தொழலாம், கூட்டத்துடனும் சேர்ந்து தொழலாம்; ஆதலால், எந்த மஸ்ஜித்’க்கும் கும்பாபிஷேக மென்பதோ, பிரதிஷ்டை யென் பதோ, கிருஹப்பிரவேச மென்பதோ செய்யப்பட வேண்டிய ஆவசியக மில்லை. முஸ்லி மல்லாதாரின் ஆலயத்திலும், அதில் உருவப்படங்க ளேனும் உருவச்சிலைக ளேனும் இல்லாதிருப்

பின், முஸ்லிம்கள் தங்கள் தொழுகைகளை நிறைவேற்றிக் கொள்ளலாம் ('ஹதீ.' 8). பள்ளிவாசல் கட்டுவ தென்பது ஒரு சிரேஷ்டமான காரியமா யிருக்கிறது ('ஹதீ'. 2). முஸ்லிமா யிருப்பவன் ஒருவன் ஒரு 'பள்ளி' யுள்ளே நுழைந்து அங்கே அல்லா(ஹ்)வைத் தொழுது கொள்ளும் உரிமையை வேறெவனும் தடை செய்வது கூடாது (தலை. ஆயத் 4). பள்ளிவாசல் அல்லா(ஹ்) வுக்கே உரியதாயிருக்கிறது (தலை. ஆயத் 5). அதனை மேற்பார்வை செய்து பராமரிப்பது. அப்பள்ளியைக் கட்டியவன் கையிலோ, அவனால் நியமிக்கப்படும் காரியஸ்தன் கையிலோ இருக்கக்கூடு மாயினும், பள்ளிவாசலென்பது அப்படியே ஒருவருக்கும் சொந்த மான சொத்தாக மாட்டாது; பள்ளிவாசலுக் கென்று கட்டப் பட்ட மஸ்ஜிதொன்று பிறகு வேறு காரியத்திற்காக மாற்றப் படுவது கூடாது; ஒருமுறை மஸ்ஜிதாய் நிர்மாணிக்கப்படுவது பிறகெப்பொழுதுமே மஸ்ஜிதாகத்தான் இருந்துவரல் வேண்டும். ஆயின், ஒரு வீட்டினுள்ளே கூட்டத்துடன் தொழுதுகொள்ள ஒதுக்கி வைக்கப்படும் இடமொன்று எப்பொழுதும் அவ்வீட்டுக் குரியதாகவே இருந்துவரும் ('ஹதீ'. 14).

மஸ்ஜிதென்பது அல்லா(ஹ்)வை வணங்குவதற் கென்றே நிரு மிக்கப்படுகிறது. ஆயினும், அஃதொரு வணக்கத்திற்குரிய வீடாக மட்டுமே இருப்பதைவிட அதிகமாகவே முஸ்லிம்களால் கருதப் பட்டு வருகிறது; ஏனென்றால், முஸ்லிம்களின் வணக்கம் இத் தரணியின்மீது எந்த இடத்தி லிருந்தும் தியானிக்கப்படலா மன்றோ? கஃ'ப்த்துல்லா(ஹ்) இப் பாருலக முஸ்லிம்களுக்கெல் லாம் மத்திபஸ்தலமா யிருந்துவருவதேபோல், ஓரிடத்திலுள்ள பள்ளிவாச லொன்று அந்த மஹல்லாவிலுள்ள முஸ்லிம்களனை வர்க்கும் ஒருண்மையான மத்திப ஸ்தலமாகவே இருந்துவருகிறது. இன்னம், பள்ளிவாசலே இஸ்லாத்தின் கலாசாரத்துக் குரிய மத்திய கழகமாகவும் இருந்து வருகிறது. நபிகள் திலகத்தின் மதீனா மஸ்ஜித்' தன்பால் சு'ப்'பா என்றழைக்கப்பட்ட விடுதி போன்ற கூடமொன்றையும் வைத்துக்கொண் டிருந்தது. அதில் ஒருசமயம் எழுபது மாணவர்கள்வரை குடியிருத்தாட்டப் பட் டிருந்தார்கள் ('ஹதீ', 16, 17). உண்மையிலே பள்ளிவாச

லென்பது, ஒருவன் ஏதேனு மொன்றைக் கற்றுக் கொள்ளவோ, அல்லது ஏதேனுமொரு நல்லதைக் கற்பிக்கவோ செல்லவேண்டிய ஸ்தலமா யிருக்கிறதென்று மிகவிளக்கமாய்க் கூறப்பட்டிருக்கிறது ('ஹதீ'. 18). நபிகள்நாயகத்தின் பள்ளியிலே காணப்பட்டுவந்த சு'ப்'பா என்பதே இக்காலத்தில் பள்ளிகளுடனே இணைக்கப் பட்டிருக்கும் மக்தப்' அல்லது மத்'ரஸா—(மதக் கல்லூரி) ஆக இருந்து வருகிறது; அநேகமாக எல்லா ஊர்களிலுமே ஒவ்வொரு பள்ளி வாசலுடனும் அத்தகைய பள்ளிக்கூட மொன்று இணைக்கப் பட்டிருப்பதை இன்றுங் காணலாம்; இன்னம், எல்லாக் காலங் களிலும் இவ்வுலகின் எல்லா முக்கிய மஸ்ஜித்'களிலும் பொது ஜன நன்மைக்காக நூல் நிலயங்களும் நிறுவப்பெற்றே வந்திருக் கின்றன.

தின மொன்றுக்கு ஐந்து முறை முஸ்லிம்க ளெல்லாரும் ஒன்று சேரக்கூடிய முக்கிய ஸ்தலமாய் மஸ்ஜி தென்பது இருந்துவந்த காரணத்தால், அஃதொரு பொதுவான மத்திய மன்றமாகவும் இருந்துவந்தே யிருக்கிறது; அவ்விடத்திலே முஸ்லிம் சமுதாயத்திற் குரிய எல்லா முக்கிய விஷயங்களும் கவனிக்கப்பட்டு வந்தன; மற்றும் சமூக சம்பந்தமான எல்லா அவசியக் காலங்களிலும் அங்கேதான் முஸ்லிம் ஜமாஅ'த்தார் ஒன்றுகூடுவது வழக்கம். ஒரு முறை நபிகள் திலகம் அவர்களே (தங்கள் இளைய மனைவி ஆ'யிஷா பிராட்டியுடனே) மதீனா மஸ்ஜிதில் ஒரு சில அபிஸ்ஸீனியர்களால்— ('ஹப'ஷீகளால்) காண்பிக்கப்பட்ட வல்லய விளையாட்டை வேடிக்கை பார்த் தார்கள் ('ஹதீ'. 19). 'ஹஸ்ஸா னிப்'னு :தாபி'த் தென்பார் மஸ்ஜிதிலேயிருந்து நபிகள்நாயகத்தின்மீது வர்ணித்து யாத்துள்ள தம்முடைய கவிகளை ஓதிக் காண்பித்தார் ('ஹதீ'. 20). இன்னம், பள்ளிவாசலிலே நியாய விசாரணைகளும் நடாத்தப்பட்டு வந்தன ('ஹதீ'. 21). அந்தப் பள்ளியிலே காயமடைந்திருந்த ரணவீர ரொருவனுக்காகக் கூடார மொன்றும் அடிக்கப்பட் டிருந்தது ('ஹதீ'. 22.). அந்த மஸ்ஜிதின் முற்ற வெளியிலே விடுதலை யடைந்திருந்த அடிமைப் பெண்ணொருத்தியும் தனக்காக ஒரு கூடாரத்தை யடித்துக்கொண் டிருந்தாள் ('ஹதீ'. 23).

நபிகள் திலகத்தைத் தரிசிக்க வந்த தூது கோஷ்டிகளுங் கூட அந்தப் பள்ளியிலேதான் வரவேற்கப் பெற்றார்கள்; இன்னம், சில சமயங்களில் அங்கே தங்கியிருக்கவும் அனுமதி யளிக்கப் பெற்றார்கள் ('ஹதீ'. 24). ஒரு முறை விக்கிரஹத் தொழும்பனா யிருந்த யுத்தக்கைதி யொருவன் அந்தப் பள்ளியிலே வைக்கப்பட் டிருந்தான் ('ஹதீ'. 25). மற்றொரு சமயம் அஃதொரு திரவிய சாலையாகவும் உபயோகிக்கப்பட் டிருக்கிறது ('ஹதீ'. 26). எனவே, மஸ்ஜிதென்பது முஸ்லிம்களின் பாரமார்த்திகத்துக்குரிய மத்திப ஸ்தலமாய் மட்டுமே இருந்து வந்ததோடு நின்றுவிடாது, அன்னவர்களுக்குரிய கல்விக்கும் அரசியலுக்கும் சமுதாயத்திற் குங்கூடப் பொதுவாயுள்ள மத்திப ஸ்தலமா யிருந்துவந் திருக் கிறது; சுருக்கிச் சொல்லுமிடத்து, மஸ்ஜிதே முஸ்லிம்களுக்குரிய ஜாதீய, அரசியல் சம்பந்தமான முக்கிய மத்திப ஸ்தலமாய் விளங்கிவந் திருக்கிறதென்று கூறி முடிக்கலாம்.

மேலே கூறப்பட்டுள்ள காரியங்க ளெல்லாம் நடைபெற்று வந்தும், அல்லா(ஹ்)வுக் குரிய வணக்க ஸ்தலத்திற்கு வேண்டிய பரிசுத்த மரியாதைமட்டும் எக்காலத்திலும் மஸ்ஜிதுக்குக் கொடுக்கப்பட்டே வந்திருக்கிறது. முஸ்லிமல்லாதார் மஸ்ஜிதில் வரவேற்கப்பெற்று, அங்கே தங்கியிருக்கவும் அனுமதியளிக்கப் பெற்றார்களென்று சரித்திரம் சான்று பகர்ந்துகொண் டிருக்கிறது; அஃதொரு பக்கல் இருக்க; மற்றொரு பக்கல், அப்படிப்பட்ட வர்கள் மஸ்ஜிதுள் பிரவேசிக்க உரிமை பெற்றிருக்கவில்லை யென்று :குர்ஆன்ஷரீ'பு மிக வெளிப்படையாய்க் கூறிக்கொண்டிருக்கிறது (தலை. ஆயத் 6). ஆயின், அம் முஸ்லிம்களின் அனுமதியின்மீதே தான் அத்தகைய அயல் மதவாதிகள் அம் மஸ்ஜிதுள்ளே நுழைய அனுமதியளிக்கப் பெற்றிருக்கிறார்கள். முஸ்லிம் சமுதாயத்தின் மேன்மைக்கும் நன்மைக்கும் வேண்டிய அநேகங் காரியங்க ளெல்லாம் மஸ்ஜிதிலிருந்தே ·'பஸல் செய்யப்பட்டன வென்பது மெய்யேயாயினும், அவையனைத்தும் அல்லா(ஹ்)வின் ஆலயத்திற் குரிய பரிசுத்த மரியாதைக்குக் கட்டுப்பட்டே நடைபெற்று வந்திருக்கின்றன. முதன் முதலாகப் பள்ளிவாசலில் இரைச்ச லிட்டுக் கத்துவது கூடாதென்று தடுக்கப்பட் டிருக்கிறது.

(‘ஹதீ’. 27); இன்னம், பள்ளியில் எச்சில் துப்புவது பாபமான காரிய மென்றே கூறப்பட்டிருக்கிறது (‘ஹதீ’. 29). எனினும், மஸ்ஜிதின் புனிதத் தன்மை சம்பந்தப் பட்டுள்ள எல்லாக் காரியங்களிலும் முஸ்லிம்கள் தாராள மனப்பான்மை யுடனே நடந்துகொள்ள வேண்டுமென்று அறிவுறுத்தப் பெற்றுளார்கள் (‘ஹதீ’. 31). பள்ளிவாசலில் எத்தகைய வர்த்தகமும் செய்யக் கூடாதென மிகக் கடுமையாய்த் தடுக்கப்பட் டிருக்கிறது; பள்ளிகளில் கவிகளைப் பாடியொப்பிப்பதும், தொழுகையின் வேளையில் வட்டமாய்க் குந்திக்கொண்டு வார்த்தையாடுவதுங் கூடக் கண்டிக்கப்பட் டிருக்கின்றன (‘ஹதீ.’ 32). பள்ளிவாசல் பொதுவான போக்கு வரவுக்குரிய ரஸ்தாவாக உபயோகிக்கப் படுத்துவது கூடாது; மேலும், வீடுகளின் நிலைகளும் கதவுகளும் மஸ்ஜிதுக்குள் வரக்கூடிய மாதிரியிலே வைத்துக் கட்டப்படுவது கூடாது (‘ஹதீ’. 33). பிறருக்கு அருவருப்பை, அல்லது மன வேதனையை அளிக்கக்கூடிய காரிய மொன்றும் மஸ்ஜிதில் நடைபெறக் கூடாது; இக் காரணத்தினாலேதான் பள்ளிக்குச் செல்லுங்கால் வெங்காயத்தை அல்லது வெள்ளை வெங்காயத்தை —(உள்ளிப்பூண்டை)த் தின்றுவிட்டுச் செல்லக்கூடா தென்று தடுக்கப்பட் டிருக்கிறது (‘ஹதீ’. 34). பாத ரக்ஷைகளுடனே தொழுது கொள்வது அனுமதியளிக்கப்பட் டிருக்கிறது (‘ஹதீ’ 35); ஆனால், இக்காலத்தில் பள்ளியுள் நுழையுமுன்னே பாத ரக்ஷைகளைக் கழற்றிவிடுவதும் பாதங்களைக் கழுவிக்கொள் வதும் பொதுஜன மரியாதைக்குரிய பழக்கமா யிருந்துவருகிறது. பள்ளிவாசலுக் குள்ளே நாய்களைக் கொண்டுசெல்வது கூடாது; நாயொன்று பள்ளிக்குள்ளே நுழைந்துவிட்டால், அதனால் அங்கே தீட்டொன்றும் உண்டாய் விடுவதில்லை (‘ஹதீ’. 36).

ஜு‘னுப’ா யிருப்பவரும், மாதவிடாயி லிருக்கும் பெண்களும் மஸ்ஜிதுக்குள்ளே நுழைவது ‘குறித்துள்ள விஷயம் ஒரு முக்கிய பிரச்சினையே யாம். சென்ற அத்யாயத்தில் கூறப்பட்டுள்ள ‘ஹதீ’:துகளின் பிரகாரம் ஜு‘னுப’ா யிருப்பவரும் மாதவிலக்கி லிருப்பவரும் நஜீஸானவர்கள் — (அசுத்தமானவர்கள், அல்லது தீட்டானவர்கள்) என்று கருதப்படுவது கூடாது (பு’க’ா. சுருக்.

4 : 51, 52); விக்கிரஹத் தொழும்பராய (ஆணோ பெண்ணோ) மனிதர் மஸ்ஜிதுக்குள்ளே பிரவேசிக்கலா மென்று இதற்கு முன்னே நாம் படித்திருக்கிறோம்; ஆதலால், அத்தகைய மீக்கூறிய முஸ்லிம்களாகிய ஆண்களும் பெண்களும் பள்ளிவாசலில் நுழைவது தடுக்கப்படக்கூடிய காரியமாயில்லை. 'ஹதீ'. 23-இல் ஸ்திரீயொருத்தி பள்ளியில் கூடார மடித்துக்கொள்ள அனுமதியளிக்கப்பெற் றிருந்தா ளென்று மிக விளக்கமாய்க் கூறப்பட்டிருக்கிறது; அதில் அவள் வசித்துக்கொண்டு மிருந்தாள்; ஆனால், அந்தப் பெண்மணி மாதவிடாயின் காலங்களில் அப்புறப்படுத்தப் பட்டுவந்தா ளென்று அறைவதற்கொன்றும் ஆதாரம் காணப்பட வில்லை. மாத விலக்கென்பது ஆ'யிஷா பிராட்டியின் கரங்களை எவ்விதத்தாலும் தீட்டாக்கிவிடவில்லை யென்று நபிகள் பெருமான் (சல்அ'ம்) அப் பிராட்டியாருக்கு அறிவுறுத்தி யிருக்கின்றார்கள் ('ஹதீ'. 30); ஆகவே, அந்த விலக்கென்பது சரீரத்தின் ஏனை யுறுப்புக்களையும் தீட்டாக்கிவிடுவ தில்லையென்று அறியக்கிடக்கின்றது. ஆதலால், ஜு'னுப்'ா யிருப்பவரும், மாதவிடாயிலிருக்கும் பெண்களும் மஸ்ஜிதுக்குள்ளே நுழையக்கூடா தென்று கூறிக்கொண்டிருக்கும் 'ஹதீ':துக்கு ஒரு குறிப்பான கருத்தையே கொடுக்கவேண்டுவதா யிருக்கிறது: அஃதாவது, அப்படிப்பட்டவர்கள் பள்ளிவாசல்களுக் குள்ளே அந்த நிலையிலே (ஸ்நானம் செய்யாது) தொழச் செல்வது கூடாதென்க.

1. ஜாபி'ர் (பின் வருமாறு) கூறியுள்ளார்: நபிகள் திலகம் (சல்அ'ம்) நவின்றருளினார்கள்:—

"எனக்கு முன்னே எவருக்கும் அருளப் பட்டிராத ஐந்து விஷயங்களை யான் அருளப் பெற்றிருக்கிறேன்:....எனக்கோ, இப்பூமி ஒரு மஸ்ஜிதாகவும், பரிசுத்தத்திற்குரிய ஒரு வஸ்துவாகவும் செய்யப்பட் டிருக்கிறது; ஆதலால், என்னைப் பின் பற்றும் மனிதர்களுள் எவருக்கேனும் தொழுகையின் வேளைவந்து அடுத்து விடுமாயின், அவர் (எங்

கிருப்பினும் அங்கேயே) தொழுகையை முடித்துக் கொள்ள வேண்டும்....''[1]—(பு'க'ா. 7 : 1)

2. உ':துமான் (ரலி')....கூறினர்கள் :....யான் அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) (இவ்வாறு) சொல்லக் கேட்டேன் :—

"எவரொருவர் மஸ்ஜி தொன்றை, அதனைக் கொண்டு அல்லா(ஹ்)வின் பிரீதியை விழைந்தவராய், நிர்மாணிக் கின்றரோ, அவருக்காக அல்லா(ஹ்)வும் சுவர்க்கத்தில் அதனைப் போன்ற தொன்றை நிர்மாணிக்கின்றன்.''—(பு'க'ா. 8 : 65)

3. அ'ப்'து'ல்லா ஹிப்'னு உ'மர் கூறினர் : :குப'ாயில் (இருந்த மஸ்ஜிதில்) ஜனங்கள் தங்கள் அதிகாலைத் தொழுகையைத் தொழுது கொண் டிருந்த பொழுது, அவர்கள்பால் ஒரு மனிதன் வந்து, அல்லா(ஹ்)வின் திருத்தூதருக்கு (சல்அ'ம்) அன்றிரவு :குர்ஆனின் பகுதியொன்று அருளப் பட்ட தென்றும், ஆதலால் அவர் தம் முகத்தைக் கஃ'ப'ாவை நோக்கித் திருப்பவேண்டு மென்று கட்டளை யிடப்பட்டா ரென்றும் கூறினன்; ஆகவே, அவர்கள் தங்கள் வதனங்களை அதனை நோக்கித் திருப்பிக் கொண்டார்கள்; இன்னம், அன்னவர்

---

1. இந்த 'ஹதீ':தின் பிரகாரமும், :குர்ஆன் ஷரீ'பின் பிரகாரமும் முஸ்லிம்கள் தங்கள் தொழுகைகளை நிறைவேற்றிக் கொள்ளப் பிரதிஷ்டை செய்யப்பட்ட ஆலயமொன்றைத் தேடித் திரிய வேண்டுவது ஆவசியக மில்லை. இவ்விடத்தில், இத்தரணி முழுவதுமே பள்ளிவாசலென்று கூறப்பட் டிருக்கிறது. "பரிசுத் தத்திற்குரிய ஒரு வஸ்து" என்றது 'தயம்மூமுக்கு மண் உபயோகிக் கப்பட்டுவருவதைக் குறிக்கின்றது.

களின் வதனங்கள் (அதற்கு முன்னே) ஷாமை நோக்கித் திருப்பப்பட்டிருந்தன ; ஆகையால், அவர் கள் கஃ'ப'ாவை நோக்கி (அப்பொழுதே தெற்கு முகமாய்த்) திருப்பினார்கள்.[2]—(பு'க'ா. 8 : 32)

---

2. இந்த 'ஹதீ':து, ஒவ்வொரு பள்ளியும் கஃ'ப'ாவை நோக்கியே கட்டப்பட வேண்டுமென்று சுட்டிக் காட்டுகின்றது ; :குர்ஆன் ஷரீ'பின் பிரகாரம் கஃ'ப'த்துல்லா(ஹ்)வே இக் குவலயத்தில் முதன்முதலாய் நிர்மாணிக்கப்பட்ட மஸ்ஜிதா யிருந்து வருகிறது. இந்த 'ஹதீ':தில் குறிக்கப்பட்டுள்ள வ'ஹீ (தலை. ஆயத் 2) அருளப்படுமுன்னே முஸ்லிம்கள் எருசலேம் (பை'த்துல் மு:கத்'த'ஸ்) இருக்கும் வடதிசையை நோக்கியே தொழுதுகொண்டிருந்தார்கள் ; என்னெனின், இஸ்ராயீலின் மக்களுக்கு அந்த எருசலேமே :கிப்'லாவா யிருந்துவந்தது ; ஹிஜ்ரத்துக்குப் பின்னால், உத்தேசம் 16, அல்லது 17 மாதங்கள் கழிந்தபிறகே நபிகள் திலகம்(சல்) கஃ'ப'த்துல்லா(ஹ்)வைக் :கிப்'லாவாக்கிக் கொள்ளுமாறு வ'ஹீ யறிவிக்கப் பெற்றார்கள். :கிப்'லா வென்பதன் அந்தரங்க நோக்கம், எல்லோரும் இத்தரணியில் ஒரே மாதிரியாகவே இருந்துவர வேண்டு மென்னும் ஒற்றுமையை உண்டுபண்ணுவதாயே யிருக்கிறது. இந்தியாவைப்போன்ற ஒரு பெரிய தேசத்தில் குமரிமுனையி லுள்ள ":கிப்'லா"வுக்கும் இமயமலையி லுள்ள ":கிப்'லா"வுக்கும் இடையே மேற்கை நோக்குவதில் சிறிது வேற்றுமை காணப்படலாம் ; ஆனால், மற்றொரு 'ஹதீ':தில் (மஸ்னத்' I, 223) "ஒரே தேசத்தில் இரு :கிப்'லாக்கள் இருப்பது சரியில்லை," என்னும் செய்தி யொன்று காணப்படாநின்றது. ஒவ்வொரு தேசத்தி லுள்ளவரும் பூகோள அமைப்பின்படி கஃ'ப'ாவை முன்னோக்கி நின்றே தொழுதுகொள்ள வேண்டுவது அத்தியாவசியமே யாயினும், ஒரே நாட்டிலுள்ள மக்களனைவரும் ஒரே :கிப்'லாவுக்கு மேற்பட்ட திசைகளை வைத்துக் கொள்வதால், அந்நாட்டு மக்களுக்குள்ளே ஒற்றுமை குலைந்துவிடுமன்றோ? "ஒன்றுபட்டா லுண்டுவாழ்வு, ஒற்றுமை நீங்கிடில் அனைவர்க்குந் தாழ்வே"யன்றோ? "சேர்ந்து வாழ்வதே சிறந்த

4. அ’ப்’து’ல்லா ஹிப்’னு உ’மர் (இவ்வாறு) கூறியுள்ளார் :—

அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) காலத்திலே அம் மஸ்ஜித்’ பச்சைவெட்டுக் கற்களால் கட்டப்பட்டும், அதன் மேற் கூரை பேரீந்தின் பராரைகளாலாய தூண்கள்மீது பொருத்தப்பட்ட பேரீந்தின் மட்டைகளால் வேயப்பட்டு மிருந்தது. அபூ’ப’க்ர் அவர்கள் அதனுடன் ஒன்றையும் சேர்க்கவில்லை ; ஆனால், உ’மர் அவர்களோ, அதனைச் சிறிது விஸ்தீரணப் படுத்தியும், அதனைப் பச்சை வெட்டுக் கற்களையும் பேரீந்தின் மட்டைகளையுங் கொண்டு, அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) காலத்திலே அது கட்டப்பட்டிருந்த அதே அஸ்திபாரத்தின் மீதே கட்டி முடித்தும், அதன் தூண்களைப் புதிதாக மரத்தினாற் செய்தும் வைத்தார்கள். பிறகு உ’:துமானவர்கள் அதனை மாற்றியும், அதில் அதிகமான விஸ்தீரணங்களை யேற்படுத்தியும்,

---

வலிமை”யாம். எனவே, :கிப்’லாவின் நோக்கமே ஒற்றுமையாயிருக்கிறது. ஆனால், :கிப்’லாவின் அந்தரங்க நோக்கத்தை யறியாது, “திக்கை வணங்கும் துலுக்கர்” என்றொரு கவிவாணவர் வரைந்து வைத்துளார். அவரைச் சார்ந்தவர்கள் இதனைப் படித்துப்பார்க்கக் கடவர் : “நீங்கள் (தொழும்பொழுது) உங்கள் முகங்களைக் கிழக்குத்திசையை நோக்கியும் மேற்குத்திசையை நோக்கியும் திருப்பிக் கொள்வது சன்மார்க்க மாகமாட்டாது ; ஆனால், அல்லா(ஹ்)வைக் கொண்டும் இறுதி(த் தீர்ப்பு)நாளைக் கொண்டும்... ஈமான்கொண்டு...நடப்பவர்களே சன்மார்க்கர்க ளாவார்கள்...” (:குர். 2 : 177). ஆகவே, முஸ்லிம்கள் திக்கை வணங்குவ தில்லை ; ஆயின், ஒற்றுமையா யிருப்பான்வேண்டி ஒருமுகமாய் நிற்கின்றூர்கள் என்றறியக் கடவீர்களாக.

அதன் சுவர்களைச் செதுக்கப்பட்ட கருங்கற்களைக் கொண்டும் சுண்ணும்பைக் கொண்டும் நிருமித்து வைத்தும், அதன் தூண்களைச் செதுக்கப்பட்ட கருங்கற்களைக் கொண்டே கட்டியும், அதன் மேற்றளத்தைத் தேக்குமரத்தைக் கொண்டு முடித்தும் வைத்தார்கள்.[3]—(பு'க'ா. 8 : 62)

5. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"நான் மஸ்ஜித்'களை அலங்காரஞ் செய்து வைக்குமாறு கட்டளையிடப்பெற்றிருக்கவில்லை.''—(அபூ'த'ா—மிஷ். 4 : 7)

6. உ'மரவர்கள் மஸ்ஜிதை நிர்மாணிக்கக் கட்டளை யிட்டார்கள் ; மேலும், கூறினர்கள் : 'நான் ஜனங்களுக்கு மழையினின் றொதுங்க இடங்

---

3. நபிபெருமானர் காலத்திலே அவர்களுடைய மஸ்ஜித்' கரடுமுரடான சாமான்களைக் கொண்டே கட்டப்பட்டிருந்தது. 3-ஆவது க'லீ'பாவாகிய உ':துமான்(ரலி') காலத்தில் இஸ்லாமிய ராஜ்யத்தின் நிலைமை மிகவும் உயர்ந்து வந்துவிட்டது; என்னெனின், பாரசீக ரோம ராஜ்யங்களின் திரவியக் குவியல்களெல்லாம் இஸ்லாத்தின் தலைநகராய் விளங்கிய மதீனவுக்குள்ளே வந்து குவியத் தலைப்பட்டுவிட்டன. ஆதலால், அவர்களுடைய ஆட்சியின் காலத்து அம் மஸ்ஜித்' செதுக்கிய கற்களைக் கொண்டும் சுன்னச் சுதைகளைக் கொண்டும் ஒட்டுவினை மாடமாக நிருமிக்கப்படலாயிற்று. ஆனலும், அஃதொரு சர்வ சாதாரண எளிய நிர்மாணிப்பாயே இருந்துவந்தது ; அக் காலத்தில் எல்லா முக்கிய ஸ்தலங்களிலும் கட்டப்பட்டுவந்த எல்லா மஸ்ஜித்'களுமே இவ்வாருகத்தான் எளிய முறையிலே சர்வ சாதாரணமாய் எழுப்பப்பட்டு வந்தன. ஆடம்பர மென்பது அவற்றிலே அணுத்துணையும் காண்ப்படவில்லை. அடுத்துள்ள 'ஹதீ'ஃதையும் நோக்க.

கொடுக்கிறேன் ; இன்னம், சிவப்பு நிறத்தை அல்லது மஞ்சள் நிறத்தைக் கொண்டு வண்ணந் தீட்டாது ஜாக்ரதையா யிருக்கக் கடவீர்; என்னெனின், அதனால் நீர் ஜனங்களைச் சோதனைக்குள்ளே வீழ்ந்துவிடச் செய்துவிடுவீர்.'—(பு'க'ா. 8 : 62)

7. அனஸ் கூறினார்: அவர்கள் (பள்ளி வாசல்களை நிர்மாணிப்பதில்) ஒருவரோ டொருவர் போட்டி போடுவார்கள்; அப்பால் ஒரு சிலரைத் தவிர்த்து அன்னவர்கள் அவற்றின் பக்கல் செல்லவு மாட்டார்கள். —(பு'க'ா. 8 : 62)

8. உ'மரவர்கள் கூறினார்கள்: உருவச் சிலைகள்மீது சித்திரப்பதுமைகள் செதுக்கப்பட்டிருக்கும் காரணத்தால் நாங்கள் உங்கள் மாதாகோயில்களுக்குள்ளே நுழைய மாட்டோம்.

இன்னம், இப்'னு அ'ப்'ப'ாஸ், தன்பால் உருவச்சிலைகளை வகித்துக்கொண் டிருக்கும் மாதா கோயிலை யன்றி (வெறுமையா யுள்ள) மாதா

---

4. இவ் விஷயம் இக் காலத்திற்கு மிகமிகப் பொருத்தமுள்ளதாயே யமைந்து கிடக்கிறது; இற்றைநாள் முஸ்லிம்கள் பள்ளிவாசல் கட்டுவதற்கும், அதனைப் பழுதுபார்ப்பதற்கும், அதனுள்ளே குடிபுகுவதற்கும், அதற்கென்று பெருநிதி திரட்டுவதற்கும் எத்துணைப் பெரிய பிரயாசை யெல்லாம் எடுத்துவருகிறார்களோ, அதில் ஆயிரத்திலொன்றும் அப்பள்ளியுள் சென்று தொழுதுகொள்ள முயற்சி யெடுப்பதில்லை. அந்தோ பரிதாபம்! பரிதாபம்!! "ஆலயம் தொழுவது சாலவும் நன்று," என்றார் அவ்வையம்மையும்.

கோயிலில் தங்கள் தொழுகைகளை நிறைவேற்றிக் கொள்வதுண்டு.[5]—(பு'க'ா. 8 : 54)

9. ஆ'யிஷா பிராட்டியார் கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) குடியிருப் பிடங்களில் மஸ்ஜிதை' நிருமிக்கலா மென்றும், அது பரிசுத்த மாகவும் நறுமணமூட்டப் பெற்றும் இருக்க வேண்டு மென்றும் கட்டளை யிட்டுள்ளார்கள்.—(அபூ'த'ா—மிஷ். 4 : 7)

10. அபூ' ஹுரய்ரா (இவ்வாறு) கூறியிருக்கின்றார் :

ஒரு கறுப்பு மனுஷனோ, அல்லது ஒரு கறுப்பு மனுஷியோ மஸ்ஜிதை'ச் சுத்தம் செய்து கொண் டிருப்பது வழக்கம்; அப்பா லவன் இறந்துபோய் விட்டான். நபிகள் நாயகம் (சல்அ'ம்) அவனைக் குறித்து விசாரித்தார்கள்; அவன் இறந்து விட்டா னென்று அவர்கள் விடை யளித்தார்கள். அப் பொழுது அவர்கள் சொன்னார்கள்: "அவனைக் குறித்து ஏன் நீங்கள் எனக்கு அறிவிக்கவில்லை? அவனது—அல்லது, அவர்கள் சொன்னார்கள், அவளது—புதை குழிக்கு என்னை அழைத்துச் செல்லுங்கள்." ஆகவே, அப் பெருமானர் அவனது புதை குழிக்கு வந்து, அதன்மீது (ஜனா'ஜாத்) தொழுகையும் நடாத்தினர்கள்.[6]—(பு'க'ா. 8 : 72)

---

5. ஆகையால், அல்லா(ஹ்)வைத் தொழுதற் குரிய இடங்களிலே உருவப் படங்களும் உருவச் சிலைகளும் இருப்பது கூடாத காரியமா யிருக்கிறது.

6 இனியொரு 'ஹதீ':தின் பிரகாரம் அவளொரு பெண் ணென்றே அறியக் கிடக்கின்றது (பு'க'ா. 8 : 74). பள்ளிவாசல்

11. ஸஹ்ல் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) ஒரு ஸ்திரீயின்பால் (இவ்வாறு) தூது போக்கினர்கள் :—

"எனக்காக மரத் துண்டுகளைக் கொண்டு, அதன்மீது நான் அமரும் பொருட்டு (ஒரு மின்ப'ரை)ச் செய்து தருமாறு உம்முடைய தச்ச அடிமைக்குச் சொல்லக்கடவீர்."[7]—(பு'க'ா. 8 : 64)

12. மய்மூனு கூறினர்: நபிகள் நாயகம் (சல்அ'ம்) பாயின்மீது (நின்று) தொழுது கொள்வதுண்டு.—(பு'க'ா. 8 : 21)

13. அனஸ் கூறினர்: நாங்கள் நபிகள் திலகத்துடனே (சல்அ'ம்) நின்று தொழுவதுண்டு; அப்பொழுது எங்களினின் ஒருவர், ஸுஜூதில் (அவர்களது முன்னெற்றி தரையில்) படக்கூடிய இடத்திலே உஷ்ணத்தின் கொடுமையின் காரணத்தால் தமது வஸ்திரத்தின் ஒரு மூலையை விரித்து வைத்தார்.[8]—(பு'க'ா. 8 : 23)

---

சுத்தம் செய்வதற்கு அக்காலத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்ததென்றும், அவ் வேலையில் ஈடுபட்டிருந்தவர் நபிபெருமானுல் பெரிதும் கௌரவிக்கப்பட்டு வந்தாரென்றும் அறியக்கிடக்கிறது. ஆயின், இக்காலத்தில் பள்ளிவாசல் உத்தியோகஸ்தர்களின் மதிப்பு இருந்தவா றென்னே!

7. அந்த மின்ப'ர் வெள்ளியன்று ஜுமுஆ'த் தொழுகையின் பொழுது உபன்யாசம் செய்வதற்கே உபயோகமாகி வந்தது. அந்த மஸ்ஜிதில் இந்த மின்ப'ரும் பாய்களுமே சாமக்கிரியைகளாய்க் காணப்பட்டுவந்தன.

8. இதனல் விளக்கமாவது யாதெனின், தொழுகையென்பது சிற்சில வேளைகளில் வெறுந்தரையிலே நிறைவேற்றப்பட வேண்டியதாயிருந்துவந்தது என்பதேயாம்.

14. ப்'ராயிப்'னு ஆ''ஜிப்' தமதில்லத்திலிருந்த மஸ்ஜிதி'லே கூட்டத்துடனே—(இமாம்-ஜமாஅ'த் துடனே) தொழுதுகொண்டார்.[9]—(பு'க'ா. 8 : 46)

15. இப்'னு உ'மர் (இவ்வாறு) கூறியிருக்கின்றார்: நபிகள் திலகம் (சல்அ'ம்) சொன்னார்கள்:

"உங்கள் தொழுகைகளில் ஒரு பகுதியை உங்களில்லங்களிலே தொழுதுகொள்ளக் கடவீர்கள்; மேலும், அவற்றினைச் சவக்குழிகளாகச் செய்துவிடாதீர்கள்."[10]—(பு'க'ா. 8 : 52)

16. அபூ' ஹுரய்ரா கூறினார்: சு'ப்'பாவில்[11] வசித்து வந்தவர்களில் எழுபது பேர்களை யான்

---

9. இந்த 'ஹதீ'ஃதைக் கொண்டு, ஒரு தனி மனிதன் தனது சொந்த இல்லத்திலே பிரத்தியேக மஸ்ஜிதை' ஏற்படுத்திக்கொள்ளலா மென்றும், அதில் இமாம்-ஜமாஅ'த்துடனேயும் தொழுகை நிறைவேற்றப்படலா மென்றும் அறியக்கிடக்கின்றது. எனினும், இதனால் அம்மஸ்ஜித்' தனக்குரிய (ஒருவரது) சொந்த வீடென்னும் உரிமையை யிழந்து, பொதுமன்றமாக மாறிவிடமாட்டாது என்க.

10. இதனால் விளங்கக்கிடப்பது யாது? தொழுகையென்பது பள்ளிவாசலிலே இமாம்-ஜமாஅ'த்துடனே நியமமாய் நிறைவேற்றப்பட வேண்டுவதா யிருக்கிறது; ஆயின், 'தஹஜ்ஜுத்', ஸுன்னத் போன்ற தொழுகைகள் வீட்டிலே தொழுதுகொள்ளப் படலாம்; அல்லா(ஹ்)வின் திருநாமம் ஜபிக்கப்படாத, தியானிக்கப்படாத, பஜிக்கப்படாத இல்லம் இடுகாட்டுக்கே இணையாக்கப் பட்டிருப்பதைக் கவனிப்பீர்களாக.

11. சு'ப்'பா வென்னப்படும் திண்ணைத் தாழ்வாரம் மதீனாவிலுள்ள மஸ்ஜிதி'ன் வடபால் அமைந்திருந்தது; அதன் மேற்கூரை மூடப்பட் டிருந்தது; ஆனால், இருமருங்கும் திறந்தே யிருந்தன. அதில் :குர்ஆனும் 'ஹதீ':தும் ஓத நாடியவர்கள் தாமதித்து வந்தார்கள்; அவர்களின் எண்ணிக்கை ஒருசமயம் நானூறுவரை உயர்ந்துவிட்டதென்று உரைக்கப்படுகிறது. அவர்களுள்ளே

கண்டிருக்கிறேன்; இன்னம், அன்னவர்களில் ஒருவருக்கேனும் மேலாடையொன்று இருக்கவில்லை.—(பு'கா'. 8 : 58)

17. அபூ' ஹுரய்ரா கூறினர்: சு'ப்'பாவில் வசித்து வந்தவர்கள் முஸ்லிம்களின் விருந்தினர்களா யிருந்து வந்தார்கள். அவர்களுக்குத் தங்கி வசிக்கக் குடும்ப மொன்று மில்லை; வேறொரு பொருளும் இருந்தது மில்லை.—('திர்மி. 35 : 36)

18. அபூ' ஹுரய்ரா கூறியுள்ளார்: யான், அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) (பின்வருமாறு) சொல்லக் கேட்டேன் :—

"என்னுடைய இந்த மஸ்ஜிது'க்கு எவன் வருகிறானோ, இன்னமவன் தான் கற்றுக்கொள்ள அல்லது கற்றுக்கொடுக்க விழையும் ஏதேனுமொரு நன்மைக்காக வன்றி (வேறெதற்காகவும்) வாராதவனா யிருக்கிறானோ, அன்னவன் அல்லா(ஹ்)வின் பாதையில் ஜிஹாதி'ல் ஈடுபட்டவனேபோ லிருக்கிறான். இன்னம், எவனொருவன் இதைப் பார்க்கினும் வேறு காரியத்திற்காக வருகிறானோ, அவன் அயலானொருவனது பொருள்மீது (ஆசையான) பார்வைகளைப்போடுகிறவனைப்போ லிருக்கிறான்."[12] —(இப்'னுமா—மிஷ். 4 : 7)

---

ஸஃ'தி'ப்'னு அபீ'வ:க்:காஸ் போன்ற செல்வர்களும் இருந்தே வந்தார்கள்; எனினும், அநேகமாய் அபூ' ஹுரய்ரா போன்ற பரம எளிய தோழர்களே அங்கு அதிகம் வசித்துவருவா ராயினர். 'ஹதீ'. 17 நோக்க.

12. எனவே, மஸ்ஜி தென்பது, முஸ்லிமுக்கோ, முஸ்லிம் சமுதாயத்துக்கோ நன்மைபயக்கத் தக்கதாயுள்ளதைக் கற்கவோ,

19. ஆ'யிஷா பிராட்டியார் கூறினர்: ஒரு நாள் அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) அவர் களை எனதில்ல அறையின், வாயிலருகில் கண்டேன்; அப்பொழுது 'ஹப'ஷீகள் பள்ளி வாசலில் (ஈட்டி) வேடிக்கை காட்டிக்கொண் டிருந்தார்கள்; மேலும், நான் அவர்களது வேடிக்கையைப் பார்த்துக் கொண் டிருந்தக்கால், அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) என்னைத் தங்கள் மேலாடையைக் கொண்டு மறைத்துக் கொண்டார்கள்.[13]—(பு'க'ா. 8:69)

20. அபூ' ஸலமா (இவ்வாறு) கூறினர்: 'நபிகள் நாயகம் (சல்அ'ம்) (பின்வருமாறு) சொன்னதை நீர் செவிமடுத்தீரா வென்று யான் உம்மை அல்லா(ஹ்)வின் நாமத்தைக் கொண்டு இறைஞ்சிக் கேட்கிறேன்,' என்று 'ஹஸ்ஸா னி'ப்னு :தாபி'த் அபூ' ஹுரய்ராவைச் சாக்ஷிக் கழைத்துக் கூறியதை யான் கேட்டேன் :—

---

கற்றுக் கொடுக்கவோ ஏற்படுத்தப்பட் டுள்ள இடமா யிருக்கின் றது; எனவேதான், இந்தப் புண்ணியஸ்தலம் இஸ்லாமிய கலாசாரத்துக்குரிய மத்திபஸ்தானமா யிருந்துவருகிறது.

13. திருநபியின் மஸ்ஜித்'ன் முன்னே பெரியதொரு முற்ற வெளி இருந்தது; அங்கே ஜனங்கள் அதிகம் குழுமுவார்கள்; அவ் விடத்தில், அநேகம் 'ஹதீ':துகள் கூறியிருப்பதே போல, அடிக்கடி கூடாரங்கள் அடிக்கப்படுவ துண்டு. அதன் ஒருபால் அதிகமான மாணுக்கர்கள் இடவசதி செய்துகொடுக்கப் பெற்றிருந் தார்கள். அந்த முற்ற வெளியிலேதான் 'ஹப'ஷீகள் தங்கள் ஈட்டி விளையாட்டைச் செய்து காண்பித்தார்கள். ஆ'யிஷா பிராட்டியாரின் இல்ல அறை இந்த முற்றத்தை நோக்கியே தனது வாசற்படியை வகித்துக்கொண் டிருந்தது.

“ஏ ‘ஹஸ்ஸான்! அல்லா(ஹ்)வின் தூதரின் சார்பாய் நீர் பதில்கூறக் கடவீர்; ஏ அல்லா(ஹ்)! நீ அவரைப் பரிசுத்த ஆன்மாவைக் கொண்டு உதவி புரியக் கடவாய்!”

(அதற்கு) அபூ’ ஹுரய்ரா ஆமென்று விடையளித்தார்.[14] —(பு’க’ா. 8 : 68)

21. ஜாபி’ர் கூறினர்: நான் நபிகள் திலகத்திடம் (சல்அ’ம்) வந்தேன்; அவர்கள்....முற்பகல் முன்னேரத்திலே—(ழு’‘ஹாவில்) மஸ்ஜிதி’ல் அமர்ந்திருந்தார்கள்; “இரண்டு ரக்ஆ’த் தொழுதுகொள்,” என்று (எனக்குச்) சொன்னார்கள்; இன்னம், எனக்கவர்கள் ஒரு கடன் கொடுக்க வேண்டியவர்களாயிருந்தார்கள்; ஆகவே, அவர்கள் அதனை எனக்குத் திருப்பிக் கொடுத்தார்கள்; மேலும், எனக்குக்

---

14. ‘ஹஸ்ஸானிப்’னு :தாபி’த் ஒரு பெரும் புலவர். இந்த ‘ஹதீ’:தில் கூறப்பட்டுள்ள சம்பவம் ‘ஹ‘ஜ்ரத் உ’மர்(ரலி’) காலத்திலே நடைபெற்ற தொன்றாகும். அப்புலவர் பெருமான் மஸ்ஜிதி’லிருந்து ஒரு கவியைப் பாடிக்கொண் டிருந்தார்; அது கண்டு உ’மர்(ரலி’) அவ்வாறு செய்யக்கூடாதெனத் தடுத்துவிட்டார்கள். இதற்கந்த ‘ஹஸ்ஸான் அபூ’ஹுரய்ராவைச் சாக்ஷிக்கழைத்து, நபிபெருமான் காலத்திலே தாம் அம் மஸ்ஜிதி’லிருந்து அப்பெருமானார் திருமுன்பினிலே கவிகளைப் பாடியதுண்டென்று கூறினர். “:திர்மி‘தீ”யில் காணப்படும் ஒரு ‘ஹதீ’:தின்படி, நபிகள் திலகத்தின்(சல்அ’ம்) கொடிய விரோதிகள் தங்கள் கவிகளில் நம்பெருமானைக் குறித்து அசப்பிய நீச நிந்தனைகளை யெல்லாம் யாத்துப் பாடிவந்தமையால், அவற்றிற்குரிய தக்க வாயாப்புக்களை யெல்லாம் கவிகளைக் கொண்டே பதில் கொடுக்குமாறு நபிகள் நாதர் இந்த ‘ஹஸ்ஸானைக் கோருவதுண்டென அறியக்கிடக்கின்றது. இக்காரியம் அம் மஸ்ஜிதி’லேதான் நடைபெற்றுவந்தது.

கொடுக்க வேண்டுவதற்கு மேலேயும் சேர்த்துக் கொடுத்தார்கள்.—(பு'க'ா. 8:59)

22. ஆ'யிஷா பிராட்டியார் கூறினர்: ஸஃ'த்' அகழ் யுத்தத்திலே தமது கரத்தின் மத்திய உதிர நாணத்தில் காயமடைந்துவிட்டார்; மேலும், நபிகள் திலகம் (சல்அ'ம்) (அவருக்காகத்) தாங்கள் சமீபத்தி லிருந்துகொண்டு அன்னவரை (அடிக்கடி)ப் போய்ப் பார்ப்பதற்காக மஸ்ஜிதி'ல் கூடார மொன்றை அடிக்கச் சொன்ஞர்கள்.—(பு'க'ா. 8:77)

23. ஆ'யிஷா பிராட்டியார் (பின்வருமாறு) கூறினர்: அரபிகளுள் ஓரினத்தவர் ஒரு கறுப்புப் பெண்ணடிமையை வைத்துக்கொண் டிருந்தனர்; அவளை அவர்கள் விடுவித்து விட்டார்கள்....பிறகு அவள் இஸ்லாத்தைத் தழுவிக்கொண்டாள். அவள் தனக்காக மஸ்ஜிதி'ல் ஒரு சிறு கூடாரத்தை யடிக் கச்செய்து கொண்டாள் என்று ஆ'யிஷா பிராட்டி யார் கூறினர்.[15]—(பு'க'ா. 8:57)

24. அனஸ் (பின்வருமாறு) கூறியுள்ளார்: உ'க்லினின்றுள்ள ஒரு கூட்டத்தினர் நபிகள் நாயகத்திடம் (சல்அ'ம்) வந்தார்கள்; மேலும், அவர்

---

15. ஒரு பெண்மணி மஸ்ஜிதுள் நுழையமட்டும் அனுமதி யளிக்கப்பெற்றதுடன் போகாது, அதிலே தாமதித்து வசிக்க வுங்கூட இடமளிக்கப் பெற்றுளாள்; அவளொரு விடுதலைபெற்ற அடிமையாகவும், அம்மஸ்ஜிதி'லே கூடாரமடித்து வசிக்க அனுமதி யளிக்கப் பெற்றவளாகவும் இருந்து வந்தமையால், அவள் அம் மஸ்ஜிதி'லேயே நெடுநாள்மட்டும் தாமதித் திருந்தாளென்றே கொள்ள இடமிருக்கிறது.

கள் சு'ப்'பாவிலே தங்கியிருக்கச் செய்யப் பெற்ரூர் கள்.—(பு'க'ா. 8 : 58)

25. அபூ' ஹுரய்ரா கூறினர்: நபிகள் பிரான் (சல்அ'ம்) நஜ்தை' நோக்கிச் சில குதிரை வீரர்களை அனுப்பினர்கள்; மேலுமவர்கள் ப'னீ 'ஹனீ'பா கூட்டத்தைச் சார்ந்த, :துமாமா இப்'னு உ:தால் என்றழைக்கப்பட்ட ஒருமனிதனைக் கொண்டுவந்து சேர்த்தார்கள்; அவர்கள் அவனை மஸ்ஜிதி'ன் தூணென்றிலே கட்டிவைத்தார்கள்.[16] —(பு'க'ா. 8 : 76)

26. அனஸ் கூறினர்: நபிகள் நாயகம் (சல்அ'ம்) ப''ஹ்ரய்னி லிருந்து தங்கள்பால் சில பணத்தொகை வரப்பெற்ரூர்கள்; (அப்பொழுது) "அதனை மஸ்ஜிதி'ல் வையுங்கள்," என்று அவர்கள் சொன்னர்கள். இன்னம், அல்லா(ஹ்)வின் திருத்தூதர் பால் (சல்அ'ம்) எப்பொழுதுமே கொண்டுவரப்பட்ட பணத்திலெல்லாம் அதுவே மிகப்பெரிய தொகையா யிருந்தது. பிறகு, அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) தொழுகைக்காக வெளிவந்தார்கள்; ஆனல், அதனை—(அப்பணத்தை) அவர்கள் ஒரு சிறிதும் கருதிப்பார்க்க வில்லை. அவர்கள் தொழு கையை முடித்துக் கொண்டபொழுது, வெளியில் வந்து அதனருகிலே . அமர்ந்தார்கள்; மேலும்,

---

16. நிச்சயமாக இம்மனிதன் ஒரு விக்ரஹத் தொழும்ப னென்றும், அன்னவன் மஸ்ஜிதி'னுள்ளே அடைத்து வைக்கப் பட்டானென்றும் நாம் நன்குணர்ந்து கொள்ளலாம்.

(அதிலிருந்து) பார்த்த பார்த்த பேருக் கெல்லாம் அள்ளி யள்ளிக் கொடுத்தார்கள்.[17]—(பு'க'ா. 8 : 42)

27. ஸாயிப்' கூறினார்: யான் மஸ்ஜிதி'ல் நின்றுகொண் டிருந்தேன்; அப்பொழுது எவரோ ஒருவர் என்பால் ஒரு சிறு கல்லை எறிந்தார். நான் (திரும்பி) அவரைப் பார்த்தேன்; அன்னவர் உ'மருப்'னுல் க'':த்':தாப'ா யிருந்தார்; 'நீர் போய் அவ் விருவரையும் என்பால் கொண்டுவாரும்,' என்று அவர் கூறினார். ஆகையால், நான் அவர்களை

---

17. நபிகட் டிலகத்தின் காலத்திலே மஸ்ஜிதானது அல்லா(ஹ்)வை வணங்குவதற்கு அதிகம் உபயோகமாய் வந்ததோடு மட்டும் போகாது, வேறுபல காரியங்களுக்காகவும் அது பயன் பட்டே வந்திருக்கிறது. இந்த 'ஹதீ':தில் கூறப்பட்டிருப்பதே போல், அது பண்டாரமாகவும்—(க''ஜானுவாகவும்) பயன்பட் டிருக்கிறது; அதுகாலை அம் முஸ்லிம்களுக் கென்று தனியான திரவியசாலை யொன்றும்—(பை'த்துல் மால்) இருந்துவரவில்லை. இந்த 'ஹதீ':தால் இன்னமொரு பெரிய தத்துவமும் வெளிப் படாது போகவில்லை: 'ஓடும் பொன்னும் ஒன்றே' என்னுமா போலே நம் மஹானுபாவர் அங்குவந்து குவடிட்டுக் கிடந்த திரவியக் குவியலை ஒருசிறிதும் கருதிப்பார்த்தன ரில்லை. அங்கே ஓரிலக்ஷம் தி'ர் ஹம்—(சுமார் 25,000 ரூபாய்வரை) வந்து கொட்டிக் கிடக்கிறது; நபிகளுயகர் கடைக்கண்ணாலும் அதனைக் கவனிக்க வில்லை. வந்தவர் போனவர்க் கெல்லாம் அள்ளியள்ளி யிறைத் தார்கள்; ஆனால், தங்களில்லத்துக்கு ஒருபைசாவும் அதிலிருந்து எடுத்தேக வில்லை; அதினின்று எதிர்காலத் தேவைக் கென்றும் ஒருசிறிதும் மிகுத்துவைக்க வில்லை.

"கடிப்பிகு கண்முரசம் காதத்தோர் கேட்பர்
இடித்து முழங்கியதோர் யோசனையோர் கேட்பர்
அடுக்கிய மூவுலகும் கேட்குமே சான்றோர்
கொடுத்தார் எனப்படும் சொல்"—நாலடி.

அன்னவர்பாலே கொண்டுவந்து விட்டேன்; அப்பொழுதவர், ‘நீங்கள் யார்? அல்லது எங்கிருந்து வருகிறீர்கள்?’ என்று வினவினர்; ‘நாங்கள் ‘:தாயி‘ப் ஜனங்களி லுள்ளவர்கள்,’ என்று அவர்கள் விடை யளித்தார்கள். (அதற்கு) அவர் கூறினர்: ‘நீங்கள் இந்நகரவாசிகளுள் சேர்ந்தவர்களா யிருந்திருப்பின், நான் உங்களைத் தண்டித்திருப்பேன். அல்லா(ஹ்)வின் திருத்தூதரின் (சல்அ’ம்) மஸ்ஜிதி’னில் நீங்கள் உங்கள் தொனிகளை உயர்த்துகிறீர்களோ?’’—(பு’க’ா. 8 : 83)

28. மாலிக் கூறினர்: உ.’மர் மஸ்ஜிதி’ன் ஒரு பக்கத்தில் பு’‘:தய்‘ஹா என்றழைக்கப்பட்ட ஒரு முற்ற வெளியை ஏற்படுத்தினர்; மேலும், கூறினர்: ‘எவனொருவன் இரைந்துபேச, அல்லது பாடல்களைப் பாட, அல்லது தனது தொனியை உயர்த்த விரும்புகிறானே, அன்னவன் இந்த முற்ற வெளிக்குச் செல்லக் கடவன்.’[18]—(முவத்–மிஷ். 4 : 7)

29. அனஸ் கூறினர்: நபிகள் திலகம் (சல்அ’ம்) சொன்னார்கள்:—

“மஸ்ஜிதி’ல் எச்சில் துப்புவது பாபமான

---

18. இதனால் பள்ளிவாசலிலிருந்து பாடல்களைப் பாடுவதும், இரைச்சலிட்டுக் கூச்சலிடுவதும், கத்துவதும் கூடாவென் றறியக் கிடக்கின்றன. பள்ளிவாசல் நிச்சப்தமான நிஷ்டைக்குரிய அல்லா(ஹ்)வின் ஆலயமா யிருந்துவருதலினால், அங்கே மன ஒருமைப்பாட்டைக் கலைக்கக்கூடிய முறையிலே சப்தமிட்டுக் கத்துவது கூடாத காரியமே யாகும். அல்லா(ஹ்)வின் பள்ளிவாசல் சத்திரமுமன்று, சாவடியு மன்று; சந்தைகூடும் இடமு மன்று.

காரியம்; அதற்குப் பிராயச் சித்தம் அதனைப் புதைப்பதே யாகும்."[19]—(பு'கா. 8 : 37)

30. ஆ'யிஷா பிராட்டியார் அறையலுற்றார்: நபிகள் நாயகம் (சல்அ'ம்) எனக்குச் சொன்னார்கள் :—

"மஸ்ஜிதி'லிருந்து (அந்தப்)பாயை எனக்கெடுத்துக் கொடு."

(அப்பொழுது) நான் மாதவிடாயி லிருக்கிறேனென்று கூறினேன். (இதற்கு) அவர்கள் சொன்னார்கள் :—

"உனது மாதவிடாய் உன்னுடைய கையில் இல்லையே!"—(மூஸ்—மிஷ். 3 : 12)

31. அபூ' ஹுரைய்ரா கூறினார்: காட்டரபியொருவன் எழுந்து நின்று, மஸ்ஜிதி'ல் மூத்திரம் பெய்யத் துவக்கினான். ஜனங்களெல்லாம் அவனைப் பிடித்துக்கொள்ளப் பார்த்தார்கள்; ஆயின், நபி பெருமானார் (சல்அ'ம்) அவர்களுக்குச் சொன்னார்கள் :—

19. மஸ்ஜிதி'ல் எச்சில் துப்புவது கூடாதெனத் தடுக்கப்பட்டிருக்கிறது; என்னெனின், அஃது அல்லா(ஹ்)வைத் தொழுதற்குரிய மகா பரிசுத்த ஸ்தலமா யிருக்கின்றது; இன்னம், எல்லா ஜமாஅ'த்தாரும் அடிக்கடி கூடுமிடமாகவும் இருந்துவருகின்றது. மஸ்ஜிதி'ன் சுவரொன்றிலே சளியைக் கண்டபொழுது, நபிகள் பெருமானது மனம் எவ்வாறு புண்பட்டு விட்டதென முன்னமே நாம் அறிந்துளோம் (பு'கா. சுருக். 4 : 17). "அதற்குப் பிராயச் சித்தம் அதனைப் புதைப்பதே," என்று ஏன் கூறப்பட்டதெனின், அம் மஸ்ஜிதி'ன் தரை இலேசாயுள்ள பருக்கைக் கற்களாலேயே பரத்தப்பட்டிருந்தது.

“ அவனைச் சும்மா விட்டுவிடுங்கள் ; ஒரு வாளித் தண்ணீர் கொண்டுவந்து அவனது சிறுநீர்மீது வார்க்கவுங் கடவீர்கள் ; ஏனென்றால், ஜனங்களை மரியாதையுடன் நடத்தவே நீங்கள் உண்டுபண்ணப் பட்டிருக்கிறீர்கள் ; ஆனால், அவர்களைக் கடுமையாய் நடத்த நீங்கள் உண்டுபண்ணப்பட் டில்லை.”[20]—(பு’க’ா. 4 : 58)

32. அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) மஸ்ஜிதி’ல் பாடல்களைப் பாடுவதையும், அதிலிருந்து விற்கல் வாங்கல் செய்வதையும், மஸ்ஜிதி’ல் வெள்ளிக் கிழமையில் தொழுகைக்கு முன்னே ஜனங்கள் வட்டமாய்க் குந்தி (அரற்றலடித்துக் கொண்டு) இருப்பதையும் தடுத்திருக்கிறார்கள்.[21]—(அபூ’த’ா— மிஷ். 4 : 7)

---

20. அவனொரு வனவாசியான காட்டரபியா யிருந்துவந்த மையால், மஸ்ஜிதி’ன் மகா பரிசுத்தத் தன்மையை அறியக்கூடாத வனா யிருந்தான். அறியாத மாக்களுக்கு இஸ்லாத்தில் அறிந்த வர்கள் அறிவுறுத்திப் பழக்குதல் வேண்டும். இதுதான் முறை. அறியாத ஒருவனை அடித்துவிடுவது பெருங் காரியமன்று.

21. சென்ற ‘ஹதீ’. 20-இல் கூறப்பட் டிருப்பதேபோல், நபிகள் திலகம் ‘ஹஸ்ஸானைத் தம்முடைய கவிகளை மஸ்ஜிதி’லே யிருந்து பாட அனுமதி யளித் திருந்தார்கள் ; என்னெனின், அன்னவை மதசம்பந்தமாயுள்ள புனிதத் தன்மையைப் பெற்றுக் கொண்டிருந்தன என்றதனா லென்க. மஸ்ஜிதி’ல் விற்பதும் வாங்குவதும் கூடாவென்று தடுக்கப்பட்டுள்ளன ; என்னெனின், பள்ளிவாசல் தனக்குரிய புனிதத்தை யிழந்து பகிரங்க ப’‘ஜாராக மாறிப் போய்விடுவது கூடா தென்பதே இதன் நோக்கமா யிருக்கிறது. பள்ளியில் குந்திப் பாட்டுப்பாடுவதும், கண்டபடி யிரைச்சலிட்டுக் கத்துவதும் தொழுகையில் மனிம் ஒருமைப்

33. அபூ' ஸஈ'து'ல் கு'த்'ரீ கூறினர்: நபிகள் நாயகம் (சல்அ'ம்) ஒருபன்யாசம் செய்தார்கள்; இன்னம், சொன்னர்கள்:........

"மஸ்ஜிதி'னுள்ளே பிரவேசிக்கத் தக்க மாதிரியிலே (வீட்டு) வாசற்கதவுகள் திறந்துவிட்டு வைக்கப் படுவது கூடாது; அபூ'ப'க்ரின் கதவை யன்றி, ஏனைக்கதவுகள் (எல்லாம்) மூடப்படல் வேண்டும்.[22] —(பு'க'ா. 8: 80)

34. :குர்ர்த் (பின்வருமாறு) கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) இவ்விரண்டு பூண்டுகளையும், அஃதாவது, பச்சை வெங்காயத்தை யும் வெள்ளை வெங்காயத்தையும் தின்னக்கூடா

---

படுவதைக் கலைத்துக் குலைத்துவிடு மென்க. இன்னம், வெள்ளிக் கிழமையில் ஜு'முஆ'வுக்கு முன்னே ஜனங்கள் கூட்டங் கூட்டமாய்க் குந்தி அரற்றலடிப்ப தென்பது, தொழுகையாளி களுக்கு வேண்டிய அமைதியையும் அழகிய நிச்சப்தத் தன்மை யையும் கலைத்துவிடக் கூடியதாய்க் காணப்படாநின்றது. இக் காரணத்தினுலேதான் எம் முஸ்லிம்கள் மஸ்ஜிதி'ன் முன்னே தொழுகை வேளைகளில் மேளம் முதலிய வாத்தியகோஷம் செய்வதையும், வேறுவிதக் கூச்சல் விளைப்பதையும் மிகவாய் வெறுத்து வருகிறார்கள். நிச்சப்த நிஷ்டையே இஸ்லாத்திற் குரியதா யிருக்கிறது.

22. நபிகள் திலகத்தின்(சல்) இல்ல அறைகளெல்லாம் மஸ்ஜி தி'னுள்ளே வரக்கூடிய முறையிலே வாசல்கள் அமைக்கப் பெற் றிருந்தன; வேறு சில இல்லங்களும் அவ்வாறே அமைந் திருந்தன. பிறகு அவ் வாயில்களெல்லாம் அடைக்கப்பட்டுப் போய்விட்டன; என்னெனின், பள்ளிவாசல் பகிரங்க ரஸ்தாவாக உபயோகிக்கப்படக் கூடாதென்பதே அதன் நோக்கமா யிருந்து வந்ததென்க.

தெனத் தடுத்துவிட்டார்கள்; இன்னம், சொன்ஞர்கள்:—

"எவனொருவன் அவற்றினைத் தின்னுகிருனே, அன்னவன் நம்முடைய மஸ்ஜிதை' நெருங்காதிருக்கட்டும்."

மேலும், சொன்ஞர்கள்:—"நீங்கள் அவற்றினைத் தடுக்க முடியாது தின்னவேண்டி யிருப்பின், அப்பொழுது (தாளிதத்தால்) வேவித்துக்கொண்டு அவற்றின் கெட்ட நாற்றத்தைப் போக்கிவிடக் கடவீர்கள்."[23]—(அபூ'த'ா—மிஷ். 4 : 7)

35. அபூ' மஸ்லமா கூறினர்: 'நபிகள் பெருமாஞர் (சல்அ'ம்) பாதரக்ஷை யணிந்திருந்தபடியே தங்கள் தொழுகையை நிறைவேற்றினர்களோ?' என்று யான் அனஸ் இப்'னு மாலிக்கை வினவினேன். இதற்கவர் ஆமென்று விடையளித்தார்.[24]—(பு'க'ா.8 : 24)

---

23. வெங்காயமும் உள்ளிப்பூண்டும் இவ்வாறு தடுக்கப்பட்டிருப்பதன் நோக்கம், அவற்றின் அருவருப்பான கெட்ட நாற்றம் அருகினி லிருப்பவர்களுக்கு அரோசிகத்தை விளைக்காதிருக்கவேண்டு மென்பதேதான். துர்நாற்றச் சுருட்டைக் குடித்துவிட்டு வந்து ஜமாஅ'த்தில் நின்று, அருகினி லிருப்பவர்களை வாட்டும் "சீதேவிகள்" இந்த 'ஹதீ'ஃதைப் படித்துப் பார்ப்பார்களாக.

24. இந்த 'ஹதீ':தால் விளக்கமாவது யாதெனின், முஸ்லிம்கள் சுத்தமான பாதரக்ஷையுடனே தொழுது கொள்ளலாம் என்பதேயாம். இதனுல் ஒரு முஸ்லிம் பள்ளியுள்ளும் பரிசுத்தப் பாதரக்ஷையுடனே புகுதலாமென்று ஏற்படுகின்றது; ஆனுல், அந்தப் பாதரக்ஷை மகா பரிசுத்தமா யிருக்கவேண்டு மென்பது

36. அ'ப்'து'ல்லா ஹிப்'னு உ'மர் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) காலத்திலே மஸ்ஜிதி'னுள்ளே நாய்கள் வருவதும் வெளியினில் போவதுமா யிருந்தன. ஆனல், அவர்கள் அக் காரணத்தால் தண்ணீர்கொண்டு (அம்மஸ்ஜிதை') அலம்பவில்லை.—(பு'க'ா. 4: 34)

37. அபூ' உஸய்த்' கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"உங்களு ளொருவர் மஸ்ஜிதி'ல் நுழையும் பொழுது, 'ஏ அல்லா(ஹ்) கருணையின் கபாடங்களை எனக்கு நீ திறக்கக் கடவாய்,' என் றவர் கூற வேண்டும்; இன்னம், அன்னவர் வெளியிற் செல்லுங்கால், 'ஏ அல்லா(ஹ்)! யான் உன்பாலிருந்து உனது அனுக்ரஹத்தினின்று (சிறிதை) இறைஞ்சுகின்றேன்,' என்று கூறவேண்டும்."—(முஸ்—மிஷ். 4: 7)

---

முக்கிய முதல் நிபந்தனையாம். அக்காலத்தில் அந்த நபியின் மஸ்ஜிதி'ன் தரையிலே பருக்கைகள் விரிக்கப்பட் டிருந்தபடியால், மிதமிஞ்சிய உஷ்ணம், அல்லது மிகவான குளிர் இருப்பதைத் தடுக்கப் பாதரக்ஷைகள் தேவைப்பட் டிருக்கலாம். இக்காலத்தில் எங்குமுள்ள எல்லா மஸ்ஜித்'களிலும் (மக்கா, மதீன உட்படப்) பாதரக்ஷைகள் பள்ளிக்கு வெளியிலேயே விடப்படுகின்றன; எனினும், அதியுஷ்ணம், அல்லது மிகக்குளிர், அல்லது வேறேதேனும் தக்க காரணம் இருந்தால், பாதரக்ஷையுடனே—அது மிகப் பரிசுத்தமா யிருப்பின்—பள்ளியுள் சென்று தொழுது கொள்ளலாம். ஆனல், முஸ்லிமல்லாதவர் மஸ்ஜிது'ள் நுழைவதென்பது வேறு விஷயம்; அன்னவர் தயா விஷயமாகவே அனுமதி யளிக்கப்பெற்று, உள்ளே நுழைய விடப்படுகின்றார்; ஆதலால், மரியாதையின் பொருட்டு, அவர் பாதரக்ஷைகளை வெளியிலே கழற்றிவிட்டு விடுதல் வேண்டும் என்க.

# அத்யாயம்—6

## அ‘தானும் இ:காமத்தும்

“ஏ ஈமான் கொண்டவர்காள்! வெள்ளிக் கிழமையன்று தொழுகைக் கென்று கூப்பிடப் படுங்கால், அதுபொழுது அல்லா(ஹ்)வின் ஞாபகத்தின் பக்கல் நீங்கள் விரைந்தேகக் கடவீர்கள்; மேலும், (அதுபொழு துங்கள்) தொழிலை விட்டு விடக் கடவீர்கள்” (:குர். 62 : 9).

அ‘தான் (இதன் அசல் தாத்பரியம், “அறிவித்தல்,” “பிரசித்தப் படுத்தல்” என்பதா யிருக்கிறது) என்னப்படுவது, தொழுகையின் காலத்தை அறிவித்து வைக்கும் ப்’ாங்கா யிருக்கிறது; ‘ஹதீ’. 3-இல் காணப்படுவதேபோல், முஸ்லிம்கள் ப்’ாங்கு சொல்லப்பட்ட வுடனே மஸ்ஜிது’க்கு, அல்லது ஒரு தொழுந்தலத்துக்குச் சென்று குழுமுகின்றனர். இ:காமத் (இதன் அசல் பொருள், “ஒரு வஸ்துவை ஸ்திரப்படுத்துதல்,” அல்லது “ஒரு காரியத்தைச் சாசுவதமாக்குதல்” என்பதா யிருக்கிறது) என்னப்படுவது, தொழுகையில் இமாம்—ஜமாஅ’த் நடைபெறப் போகிறதென்று ‘தக்பீ’ர் சொல்லி யறிவித்தலைக் குறிப்பதா யிருக்கிறது; ‘ஹதீ’. 4-இல் காணப்படுவதே போல், பள்ளியில் கூடியுள்ளவர்கள் இ:காமத் சொல்லப்பட்டவுடனே வரிசை வரிசையாய் எழுந்து நிற்கின்றனர்; அப்பால் இமாம் தொழுகையைத் துவக்குகின்றார். நுபு’வ்வத் வந்து, அப்பால் சிறிது காலத்துக்குள்ளே மக்காவில் தொழுகை யென்பது நிலை பெறுத்தப்பட்ட ஆதிமுதற்கொண்டே இமாம்-ஜமாஅ’த் தொழுகை நடைபெற்றுவந்த போதினும், அ‘தானும் இ:காமத்தும் மதீனாவுக்கு ஹிஜ்ரத் சென்ற பிறகே அனுஷ்டிக்கப் பட்டலாயின. அ‘தான் என்பது தொழுகைக்காக ஜனங்கள் மஸ்ஜிதி’ல் வந்து குழுமுமாறு கூப்பிடுவதா யிருப்பதோடு, அஃது இஸ்லாத்தின் மூலக் கொள்கைகளைப் பிரகடனப் படுத்துவ

தாகவுமே அமைந்து கிடக்கின்றது; முஸ்லிம் சமுதாயத்தினர் வாழும்ஒவ் வோ ரிடத்திலும் இந்த அ'தான்—(ப'ாங்கு) உரத்த குரலில் கூவப்படுகிறது; அஃது, இஸ்லாம் என்பதென்ன? அதன் முக்கிய நோக்கம் யாது? என்னும் விஷயங்களை இம்முழு உலகி னுக்கும் தினம் தினம் ஐந்து வேளைகளிலும் அறிவித்துப் பிரகடனப் படுத்துவதா யிருந்து வருகிறது. இதிலுள்ள ஷஹாத'த்திலே, இஸ்லாத்தின் மூலக் கோட்பாடுகள் பிரகடனப் படுத்தப்படுகின்றன: அவை, "அல்லா(ஹ்)வைத் தவிர்த்து வணக் கத்திற்குரியவன் (வேறெவனும்) இல்லை;"—அகில உலகினுக்கும் எஜமானாு யிருப்பவன் ஒரே ஆண்டவன்தான்;—மு'ஹம்மத்'நபி (சல்அ'ம்) அவனா லனுப்பப்பட்டுள்ள திருத்தூதரா யிருக்கிறார்கள் என்பனவே யாம். 'தக்பீ'ர் என்பதிலே, இப்பிரபஞ்ச கர்த்தா வாகிய அல்லாஹுத் த ஆ'லாவே மகாசக்தி வாய்ந்தவனா யிருக்கிறான்; ஆதலால், அவனுக்கே — வேறெவனுக்கு மன்று — முஸ்லிமா யிருப்பவர் முற்றிலும் சிரஞ்சாய்க்கின்றார் என்னும் உண்மை பிரசித்தப் படுத்தப்படுகிறது; இதற்குரிய மகாவாக்கியமாகிய "அல்லாஹு அக்ப'ர்" என்பது, "அ'தானில்" ஆறுமுறை கூறப் படுகிறது. 'ஹய்ய அ'லஸ்'ஸ'லாத் —(தொழுகைக்கு வரக்கடவீர்) என்று இருமுறை கூப்பிடுவதில் இம்மார்க்கத்தின் உண்மைச் செய்தி உரக்க உரைக்கப்படுகின்றது: அதுதான் அடியான் பாலுள்ள ஆண்டவன் சக்தியை வெளிக்கிளப்பி அடையப் பெறுவதா யிருந்துவருகிறது; அல்லாஹுத் த ஆ'லாவின் ஆழிய ஞானத்தை நேரடியாய்ப் பெறுதற்குரிய வழி அத் தொழுகை யாகவே இருந்துவருகிறது. 'ஹய்ய அ'லல்'பலாஹ்—(வெற்றிக்கு வரக்கடவீர்) என்று இருமுறை கூப்பிடப்படுவதில் ஆத்மார்த்த ஜயம், அல்லது அடியவர் பாலுள்ள அபார சக்திகளனைத்தையும் முழுப்பயனைய மடைந்து அபிவிருத்தி யடையுமாறு செய்வ தென்பது தொழுகையைக் கொண்டேதான் சாத்தியமாகக் கூடியதா யிருக்கிறது என்னும் உண்மை ஓதப்படுகிறது; அஃதாவது, தொழுகையைக் கொண்டே அடியவர் பாலுள்ள ஆண்டவனது சக்தி முழுதையும் வெளிக்கிளப்பி அடையப் பெறுவதா யிருந்துவருகிறது.

ஆகவே, அ'தான் (ப'ாங்கு) என்பதனுல் இருவித நோக்கங்கள் பூர்த்தியடைவனவா யிருக்கின்றன: முதன்மையாக, "அ'தான்" என்பது தொழுகைகளின் வேளைகளைத் தெரிவிப்பதா யமைந் திருக்கிறது; அடுத்தபடியாக, அதே மூச்சில் இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் நன்கு வெளியிடப் படுகின்றன; அவற்றினுக் குரிய அந்தரங்கத் தாத்பரியங்களும் செவ்விதாய் விளக்கப்பட்டு வருகின்றன. அருத்தமும் பொருத்தமு மில்லாது மணி யடிப்பதையும், எக்காளம் தொனிப்பதையும், ந:காரா (பேரிகை) கொட்டுவதையும், சங்கநாதம் செய்வதையும் பார்க்கினும், இவ்வாறு ப'ாங்கு சொல்வது எத்தனையோ மடங்கில் சிரேஷ்டமாய் இயற்கைக்குப் பொருத்தமுள்ள தாகவும், இஸ் லாத்தின் சித்தாந்தங்களைச் சுருக்கமாகவும் மிக விளக்கமாகவும் இவ் வுலகினுக்கெல்லாம் எப்பொழுதும் எடுத்துக்கூறிப் பிரகடனப் பிரசாரம் புரியக்கூடிய தாகவும் அமைந்து கிடக்கின்றது; இதைவிட வேறு சிரேஷ்ட பிரசார முறையினை எவரேனும் இவ் வுலகினில் கொண்டு வந்து கொடுப்பது சாலுமென்று எண்ணுகின்றீர்கள்? ஒவ்வொரு வீட்டின் வாசல் முன்னே, இல்லை, ஒவ்வொரு மனிதனது உள்ளத்தின் முன்னேயும் இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கைகள், "வணக்கத்திற்குரிய ஆண்டவன் ஒருவனே," என்றும், "மகான் மு'ஹம்மத்' நபியவர்கள் (அல்லாஹ்வின் ஆசியும் சாந்தியும் அன்னவர்கள்மீது அமையக் கடவன) அவ் வாண்டவனு லனுப்பப்பட்ட திருத் தூதரே," என்றும் சொல்லக்கூடிய சுபச் செய்தியை ஒவ்வொரு நாட் காலையிலும், மத்தியான்னத்திலும், மாலையிலும், சூரியாஸ்தமயத்திலும், இரவிலே படுக்கைக்குச் செல்லுமுன்னும் இந்த "அ'தான்," சுமந்து செல்கிறது; அவனவனும் தன்பாலமைந்து கிடக்கும் தெய்விக சக்தியை முற்றிலும் வெளிக்கொணரத்தக்க முறையிலே அபிவிருத்தியடையச் செய்யத்தக்க சாதனம் அவ் விறைவனைத் தொழுவதைக் கொண்டேதான் சித்திபெற முடியுமென்னும் உண்மையும் இத்தகைய ப'ாங்கின் வாயிலாய் அனைவர்க்கும் அறிவிக்கப்படுகிறது.

ப'ாங்கின் சப்தம் செவியிற் பட்டவுடனே அவரவரும்

தத்தமக் குரிய தொழில்களை விட்டுத் தொழுகைக்கு முந்துறல் வேண்டும் (தலை. ஆயத் 1). எவ்வாறு இந்த அ'தான் ஆதியில் ஏற்படுத்தப்பட்ட தென்னும் விஷயம் 'ஹதீ'. 1, 2-இல் கூறப்பட் டிருக்கிறது; 'ஹதீ'. 3 அ'தானில் கூறவேண்டிய வாக்கியங்களைக் கூறுகின்றது; 'ஹதீ'. 4 இ:காமத்தின் வசனங்களை இயம்பிக் கொண் டிருக்கிறது. 'ஹதீ'. 5—8 எவ்வாறு அ'தான் கூறப்பட வேண்டுமென்று கூறுவனவா யிருக்கின்றன; 'ஹதீ'. 9, 10-இல், அ'தான் ஓருயரிய இடத்திலிருந்து கூறப்படவேண்டு மென்றும், அதிகமான ஜனங்களுக்கு எட்டக்கூடிய முறையிலே உரத்த குரலால் கூவப்பட. வேண்டு மென்றும் கூறப்பட் டிருக்கிறது ப'ாங்கு சொல்லுகிறவர் தமது நல்லொழுக்கத்திற்காக மரியாதை செய்யப்படத் தக்கவராகவும், தாம் புரியும் ஊழியத்திற்காக ஊதியம் பெருதவராகவும் இருந்து வருதல் வேண்டும் ('ஹதீ'. 11, 12). ப'ாங்கைச் செவிமடுத்தால், அதன்படி கீழ்ப் படிந்து தீரவேண்டும் ('ஹதீ'. 13). ப'ாங்கு சொல்லப்படுங்கால், அதன் சப்தங்களைக் கேட்பவர் மீட்டும் சொல்ல வேண்டும்; மேலும், அது முடிவுற்றவுடனே ஒரு து'ஆ'வும் ஓதவேண்டும் ('ஹதீ'. 14—16). ஏதேனுமொரு முக்கிய நோக்க மிருப்பின், தொழப் போவதற்குச் சற்று முன்னேகூட அ'தான் கூறப் படலாம் ('ஹதீ'. 17). 'ஹதீ'. 18, 19 இ:காமத் சொல்லவேண்டிய விதத்தைக் குறித்துக் கூறியுள்ளன.

1. இப்'னு உ'மர் (இவ்வாறு) கூறுவதுண் டென்று (ஒரு செய்தி) அவர் குறித்துச் சொல்லப் படுகிறது:

முஸ்லிம்கள் மதீனுவுக்கு (ஹிஜ்ரத்) வந்த பொழுது, அன்னவர்கள் ஒன்றுதிரள்வது வழக்கமா யிருந்தது; அப்பொழுது அவர்கள் தொழுவதற் கென்று ஓர் ஏற்பாடு செய்து கொண்டார்கள்; அதற்காகக் கூப்பீடொன்றும் கூவப்பட்ட தில்லை. ஆதலால், ஒருநாள் அவர்கள் அது குறித்துப்

பேசினார்கள் : அவர்களில் சிலர், கிறிஸ்தவர்களைப் போலே மணியடியுங்க ளென்றனர் ; வேறு சிலர், அதைவிட யூதர்களின் ஊதுகுழலைப் போலே எக்காள மொன்றை ஊதுங்க ளென்றனர் ; ‘தொழுகைக்காகக் கூப்பிட்டுக் கூவக்கூடிய மனித னொருவனை நீங்கள் நியமிக்க மாட்டீர்களா ?’ என்று உ’மர் கூறினார். [1] (அப்பொழுது) அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) “ஏ பி’லால்! நீர் எழுந்து நின்று தொழுகைக்காகக் கூப்பிட்டுக் கூறக்கடவீர்,” என்று கூறினார்கள் ”.—(பு’க’ா. 10:1)

---

1. இதற்குப் பின்னே யுள்ள இந்த ‘ஹதீ’:தின் பகுதி மற்றொரு சமயத்தைச் சார்ந்ததென்பது வேறொரு ‘ஹதீ’:தால் விளங்கக் கிடக்கின்றது. முதலிலே அனைவரும் கலந்து ஆலோசித்தனர் ; ஆயின், அதுகாலை ஒரு முடிபுக்கும் அவர்கள் வரவில்லை ; அதுபொழுதுதான் உ’மர்(ரலி’) அவர்கள், மணியடிப்பதைப் பார்க்கினும், எக்காளம் ஒலிப்பதைப் பார்க்கினும், தொழுகைக்குக் கூப்பிடும் பொருட்டு மனிதனொருவன் நியமிக்கப்பட வேண்டுமென்று ஆலோசனை கூறியும், ஒன்றும் முடிவு செய்யப்படவில்லை. வேறொரு ‘ஹதீ’:தின் பிரகாரம் அ’ப்’து’ல்லா ஹிப்’னு ‘ஜய்த்’ தொழுகைக்காக எவ்வாறு கூப்பிடுவதென்று ஒரு சூக்ஷ்ம தர்சனத்திலே காண்பிக்கப்பட்டாரென அறியக்கிடக்கின்றது. ஆதலால், அடுத்த நாள் நபிபெருமான் வந்தபொழுது, அவர்கள்பால் அந்த அ’ப்’து’ல்லா(ஹ்) இவ்வாறு கூறலுற்றார் : ‘ஏ அல்லா(ஹ்)வின் திருத்தூதரே! யான் அரையுறக்கத்தி லிருந்தேன் ; அரைவிழிப்பாகவு மிருந்தேன் ; அப்பொழுது என்பாலொருவர் வந்து, அ’தான் எவ்வாறு கூறுவதென்று எனக்குக் காண்பித்தார்.’ இந்த ‘ஹதீ’ஃதைக் கூறியவர், அதற்கு இருபது தினங்களுக்கு முன்னரே உ’மர்(ரலி’) அதனைக் காண்பிக்கப் பெற்றாரென்றும், அதனை அவர் மறைத்துவைத்திருந்தாரென்றும், அப்பாலவர் அதனை நபிகளுதர்பால் அறிவித்து வைத்தாரென்றும்

2. அனஸ் கூறினர்: (இஸ்லாத்தில்) ஜனத் தொகை அதிகரித்த பொழுது, தாங்கள் அறிந்து கொள்ளக் கூடிய ஏதேனுமோர் உபாயத்தைக் கொண்டு தொழுகைகளுக்குரிய காலத்தை அவர்கள் அறிவிக்க வேண்டு மென்று தங்களுக்குள்ளே கலந்து பேசினுர்கள். அவர்கள் நெருப்பைக் கொளுத்திக் காட்டவேண்டு மென்றும், அல்லது மணியடிக்க வேண்டு மென்றும் ஆலோசனை கூறினுர்கள். பிறகு பி'லால், (கூப்பீட்டு) வசனங்களை இருமுறை கூவி அ'தான் கூறவேண்டு மென்றும், ஒரேமுறை அவ்வசனங்களைக் கூறிக் :காமத்சொல்ல வேண்டு மென்றும் கட்டளை யிடப்பெற்ருர்.—(பு'க'ா.10:2)

3. அபூ' ம'ஹ்ற'தூரா கூறினர்:

'ஏ அல்லா(ஹ்)வின் திருத் தூதரே! அ'தான் கூறவேண்டிய பழக்கத்தை எனக்குக் கற்றுத் தாருங்கள்,' என்று யான் வேண்டினேன். (இதற்கு) அவர்கள் (விடை) கூறினுர்கள்; தங்கள் முன்

---

சேர்த்துச் சொல்லி யிருக்கின்ருர் (அபூ'த'ா. 2:27). இவ்விஷயத்தை இமாம் பு'க'ாரீ, 'தொழுகைக்காகக் கூப்பிட்டுக் கூவக் கூடிய மனிதனொருவனை நீங்கள் நியமிக்க மாட்டீர்களா?' என்று உ'மர்(ரவி') கூறியதாய்க் குறிப்பிட்டிருப்பதைக்கொண்டு விளக்கி யிருக்கின்ருர். வேறு சில செய்திகள் விளக்கியிருக்குமா போல, அ'ப்'து'ல்லா(ஹ்)வும் உ'மரும் கண்ட சூக்ஷ்ம தர்சனங்களைப் போன்ற வ'ஹீயை நபிபெருமானும் பெற்றுக்கொண் டிருக்கலாம்; எவ்வாறிருப்பினும், இறுதியாக நபிகள் திலகத்தின் உத்தரவின் மீதுதான் இதுபொழுதுள்ள அ'தான்— (ப'ாங்கு) இவ்வாறு கூறப்பட்டுவருகிறது என்க.

னெற்றியைத் தடவிக் கொண்டே (பின்வருமாறு) சொன்னார்கள் :—

“ நீர் (பின்வருமாறு) சொல்லக் கடவீர் :

‘அல்லா(ஹ்)வே மகா பெரியவன், அல்லா(ஹ்)வே மகா பெரியவன் ; அல்லா(ஹ்)வே மகா பெரியவன், அல்லா(ஹ்)வே மகா பெரியவன்.’

அதனுடனே நீர் உமது தொனியை உயர்த்த வேண்டும் ; அப்பால் நீர் (இவ்வாறு) சொல்ல வேண்டும் :

‘அல்லா(ஹ்)வைத் தவிர்த்து வணக்கத்திற்கு உரியவன் (வேறெவனும்) இல்லை யென்று யான் சாக்ஷியம் கூறுகிறேன், அல்லா(ஹ்)வைத் தவிர்த்து வணக்கத்திற்கு உரியவன் (வேறெவனும்) இல்லை யென்று யான் சாக்ஷியம் கூறுகிறேன் ; மு‘ஹம்மத்’ அல்லா(ஹ்)வின் திருத்தூதரென்று யான் சாக்ஷியம் கூறுகிறேன், மு‘ஹம்மத்’ அல்லா(ஹ்)வின் திருத்தூதரென்று யான் சாக்ஷியம் கூறுகிறேன்.’

அதனுடனே நீர் உமது தொனியைத் தணிக்க வேண்டும் ; அப்பால் நீர் சாக்ஷியம் கூறுவதுடனே உமது தொனியை (இன்னம்) உயர்த்த வேண்டும்.

‘அல்லா(ஹ்)வைத் தவிர்த்து வணக்கத்திற் குரியவன் (வேறெவனும்) இல்லையென்று யான் சாக்ஷியம் கூறுகிறேன், அல்லா(ஹ்)வைத் தவிர்த்து வணக்கத்திற்குரியவன் (வேறெவனும்) இல்லையென்று யான் சாக்ஷியம் கூறுகிறேன் ; மு‘ஹம்மத்’ அல்லா(ஹ்)வின் திருத்தூதரென்று யான் சாக்ஷியம் கூறுகிறேன். மு‘ஹம்மத்’ அல்லா(ஹ்)வின் திருத்தூதரென்று யான்

சாக்ஷியம் கூறுகிறேன்; (பிறகு) தொழுகைக்கு வரக் கடவீர்கள், தொழுகைக்கு வரக் கடவீர்கள்; வெற்றிக்கு வரக் கடவீர்கள், வெற்றிக்கு வரக் கடவீர்கள்.'

அப்பால், அஃதோர் அதிகாலைத் தொழுகையா யிருந்தால், நீர் (இவ்வாறு) கூறவேண்டும்:

'தொழுகை தூக்கத்தைப் பார்க்கினும் மேலானது, தொழுகை தூக்கத்தைப் பார்க்கினும் மேலானது,'

(பிறகு நீர் கூறக்கடவீர்:)

'அல்லா(ஹ்)வே மகா பெரியவன், அல்லா(ஹ்)வே மகா பெரியவன்; அல்லா(ஹ்)வைத் தவிர்த்து வணக்கத்திற் குரியவன் (வேறெவனும்) இல்லை.'"[2]—(அபூ'த'ா—மிஷ். 4 : 4)

---

2. இந்த 'ஹதீ':தில் கூறப்பட் டிருப்பதேபோல், ஷஹாதத்தென்பது இரண்டா முறையாகவும் சொல்லப்பட வேண்டுமென்பது 'தர்ஜீஃ'—(இதன் அசல் பொருள், "மீட்டு மீட்டும் ஒரு வஸ்துவின்பாலே மீளுதல்" என்பதா யிருக்கிறது) என்று அழைக்கப்படுகிறது. இதற்குமுன் சென்ற 'ஹதீ':தும், இனிப் பின்வரும் 'ஹதீ':தும் விளக்கியிருப்பதே போல், நபிகள் திலகத்தின் காலத்தில், இப்பொழு திருப்பதே போலத்தான், அ'தானில் பதினைந்து வாக்கியங்களே காணப்பட்டதுதான் பொது விதியா யிருந்துவந்தது: முதலில் அல்லாஹு அக்ப'ர் நான்குமுறை கூறப்படும்; அதன்பின் அஷ்ஹது' அன்லா இலாஹ இல்லல்லாஹ் இரண்டு முறை சொல்லப்படும்; அப்பால் அஷ்ஹது' அன்ன மு'ஹம்மத'ர் ரஸூலுல்லாஹ் இருமுறை கூறப்படும்; (அஷ்ஹது' என்னும் சொல்லைக் கொண்டு ஆரம்பமாகும் இரு வாக்கியங்களும் ஷஹாதத் என்று அழைக்கப்படும்.) அதன் பிறகு 'ஹய்ய அ'லஸ்'ஸ'லாத் என்று இரண்டுமுறை கூறவேண்டும்; (இருமுறையும் வலப்புறம் முகத்

4. இப்'னு உ'மர் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) காலத்திலே அ'தான் (கூறப் படும் வாக்கியங்கள்) இருமுறை திருப்பிக் கூறப் படும்; ஆனல், இ:காமத்(சொல்லும்போது அவ்வாக்கி யங்கள்) ஒரு முறையே கூறப்படுவது வழக்கம்; இதற் கொரு விலக்குவிதி யிருந்தது: 'நிச்சயமாய்த் தொழுகை நிலை நின்றுவிட்டது; நிச்சயமாய்த் தொழுகை நிலை நின்றுவிட்டது,' என்று மட்டும் அவர் (இருமுறை) கூறுவது வழக்கம். [3]—(அபூ'த'ா- மிஷ். 4 : 4)

---

தைத் திருப் பவேண்டும்.) அதன் பின்னல் 'ஹய்ய அ'லல்'பலா'ஹ் என்று இரண்டுமுறை கூறவேண்டும்; (இருமுறையும் இடப் புறம் முகத்தைத் திருப்ப வேண்டும்.) அப்பால் அல்லாஹு அக்ப'ர் இருமுறையும், இறுதியிலே லா இலாஹ இல்லல்லாஹ் ஒருமுறையும் கூறி முடிக்க வேண்டும். 'தர்ஜீ:'—(அ:தாவது, இரண்டு ஷஹாத'த் தையும் மறுமுறையும் இருமுறை இன்னம் உரத்த குரலிலே கூறவேண்டு மென்பது) எப்பொழுதோ ஒரோ அமயத்திலேதான் அனுஷ்டிக்கப்பட்டு வந்திருக்கிறது அதிகாலையில் கூறப்படும் அ'தானில்மட்டும், 'ஹய்ய அ'லல்'பலா'ஹ் என்று கூப்பிட்டபின்பு, அஸ்'ஸ'லாத்து கை'ரும் மினன்னவ்ம் என்னும் வாக்கியம் இருமுறை கூறப்பட்டு வந்தது.

3. இந்த 'ஹதீ':தின்படி, அ'தானில் இருமுறை திருப்பித் திருப்பிக் கூறப்படும் வாக்கியங்க ளனைத்தும் இ:காமத்தில் ஒரு முறையே கூறப்படும்; அ'தானில் இருமுறை கூறப்பட்டுள்ள வாக்கியங்க ளெல்லாம் இ:காமத்தில் அவ்வாறு இருமுறை திருப்பிக் கூறப்பட வேண்டுவதின்று என்பதே இதன் நோக்கமாம். எனவே, இ:காமத்தில், அல்லாஹு அக்ப'ர் இருமுறையும், ஒவ்வொரு ஷஹாத'த் தும் ஒவ்வொரு முறையும், 'ஹய்ய அ'லஸ்'ஸ'லாத் (வலப்புறம் திரும் பாமலே) ஒருமுறையும், 'ஹய்ய அ'லல்'பலா'ஹ் (இடப்புறம் திரும் பாமலே) ஒரு முறையும், :கத்':காம'திஸ்'ஸ'லாத் இரு முறையும்,

5. ஸஃ'த் (இவ்வாறு) கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) பி'லாலுக்கு (ப'ாங்கு சொல்லும்பொழுது) அவரிரு ஆட்காட்டி விரல்களையும் தம்(மிரு) செவிகளுள்ளே வைத்துக் கொள்ளுமாறு கட்டளையிட்டார்கள்; "இஃதுமது தொனியை யுயர்த்த உதவிபுரியு" மென்று கூறினார்கள்.—(இப்'னுமா—மிஷ். 4 : 4)

6. (ப'ாங்குசொல்லும் பொழுது) பி'லால் தம்மிரு ஆட்காட்டி விரல்களையும் தம்முடைய செவிகளுள்ளே வைத்துக்கொண்டாரென்று அவரைக் குறித்துக் கூறப்பட்டிருக்கிறது; ஆயின், இப்'னுஉ'மரோ, தம்(மிரு) ஆட்காட்டி விரல்களையும் தம்முடைய செவிகளுள்ளே வைத்துக் கொண்டாரில்லை; [4] இன்னம், வுஓ'செய்யாமல் அ'தான் கூறுவதில் பிழையொன்றுமில்லையென்று இப்'ராஹீம் சொன்னார்; இன்னம், (அதற்கு) வுஓ' அவசியமென்றும், (நபிபெருமான்) பழக்கம் அதுவேயென்றும் அ'':தாவு கூறினார்.—(பு'க'ா. 10:19)

---

அல்லாஹு அக்ப'ர் ஒருமுறையும், லாஇலாஹ இல்லல்லாஹ் ஒருமுறையும் கூறவேண்டும்.

ஆனாலும், இ:காமத்திலும், :கத்':காம'திஸ்'ஸ்லாத் இருமுறை கூறுவதோடு, அ'தானில் கூறப்படுவதேபோல், எல்லா வாக்கியங்களையுமே அத்தனையத்தனை முறையே கூறுவதுமுண்டு. அ'தானுக்கும் இ:காமத்துக்கும் இடையிலே இன்னமொரு வேறுபாடுமுண்டு: அ'தான் நிறுத்தியும் நிதானமாகவும் மெத்த உரத்த குரலிலும் கூறப்படும்; இ:காமத்தோ, சிறிது துரிதமாகவும், சாதாரணத் தொனியிலும் சொல்லப்படும்.

4. இ:காமத்திலும் ஆட்காட்டி விரல்கள் செவித் தொளைகளிலே திணித்து வைக்கப்படுவதில்லை.

7. அபூ’ ஜு‘ஹய்‘பா கூறினர்: பி’லால் அ’தான் கூறியதை அவர் பார்த்திருக்கிறாராம். (ஆகவே, அவர் சொன்னர்:) ஆதலால், அவர் அ‘தானில் தமது வதனத்தை ஒரு (வலப்)புறமும் மற்றொரு (இடப்)புறமும் திருப்பியபொழுது, யானும் அவரைப் பின்பற்றலாயினேன்.—(பு’க’ா. 10: 19)

8. மூஸா கூறினர்: நான் பி’லாலை—அவர் அப்’ ‘த‘ஹின்பால் சென்று அ‘தான் கூறியதையும் பார்த்தேன்; ஆகவே, அன்னவர்‘ஹய்யஅ’லஸ்’ஸ’லாத், ‘ஹய்ய அ’லல்‘பலா‘ஹ் என்பவற்றை எட்டியபொழுது, தமது கழுத்தை வலப் புறமும், இடப் புறமும் வளைத்துத் திருப்பினர்; ஆயின், அவர் வட்டமாய்ப் (பின்புறம்) திரும்பிவிடவில்லை. [5]—(அபூ’த’ா.12:34)

9. ப’னீ நஜ்ஜார் இனத்தைச் சார்ந்த ஸ்திரீயொருத்தி கூறினள்: மஸ்ஜிதி’ன் சுற்றுப்புறங்களில் (எல்லாம்) எனதில்லமே மிகவுயர்ந்த வீடாயிருந்தது; ஆகையால், பி’லால் அதன்மீதிருந்தே அதிகாலை அ‘தானைக் கூறுவது வழக்கம்.[6]—(அபூ’த’ா. 2:33)

---

5. முஅ‘த்‘தின் ‘ஹய்ய அ’லஸ்’ஸ’லாத் சொல்லும் பொழுது, தமது வதனத்தை—(கழுத்துட்பட) வலப்புறமும், ‘ஹய்ய அ’லல்‘பலா‘ஹ் சொல்லும் பொழுது, தமது வதனத்தை—(கழுத்துட்பட) இடப்புறமும் திருப்புவார்; ஆனல், :கிப்’லாவைப் பார்த்து நிற்கும் தமது நிலையைத் திருப்பமாட்டார்.

6. ஓருயரிய இடம், ப’ாங்குமேடை (“மோடை” என்பது தவறு) அல்லது மினரா போன்றது, அ’தானின் தொனியை அதிக தூரம் சுமந்துகொண்டு செல்லக்கூடு மன்றோ?

10. அ'ப்'து'ல்லா(ஹ்) (பின்வருமாறு) கூறியுள்ளார்:....' நீர் வெள்ளாடுகளுக்கு மத்தியிலும், பாலைவனத்திலும் வசித்துவருவதை யான் காண்கிறேன்; ஆகையால், நீர் உம்முடைய வெள்ளாடுகளுக்கு மத்தியிலே, அல்லது உம்முடைய பாலைவனத்திலே இருந்து, (அங்கே நீர்) தொழுகைக்காக அ'தானும் கூறுங்கால், அந்த அ'தானுடனே உமது தொனியையும் உயர்த்தக் கடவீர்; என்னெனின், ஜின்னேனும், மனிதனேனும், அல்லது வேறேதேனும், தான் அவனுக்காக—(அந்தக் கூப்பீட்டைக் கூவியவனுக்காக) இறுதித் தீர்ப்புக்காக எழுந்துநிற்கு நாளிலே சாக்ஷியம் கூறுதிருக்குமுறையிலே, தனக்கு எட்டக்கூடிய தொலைவில் எந்தக் கூப்பீட்டைக் கூவுகிறவனது குரலையுங் கேட்பதில்லை,' என்று அபூ' ஸஈ'து'ல் குத்'ரீ அன்னவருக்குச் சொன்னார். [7]—(பு'க'ா. 10:5)

11. அபூ' ஹுரய்ரா கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள்:—

"இமாம் ஒரு பிணையாயிருக்கின்றார்; அ'தான் கூறுவோர் நம்பிக்கை வைக்கத்தக்க ஒருவராயிருக்கின்றார்; [8] ஏ அல்லா(ஹ்)! இத் தொழுகையை

---

7. இதனால் விளக்கமாவது, ப'ாங்கு சொல்லுங்கால், அன்னவர் தம்மாற் கூடியவரை தமதுதொனியை உயர்த்தவேண்டுமென்பதே யாம்.

8. இந்த 'ஹதீ':தில் இமாமானவர் ல'ாமின்—('ஜாமீன்)ஆக இருப்பதாய்க் கூறப்பட்டிருக்கிறார்; அஃதாவது, தொழுகை செவ்விதாய்த் தொழப்படுகிறதா வென்று கண்காணிப்பதற்கு அவரொரு பிணையேபோலிருக்கிறார்; மேலும், மு‌அ'த்'தின்—

நடாத்து கிறவர்களை நீ நேர்வழியில் நடாத்தக் கடவாய்; மேலும், அ‘தான் கூறுவோருக்கு நீ பாதுகாப்பை யளிக்கக்கடவாய்.''—(அபூ'த'ா. 2:32)

12. உ':துமான் இப்'னு அபி'ல்ஆ'ஸ்' கூறினர்: ‘ஏ அல்லா(ஹ்)வின் திருத்தூதரே! என்னை யொரு கூட்ட ஜனங்களுக்கு இமாமாக்கக் கடவீர்கள்;' (இதற்கு) அவர்கள் சொன்னர்கள்:—

"நீர் அவர்கட்கு இமாமா யிருக்கக் கடவீர்; இன்னம், அன்னவர்களில் மெத்த பலஹீனரா யுள்ளவரைப் பின்பற்றக் கடவீர்.[9] மேலும், நீர் தமது அ‘தானுக்காக யாதொரு சம்பளமும் பெற

---

(அ‘தான் கூறுவோர்) முவ்த்தமன் என்று அழைக்கப் படுகிருர்; அஃதாவது, "எவர்மீது நம்பிக்கை வைக்கப்படுகிறதோ, அப்படிப் பட்டவர்" முஅ'த்'தின யிருக்கின்ருர்; இதன் கருத்தாவது: ஒருபுறத்தில் இவர் தொழுகைகளுக்குரிய வேளைகளின் கணக்கை வைத்துக்கொண் டிருக்கிருர்; மற்றொரு புறத்தில் தம்பாலுள்ள உயரிய ஒழுக்கங் காரணமாய் எல்லோரின் நன்மதிப்பிற்கும் உரியவரா யிருந்து வருகிருர். இப்படிப் பட்டவரே சரியான முஅ'த்'தின்.

9. இமாமாய் நின்று தொழுகையை நடாத்துகிறவர் பின் னிற்பவர்களில் அதிக பலஹீனர்களா யிருப்பவர்களின் சௌகரியத்தைக் கவனித்து, அன்னவர்களுக்குச் சுமையாயிருக்க முடியாத மாதிரியிலே சுலபமாய்த் தொழவைத்தல் வேண்டும். இதனை அநேக இமாம்கள் கருதுவதே கிடையாது; தலைக்கு மேலே அணுக்குண்டு வந்து வீழ்வதா யிருப்பினும், சில பேஷ் இமாம்கள் தங்கள் பிடிவாதம்போலே அதிகமதிகம் நீளமாகவும் மெல்ல மெல்ல நிறுத்தியும் மிகமிக மந்தமாகவே தொழவைத்துத் தொந்தரை கொடுக்கிருர்கள். இது பெரிதும் கண்டிக்கத்தக்கதே. மிகவு நீளமாய் அதிகநேரம் ஓதினல், அன்னவர் பெரிய பேஷிமாம் என்று கருதப்படுவாரென்று கணித்துக்கொள்கிருர் போலும்.

மாட்டாத ஒருவரையே முஅ‘த்‘தினை ஏற்படுத்திக் கொள்ளக் கடவீர்.” [10]—(அபூ’த’ா. 2:39)

13. அபூ’ ஹுரய்ரா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்’அம்) (பின்வருமாறு சொல்லி) எங்களுக்குக் கட்டளை யிட்டார்கள்:—

“நீங்கள் மஸ்ஜிதி’லேயிருந்து, தொழுகைக்காக (அ‘தானும்) கூறப்படுங்கால், உங்களிலிருந்து ஒரு வரும் தமது தொழுகையை முடித்துக் கொள்ளும் வரை வெளியிலே செல்லாதிருக்கக் கடவர்.” [11]—(மஸ்—மிஷ். 4:23)

14. அபூ’ ஸஈ’து’ல் குத்’ரீ (இவ்வாறு) கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னார்கள்:—

“நீங்கள் அ‘தானைச் செவிமடுக்குங் கால், முஅ‘த்‘தின் சொல்வதைத் திருப்பிச் சொல்லக் கடவீர்கள்.”—(பு’க’ா. 10:7)

---

10. தொழுகை சம்பந்தமாயுள்ள காரியங்கள் சம்பளத்தையோ உம்பளத்தையோ எதிர்பாராது, அபிமானத்தை அடிப்படையாய்க் கொண்டே செய்யப்படத் தக்கனவா யிருக்கின்றன வென்பது இந்த ‘ஹதீ’:தால் விளக்கமாகின்றது.

11. ஒருசிலர் பள்ளிவாசலில் குந்தி ஊர்வம்பை யெல்லாம் ஒன்றுக அளந்தளந்து—இரைச்சலும் கூச்சலு மிட்டுக்கூடக்—கொட்டிக்கொண் டிருப்பர்; தொழுகைக்காக அ‘தான் கூறியவுடனே பளிச்சென் றெழுந்து பறிந்துவிடுவர். மற்றும் பல முஸ்லிம்கள், ப‘ாங்கு சொல்லிக்கொண் டிருக்கும் பொழுதே, யாரோ எவரையோ கூப்பிடுகிருரெனத் தமது சொந்த “ஜோலி” மீது கவனமாய்ச் சென்றுவிடுவர். தொழுகையைக் காட்டினும் வேறு பெருவெற்றி தருவது எதுவோ? யாமறிகிலேம். மகாஜயம் பெறத்தானே ப‘ாங்கு நம் மனைவரையும் கூவியழைக்கின்றது?

15. ய‘ஹ்யா கூறினர் : ‘தொழுகைக்கு வரக் கடவீர்கள்,’ என்னும் சொற்களை அன்னவர்—(முஆ’வியா) செவிமடுத்தக் கால், ‘அல்லா(ஹ்)வைக் கொண்டே யன்றி யாதொரு பலமுமில்லை, சக்தியு மில்லை,’[12] என்று கூறினர் ; இன்னம், ‘உங்கள் நபிபெருமான் (சல்அ’ம்) அவ்வாறு கூற யாங்கள் கேட்டிருக்கிறோம்,’ என்றும் சொன்னா ரென்று நம்முடைய சகோதரருள்ளே சிலர் ” எனக்குச் சொன்னார்கள்.—(பு’க’ா. 10:7)

16. ஜாபி’ர் (பின்வருமாறு) கூறியுள்ளார் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னார்கள் :—

“எவனொருவன் அ’தானைச் செவிமடுக்குங் கால், ‘ஏ அல்லா(ஹ்)! இந்தப் பரிபூரணக் கூப்பீட்டின், இன்னம் நிரந்தரத் தொழுகையின் இரக்ஷகா! மு‘ஹம்மது’க்குச் சாமீபத்தையும் கிருபாகடாக்ஷத் தையும் அளித்தருளி, நீ அன்னவருக்கு வாக்களித் துள்ள மகிமைக்குரிய மகா அந்தஸ்திலே உயர்த்தி வைக்கவுங் கடவாய்,’ என்று சொல்லுகிறானோ, அவனுக்கு,

---

12. ‘ஹய்ய அ’லஸ்’ஸ’லாத் தென்பது ஒரு கட்டளையா யிருந்து வருகின்றமையால், இந்த ‘ஹதீ’:தில் காணப்படும் மறுமொழியே சரியான ஜவாபா யிருக்கிறது. ‘அ’தான் கூறும்பொழுது, அதனைச் செவி மடுப்பவர், சென்ற ‘ஹதீ’:தில் காணப்படுவதேபோல், அந்த வாக்கியங்களைத் திருப்பிச் சொல்லவேண்டும் ; அது முடிந்த வுடனே, அடுத் துள்ள ‘ஹதீ’:தில் காணப்படும் து’ஆ’வை ஓதவேண்டும்.

"இறுதித் தீர்ப்புக்காக எழுந்துநிற்கு நாளிலே எனது சி'பாரிஷ்—(பரிந்து பேசுதல்) உரிமை யாக்கப்பட் டிருக்கும்."—(பு'க'ா. 10:8)

17. நபிகட் டிலகத்தின் (சல்அ'ம்) ஆதாரத் தைக்கொண்டு அ'ப்'து'ல்லா(ஹ்) (இவ்வாறு) கூறி யுள்ளார்: (அவர்கள்) சொன்னார்கள் :—

"பி'லாலின் அ'தான் உங்களினின் றொருவரை அவரது வைகறைப் போஜனம் செய்வதை[13] விட்டு விலக்கா திருக்கட்டும்; என்னெனின், அன்னவர் இரவாயிருக்கும் பொழுதே அ'தான் கூறிவிடுகிறார்; ஆகவே, உங்களுள்ளே தமது தொழுகையைத் தொழுதுகொண் டிருப்பவ ரொருவரைத் திருப்பி யனுப்பும் பொருட்டு, அல்லது உறங்கிக்கொண் டிருப்பவ ரொருவரை விழித்தெழுப்பும் பொருட்டே. (அவ்வாறு கூறுகிறார்)"—(பு'க'ா. 10:13)

18. அ'ப்'து'ல்லா(ஹ்) (இவ்வாறு) கூறி யுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"ஓரோர் ஈர் அ'தான்களுக் கிடையே நாடியவ னுக்குத் தொழுகையொன் றிருக்கிறது."[14] மூன்று முறை (இதனைக் கூறினார்கள்).—(பு'க'ா. 10:14)

---

13. இங்கு "வைகறைப் போஜனம்" என்றது நோன்பு நோற்க நாடுகிறவர் கிழக்கு வெளுக்குமுன்னே ஸஹ்ர் செய்வான் வேண்டி உட்கொள்ளும் ஆகாரத்தைச் சுட்டிக் காட்டுகிறது. இந்த 'ஹதீ':தால் தொழுகையின் நேரத்துக்கு முன்னேயுங்கூட அ'தான் கூறலாமென் றேற்படுகின்றது. இந்த 'ஹதீ':தின் பிற்பகுதியில் தொழுகையென்பது 'த'ஹஜ்ஜுத்' தொழுகையைச் சுட்டிக் காட்டுகிறது.

14. இங்கு இரண்டு அ'தான்கள் என்பன, அ'தானையும்

19. 'ஜியாத்' கூறினர்: இவர் அ'தான் கூறினர்; மேலும், பி'லால் இ:காமத் சொல்ல விழைந்தார்; ஆனல், நபிகளுயகர் (சல்அ'ம்) சொன்னர்கள்:—

"ஏ சுத'ாவின் சோதரரே! அ'தான் கூறுகிற அவரே இ:காமத்தையும் சொல்லக் கடவர்."[15]—(மஸ். IV, 169)



---

இ:காமத்தையும் சுட்டிக் காட்டுகின்றன. அ'தானுக்கும் இ:காமத் துக்கும் இடையிலே எவ்வளவு நேரம் (தாமதம்) இருக்கலா மெனின், ஒருவன் இஷ்டத்தொழுகையில் இரண்டு ரக்ஆ'த் தொழக்கூடிய நேரமவ்வளவு இருக்கலாம் என்க. இன்னமொரு 'ஹதீ':தின்படி, போஜன மருந்திக்கொண் டிருப்பவன் தானருந்தும் ஆகாரத்தை முடித்துக்கொண்டுவரும் நேரமவ்வளவு தாமதிக்கலா மென்று அறியக் கிடக்கின்றது; அஃதாவது, சுமார் கால்மணி யென்று வைத்துக்கொள்ளலாம்.

15. இப் பொது விதிக்கு விலக்குக்களும் இருக்கலாம். சுத'ாவென்பது எமன் பிராந்தியத்தி லுள்ள ஒரு சாராரின் பெயராகும்; 'ஜியா தெ'ன்பார் அவர்களி லுள்ள ஒருவராவார்.

# அத்யாயம் 7

## ஜமாஅ'த்—(கூட்டத் தொழுகை)

1. "இன்னம், நீங்கள் தொழுகையை(த் தொடர்ந்து) நிலைநிறுத்தி, ஏழை விகிதத்தையும் ஈயக்கடவீர்கள்; இன்னம், நீங்கள் குனிகிறவர்களுடனே குனியக்கடவீர்கள்" (:குர். 2:43).

2. "நாங்கள். உன்னையே வணங்குகிறோம்; இன்னம், உன்னிடத்தே உதவி தேடுகிறோம். எங்களை நேரானபாதையில் நீ சீராக நடாத்திவைப்பாயாக" (1:4, 5).

3. "இன்னம், நீர் அன்னவர்களுள்ளே (யுத்தகளத்தில்) இருந்து, அவர்களுக்காக நீவிர் தொழுகையையும் (முன்னின்று) நிலைநிறுத்துங்கால், அவர்களுள்ளிருந்து ஒரு பகுதியினர் அதுகாலை உம்முடனே (தொடர்ந்து) நிற்கக்கடவர்; மேலு மவர்கள் தங்க ளாயுதங்களைத் தாங்கி நிற்கட்டும்; ஆகவே, அவர்கள் அஷ்டாங்கம் (ஸுஜூத்') செய்து முடித்து விடுங்கால், அவர்கள் உங்களுக்குப் பின்னே (சென்று) நிற்கட்டும்; இன்னம், தொழாமலிருந்த (எஞ்சிய) தொகுதியினர் முன்வந்து, உம்முடனே தொழக்கடவர்" (4:102).

இஸ்லாத்திலே தொழுகை யென்பது முக்கியமாய் இமாம்—ஜமாஅ'த் தென்னும் கூட்டத் தொழுகையாகவே இருந்துவருகிறது; இத்தொழுகையால் அல்லாஹுத் தஆ'லாவுடனே அடியவருக்கு அன்னியோன்னிய ஐக்கியம் உண்டாவதைக் கொண்டு அன்னவர்கட்குரிய ஆத்மார்த்த முன்னேற்றம் அடையப்பெறுவதுடன் நின்றுவிடாது, இன்னம் பல இகலோக நோக்கங்களும் அதனுள்ளே அமைந்து கிடக்கின்றன வென்க. அவற்றுள் ளொன்றே இஸ்லாத்தின் ஏக சகோதரத்துவம் என்னப்படுவது; மன்பதையின் பல்வேறினங்களை யெல்லாம் ஒன்றுசேர்த்துப் பிணிப்பதற்கு இமாம்—ஜமாஅ'த் தென்னும் இக் கூட்டுத் தொழு

கையைக் காட்டினும் வேறென்ன சிறந்த மார்க்கம் இக்குவலயத்தின்கண் காணப்படுதல் கூடும்? முதன்முதலாக, ஒரு மஹல்லாவி லுள்ள சகல முஸ்லிம்களும் தினமும் ஐந்துவேளை தங்கள் மஸ்ஜிதி'லே இமாம்—ஜமாஅ'த் தொழுகைக்காக ஒன்று கூடுகிறார்கள்; சமுதாயக் கூட்டுறவுக்கு இஃதொரு சிறந்த சாதனமா யிருந்துவருகின்றமையால், அவர்களனைவரும் அன்றாடம் ஒருவரோ டொருவர் நெருங்கிப் பழகி "ஒப்பரை"—(ஒப்புரவு) நட்பினை உயர்ந்தோங்கச் செய்துகொள்கிறார்கள். இத்தகைய கூட்டுறவு வட்டம் வெள்ளிக்கிழமை ஜுமுஆ'த் தொழுகைகளால் அதிக விசால மடைகிறது; இன்னம், ஈ'த்'—(பெருநாள்) தொழுகைகளால் இவ்வட்டம் மிகப் பெரிதாய் விரிவடைந்து வருகிறது. ஜமாஅ'த் தொழுகை சமுதாயத் தளையைப் பலப்படுத்துவதாக மட்டுமே யிருந்துவருகிற தென்று எண்ணிவிடற்க; அதற்கு மேலாய் மிகவு முக்கியமா யிருந்துவருவது என்னெனின், சமூகாசாரத்தில் காணப்படும் "ஆசாரக்கட்" டென்னப்படும் அனுவசியமான வர்ணாசிரம வேற்றுமைகளனைத்தையும் அடியுடன் அறுத்தொழித்து விடுவதேயாகும்; ஜமாஅ'த் தொழுகையில் எல்லா முஸ்லிம்களும் அல்லா(ஹ்)வின் திருமுன்பினிலே ஒருவரோடொருவர் தோளோடு தோளுறழ ஒரேவரிசையிலே சரிசமானமாய் நிற்கவேண்டியவர்களா யிருக்கிறார்கள்; அரசனுக்குப் பக்கத்திலே ஆண்டியொருவன் அண்மி நிற்கிறான்; ஆடையாபரணா லங்கிர்தராயுள்ள ஐசுவரியவானருகே கிழிந்த ஆடையுடுத்த கந்தலாடை 'ப(க்):கீர் நிற்கிறான்; வெள்ளையரை யடுத்து அபிஸீனிய—(ஹபஷீ) கறுப்பன் நிற்கிறான்;—[இஸ்லாத்தில் வெள்ளைக்காரன் மஸ்ஜித்', கறுப்புக்காரன் மஸ்ஜித்' என்று இரு மஸ்ஜித்'களில்லை; பிரபுக்கள் பள்ளியென்றும் 'ப(க்):கீர்கள் பள்ளியென்றும் வெவ்வேறு பள்ளிகள் இஸ்லாத்தில் இல்லை.] இம்மட்டோடு நிற்கவில்லை; ஒரு வரிசையில் (பின்வரியிலே) நிற்பவன்—அரசனேயாயினும், ஐசுவரியவானே யாயினும்—ஜமாஅ'த் தொழுகையில் அல்லா(ஹ்)வின் சன்னிதானத்தில் சிரந்தரையிற்பட ஸுஜூத்' செய்யும்பொழுது, முன்வரியில் நிற்கும் அடிமை அல்லது ஆண்டியின் பாதத்தடியிலே குனிந்து குப்புற்று விழவேண்டிய

வனு யிருக்கிறுன். எனவே, ஜாதிபேதம், வர்ண வித்தியாசம், அந்தஸ் துயர்வு தாழ்வு, குலப்பெருமை, கோத்திரக் குறும்பு ஆதியவெல்லாம் ஒழிந்து, சரிசமான நிதான நிலையை யடைதற்கு இஸ்லாமிய ஜமாஅ'த் தொழுகையினும் வேறு சிறந்த வழியுண்டா வென்று "நாலாயிரஞ் சாதியிந் நாட்டினீர் நாட்டினீர்!" சொல்லுங்களே, பார்ப்போம்! உண்மையிலே ஜமாஅ'த் தொழுகை, தனக்குள்ளே வேறுபல கூடார்த்தங்களைக் கொண்டு நிற்பதோடு, சமத்துவமென்றும் சகோதரத்துவமென்றும் ஏனை யோர் எழுத்தீளவிலும் உதட்டளவிலும் எழுதியும் உபதே சித்தும் வருவதையெல்லாம் செயலளவிலே செய்து காண்பிப்ப தையே ஒரு முதன்மையான கொள்கையாய்க் கொண்டு நிற்கிறது; என்னெனின், இஸ்லாம் ஏட்டுச் சுரைக்காயாயுள்ள வெறுந் திண்ணை வேதாந்தமா யிருக்கவில்லை. ஏக இறைவன் சித்தாந்தம், ஏக சகோதரர் சித்தாந்தம் என்னும் இருபெருஞ் சகடக் கால்களைக் கொண்டே இஸ்லா மென்னும் இரதம் எங்கும் தடையின்றி உருண்டோடி விளையாடி வருகின்றது. மனிதர்க ளெல்லாரும் சரிசமானமுள்ள ஒரே இனந்தா னென்றும், மன்பதைகளனைவரும் ஒரே விசுவசகோதர கோஷ்டியைச் சார்ந்த வர்களேயென்றும் இஸ்லாம் எத்துணை வன்மையுடனும் அழுத்தந் திருத்தத்துடனும் கப்பறகணக்கில் எடுத்தோதிவருவதா யிருப் பினும், தினமும் ஐந்துவேளை இமாம்—ஜமாஅ'த் தொழுகையைக் கொண்டு அவ்வுண்மையை அனுஷ்டித்துக் காட்டச் செய்திராமற் போயிருப்பின், அத்துணை வாய்ப் பந்தலும் வெறு மேடைப் பிரசங்கமாகத்தானே போய்விட்டிருக்கும்!

ஜமாஅ'த் தொழுகை குறித்துக் :குர்ஆன்ஷரீ'ப் கூறியிருக்கும் வற்புறுத்தல் தலை. ஆயத் 1-இலிருந்து மிகச் செவ்விதாய் வெளிப் படுவதுடன், தொழுகை சம்பந்தமாய் அவ்வாயத்தில் வழங்கப் பட்டுள்ள சொல்லுங்கூட ஜமாஅ'த் தென்பதேதான் தொழு கையின் முக்கிய நோக்கமென்பதை மிக நன்ருய் விளக்கிக் காண்பிக்கின்றது. நந் திருமறையில் தொழுகையைக் குறித்துக் கூறப்படும் இடத்திலெல்லாம் இ:காமத் என்னும் சொல்லின் சார்பாயுள்ள ஏதேனுமொரு பதமே வழங்கப்பட்டு வருகிறது;

இ:காமத் என்பதன் தாதுப்பொருள், “(ஒரு காரியத்தைச்) சரியான நிலையில் ஒழுங்கு செய்துவைத்தல்,” அல்லது “அதனை நியமமாய்க் கொண்டு நடத்தல்,” அல்லது “அதனை நன்கு நிலைபெறுத்தல்,” என்பதா யிருக்கிறது. எனவே, இச் சொல்லிலிருந்து தொழுகை யென்பது நியமமுடன் கடைப்பிடித் தொழுகப்பட வேண்டுவதா யிருக்கிற தென்பது நன்கு அறியப்படக் கிடக்கின்றது. ஆனால், ஜமாஅ’த் தொழுகைக்கு முன்னே சொல்லப்படும் ஒருசில அறிக்கை வாக்கியங்களே இ:காமத்தென்று சர்வ சாதாரணமாய்க் கூறப்பட்டுவருகிறது—(சென்ற அத். நோக்க). எனவே, இ:காமத் தென்னுஞ் சொல்லைக்கொண்டு இமாம்—ஜமாஅ’த் தென்னப்படும் தொழுகை நிரந்தரமாய் நியமத்துடனே கடைப்பிடிக்கவேண்டிய தொழுகையா யிருந்துவருகிற தென்னும் உண்மை தெற்றென விளங்கக் கிடக்கின்றது. இ:காமத் தென்னும் சொல் நபிகள் திலகத்தாலேயே ஜமாஅ’த் தொழுகையுடன் சம்பந்தப்படுத்தப் பட்டிருக்கின்றமையால், :குர்ஆன் ஷரீ‘பிலே தொழுகையின் சார்பாய் இ:காமத் தென்னுஞ் சொல் வழங்கப்பட் டிருப்பது, இமாம்—ஜமாஅ’த்தென்னும் தொழுகை நியமத்துடனே நிலைநிறுத் தப்படுவதையே சுட்டிக் காட்டக்கூடியதா யிருந்துவருகிறது என்பது வெள்ளிடைமலை. மெய்யாகவே ஜமாஅ’த் தொழுகை யைக் குறித்துக் :குர்ஆன்ஷரீ‘ப் வலியுறுத்தியிருப்பது இஸ்லாத் தின் தொழுகையிலிருந்து நன்கு வெளியாகின்றது; சுருக்கிச் சொல்லுமிடத்து, ஜமாஅ’த் தொழுகை முஸ்லிம் சமுதாயத்தின் பொது முன்னேற்றத்தையே தனக்குரிய முக்கிய குறிக்கோளாய்க் கொண்டு நிற்கிறதென்பதை நாம் நன்கு தெரிந்துகொள்வோம். இதற்கு வேண்டிய உதாரணம் தலை. ஆயத் 2-இல்—இதுதான் இஸ்லாத்தில் ஒவ்வொருநாளும் பலமுறை ஓதப்படும் திருவாக் கியமா யிருந்துவருகிறது—காணப்படா நின்றது. தலை. ஆயத் 3 இன்னம், துலக்கமாய் இமாம்—ஜமாஅ’த்தின் அவசியத்தை விளக்கிக் காண்பிக்கின்றது; எவ்வாறெனின்: ரணரங்கத்தில்—போர்க்களத்திலே—எதிரிகள் முன்னே சண்டையி லீடுபட் டிருக்குங் காலத்திலும் முஸ்லிம்கள் இமாம்—ஜமாஅ’த்துடனே சேர்ந்துநின்று தொழவேண்டியவர்களாயிருக்கிறார்களென்க.

இவ் வத்யாயத்தில் பொறிக்கப்பட்டுள்ள 'ஹதீ':துகளில் முதன் மூன்றும் இமாம்—ஜமாஅ'த்தாய்ச் சேர்ந்து நின்று தொழுவதன் அவசியத்தை வற்புறுத்திக் கூறுகின்றன. இமாம்—ஜமாஅ'த் தொழுகை நிறைவேறிவருங்கால், வேறு தொழுகை தனியே தொழப்படுவது கூடாதென 'ஹதீ'. 4 வற்புறுத்துகின்றது. 'ஹதீ'. 5 இமாம்—ஜமாஅ'த்தின் தொழுகைக்குரிய சிறப்பினை எடுத்துச் சிலாகித்திருக்கிறது; 'ஹதீ'. 6 பள்ளிவாசலில் பொதுஜனங்கள் வந்து குழுமுவது சிரமமாயிருக்கும் பொழுது, அவர்கள் தங்களில்லங்களி லிருந்தபடியே தொழுதுகொள்ள அனுமதி யளிக்கப்பெறலா மென்று அறைகின்றது. 'ஹதீ'. 7, 8 பெண்மணிகளுங்கூட ஜமாஅ'த் தொழுகையில் வந்து கலந்து கொள்ள வேண்டுமென்று கோரப்பட்டார்க ளென்று கூறிக் கொண் டிருக்கின்றன; அப்பெண்மணிகள் தனியான ஒரு பின் வரிசையில் பிரத்தியேகமாய் நிற்கவேண்டு மென்று 'ஹதீ'. 14 கூறியுள்ளது. 'ஹதீ'. 9—12 வரிசைகள் நிற்கவேண்டிய ஒழுங்குகளைக் குறித்துக் கூறுகின்றன; 'ஹதீ'. 13 தனியே ஒரு மனிதன் நின்றால், அவனொரு வரிசையெனக் கருதப்படுவது கூடாதென்று கூறியிருக்கின்றது.

1. அபூ' ஹுரய்ரா (இவ்வாறு) கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) அறைய லுற்றார்கள்:—

"எனது ஆத்மாவானது எவனது கரத்தி லிருக்கிறதோ, அவனைக்கொண்டு சத்தியம் செய்து யான் கூறுகிறேன்: மரவிறாய்கள் சேகரிக்கப்பட வேண்டு மென்று நான் கட்டளை பிறப்பிக்க வேண்டு மென்றும், அப்பால் தொழுகைக்காகக் கூப்பீடு கூவப்பட வேண்டு மென்று நான் கட்டளை பிறப்பிக்க வேண்டு மென்றும், அதன் பிறகு ஒரு மனிதனைக் கொண்டு அத்தொழுகையை அன்னவன் முன்னின்று நடாத்த வேண்டு மென்று நான் கட்டளை பிறப்பிக்க

வேண்டு மென்றும், அதன் பின்னல் (அத் தொழு கைக்கு) வாராது நின்றுவிட்ட ஜனங்களின்பால் சென்று அன்னவர்களுடைய இல்லங்களை அவற்றின் மீது போட்டு எரித்துவிட வேண்டு மென்றும் யான் அநேகமாய் எண்ணத் துணிந்து விட்டேன்."[1]—(பு'க'ா. 10 : 29)

2. அபு'த்' த'ர்த'ா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"நிச்சயமாக ஷைத்தான் அவர்களை மிகைத்து விடாதிருக்குமுறையிலே எவர்கள் மத்தியில் ஜமாஅ'த் தொழுகை தொழப்படுகிற தில்லையோ, அத்தகைய மூன்று மனிதர்கள் பட்டணத்திலேனும் பாலைவனத்தி லேனும் இருக்கமாட்டார்கள்;[2] ஆகையால், கூட்டத் தொழுகையைப் பற்றிப்பிடிக்கக் கடவீர்கள்; என் னெனின், மந்தையைவிட்டு விலகியோடிவிடும் (ஆடு) ஒன்றை ஓநாய் வந்து விழுங்கிவிடும்."—(அபூ'த'ா—மிஷ். 4 : 23)

3. மாலிக் கூறினர்: பிரயாணம் புறப்பட நாடிய இரு மனிதர்கள் நபிகளுதர்பால் (சல்அ'ம்)

---

1. இந்த 'ஹதீ':து, முஸ்லிம்க ளெல்லாரும் கூடியவரை ஜமாஅ'த் தொழுகையுடன் சேர்ந்தே தொழுதுகொள்ளப் பிரயத் தனப்பட வேண்டுமென்றே வலியுறுத்திக் கூறுவதா யிருக்கிறது.

2. அஃதாவது, மூன்றுமனிதர்க ளிருந்து, அவர்கள் இமாம்-ஜமாஅ'த்தாய்ச் சேர்ந்து தொழாமற் போய்விடுவார்க ளாயின், ஷைத்தான் அன்னவர்களை மிகைத்துவிடுவான் என்பதா யிருக் கின்றது.

வந்தார்கள் ; இன்னம் (அன்னவர்களுக்கு) நபிபெருமானார் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

" நீங்கள் வெளியில் செல்லுங்கால், (முதலில்) அ'தான் கூறுங்கள் ; பிறகு இ:காமத் சொல்லுங்கள்; அப்பால் உங்களில் (சிரேஷ்டமான) பெரியவர் (முன்னின்று) தொழுகையை நடாத்தக்கடவர்."—(பு'க'ா. 10 : 18)

4. அபூ' ஹுரைய்ரா கூறினார் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

" தொழுகைக்காக இ:காமத் சொல்லப்பட்டுவிடுங்கால், கடமையாயுள்ள (அத்) தொழுகையன்றி வேறொரு தொழுகையும் தொழப்படுவது கூடாது."—(முஸ்—மிஷ். 4 : 23)

5. இப்'னு உ'மர் (இவ்வாறு) கூறியுள்ளார் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

" கூட்டத்துடன் கூடித்தொழும் தொழுகை தனியே (நின்று) தொழும் தொழுகையைப் பார்க்கினும் இருபத்தேழுபடித்தரம் அந்தஸ்தில் உயர்ந்ததாயிருக்கிறது."—(பு'க'ா. 10 : 30)

6. நா'பிஃ' கூறினார் : இப்'னு உ'மர் ஒரு குளிர் மிக்க இரவில் ல'ஜ்னானில் அ'தான் கூறினார் ; அப்பால், 'உங்க ளிருப்பிடங்களிலே (யிருந்து) தொழுது கொள்ளுங்கள்,' என்று சொன்னார் ; இன்னம், எங்களுக்கவர் அறிவித்தார் : 'அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) குளிர்மிக்க அல்லது மழைமிக்க இரவிலே பிரயாணத்தி லிருக்கும்பொழுது, அ'தான் கூறுமாறும், அப்பால் அது முடிவுற்ற பிறகு,

“ஜாக்ரதை! (உங்கள்)’ இல்லிடங்களிலேயே (யிருந்து) தொழுது கொள்ளக் கடவீர்கள்,” என்று சொல்லு மாறும் முஅ‘த்‘தினுக்குக் கட்டளையிடுவது வழக்கம்.[3]—(பு’க’ா. 10 : 18)

7. நபிகள் திலகத்தின் (சல்அ’ம்) ஆதாரத்தைக் கொண்டு இப்’னு உ’மர் கூறியுள்ளார் : (அப் பெருமானூர்) சொன்னூர்கள் :—

“உங்களுடைய ஸ்திரீகள் இரவில் மஸ்ஜிது’க்குச் செல்ல உங்கள் அனுமதியைக் கோருங்கால், அவர்களுக்கு (அவ்) அனுமதியை நீங்கள் அளிக்கக் கடவீர்கள்.”[4]—(பு’க’ா. 10 : 162)

8. ‘இன்னம் இருட்டா யிருக்கும் பொழுதே அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) அதிகாலைத் தொழுகையைத் தொழுதுகொள்வது வழக்கம்,’ என்று ஆ’யிஷா பிராட்டியார் அறிவித்துள்ளார் ; ஆகையால்,

---

3. ஜமாஅ’த்தாக ஒன்று சேர்ந்து தொழவேண்டுவது ஒரு கட்டாயச் சட்டமேயாயினும், சிற்சில சமயங்களில் பள்ளியில் வந்து ஜனங்கள் ஒன்றுகூடுவது அதிக சிரமமா யிருந்துவருங்கால், அவர்கள் தங்கள் இருப்பிடங்களில் — (வாஸஸ்தலங்களில்) இருந்தபடியே தொழுதுகொள்ள அனுமதி யளிக்கப்பெற்றுள்ளார்கள்.

4. ஸ்திரீகளுங்கூட, மற்றப்படி எதேச்சையா யிருந்தால், மஸ்ஜிது’க்குச் சென்று இமாம்—ஜமாஅ’த்துடன் சேர்ந்தே தொழுதல் வேண்டும். அக்காலத்தில் பால்கொடுக்குங் குழந்தைகளையுடைய தாய்மார்களும் பள்ளிக்குச் சென்றக்கால், தங்கள் குழந்தைகளையும் தூக்கிக்கொண்டே சென்று ஜமாஅ’த்தில் கலந்து தொழுதுகொண்டார்கள். இக்காலத்திலும் மக்கா மதீனாவிலே ஸ்திரீகள் இமாம்—ஜமாஅ’த்துடன் சேர்ந்தே மஸ்ஜித்’களில் (தனித் தொகுதியாயிருந்து) தொழுது வருகிறூர்கள்.

மூமினனவர்களின் பெண்டுகள், இருளின் காரணத்தால் அவர்கள் அடையாளம் தெரிந்துகொள்ளப்பட முடியா திருக்கும், அல்லது அவர்கள் ஒருவரை யொருவர் இன்னரெனத் தெரிந்துகொள்ள இயலா திருக்கும் நிலையிலே (வீடு)திரும்பி விடுவார்கள்.—(பு'க'ா. 10 : 164)

9. நபிகள்நாயகத்தின் (சல்அ'ம்) ஆதாரத்தைக் கொண்டு அனஸ் கூறியுள்ளார் : (அம்மஹானுபாவர்) சொன்னர்கள் :—

"உங்கள் வரிசைகளை ஒழுங்காய் நீங்கள் நிறுத்தக் கடவீர்கள் ; என்னெனின், வரிசைகளை ஒழுங்காய் நிறுத்துவது தொழுகையை (நியமத்துடன்) நிலைநிறுத்துவதன் (ஒரு) பகுதியா யிருக்கிறது."—(பு'க'ா. 10 : 74)

10. அபூ' ஹுரய்ரா (இவ்வாறு) கூறியுள்ளார் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"ஜனங்கள் அ'தானின் முக்கியத்தையும், (தொழுகையில்) முதல்வரிசையில் நிற்பதன் முக்கியத்தையும் அறிந்து, அதற்காக அதிருஷ்டச் சீட்டுக் குலுக்கிப் பார்ப்பதைத் தவிர்த்து வேறு வழியில்லை யென்பதைத் தெரிந்துங் கொண்டுவிடுவார்க ளாயின், அவர்கள் அதற்காக அதிருஷ்டச் சீட்டே குலுக்கத் துணிந்து விடுவார்கள்."—(பு'க'ா. 10 : 9)

11. அபூ' மஸ்ஊ'த்' கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) தொழுகையின் நேரத்திலே எங்கள் தோள்களைத் தொட்டு(ப் பின்வருமாறு) கூறுவது விழக்கம் :—

“நேர் (ஒழுங்கான) வரிசையாய் நில்லுங்கள் ; முன்னும் பின்னுமாய்(க் கோணலாய்) நிற்காதீர்கள் ; என்னெனின், அப்படி(க்கோணலாய்) நிற்பதென்றால், உங்களுள்ளங்கள் (ஒன்றுபடாது) வேற்றுமைப்பட்டுப் போய்விடும். உங்களுள்ளே பகுத்தறிவும் விவேகமும் (அதிகம்) வாய்க்கப் பெற்றவர்கள் என்னையண்மி (நெருங்கி) நிற்கட்டும் ; அப்பால் அவர்களுக்கு அடுத்தபடியி லுள்ளவர்கள் (நிற்கட்டும்); அதற்கு மப்பால் அவர்களுக்கும் அடுத்தபடித்தரத்தி லுள்ள வர்கள் (நிற்கட்டும்).”—(முஸ்—மிஷ். 4 : 24)

12. அனஸ் கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத் தூதர் (சல்அ’ம்) சொன்னர்கள் :—

“ முதலிலே முதல்வரிசையைப் பூர்த்தி செய்யக் கடவீர்கள் ; அப்பால் அதற்கப்பா லுள்ளதை(ப் பூர்த்தி செய்யுங்கள்) ; இன்னம், குறைச்சல் ஏதேனு மிருப்பின், அது கடைசி வரிசையி லிருக்கட்டும்.”—(அபூ’த’ா—மிஷ். 4 : 24)

13. வாபி’சா கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத் தூதர் (சல்அ’ம்) (கடைசி) வரிசைக்குப் பின்னே ஒரு மனிதன் தனியேநின்று தொழுதுகொண் டிருந்ததைக் கண்டார்கள் ; ஆகையால், அவனை மீட்டுமத் தொழு கையைத் திருப்பித் தொழுமாறு அவர்கள் கட்டளை யிட்டார்கள்.[5]—(மஸ்—மிஷ். 4 : 24)

---

5. இமாமுக்குப் பின்னே வரிசைகள் நிறைந்து, அப்பால் ஓரே மனிதன் தனித்துவிட நேருங்கால், அவன் தனக்கு முன்னே நிற்கும் இறுதி வரிசையிலிருந்து, அதன் நடுவிலுள்ள ஒருவனைப் பின்னே இழுத்துத் தன்னுட்னே சேர்த்து, இருவராய் ஒரு

14. அனஸ் கூறினர் : நானும் எங்க ளில்லத்தி லுள்ள ஓர் அநாதப் பையனும் நபிகள்நாயகத்துக்கு (சல்அ'ம்) பின்னே (ஒரு வரிசையில்) நின்று தொழுது கொண்டோம் ; என்னுடைய மாதா உம்மு ஸுலய்ம் எங்களுக்குப் பின்னே யிருந்தார்.[6]—(பு'க'ா. 10 : 78)



---

வரிசையில் நிற்றல்வேண்டும். என்னெனின், தனிமரம் தோப்பாவ தில்லையல்லவா?

6. அக் காலங்களில் ஜமாஅ'த் தொழுகைகளில் பெண் மணிகள், ஆண்களின் வரிசைகளுக்குப் பின்னே, தனிவரிசையாய் நின்று வந்தார்கள் ; ஸ்திரீயொருத்தி தனித்து விடுங்காலும், அன்னவள் கடைசி ஆண்வரிசைக்குப் பின்னே தனிமனுஷியாய்த் தனிவரிசையிலே நிற்பாள். ஆண்களின் வரிசைகள் மத்தியிலே பெண்கள் கலந்து நிற்க அனுமதியளிக்கப் பட்டில்லை ; அவ்வாறு அனுமதி யளிக்கப்பட்டால், அப்பால் மாதாகோயில்களிலும் வேறு ஹிந்துக்கள் கோவில்களிலும் ஆண்களும் பெண்களும் பொதுப்படையாய்க் கலந்து நின்று தேவாராதனைபுரிய அனுமதி யளிக்கப்பெற்றிருப்பதால் என்னென்ன எண்ணத் தொலையாத சமுதாயக் கேடுகளெல்லாம் விளைந்து வருகின்றனவோ, அவை யனைத்தும் முஸ்லிம்களின் மஸ்ஜித்'களிலும் தலைவிரித்தே தாண்டவமாடத் துணிந்துவிடு மென்பது ஒருதலை. நெருப்பும் பஞ்சும் ஒன்ருயிருந்தால், அப்பால் அவ்விரண்டும் தாமே வலுவிற் பற்றிக்கொள்வதைக் கேட்கவும் வேண்டுமோ?

# அத்யாயம்—8

## இமாம்—(தொழுகையை நடாத்துபவர்)

1. "இன்னம், இப்'ராஹீமை அவருடைய ரக்ஷகன் ஒரு சில வசனங்களைக்கொண்டு சோதித்தபொழுது, அவர் அவைகளைப் பூர்த்திசெய்து வைத்தார். (அதுகண்டு) 'நிச்சயமாக நான் நும்மை மனிதர்கட்குத் தலைவரா—(இமாமா)கச் செய்கிறவனுயிருக்கிறேன்,' என்று அவன்—(ஆண்டவன்) சொன்னுன். (அதுகேட்டு) இப்'ராஹீம் கூறினுர்: 'இன்னம், என்னுடைய சந்ததியார்களினின்று (உதிப்பவர் விஷயம் யாது)?' (அதற்கு) 'என்னுடைய உறுதிமொழி யொப்பந்தம் அக்கிரமக்காரர்களைச்சார—(உட்படுத்த)மாட்டாது,' என்று (அவருடைய ரக்ஷகன்) கூறிவிட்டான்" (:குர். 2 : 124).

இமாம் என்பவர், "எவரைப் பார்த்து ஏனையோர் அவரைப் போல் செய்கின்ருரோ," அல்லது, "ஏனையோர் எவரது நடக்கையைப் பின்பற்றி யொழுகுகின்ருரோ," அப்படிப்பட்டவர் என்பதே அசல் தாத்பரியமாகும்; இ'தம்மபி'ஹீ (அவனைப் பார்த்து, அல்லது அவனைப் பின்பற்றி அன்னவன் நடந்தான்) என்பதிலிருந்து இமாம் என்பது பிறந்திருக்கிறது. ஒரு தலைவன், பிரதமன், அல்லது முக்கியஸ்தன் என்பதே—அவன் நேர்வழியைப் பின்பற்றினுலும், பின்பற்ருவிட்டாலும்—அச்சொல்லின் பொருளாகும். முஸ்லிம்கள் கூட்டமாய் நின்று தொழுகையை நடாத்துகையில், "இமாம்" என்பவர் அத் தொழுகையை முன்னின்று நடாத்தி வைக்கிறவர் என்றே கருத்துக் கொள்ளப்படுகிறது. இப்'ராஹீம் நபி ஓரிமாமா யாக்கப்பட்டா ரென்று தலையங்கஆயத் கூறியுள்ளது; என்னெனின், அன்னவர் ஆண்டவனுடைய கட்டளைகளை நிறைவேற்றி வைத்துளார்;—எனவே, ஒவ்வோர் இமாமும் அந்த மகா தீர்க்கதரிசியையே பின்பீற்றி நடத்தல்

அத்தியாவசியமாம்; அக்கிரமம் புரிகிறவன்,—அன்னவன் உயர் குலத்தில் உதித்தவனேயாயினும், இமாமாயிருப்பதற்கு அருகதை பெற்றவனு யிருப்பது சாலாது. எனவே, "சாபூட்டுப் பிள்ளை சாபுதான்" என்று கொண்டாடுவது கூடாதென்க.

தொழுகையை முன்னின்று நடத்துகிறவர் இமாமென்று அழைக்கப்படுவதிலிருந்து, அவர் தமது சன்மார்க்க ஒழுக்கத்தைக் கொண்டு அந்தச் சமுதாயத்தில் ஒரு கண்ணிய புருஷருக்குரிய உயரிய அந்தஸ்தை வகித்துள்ளவரா யிருக்க வேண்டு மென்பது செவ்விதிற் புலனுகின்றது. நபிகள் திலகம் உயிருட னிருந்த காலத்தில் அம்மஹானுபாவரே இமாமாய் நின்று தொழுகைகளை யெல்லாம் நடாத்தி வந்தார்கள்; அவர்கள் தங்களுடைய இறுதி வியாதியின்பொழுது இமாமாய் நின்று தொழுகையை நடாத்த முடியாது போய்விட்ட நேரத்திலே, 'ஹ'ஜ்ரத்அபூ'ப'க்ர் சித்'தீ':க் (ரலி') அவர்களை இமாமாய் நின்று அத் தொழுகைகளை நடாத்தி வைக்குமாறு கட்டளையிட்டார்கள் ('ஹதீ'. 1).

இமாமாய் முன்னின்று தொழுகையை நடாத்தி வைக்கும் கௌரவம், அந்தச் சமுதாயத்தில் ஒரு கண்ணிய புருஷருக்குரிய உயரிய அந்தஸ்தை வகித்துள்ளவருக்கே அளிக்கப்படல் வேண்டும் ('ஹதீ'. 1.); இன்னம், அன்னவர் :குர்ஆன் ஷரீ'பில் ஆழிய ஞானம் நிரம்பப்பெற்றவரா யிருத்தல் வேண்டும் ('ஹதீ'. 2, 3); அவரோர் அடிமையாயிருப்பினும், தோஷமில்லை ('ஹதீ'. 4). இமாமாய் வேலைபார்ப்பவர் சம்பளம் பெற்று ஊழியம் புரிகிற வராயிருப்பது கூடாது (பு'க'ா. சுருக். அத். 6 : 'ஹதீ'. 12). ஆனால், ஓரிமாமின் ஸ்தானத்தை வேறொருவர் துராக்கிரகமாய்க் கைப்பற்றி யிருப்பினும், இந்தப் புதிய இமாமின் பின்னே நின்று தொழுவது கூடாதெனத் தடுக்கப்பட்டில்லை ('ஹதீ'. 5). இமாமாக ஏற்பட்டிருப்பவன் தீயனேயாயினும், அன்னவனைப் பின்பற்றியே தொழுதுவரல் வேண்டும் ('ஹதீ'. 6.) கண்குருடா யிருப்பவர் இமாமாக இருப்பது தடுக்கப்பட்டில்லை ('ஹதீ'. 7); ஸ்திரீகளுங் கூட இமாமாயிருக்கலாம் ('ஹதீ'. 8). இமாமாய் நிற்பவர் தம்மைப் பின்பற்றித் தொழுபவர்களில் பலஹீனர்களாகவும் வியாதியஸ்த ராகவும் வயோதிகர்க ளாகவுமுள்ள மனிதர்களின் விஷயத்தை

நன்கு ஞாபகத்தில் வைத்துத் தொழவைத்தல் வேண்டும் (‘ஹதீ’. 9). இமாமைப் பின்பற்றித் தொழுபவர் எந்த ஒரு செய்கையிலும்—தொழுகைக்குரிய எந்த இயக்கத்திலும் — அந்த இமாமை முந்துவது கூடாது (‘ஹதீ’. 10). இமாம் தொழ வைத்துக்கொண் டிருக்குங்கால், ஒருவன் புதிதாக வந்து சேர்ந்து கொள்ள நேருமாயின், அவன் எந்த நிலையில் இமாமைக் காண் கிருனே, அந்த இயக்க நிலையில் அப்படியே அவரைப் பின்பற்றல் வேண்டும் (‘ஹதீ’. 11). இமாம் எப்படி நிற்க வேண்டும், பின்பற்றித் தொழுவோர் எவ்வாறு நிற்கவேண்டும் என்று ‘ஹதீ’. 12–14 விளக்கிக் கூறுகின்றன. முன்னிற்கும் இமாமுக்கும் பின்னிற்கும் ஜமா’அத் ஜனங்களுக்கும் இடையிலே சுவரொன் றிருந்தால், அதனுல் தோஷமொன்று மில்லை (‘ஹதீ’. 15).

1. அபூ’ மூஸா கூறினர்: நபிகள் திலகம் (சல்அ’ம்) வியாதியுற்று விட்டார்கள்; மேலும், அவர்கள் வியாதி கடுமையாய் விட்டது. ஆகவே, அவர்கள் சொன்னர்கள் :—

“அபூ’ ப’க்ரிடம், அவர் ஜனங்களுக்கு (இமாமாய் நின்று) தொழுகையை நடாத்தி வைக்க வேண்டுமென்று சொல்லக் கடவாய்.”[1] ........ஆகை

---

1. நபிகள் திலகம் தங்கள் ஜீவதசை முழுதும் தாங்களே இமாமாய் நின்று சகல தொழுகைகளையும் தொழ வைத்து வந்தார்கள். அவர்களது நிர்யாணத்துக்கு முன்னே வந்து தாக்கிய இறுதிவியாதியின் பொழுது தங்கள் படுக்கையைவிட்டு எழுந்து செல்லவும், இமாம்—ஜமாஅ’த் தொழுகையை நடாத்தி வைக்கவும் போதிய வலிவில்லாது நலிந்துபோய் விட்டார்கள். எனவேதான், ‘ஹ’ஜ்ரத் அபூ’ப’க்ர்(ரலி’) அவர்கட்கு அனுமதி யளித்து, இமாமத் செய்து தொழுகைகளை நடாத்தச் சொன் ஞர்கள். நபிகள்நாயகத்தின் பழக்கத்துடனே இந்த ‘ஹதீ’ஃதும் சேர்ந்து, தமது சன்மார்க்க ஒழுக்கத்திலே மிகச்சிறந்தவரா யிருந்து வருங் காரணத்தால் அந்தச் சமூகத்தில் அதிகமான் கௌரவத்

யினல், அத்தூதன் அன்னவர்பால் வந்தான்; மேலும், அவர்—(அபூ'ப'க்ர்) நபிகள்நாயகத்தின் (சல்அ'ம்) ஜீவதசையிலே ஜனங்களுக்கு (இமாமாய் நின்று) தொழுகையை நடாத்திவைத்தார்.—(பு'க'ா. 10 : 46)

2. அபூ'மஸ்ஊ'த்' அறையலுற்ருர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னூர்கள் :—

"அல்லா(ஹ்)வின் வேதத்தில் அதிகம் அறிந்தவரே ஒரு சமுதாய மக்களுக்கு இமாமாயிருந்து (தொழுகையை) நடாத்தக் கடவர்;[2] இன்னம், தங்களுக்குள்ள :குர்ஆன் ஞானத்தில் சமமான (விவேக முள்ள) மனிதர்கள் (பலர்) இருப்பரேல், அப்பால் ஸுன்னத்தில் அதிகமான ஞானமுள்ளவரே (இமாமா யிருக்கக்கடவர்); மேலும், அவர்கள் தங்களுக்குள்ள ஸுன்னத் ஞானத்தில் சமமா யிருப்பரேல், அப்பால் ஹிஜ்ரத்தில் முதன்மை

---

துக்குரிய உயரிய அந்தஸ்தை வகித்துவரும் பெரியாரே இமாமா யிருத்தற்கு அருகதை வாய்ந்தவரா யிருக்கின்ரு ரென்னும் விஷயத்தை ஐயமில்லாது அறிவித்துவைக்கின்றது; என்னெனின், நபிபெருமானூர் அவர்களுக்குப் பின்னே 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ர் அவர்களே அம் மஹானுபாவரின் சிஷ்யர்களுள் ளெல்லாம் மகா சிலாக்கியமுள்ள பெரியாரா யிருந்துவந்தார்க ளென்பது வெள்ளிடை விலங்கலேயாம்.

2. "அல்லா(ஹ்)வின் வேதத்தில் அதிகம் அறிந்தவர்" என்பது, கிளிப்பிள்ளைப் பாடமாய் மனப்பாடம் பண்ணியுள்ள "கிராம் போன் பிளேட்"களை விட உண்மையிலே அத் தெய்வத் திருமறையில் ஆழிய ஞானம் நிரம்பியுள்ளவர்களையே குறிப்பதா யிருக்கின்றது.

யானவர்;[3] மேலும், அவர்கள் ஹிஜ்ரத்தில் சமமா யிருப்பரேல், அப்பால் ஆண்டில் முதிர்ந்துள்ளவர்; இன்னம், ஒரு மனிதன் மற்றொரு மனிதனுக்கு, இவன்—(பின்னவன்) அதிகார ஸ்தானத்தில் அமர்ந்திருக்குமிடத்திலே[4] இமாமாய் நின்று தொழ வைப்பது கூடாது; மேலும், ஒரு மனிதன் மற்றொரு மனிதன் வீட்டிலே, இவனது—(பின்னவனது) அனுமதியிருந்தா லன்றி, கௌரவத்துக்குரிய ஸ்தானத்தை வகிப்பது கூடாது.”—(மு்ஸ்—மிஷ். 4 : 26)

3. இப்’னு அ’ப்’ப’ாஸ் கூறினர்; அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னார்கள் :—

“உங்களுள்ளே மிகவும் நல்லொழுக்க முள்ளவரே அ‘தான் கூறக்கடவர்; அதிகமான :குர்ஆன் ஞானமுள்ளவர்களே இமாம்களா யிருக்கக்கடவார்கள்.”[5]—(அபூ’த’ா—மிஷ். 4 : 26)

---

3. “ஹிஜ்ரத்தில் முதன்மையானவர்” என்பவர், இஸ்லாத்திற்காகத் தியாகம் புரிவதில் முதன்மையாயுள்ளவரையே சுட்டிக் காட்டுவர்.

4. வீட்டுக் குடையவர், அல்லது ஒரு பள்ளியில் இமாமா யிருப்பவர், வெளியிலிருந்து வந்துள்ள ஒருவரைப் பார்க்கினும் தம திருப்பிடத்தில் தாமே இமாமாய் நின்று தொழுகையை நடாத்த அதிகமான உரிமை பெற்றவரா யிருக்கிறார்.

5. மஸ்ஜிதில் வேலைபார்க்கும் முஅ‘த்‘தின், பேஷ்இமாம் ஆகிய இரு உத்தியோகஸ்தருள் முந்தியவர் ஒழுக்கத்தில் மிகச் சிறந்தவராகவும், பிந்தியவர் :குர்ஆன் ஞானத்தில் ஆழ்ந்த அறிவுள்ளவராகவும் இருந்துவரல் வேண்டும் என்க. இதனால் இமாமாயிருப்பவருக்கு ஒழுக்கம் வேண்டாமென்பது கருத்தாக மாட்டாது; என்னெனின், :குர்ஆன்ஷரீ‘பில் ஆழிய ஞானமிருப்ப

4. இப்'னு உ'மர் கூறினர் : முதல் முஹாஜிரீன்கள் :குப'ாயி லுள்ள உ'ஸ்'ப'ா என்னுமிடத்திற்கு வந்தபொழுது, அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) வருவதற்கு முன்னே, அபூ' 'ஹு'தய்'பாவின் அடிமை ஸாலிம் என்பவரே அவர்களுக்கு இமாமாயிருந்து (தொழுகை நடாத்தி) வந்தார் ; இன்னம், அன்னவருக்கு அதிகமான :குர்ஆன் ஞானம் இருந்து வந்தது.[6]—(பு'க'ா. 10 : 54)

5. உ'ப'ய்து'ல்லா (இவ்வாறு) கூறியுள்ளார் : இவர் உ':துமா னுப்'னு அ''ப்'பானிடம் சென்ருர் ; அப்பொழுது, அவர்—(அந்த மூன்ருவது க'லீ'பா கலகக்காரர்களால்) முற்றுகையிடப்பட்டுக் கிடந்தார். முன்னவர் கூறினர் : 'தாங்களே பொது ஜனங்களின் இமாமா யிருக்கின்றீர்கள் ; மேலும், தங்களுக்குத்தாம் தாங்கள் காண்பது—(இம் முற்றுகை) ஏற்பட்டிருக்கிறது ; மேலும், கலகக் காரரின் இமாமே (இப்பொழுது) எங்கள் தொழுகைகளை நடாத்தி வருகின்ருர் ; இன்னம், இதனை நாங்கள், பாபகாரிய மென்றே கருதுகிறோம்.' (அதுகேட்டு, உ':துமான் ரலி') சொன்னர்கள் : 'ஜனங்கள் செய்யக்கூடிய காரியங்களில் தொழுகையே சாலச்சிறந்ததா யிருந்துவருகிறது ; ஆகை

---

தால், போதிய ஒழுக்கமுள்ளவராயே அப்பெரியார் இருந்துவருவரென்பது ஒருதலை.

6. அடிமையொருவர் இமாமாயிருந்துவந்தார் ; என்னெனின், :குர்ஆன்ஷரீ'பில் அவருக்கு ஆழியஞானம் நிரம்ப இருந்துவந்ததனுல் என்க.

யால், அந்த ஜனங்கள் ஒரு நல்ல காரியத்தைச் செய்யத் துணியுங்கால், நீரும் அன்னவர்களுடனே அந்த நல்ல காரியத்தைச் செய்யக் கடவீர்; இன்னம், அன்னவர்கள் தீமையிழைக்கத் துணியுங்கால், நீர் அவர்களது தீமையைத் திரஸ்கரிக்கக் கடவீர்.'—(பு'கா. 10 : 56)

6. அபூ' ஹுரய்ரா கூறினர்: அல்லா(ஹ்) வின் திருத்தூதர் (சல்அ'ம்) அறைய லுற்றார்கள்:—

"ஒவ்வொரு தளபதியின்—(அமீரின்) கீழும், அவன் நல்லொழுக்க முடையவனே யாயினும், தீயொழுக்க முடையவனே யாயினும்,—அன்னவன் மாகொடிய பாபமிழைத்துள்ள குற்றவாளியே யாயினுங்கூட—(நீங்கள் நின்று) ஜிஹாத்' செய்ய வேண்டுவது நுங்கள்மீது பொறுப்பாக்கப்பட்டிருக்கிறது; இன்னம், தொழுகையும் ஒவ்வொரு முஸ்லிமின் பின்னேயும், அவன் நல்லொழுக்க முடையவனே யாயினும், தீயொழுக்க முடையவனே யாயினும்,—அன்னவன் மாகொடிய பாபமிழைத்துள்ள குற்றவாளியே யாயினுங்கூட — (நின்று) தொழவேண்டுவது நுங்கள்மீது பொறுப்பாக்கப்பட்டிருக்கிறது;[7] இன்னம், ஒவ்வொரு முஸ்லிமின்

7. ஒருவருக்கு இமாமாயிருத்தற்குப் போதிய யோக்கியதை இருந்தாலன்றி, அன்னவர் ஜிஹாது'க்கேனும் தொழுகைக்கேனும் இமாமாய்த் தேர்ந்தெடுக்கப்படுவது கூடாது; எனவே, ஒழுக்கங் கெட்டவர்களும், பாபச்செயல் புரியும் தோஷிகளும் இமாம்களாக நியமிக்கப்படுவது கூடாதென்பது ஒருதலை. ஆனால், அறியாமையாலோ, அல்லது தவறுதலாலோ, ஒரு தீயமனிதன் இமாமாய் நியமிக்கப்பட்டுவிட்டால், அல்லது, நல்லவனாயிருந்தவன் அந்த

மீதும் ஜனா'ஜாத் தொழுகை தொழ வைக்க வேண்டுவது, அவன் நல்லொழுக்க முடையவனே யாயினும், தீயொழுக்க முடையவனே யாயினும்,—அன்னவன் மாகொடிய பாபமிழைத்துள்ள குற்றவாளியே யாயினுங்கூட—நுங்கள்மீது பொறுப்பேற்றப்பட்டிருக்கிறது."—(அபூ'த'ா—மிஷ். 4:26)

7. அனஸ் (பின் வருமாறு) கூறியிருக்கின்றார்: நபிபெருமான் (சல்அ'ம்) தங்களுக்குப் பின்னே இப்''னு உம்மு மக்'தூமை ஜனங்களின் இமாமாயிருந்து வேலைபார்க்க விட்டார்கள்; ஆனால், அவர் ஒரு குருடரா யிருந்தார்.—(அபூ'த'ா. 2:64)

8. :குர்ஆன் ஷரீ'ப மனப்பாடமாய் வரப் பண்ணியிருந்த உம்மு வர(க்):காவைக் குறித்து (இவ்வாறு) கூறப்பட்டிருக்கிறது :—

நபிகள் திலகம் (சல்அ'ம்) அம்மாது தமதில்லத்து மக்களுக்கு இமாமா யிருந்துவர வேண்டுமென்று அவருக்குக் கட்டளையிட்டார்கள்; அன்னவருக்கு ஒரு முஅ'த்'தினும் இருந்தார்; இன்னம், அன்னவர் தமதில்லத்து ஜனங்களுக்கு இமாமா யிருந்து தொழவைத்து வந்தார்.[8]—(மஸ். VI, 405)

---

நியமனத்துக்குப் பின்பு அத்தகைய பொல்லாதவ னுய்விட்டால், அம்மனிதன் அவ் வேலையிலிருந்து நீக்கப்படுமட்டில் அவனைப் பின்பற்றியே பொதுமக்கள் நடந்துவரல் வேண்டும்; இன்றேல், இஸ்லாமிய சமுதாயத்தில் ஒற்றுமையென்பதும் கட்டுப்பாடென்பதும் குலைந்துபோய் விடுமன்றோ ?

8. இதனால் இமாமாகப் பெண்மணி இருந்துவரலா மென்பது தெள்ளிதிற் புலனாகின்றது; அம் மாதுசிரோமணி யில்லத்தில் ஆடவர் ஒருவருமில்லை யென்றுகூற இங்கொன்றும் ஆதாரம்

9. அபூ' ஹுரய்ரா (இவ்வாறு) கூறியிருக்கின்றார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள்:—

"உங்களுளொருவர் ஜனங்களுக்கு இமாமாய் நின்று தொழ வைக்குங்கால், அவர் அதனை இலேசாக்க வேண்டும்; என்னெனின், அன்னவர்களுள்ளே பலஹீனன் இருக்கிறான்; வியாதியஸ்தனும் (இருக்கிறான்); வயோதிகனும் (இருக்கிறான்);[9] இன்னம், உங்களுளொருவர் தனியே தொழுதுகொள்ளுங்கால், அன்னவர் தமக்கு இஷ்டமானபடி (அதனை) இலேசுபடுத்திக் கொள்ளலாம்." —(பு'க'ா. 10 : 62)

10. ப'ராய் கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) ஸமிஅ'ல்லாஹு லிமன் 'ஹமித'ஹு என்று கூறுங்கால், (பின்னே நிற்கும்) எங்களுள் ஒருவரும், நபிகள்நாயகம் (சல்அ'ம்) சிரவணக்கம் புரிய—(ஸுஜூத்' செய்ய)க் குனிகிறமட்டிலே (ஸுஜூதி'ல் குனியத்) தம்முடைய முதுகை

---

காணப்படவில்லை. அதற்குமாறாக அவ்வீட்டில் முஅ'த்'தினொருவர் இருந்தாரென்று இங்குக் கூறப்பட்டுள்ளது; இவர் திண்ணமாக ஓர் ஆண்பிள்ளையாகத்தான் இருந்திருத்தல் வேண்டும்.

9. இந் நுட்பத்தினை இத் தென்னாட்டில் இமாம்களாய் நின்று தொழ வைப்பவர்கள் நன்கு நோட்டமிடக் கடவார்களாக. கூட்டம் பெரிதாய்ப் போகப் பெரிதாய்ப் போகப் பேஷ் இமாம்களுக்கும் "குஷால்" அதிகரித்து, மிகவுநீளமாய்த் தொழவைக்கத் துணிந்து விடுகின்றனர்கள். இவர்கள் திருநபியின் ஸுன்னத்தை விடத் தங்கள் பிரதாபத்தைக் காட்டுவதே பெரிதென மதிக்கின்றனர்போலும்.

வளைப்பது வழக்கமில்லை; அப்பால், அவர்களுக்குப் பின்னாலே நாங்களெல்லாரும் சிரவணக்கம் புரியக் குனிவோம்.—(பு'க'ா. 10 : 52)

11. அபூ' ஹுரய்ரா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"நீங்கள் தொழுகைக்கு வருங்கால், நாங்கள் (அதற்குமுன்னே) ஸுஜூது'க்குச் சென்றுவிட்டிருந்தால், நீங்களும் ஸுஜூதி'ல் விழுந்துவிடக் கடவீர்கள்; அதனை ஒரு பொருளாகக் கணிக்காதீர்கள்; இன்னம், எவரொருவர் ஒரு (முழு) ரக்அ'த்தில் (வந்து) சேர்கிறாரோ, அவர் (அந்த ரக்அ'த்தைத் தம்) தொழுகையிலே சேர்த்துக் (கணித்துக்) கொள்வார்."[10]—(அபூ'த'ா—மிஷ். 4 : 28)

12. ஸமுரா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) நாங்கள் மூவரா யிருந்தால், எங்களுள் ஒருவர் முன்னால் நகர்ந்து (இமாமாய்)

---

10. இமாம்—ஜமாஅ'த்தாய் நின்று தொழுபவர் சிரவணக்கம் புரிய ஸுஜூதி'ல் வீழ்ந்திருக்குங்கால், வேறொருவர் வந்து அந்த ஸுஜூதி'ல் கூடவிழுந்து தொழுவராயின், இவருக்கு இஃது ஒரு ரக்அ'த்தாக மாட்டாது; இதிலிருந்து விளக்கமாவது யாது? பின்னால் வந்தவர், முன்னே தொழுதுகொண் டிருந்த ஜமாஅ'த் ரு(க்)கூஇ'ல் குனிந்து நிற்கும்பொழுது சேர்ந்து குனிந்துவிடுவராயின், அப்பொழுது அஃது ஒரு ரக்அ'த்தில் சேர்ந்துவிடுமென்க. அவர்கள் ரு(க்)கூஇ'லிருந்து தலையைத் தூக்கியபின்னால் சேர்ந்து கொள்வதால், (அவ்வாறு சேர்ந்தவர் தனியே அந்த ருக்கூஇ'ச் செய்துகொண்டாலும்) அது ரக்அ'த் கணக்கில் சேரமாட்டாதென்பது விளக்கம்.

நிற்கவேண்டு மென்று கட்டளை யிட்டார்கள்.—(திர்மி—மிஷ். 4 : 25.)

13. அபூ’ஹுரய்ரா கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னர்கள் :—

“இமாமை (முன்னல்) நடுவிலே நிறுத்துங்கள். இன்னம், இடைவெளிகளை அடைத்துவிடுங்கள்.”[11] —(அபூ’த’ா—மிஷ். 4 : 24)

14. இப்’னு அ’ப்’ப’ாஸ் கூறினர்: ஒருநாளிரவு நான் நபிகள் நாயகத்துடனே (சல்அ’ம்) எனது தொழுகையைத் தொழுதுகொண்டேன் ; மேலும், நான் அவர்களது இடப்புறத்திலே நின்றேன் ; ஆனல், அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) எனது சிரத்தை என் பின்புறத்தினின்று பற்றித் தங்களுடைய வலப்புறத்திலே நிறுத்திஞர்கள் ; அப்பாலே தொழ வைத்தார்கள்.[12]—(பு’க’ா. 10 : 77)

---

11. 12-ஆவது, 13-ஆவது ‘ஹதீ’துகள் இமாம் நிற்க வேண்டிய விதத்தை விளக்கியுள்ளன : அவர் எல்லார்க்கும் முன்னல் தனியே நடுவில் நிற்கக்கடவர் ; அனைவரும் அவருக்குப் பின்னல் வரிசை வரிசையாய் இடைவெளி விடாது நிற்றல் வேண்டும் ; இமாமுக்குப் பின்னே நிற்பவர்கள், அவரது வலப் பக்கத்திலும் இடப்பக்கத்திலும் சரிசரி எண்ணிக்கையுள்ளவர் களா யிருத்தல் வேண்டும்.

12. இருவரே நின்று இமாம்—ஜமாஅ’த்தாய்த் தொழ நேருங்கால், அவ்விருவரும் அநேகமாய் ஒரே வரிசையில் (இமா முக்குச் சற்றுப் பின்னே மற்றவராக) நிற்பர் ; இமாமுக்கு வலப் பக்கத்திலே மற்றவர் நிற்பர் ; அவ்விருவரும் தொழுதுவருங்கால், மூன்றுவதா யொருவன் வந்து சேர்ந்துகொண்டால், இமாம் ஒருதப்படி முன்னே சென்று நடுவாய் நிற்பார் : அல்லது அவரை

15. ஆ'யிஷா பிராட்டியார் கூறினார்கள்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) இரவில் தங்கள் அடைப்புக்குள்ளே (நின்று) தங்களுடைய தொழுகைகளைத் தொழுதுகொள்வது வழக்கம்; மேலும், அச் சிற்றடைப்பின் சுவர் தாழ்ந்திருந்தது; ஆகையால், ஜனங்கள் நபிகள் திலகத்தின் (சல்அ'ம்) திருமேனியைப் பார்த்தார்கள்; (அவர்கள் தொழுது கொண்டிருந்ததைக் கண்டு) சில ஜனங்கள் எழுந்து நின்று, அத்தொழுகையில் அவர்களைப் பின்பற்றினார்கள்.[13]—(பு'க'ா. 10 : 80)



முதலில் ஒருவராய்த் தொடர்ந்து நின்று தொழுதவர் ஒருதப்படி பின்னே சென்று, புதிதாய் வந்தவருடன் சேர்ந்து இமாமுக்குப் பின்னே ஒரு தனிவரிசையாய் நிற்பார்.

13. இவ்வாறு அப் பெருமானார் தொழுதுகொண்டது ரமல'ான் மாதத்தின் 'த'ஹஜ்ஜு'த்' தொழுகையா யிருந்தது. அம் மஸ்திலிருந்த அவ்வடைப்புப் பாய்களால் மறைக்கப்பட்டிருந்தது. எனவே, இந்த 'ஹதீ':தால் விளக்கமாவது யாதெனின், இமாமுக்கும் அவரைப் பின்தொடர்ந்து நிற்பவர்களுக்கும் இடையில் ஏதேனும் தடுப்பிருந்தால், அதனால் குற்றமொன்றும் இல்லையென்பதே யாகும்.

# அத்யாயம்—9

## தொழுகையின் அடைவு

1. "வேதத்தினின்று உமக்கு அருளப்பட் டிருப்பதை ஓதக்கடவீர்; மேலும், தொழுகையை நியமமாய் நிலைநிறுத்தக் கடவீர்; நிச்சயமாகத் தொழுகையென்பது ஒருவனைத் துராசாரத்தைவிட்டும், தீமையைவிட்டும் விலக்கி "வைக்கின்றது" (குர். 29 : 45).

2. "இன்னம், பகலின் இருபகுதிகளிலும், இரவின் முன்னேரத்திலும் தொழுகையை நியமமாய் நிலைநிறுத்தக் கடவீர்கள்; நிச்சயமாக நற்செய்கைகள் தீச்செயல்களை (க்கல்லி) யெறிந்துவிடுகின்றன; சிந்தித்துப் பார்ப்பவர்களுக்கு இஃதொரு நினைப்பூட்டியா யிருக்கிறது" (11 : 114).

3. "சூரியன் மையஞ் சரிந்ததிலிருந்து இரவின் இருள் வரையிலுள்ள தொழுகைகளையும், காலை(வணக்க) ஓதுதலையும் நியமமாய் நிலைநிறுத்தக்கடவீர்கள்; நிச்சயமாகக் காலை ஓதுதல் கவனிக்கப்படுகிறது" (17 : 78).

4. நிச்சயமாகத் தொழுகை யென்பது மூமினுனவர்கள் மீது குறிப்பிட்ட காலங்களில் (தொழுதற்கு) விதிக்கப்பட்ட கட்டளையா யிருக்கிறது "(4 : 103).

5. "(உங்கள்) தொழுகைகளையும், மகா சிரேஷ்டமுள்ள தொழுகையையும் பேணு(த லுடனே நிறைவேற்று)ங்கள்; மேலும் (அத்தொழுகையில்) அல்லா(ஹ்)வுக்கு உண்மையிலே வழிபட்டவர்களாய் நில்லுங்கள்" (2 : 238).

6. "ஆதலால், தொழுகையாளிகளுக்குக் கேடே! அவர்கள் தங்களுடைய தொழுகையை மறந்திருக்கிறுர்கள்; அவர்கள் பிறருக்குக் காண்பிக்கின்றுர்கள்; அற்ப தருமத்தையும் தடுக்கிறுர்கள்" (107 : 4—7).

இவ்வத்யாயத்தில் தொழுகைக்குரிய வேளைகள் சார்பாயுள்ள 'ஹதீ':துகளும், வேறு அதன் சம்பந்தப்பட்டுள்ள வெளி விஷய 'ஹதீ':துகளும் சேர்த்துத் தொகுக்கப்பட் டிருக்கின்றன; உள்ளவாறு தொழுதுகொள்ள வேண்டியவிதம் அடுத்துவரும் அத்யாயத்தில் விவரிக்கப்படுகிறது.

தொழுகையை இஸ்லாமார்க்கம் ஒரு முக்கிய அடைவுள்ள அனுஷ்டானக் கிரியையா யேற்படுத்தி யிருக்கிறது. எனவே, ஒருவர் தமக்கிஷ்டமான நேரத்திலே, தமக்கிஷ்டமான விதத்திலே தொழுதுகொள்வ தென்பது கூடாது. தொழுகையை ஓரடைவுள்ள கிரியை முறையாகச் செய்துவைக்க வேண்டுமென்னும் கட்டளை :குர்ஆன்ஷரீ'பில் அடிக்கடி மடக்கி மடக்கிக் கூறப்பட் டிருக்கிறது ; எடுத்துக்காட்டாக இதன் தலைப்பில் பொறிக்கப்பட் டுள்ள முதன் மூன்று ஆயாத்களைக் கூர்ந்து நோக்க. உள்ளப் பரிசுத்தமடைவதே இத்தொழுகைக்குரிய பெரியதொரு நோக்கமா யிருந்துவருகிறது (தலை. ஆயாத் 1, 2; 'ஹதீ'. 1, 2); மனிதர் தமக்குரிய இகலோக வியவகாரங்களில் ஈடுபட்டிருக்குங்காலே, அவற்றின் இடையே அடிக்கடி அல்லா(ஹ்)வின் நினைப்பை அதிகம் ஞாபகப்படுத்திக் கொள்வதனாலே அத்தகைய உள்ளப்பரிசுத்தம் அடையப் பெறுகிறது. மன்பதைக்கு ஊழியம் புரியவேண்டு மென்னும் வேணவாவும் இத்தொழுகையைக்கொண்டே கைவரப் பெறுகின்றது; இத்தகைய மன்பதைக்கு உதவிபுரிய வேண்டு மென்னும் எண்ணம் உடனுற்பத்தியானா லல்லது, வெறுமனே தொழுதுவருவது வெறு வேடிக்கைக் கூத்தாகவே யிருந்து வருகிறது (தலை. ஆயத் 6). தொழுகைகளுக் குரிய வேளைகள் ஆண்டவன் கட்டளைப்படியே நிர்ணயிக்கப்பட் டிருக்கின்றன (தலை. ஆயத் 4). சூரியன் மையஞ்சரிந்ததிலிருந்து இரவின் இருள் வந்து மூடிக்கொள்ளுமட்டில் தொழுகையென்பது தொடர்ந்தே நடைபெற்று வருகின்றது (தலை. ஆயத் 3);— மையஞ்சரிந்த பின்தொழுகை, மாலைக்காலத் தொழுகை, சூரியாஸ்தமயப் பின் தொழுகை, முன்னிரவின் தொழுகை ('ஹதீ'. 3) ; அதன்பின்னே, வைகறைவரை ஓய்வு (தலை. ஆயத் 3); அதுதான் ஐந்தாவது தொழுகைக்குரிய அதிகாலை நேரமாகும் ('ஹதீ'. 3). சூரியோத

யத்தின் பொழுதும், சூரியாஸ்தமயத்தின் பொழுதும் வேண்டு மென்றே தொழுதுகொள்வது தடுக்கப்பட்டிருக்கிறது (‘ஹதீ’. 5). மையஞ்சரிந்த பின்தொழுகையும் மாலைக்காலத் தொழுகையும் ஒன்றுசேர்த்துத் தொழப்படலாம்; சூரியாஸ்தமயப் பின்தொழு கையும் முன்னிரவின் தொழுகையும் ஒன்றுசேர்த்துத் தொழப் படலாம் (‘ஹதீ’. 6). எக்காரணத்தைக் கொண்டும் வைகறைத் தொழுகையையும்—(‘பஜ்ர்) மாலைக்காலத் தொழுகையையும்—(அ’ஸ்ர்) விட்டுவிடுவது கூடாது (‘ஹதீ’. 7). தடுத்துக்கொள்ள முடியாத காரணத்தால் ஒருவேளைத் தொழுகை தொழமுடியாது போய்விடுங்கால் (‘ஹதீ’. 8) அல்லது ஒருவேளைத் தொழுகை தொழப்படாமல் மறக்கப்பட்டு விடுங்கால் (‘ஹதீ’. 9) அவ் விடப் பட்ட தொழுகை அடுத்துவரும் முதற்றருணத்திலே தொழப் படுதல் வேண்டும். இ’ஷாத் தொழுகைக்கு முன்னே தூங்கப் போவது, அல்லது அதற்குப் பின்னே அனாவசியப் பேச்சில் இறங்கிவிடுவது விரும்பத்தக்க செய்கை யன்று (‘ஹதீ’. 10). தொழுகையைவிட்டு ஙங்கவனத்தைக் கலைக்கக்கூடிய ஒவ்வொரு காரியமும் தவிர்க்கப்படுதல் வேண்டும் (‘ஹதீ’. 11—13). தொழு கையைப் பிடிக்க ஒருவரும் விரைந் தோடுவது கூடாது; என்னெனின், அவ்வாறு விரைந்தோடுவதால், தொழுதுகொண் டிருப்பவரின் மனஒருமை கலைக்கப்பட்டுப் போமன்றோ? தொழு கைக்கு வேண்டப்படுவது ஏகாக்ரசித்தந்தானே! (‘ஹதீ’. 14); ஒருவர் ஆகார மருந்திக்கொண் டிருக்கும்பொழுது தொழுகைக் காகத் துரிதப்படுவதும், அதற்கென்று அவ் வாகாரத்தை விட்டோடுவதும் கூடாத செய்கைகளே யாம் (‘ஹதீ’. 15). வாகனத்தின்மீ தூர்ந்து சவாரிசெய்யும் பொழுதும் தொழுது கொள்ளலாம் (‘ஹதீ’. 16); கப்பலிலும் ரெயில்வண்டியிலுங் கூடத் தொழலாம். தொழும்பொழுது உடுத்தவேண்டிய உடை குறித்தென்றாலோ, ஒருவன் தன்னாலியன்ற சாதாரண உடையை உடுத்துக்கொண்டு தொழலாம்; அல்லது அவனுக்கு வசதியான ஆடையை அணிந்துகொண்டு தொழலாம்; அரைச் சல்லடமும் அரைக்கைச் சட்டையும் அணிந்து தொழலாம் (‘ஹதீ’. 17). தொழுதுகொண் டிருப்பவரது முன்னால் குறுக்கரீய்ச் செல்வது

கூடாது ('ஹதீ'. 18). திறந்த வெளியில் தொழுதுகொள்ள நேருங்கால், ஸுத்ரா வொன்றை ஏற்படுத்திக்கொள்வது நலமாம்.

1. அபூ' ஹுரய்ரா (இவ்வாறு) அறைந்துள்ளார் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) (பின்வருமாறு) சொன்னதை அன்னவர் செவிமடுத்துள்ளார் :—

" எனக்குச் சொல்லும் : உங்களுள் ஒருவரது (வெளிவாயிற்) கதவையண்மி நீரோடை யொன்று ஓடிக்கொண் டிருந்து, அதிலவர் ஒவ்வொரு நாளும் ஐந்துமுறை ஸ்னானம் செய்துவரின், அஃது அன்னவரது அழுக்கினின்று எதையேனும் (அவரது சரீரத்தில்) விட்டுவைக்குமா ? நீரென்ன சொல்கிறீர் ?"

அஃது அன்னவரது அழுக்கினின்று எதையும் விட்டுவைக்காதென்று அவர்கள் பதில் கூறினார்கள். (அதுகேட்டு) அவர்கள் சொன்னார்கள் :—

" இதுதான் ஐந்து வேளைத் தொழுகைகளுக்குமுரிய உவமையா யிருக்கிறது ; இவற்றைக்கொண்டு அல்லா(ஹ்) (எல்லாக்) குற்றங்களையும் அழித்தொழித்து விடுகிறான்."[1]—(பு'க'ா. 9 : 6)

---

1. இந்த 'ஹதீ':து :குர்ஆன் ஷரீ'பின் கட்டளைக் கிணங்கவே வியாக்கியானம் செய்யப்பெறுதல் வேண்டும் ; அவ் வேதம், இவ் வத்யாயத் தலைப்பிலே பொறிக்கப்பட் டிருப்பதேபோல், இவ்வாறு கூறிக்கொண் டிருக்கிறது : "நிச்சயமாகத் தொழுகை யென்பது ஒருவனைத் துராசாரத்தை விட்டும், தீமையை விட்டும் விலக்கி வைக்கின்றது (தலை. ஆயத் 1). எனவே, குற்றங்களை அழித்தொழித்து விடுவதென்பது, அல்லா(ஹ்)வின் கட்டளைக்கு நேர்மாறாய்ச் செல்லத் தூண்டும் ஷைத்தான் சுபாவத்தை

2. அனஸ் கூறியிருக்கின்றார்: நபிகணாதர் (சல்அ’ம்) நவின்றருளினார்கள் :—

“உங்களுள் ஒருவர் தொழுது கொள்ளுங்கால், அன்னவர் தம்முடைய ரக்ஷகனுடனே அந்தரங்க (ஐக்கிய)த் தொடர்பை ஏற்படுத்திக் கொள்கின்றார்.”2—(பு’க’ா. 9 : 8)

3. இப்’னு அ’ப்’ப’ாஸ் கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னார்கள் :—

“ஜிப்’ரீல் (பரிசுத்த) ஆலயத்தில் எனக்காக இருமுறை இமாமாய் நின்று தொழவைத்தார்; ஆகவே, சூரியன் உச்சியினின்று சரிந்து, (ஒரு சுவரின் நிழல்) ஒரு தோல்வாரின் அளவாகவே*

---

அடக்கியாள்வதா யிருக்கின்றது. தினம் ஐந்து வேளையும் அல்லா(ஹ்)வின் திருமுன்பினிலே ஆ’ஜிராய் வருவதா யுணரும் மெய்யான மனிதனொருவன், ஒவ்வொருநாளும் ஐந்துமுறை சுத்த ஜலத்தில் குளிக்கும் ஒருவனது சருமத்தில் எத்தகைய புற அழுக்கும் படியமாட்டாதேபோல், எப்படிப்பட்ட ஆத்ம சம்பந்தமான அக அழுக்கும் படியப் பெறாதவனாகவே யிருந்துவருவான் என்பது கண்கூடு.

2. இதுதான் தொழுகையின் இரகசியம்: ஒரு மனிதன் தொழுது கொள்ளுங்கால், அவன் தன்னுடைய சிருஷ்டிகர்த்தாவுடன் தனித்திருப்பதாகவே உண்மையிலே உணர்ந்துகொள்ளக் கடவன்; ஆகையால், அவ்வடியான் தன்னுடைய ஆண்டான் முன்னிலையில் தனதுள்ளத்தி லிருப்பதை யெல்லாம் தலைகீழாய்க் கொட்டிக் கவிழ்த்துப் பணிவுடனே விண்ணப்பித்துக் கொள்ளக் கடவன்.

---

* பாதரக்ஷையின் மேற்புறமுள்ள மெல்லிய வார். ஒரு சுவரின் கீழ்ப் புறத்தில் அதன் நிழல் அந்த வாரகலம் சரிவதே போதுமென்க; அஃதாவது, உச்சியிலுள்ள சூரியன் ஒரு சிறிதே மேற்கில் சரிவதே போதுமாகும்.

யிருந்த பொழுது, அவர் என்னுடனே ளு'ஹ்ர்த் தொழுகையைத் தொழுது கொண்டார்; மேலும், ஒவ்வொரு வஸ்துவின் நிழலும் அதனதன் அளவே யிருந்த பொழுது, அவர் என்னுடனே அ'ஸ்ர்த் தொழுகையைத் தொழுது கொண்டார்; மேலும், நோன்பு நோற்கும் ஒருவர் அந்நோன்பைத் திறக்கு நேரத்திலே, அவர் என்னுடனே மஃக்ரிப்' தொழு கையைத் தொழுதுகொண்டார்; மேலும், (மேற்குத்) தொடுவானத்தில் செந்நிறம் மறைந்துவிட்ட பிறகு, அவர் என்னுடனே இ'ஷாத் தொழுகையைத் தொழுது கொண்டார்; மேலும், நோன்பு நோற்கும் ஒருவருக்கு அன்ன பானாதி(களை இனிமேல் உட்கொள்ளக் கூடாதெனத்) தடுக்கப்படு நேரத் திலே, அவர் என்னுடனே 'பஜ்ர்த் தொழுகையைத் தொழுது கொண்டார். அடுத்த நாள் வந்துற்ற பொழுது, (ஒரு வஸ்துவின்) நிழல் அதனளவே யிருந்த பொழுது, அவர் என்னுடனே ளு'ஹ்ர்த் தொழுகையைத் தொழுது கொண்டார்; மேலும், (ஒரு வஸ்துவின்) நிழல் அதைப்போ லிருமடங்கு நீளமுள்ளதா யிருந்தபொழுது, அவர் என்னுடனே அ'ஸ்ர்த் தொழுகையைத் தொழுது கொண்டார்; மேலும், நோன்புநோற்கும் ஒருவர் அந்நோன்பைத் திறக்கும் நேரத்திலே, அவர் என்னுடனே மஃக்ரிப்' தொழுகையைத் தொழுது கொண்டார்; மேலும், இரவின் மூன்றிலொரு பகுதி கழிந்துவிட்ட பொழுது, அவர் என்னுடனே இ'ஷாத் தொழு கையைத் தொழுது கொண்டார்; மேலும், பொழுது புலர்ந்து பிரகாசமாய பொழுது, அவர் என்னுடனே

'பஜ்ர்த் தொழுகையைத் தொழுது கொண்டார். அப்பால் அன்னவர் என்பக்கல் திரும்பி, இன்னம் கூறினர்: 'ஏ மு'ஹம்மத்'! இதுதான் உமக்கு முன்னே சென்ற நபிமார்களின் (தொழுகைக்குரிய) வேளையாயிருக்கிறது; இன்னம், அந்த வேளை இந்த இரண்டு (எல்லை) நேரங்களுக்கும் இடையிலிருக்கின்றது.'"[3]—(அபூ'த'ா., 'திர்மி—மிஷ். 4:1)

---

3. இது தொழுகைகளின் நேரங்களைக் குறித்துக் கூறும் ஒரு விரிந்த 'ஹதீ':தா யிருக்கிறது. வானவர் ஜிப்'ரீலே (அ'லை) வந்து இமாமாய் நின்று, நபி பெருமானைப் பின்தொடர்ந்து நிற்குமாறு செய்து தொழுவைத் திருப்பதால், தொழுகையின் விதமும், அவற்றினுக்குரிய ரக்ஆ'த்களும், நேரங்களும் அல்லா(ஹ்) வினாலேயே வ'ஹீயின் வாயிலாய் நபிகள் திலகத்திற்குக் கற்றுக் கொடுக்கப்பட்டன வென்பதும் இதனால்நன்கு விளக்கமாகின்றது. ஜிப்'ரீல்(அ'லை) ஒவ்வொரு நாளின் ஐந்து நேரத்துத் தொழுகைகளுக்கு முரிய காலங்களின் ஆரம்பமும் முடிவுமாகிய ஈரெல்லைகளையும் காண்பித்துக் கொடுத்திருக்கிறார்கள்; அந்த எல்லைகளின் கணக்காவன: ளு'ஹ்ருடைய நேரம், சூரியன் மையஞ்சரிந்ததிலிருந்து அ'ஸ்ருடைய நேரம் வரையிலாம்; அ'ஸ்ருடைய நேரம், உச்சி யுருமத்துக்கும் அஸ்தமயத்துக்கும் நடுவிலே சூரியன் வருவதுமுதல் அஸ்தமயத்துக்குச் செல்லுமுன் வரையிலாம்; ம:க்ரிபு'டைய நேரம், சூரியாஸ்தமயத்துக்குப் பின்முதல் மேற்கு வானத்தில் செந்நிறம் மறைகிறவரையிலாம்; இ'ஷாவின் நேரம், அந்தச் செந்நிறம் மறைந்ததுமுதல் (வேறு 'ஹதீ':துகள் விளக்கியிருப்பதேபோல்) நள்ளிரவு வரையிலாம்; 'பஜ்ருடைய நேரம், கிழக்கு வெளுத்ததுமுதல் சூரியோதயத்துக்கு முன்வரையிலாம். பகற்பொழுது மிகவுங் குறைவாயிருக்கு நாட்களில், அல்லது நாடுகளில் ளு'ஹ்ரையும் அ'ஸ்ரையும் சேர்த்துத் தொழலாம்; இராப்பொழுது மிகவுங் குறைவாயிருக்கு நாட்களில், அல்லது நாடுக்ளில் ம:க்ரிபை'யும் இ'ஷாவையும் சேர்த்துத் தொழலாம்

4. இப்'னு அ'ப்'ப'ாஸ் (இவ்வாறு) கூறியிருக்கின்றார்: நபிகள்நாயகம் (சல்அ'ம்) வைகறைத் தொழுகைக்குப் பின்னே சூரியோதய மாய்ப் பிரகாசிக்கு முன்னேயும், அ'ஸ்ர்(த் தொழுகை)க்குப் பின்னே அஃது அஸ்தமயமாகு மட்டிலும் (வேறெந்தத்) தொழுகையும் தொழக்கூடாதென்று தடுத்திருக்கின்றார்கள்.[4]—(பு'க'ா. 9 : 30)

5. இப்'னு உ'மர் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"உங்கள் தொழுகையில் சூரியோதயத்தை, அல்லது அதன் அஸ்தமயத்தை வேண்டுமென்றே நீங்கள் தேடாதீர்கள்."[5]—(பு'க'ா. 9 : 30)

---

('ஹதீ'. 6) 24 மணி நேரத்திற்கு மேற்பட்ட பகலேனும் இரவேனும் இருக்கக்கூடிய இடங்களில் வசிப்பவர்கள் தாங்கள் வேலைசெய்யு நேரங்களுக்கும் இளைப்பாறு நேரங்களுக்கும் தகுந்தாற் போலே தொழுகைகளின் வேளைகளை நிர்ணயித்துக் கொள்ளலாம். உதாரணமாக, 'பஜ்ருடைய தொழுகையைத் துயிலுணர்ந் தெழுந்தவுடனே தொழுதுகொள்ளலாம்; உறங்கப் போகுமுன்னே ம'க்ரிபை'யும் இ'ஷாவையும் தொழுதுகொள்ளலாம்; ளு'ஹ்றரையும் அ'ஸ்ரையும் வேலைபார்க்கும் நடுப் பகுதியிலே தொழுதுகொள்ளலாம்.

4. 'பஜ்ர்த் தொழுகை இராத் தொழுகைகளில் இறுதித் தொழுகையா யிருக்கிறது; அ'ஸ்ர்த் தொழுகை பகல் தொழுகைகளில் இறுதித் தொழுகையா யிருக்கிறது. 7-ஆவது 'ஹதீ':து கூறியிருப்பதே போல், இவ்விரண்டற்கும் ஒரு பிரத்தியேக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருப்பது காண்க.

5. இந்த 'ஹதீ':தால் தடுக்கப்பட்டிருப்பது யாதெனின், சூரியோதய காலத்திலும், அதன் அஸ்தமய காலத்திலும் வேண்டுமென்றே தொழுகைகளைத் துவக்குவதேயாம். ஆனால், ஒருவன்

6. இப்'னு அ'ப்'ப'ாஸ் (இவ்வாறு) கூறியுள்ளார்: நபிகள் நாயகம் (சல்அ'ம்) மதீனாவில் ஏழு (ரக்ஆ'த்து)ம் எட்டு (ரக்ஆ'த்து)ம், ளு'ஹ்ரும் அ'ஸ்ரும், ம:க்ரிபு'ம் இ'ஷாவும் (சேர்த்துச் சேர்த்துத்) தொழுதார்கள்." 6—(பு'க'ா. 9:12)

7. 'பல'ாலா கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) எனக்கு (ப் பின்வருமாறு) கற்பித்

---

தனது தொழுகையைத் துவக்கும்பொழுது சூரியன் உதிக்காமலிருந்து, அப்பால் உதயமாய்விடின், அவன் 'அதனிமித்தம் தன் தொழுகையை விட்டுவிடாது தொழுது முடிக்கலாம்; இவ்வாறே சூரியாஸ்தமயத்தின் போதும் செய்யலாம். சூரியவணக்கக்காரர் பூஜிக்கும் நேரத்திலே முஸ்லிம்களும் அவர்களைப்போலே வணங்குவது கூடாதென்பதே இதன் நோக்கமாம்.

6. இந்த 'ஹதீ':து, ளு'ஹ்ரை அ'ஸ்ருடன் சேர்த்து (4ம் 4மாக)த் தொழுவதையும், ம:க்ரிபை' இ'ஷாவுடன் சேர்த்து (3ம் 4மாக)த் தொழுவதையும் அனுமதித்திருக்கிறது. வேறொரு 'ஹதீ':தின் பிரகாரம் (மஸ். I, 223) நபிகள் திலகம்(சல்) "ஆபத்தேனும் மழையேனும் இல்லாத" பொழுதும் அவ்வாறு சேர்த்துத் தொழுதார்களென்று அறியக் கிடக்கிறது; "தங்கள் உம்மத் கஷ்டத்தில் சிக்காமல்" இருக்கும் பொருட்டு அப்பெருமானார் அப்படிச் சேர்த்துத் தொழுதார்கள். இதனால் விளக்கமாவது யாதெனின், ஆபத்தேனும் மழையேனும் புயலேனும் இருக்குங்கால், அத்தொழுகைகளைச் சேர்த்துத் தொழலாம் என்பதும், அப்படிப்பட்ட காரணமில்லாத பொழுதுங்கூடச் சேர்த்துத் தொழலாம் என்பதுமே யாம். இவ்வாறு சேர்க்கும்பொழுது, ளு'ஹ்ரையும் அ'ஸ்ரையும் அந்த இரண்டு வேளையில் எந்த வேளையிலும் சேர்த்துத் தொழலாம். இவ்விதியே ம:க்ரி'புக்கும் இ'ஷாவுக்கும் பொருந்தும். இவ்வாறு சேர்க்கும்பொழுது, இரண்டு தொழுகைகளுக்கும் இடையிலுள்ள ஸுன்னத் விடப்பட்டுவிடும்.

தார்கள்; இன்னம், அன்னவர் கற்பித்ததில் (இந்தக் கட்டளை) காணப்பட்டது:—

"இன்னம், ஐந்து நேரத்துத் தொழுகைகளையும் (அதிகம்) நீர் உள்ளத்தி லிருத்திக்கொள்ளக் கடவீர்," என்று அவர்கள் கூறினார்கள்; அப்பொழுது நான் சொன்னேன்: 'இந்த நேரங்கள் எப்படி யிருக்கின்றன வென்றால், அவற்றிலே யான் (வேறு) காரியங்களைக் கவனிக்க வேண்டியவனா யிருக்கிறேன்; ஆகையால், வேறு வித விஸ்தாரமானதைக் கொண்டு ஏவுங்கள்; ஆகவே, அதனை யான் செய்து முடித்துவிட்டால், அஃதெனக்குப் போதுமானதா யிருக்கவேண்டும்.' இதற்கவர்கள், "இரு அ'ஸ்ர்த் தொழுகைகளையும் (அதிகம்) நீர் சிந்தையி லிருத்திக்கொள்ளக் கடவீர்," என்று கூறினார்கள். இஃதெங்கள் (மொழி) மரபில் அறியப்படாததா யிருந்தது. ஆதலால், நான், 'இரு அ'ஸ்ர்த் தொழுகைகள் என்பன யாவை?' என்று கேட்டேன். (அப்பொழுது) அவர்கள் கூறினார்கள்: "சூரியோதயத்திற்கு முன்னுள்ள ஒரு தொழுகை; அதன் அஸ்தமயத்திற்கு முன்னுள்ள ஒரு தொழுகை."[7]—(அபூ'த'ா. 2:2)

---

7. இந்த 'ஹதீ':தைக் கொண்டு அந்த இரண்டு தொழுகைகள்மட்டுமே போது மென்று அனுமதி யளிக்கப்பட்டதாய் எண்ணிவிடாதீர்கள். ஆனால், அவ்விரண்டற்கு முரிய தனிப் பெரு முக்கியத்துவம் ஈண்டு வற்புறுத்தப்பட்டுள்ள தென்க. அல்லது அம்மனிதன் ஒவ்வொருநாளும் ஐந்துவேளைத் தொழுகைகளையும் இமாம்-ஜமாஅ'த்துடனே சேர்ந்து தொழ முடியாதென்று கூறியிருக்கலாம்; ஆதலால், அம்மனிதன் இவ்விரு தொழுகை

8. ஜாபி'ர் கூறியுள்ளார்: உ'ம ருப்'னுல் க'த்தாப்'அகழின் (யுத்த) தினத்தில்[8] சூரியன் அஸ்தமித்தபின்னுல் வந்தார்; மேலும், (இஸ்லாத்தை) நிராகரித்து நின்ற :குறைஷியரைத் திட்டத் துவக்கினர். 'ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! சூரியன் அஸ்தமிக்கும் வேளைவரை என்னுல் அ'ஸ்ர்த் தொழுகையைத் தொழுதுகொள்ள முடியுவேயில்லை," என்று கூறினர். (அதுகேட்டு) நபிகள்நாயகம் (சல்அ'ம்) சொன்னர்கள்: "நானும்(கூட இன்னம்) அதனைத் தொழவில்லை யென்பதற்கு அல்லா(ஹ்)வையே சாக்ஷிக்கழைக்கின்றேன்." பின்பு நாங்கள் பு'த்'ஹானை நோக்கி எழுந்து நடந்தோம்; மேலும், அவர்கள் தொழுகைக்காக வுஜூ' செய்துகொண்டார்கள்; நாங்களும் அதற்காக வுஜூ' செய்துகொண்டோம்; இன்னம், அன்னவர்கள் சூரியன் அஸ்தமித்த பின்பு அ'ஸ்ர்(த் தொழுகையைத்) தொழுது கொண்டார்கள்; மேலும், அதற்குப் பின்னே ம:'க்ரிப்' (தொழுகையைத்) தொழுது கொண்டார்கள்.[9]—(பு'க'ா. 9 : 36)

---

களின் முக்கியத்தையும் உள்ளத்தி லிருத்துமாறும், ஆகவே அவற்றினை இமாம்-ஜமாஅ'த்துடன் சேர்ந்து தொழுவதைத் தவற விடவேண்டா மென்றும் வற்புறுத்தப் பெற்றிருக்கலாம்.

8. அந்த அகழ் (க'ந்தக்') யுத்தம், "அ'ஹ்'ஜாப்'"—(கூட்டர வாளர்) போரென்றும் அழைக்கப்படுவ துண்டு; அது ஹி. 5-இல் மதீனுவில் நடைபெற லாயிற்று.

9. இதனுல், ஒரு தொழுகையின் நேரம் தடுக்கமுடியாத காரணத்தால் தவறிவிடுமாயின், அது கடந்த பின்னரும் அத் தொழுகையைத் தொழுது கொள்ளலா மென்பது புலப்படாநின்றது.

9. நபிகளுதரின் (சல்அ'ம்) ஆதாரத்தைக் கொண்டு அனஸ் (பின்வருமாறு) கூறியிருக்கின்றூர்; (அவர்கள்) சொன்ஞர்கள் :—

"ஒருவேளைத் தொழுகையை எவரொருவர் மறந்து விடுகிறூரோ, அவர் அதனை நினைத்துக் கொள்ளுங்கால், அத் தொழுகையைத் தொழுது கொள்ளக் கடவர் ; 'என்னை நினைத்துக் கொள்ளு தற்குத் தொழுகையை நிலைநிறுத்தக் கடவீர்,' என்பதைத் தவிர்த்து அதற்கு வேறு பிராயச்சித்த மில்லை."[10]—(பு'க'ா. 9 : 37)

10. அபூ' ப'ர்'ஜா (பின்வருமாறு) கூறியிருக் கின்றூர் :- அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) இ'ஷா(த் தொழுகை) தொழுவதற்கு முன்னே தூங்குவதையும், அதன் பின்னே சம்பாஷிப்ப தையும் (அருவருப்புடனே) வெறுத்து வந்தார் கள்."[11]—(பு'க'ா. 9 : 23)

---

10. பு'க'ாரீ இமாமால் ஒரு நீண்ட 'ஹதீ':து வரையப்பட் டுள்ளது ; அதன் பிரகாரம், ஒரு மனிதனுக்கு உறக்கம் வந்து, அவன் தொழவேண்டிய சரியான நேரத்தில் தொழாமல் தவற விட்டுவிடுவா ஞயின், அவன் உறங்கி விழிக்கும்பொழுது அத் தொழுகையைத் தொழுது முடித்தல் வேண்டும் (பு'க'ா. 9 : 35).

11. இ'ஷாத் தொழுகைக்கு முன்னே உறங்குவதை ஏன் நபிகள் நாயகம் (சல்) வெறுத்தார்க ளெனின், இப்படித் தூங் குவதால் அம்மனிதன் அடியுடனே அத் தொழுகையைத் தொழா மலே போய்விடுதல் கூடுமென்பதனுல் என்க ; அதற்குப் பின்னே வீண்பேச்சுப் பேசுவதை ஏன்வெறுத்தார்க ளெனின், அம்மனிதன் அல்லா(ஹ்)வின் ஞாபகத்துடனேயே உறங்கப் போக வேண்டு மென்பதனுல் என்க.

11. அனஸ் கூறினர்: ஆ'யிஷா பிராட்டியாரிடம் சிவப்பு, ஆட்டு ரோமத்தாலாய, உருவங்கள் நெய்யப்பட் டிருந்த திரையொன்று இருந்தது; அதைக்கொண்டு அன்னவர் தமதில்லிடத்தின் ஒரு பாகத்தைப் போர்த்து வைத்தனர்; (அது கண்டு) நபிகள் திலகம் (சல்அ'ம்) சொன்னர்கள்:—

"எம்மை விட்டு நீ உனது திரையை அகற்றி விடக்கடவாய்; என்னெனின், அதிலுள்ள உருவங்கள் என்னுடைய தொழுகைகளில் என் முன்னே வருகின்றன"[12]—(பு'க'ா. 8 : 15)

12. ஆ'யிஷா பிராட்டியார் கூறினர்: நான் அல்லா(ஹ்)வின் தூதர்பால் (சல்அ'ம்) தொழுகையில் அக்கம் பக்கத்தில் பார்வையைச் செலுத்துவது குறித்து வினவினேன். (இதற்கு) அவர்கள் சொன்னர்கள்:—

"அஃது, எதனை ஷைத்தான் ஏமாற்றத்தைக் கொண்டு பறிப்பதா யிருக்கின்றானே, அதனை அடியானது தொழுகையிலிருந்து பறிப்பதா யிருக்கின்றது."[13]—(பு'க'ா 10 : 93)

---

12. அடியான் தன் முழு மனத்தையும் அத் தொழுகையிலேயே ஒன்றித்து ஊன்றுதற்கு — ஒரே எண்ணத்துடன் அல்லா(ஹ்)வை வழிபடுதற்கு—அவனது கவனத்தைக் கலைக்கக் கூடிய வஸ்து ஒன்றும் அத் தொழுந்தலத்திலே இருப்பது கூடாது. மஸ்ஜிது'ள்ளே அலங்காரங்கள் செய்யப்படுவது கூடாதென்பதற்கு இஃதொரு காரணமாகும். தங்கள் மஸ்ஜிதி'லுள்ள மின்பர், மி'ஹ்ராப்' முதலியவற்றை இரதம்போலே ஜோடிப்பவர்கள் இந்த 'ஹதீ'ஸைத ஊன்றிப் பார்ப்பார்களாக.

13. தொழுகையி லிருக்குங்கால் அக்கம்பக்கத்தில் பார்வையைச் செலுத்துவது, ஐயமில்லாமலே அத்தொழுகையை விட்டு

13. அ'ப்'து'ல்லா ஹிப்'னு மஸ்ஊ'தி'ன் மனைவி 'ஜய்னப்' கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத் தூதர் (சல்அ'ம்) எங்களுக்குச் சொன்னார்கள்:—

"உங்களுள்ளே ஒருவர் மஸ்ஜிது'க்குச் செல்ல நேருங்கால், அன்னவர் வாசனைத் திரவியத்தை —(சுகந்தத்தை) அணியா திருக்கட்டும்."[14] —(முஸ் —லிம். 4 : 23)

14. அபூ' :க(த்)தாத'ா கூறினார்: நாங்கள் எங்கள் தொழுகையை நபிகள் நாயகத்துடனே (சல்அ'ம்) தொழுதுகொண் டிருந்தபொழுது, அன் னவர்கள் திடுமென்று ஜனங்கள் (ஓடிவரும்) இரைச்சலைக் கேட்டார்கள். அவர்கள் தொழுது முடிந்த பொழுது, "(நீங்கள் அவ்வாறு ஓடிவர) உங்களுக் கென்ன (அவசரம்) நேர்ந்துவிட்டது?" என்று வினவினார்கள். 'நாங்கள் தொழுகைக்காக

---

நமது கவனத்தைக் கலைப்பதா யிருக்கிறது; எனவேதான், இது செய்வது கூடாத காரியமா யிருக்கிறது. இவ்வாறு பார்ப்பது ஷைத்தான் பறிக்கும் ஒரு விஷமமா யிருக்கிறதென்று கூறப்பட் டுள்ளது.

14. ஸ்திரீகள்—ஏன் புருஷர்களுங்கூட—அதிக வாசனை யணிந்து தொழச்செல்வது கூடாத காரியமேயாம்; இவ்வாறு செய்வது ஏனைத் தொழுகையாளிகளின் கவனத்தை (அத் தொழு கையில் ஊன்றியுள்ள மன ஒருமையை)க் குலைக்கக் கூடியதா யிருக்கிறது. பெண்மணிகள் சுகந்த மணிந்து ஆண்களிருக்கு மிடம் சென்றால், அங்கே ஷைத்தான்வந்து இடையிலே நுழைவது திண்ணமே யாம். ஆனால், வெள்ளியன்று ஜுமுஆ'த் தொழு கைக்கு வாசனை யணிந்துசெல்வது அனுமதிக்கப்பட் டுள்ளது, அன்று அங்கே பல்வகைப்பட்ட மக்கள் பலபேர் பெருங் கூட்டம் கூடுவதனால் என்க.

விரைந்தோடி வந்தோம்,’ என்று அவர்கள் விடையளித்தார்கள். (அப்பொழுது) அவர்கள் சொன்னார்கள் :—

“அவ்வாறு செய்யாதீர்கள்; நீங்கள் தொழுகைக்கு வருங்கால், பூரண அமைதி யுள்ளவர்களாயிருத்தல் வேண்டும்; அப்பால் நீங்கள் அத்தொழுகையின் எந்தப் பகுதியை வந்து பிடிக்கிறீர்களோ, அதனை (மட்டும் இமாமுடனே சேர்ந்து) தொழுங்கள்; (அப்பாலே) உங்களை விட்டுத் தவறிப்போன பகுதியை நிறைவேற்றி வைக்கக் கடவீர்கள்.”[15] —(பு’க’ா.10 : 20)

15. இப்’னு உ’மர் கூறினர் : நபிபெருமான் (சல்அ’ம்) சொன்னார்கள் :—

“உங்களுள் ஒருவர் ஆகாரம் அருந்திக்கொண்டிருக்குங்கால், தொழுகைக்குரிய இ:காமத் சொல்லப்பட்டுவிடினும், அவர் தமக்கு வேண்டிய தேவையைப் பூர்த்திசெய்து கொள்ளுமட்டும் துரிதப்படாதிருக்கக்கடவர். ”—(பு’க’ா. 10 : 42)

---

15. தொழுகையில் மனத்தின் ஏகாக்ர சித்தத்தை—(மன ஒருமையை)க் குலைக்கக்கூடிய எல்லாக் காரியங்களும் தவிர்க்கப்படல் வேண்டும்; என்னெனின், ஆண்டவனது வணக்கத்தின் போது மனம் முழுஅமைதியுடனே ஒருவழிப் பட்டு நிற்கவேண்டுவது அத்தியாவசியமா யிருக்க, அதற்கு மாறாய் இரைச்சலும் பூசலும் எவ்வாறு பள்ளியுள் அனுமதிக்கப் படலாம்? இக்காரணத்தினாலேயே பள்ளிவாசல்முன் மேளவாத்தியம் முதலியன கோஷிக்கப் படுவதை நம் முஸ்லிம்கள் வெறுத்து வருகிறார்கள். எனவே, பள்ளியுள் தொழும்பொழுது வேறு சிலர் எதையேனும் இரைந்து ஓதியோ, பேசியோ, வெளி மண்டபத்தில் கூச்சல் போட்டோ கலவரப்படுத்துவதும் கூடாதகாரியமா யிருக்கிறது.

16. ஜாபி'ர் கூறினர்: நபிகள் திலகம் (சல்அ'ம்) தங்கள் சவாரி யொட்டகத்தின் மீது அமர்ந்தபடியே, அஃது அவர்களுடனே எந்தத் திசையை நோக்கித் திரும்பிய போதினும், தங்கள் தொழுகைகளைத் தொழுது கொள்வார்கள்; ஆனல், அவர்கள் 'பர்ல்'—(கடமையான) தொழுகையைத் தொழ நாடுங்கால், கீழே யிறங்கிக் :கிப்'லாவை நோக்கி முகந்திரும்பிக் கொள்வார்கள்.[16]—(பு'க'ா. 8: 31)

17. அபூ' ஹுரய்ரா கூறினர்: ஒரு மனிதன் நபிகணயகர் (சல்அ'ம்) முன்பினில் எழுந்து நின்று, ஒற்றையாடை யுடனே தொழுவது குறித்து அவர்களை வினவினன். (இதற்கு) "உங்களுள் ஒவ்வொருவருக்கும் இரண்டாடைகள் கிடைக்கக் கூடுமோ?" என்று கூறினர்கள். அப்பாலொரு மனிதன் உ'மரவர்களை வினவினன்; (இதற்கு) அவர்கள் சொன்னர்கள்: 'அல்லா(ஹ்) அதிகங் கொடுக்கும் பொழுது, அதுகாலை நீங்கள் அதிகம் உபயோகிக்கலாம்;

---

16. இஃது ஒட்டகத்தின்மீது, அல்லது குதிரையின்மீது ஆரோகணித்துச் செல்லும்பொழுது தொழுதுகொள்ள உதவும். படவில் (அல்லது கப்பலில்) அல்லது புகைவண்டியில் பிரயாணம் செல்பவர் தொழத் தொடங்குங்கால், அநேகமாய்க் :கிப்'லாவுக்கு நேரே தமது வதனத்தை வைத்துத் தொழுகையைத் துவக்கிக் கொள்ள வேண்டும்; அப்பாலவர் அத்தொழுகையை முடிக்குமுன் அந்த ரெயில்வண்டி, அல்லது கப்பல் வேறு திசையில் திரும்புமாயின், அவரும் அதனுடன் திரும்பிக் கொண்டே, சரியான :கிப்'லாவைத் தேடிக்கொண்டே யிருக்கவேண்டுமென்பது அவசியமில்லை.

ஒரு மனிதன் ஆடைகளை (ஒழுங்காக) அணிந்திருந்தான்; ஒரு மனிதன் இ'ஜாரும்—(அரை யாடையும்) மேலாடையும் அணிந்து தொழுது கொண்டான்; (ஒருவன்) இ'ஜாரும் — (இடுப்பாடையும்) :கமீசும் (அணிந்து தொழுதுகொண்டான்); (ஒருவன்) இ'ஜாரும்— (இடுப்பாடையும்) குடுத்தாவும் (அணிந்து தொழுதுகொண்டான்); (ஒருவன்) காற்சட்டையும் மேலாடையும் (அணிந்து தொழுது கொண்டான்); (ஒருவன்) காற் சட்டையும் :கமீசும் (அணிந்து தொழுது கொண்டான்); (ஒருவன்) காற்சட்டையும் குடுத்தாவும் (அணிந்து தொழுது கொண்டான்); (ஒருவன்) அரைச்சல்லடமும் குடுத்தாவும் (அணிந்து தொழுது கொண்டான்); (ஒருவன்) அரைச்சல்லடமும் :கமீசும் (அணிந்து தொழுது கொண்டான்);' இன்னம், (ஒருவன்) அரைச் சல்லடமும் மேலாடையும் (அணிந்து தொழுது கொண்டான்) என்றும் அவர் கூறியதாய் யான் எண்ணுகிறேன்.[17] —(பு'க'ா.8 : 9)

18. அபூ' ஜு'ஹைம் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

---

17. போதுமான ஆடையுள்ள மனிதன் போதிய முறையிலே அணிந்து கொள்ளலாம்; கொப்பூழ் (உந்தி) முதல் முழந்தாள் மறைய உடுத்துவதே போதுமானதா யிருப்பினும், ஒரு சமுதாயத்திலுள்ள மனிதன் அந்தச் சமுதாயத்தில் எது நாகரிகமென்று, அல்லது மரியாதையென்று மதிக்கப்படுகிறதோ, அதேபோன்ற உடையுடுத்துத் தொழுவதே உசிதமாயிருக்கிறது.

"தொழுதுகொண் டிருக்கும் ஒருவர் முன்னே (எதிராக, அல்லது குறுக்காக) வருகிற மனிதன் தன்மீது என்ன (பாபச்) சுமை ஏற்படுகிற தென் பதை அறிந்திருப்பின், அவன் அன்னவருக்கு முன்னே வருவதைப் பார்க்கினும் நாற்பது (நாளை)க் குக் காத்துக்கொண் டிருப்பது அவனுக்கு மெத்த உத்தமமா யிருக்கும்.[18] —(பு'க'ா. 8 : 101)



18. தொழுபவர் முன்னே எதிராய், அல்லது குறுக்காய்ச் செல்வது தடுக்கப்பட் டுள்ளது; என்னெனின், அப்படிச் செய்தால், தொழுது கொள்பவரின் கவனம் கலைக்கப்பட்டு, ஏகாக்ர சித்தமும் குலைக்கப்பட்டுப் போய்விடுகிறது. நபிகள் நாயகம் திறந்தவெளியில் தொழ நேருங்கால், தங்களுக்கு முன்னே ஸுத்ரா ஒன்றை—ஈட்டி, வாள், தண்டம்போன்ற தொன்றை—ஏற்படுத்திக் கொள்வார்கள்.

# அத்யாயம்—10

## தொழுகையின் விதம்

1. "ஏ ஈமான் கொண்டவர்காள்! நீங்கள் மது மயக் குண்டவர்களா யிருக்குங்கால், நீங்கள் கூறுவதை (இன்ன தென்று) அறிந்துகொள்ளும் வரை, தொழுகையை யணுக வேண்டாம்" (:குர். 4 : 43).

2. "இன்னம், நீங்கள் பூமியில் பிரயாணஞ் செய்யும் பொழுது, தொழுகையில் நீங்கள் சுருக்கிக் கொள்வீர்களேல், உங்கள்மீது குற்ற(மொன்று) மில்லை" (4 : 101).

3. "இன்னம், நீர் அன்னவர்களுக் குள்ளே யிருந்து, அவர்களுக்காக நீவிர் தொழுகையையும் (முன்னின்று) நிலை நிறுத்துங்கால், அவர்களுள்ளிருந்து ஒரு பகுதியினர் அதுகாலை உம்முடனே (தொடர்ந்து) நிற்கக்கடவர் ;...ஆகவே, அவர்கள் அஷ்டாங்கம் (ஸுஜூத்') செய்து முடித்துவிடுங்கால், அவர் கள் உங்களுக்குப் பின்னே (சென்று) நிற்கட்டும் ; இன்னம், தொழாமலிருந்த (எஞ்சிய) தொகுதியினர் முன்வந்து, உம் முடனே தொழக்கடவர்" (4 : 102).

4. "இன்னம், தங்கள் ரக்ஷகனை முன்னோக்கி அஷ்டாங் கம் (ஸுஜூத்') செய்துகொண்டும், நிலை நின்றுகொண்டும் இரவைக் கழிப்பவர்கள்" (25 : 64).

5. "அவர்கள் அல்லா(ஹ்)வி னிடத்திருந்து அனுக்கிர ஹத்தையும், (அவனது) பிரீதியையும் நாடியவர்களாய், குனிந்துகொண்டும் அஷ்டாங்கம் செய்துகொண்டும் இருப் பதை நீர் காண்பீர்" (48 : 29).

6. "ஏ ஈமான் கொண்டவர்காள்! (தொழுகைக்காகக்

குனியக் கடவீர்கள்; ஸுஜூது'ம் செய்யக் கடவீர்கள்; மேலும், உங்கள் ரக்ஷகனை வணங்கக் கடவீர்கள்" (22 : 77).

7. "நின்றுகொண்டும் இருந்துகொண்டும் அல்லா(ஹ்)வைத் தியானிப்பவர்கள்" (3 : 190).

ஒவ்வொரு தொழுகையிலும் இரண்டு, அல்லது மூன்று, அல்லது நான்கு ரக்ஆ'த்கள் * உண்டு ('ஹதீ'. 1). ஒரு ரக்அ'த், :கியாம் (நிலைநிற்றல்) ரு(க்)கூஃ' (தலையும் உடலும் குனிதல்) ஸஜ்தா' (சிரந் தரையிற்படக் குப்புறச் சாய்த்தல்) ஜல்ஸா அல்லது கஃ'த'ா (இருப்பிலமர்தல்) என்பவற்றையுடையதா யிருக்கிறது; இச் செய்கைகளை இக்கூறிய முறைப்படியே செய்வது அவசியமாம். தொழுகையாளி அனுஷ்டிக்க வேண்டிய கிரியைகள் ஒரு ரக்அ'த்தில் மீக்கூறிய செயல்களாயே யிருக்கின்றன; இவைகளெல்லாமே தொழக்கூடிய ஒரு மனிதன் மேற்கொள்ளக் கூடிய முக்கிய வணக்க நிலைகளா யிருந்துவருகின்றன. இவையனைத்தும் :குர்ஆன் ஷரீ'பில் பல்வேறிடங்களில் கூறப்பட் டுள்ளவைகளே; ஆனால், இங்குள்ள முறையிலே அவை அங்குக் குறிக்கப்பட்டில்லை (தலை. ஆயாத் 3—7). ஒரு குறிப்பிட்ட தொழுகைக்குரிய ரக்ஆ'த் இத்தனையென்று கூறப்பட்டபின், "இன்னம் அதற்கப்பால் இரண்டு ரக்ஆ'த்" என்னும் விஷயம் சேர்க்கப்பட்டிருப்பதை நோட்ட மிடுவீர்களாக ('ஹதீ'. 1). இத் தொழுகை கடமைக்கு மேற்பட்ட அதீதமான தொழுகையா யிருக்கிறது; இது ஸுன்னத் (நபிபெருமான் பழக்கம்) என்று சொல்லப்படுகிறது; இதனை அவரவரும் தனித்தனியே நின்று தொழவேண்டும். இஃது, இமாம்-ஜமாஅ'த்துடன் தொழப்பட வேண்டிய மக்'தூப'ா (கடமையாயுள்ள) தொழுகையி னின்று வேறு பிரிக்கப்பட்டதா யிருக்கிறது (பு'க'ா. சுருக். அத். 7 : 4); அதனைப் பொதுப்படையாய் 'பர்ல்' என்று அழைப்பது வழக்கம். ஒவ்வொருவேளைத் தொழுகையிலும் இமாம்-ஜமாஅ'த்துடன் சேர்ந்து தொழவேண்டிய 'பர்ல்' தொழுகையின் ரக்ஆ'த் இத்தனைதான் என்னும் விஷயத்தில் இம்

* ரக்ஆ'த், பன்மை; ஒருமை ரக்அ'த். இதன் தாதுப்பொருள், "ஒரு குனியுந் தொழில்" என்பதா யிருக்கிறது.

முஸ்லிம் உலக முழுதிலும் சிறிதும் வேற்றுமையில்லாது ஒருமனப் பட்ட அபிப்பிராயமே இருந்து வருகிறது. 'பர்லி'ல் நான்கு ரக்ஆ'த்தையுடைய தொழுகைகளில், பிரயாணத்தி லிருக்கும் பொழுது, அவை பாதியாக—இரண்டாக—க்குறைக்கப்பட்டுவிட லாம்; ஸுன்னத்கள் அதுகாலை அடியோடு விடப்பட்டுப் போகலாம் (தலை. ஆயத் 2; 'ஹதீ'. 32). ஒரு ரக்அ'த்துக் குரிய பல்வேறு இயக்கங்களின் முழு வருணனையும்,—நபிகள் நாயகத் துக்கு ஆண்டவனுல் ஜிப்'ரீல் மூலமா யறிவிக்கப்பட்டது (பு'க'ா. சுருக். அத். 9 : 3). அவை ஒன்றுக்குப் பின்னே மற்றொன்றாய்த் தொடர்ந்து வரவேண்டிய வரிசைக்கிரமமும் 'ஹதீ'. 3-இல் விவரிக் கப்படுகின்றன. அந்த இயக்கங்களுக்கு வேண்டிய வேறு பல விவரங்களும் 'ஹதீ'. 4—7-இல் காணப்படாநின்றன.

தொழுகையில் ஒரு நிலையிலிருந்து வேறொரு நிலைக்கு மாறும் பொழுதும், ஒரு நிலையிலே இருக்கும்பொழுதும் ஏதேனுமொரு 'திக்ரை* ஓதவேண்டுவதா யிருக்கிறது; தொழுதுகொள்கிறவர் அதன் தாத்பரியத்தை அறிந்துகொள்வது அவசியமாம் (தலை. ஆயத் 1; 'ஹதீ'. 8). தொழுகையில் மிகவும் அதிகமாய் அடிக்கடி கூறப்படும் 'திக்ர் 'தக்பீர், அஃதாவது, "அல்லாஹு அக்ப'ர்" [அல்லா(ஹ்)வே மகா பெரியவன்] என்று கூறுவதா யிருக்கிறது. ஒருவன் தொழத் தொடங்குங்கால், "அல்லாஹு அக்ப'ர்" என் பதைக் கொண்டே ஆரம்பிக்கிறான்; அப்பால், ரு(க்)கூஇ'லிருந்து எழும்பொழுது மட்டுமின்றி, மற்றெல்லா இயக்க மாறுதலின் போதும், அஃதாவது, ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்குச் செல்லும் பொழுதெல்லாம் அந்தத் தக்பீ'ரையே அவன் சொல்லு வான் ('ஹதீ'. 9). ரு(க்)கூஇ' லிருந்து எழும்பிய பின்னால் கூற வேண்டிய அதிகப்படியான 'திக்ரொன்று 'ஹதீ'. 19-இல் சொல்லப் பட்டுள்ளது. "அல்லாஹு அக்ப'ர்" என்று சொல்லித் தொழு

* 'திக்ர் என்பது அசலில், "ஞாபகப்படுத்தல்" என்று பொருள் கொள் கிறது; தொழுகையில் "'திக்ர்" என்பது அல்லா(ஹ்)வின் புகழையும் பெருமையையுங் குறித்துக் கூறப்படும் எல்லா மந்திர வாக்கியங்களையும் குறித்துக் காட்டுகின்றது. :குர்ஆன் ஷரீ'ஃபிலிருந்து ஓதுவதும், ஆண்டவன் பால் விண்ணப்பம் செய்து கொள்வதுங்கூட இதில் சேரும்.

கையைத் தொடங்கிய பிறகு 'ஹதீ'. 10, அல்லது 11-இல் கூறப் பட்டுள்ள 'திக்ருகளிலிருந்து ஒன்றை அவரவரும் தமக்குத்தாமே வாய்க்குள்ளே ஓதிக்கொள்வார்; இவ் விஷயத்தில் அளிக்கப் பட்டுள்ள எதேச்சையை உற்று நோக்குங்கால், இங்கிலையில் வேறெந்தப் பிரார்த்தனையுங்கூடச் செய்துகொள்ளலா மென்று ஊகிக்கக் கிடக்கின்றது. எவ்வாருயினும், ஸூர(த்)துல் 'பா(த்)தி'ஹாவை ஓதுவது முதற்கொண்டே தொழுகை உண்மை யிலே துவக்கமாகின்றது ('ஹதீ'. 12); இந்த 'பா(த்)தி'ஹா ஓதுவது எத்துணை அத்தியாவசிய மெனின், இஃதின்றேல், எந்தத் தொழு கையும் அங்கீகரிக்கப்பட மாட்டாது ('ஹதீ'. 13). ஸூர(த்)துல் 'பா(த்)தி'ஹாவை ஓதி முடித்தவுடன் ஆமீன் என்று கூறவேண்டும்; "'பா(த்)தி'ஹா" இரைந்து ஓதப்படுங்கால், "ஆமீன்" என்பதும் இரைந்தே கூறப்படல் வேண்டும் ('ஹதீ'. 14). இரண்டு ரக்'ஆத்துக்கு மேற்பட்டுள்ள தொழுகைகளில் முதலிரண்டு ரக்'ஆ'த்திலும் 'பா(த்)தி'ஹாவுக்குப் பின்பு :குர்ஆன் ஷரீ'பிலிருந்து ஏதேனுமொரு பகுதியை ஓதவேண்டும் ('ஹதீ'. 15, 16). ரு(க்)கூஇ'லும் ஸுஜூதி'லும் ஓதவேண்டிய 'திக்ருகள் பல உள ('ஹதீ'. 17, 18); குறிப்பாக ஸஜ்த'ாவில், 'திக்ருக்குப் பின்னே அவரவருக்குத் தெரிந்த எந்த மொழியிலும் வேறெந்தப் பிரார்த் தனையையும் சேர்த்துக் கொள்ளலாம்; தொழுகிற மனிதன் ஸஜ்த'ாவிலே தன் சிரந் தரையிற்படக் குப்புற்றுத் தனது சிருஷ்டி கர்த்தாவை மிகமிக நெருங்கிக் கிடப்பதால், அன்னவன் தனக்கு வேண்டிய பிரியமுள்ள பிரார்த்தனைகள் (விண்ணப்பம்) அனைத் தையும் அங்கிலையி லிருந்தபடியே புரிந்துகொள்ளக் கட்டளையிடப் பெறுகிறுன் ('ஹதீ'. 21). உண்மையிலே தொழுகை யென்பது முழுவதுமே ஆண்டவனை நோக்கிச் செய்யப்படும் பிரார்த்தனையா யிருந்துவருகிறது; எனவே, எங்கிலையி லிருந்தும் எந்தப் பிரார்த் தனையையும்—விண்ணப்பத்தையும்—எவரும் புரியலாம்; ஆதலி ஞல், நபிகள் திலகமவர்கள் (சல்) தொழுகையில் :குர்ஆன் ஆயாத் ஓதும்பொழுதுங்கூடப் பிரார்த்தனை புரிவார்கள் ('ஹதீ'. 18). ரு(க்)கூஇ'லிருந்து எழும்பொழுது நபிபெருமான் பரிந்துமன்ருடும் பிரார்த்தனைகளும் புரிவார்கள் ('ஹதீ'. 20); இருஸஜ்த'ாக்களுக்

இடையிலும் ஒரு பிரார்த்தனை ஓதப்படுவ துண்டு ('ஹதீ'. 22). குந்தியிருக்கு நிலையிலும் பிரார்த்தனைகள் புரியப்படுவ துண்டு ('ஹதீ'. 23—26). ஆனால், சந்துவிட்ட போதெல்லாம் வந்து விட்டேனென்று கூறும் ஒரு விண்ணப்பதாரனைப் போலே, தொழுகையை முடித்துக்கொண்ட பின்னரும் அத்தொழுகையாளி ஏதேனும் 'திக்ரை ஓதுகிறார் ('ஹதீ'. 28, 29). இறுதியில் 'தஸ்லீம் கூறுவதுடன் தொழுகை முடிவுறுகின்றது ('ஹதீ'. 27).

இவ் வத்யாயத்தின் இறுதியிலே ஒருசில சிறு விஷயங்கள் கூறப்பட்டிருக்கின்றன: அவற்றில் முதலாவது, மறதியால் ஏற்படும் ஒரு தவற்றுக்காக எவ்வாறு அதற்குரிய செபத்தைச் செய்யவேண்டுமென்னும் விஷயமா யிருக்கிறது ('ஹதீ'. 30, 31); இரண்டாவது, பிரயாணத்தின்பொழுது தொழவேண்டிய நியதியையும், அப்பிரயாணத்தின் நீளத்தையும் குறித்துக் காட்டுவதா யிருக்கிறது ('ஹதீ'. 32, 33).

1. இப்'னு உ'மர் கூறினார்: வீட்டிலே தங்கி யிருந்த பொழுதும் வெளியில் பிரயாணம் சென்ற பொழுதும் யான் அல்லா(ஹ்)வின் திருத்தூதர்(சல்அ'ம்) அவர்களுடனே தொழுதிருக்கிறேன்; ஆதலால், அவர்கள் இல்லத்திலிருந்த பொழுது, நான்கு ரக்ஆ'த்தும், அதற்கப்பால் இரண்டு ரக்ஆ'த்துமாக ளு'ஹ்ர் தொழுதுகொண்டார்கள்; இன்னம், நான்கு ரக்ஆ'த் அ'ஸ்ர் தொழுது கொண்டார்கள்; அதற்கப்பால் ஒன்று மில்லை; இன்னம், மூன்று ரக்ஆ'த்தும், அதற்கப்பால் இரண்டு ரக்ஆ'த்துமாக ம'க்ரிப்' தொழுது கொண்டார்கள்; இன்னம், நான்கு ரக்ஆ'த் இ'ஷா தொழுது கொண்டார்கள்; மேலும், பிரயாணம் சென்றபொழுது, அவர்கள் இரண்டு ரக்ஆ'த்தும் அதற்கப்பால் இரண்டு ரக்ஆ'த்துமாக ளு'ஹ்ர் தொழுது கொண்டார்கள்;

மேலும், இரண்டு ரக்ஆ'த் அஸ்ர்; அதற்கப்பால் ஒன்றுமில்லை; மேலும், மூன்று ரக்ஆ'த் ம:கரிப்'; அதற்கப்பால் இரண்டு ரக்'ஆத்; மேலும், இரண்டு ரக்ஆ'த் இ'ஷா; அதற்கப்பால் இரண்டு ரக்ஆ'த்.[1] —(மஸ். II, 90)

---

1. ரக்அ'த் [இதன் தாது ர(க்)கஅ'—'அவன் வளைந்தான், அல்லது குனிந்தான்' என்பதாயிருக்கிறது] என்பது, ஒருமுறை நின்று, குனிந்து, எழுந்து, இருமுறை சிரவணக்கம் புரிந்து எழுவ்தைக் குறிக்கின்றமையால், இஸ்லாத்தின் தொழுகையில் 'ஓரம்சம்' என்று இது கொள்ளப்படலாம்; இதில், ஒருவன்—(ஒழுங்காய் நிற்கக்கூடிய மானிடன்) வணங்குவதில் எத்தனை வித நிலைமைகள் இருக்கமுடியுமோ, அத்தனை விதமான—நான்கு—நிலைமைகளும் அடங்கியிருக்கின்றன: அவை நிற்றல், குனிதல், சிரந்தரையிற் சாய்த்தல், இருத்தல் என்பனவாம். இதன் முழு விவரமும் 'ஹதீ'. 4-இல் காணப்படுகின்றது. தொழுதுகொள்ளும் மனிதன் முதலில் நேரான நிலையில் நிற்கிறுன்; பிறகு குனிகிறுன்; அதன் பின்பு நிமிர்ந்து நிற்கிறுன்; அப்பால் அஷ்டாங்கம் தரையிற்படியக் குப்புற்றுச் சிரவணக்கம் புரிகிறுன்; அதன் பிறகு தலை நிமிர்ந்து குந்துகிறுன்; அப்பாலும் முன்போலக் குப்புற்றுச் சிரவணக்கம் புரிகிறுன்; பின்னர் எழுந்து நிற்கிறுன். இது தான் ஒரு ரக்அ'த் என்னப்படுவது இரண்டிரண்டு ரக்'ஆத்துக்குப் பின்னேயும் இருப்பில் அமர்வது சிறிது நெடிதாயிருக்கும். தொழுகையில் நிலைநிற்றல் :கியாம் என்றும், குனிதல் ரு(க்)கூஃ' என்றும், சிரவணக்கம் புரிதல் ஸஜ்த'ா என்றும், இருப்பிருத்தல் இரண்டு ஸஜ்த'ாக்களுக்கிடையி லிருப்பதேபோல் சுருக்கமாயிருப்பின் ஜல்ஸாஎன்றும், இரண்டு ரக்ஆ'த்துக்குப் பின்னே, அல்லது தொழுகை முடிவில் அமருவதேபோல் தஷஹ்ஹு'த்' ஓதுவதற்காக நீளமாய்க் குந்துவது :கஃத'ா என்றும் கூறப்படுகின்றன. இந்த 'ஹதீ':து, 'பஜ்ரைத் தவிர்த்து ஏனை நான்கு நேரத்துத் தொழுகைகளுக்கு முரிய ரக்ஆ'த்களின் முழு விவரத்தையும் கூறிக்கொண் டிருக்கிறது; 'பஜ்ருடைய 'பர்ல்' இரண்டு ரக்ஆ'த்தாகும். ஆனல், பிரயாணத்தின்

2. ஆ'யிஷா பிராட்டியார் கூறியுள்ளார்கள்: நபிகள் திலகம் (சல்அ'ம்) ளு'ஹ்ருக்கு முன்னே நான்கு ரக்ஆ'த்தும், 'பஜ்ருக்கு முன்னே இரண்டு ரக்ஆ'த்தும் தொழுது கொள்வதை எப்பொழுதுமே விட்டது கிடையாது.[2]—(பு'க'ா. 19 : 34)

3. அபூ' ஹுரய்ரா (பின் வருமாறு) கூறியுள்ளார்: ஒரு மனிதன் வந்து மஸ்ஜிது'ள் நுழைந்தான்; அல்லா(ஹ்)வின் திருத்தூதரோ (சல்அ'ம்) அம்மஸ்ஜிதி'ன் ஒரு மூலையில் அமர்ந்திருந்தார்கள்;.... 'ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! எனக்கு(த் தொழு)க் கற்றுக் கொடுங்கள்,' என்று அம்மனிதன் கூறினன்; (அப்பொழுது) அவர்கள் சொன்னார்கள்:—

"நீ தொழுகைக்காக எழுங்கால், அப்பொழுது சரியான முறையிலே வுழூ' செய்துகொள்; பிறகு :கிப்'லாவை நோக்கி உன் முகத்தைத் திருப்பிக் கொள்; பிறகு அல்லாஹு அக்ப'ர் என்று சொல்; பிறகு :குர்ஆன் ஷரீ'பிலிருந்து உன்னுற்கூடியதை

---

போழ்து ஸுன்னத் அல்லது ந'ப்ல் தொழுதுகொள்ளப்பட்டன வென்று இங்கே கூறப்பட்டுள்ள விருத்தாந்தம் ச'ஹீ'ஹ்பு'க'ாரீயால் மறுக்கப்படுவதைக் காண்க ('ஹதீ'. 32).

2. சென்ற 'ஹதீ':திலிருந்து நபி பெருமானார் ளு'ஹ்ரின் 'பர்ளு'க்குப் பின்னே இரண்டு ரக்ஆ'த் ஸுன்னத் தொழுவதுண்டென்று நாம் அறிந்துள்ளோம்; இந்த 'ஹதீ'தோ, அந்த 'பர்ளு'க்கு முன்னே நான்கு ரக்ஆ'த் ஸுன்னத் தொழுது கொண்டார்களென்று கூறுகின்றது. எனவே, யாம், அப் பெருமானார் ளு'ஹ்ருடைய 'பர்ளு'க்கு முன்னுகவோ, பின்னுகவோ நாலும் இரண்டுமாகச் சமயோசிதம் போலே ஸுன்னத் தொழுது வந்தார்களென்று நியாயமாய்க் கொள்ளலாம்.

ஓது; பிறகு நீ குனிவில்—(ருக்கூஇ'ல்) ஸ்திரமாயிருக்கு மட்டில் குனியக்கடவாய்; பிறகு நீ எழுந்து உறுதியாய் நிற்குமட்டில் நிமிர்ந்துநில்; பிறகு நீ சிரஞ்சாய்ப்பதில்—(ஸுஜூதி'ல்) ஸ்திரமா யிருக்கு மட்டில் சிரஞ்சாய்க்கக் கடவாய்; பிறகு நீ இருப்பில் ஸ்திரமா யிருக்கு மட்டில் எழுந்துட்கார்; பிறகு நீ சிரஞ்சாய்ப்பதில் ஸ்திரமாயிருக்கு மட்டில் சிரஞ்சாய்க்கக் கடவாய்; பிறகு நீ இருப்பில் ஸ்திரமா யிருக்கு மட்டில் எழுந்துட்கார்;"[3] இன்னம், வேறொரு சங்கதியின் பிரகாரம், "பிறகு நீ எழுந்து உறுதியாய் நிற்குமட்டில் நிமிர்ந்து நில்; பிறகு இதனை நீ உனது தொழுகை முழுவதிலும் செய்யக் கடவாய்."—(பு'க'ா., முஸ்—மிஷ். 4 : 10)

4. அபூ' 'ஹுமய்த்' அஸ்ஸாஇ'தீ' கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) அவர்களின் தொழுகையை யான் பத்திரமாய்ப் பேணிக் காத்து வருகிறேன்; அவர்கள் "அல்லாஹு அக்ப'ர்" என்று கூறியபொழுது, அப் பெருமானர் தங்களிரு கரங்களையும் தங்கள் தோட்கள் வரை உயர்த்தக் கண்டேன்;[4] மேலும், ரு(க்)கூஉ'க்குச் சென்றபொழுது, அவர்கள் தங்களிரு கைகளாலும் தங்களிரு முழந்தாள்களையும் இறுகப் பற்றினர்கள்; மேலும், தங்கள் முதுகை (அஃது அவர்களது சிரசுடனே

3. இவ்வாறுட்காருவது இரு ரக்ஆ'த்கள் தொழுது முடிந்த பொழுதுதான்.

4. இது 'தக்பீ'ர்'த'ஹ்ரீமா என்று கூறப்பெறும். தொழத் தொடங்குகிறவன் ஆரம்பத்திலே இவ்வாறு சொல்லியும் செய்துமே முதல் ரக்அ'த்தைத் துவக்கம் செய்கிறன்.

நேர்கோடா யிருக்குமட்டில்) வளைத்துக் குனிந்தார்கள்; பிறகு தங்கள் சிரத்தை உயர்த்தியபொழுது, முதுகந்தண்டின் ஒவ்வோர் எலும்பும் அதனதனுக்குரிய சரியான (நிமிர்ந்த) நிலைமைக்குத் திரும்பி வருமட்டிலே அவர்கள் ஒழுங்காய் நிமிர்ந்து நின்றார்கள்; இன்னம், அன்னவர்கள் ஸஜ்த’ா செய்த பொழுது, தங்கள் முன்னங்கைகளை—அவற்றை ஒரு விரிப்பேபோல் (தரையிலே படுக்கையாய்) விரிக்காமலும், (தங்கள் விலாக்களுடனே) சேர்த்தணைக்காமலும் (பூமியில் உள்ளங்கைகளைப்) படிய வைத்தார்கள்; இன்னம், தங்களிரு கால்விரல்களின் நுனிகளைக் :கிப்’லாவின் பக்கல் இருக்குமாறு (வளைத்து) வைத்துக் கொண்டார்கள்; இன்னம், இரண்டு ரக்ஆ’த் (தொழுது முடித்த)தின் பின்னால் இருப்பில் அமர்ந்த பொழுது, அவர்கள் தங்கள் இடப்பாதத்தின்மீது குந்தி, வலப்பாதத்தை நேராய் நிமிர்த்தி நிறுத்தினார்கள்; இன்னம், இறுதி ரக்ஆ’த்துக்குப் பின்னே இருப்பிலமர்ந்த பொழுது, அவர்கள் தங்கள் இடப்பாதத்தை(ப் பீஷ்டத்துக்கு) முன்னே கொணர்ந்து, மற்றொன்றை நிமிர்ந்து நிற்கச் செய்தார்கள்; மேலும், தங்கள் இருக்கைக்குரிய (பீஷ்ட) பாகத்தில் இருந்து கொண்டார்கள்.[5]
—(பு’க’ா. 10 : 145)

---

5. இவ்விருப்பிலே இடப்பாதம் முன்னாகக் கொண்டு வரப்படுவது, குந்துவதை எளிதாக்குதற்கே யாம்; நெடிதுற அமருங்கால், சௌகரியமா யுட்காரும்பொருட்டே அவ்வாறு செய்யப்பட்ட தென்க. பு’க’ா. 10 : 145-இல் கூறப்பட்டுள்ளதே போல், ஒருவனால் மேற்கூறிய மாதிரியில் இருக்க இயலவில்லை யாயின்,

5. ஸஹ்லிப்'னு ஸஃ'த்' கூறினர்: தொழுகை (யின் பொழுது நிலே)யில் ஒரு மனிதன் தனது இடது முன்கையின்மீது தனது வலக்கரத்தை வைக்கவேண்டு மென்று ஜனங்களுக்குக் கட்டளை யிடப்பட்டது.[6]—(பு'க'ா. 10 : 87)

6. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினர்: நபிகள் திலகம் (சல்அ'ம்) தங்கள் சரீரத்தின் நெற்றி,[7] இரு (உள்ளங்)கைகள், இரு முழந்தாள்கள், இரு பாதங் க்ள் ஆகிய ஏழு உறுப்புக்களின் மீதே ஸஜ்த'ா செய்யவேண்டு மென்றும், (தங்கள்) உரோமத்தை யும் ஆடைகளேயும் (தொழுகையி லிருக்குங்கால்) ஒழுங்கு செய்து கொண்டிருக்கக் கூடாதென்றும் கட்டளேயிடப் பெற்ருர்கள்.—(பு'க'ா. 10 : 133)

7. இப்'னு உ'மர் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) 'தஷஹ்ஹு¯தி'ல்[8] குந்தியக்கால், தங்கள் இடக்கரத்தைத் தங்கள் இடது முழந்தாள் மீதும், தங்கள் வலக்கரத்தைத் தங்கள் வலது

---

அவன் தனக்குச் சௌகரியம்போ லுள்ள வேறு மாதிரியிலே அமர்ந்து கொள்ளலாம். 'ஹன'பீ மதுஹபுக்குரியார் குந்துவதைக் கூர்ந்து கவனிக்க.

6. இதுதான்: கியாமின்பொழுது, உந்திக்குக் கீழேயாயினும், நெஞ்சின் மீதேயாயினும் கைகளேக் கட்டிக்கொள்ள வேண்டிய முறையா யிருக்கிறது.

7. முன்னெற்றியிலே மூக்கின் முனேயும் சேர்ந்திருக்கிறது (பு'க'ா. 10 : 135).

8. 'தஷஹ்ஹு¯த்' என்பது 'ஹதீ'. 23-இல் கூறப்பட்டுள்ள திக்ராயிருக்கிறது; அது, கலிமா ஷஹாத'த்துடனே முடிவடைவதால், அப்பெயர்கொண் டழைக்கப்படுகிறது.

முழந்தாள் மீதும் வைப்பது வழக்கமாயிருந்தது.[9]—(முஸ்—மிஷ். 4 : 15)

8. நபிகள் நாயகத்தின் (சல்அ’ம்) ஆதாரத்தைக் கொண்டு அனஸ் (இவ்வாறு) கூறியுள்ளார்: (அவர்கள் சொன்னார்கள்) :—

“ஒரு மனிதன் தன்னுடைய தொழுகையின் பொழுது தூக்கக்கலக்கத்தி லிருப்பானாயின், தான் ஓதுவது இன்னதுதா னென்று அறிந்துகொள்ளு மட்டிலே உறங்கிக்கொள்ளட்டும்.”[10]—(பு’க’ா. 4 : 53)

---

9. இரு ஸஜ்த’ாக்களுக் கிடையிலும் இப்படியே தான் தொடைகள்மீது முழந்தாள் முட்டருகிலே உள்ளங் கைகளை வைத்தல் வேண்டும்.

10. இதனால், முஸ்லிம்க ளெல்லாரும் தங்கள் தொழுகைகளில் ஓதும் ஒவ்வொரு விஷயத்தின் தாத்பரியத்தையும் செவ்வனே தெரிந்து கொண்டுதான் தொழவேண்டு மென்று நபிகள் பெருமானார் எதிர்பார்த்திருந்தார்க ளென்பது அறியக் கிடக்கின்றது. ஒன்றுமே விளங்கிக் கொள்ளாது சிற்சில அரப் வாக்கியங்களைக் கிளிப்பிள்ளைப் பாடமேபோல்—இல்லை, கிராமபோன் இசைத்தட்டேபோல், வெறுமனே உதட்டால் மட்டுமே உச்சரித்து ஒப்பிப்பதால், ஒரு சிறிதும் தொழுகையால் அடையப்பட வேண்டிய உத்தமப் பயன் வந்து சித்திக்கமாட்டா தென்பது திண்ணமேயாம்.

“கையொன்று செய்ய விழியொன்று நாடக் கருத்தொன் றெண்ணப்
பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால் கமழும் [
மெய்யொன்று சாரச் செவியொன்று கேட்க விரும்பு மியான்
செய்கின்ற பூசை எவ்வாறு கொள்வாய் வினைதீர்த் தவனே,”

என்றார் ஒரு பெரியாரும்.

தொழுகைகளில் ஓத வேண்டிய அத்தியாவசியமான அரபு வாக்கியங்கள் மிகச் சிலவாகவே இருந்து வருதலினால், அரமே

9. அபூ' ஹுரய்ரா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) தொழுகைக்காக எழும் பொழுது, அவர்கள் :கியாம் நிலைக்குச் செல்லுங் கால், அல்லாஹு அக்ப'ர் என்று சொல்லுவது வழக்கம்; அப்பால் அவர்கள் ரு(க்)கூஇ'ற்காகக் குனியும் பொழுது, அல்லாஹு அக்ப'ர் என்று கூறுவார்கள்; பின்பு ரு(க்)கூஇ'லிருந்து தங்கள் முதுகை உயர்த்துங்கால், "தன்னைப் புகழ்கிறவனிடத் திருந்து அல்லா(ஹ்) ஏற்றுக் கொண்டான்," என்று கூறுவார்கள்; அப்பால் அவர்கள் நிமிர்ந்து நிற்கும் பொழுது, "எங்கள் ரக்ஷகா! உனக்கே புகழனைத்தும்," என்று சொல்லுவார்கள்; பிறகு (ஸஜ்த'ாவில்) சிரஞ்சாய்த்து விழுங்கால், அல்லாஹு அக்ப'ர் என்று கூறுவார்கள்; பின்னர்த் தங்கள் சிரத்தை உயர்த்துங்கால், அல்லாஹு அக்ப'ர் என்று சொல்லுவார்கள்; பிறகு (இரண்டாவது) ஸஜ்த'ா செய்யும் பொழுதும் அல்லாஹு அக்ப'ர் என்று சொல்வார்கள்;

---

யறியாத எந்த மனிதனும், இல்லை, சிறு குழந்தைகளுங் கூட உத்தேசம் ஒரு மூன்றுமாத காலத்திற்குள்ளே அவற்றின் தாத்பரியங்களை நன்கறிந்து கொண்டு விடலாம். "அல்லாஹு அக்ப'ர்", "ஸுப்'ஹானறப்'பி'யல் அ'ளீ'ம்", "ஸுப்'ஹானறப்'பி'யல் அஃ'லா" போன்ற— அடிக்கடி அதிகமா யுபயோகிக்கப் பட்டுவரும்—அரபு வாக்கியங்களின் கருத்துக்கள் படித்தவர்களும் படியாதவர்களு மாய சகல முஸ்லிம்களாலும் பொதுவாக அறியப்பட்டே யிருக்கு மென்பது ஒருதலை. இதுவேயுமன்றி, தொழுகைகளில் மேற்கொள்ளப்படும் பலவகைப்பட்ட நிலைகளும் வணக்கத்திற்குரிய பக்தி பூரணமாய் உள்ள நிலையை உண்டு பண்ணுதற்குப் பெரிதும் பயன்படத் தக்கவைகளா யிருந்துவருவதும் பெரிதும் சிந்திக்கத் தக்கதேயாம்.

பின்பு தங்கள் சிரத்தை உயர்த்துங்காலும் அல்லாஹு அக்ப'ர் என்று சொல்லுவார்கள்; பிறகு, அதனை அவர்கள் முடிக்கு மட்டிலே தங்கள் தொழுகை முழுதிலும் அதனைச் செய்து (அல்லாஹு அக்ப'ர் என்று கூறிக்) கொண்டே வருவார்கள்; இன்னம், இரண்டு (ரக்ஆ'த்து)க்குப் பின்னே அமர்ந்துள்ள இருப்பிலிருந்து எழும்பொழுதும் அல்லாஹு அக்ப'ர் என்றே சொல்வார்கள்.[11]—(பு'க'ா. 10 : 117)

10. அபூ' ஹுரய்ரா கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) (ஆரம்பத்) தக்பீ'ருக்கும் அப்பால் ஓதப்படும் (:குர்ஆன்) ஆயத்துக்கும் இடையிலே மௌனமாய் நிற்பதுவழக்கம்;—ஏதோ ஒருசிறிது ஓதினார்களென்றே யான் எண்ணுகிறேன். 'என்னுடைய பிதாவும் என்னுடைய மாதாவும் தங்களுக்கு அர்ப்பணமாகக் கடவர்; ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! தக்பீ'ருக்கும் (ஆயத்) ஓதுவதற்கும் இடையிலே தாங்கள் மௌனமாயிருப்பது (என்ன)? (அந்த இடையிட்ட நேரத்தில்) தாங்கள் என்ன ஓதுகிறீர்கள்?' என்று யான் வினவினேன். (இதற்கு)அவர்கள் சொன்னார்கள்:—

11. ஒரு ரக்அ'த்'தில் ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்கு மாறும்பொழுது கூறப்படும் 'திக்ருகள் என்னென்னவென்று இந்த 'ஹதீ':து குறிப்பிட்டுக் காட்டியுள்ளது. ரு(க்)கூஇ'லிருந்து நிமிரும்பொழுது மட்டுமேயின்றி, மற்றெல்லா மாறுதல்களிலும் "அல்லாஹு அக்ப'ர்"—(அல்லாஹ்வே மகா பெரியவன்) என்பதே ஓதப்பட்டு வருவது கவனிக்கத் தக்கதொன்றாம்; தொழுகையுள் நுழையும்பொழுதுகூட "அல்லாஹு அக்ப'ர்" என்று சொல்லியே துவங்குகிறோம். இறுதியிலே :தஸ்லீம் (ஸலாம்) சொல்லி முடிக்கிறோம்.

"நான் சொல்கிறேன்: 'ஏ அல்லா(ஹ்)! கிழக்குத் திசை மேற்குத் திசையைவிட்டு நெடுந்தூரத்திலிருப்பதே போல, தவறுகளை நீ என்னை விட்டு அத்துணை நெடுந்தூரத்திலே நீக்கிவைக்கக் கடவாய்; ஏ அல்லா(ஹ்)! அழுக்கை விட்டு வெள்ளையாடை சுத்தஞ் செய்யப்படுவதேபோல, எல்லாத் தவறுகளை விட்டும் நீ என்னைப் பரிசுத்தம் பண்ணிவிடக் கடவாய்; ஏ அல்லா(ஹ்)! என் தவறுகளை நீ தண்ணீரைக் கொண்டும், உறைபனியைக் கொண்டும், ஆலங்கட்டியைக் கொண்டும் அலம்பி விடக் கடவாய்.' "[12]—(பு'க'ா. 10 : 89)

**11.** ஆ'யிஷா பிராட்டியார் கூறினர்கள்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) தொழுகையைத் துவக்குங்கால், (பின்வருமாறு) சொல்வது வழக்கம் :—

"தூய்மையனைத்தும் உனக்கே, ஏ அல்லா(ஹ்)! இன்னம், நின் புகழைக்கொண்டு (யான் ஆரம்பம் செய்கிறேன்); இன்னம், உன் திருநாமம் ஆசீர்வதிக்கப் பெற்றுள்ளது; இன்னம், உன் மாஹாத்மியம் மஹோன்னதமாய் விட்டது; இன்னம், வணக்கத்திற் குரியவன் உன்னையன்றி ஒருவனுமில்லை."—(அபூ'த'ா—மிஷ். 4 : 11)

---

12. இந்த 'ஹதீ':திலும், இதனை யடுத்துவரும் 'ஹதீ':திலும் கூறப்பட்டுள்ள 'திக்ருகள் இஸ்·தி'ப்·தா'ஹ்—(திறப்பதற்குப் பிரியங் கொள்ளல்) என்று அழைக்கப் படுகின்றன; ஆனல், 'ஹதீ'. 12-இல் சொல்லப்பட் டுள்ளதேபோல், ஸூரெ 'பா(த்)தி'ஹாவே தொழுகைக்குரிய மெய்யான துவக்கமா யிருந்துவருகிறது.

12. அனஸ் (பின்வருமாறு) கூறியுள்ளார்: நபிகள் திலகமும் (சல்அ'ம்) அபூ'ப'க்ரும் உ'மரும் அல்'ஹம்து' லில்லாஹி றப்'பி'ல் ஆ'லமீன் என்பதைக் கொண்டே தொழுகையைத் தொடங்குவது வழக்கம்.[13]—(பு'க'ா. 10 : 89)

13. உ'ப'ாத'ா (பின்வருமாறு) கூறியிருக்கின்றார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"திரு வேதத்தின் அவதாரிகையை — (அல் 'பாத்தி'ஹா ஸூராவை) ஓதாதவருக்குத் தொழுகையென்பது கிடையாது."[14]—(பு'க'ா. 10 : 95)

14. அபூ' மூஸா கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

---

13. :குர்ஆன் ஷரீ'பின் ஆரம்ப அத்தியாயமே—(அல்'பாத்தி 'ஹாவே) தொழுகைக்குரிய உண்மைத் துவக்கமாயிருப்பது ஈண்டுக் கவனிக்கத் தக்கதாகும். தொழுகையென்பது, அல்'ஹம்து' லில்லாஹி றப்'பி'ல் ஆ'லமீன்—(ஸூரா 'பாத்தி'ஹா) என்னும் பாடத்தைக் கொண்டே உண்மையில் தொடங்கப் படுவதாய்ச் சொல்லப் படுவது என்னெனின், இமாமானவர் இதனைக் கொண்டே தொழுகையில் இரைந்து ஓதத் தலைப்படுகின்றார் என்க. இஸ்தி'ப் 'தா'ஹ் என்னும் 'திக்ரு இரைந்து ஓதப்படாது, அவரவராலும் தத்தமக்கே கேட்குமாறு வாய்க்குள்ளே ஓதப்பட்டு வருகிறது.

14. எனவே, இந்த ஸூரா 'பா(த்)தி'ஹா ஒவ்வொரு தொழுகையின் ஒவ்வொரு ரக்அ'த்திலும் அத்தியாவசியமாய் ஓதப்பட வேண்டு மென்பது நன்கு அறியக் கிடக்கின்றது; இமாமுக்குப் பின்னே நிற்குங்காலும், அவர் ஓதி முடித்த பிறகு அவரவரும் வாய்க்குள்ளே அல்'பா(த்)தி'ஹாவை ஓதி முடிக்க வேண்டுமென அபூ' ஹுரய்ரா கூறியுள்ளதாய் ஒரு 'ஹதீ':து காணப்படுகிறது (முஸ்—மிஷ். 4 : 12).

"நீங்கள் தொழுது கொள்ளுங்கால், உங்கள் வரிசைகளை ஒழுங்கு படுத்திக் கொள்ளுங்கள்; பின்பு உங்களுள் ளிருந்து ஒருவர் உங்களுடைய இமாமா யிருக்கட்டும்; ஆகையால், அவர் 'தக்பீ'ர் சொல்லும் பொழுது, நீங்களும் 'தக்பீ'ர் சொல்லுங் கள்; இன்னம், அன்னவர் ':கய்ரில் ம:க்லூ'பி அ'லைஹிம் வலல்'லா'அல்லீன் என்று சொல்லுங்கால், நீங்கள் ஆமீன என்று சொல்லக் கடவீர்கள்; (அப்பொழுது) அல்லா(ஹ்) உங்கள் தொழுகையை அங்கீகரித்துக் கொள்வான்."[15]—(முஸ்-மிஷ். 4: 12)

---

15. ஆமீன (அம்ன்—அச்சந்தீர்தல்—என்பதிலிருந்து தோன்றி யிருப்பது) என்பது எப்பொழுதுமே இறுதி யக்ஷரத்தின்மீது 'பத்'ஹ ('ஜப'ர்) என்பதுடனேயே காணப்பட்டு வருகிறது; அதன் பொருள், "ஏ அல்லா(ஹ்)! எங்கள் பிரார்த்தனையை நீ செவி யேற்கக் கடவாய்!" அல்லது "அஃதவ்வாறே ஆகக்கடவது!"—(ததாஸ்து!) என்பதாயிருக்கிறது (நிஹா). பிரார்த்தனைகளின்—(து'ஆ') இறுதியிலே இது கூறப்படுவ துண்டு. பிரார்த்தனை யொன்றை—(து'ஆ'வை) இமாமானவர் ஓதிவருங்கால், அவரைத் தொடர்ந்து செல்பவர்கள் ஆமீன் என்று கூறுவது உங்களுக்குத் தெரியும். எனவே, 'பா(த்)தி'ஹாவும் ஒரு து'ஆ'வா யிருந்துவருதலி னால், அதன் முடிவிலும் ஆமீன் கூறப்பட்டு வருகிறது. தொழவைக் கும் இமாம் 'பா(த்)தி'ஹாவை இரைந்து ஓதுங்கால், பின்தொடர்ந்து தொழுபவர்களும் இரைந்தே ஆமீன் கூறவேண்டும். பு'கா'ரீயில் "இமாம் இரைந்து ஆமீன என்று கூறுவது" என்னும் தலைப் புடன் ஓர் அத்யாயமே காணப்படாநின்றது (10 : 111); அத்தலைப் பின் கீழே அப்பெரிய இமாம் வரைகின்றார்: "இப்'னு'ஜ்'ஜு பய்ரும் அன்னவருக்குப் பின்னே நின்றவர்களும், மஸ்ஜிதில் எதிரொலியொன்று ரீங்காரம் கிளப்புமட்டும், ஆமீன் என்பதை இரைந்து சப்தித்தார்கள்."

15. அபூ' :க'தாத'ா (இவ்வாறு) கூறி யிருக்கின்றார்: நபிகள் நாயகம் (சல்அ'ம்) ளு'ஹ்றர்த் தொழுகையிலும், அ'ஸ்ர்த் தொழுகையிலும், முதலிரண்டு ரக்ஆ'த்களிலும் உம்முல் கி'தாபை' (ஸூரா 'பாத்தி'ஹாவை)யும் அதனுடன்கூட மற்றொரு ஸூராவையும் ஓதுவதை வழக்கமாய்க் கொண்டிருந்தார்கள்; மேலும், சிற்சில சமயங்களில் ஓராயத்தை எங்களைக் கேட்கச் செய்வார்கள்; இன்னம், அன்னவர்கள் முதல் ரக்அ'த்தில் (ஓதுவதை) நீடிப்பது வழக்கம்."[16]—(பு'க'ா. 10 : 109)

16. அபூ' ரா'பிஃ' கூறினர்: நான் அபூ' ஹுரைய்ராவுடன் இ'ஷாத் தொழுகை தொழுதேன்; மேலுமவர், இ'தஸ் ஸமாஉன் ஷ:க்:கத்தை (அத். 84) ஓதினர்; அதுபொழுது ஒரு ஸஜ்த'ா செய்தார்;[17]

---

16. எல்லாத் தொழுகைகளின் 'பர்ல்'களிலும், முதலிரண்டு ரக்ஆ'த்களிலும் ஸூரா 'பா(த்)தி'ஹாவுடனே :குர்ஆனிலிருந்து வேறுசில பகுதிகளும் ஓதப்படும்; மூன்றுவதிலும் நான்காவதிலும் 'பா(த்)தி'ஹா மட்டுமே ஓதப்படும். இமாம் தொழுவைப்பாராயின், அவர் மூன்றுவது நான்காவது ரக்ஆ'த்தில் அதனை இரைந்து ஓதாது வாய்க்குள்ளே மெல்ல ஓதுவார். ளு'ஹ்றிலும், அ'ஸ்ரிலும் எல்லா ரக்ஆ'த்திலும் இமாம் மந்தணமாயே எல்லாவற்றையும் ஓதுவார். நபிகள் பெருமான் 'பஜ்ரிலும், ம:க்ரிபி'லும், இ'ஷாவிலும் இன்ன இன்ன ஸூராக்களை ஓதிவந்தார்களென்று கூறப் பலப்பல 'ஹதீ':துகள் ஆதாரமாய்க் காணப்படாநின்றன.

17. :குர்ஆன் ஷரீ'பிலே மொத்தத்தில் பதினான்கு இடங்களில் 14 ஆயாத்க ளிருக்கின்றன; அவ்வவ்விடத்தில் அவ்வவ்வாயத்தை ஓதும்பொழுது, உண்மையிலே ஸஜ்த'ா செய்யப்படுவதுண்டு; இது "ஸஜ்த'ா திலாவத்" என்று கூறப்படும். இம்மாதிரியான ஆயத்தொன்று (21) அத். 84-இல் இருக்கிறது; அதனை

அவரிடத்தே (அஃதென்ன வென) யான் விசா ரித்தேன்; (இதற்கு) அவர் சொன்னார்: 'யான் அபு'ல் :காஸிம் (சல்அ'ம்) அவர்கட்குப் பின்னே (நின்று) இங்கு ஸஜ்த'ா செய்தேன்; இன்னம், நான் அன்னவர்களைச் சந்திக்கு மட்டில் அதில் ஸஜ்த'ாவைச் செய்துகொண்டுதா னிருப்பேன்.'— (பு'க'ா. 10 : 100)

17. ஆ'யிஷா பிராட்டியார் கூறினார்: நபிகள் திலகம் (சல்அ'ம்) தங்கள் ரு(க்)கூஇ'லும் ஸஜ்த'ாவி லும் (பின்வருமாறு) கூறுவது வழக்கம் :—

"தூய்மையனைத்தும் உனக்கே, ஏ அல்லா(ஹ்)! எங்கள் ரக்ஷகா! இன்னம், நின்புகழைக்கொண்டு (யான் ஸ்தோத்திரம் செய்கின்றேன்); ஏ அல்லா(ஹ்)! எனக்குப் பாதுகாப்பை யளித்தருள்வாய்."—(பு'க'ா. 10 : 123)

18. 'ஹுதய்'பா, தாம் நபிபெருமானாருடன் (சல்அ'ம்) சேர்ந்து தொழுததாய்க் கூறியுள்ளார்; இன்னம், அன்னவர்கள்—(நபிகள்நாயகம்) தங்கள் ரு(க்)கூஇ'ல், "மகத்துவ மிக்க என்னுடைய நாயகனே தூயவன்!" என்றும், தங்கள் ஸுஜூதி'ல், "மஹோன்னத மிக்க என்னுடைய ரக்ஷகனே மிகத் தூயவன்!" என்றும் கூறுவது வழக்கம்; மேலும், ஆண்டவனது கிருபையைக்

---

ஓதியபொழுது, அபூ'ஹுரைய்ரா (ரலி') நபி பெருமான் வழக்கத்தை யொட்டி ஸஜ்த'ா'திலாவத் செய்தார். அப்பெருமானார் தொழுகை யின் பொழுதும் ஸ'ஜ்த'ா'திலாவத்துக் குரிய ஆயத்தொன்றை ஓதிவிட்டால், அப்பொழுது அப்படியே ஸஜ்த'ா செய் தெழுவார் கள்; இதுதான் அவர்களது பெருவழக்கம்.

குறித்துக் கூறும் எந்த ஆயத்தையும் ஓத மாட்டார்கள்; ஆனால், அவர்கள் தாமதித்து, (அவனது கருணையைக்) கோருவார்கள்; இன்னம், ஆண்டவனது தண்டனை குறித்துக் கூறும் எந்த ஆயத்தையும் ஓத மாட்டார்கள்; ஆனால், அவர்கள் தாமதித்து, (அவனது தஞ்சத்தைத்) தேடுவார்கள்.[18] —(·திர்மி—மிஷ். 4 : 13)

19. ரி'பாஆ' கூறினார்: நாங்கள் ஒருநாள் நபி பெருமானார் (சல்அ'ம்) பின்னே (நின்று) தொழுது கொண்டோம்; அப்பொழுது அவர்கள் ரு(க்)கூஇ'னின்று தங்கள் சிரத்தை உயர்த்தியக் கால், 'தன்னைப் புகழ்கிறவனிடத்திருந்து அல்லா(ஹ்) கேட்கிறான்,' என்று கூறினார்கள்; அப்பொழுது அவர்களுக்குப் பின்னே யிருந்த ஒரு மனிதன், 'எங்கள் ரக்ஷகா! இன்னம், உனக்கே புகழனைத் தும்;—அதிகமான புகழ், அதில் மிகப் பரிசுத்த மானதும், ஆசீர்வதிக்கப் பட்டதும்,' என்று கூறினான். (தொழுகையை) முடித்துக் கொண்ட பின்னர் அவர்கள்—(நபிபெருமானார்) "(அவ் வசனங்களைச்) செப்பியவர் எவர்?" என்று வினவி

18. இதனால் விளக்கமாவது யாதெனின்: முழுத் தொழுகை யுமே ஆண்டவன்பால் சமர்ப்பிக்கப்படும் விண்ணப்பமாயே யிருக்கவேண்டும் என்பதுதானாகும். :குர்ஆன் ஆயாத்களை ஓதுங் காலும் தொழுகையில் அல்லா(ஹ்)வின் கருணையையும், அவனது அபயத்தையுமே தேடுவதாகவே நம்முடைய நோக்கம் இருந்து வருதல் வேண்டும்.

இன்னம், இந்த 'ஹதீ':தில் காணப்படும் திக்ருகள், மற்றும் பல 'ஹதீ:'துகளில் காணப்படுவதே போல், குறைந்த பக்ஷம் மும்மூன்று முறையேனும் ஓதப்படல் வேண்டும்.

ஞர்கள்; (இதற்கு) அம் மனிதன், 'நான்தான்,' என்று விடை யளித்தான்; (அதுகேட்டு, நபிபெருமான்) "அவற்றினை முதலில் பதிவுசெய்து கொள்பவர் எவரே யென்று முப்பது அமரர்களுக்கு மேலாக விரைந்தோடி வந்ததை நான் கண்டேன்," என்று கூறினார்கள்[19]—(பு'க'ா. 10 : 126)

20. அபூ' ஹுரய்ரா கூறினர்: மேலும், அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) "தன்னைப் புகழ்கிறவனிடத்திருந்து அல்லா(ஹ்) கேட்கிறான்; எங்கள் ரக்ஷகா! இன்னம், உனக்கே புகழனைத்தும்," என்று சொல்லித் தங்கள் தலையை நிமிர்த்தபொழுது, சில ஜனங்களுக்காக, அவர்களைப் பெயர் சொல்லிப் பிரார்த்தனை புரிவது வழக்கம்; இன்னம், சொன்னர்கள் :—

"ஏ அல்லா(ஹ்)! வலீ தி'ப்'னு வலீதை'யும், ஸலமா இப்'னு ஹிஷாமையும், அ'ய்யா ஷிப்'னு அபீ'ரபீ'ஆ'வையும், மூமினனவர்க ளுள்ளே பல ஹீனர்களையும் நீ ஈடேற்றிவிடக் கடவாய்; ஏ அல்லா(ஹ்)!—முல'ர்மீது உனது பிடியைக் கடுமைப்

---

19. இதிலிருந்து விளக்கமாவது யாது? தொழுகிற மனிதன் ஒரேவிதமான, அங்கீகரிக்கப்பட் டுள்ள, திக்ருகளையே ரு(க்)கூஇ'லும் ஸுஜூதி'லும் திருப்பித் திருப்பி ஓதவேண்டு மென்பது கட்டாயச் சட்டமில்லை. அல்லா(ஹ்)வை ஸ்தோத்திரித்து, அப்பால் அவரவருக்குத் தேவையான பிரார்த்தனைகளைப் புரிந்து கொள்ளலாம். "றப்'ப'னு வல(க்)கல் 'ஹம்து' 'ஹம்த'ன் க:தீரன் :தய்யிப'ன் முப'ார(க்)கன் 'பீஹி" என்னும் 'திக்ரு நபிகள் நாயகத்தின் அங்கீகாரம் பெற்றிருத்தலினுல், இதனையே எல்லாரும் அநேகமாக ஓதி வருகிறார்கள்.

படுத்தக் கடவாய்; இன்னம், அன்னவர்களுக்கு இவைகளை, யூஸு‘பின் ஆண்டுகளே போல் (வறட்சியுள்ள பஞ்ச) வருடங்களாய்ப் பண்ணிவிடக் கடவாய்.”[20]—(பு’க’ா. 10 : 128)

21. அபூ’ஹுரய்ரா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னார்கள் :—

“ அடியான் தன்னுடைய ரக்ஷகனுக்கு மிகவு நெருங்கி யிருப்பது அவன் ஸஜ்த’ாவி லிருக்கும் போதுதான் ; ஆகவே, (அந் நிலையி. லிருக்கும் பொழுது) நீங்கள் உங்கள் அதிகமான பிரார்த்தனை களை யெல்லாம் புரிந்துகொள்ளக் கடவீர்கள்.”[21] —(முஸ்—மிஷ். 4 : 14)

---

20. ரு(க்)கூஇ’ விருந்து எழுந்த பிறகு ஓதப்படும் இந்த து’ஆ’விற்குக் :குனூத் தென்று பெயர் சொல்லப்படுகிறது; வித்ரில் செய்யப்படும் பிரத்தியேக பிரார்த்தனைக்குக் :குனூத் தென்னும் பெயர் எல்லாராலும் வழங்கப்பட்டு வருவது கண்கூடு. இந்த 'ஹதீ':தால் இன்னமொரு முக்கிய விஷயம் விளக்கமாவது கூர்ந்து கவனிக்கத் தக்கதேயாம்: 'பர்ல’ான தொழுகைகளில் எந்த நிலையி லிருந்தும் எத்தகைய பிரார்த்தனைகளையும் புரியலாம் என்க. நபிகள் திலகம் அரபுபாஷை பேசுகிறவர்களா யிருந்தார்கள்; ஆதலால், அவர்கள் எல்லாப் பிரார்த்தனைகளையும் அல்லா(ஹ்)வுக்கு அவ்வரபு மொழியிலேயே சமர்ப்பித்து வந்தார்கள். அவர்களது இவ்வழக்கத்தை யொட்டி, அவரவரும் தத்தமக்குரிய தாய்மொழி யிலே தத்தமக்குத் தேவைப்பட்ட பிரார்த்தனைகளை யெல்லாம் அல்லா(ஹ்)வின் பால் செய்துகொள்ளலா மென்பது செவ்விதிற் பெறப்படுகின்றது.

21. ஸஜ்த’ாவின்—(அடியான் ஆண்டான்முன்னே அஷ்டாங் கமும் தரையிற்படியக் குப்புற்றுச் சிரவணக்கம் புரிந்து கிடக்கும்) நிலை யென்பது மிகமிகப் பணிவுடன் கூடிய தாழ்மை யுற்ற தன்மையையே யெடுத்துக் காட்டுகின்றது. அகங்கார மமகாரங்க

22. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறியுள்ளார்கள்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (ஸல்அ'ம்) இரண்டு ஸஜ்த'ாக்களுக் கிடையே (இவ்வாறு) சொல்வது வழக்கம் :—

"ஏ அல்லா(ஹ்)! என்னை நீ பொறுத்தருள்வாய்; மேலும், என்மீது கருணை கூர்ந்தருள்வாய்; இன்னம், என்னை நீ நேர்வழியில் நடாத்தக்கடவாய்; இன்னம்,

---

ளென்னப்படும் ஆணவங்களை யெல்லாம் அடியுடனே விடுத்து, அடியாரொருவன் எத்துணைக் கெத்துணைத் தாழ்ந்து அடிபணிந்து விடுகிறானோ, அத்துணைக்கத்துணை ஆண்டானை அண்மிக்கொள்ளுகிறான். எனவேதான், இப்பணிவான தாழ்ந்த நிலையிலிருக்கும் பொழுது அவன் தனக்கு வேண்டிய அதிகமான பிரார்த்தனைகளை யெல்லாம் மிகவும் புரிந்து கொள்ளுமாறு ஏவப்படுகிறான்; "கேள்; நீ கொடுக்கப் பெறுவாய். கேள்; நீ கொடுக்கப் பெறுவாய்," என்று எம்பிரானும் இயம்பியுள்ளார்கள் ('ஹதீ'. 24). அது பொழுது அன்னவன் தனக்குத் தெரிந்த எந்தப் பாஷையிலும் பிரார்த்தனை புரியலாம். ஐயமில்லாமலே, அவ்வவனும் தன் தனக்குரிய தாய்மொழியிலே பிரார்த்தனை புரிவதா யிருந்தால் மட்டுமேதான் தன் தன் ஆழிய உள்ளக்கிடக்கையை அந்தச் சிருஷ்டிகர்த்தாவின் முன்னே மிக்க நல்ல முறையிலே உள்ளவாறு ஒப்பித்துக் கவிழ்த்துக் கொட்டுவது சாத்தியமாகும்; தன்னைப் படைத்துள்ள தந்தையின் முன்னே தனது தாய்மொழியில் சம்பாஷிப்பதா யிருந்தால் மட்டுமேயே தன்னுடைய கருத்துக் களைப் பிறிதொரு மொழியில் மொழிபெயர்க்கும் சிரமமின்றி, சர்வதாராளமாய்த் தன்னுடைய விஞ்ஞாபனங்களை மிக்க நல்ல முறையிலே சமர்ப்பிப்பதென்பது சர்வலகுவாக வந்து முடியும். தொழுகையெல்லாம் முடிந்து இறுதியில் ஓதும் து'ஆ'க்களையும்—(பிரார்த்தனைகளையும்) கூட அன்னிய அரபு பாஷையிலேயே ஓதித்தீர்க்கும் ஆலிம்களெல்லாம் இத்னைச் சிறிது ஆழ்ந்தறிய மாட்டார்களா?

எனக்கு நீ அச்சமின்மையை அளித்தருளக்கடவாய்; எனக்கு நீ ஜீவனோபாயத்தையும் தந்தருள்வாயாக!''
—(அபூ'த'ா—மிஷ். 4 : 14)

23. அ'ப்'து'ல்லா(ஹ்) கூறினர் : நாங்கள் நபிகள் நாயகத்துடனே (சல்அ'ம்) தொழுது கொண்ட பொழுது, 'அல்லா(ஹ்)வின் மீது அவனுடைய அடியவர்கள்பாலிருந்து சாந்தி யுண்டாகக் கடவது.......' என்று சொன்னேம்; ஆதலால், நபிபெருமான் (சல்அ'ம்) எங்களுக்கு (இவ்வாறு) சொல்லிக் கொடுத்தார்கள் :—

"அல்லா(ஹ்)வின் மீது சாந்தி யுண்டாகக்கடவது என்று நீங்கள் சொல்லாதீர்கள்; என்னெனின், நிச்சயமாக அல்லா(ஹ்)— அவனே சாந்திமயமாயிருக்கிறன்; ஆனல், சொல்லக் கடவீர்கள் : 'வார்த்தைகளைக் கொண்டும் சரீரக் கிரியைகளைக் கொண்டும் செய்யப்படும் சகலவித வணக்கங்களும், பொருள் சம்பந்தமாயுள்ள சகலவித தியாகங்களும் அல்லா(ஹ்)வுக்கே உரியன. ஏ நபீ! உங்கள்மீது சாந்தியுண்டாகக்கடவது; இன்னம், அல்லா(ஹ்)வின் கருணையும் அவனுடைய ஆசிகளும் (உண்டாகக் கடவன). எங்கள்மீதும், நல்லவர்களாய அல்லா(ஹ்)வின் அடியவர்கள்மீதும் சாந்தியுண்டாகக்கடவது.' —என்னெனின், இதனை நீங்கள் சொல்லுங்கால், அது வானத்திலும் பூமியிலுமுள்ள [அல்லா(ஹ்)வின்] ஒவ்வோரடியானையும் எட்டிக்கொள்கிறது;—'வணக்கத்திற்குப் பாத்திரமானவன் அல்லா(ஹ்)வைத் தவிர்த்து வேறெவனும் இல்லையென்று' யான்

சாக்ஷியம் கூறுகிறேன்; இன்னம், (திண்ணமாக) மு'ஹம்மத்' அவனுடைய அடியாரும் தூதருமா யிருக்கின்றார் என்றும் யான் சாக்ஷியம் கூறுகிறேன்.' பின்பு ஒருவன் தான் அதிகம் விழைகின்ற ஏதேனும் பிரார்த்தனையைப் பொறுக்கியெடுத்து, [அல்லா(ஹ்)வின்பாலே] பிரார்த்தனை புரியக் கடவன்."[22]—(பு'க'ா. 10 : 150)

24. அ'ப்'து'ல்லா ஹிப்'னு மஸ்ஊ'த்' கூறினார்: நான் தொழுதுகொண் டிருந்தேன்; இன்னம், (அவ்விடத்தில்) நபிகள்திலகம் (சல்அ'ம்) பிரசன்னமா யிருந்தார்கள்; மேலும், அபூ'ப'க்ரும் உ'மரும் அவர்களுடன்கூட இருந்தார்கள்; யான் இருப்பிருக்கு நிலையில் அமர்ந்தபொழுது, அல்லா(ஹ்)வின்மீது துதி கூறுவதுகொண்டு தொடங்கினேன்; பிறகு நபிபெருமான் (சல்அ'ம்) மீது சலவாத்துச் சொன்னேன்; பின்பு எனக்காகவே பிரார்த்தனை புரிந்து கொண்டேன்.[23] (அப்பொழுது) நபிகள்

22. வேறு சில 'ஹதீ':துகளில் காணப்படுவதே போல், இந்தப் பிரார்த்தனை :க'ஃ'த'ா என்னப்படும் இருப்பிலே இருக்கும் பொழுதுதான் ஓதப்படுகிறது; இந்த இருப்பு இரண்டாவது ரக்அ'த்துக்குப் பின்னும், இறுதி ரக்அ'த்துக்குப் பின்னரும் மேற்கொள்ளப்படுகிறது. இவ்விருப்புத் 'தஷஹ்ஹு'த்' என்று அழைக்கப்படுகிறது; என்னெனின், இவ்விருக்கையின் பொழுது இறுதியிலே ஷஹாத'த்—(சாக்ஷியம் கூறும்) கலிமா ஓதப்படுகின்றதனால் என்க.

23. இது நபிகள் திலகம்(சல்) கற்றுக்கொடுத்துள்ள அனுமதியின் பிரகாரம் செய்யப்படுகிறது: அல்லா(ஹ்)வைத் துதிப்பது 'ஹதீ'. 23-இலும், நபிகள் நாயகத்தின்மீது சலவாத் சொல்வது

திலகம்(சல்அ'ம்)சொன்னார்கள் :—"கேள்; நீ கொடுக்கப் பெறுவாய். கேள் ; நீ கொடுக்கப் பெறுவாய்."[24]
—('திர்மி—மிஷ். 4 : 16)

25. அ'ப்'து'ர் ர'ஹ்மான் கூறினர் :........' ஏ அல்லா(ஹ்)வின் திருத்தூதரே ! தங்கள்மீது நாங்கள் எவ்வாறு சலவாத் சொல்ல வேண்டும் ?' என்று நாங்கள் வினவினேம்..........அவர்கள் சொன்னார்கள் :—" சொல்வீர்களாக :

' ஏ அல்லா(ஹ்) ! இப்'ராஹீம் அவர்கள்மீதும் அவர்களுடைய மெய்யான பக்தர்கள்மீதும் நீ ஆசி கூறி (மேலாக்கி)யதேபோல், மு'ஹம்மத்' அவர்கள் மீதும் அவர்களுடைய மெய்யான பக்தர்கள்மீதும் ஆசிகூறி (மேலாக்கி) வைக்கக்கடவாய் ; நிச்சயமாக நீ புகழப் பெற்றவனாக, மகிமை வாய்ந்தவனாக இருக்கின்றாய். ஏ அல்லா(ஹ்) ! இப்'ராஹீம் அவர்கள்

---

'ஹதீ'. 25-இலும், தனக்கு வேண்டிய பிரார்த்தனைகளைப் புரிவது 'ஹதீ'. 23, 26-இலும் அனுமதியளிக்கப் பெற்றுள்ளன.

24. இதனால் விளக்கமாவது யாது? தொழுகை யென்னும் வணக்கம் ஒரு சில திட்டப் படுத்தப்பட்டுள்ள "வாய்பாடுகளை"யே ('திக்ருகளை) அம்முறைப்படி ஒப்பிப்பதென்றும், ஒரு சில வியாயாமக் கிரமப்படி அங்க சேஷ்டைகளைச் செய்து வருவதென்றும் எவரும் எண்ணிவிட வேண்டாமென வற்புறுத்துவதாகவே இஃது இருந்து வருகிறது. தொழுகை யென்பது, அடியான் தன்னைப் படைத்துக் காத்து ஆண்டுவரும் அல்லா(ஹ்)வின் திரு முன்பினிலே தன்னுடைய குறைமுறைகளனைத்தையும் குப்புறக் கவிழ்த்துக் கொட்டித் தன்னாலாய முறையாவெல்லாம் தன்னுடைய அவசியத் தேவைகளனைத்திற்காகவும் மிகவு மன்றாடிப் பிரார்த்தனை புரிதற்குரிய ஓர் அரியதருணத்தை யளிக்கவல்ல வணக்கமாகவே யிருந்துவருகிறது.

மீதும் அவர்களுடைய மெய்யான பக்தர்கள்மீதும் நீ ஆசீர்வாதம் புரிந்ததேபோல், மு'ஹம்மத்' அவர்கள்மீதும் அவர்களுடைய மெய்யான பக்தர்கள் மீதும் ஆசீர்வாதம் புரியக்கடவாய்; நிச்சயமாக நீ புகழப்பெற்றவனுக, மகிமை வாய்ந்தவனுக இருக்கின்ருய்.' "[25]—(பு'க'ா., முஸ்—மிஷ். 4 : 16)

26. ஆ'யிஷா பிராட்டியார் கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) தங்கள் தொழுகைகளில் (பின்வருமாறு) சொல்வது வழக்கம் :—

"ஏ அல்லா(ஹ்)! யான் புதைகுழியின் வேதனையினின்று[26] உன்பாலே அபயம் தேடுகிறேன்; இன்னம், அல்மஸீ'ஹ-த்' த'ஜ்ஜாலின் உபத்திரவத்தினின்று[27] உன்பாலே அபயம் தேடுகிறேன்; இன்னம், வாழ்வின் சோதனைகளை விட்டும் சாவின்

---

25. இங்குள்ள வசனங்கள் குறித்துக் காட்டுவதே போல, நபிபெருமானர்மீது சலவாத் தென்பது உண்மையிலே அம்மஹானுபாவரின் காரியம் சித்திபெறச் செய்யப்படும் பிரார்த்தனையாயிருந்து வருகிறது; அஃதாவது, சத்திய சன்மார்க்கம் இப்பாருலகெங்கணும் நன்கு பரவி வெற்றிபெற வேண்டு மென்பதாயே காணப்படாநின்றது.

26. "புதைகுழி" யென்பது, மெய்யாகவே மரணத்துக்குப் பின்னே இறுதித் தீர்ப்புநாள் வரையுள்ள நிலையை—(ப'ர்'ஜகை')ச் சுட்டிக்காட்டுவதா யிருக்கிறது.

27. அல்மஸீ'ஹ் என்பது மேசாயா—(கிறிஸ்து)—என்பதாய அரபுப் 'பெயரா யிருக்கிறது; அத்' த'ஜ்ஜால் (த'ஜ்ல்—'மூடுதல்', அல்லது 'பொய்யைக் கொண்டு மெய்யை மூடுதல்' என்பதிலிருந்து பிறந்துள்ளது) "கிறிஸ்து விரோதி"யா யிருக்கிருன். "அவன் தன்னைப் பின்பற்றுகிறவர்களைக் கொண்டு இப்பாருலகை

சோதனைகளை விட்டும் உன்பாலே யான் அபயம் தேடுகிறேன். ஏ அல்லா(ஹ்)! பாபங்களை விட்டும் கடனில் சிக்கிக்கொள்வதை விட்டும் உன்பாலே யான் அபயம் தேடுகிறேன்."—(பு'க'ா. 10:149)

---

மூடிவிடுவான்," என்னும் காரணத்தினால், அல்லது, "தனக்குக் கடவுட்டன்மை யுண்டென்று அவன் அகந்தைகொண்டு பொய் யுரை புகல்வான்," என்னும் காரணத்தினால், அல்லது, "அவன் இப்பூமியின் பெரும்பகுதியான பாகங்களிலெல்லாம் சஞ்சரித்து வருவான்," என்னும் காரணத்தினால், அல்லது, "தனது நாஸ்திகக் கொள்கையைக் கொண்டு இக்குவலய மாந்தர்களைப் பொதிந்து கொள்வான்," என்னும் காரணத்தினால், அல்லது, "பொய்யைக் கொண்டு மெய்யை மூடிவிடுவான்," என்னும் காரணத்தினால், அல்லது, "அவன் பொய்யைக் கொண்டு மனிதர் களைக் குழப்பத்திலே, அல்லது சந்தேகத்திலே சிக்கவைத்து விடுவான், அல்லது தான் மறைத்து வைத்ததற்கு நேர்மாறா யுள்ளதையே வெளிக்குக் காண்பிப்பான்," என்னும் காரணத் தினால், அவன் த'ஜ்ஜால் என்று அழைக்கப்படுகிறான்; அல்லது அச்சொல், த'ஜ்ஜால்—தங்கம், அல்லது முலாம்பூச உதவும் தங்க முலாம்—என்பதிலிருந்து தோன்றியிருக்கலாம்; "என்னெனின், அன்னவன் எங்குச் சென்றாலும் அங்கெல்லாம் பொற் குவடு பின்பற்றியே செல்லும்." அல்லது, த'ஜ்ஜால என்பதிலிருந்து தோன்றி யிருக்கலாம்; இதன் தாத்பரியமாவது: "தரையைத் தங்கள் கூட்டங்களைக் கொண்டு மூடியும், அல்லது வர்த்தகத் துக்காகச் சரக்குக்களைச் சுமந்தும் ஒன்றாய்த் திரண்டு பிரயாணம் சென்றும் விடும் ஒரு பெரிய மானிடக் கூட்டரவு," என்பதா யிருக்கும்.

"கிறிஸ்து விரோதி"யின் தீங்கு, அல்லது உபத்திரவமே இந்நானிலத்தில் தோன்றியுள்ள எல்லாவித உபத்திரவங்களிலும் மிகவுந் தீயதென்று சொல்லப்பட்டுள்ளது; குர்ஆன் ஷரீ'பின் 18-ஆவது அத்யாயத்தின் முதற்பத்தும் இறுதிப்பத்துமாய திருவாக்கியங்களை ஓதுவது அப் பொல்லாத துன்பத்துக்கொரு

27. அ'ப்'து'ல்லா(ஹ்) கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) அவர்களுடைய வலப்புறக் கன்னத்தின் வெண்ணிறம் தெரிகிறமட்டில் தங்கள் வலப் (பக்கத் தோட்) புறம் திரும்பி, "உங்கள் மீது சாந்தியும் அல்லா(ஹ்)வின் கருணையும் உண்டாகக் கடவன," என்றும், அவர்களுடைய இடப்புறக் கன்னத்தின் வெண்ணிறம் தெரிகிறமட்டில் தங்கள் இடப் (பக்கத் தோட்) புறம் திரும்பி, "உங்கள்மீது சாந்தியும் அல்லா(ஹ்)வின் கருணையும்

---

பாதுகாப்பா யிருக்கிறதென்று 'ஹதீ':திலே ஒரு விஷயம் காணப்படாநின்றது: "குகை யென்று பெயர் கொடுக்கப்பெற்றுள்ள அத்யாயத்தின் முதற்பத்து ஆயாத்களை மனனம் பண்ணுகிற மனிதன் த'ஜ்ஜாலின் உபத்திரவங்களை விட்டுப் பாதுகாக்கப் படுகிறன்" (அபூ'த'ா. 36:14; 'திர்மி. 31:59; இப்'னுமா. 36:33; மஸ். VI, 446). ஸூராக் கஹ்'பின் இக்கூறிய ஆயாத்கள் கிறிஸ்தவக் கொள்கைகளைக் குறித்துக் கூறுகின்றன வென்பது ஈண்டுக் கவனிக்கத்தக்க விஷயமா யிருந்துவருகிறது; எனவே, த'ஜ்ஜாலின் உபத்திரவமென்பது, ஈங்கு, நம்மை இற்றைநாளில் வாட்டி வதக்கிவரும் கிறிஸ்தவ, அஃதாவது, உலகாயத நாகரிக மென்னப்படும் கிறிஸ்து விரோத "நாகரிகத்"தின் தொல்லைகளாகவே யிருந்துவருகின்ற தென்பதில் சிறிதும் சந்தேகமென்பது கிடையாது. இதற்குக் "கிறிஸ்து விரோதி" யென்று ஏன் நாமம் சூட்டப்பட்டிருக்கிற தெனின், இந் நவ நாகரிகக் கிறிஸ்துமத சித்தாந்தம் இயேசு கிறிஸ்துவின் சற்போதனைக்கே முற்றமுற்ற மாறுபட்டுக் கிடத்தலினுல் என்க; என்னெனின், இயேசுவானவர் எக்காலத்தும் தாம் கடவுட்குமார னென்னும் கொள்கையினையும், தமது இரத்தத்தில் நம்பிக்கைவைப்பவர் பாப மன்னிப்பென்னும் பிராயச்சித்தம் பெறுவா ரென்பதனையும் கூறிப்போயினரில்லை யென்பது திண்ணமேயாகும்.

உண்டாகக் கடவன," என்றும் 'தஸ்லீம் சொல்வது வழக்கம்.[28]—(அபூ'த'ா—மிஷ். 4 : 17)

28. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறியுள்ளார்கள்: நபிகள் நாயகத்தின் (சல்அ'ம்) காலத்திலே, ஜனங்கள் கடமையான— ('பர்ல்') தொழுகையைத் தொழுது முடித்துத் திரும்பும்பொழுது, 'திக்ருடனே தொனியையும் உயர்த்துவது ஒரு வழக்கமாயிருந்தது.[29]—(பு'க'ா. 10 : 155)

29. :தவ்ப'ான் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) தங்கள் தொழுகையினின்று மீளுங்கால், இஸ்தி:க்'பாரின் பக்கல் மூன்றுமுறை கவனம் செலுத்துவார்கள்; இன்னம், சொல்வார்கள் :—

---

28. தஸ்லீம் (ஸலாம் கொடுத்தல்) என்பது தொழுகையின் முடிவான காரியமா யிருக்கிறது. இதற்குரிய வசனங்கள் முஸ்லிம்கள் ஒருவருக்கொருவர் முகமன் கூறிக்கொள்ளும் ஸலாத்தின் வசனங்களாகவே யிருந்துவருகின்றன. இதுபொழுது ஈண்டு ஒரு விஷயத்தைக் கவனிப்பீர்களாக: முஸ்லிம்களின் தொழுகை அல்லா(ஹ்)வின் பெருமையைக் கொண்டு—("அல்லாஹு அக்ப'ர்" என்று சொல்லித்) துவக்கப்படுகிறது; இறுதியிலே (ர'ஹ்மத்து'ல்லாஹ்) அல்லா(ஹ்)வின் கருணையைக் கோருவதைக் கொண்டே முடிக்கப்படுகிறது.

29. இந்த 'ஹதீ':தும், அடுத்துவரும் 29-ஆவது 'ஹதீ':தும், இமாம்-ஜமாஅ'த் தொழுகை முடிந்தவுடனே அவரவரும் தனியே இரைந்து, இந்த 'திக்ரைத்தான் சொல்வது வழக்கமென்று கூறிக்கொண் டிருக்கின்றன. ஆயின், இற்றை நாளில் பொதுப் படையாய்ப் பழக்கத்தி லிருந்துவரும்—இமாமும், ஜமாஅ'த்தும் கையேந்தி, து'ஆ' ஓதும் வழக்கம் அற்றைநாளில் இருந்துவந்ததில்லை என்க.

"ஏ அல்லா(ஹ்)! நீ சாந்திமயமாயிருக்கின்றாய்; இன்னம், நின்பாலிருந்தே சாந்தி உதயமாகின்றது. கீர்த்திக்கும் கண்ணியத்திற்கு முரிய ஆண்டவா! நீ ஆசீர்வதிக்கப்பட்டுவிட்டாய்."—(முஸ்—மிஷ்.4:18)

30. அ'ப்'து'ல்லா ஹிப்'னு பு''ஹய்னா........ கூறினார்: நபிகள்நாயகம் (சல்அ'ம்) தங்களுக்கு ளு'ஹ்ர்(த் தொழுகையைத்) தொழவைத்தார்கள்; அதுகாலை முதலிரண்டு ரக்ஆ'த் (தொழுது) முடிந்த பின்னால், எழுந்து நின்றுவிட்டார்கள்; மேலும், இருப்பிலே அமரவில்லை; (பின்தொடர்ந்து தொழுத) ஜனங்களும் அவர்களுடனே எழுந்து நின்றார்கள். அவர்கள் தொழுகையை முடித்த பொழுது, ஜனங்கள் 'தஸ்லீமுக்காகக் காத்துக் கொண்டிருந்தபொழுது, அவர்கள் அமர்ந்திருந்த படியே 'தக்பீ'ர் சொல்லி, தாங்கள் 'தஸ்லீம் கூறு முன்னே இரண்டு ஸஜ்த'ாவும் செய்தார்கள்; பிறகு (தான்) 'தஸ்லீம் சொன்னார்கள்.[30]—(பு'க'ா. 10:146)

---

30. இரண்டாவது ரக்அ'த் முடிந்தவுடனே நபிபெருமான் இருப்பிலமர மறந்துவிட்டார்கள்; ஆனால், இறுதியிலே 'தஸ்லீம் கூறுமுன்னே இரு ஸஜ்த'ா மட்டுமே செய்தார்கள். இது ஸஜ்த'(த்)தஸ் ஸஹ்வ் — (ஸஹ்வின்—அஃதாவது, மறதியின் ஸஜ்த'ா) என்று கூறப்படும். இனியொரு 'ஹதீ':தில், நபிகள் திலகம் நான்கு ரக்ஆ'த் தொழவேண்டிய ஓரமயத்தில் இரண்டுமட்டுமே தொழுது முடித்தார்கள் என்று நாம் படிக்கிறோம்; இஃது அவர்கள் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்ட பொழுது, அப் பெருமானார் விடப்பட்ட இரண்டு ரக்ஆ'த்தையும் முதலில் தொழுது முடித்தார்கள்; அப்பாலிரண்டு ஸஜ்த'ா செய்தார்கள் (பு'க'ா. 22:3). வேறொரு 'ஹதீ':தின் பிரகாரம் (பு'க'ா. 8:31;

31. அபூ' ஸஈ'த்' கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள்:—

"உங்களுள்ளே ஒருவருக்குத் தம்முடைய தொழுகை குறித்துச் சந்தேகம் ஜனித்துவிடுங்கால், இன்னம் அன்னவருக்கு எத்தனை ரக்ஆ'த்—மூன்று, அல்லது நான்கா?—தொழுது கொண்டதென்று தெரிந்து கொள்ள இயலாமற் போய்விடுங்கால், அவர் தமக்குள்ள சந்தேகத்தை விடுத்து, தாம்

---

22:2) நான்குக் கீடாக ஐந்து ரக்ஆ'த் தொழுது முடிக்கப்பட்ட பொழுது, அத்தொழுகை முடிந்ததன் பின்னால் இவ்விஷயம் அப்பெருமானார் கவனத்துக்குக் கொண்டுவரப்பட்டது; அது பொழுது அவர்கள் இரண்டு ஸஜ்த'ாக்களை மட்டுமே செய்துவிட்டுத் தஸ்லீம் கூறி முடித்தார்கள். எப்பொழுதுமே அப்பெருமானார் ஸஹ்வின் ஸஜ்த'ா செய்துவிட்டுத் தஸ்லீம் மட்டுமே கூறிக்கொண் டிருந்தார்கள் 22:4-இல் இமாம் பு'கா'ரீ :க(த்)தாத'ாவின் 'ஹதீ'ஃ:தான்றை எடுத்து வரைந்துளார்கள்; அதன்படி மறதிக்குப் பரிகாரமாக மற்றொருமுறை 'தஷஹ்ஹுத்' ஓதப்பட வில்லை யென்பது ஏற்படுகிறது. எனவே, வேறு 'தஷஹ்ஹுத்' ஓதப்படாமலே, இரு ஸஜ்த'ா மட்டும் செய்யப்பட்டு, உடனே ஸலாம் கொடுக்கப்படுவதுதான் நபி பெருமானது வழக்கமெனப் புலப்படாநின்றது. இமாம் ஒரு தவறுசெய்ய நேர்ந்துவிடுங்கால், பின்னே தொடர்ந்து தொழுபவர் அப்பிழை நிகழும் பொழுது, ஸுப்'ஹானல்லா(ஹ்) என்று கூறி, அந்த இமாமின் நினைவைத் திருப்பலாம்; இதன் தாத்பரியம் அல்லா(ஹ்)வைத் தவிர்த்து ஏனை யெல்லாமனிதரும் தவறிழைக்கக் கூடியவரே என்பதேயாம். இமாமானவர் தமது தவற்றினைத் திருத்திக் கொள்ளாது மேற்கொண்டும் தொடர்ந்து தொழுதுகொண்டே செல்வராயின், பின்னின்று அவரைத் தொடர்ந்து தொழுபவரெல்லாம் அவரைப் பின்பற்றியே அப்படியே தொழுது முடித்தல் வேண்டும்.

நிச்சயமாய்க் கொண்டுள்ள தன்மீது (இத்தனை ரக்ஆ'த் தெனத் தீர்மானித்து) மேலே செல்லட்டும்; அதன்பின்பு 'தஸ்லீம் சொல்லுமுன்னே இரண்டு ஸஜ்த'ா செய்துகொள்ளட்டும்.''—(முஸ்—மிஷ்.4:20)

32. 'ஹ'ப் ஸி'ப்'னு ஆ'ஸி'ம் கூறினர்: யான் இப்'னு உ'மரை வினவினேன்; அவர் சொன்னர்: 'நான் நபிகள் நாயகத்தின் (சல்அ'ம்) கூட்டரவில் இருந்திருக்கிறேன்; மேலும், பிரயாணத்திலிருக்கும் பொழுது, அவர்கள் ஸுன்னத் தொழுது கொண்டதை யான் கண்டதே யில்லை.''[31]—(பு'க'ா. 18 : 11)

33. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினர்: நபிகள் திலகம் (சல்அ'ம்) பத்தொன்பது நாட்கள்வரை (அயலூரில்) தங்கள் தொழுகைகளைச் சுருக்கித் தொழுது கொண்டு தங்கினர்கள்; ஆகையால், நாங்களும் பத்தொன்பது நாட்கள்மட்டும் பிரயாணத்தி லிருக்குங்கால், (எங்கள் தொழுகைகளைச்) சுருக்கிக் கொண்டோம்; அதற்கு மேலே (தங்கி)

---

31. நபிகள் திலகம் பிரயாணத்தி லிருந்தக்கால், வித்ருத் தொழுகையைத் தொழுது வந்துள்ளார்கள் (பு'க'ா. 14 : 6); 'தஹஜ்ஜுத்' தொழுகையும் தொழுதுகொண் டிருக்கிறார்கள் (பு'க'ா. 18 : 6). 'பஜ்ருடைய ஸுன்னத்தையும் அப்பெருமானர் எப்பொழுதுமே விட்டது கிடையாது (பு'க'ா. 19 : 22). வீட்டி லிருந்தாலும் வெளியிலே சென்றாலும், 'பஜ்ரின் ஸுன்னத் இரண்டு ரக்ஆ'த்தை ஒருபொழுதும் அவர்கள் விடுவது வழக்கமே யில்லை.

யிருந்துவிடுங்கால், (எங்கள் தொழுகைகளை) முழுமை யாய்த் தொழுதோம்.[32]—(பு'க'ா. 18 : 1)

32. இந்த 'ஹதீ':தின் பிரகாரம், ஒருவன் பிரயாணத்தி லிருக்குங்கால், ஓரிடத்தில் பத்தொன்பது தினங்கள்வரை தங்குவதா யிருப்பினும், தன் தொழுகைகளைப் பப்பாதியாகச் சுருக்கிக்கொள்ளலாம். யாதோரிடத்திலும் 19 என்பதே எல்லை யெனக் கூறப்படா திருக்குங்கால், அப்படிப்பட்ட பிரயாண காலங்களில் இன்னம் அதிகமான நாட்களுக்கும் அவ்வாறு சுருக்கித் தொழலாம் என்பது ஏற்படுகிறது. ஆனால், அம்மனிதன் ஓரிடத்திலே ஸ்திரவாசமாய்த் தங்கிவிட நேருங்கால், அவன் சுருக்காமலே முழுமையாய்த் தொழக்கடவன். சர்க்கூட் செல்லும் உத்தியோகஸ்தர்களும், அவ்வாறு சுற்றவேண்டுவது அவரது தினசரிக் கடமை யாய்விடுங்கால், அன்னவர் சுருக்கித் தொழுவது கூடாது; என்னெனின், அவர் செல்வது பிரயாண மாகமாட்டாது என்க; அவரது வேலையே அதுவாம்.

## அத்யாயம்—11

### ஜுமுஆ'த் தொழுகை

"ஏ ஈமான் கொண்டவர்காள்! வெள்ளிக்கிழமையன்று தொழுகைக்கென்று கூப்பிடப்படுங்கால், அப்பொழுது அல்லா(ஹ்)வின் ஞாபகத்தின் பக்கல் நீங்கள் விரைந்தேக் கடவீர்கள்; மேலும், (அதுபொழுதுங்கள்) தொழிலை விட்டுவிடக் கடவீர்கள்" (:குர். 62 : 9).

ஜுமுஆ' (ஜமஅ'—"அவன் ஒன்று திரட்டினான்," என்பதிலிருந்து தோன்றியுள்ளது) என்பது ஜனத்திரள் என்று அசலில் பொருள் கொள்கிறது; வாரத்தின் ஆறுவது நாளாகிய—(சுக்ர வாரம்) வெள்ளிக்கிழமை அப் பெயரைக் கொண்டு அழைக்கப் பட்டு வருகிறது. அன்று நடைபெறும் தொழுகையில் சேர்ந்து கொள்வான் வேண்டி அனைவரும் தத்தமக்குரிய தொழில் துறைகளை யெல்லாம் நிறுத்திவிட்டுச் செல்ல வேண்டுமென்று எல்லா மூமின்னவர்கட்கும் மேற்கூறிய ஆயத்தில் வெளிப் படையான கட்டளை பிறப்பிக்கப் பட்டுள்ளது. ஜுமுஆ'த் தொழுகை முஸ்லிம் ராஜ்யத்திலே, அல்லது பெரிய பட்டணங் களிலேதாம் நடாத்தப்பட வேண்டுமென்று ஒருசிலர் கூறிவருவ தற்கு ஒன்றும் :குர்ஆன் ஷரீ'பிலே ஆதாரம் காணப்படவில்லை. முஸ்லிம்கள் எங்கெங்கெல்லாம் இருக்கிறார்களோ, அங்கங் கெல்லாம் கூட்டங்கூடி ஜுமுஆ'த் தொழுகையை நடாத் திக் கொள்ளலா மென்றேதான் :குர்ஆன் ஷரீ'பு பொதுப் படையாய்க் கூறியுள்ளதாய்க் காணப்படா நின்றது. 'ஹதீ':து ஷரீ'பால் இவ்விஷயம் மிகத் துலக்கமாய் விளக்கமாய் விடுகிறது: நபிகள் திலகத்தின் ஆயுட்காலத்திலே ப'ஹ்ரைனிலுள்ள ஜுவா:தா என்னும் ஒரு கிராமத்திலே ஜுமுஆ' நடாத்தப்பட் டிருக்கிறது ('ஹதீ'. 1). ஒரு நிலத்தைப் பண் படுத்திக் கொண்டிருந்த ஒருசிறு கூட்டத்தினர் தாற்கா லிகமாய் "முகாம்" செய்துவந்த இடத்திலுங்கூட ஜுமுஆ'

நடாத்தப்பட் டுள்ளது ('ஹதீ'. 2). போதிய காரணமின்றி ஜுமுஆ'த் தொழுகையை விட்டுவிடுவது ஒருபெரும் பாபமென்றே கருதப்பட்டு வருகிறது ('ஹதீ'. 3). பெண் மணிகளுங் கூட ஜுமுஆ'த் தொழுகைக்குச் செல்லப் பிரயத்தனப்படல் வேண்டும் ('ஹதீ'. 4); யாத்திரையி லிருப்பவரும் அவ்வாறே முயற்சி யெடுத்தல் வேண்டும் ('ஹதீ'. 5); இது செய்வதில் பெரும் பிரயாசை—கடினப் பிரயாசை—எடுக்கவேண்டி யிருந்தால், அத் தொழுகையில் கலந்துகொள்வது அத்துணைக் கட்டாயச் சட்டமாகாது (புக'ா'. 11 : 13). ஜுமுஆ'த் தொழுகைக் குரிய நேரம் ளு'ஹ்ர்த் தொழுகையின் நேரமாகவே யிருந்துவருகிறது ('ஹதீ'. 6); அத் தொழுகைக்கு அதிகமான ஜனங்கள் வந்து குழுமுவதால், இருமுறை அ'தான் சொல்லும் வழக்கம் ஏற்பட்டு விட்டது ('ஹதீ'. 7). ஒவ்வொரு முஸ்லிமும் ஜுமுஆ'த் தொழு கைக்குச் செல்லுமுன்னே தந்தசுத்தி செய்து, குளித்து முழுகியும், கூடுமாயின் சுகந்தமும் அணிந்துகொள்வதும் அவசியமாகும் ('ஹதீ'. 8). உபதேசம்–(கு'த்ப'ா) உரைக்கப்படு முன்னே இரண்டு ரக்ஆ'த் ஸுன்னத் தொழவேண்டும் ('ஹதீ'. 9). ஜுமுஆ'த் தொழுகைக்கு முன்னே உபதேசப் பிரசங்கமொன்று அவசியம் நடைபெறல் வேண்டும்; இஃது அந்தத் தொழுகையுடனே சேர்ந்ததா யிருக்கிறது ('ஹதீ'. 10—13). ஜுமுஆ'வின் 'பர்ல்' இரண்டு ரக்ஆ'த்தா யிருக்கிறது ('ஹதீ'. 14). அவ்விரண்டிலும் குர்ஆன் ஸூராக்கள் இரைந்தே ஓதப்பட்டு வருகின்றன ('ஹதீ'. 15).

1. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதரது (சல்அ'ம்) பள்ளிவாசலில் (நடைபெற்ற) ஜுமுஆ'த் தொழுகைக்குப் பிறகு முதல் ஜுமுஆ'த் தொழுகை ப''ஹ்ரைனில் ஜுவா:தா என்னுமிடத்தில்[1] அ'ப்'து'ல் :கய்ஸின் பள்ளிவாசலில்தான் நடைபெற்றது.—(புக'ா.11:11)

1. ஜுவா:தா என்பது ப''ஹ்ரைன் பகுதியிலுள்ள ஒரு சிறு

2. யூனுஸ் கூறினர்: ருஜைய்:க் இப்'னு 'ஹ(க்)கய்ம் இப்'னு ஷிஹாபு'க்கு வரைந்தார்: 'உமது அபிப்பிராயம் யாது?—நான் ஜுமுஆ'த் தொழுகை நடாத்த வேண்டுமா?' மேலும், ருஜைய்:க் கென்பார் ஏதோவொரு நிலத்தை மேற்பார்வை யிடுகிறவரா யிருந்தார்; அதிலிவர் (மராமத்) வேலை செய்துகொண் டிருந்தார்; இன்னம், அன்னவரை யன்றி, ஒரு கூட்ட நீகிரோவர்களும் மற்றும் பலரும் (அங்கே) இருந்து வந்தார்கள். இன்னம், ருஜைய்:க் ஐலாவின் அதிபதியா யிருந்தார். ஆகையால், இப்'னு ஷிஹாப்' அவரை ஜுமுஆ'த் தொழுகை நடாத்தி வைக்குமாறு கட்டளையிட் டெழுதினர்; இஃதெனக்கு (நேரிலே) தெரியும்.[2]—(பு'க'ா. 11:11)

3. அபு'ல் ஜஃ'த்' கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள்:—

---

கிராமம்; இந்த 'ஹதீ':து எந்த அத்யாயத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறதோ, அந்த அத்யாயத்திற்கு இமாம் பு'க'ாரீ, "பட்டணங்களிலும் குக்கிராமங்களிலும் ஜுமுஆ'த் தொழுகை" என்று பெயரிட் டுள்ளார்கள்.

2 இந்த 'ஹதீ':தில் பிரஸ்தாபிக்கப்பட்டுள்ள—ஜுமுஆ'த் தொழுகை நடாத்தப்பட்ட இடம், ஒரு குக்கிராமங்கூட அன்று; ஒரு கழனிவெளியிலே சில ஆட்கள் நின்று வேலைபார்க்கிறார்கள்; அவர்கள் செய்துவந்த வேலையை மேற்பார்த்துவந்தவர் அவ்வேலையாட்களின் ஆத்மார்த்த முன்னேற்றத்திற்காக ஜுமுஆ'வின் உபதேசத்தையும், ஜமாஅ'த் தொழுகையையும் நடாத்திவைக்குமாறு கட்டளையிடப்பெறுகிறார். ருஜைய்:க் கென்பார் உ'மருப்'னு அ'ப்'து'ல் அ''ஜீ'ஜ் அவர்களின் கீழே ஐலாவின் கவர்னராக வேலை பார்த்துவந்தார்.

"எவனொருவன் மூன்று ஜு'மு ஆ'த் தொழுகைகளை, அவற்றினை இலேசாய் மதித்து, விட்டு விடுகின்றனோ, அவனது ஹிருதயத்தின்மீது அல்லா(ஹ்) முத்திரையிட்டு விடுகின்றான்."[3]—(அபூ'த'ா — மிஷ். 4 : 43)

4. இப்'னு உ'மர் கூறினார்: உ'மரின் ஒரு மனைவி வைகறை—(சுப்''ஹ்)த் தொழுகையையும் இரா (இ'ஷா)த் தொழுகையையும் பள்ளிவாசலில் வந்து ஜமாஅ'த்துடன் சேர்ந்துநின்று தொழுவது வழக்கமா யிருந்தது. 'நீர் ஏன் அப்படிச் செல்கிறீர்? இன்னம், இஃது உ'மருக்குப் பிரியமில்லாத செய்கை யென்பதையும், (இதில்) வெறுப்பே மிகவும் உடையா ரென்பதையும் நீர் அறிந்திருக்கின்றீரே,' என்று அன்னவருக்குச் சொல்லப்பட்டது. (இதற்கு அம் மாது) கூறினார்: 'என்னைத் தடைசெய்ய வொட்டாது அவரை—(உ'மரை) எது தடுத்துக் கொண்டிருக்கிறது?' (அதுகேட்டு, உ'மர்) அல்லா(ஹ்) வின் திருத்தூதர் (சல்அ'ம்) (கூறியுள்ள அடியிற்

---

3. ஏன் அவ்வாறு அல்லா(ஹ்) முத்திரையிட்டு விடுகின்றான்? எனின், அம்மனிதன், ஆத்மார்த்த ஆகாரமாய் விளங்கிவரும் அருமருந்தன்ன அரிய உபதேசங்களை அருந்த மறுத்து அலக்ஷியம் செய்துவிடுகின்றான் என்பதனாலேயாம். இதனால் விளங்கக்கிடப்பது யாது? ஜு'முஆ'வின் கு'த்ப'ாபிரசங்கம் கேட்பவர்களின் தாய்மொழியிலே யிருக்கவேண்டு மென்பதேதானாகும். தாய்மொழி யல்லாத அயல்மொழியில் கு'த்ப'ாவை ஓதிவருவதாயின், அதனைக் கேட்பவருள்ளம் எவ்வாறு பிரகாசமடைதல் கூடும்? அதனை—அன்னிய பாஷையி லுள்ள அர்த்தம் விளங்காத 'கடபடாம்' என்னும் அந்த கு'த்ப'ாவை—ச் செவிமடுக்காததால், எவ்வாறு அவரதுள்ளம் இருளடைந்து போய்விடக்கூடும்?

காணும்) வசனமே தம்மைத் தடுத்துக்கொண் டிருந்த தென்று கூறினர் :—

"அல்லா(ஹ்)வின் பள்ளிகளுக்கு விஜயம் செய் வதினின்று அல்லா(ஹ்)வின் அடியாள்களைத் தடை செய்யாதீர்கள்."[4] — (பு'க'ா. 11 : 12)

5. 'ஜுஹ்ரீயின் ஆதாரத்தைக் கொண்டு (இவ்வாறு) கூறப்படுகிறது :—

முஅ'த்'தின் வெள்ளிக் கிழமையன்று தொழு கைக்காகக் கூப்பீடு கூவுங்கால், யாத்திரையிலிருப் பவனொருவன் (அதனைச் செவிமடுத்தும் விட்டால், அதில்) சேர்ந்து (தொழுது) கொள்ள வேண்டுவது அன்னவன்மீது கடமையாய் விடுகிறது. — (பு'க'ா. 11 : 17)

---

4. ஸ்திரீரத்னங்கள் பெருநாள் தொழுகைகளுக்கு விஜயம் தருமாறு விழையப்பட்டு வந்தார்கள் (பு'க'ா. சுருக். அத். 12: 7); மேலும், முஸ்லிம் சமுதாயம் முன்னேறுதற்கு அம் மாதுசிரோ மணிகள் வெள்ளிக் கிழமை ஜுமுஆ'த் தொழுகைகளுக்கும் விஜயம் செய்ய வேண்டுவது அத்தியாவசிய மாகவே இருந்து வருகிறது. எனவே, ஜுமுஆ'வுக்கு ஆ'ஜிராக வேண்டுவது அந் நாரிமணிகட்கு முக்கியக் கடமையாக்கப்பட் டிராமற் போயினும், தங்கள் குடும்பக் காரியங்களுக்கு இடையூறில்லா முறையிலே அம் மாதரார் பொதுப்படையாக ஜுமுஆ'வுக்கு விஜயமளித்துப் பயன்பெற்றுப் போகலாம். யாம்பெற்ற நன்மை பெறுக இப் பெண்ணுலகம்! இந்த 'ஹதீ':தில் காணப்படும் பெருமானாரின் திருவசனங்கள் சாதாரண வேளைத் தொழுகை களையும் வெள்ளித் தொழுகைகளையும் உள்ளடக்கிக்கொண்டே யிருக்கின்றன வென்பது வெள்ளிடைமலையே யாம். மக்கா, மதீனா நகரங்களில் பெண்மணிகள் ஜுமுஆ'த் தொழுகைக்கு மஸ்ஜிது'க் குச் செல்கின்றனர்.

6. அனஸ் கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சூரியன் மையஞ் சரிந்த பொழுது ஜு‘முஆ’த் தொழுகையைத் துவக்குவது வழக்கம்.— (பு’க’ா. 11 : 15)

7. ஸாயிப்’ சொன்னார்: நபிகள் நாயகத்தின் (சல்அ’ம்) காலத்திலும், அபூ’ப’க்ரின், இன்னம் உ’மரின் காலத்திலும் வெள்ளியன்று முதல் அ‘தான் இமாம் மின்பர்மீது ஏறும் பொழுது(தான்) கூறப்பட்டது; ஆனால், உ’:துமான் (ஆட்சி) வந்துற்றபொழுது, ஜனங்களும் மிக அதிகமாய்ப் பெருகி விட்டபொழுது, ‘ஜவ்ராயில் மூன்றாவது (கூப்பீ டொன்று) சேர்த்துக் கூவப்பட்டது.[5] — (பு’க’ா. 11 : 21)

8. அபூ’ ஸஈ’த்’ கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) (பின்வருமாறு) கூறியதற்கு யான் சாக்ஷியம் கூறுகிறேன்:—

---

5. புதிதாய்ச் சேர்க்கப்பட்ட இந்த அ‘தான் — (பா’ங்கு) மூன்றாவ தென்று இங்குக் கூறப்படுகிறது; ஆனால், இதுதான் முதல் அ‘தா னாகும். இமாம் மின்பர்—(உபதேச மேடை)மீது ஏறியவுடன் கூறப்படுவது இரண்டாவது அ‘தான்; தொழுகைக்காகக் கூறப்படும் இ:காமந் மூன்றாவ தாகும். இந்த ‘ஹதீ’:து விளக்கியிருக்கு மாறே, இமாம் மின்பர்மீது ஏறுவதற்குச் சிறிது நேரம் முன்பே அந்த முதல்ப’ாங்கு சொல்லப்பட்டதன் நோக்கம், ஜு‘முஆ’த் தொழுகைக்கு முஸ்லிம்களெல்லாரும் ஆயத்தம் செய்து கொள்ள வேண்டும் என்று எச்சரிப்பது என்பதாயே யிருந்து வந்தது; எனவேதான், அம்முதல் அ‘தான் ‘ஜவ்ராயில்—மதீனாவின் சந்தைப்பேட்டையி லுள்ள ஒரு பொது ஸ்தலத்திலே — நின்று கூவப்பட்டது.

"பருவவயதை எய்திவிட்ட ஒவ்வொருவன் மீதும், வெள்ளிக்கிழமையில் அன்னவன் குளித்துக் கொள்ள வேண்டுவதும், அன்னுன் பற்கொம்பி(ட்டுத் தந்தசுத்தி பண்ணிவி)ட வேண்டுவதும், அவனுக்குக் கிட்டக் கூடுமாயின் சுகந்தமணிய வேண்டுவதும் அவசியமாய்—(வாஜிப'ாய்) விட்டன."[6] — (பு'க'ா. 11 : 3)

9. ஜாபி'ர் கூறினர் : நபிகள் திலகம் (சல்அ'ம்) வெள்ளிக்கிழமையில் ஜனங்களுக்கு உபதேசம் புரிந்துகொண் டிருந்த பொழுது, ஒரு மனிதன் வந்து சேர்ந்தான்; ஆகவே, (அவனைப் பார்த்து) அவர்கள், "ஏ இன்ன மனிதனே! நீ (ஸுன்னத்) தொழுது கொண்டனையா?" என்று வினவினர்கள்; (இதற்கு) அவன் இல்லை யென்று விடை யளித்தான்; (அப்பொழுது நம் பெருமானர்) "நீ எழுந்திருந்து இரண்டு ரக்ஆ'த் தொழுது

---

6. பட்டணத்துப் பொதுமக்களெல்லாம் ஒன்றுசேரக்கூடிய நாளா யிருப்பதால், அவரவரும் குளித்து முழுகி, வாசனைத் திரவியமும் அணிவது அவசியமாகின்றது; பற்களில் ஊத்தையில்லாது பளிச்சென் றிருப்பதும், பார்ப்பதற்கு அழகாகவும் பிணிவாய்க்கு இடந்தராத தாகவும் இருந்துவருவது கண்கூடு. பற்களின் அசுத்தமே பற்பல வியாதிகட்கெல்லாம் மூலகாரணமாயிருக்கிறது. வெள்ளியோடு வெள்ளிதான் எல்லாரும் குளிக்க வேண்டுமென்றும், இடையில் குளிக்கத் தேவையில்லை யென்றும் இதனுல் எவரும் எண்ணத் தேவையில்லை. வாசனை யணிவதும் கூட்டத்தில் வேர்வை நாற்றம் போன்ற துர்க்கந்தம் வீசாதிருப்பதற்கேயாம்.

கொள்,” என்று நவின் றருளினார்கள்.[7] — (பு’க’ா. 11 : 32)

10. அபூ’ ஸஈ’து’ல் கு’த்’ரீ கூறியுள்ளார்: நபிகள் நாயகம் (சல்அ’ம்) ஒருநாள் உபதேச மேடைமீது ஏறினார்கள்; நாங்கள் (எல்லாரும்) அவர்களைச் சூழ்ந்து அமர்ந்து கொண்டோம்.[8] — (பு’க’ா. 11 : 27)

11. இப்’னு உ’மர் கூறினார்: நபிகணாதர் (சல்அ’ம்) நின்றுகொண்டே (வெள்ளியன்று) உபதேசம் புரிவது வழக்கம்; அப்பா லவர்கள் அமருவார்கள்; அப்பாலும், நீங்களிப்பொழுது செய்வதே போல, எழுந்து நிற்பார்கள்.[9] — (பு’க’ா. 11 : 26)

---

7. ஜு’முஆ’த் தொழுகை, அஃதாவது, உபதேசம்—(கு’த்ப’ா) ஆரம்பிக்குமுன்னே, இரண்டு ரக்ஆ’த் ஸுன்னத் தொழவேண்டியதா யிருக்கிறது; இவ்வாறே ஜு’முஆ’த் தொழுகைக்குப் பின்னேயும், ளு’ஹ்ரேபோல் இரண்டு ரக்ஆ’த் ஸுன்னத் தொழ வேண்டும்.

8. இமாம் உபதேசம்புரிய மின்பர்மீது ஏறி உட்காந்து கொள்வார்; அதுபொழுது ஓர் அ‘தான் கூறப்படும்; அப்பால் அவரெழுந்து நின்று நல்லுபதேசம் புரிவார் (‘ஹதீ’. 11); ஜனங்களெல்லாரும் அதனை உருக்கத்துடனே உற்றுக் கேட்க,—அர்த்தம் விளங்காத அரபு பாஷையில் ராக ஆலாபனையுடன் ஓதப்படும் அன்னியமொழி கு’த்ப’ாவைச் செவியேற்று உறங்குவதற்காகவன்று—மௌனமாய்ச் சிரந்தாழ்த்தியவர்களாய் அமர்ந்திருப்பார்கள் (‘ஹதீ’. 12).

9. ஆகவே, ஜு’முஆ’வின் உபதேசம்—(கு’த்ப’ா) இருபகுதிகளாகப் பகுக்கப்பட்டிருக்கிறது; இரண்டுக்கு மிடையிலே இமாம் சிறிதே அமர்ந்து சிரமபரிகாரம் செய்துகொள்வார். நபிபெருமானார் பொதுவாகவே இரண்டு கு’த்ப’ாவிலும் ஏதேனுமொரு

12. நபிகள் நாயகரது (சல்அ'ம்) ஆதாரத்தைக்கொண்டு ஸல்மான் கூறியுள்ளார் :—

"இமாம் (உபதேசம்) புரியும் பொழுது, ஒவ்வொருவரும் மௌனமாயிரு(ந்து செவிதாழ்)த்தல் வேண்டும்."— (பு'க'ா. 11 : 35)

13. அனஸ் கூறினர்: நபிபெருமானர் (சல் அ'ம்) வெள்ளிக்கிழமை யுபதேசம் புரிந்து கொண்டிருந்த பொழுது, ஒரு மனிதன் எழுந்து நின்று சொன்னன் :.'ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! குதிரைகள் மடிந்துவிட்டன; வெள்ளாடுகள் மடிந்து விட்டன; தாங்கள் அல்லா(ஹ்)வின்பால், அவன் எங்களுக்கு மழையை அனுப்பித்தர வேண்டுமென்று பிரார்த்தனே புரியுங்கள்." ஆகவே, அப்பெருமானர்

---

குர்ஆன் ஆயத்தை எடுத்துக்கொண்டு, குழுமி யிருப்பவர்கட்கு வியாக்கியானம்செய்து, விளக்கியுபதேசம் புரிவார்கள்; இத்தகைய ஜுமுஆ'வின் உபதேச நோக்கம், பொது ஜனங்களுக்கு இவ்வுலக, அவ்வுலகச் சார்பாயுள்ள பற்பல விஷயங்கள்பற்றியும் உண்மையான அறிவை யூட்டி ஒழுங்கான பாதையினூடே நடாத்திவைப்பதா யிருந்துவருகிறது; எனவே, எந்த மௌலானவாலோ, எந்தக் காலத்திலோ, எந்த மக்களுக்காகவோ, எந்த இடத்திலோ, எந்த நோக்கத்துடனே வரைந்து அச்சிடப்பட்டுள்ள ஒரே மாதிரியான (உறக்கம் வருத்தும்) கு'த்ப'ாவை அரபு ஒருசிறிது மறியமாட்டாத மக்களின் முன்னே ஆண்டு முழுவதும் அப்படியப்படியே கிளிப்பிள்ளைப். பாடத்தைப் போலே, செவிடன்காதில் சங்கூதிய கதையை நிகர்த்து, திருப்பித்திருப்பி ஓதியோதி வெள்ளிக் கூட்டங்களை வீணுக்குவதால், யாது நன்மை இஸ்லாத்துக்கு, இல்லை, இக்கால முஸ்லிம்களுக்கு விளைந்திடுதல் கூடும்? ஐயகோ இன்னமுமா இவ்வுறக்கம் ?

தங்கள் கரங்களை யுயர்த்திப் பிரார்த்தனை புரிந்தார்கள்.— (பு’க’ா. 11 : 34)

14. அபூ’ ஹுரய்ரா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னார்கள் :—

“ ஜுமுஆ’த் தொழுகையில் ஒரு ரக்அ’த்தில் (மட்டும்) வந்து சேருகிறவன் அதனுடனே மற்றொன்றைச் சேர்த்து (முடிவில் தொழுது) விடக் கடவன் ; இன்னம், இரண்டு ரக்ஆ’த்தையும் தவற விட்டு விடுகிறவனோ, நான்கு (ரக்ஆ’த்) தொழுது முடிக்க வேண்டும்.” அல்லது அவர்கள், “ ளுஹ்ர் ” என்று சொன்னார்கள்.[10]— (தா’ர்—மிஷ். 4 : 45)

15. நபிகள் திலகத்தின் (சல்அ’ம்) ஆதாரத்தைக் கொண்டு இப்’னு அ’ப்’ப’ாஸ் கூறியுள்ளார் : (வெள்ளிக்கிழமை) வைகறைத் தொழுகையில் அப்பெருமானார் அஸ்ஸஜ்த’ாவும் (அத். 32) ஹல் அ(த்)தா அ’லல் இன்ஸானியும் (அத். 76), ஜுமுஆ’த் தொழுகையில் அல்ஜுமுஆ’வும் (அத். 62) அல்முனா’பி(க்):கூனும் (அத். 63) ஓதுவது வழக்கமா யிருந்துவந்தது.[11] —(மஸ். I, 340)



10. எனவே, ஜுமுஆ’த் தொழுகை இரண்டு ரக்ஆ’த்—(‘பர்ல்’) என்பது இனிது விளங்கலாயிற்று ; இரண்டு ரக்ஆ’த்தையும் தவற விட்டுவிடுகிற மனிதன் அப்பால் ளுஹ்ரைத்தான் தொழுது முடித்தல் வேண்டும்.

11. இதனால் விளக்கமாவது யாதெனின், ஜுமுஆ’வின் இரு ரக்ஆ’த்திலும் :குர்ஆன் ஆயாத்கள் உரத்தகுரலிலே ஓதப்பட்டு வந்தன என்பதுதானாகும்.

# அத்யாயம் 12

## பெருநாள் தொழுகை

1. "அல்லா(ஹ்)வைச் சார்ந்து கொள்வது அவற்றின் இறைச்சியும் அன்று; இரத்தமும் அன்று; ஆனால், உங்களினின்றுள்ள சன்மார்க்க சீலமே அவனுக்குப் பிரீதியாயிருக்கிறது" (:குர். 22: 37).

2. "அவை கீழே சாய்ந்து வீழ்ந்துவிடுங்கால், அவற்றிலிருந்து நீங்கள் புசியுங்கள்; மேலும், திருப்தியடைந்துள்ள ஏழை மனிதனையும் யாசகனையும் புசிப்பியுங்கள்" (22: 36).

ஈ'த்' என்னுஞ் சொல் (ஆ'த'— "அவன், அல்லது அது மீண்டும் வந்தது," என்பதிலிருந்து தோன்றியிருப்பது) அசலில், "சுகமும் துக்கமும் திரும்பி வருங்காலம்" என்று பொருள்கொள்கின்றது; எனவே, இப்பால் "பெருநாள், அல்லது மீட்டும்மீட்டும் வரும் பெருநாள்" என்று பொருள் கொள்ளத் தலைப்பட்டுவிட்டது. :குர்ஆன் ஷரீ'பில், 5 : 114-இல் ஈ'த்' என்னும் பதம் ஒருமுறை வழங்கப்பட் டிருக்கிறது; அங்கே இயேசுவானவர் தம்முடைய சிஷ்யர்களுக்குத் தினசரி அப்பம் தேவையென்று பிரார்த்தனை புரிகின்றார்; அவ்வாயத்திலே ஈ'தெ'ன்பது, "மீட்டு மீட்டுந் திரும்பிவரும் சுகபோகம்" என்னுங் கருத்திலே வழங்கப்பட்டுள்ளது. முஸ்லிம்களுக்குள்ளே ஆண்டொன்றுக்கு இரண்டு பெருநாட்கள் கொண்டாடப்படுகின்றன ('ஹதீ'.3); ஈ'து'ல் அ'ல்''ஹா என்னப்படும் :குர்ப'ானீப் பெருநாள் ஒன்று; (லு''ஹா என்பது, "முற்பகல்" என்று பொருள் கொள்கிறது;—ல''ஹ்'ஹா என்பது, "லு''ஹா நேரத்தில் அவனொரு பிராணியைப் பலிகொடுத்தான்," என்று கருத்துக்கொள்கிறது). ஈ'து'ல் 'பித்ர் என்னப்படும் நோன்பை முடிக்கும் பெருநாள் மற்றொன்று; ['ப(த்)தர என்பது, "அவன் ஒரு வஸ்துவைப் பிளந்தான்," என்று கருத்துக் கொள்கிறது; அ'ப்தர என்பது, "அவன் நோன்பைத் திறந்தான்," என்று

பொருள் கொள்கிறது.] :குர்ஆன்ஷரீ‘பில் ஈ’து’ல் அல்’‘ஹா சம்பந்தமா யுள்ள பிரஸ்தாபம் ஓரிடத்தில் காணப்படுகிறது ; அப்பெரு நாளைக்குரிய முக்கிய அம்சமா யிருந்துவரும் பலியின் சார்பாயுள்ள பிரஸ்தாபத்துடன் கூடச் சேர்த்து அது காணப்படாநின்றது (தலை. ஆயாத் 1, 2).

அவ்விரு பெருநாட்களின் தேதிகளும் வானத்தில் பிறை பிறக்கும் சந்தர்ப்பத்தினையே சார்ந்து நிற்கின்றமையால், அது குறித்துப் பிறக்கும் சந்தேகங்களை நிவர்த்திப்பதற்குச் சிலவிதிகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன (‘ஹதீ’. 1,2). அந்தஈ’த்’கள் பஞ்சேந்திரிய சுகபோகங்களின் சந்தோஷத்தை யளிக்கக்கூடிய வைபவங்களைக் கொண்டு ஆரம்பிக்கப்படுவ தில்லை ; ஆனால், ‘ ஆண்டவனுக்குச் சிரவணக்கம் புரிவதைக் கொண்டே துவக்கமாகின்றன ; அதனு லேற்படும் ஆத்மஞான எழுச்சியானது, பஞ்சேந்திரிய நுகர்ச்சி களுக்கு ஒரு தடை முறையை ஏற்படுத்துவதேபோ லிருந்து வருகிறது (‘ஹதீ’.3). ஈ’த’ன்று இரண்டுரக்ஆ’த் தொழுது முடிந்த பின்பு இமாம் பெருநாளுபதேசம்—(கு’த்ப’ா) புரிய மின்பர்மீது ஏறுகின்றூர் ; அவ் வுபதேசத்தில் முஸ்லிம் சமூகம் முன்னேறி நலன்பெறுதற் குரிய விஷயங்களை யெடுத்துப் போதிப்பார் (‘ஹதீ’. 3, 4). பெருநாள் தொழுகைக்கு அ’தானுமில்லை; இ:காமத்து மில்லை ; தொழும்பொழுது “ அல்லாஹு அக்ப’ர் ” என்னும் ‘தக்பீ’ர் பலமுறை வழக்கத்திற் கதிகமாய்ச் சேர்த்துக் கூறப்படுகிறது (‘ஹதீ’. 5,6). ஸ்திரீகளும் சிறுவர் சிறுமிகளும் ஈ’த்’தொழுகைக்கு விஜயம்செய்து, அவ்வுபதேசத்தைச் செவியேற்றுச் செல்லுமாறு ஏவப்படுகிறூர்கள் (‘ஹதீ’.7,8). பட்டணமா யிருப்பினும், பட்டிக் காடா யிருப்பினும், அல்லது ஒரு தனித்த இடமா யிருப்பினும், முஸ்லிம்கள் கூட்டமாயுள்ள இடங்களிலெல்லாம் ஈ’த்’தொழுகை நடாத்தப்படுவது அத்தியாவசியமாம் (‘ஹதீ’.8). ஈ’து’ல்‘பித்ரில் தொழப் போகுமுன்னே ஏதேனும் ஆகாரம் செய்துகொண்டு செல்வது அவசியமாம் (‘ஹதீ’.9). பெருநாளன்று குளித்துக் கொள்வதும் அவசியமேயாம் (‘ஹதீ’. 10). ஈ’தி’ன்தொழுகை முற்பகலிலே நடாத்தப்பெறுதல் வேண்டும் (‘ஹதீ’.11). நபிகள் திலகம் தொழுத இடத்திலிருந்து, ஆங்குச் சென்ற மார்க்கமா

யன்றி, வேறொரு வழியாய்த் திரும்பிவருவது பொது வழக்கம் ('ஹதீ'.12). தொழுது முடியுமட்டும் :குர்ப'ானீயைக் கொடுத்து விடுவது கூடாது ('ஹதீ.' 13). வசதியுள்ள ஒவ்வொருவரும் :குர்ப'ானீ கொடுப்பது அவசியமாம் ('ஹதீ.' 14). 'ஹதீ'.15,16-இல் பலிக்குரிய பிராணிகளின் விவரங்கள் சில கூறப்பட்டுள்ளன. ஒரு வெள்ளாடு, அல்லது ஒரு செம்மறி ஒரு மனிதனுக்கு, அல்லது ஒருவீட்டுக்குப் போதும்; ஒரு மாட்டில், அல்லது ஒரொட்டகத்தில் ஏழுபேர் கூட்டாய்ச் சேர்ந்துகொள்ளலாம் ('ஹதீ'.17). பலிக்குரிய பிராணிகள் ஈ'த்ன்றோ, பிறகு இரண்டு தினங்களிலோ :குர்ப'ானீ கொடுக்கப்படலாம் ('ஹதீ'.18). :குர்ப'ானீ இறைச்சியினின்று ஒரு பகுதி ஏழைகளுக்கு வினியோகிக்கப்படுகிறது; அதன் தோற் கிரயம் தர்மகாரியங்களில் செலவிடப்படல்வேண்டும் (பு'க'ா.சுருக். அத். 18: 25). ஈ'துல்'பித்ருடனும் ஒருவகைத் தர்மம் சேர்க்கப் பட்டுள்ளது; இது 'பித்ரா தர்மமென்று அழைக்கப்பட்டு வரு கிறது; இதுவும் ஒரு மத்திய ஸ்தலத்தில் வசூலிக்கப்பட்டு, அப்பால் வினியோகிக்கப்படல் வேண்டும் ('ஹதீ'. 19, 20). ஈ'த்' வெள்ளிக்கிழமையில் வந்துவிடுங்கால், ஜுமுஆ'த் தொழுகை இஷ்டத்தைப் பொறுத்ததாய்விடுகிறது ('ஹதீ'.21). ஈ'த்ன்று ஒரு சிறிது பாட்டும் ஆட்டமும் (விளையாட்டும்) அனுமதியளிக்கப்பட் டுள்ளன ('ஹதீ'.22).

1. இப்'னு உ'மர் கூறியுள்ளார்: அல்லா(ஹ்) வின் திருத்தூதர் (சல்அ'ம்) ரமல'ானைக் குறிப் பிட்டு, அப்பாற் சொன்னார்கள் :—

"நீங்கள் பிறையைக் காண்கிறமட்டில் நோன் பைப் பிடியாதீர்கள்; மேலும், (மீட்டும்) அதனை நீங்கள் காண்கிறமட்டிலே நோன்பு நோற்பதை நிறுத்தாதீர்கள்; இன்னம், (மேகம் முதலியவற்றால்) அஃது உங்களுக்கு மறைக்கப்பட் டிருந்தால், அப் பாலதனை அளந்து மதிப்பிட்டுக்கொள்ளக் கடவீர் கள்."—(பு'க'ா. 30 : 11)

2. இப்’னு உ’மர் கூறியுள்ளார்: அல்லா(ஹ்) வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னார்கள்:—

“அம் மாதம் சில சமயங்களில் இருபத் தொன்பது இரவுகளை யுடையதா யிருக்கும்; ஆதலால், நீங்கள் (பிறையைப்) பார்க்கிற மட்டில் நோன்பைப் பிடியாதீர்கள்; இன்னம், (மேகம் முதலியவற்றால்) அஃது உங்களுக்கு மறைக்கப்பட் டிருந்தால், அப்பால் முப்பதென்னும் எண்ணைப் பூர்த்தி செய்யக் கடவீர்கள்.”[1]— (பு’க’ா. 30: 11)

---

1. ஒரு பிறைக்கும் மறு பிறைக்கும் இடையிலே சில மாதங்களில் 29 நாட்களும், சில மாதங்களில் 30 நாட்களும் வருவது வழக்கம். மேகம், மூடுபனி போன்றவைகளால் பிறை தெரியக் கூடாமற் போய்விடின், அதனை ஊர்ஜிதம் செய்து கொள்ள இருவழிகள் கூறப்பட் டுள்ளன: ஒன்று, முப்பது நாட்களை எண்ணி முடிக்கலாம் (‘ஹதீ’. 2); இன்றேல் சந்திரனது ஓட்டத்தின் கணக்கைக்கொண்டு பிறையை நிச்சயம் செய்யலாம் (‘ஹதீ’. 1). இனியொரு ‘ஹதீ’:தின் பிரகாரம் (பு’க’ா. 30 : 13) அக்கால அரபிகள் சந்திரனது ஓட்டங் குறித்துள்ள கணக்கை வைத்துக்கொண் டிருப்பது வழக்கமன் றாதலின், அவர்களுக்கு, சென்றுபோன 30 நாளை எண்ணி முடித்துப் பிறகு அடுத்த பிறையைத் தீர்மானம் செய்வதே எளிய காரியமா யிருந்துவந்த தென்று நாம் அறிகிறோம். ஆகையால், சந்திரனது ஓட்டங் குறித்துள்ள வானக் கணக்கை ஒழுங்காக வைத்திருப்பவர்கள் அக் கணக்குப்படி பிறையைத் தீர்மானிப்பது தவறன்றென்பது ஈண்டுச் செவ்வனே அறியக் கிடக்கின்றது. எனவே, இச் சரியான ககோள சாஸ்திரக் கணக்குப்படி சந்திரனைக் கணிப்பதா யிருப்பின், ஒரு நாட்டிலுள்ளா ரனைவரும் நோன்புப்பிறை, பெரு நாட் பிறை ஆதியவற்றிலே ஒரே மாதிரியாக ஒரே தினத்தில் அனுஷ்டித்து வருதல் சாத்தியமா யிருக்கும். எனினும், இக் காலத்தில் “வயர்லெஸ்”, “ரேடியோ” ஆகிய சாதனங்களின்

3. அபூ' ஸஈ'த்' கூறினர்: நபிகள் திலகம் (சல்அ'ம்) 'பித்ருடைய தினத்திலும் அல்''ஹாவுடைய தினத்திலும் முசல்லாவை நோக்கிச் செல்வது வழக்கம்; ஆகையால், அவர்கள் முதலில் செய்யுங் காரியம் தொழுகையை நடாத்துவதாயிருக்கும்; அப்பா லவர்கள் திரும்பி, ஜனங்களை நோக்கி நிற்பார்கள்; (அந்த) ஜனங்களோ, தங்கள் வரிசைகளில் அமர்ந் திருப்பார்கள்; இன்னம், அன்னவர்களுக்கு (நம்பெருமானர்) நல்லறிவுறுத்துவார்கள்; அவர்களுக்கு ஏவல்களையும் கட்டளைகளையும் விதிப்பார்கள்; அப்பாலவர்கள் ஒரு படையைக் கிளப்ப நாடினல், அதற்கு வேண்டிய உத்தரவுகளை விடுப்பார்கள்; அல்லது (இன்னம்) ஏதொன்றையும் கட்டளையிட நாடுவார்க ளாயின், அதனை (அவ்வண்ணமே) கட்டளையிடுவார்கள்; பிறகு அவர்கள் திரும்பிவிடுவார்கள்.[2]—(பு'க'ா. 13 : 6)

---

உதவியால் அநேகமா யெல்லாரும் ஓரே நாளில் பிறையை ஊர்ஜிதம் செய்துகொள்ளப் பேரிதும் உதவி யிருந்துவருகிறதென்னலாம்.

2. முசல்லா—(தொழுந்தலம்) என்பது இவ்விடத்தில் ஈ'த்' தொழுகை நடாத்தப்பட்ட இடத்தினையே—(ஈ'த்'கா) சுட்டிக் காட்டுகிறது. ஈ'து'டைய நாட்களில் (ஜுமுஆ'வைப் போலன்றி) முதலில் தொழுகையும் பின்னரேதான் கு'த்ப'ாவும் நடாத்தப்படும். அவ்வரிய உபதேசங்களில் பொதுப்படையான புத்திமதிகள் போதிக்கப் பட்டதுடன், முஸ்லிம் சமுதாயப் பொது நன்மைகளுக்கு வேண்டிய எல்லா விஷயங்களும் கவனிக்கப்பட்டே வந்தன. இதனை இக்கால கு'த்ப'ா பிரசங்கிகளெல்லாம் கவனிக்க மாட்டார்களா?

4. இப்’னு அ’ப்’ப’ாஸ் கூறியுள்ளார்: நபிகள் நாயகம் (சல்அ’ம்) ‘பித்ருடைய நாளில் இரண்டு ரக்ஆ’த் தொழுதார்கள்; இன்னம், அதற்கு முன்னே (வேறு) ஒரு தொழுகையும் தொழவில்லை; அதற்குப் பின்னேயும் (தொழ) இல்லை. அப்பா லவர்கள் பெண்மணிகளிடம் வந்தார்கள்; அவர் களுடனே பி’லாலும் இருந்தார்; இன்னம், அன்ன வர்களைத் தர்மம் கொடுக்க வேண்டுமென்று ஏவி னார்கள். ஆகவே, அவர்கள் (தங்கள் ஆபரணங் களைக் கழற்றி) எறிந்தார்கள்;—ஒரு பெண்மணி தன்னுடைய காதாபரணத்தையும் கழுத்தாரத்தை யும் கழற்றிக் கொடுத்தாள்.[3]— (பு’க’ா. 13 : 8)

5. ஜாபி’ரி’ப்னு ஸமுரா கூறினர்: அ‘தானும் இ:காமத்தும் இல்லாது, ஒரு முறை அல்லது இரு முறையல்ல, நான் நபிபெருமானுடன் (சல்அ’ம்) இரண்டு ஈ’த்’களின் தொழுகைகளையும் (பலமுறை) தொழுதுகொண்ட துண்டு.— (முஸ்—மிஷ். 4 : 47)

6. க:தீர் தம்முடைய பாட்டனரின் ஆதா ரத்தைக் கொண்டு கூறியுள்ளார்: நபிகளுதர் (சல்அ’ம்) இரண்டு ஈ’த்’தொழுகைகளிலும், முந்திய (ரக்’அத்)தில் (ஸூரா ‘பாத்தி‘ஹா) ஓது முன்னே

---

3. படைகளைக் கிளப்ப அவசியம் நேருமாயின், கு’த்ப’ா பிரசங்கம் அதற்கேற்ற தருணமா யுபயோகிக்கப்பட்டு வந்தது கண்கூடு. ஆண்கள் சேனையில் சேர்வார்கள்; பெண்மணிகள் செலவுக்குப் பண உதவி புரியுமாறு வேண்டப்படுவார்கள். தர்ம மென்பது நபிபெருமானர் காலத்திலே ஏழைகளுக்கு உதவிபுரி வதற்கு மட்டுமல்லாமல், முஸ்லிம் சமூகத் தற்காப்பிற்காகவும் பெரிதும் செலவழிக்கப்பட்டே வந்தது.

ஏழு முறையும், இரண்டாவ(து ரக்அ'த்)தில் ஓதத் துவக்கு முன்னே ஐந்து முறையும் 'தக்பீ'ர் கூறி ஞர்கள்.[4]— ('திர்மி—மிஷ். 4 : 47)

7. உம்மு அ'(த்)'திய்யா கூறினர்: கன்னிப் பெண்ணைக்கூடத் தனது திரையை விட்டு வெளி யேறச் செய்யுமாறும், மாதவிடாயிலிருக்கு மாதர் களைக்கூட வெளிவரச் செய்யவேண்டுமாறும், நாங் கள்—(பெண்மணிகள்) ஈ'தி'ன் தினத்திலே புறப் பட்டு வந்து சேருமாறு ஏவப்பெற்றோம்; மேலு மவர்கள்—(அப் பெண்மணிகள்) ஆண்களுக்குப் பின்னே இருந்தார்கள்; இன்னம், அன்னவர்கள் அவர்களுடைய—(ஆண்களின்) 'தக்பீ'ருடனே 'தக்பீ'ர் சொன்னார்கள்; இன்னம், அந்நாளின் ஆசீர்வாதங்கள் மீதும், அதன் பரிசுத்தத்தின் மீதும் ஆதரவு வைத்தவர்களாய், அவர்களுடைய— (ஆடவர்களுடைய) பிரார்த்தனைகளுடனே பிரார்த் தனையும் புரிந்தார்கள்.[5]— (பு'க'ா. 13 : 12)

---

4. இனியொரு 'ஹதீ':தின் பிரகாரம் (அபூ'த'ா—மிஷ். 4 : 47) நான்கு 'தக்பீ'ர்களே கூறப்பட்டனவென்று அறியக்கிடக்கின்றது.

5. கன்னி யாந்தப்புரத்துச் சிறுசிறு கன்னிகைக ளுட்பட எல்லாப் பெண்மணிகளும் ஈ'த்'காவுக்கு வந்து சேரவேண்டு மென்று வலியுறுத்தப்பட்டார்கள்; மாதவிடாயிலுள்ள ஸ்திரீகள் தொழுகையைத் தவிர்த்து மற்றெல்லா வைபவங்களிலும் அதுகாலைக் கலந்துகொண்டார்க ளென்று வேறொரு 'ஹதீ':து கூறுகின்றது (பு'க'ா. 13 : 15). இக்காலப் பெண்மணிகள் ஈ'த்' ஜு'முஆ' போன்ற காலங்களில் முசல்லாவிலே வந்து கலந்து கொள்வதா யிருப்பின், எத்துணைப் பெரிய சமுதாய நன்மை யுண்டாதல் கூடும்! இதுபொழுது முஸ்லிம் சமூகத்தில் ஒரு சரிபாதி அந்தகாரத்தில் தானே அலைய விடப்பட்டுக் கிடக்

8. அனஸ் ‘ஜாவியாவி லிருந்த தம்முடைய அடிமை இப்’னு அபீ’உ’த்ப’ாவுக்குக் கட்டளை யிட்டார்; ஆகவே, அவன் தன்னுடைய வீட்டு ஜனங்களையும், தன்னுடைய மைந்தர்களையும் ஒரு மிக்கத் திரட்டி, பட்டணவாசிகள் தொழுது கொள்வதே போலும் ‘தக்பீ’ர் முழக்குவதேபோலும் (பெருநாள்) தொழுகையைத் தொழவைத்தும் முடித்தான்.— (பு’கா. 13 : 25)

9. அனஸ் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத் தூதர் (சல்அ’ம்) சில பேரீச்சங்கனிகளைப் புசிக்காத மட்டில் ‘பி’த்ருடைய நாளின் காலையில் வெளியே சென்றது கிடையாது.[6]— (பு’க’ா. 13 : 4)

10. இப்’னு அ’ப்’ப’ாஸ் கூறினர்: அல்லா(ஹ்) வின் திருத்தூதர் (சல்அ’ம்) ‘பி’த்ருடைய நாளிலும், அல்’‘ஹாவுடைய நாளிலும் ஸ்னனம் செய்து கொள்வது வழக்கம்.— (இப்’னுமா. 5 : 166)

11. அ’ப்’து’ல்லா ஹிப்’னு பு’ஸ்ரின் ஆதா ரத்தைக் கொண்டு (இவ்வாறு) கூறப்படுகிறது:—

---

கின்றனர்! “தாயைப்போலப் பிள்ளை…” என்னுமாபோலத் தானே பிள்ளைகளும் இருப்பார்கள்! இல்லை, இருக்கிறார்கள்.

6. நோன்பைத் திறக்கும் பெருநா ளானமையின், அன்று காலையில் தொழுகைக்குச் செல்லுமுன்னே ஏதும் சிறிது புசிக்க வேண்டுவதா யிருக்கிறது. இனியொரு ‘ஹதீ’:தின் பிரகாரம் ஈ’து’ல் அல்’‘ஹாவன்று தொழுதுவிட்டு வந்தபிறகு ஆகாரம் புசிக்க வேண்டுமென்று தெரியக் கிடக்கின்றது; இஃதொருகால் குர்ப’ானீ இறைச்சியைத் தின்னவேண்டு மென்னும் நிபந்தனை யைப் பொறுத்திருக்கலாம்.

அவர் 'பித்ருடைய தினத்தில், அல்லது அல்''ஹாவுடைய தினத்தில் ஜனங்களுடனே புறப் பட்டுச் சென்றார்; இமாம் காலதாமதம் செய்தது குறித்துக் குறையுங் கூறி, மேலும் சொன்னார்: 'நாங்கள் இந்நேர மெல்லாம் தொழுது முடித்து விடுவது வழக்க மாயிற்றே; அதுதான் சூரியோ தயத்துக்குப் பின்னே தொழும் தொழுகையின் நேரம்.'[7] — (இப்'னுமா. 5 : 170)

12. ஜாபி'ர் கூறினர் : நபிகளுதர் (சல்அ'ம்) ஈ'தி'ன் தினத்தில் பாதையை மாற்றிக் கொள்வது வழக்கம்.[8] —(பு'க'ா. 13 : 24)

13. ப'ராய் கூறினர் : நபிகளுதர் (சல்அ'ம்) ஒரு (பெருநாள்) பிரசங்கம்—(உபதேசம்) புரிந்ததை யான் கேட்டேன் ; ஆகவே, அவர்கள் சொன் னர்கள் :—

" நமக்குரிய இந்நாளில் நாம் முதலில் செய்ய வேண்டிய காரியம், நாம் தொழுதுகொள்ள வேண் டும் ; அப்பால் திரும்பிச் சென்று (பலியையும்) :குர்ப'ானீ கொடுக்க வேண்டும் ; எனவே, எவனொரு வன் (இதனைச்) செய்கிறானோ, அவன் எமது

---

7. அஃதாவது, ஈ'த்' தொழுகையின் நேரம் காலை வேளை யாகாரத்துக்குரிய நேரமென்று இதனால் அறியக் கிடக்கின்றது.

8. அஃதாவது, நபிபெருமானார் முசல்லாவுக்கு ஒருவழியே சென்று மறுவழியே திருப்புவார்கள் ; என்னெனின், முஸ்லிம்கள் தங்கள் பெருநாட்களிலும் அல்லா(ஹ்)வை வணங்குவதையே தங் களுக்குரிய முக்கிய நோக்கமாய்க் கொண்டிருக்கிறார்க ளென்பதை அதிகமான ஜனங்களுக்கு நேருக்குநேரா யறிவித்தற்கேயாம் என்க.

ஸுன்னத்தின் வழியிலே ஒழுகி நிற்கிறான்.[9] —(பு‘க‘ா. 13 : 3)

14. அபூ‘ ஹுரய்ரா கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ‘ம்) சொன்னார்கள் :—

“எவ னொருவனுக்குப் போதிய வசதிகள் இருந்தும் (பிராணி யொன்றைப்) பலிகொடுக்கா திருக்கிறானோ, அவன் எமது தொழுந் தலத்தை—(முசல்லாவை) நெருங்காதிருக்கக் கடவன்.”—(மஸ். II, 321)

15. ஜாபி‘ர் கூறினார் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ‘ம்) சொன்னார்கள் :—

“(முஸின்னாவைப் பெற்றுக் கொள்ள) உங்களுக்குக் கஷ்டமா யிருந்தா லல்லது, முஸின்னாவை யன்றி வேறொன்றைக் :குர்ப‘ானீ கொடாதீர்கள் ; (அது கிடைக்காத) சந்தர்ப்பத்திலே ஆட்டிலிருந்து ஜ‘த‘ஆ‘வைப் பலிகொடுக்கக் கடவீர்கள்”[10]—(முஸ்மிஷ். 4 : 48)

---

9. இஃது ஈ‘து‘ல் அல்‘ஹா சம்பந்தமா யுள்ளது. :குர்ப‘ானீ கொடுப்பது தொழுகைக்குப் பின்னேதான் நடைபெற வேண்டுமென்று நபிகள் திலகம் நவின்றருளி யுள்ளார்கள் ; என்னெனின், தொழுகைக்கு முன்னே :குர்ப‘ானீ கொடுப்பதை வைத்துக்கொண்டால், ஆண்டவன் திருமுன்பினில் நமது ஆத்மார்த்த முன்னேற்றத்துக் காகச் சிரவணக்கம் புரியுமுன்னே சரீர சம்பந்தமாயுள்ள “தொப்பை”யை நிரப்பும் இச்சையிலே ஈடுபடுவதாகத்தானே அத்தொழில் இழிவில் வந்து முடிவுறும்?

10. முஸின்னா என்பது, “முற்றும் வளர்ந்தது” என்று பொருள் கொள்ளும். அது மூன்றும் பிராயத்தை எய்தியுள்ள காளை, செம்மறி, வெள்ளாடு என்பனவற்றைக் குறிக்கும். ஜ‘த‘ஆ‘ என்பது, ஆடு சம்பந்தப்பட்டமட்டில் ஒருவருஷத்துக் கிடா

16. ப'ரா யிப்'னு ஆ''ஜிப்' கூறியுள்ளார்: எப்படிப்பட்ட பிராணிகள் பலிகொடாது தவிர்க்கப் பட வேண்டுமென அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) வினவப்பட்டார்கள்; அவர்கள் தங்கள் கரத்தினைக்கொண்டு சுட்டிக்காட்டி, மேலும் சொன்ஞர்கள்:—

"நான்கு: தனது நொண்டித்தனம் வெளிப் படையாய்த் தெரியுமாறு அத்துணை யதிகம் நொண்டியா யிருப்பதும், தனது அங்கஹீனம் வெளிப்படையாய்த் தெரியுமாறு அத்துணைமட்டும் ஒற்றைக்கண் குருடாயிருப்பதும், தனது நோயுற்ற தன்மை வெளிப்படையாய்த் தெரியும்வரை அத் துணை யதிகம் நோய்வாய்ப்பட் டிருப்பதும், தன்னு டைய எலும்புகளில் மூளையென்பதே இல்லாமற் போய் விடுமாறு அத்துணைமட்டும் மெலிந்துபோ யிருப்பதும்."[11]— (அபூ'த'ா—மிஷ். 4 : 48)

17. ஜாபி'ர் கூறியுள்ளார்: நபிகள்நாயகம் (சல்அ'ம்) நவின் றருளினர்கள்:—

---

என்று பொருள்கொள்ளும்; சில சமயங்களில் 'ஓராண்டுக்குக் குறைந்த குட்டி' யென்றும் கருத்துக்கொள்ளும்; அல்லது எட்டு அல்லது ஒன்பது மாதக் குட்டி; அல்லது ஆறு அல்லது ஏழு மாதக் குட்டி; அல்லது வெள்ளாடாயின், ஓராண்டு சென்ற குட்டி; அல்லது காளைமாடானல், இரண்டு அல்லது மூன்று வருஷம் சென்றது என்றெல்லாம் தாத்பரியம் கொள்ளும்; ஒட்டகமாயின், ஐந்து வருஷத்துப் பிராணி என்பதாகும்.

11. இதனல் விளக்கமாவது யாதெனின்: பலிக்காகத் தேர்ந் தெடுக்கப்படும் பிராணி நல்ல திடசரீரமும் புஷ்டியு முள்ளதா யிருத்தல் வேண்டுமென்பதேதான்; வெளிப்படையான அங்கஹீனமொன்றும் இருப்பது கூடாதென்க.

" ஒரு மாடு (:குர்ப'ானீ கொடுக்கப்படுவது) ஏழு பேருக்கு(ப் போதும்); ஒட்டகமொன்றும் எழுவருக்கு(ப் போதும்)."[12]— (முஸ்—மிஷ். 4 : 48)

18. இப்'னு உ'மர் கூறினர்: அல்அல்''ஹா வென்பது அல்''ஹாவின் தினத்திற்கப்பால் இரண்டு நாட்கள்வரை நீடித் திருக்கிறது.[13]— (முஸ்—மிஷ். 4 : 48)

19. இப்'னு உ'மர் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) ஒரு சாஆ' பேரீச்சங்கனிகளை, அல்லது ஒரு சாஆ' வாற்கோதுமையை, 'பித்ரின் தர்மமாக, முஸ்லிம்களிலே ஓரோர் அடிமைமீதும் எதேச்சா புருஷன்மீதும், (ஒவ்வோர்) ஆண்பிள்ளை மீதும் பெண்பிள்ளைமீதும், (ஒவ்வொரு) சிறுபிள்ளை மீதும் பெரிய மனிதன்மீதும் ஏற்படுத்தினர்கள்; இன்னம், ஜனங்கள் (ஈ'த்') தொழுகைக்குப் புறப்பட்டுச் செல்லுமுன்னே அது கொடுபட்டுவிட

---

12. ஒரு வெள்ளாடு, அல்லது ஒரு செம்மறியாடு ஒரு மனிதனுக்கு, அல்லது ஒரு வீட்டுக்குப் போதுமென்பது பொது விதி. ஒரு மாடு, அல்லது ஓரொட்டகம் ஏழு பேருக்குப் பொதுவாயிருக்கலாம்; ஒட்டகமொன்று பத்துப் பேருக்குங்கூடப் போதுமென்பது மற்றொரு 'ஹதீ':தின் பிரகாரம் ஏற்படுகின்றது (·திர்மி—மிஷ். 4 : 48).

13. :குர்ப'ானீக்குரிய பிராணி ஈ'த்'ன்றே தொழுகைக்குப் பின்னல் பலியிடப்படலாம்; அல்லது அப்பாலும் இரண்டு தினங்கள்மட்டும் :குர்ப'ானீ கொடுக்கலாம்; அஃதாவது, இவை 'ஹஜ்ஜாஜ்கள் மினாவிலே தாமதித்திருக்கும் தினங்களாகும்;— (ஐயாமுன் [ன'ஹ்ர்).

வேண்டுமென்றும் கட்டளை பிறப்பித்தார்கள்.[14]— (பு'க'ா. 24 : 70)

20. அபூ' ஹுரய்ரா கூறினர்: அல்லா(ஹ்) வின் திருத்தூதர் (சல்அ'ம்) ரமல'ான் தர்மத்தை— ('பித்ராவை)ப் பாதுகாக்குமாறு என்னை ஏற்படுத்தி யிருந்தார்கள்.[15]— (பு'க'ா. 40 : 10)

---

14. இஸ்லாத்துக்குரிய இரண்டு ஈ'த்'களிலும் தொழுகை யைப்போலே தானமும் ஒரு முக்கிய அம்சமாகவே யிருந்து வருகிறது. ஈ'து'ல் அல்''ஹாவில் தானமென்பது :குர்ப'ானீ யிறைச்சியை ஏழை யெளியோர்கட்குப் பகிர்ந்து கொடுப்பதா யிருக்கிறது; அதன் தோலின் கிரயம் ஏதேனுமொரு தர்ம காரியத்துக்குச் செலவிடப்படுகிறது. ஈ'து'ல் 'பித்ரில் அந்தத் தானம் 'பித்ராவின் பெயரால் அவசியமாய்ச் செலவிடப்படுகிறது. இவற்றின் விவரங்க ளனைத்தையும் எமது இஸ்லாம் என்னும் நூலிலே விவரமாய்க் காணலாம். சாஉ' என்பது அரப்நாட்டில் தான்யமளக்கும் ஒரு முகத்தலளவையா யிருந்தது. இந்தியாவில் (தொலிக் கோதுமையாயின்) பட்டணம் படி ஒன்றரை, அல்லது (மணிக் கோதுமையாயின்) முக்காற்படி வீதம் ஒவ்வொருவரும் 'பித்ராக் கொடுத்தல் வேண்டும்; அல்லது அதன் கிரயத்தை யேனும் கொடுத்துவிடல் வேண்டும்.

15. நபிகள்நாயகத்தின் காலத்திலே 'பித்ராவும் ஒரு மத்திப ஸ்தலத்திலே வசூலித்துச் சேர்க்கப்பட்டுப் பிறகுதான் வினியோ கிக்கப்பட்டு வந்தது. இக்காலத்தில் அவரவரும் தத்தம் சுயேச்சை யைப்போலே இதனைச் செலவிடுவது நபிபெருமானது ஸுன்னத் துக்கு மாறுகவே யிருந்துவருகிறது. அக்காலத்திற் போலவே இக் காலத்திலும் 'ஜ(க்)காத்தும் 'பித்ராவும் பொது க''ஜானுவென்னப் படும் பைத்துல் மாலில் சேகரம் செய்யப்பட்டு, அங்கிருந்தே முஸ்லிம் சமூக நன்மைக்காகவும் மேன்மைக்காகவும் உசிதாஉசிதம் பார்த்துச் செலவிடப்படுவதா யிருப்பின், அதனால் எத்தனையோ எண்ணத் தொலையா நன்மைக ளெல்லாம் வந்தெய்து மன்றோ? அந்தோ இக்கால விந்தையே! அல்லது வீழ்ச்சியே!

21. இப்'னு உ'மர் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) காலத்தில் (ஒருமுறை) இரு ஈ'த்'கள் ஒன்ருக வந்து சேர்ந்தன; [16] ஆகவே, அவர்கள் ஜனங்களுடனே (ஈ'தி'ன்) தொழுகையைத் தொழுது முடித்தார்கள்; அப்பால் (இப்படிச்) சொன்னர்கள்:—

"ஜு'முஆ'த் தொழுகைக்கு வர எவர் விழைகின்ருரோ, அன்னவர் வரலாம்; இன்னம், எவரொருவர் வாராதிருக்க விழைகின்ருரோ, அன்னவர் வாராமலே இருக்கலாம்."— (இப்'னுமா. 5 : 166)

22. ஆ'யிஷா பிராட்டியார் கூறியுள்ளார்கள்: மினவின் நாட்களிலே அபூ'ப'க்ர்' அவர்பால்* விஜயம் செய்தார்கள்; இன்னம், அன்னவருடனே* இரு பெண்கள் த'ப்'ப வைத்து வாசித்துக் கொண்டும், (அதில்) அடித்துக்கொண்டும் இருந்தார்கள். மேலும், நபிகள்திலகம் (சல்அ'ம்) தங்கள் அங்கவஸ்திரத்தைக் கொண்டு தங்களைப் போர்த்துக் கொண் டிருந்தார்கள். அபூ'ப'க்ர் அவர்களை அதட்டிக் கண்டித்தார்கள்; ஆனல், நபிகள்திலகம் (சல்அ'ம்) தங்கள் வதனத்தைத் திறந்து, அப்பால் சொன்னர்கள்:—

"ஏ அபூ'ப'க்ர்! அவர்களை வாளா விட்டு விடுவீராக; ஏனென்ருல், இவை ஈ'தி'ன் தினங்களாயினவே!"— (பு'க'ா. 13 : 25)

---

16. "இரு ஈ'த்'கள்" என்பன, பெருநாளையும், வெள்ளிக் கிழமையையும் குறிக்கின்றன.

---

* அவர், அன்னவர் என்னப்பட்டவர் ஆ'யிஷா(ரலி') பிராட்டியாரே யாவார்கள்.

# அத்யாயம்—13

## அவசியத்திற் கதிகமான தொழுகைகள்

1. "இன்னம், இரவின் ஒரு பகுதியில், உம்மீது அவசியமாக்கப்பட்டுள்ளதற்கு அதிகமாக, தொழுகையைக் கொண்டு தூக்கத்தை ஒழிக்கக்கடவீர்; உம்முடைய ரக்ஷகன் உம்மை மஹோன்னத மகிமைவாய்ந்த உன்னத ஸ்தானத்திற்கு உயர்த்திவிடப் போதும்" (:குர். 17 : 79).

2. "நிச்சயமாக இரவில் எழுந்திருப்பது (எல்லாத் தீமைகளையும்) மிதித்துத் தொகைப்பதற்கு உறுதியான மார்க்கமாயும், பேச்சைத் திருத்திச் செப்பஞ்செய்ய மேலான வழியாயும் இருக்கிறது" (73 : 6).

3. "நிச்சயமாக நீர் தொழுகையிலே அநேகமாய் இரவின் மூன்றிலிரண்டு பகுதியை, இன்னம் (சில சமயங்களில்) அதில் சரிபாதியையும் (சில சமயங்களில்) அதில் மூன்றிலொரு பகுதியையும் கழிக்கின்றீர் என்பதையும், உம்முடனே இருப்பவர்களுள்ளும் ஒரு சாரார் (அவ்விதமே கழிக்கின்றார்கள்) என்பதையும் உம்முடைய ரக்ஷகன் (நன்கு) அறிகிறான்" (73 : 20).

'தஹஜ்ஜுத்' (ஹஜத—"அவன் இரவிலே விழித்திருந்தான்," என்பதிலிருந்து தோன்றியிருப்பது) என்னுந் தொழுகை இரவின் இறுதிப் பகுதியில், வைகறையாமத்துக்கு முன்னே தொழப்படுவதா யிருந்துவருகிறது. அஃது அவசியத்திற்கு அதிகப்பட்டதா யிருப்பினும், :குர்ஆன் ஷரீ'பிலே அது பலமாக ஸி'பாரிஷ் செய்யப்பட் டிருக்கிறது (தலை. ஆயாத் 1, 2). வித்ரு (அசலில் "ஒற்றைப்படையானது") என்பது ஆரம்பத்திலே 'தஹஜ்ஜுதி'ன் ஒரு பகுதியாயே யிருந்து வந்தது; இதுவும் அவசியத்திற்கு அதிகமானதே; இதற்குரிய மூன்று ரக்ஆ'த்தும் இப்பொழுது பொதுப்

படையாக இ'ஷாத் தொழுகைக்குப் பின்னூலே தொழப்பட்டு வருகின்றன. 'தராவீ'ஹ் ("இளைப்பாறுதல்" என்று பொருள்படும் 'தர்வீ'ஹா என்பதன் பன்மை) என்பது, ரமல'ான் மாதத்தில் இ'ஷாத் தொழுகை முடிந்தவுடனே (வித்ருக்கு முன்னே) இதுபொழுது தொழுது வரப்படும் எட்டு, அல்லது இருபது ரக்ஆ'த்தாகும்.

'தஹஜ்ஜு'த்', இரவில் சிறிது உறங்கிவிழித்த பின்பு, அவ்விரவின் மூன்றும்பகுதியின்—(ஜாமத்தின்) பிற்பாகத்திலே தொழப்படுகிறது ('ஹதீ'. 1). இதில் பதினொரு ரக்ஆ'த்துண்டு ('ஹதீ'. 2); ஆனாலும், ஒன்பதாகவும், ஏழாகவும், இன்னம் குறைவாகவும் குறுக்கிக்கொள்ளலாம் ('ஹதீ'. 3, 4). இரண்டிரண்டு ரக்'ஆத்துக்குப்பின்னேயும் ஓய்விருக்க வேண்டும். எல்லா மனிதர்களாலும் இரவின் மூன்றும் ஜாமத்தில் துயிலுணர்ந்தெழுதல் இயலாதானமையின், இ'ஷாவுக்குப் பின்னே, உறங்கச் செல்லு முன்னே இறுதிவணக்கமா யிருக்குமாறு மூன்று ரக்ஆ'த் வித்ரு சேர்க்கப்பட்டுள்ளது என்க ('ஹதீ'. 5, 6); இந்த வித்ரின் இறுதி ரக்அ'த்திலுள்ள விசேஷம் யாதெனின்: மூன்றுவது ரக்அ'த்தை முடித்து ருக்கூஉ'க்காகக் குனியு முன்னோ, அந்த ருக்கூஇ'லிருந்து நிமிர்ந்த பின்னோ ஒரு பிரத்தியேகப் பிரார்த்தனை—இது குனூத் தென்று கூறப்படும்—ஓதப்பட்டு வருவதுதா னாகும் ('ஹதீ'. 7).

'தராவீ'ஹென்பது, ரமல'ான் மாதத்திலே, 'தஹஜ்ஜு'து'க்காக விழித்தெழமுடியாத மனிதர்களுக்கென்று அந்தத் 'தஹஜ்ஜு'தி'ன் ஸ்தானத்திலே கொண்டுவந்து புகுத்தப்பட்டது. இது பொழுதுள்ள இந்தத் 'தராவீ'ஹானது 'ஹ'ஜ்ரத் உ'மர் (ரலி') அவர்களால் ஏற்பாடு செய்து வைக்கப்பட்டதாகும் ('ஹதீ'. 8).

1. அபூ' ஹு'ரய்ரா கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள்:—

"நம்முடைய ரக்ஷகன், அவன் ஆசிர்வதிக்கப் பெற்றவனாகவும் உன்னதமாக்கப்பட்டவனாகவும் ஆய்விட்டான்—ஓரோர் இரவிலும், அவ்விரவின் மூன்றும் பகுதியின் பிற்பாகம் எஞ்சியிருக்கு

நேரத்திலே, (பூமிக்குச்) சமீபமாயுள்ள வானத்தை நோக்கி இறங்குகிறான்; (மேலும்) கூறுகிறான்: 'என்னை விளிப்பவன் எவனேனும் இருக்கிறானா? ஆகவே, அவனுக்கு நான் விடை யளிப்பேன்; என்னைக் கேட்பவன் (எவனேனும் இருக்கிறானா?) ஆகையால், அவனுக்கு நான் (அன்னவன் கேட்பதை) அளித் தருள்வேன்; என்பால் பிழை பொறுக்கத் தேடுகிறவன் (எவனேனும் இருக்கிறானா?) . ஆதலின், அவனுக்கு நான் பிழை பொறுப்பேன்' "[1]— (பு'க'ா. 19:14)

---

1. "இப்'னு அ:தீர்" ந'ஜல என்னும் சொல்லின் கீழே இந்த 'ஹதீ':தின் பொருளைக் குறித்து விமர்சனம் செய்யப் புக்க விடத்து, "கீழே யிறங்குதல், மேலே யேறுதல், சலனமற் றிருத்தல் போன்ற செயல்களெல்லாம் ஜடப்பொருள்களுக்கே யுரிய தொழில்களாகும்; ஆயின், அல்லா(ஹ்)வோ, அப்படிப்பட்ட ஜட குணங்களை விட்டு மிகவுமேம்பட்டவனாகவும் மகாபரிசுத்தமான வனாகவும் இருக்கிறான். எனவே, இதன் பொருள், அல்லா(ஹ்)வின் அருளும் கருணையும் இறங்கிவந்து அடியார்களுக்கு நெருக்கத்திலே ஐக்கியமாகி விடுவதா யிருக்கிறது," என்று வரைந்திருப்பதைக் கூர்ந்து கவனிக்க. ஆகையாலே, அல்லா(ஹ்)வின் தொழில்களே போல் வருணிக்கப்பட் டிருப்பனவெல்லாம் உருவக வருணனையே. எனவே, இதன் தாத்பரியமாவது: இயற்கைச் சிருஷ்டியனைத்தும் ஓய்வெடுத்துக் கொண்டாற்போலே உறங்கிக் கிடக்கும், அடியானுடைய உள்ளமும் உலகத் தொல்லைகளாலும் அல்லல்களாலும் அநேகமாய் அலைக்கழிவுறாது நிஸ்சிந்தையாய் 'நிம்மதி' யடைந்திருத்தற்குரிய நடுநிசி யென்னப்படும் அப்படிப்பட்ட இருள் நேரத்திலே, ஆண்டவனுடைய அன்னியோன்னியத்தை அடையப் பெற நாடுகின்ற மனிதன் அவ்வாண்டவனது இருக்கையைத் தனது ஹிருதயத்திற்கு அதிக சமீபத்திலே கண்டு கொள்வான் என்பதுதானாகும். ஆதலால், அந்நேரம் அல்லாஹுத் த ஆ'லாவுடனே

2. ஆ'யிஷா பிராட்டியார் கூறியுள்ளார்கள்: 'அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) தொழுகையில் பதினொரு ரக்ஆ'த் தொழுவது வழக்கம்;'–இதுதான் அவர்களது இராத் தொழுகை யென்று அம்மாது சிரோமணி எண்ணிச் சொன்னார்கள்; 'மேலும், அவர்கள் எவ்வளவு நேரம் ஸஜ்த'ாவில் இருப்பது வழக்க மெனின், அவர்கள் தங்கள் சிரத்தை உயர்த்து முன்னே உங்களி லொருவர் ஐம்பது ஆயாத்களை ஓதி முடித்திடல் கூடும்; இன்னம், இரண்டு ரக்ஆ'த்தை அதிகாலைத் தொழுகைக்கு—('பஜ்ருக்கு) முன்னே தொழுது முடிப்பார்கள்; அப்பால், ('பஜ்ரின் ஜமாஅ'த்) தொழுகைக்காக முஅ'த்'தின் அவர்கள்பால் வருமட்டிலே தங்கள் வலப்புறத்திலே படுத்திருப்பார்கள்.'[2]–(பு'க'ா. 14 : 1)

3. மஸ்ரூ:க் கூறினர்: இரவிலே நபிகள் நாயகம் (சல்அ'ம்) தொழுத தொழுகையைக்குறித்து யான் ஆ'யிஷா பிராட்டியாரைக் கேட்டேன். (இதற்கு) 'பஜ்ரின் (ஸுன்னத்) இரண்டு ரக்ஆ'த்

---

ஐக்கியத்தை ஏற்படுத்திக் கொள்வதற்குப் பெரிதும் பொருத்த முள்ளவேளையா யிருந்துவருவது ஒருதலை; அதுதான் 'தஹஜ்ஜுத்' தொழுதற்குரிய அரிய சந்தர்ப்பமாய்க் கருதப்பட்டிருக்கிறது.

2. இந்த 'ஹதீ':தின் பிரகாரம் 'தஹஜ்ஜுத்' தொழுகை பதினொரு ரக்ஆ'த்தை யுடையதா யிருக்கிறது. ஆனால், கிழக்கு வெளுக்கு முன்னே குறிப்பிட்ட எண்ணிக்கையைத் தொழுது முடிக்க நேரமில்லாமற் போய்விடுமாயின், அடுத்துள்ள இரு 'ஹதீ':துகளும் விளக்கியிருப்பதே போல், அந்த எண்ணிக்கை ஒன்பதாகவும், ஏழாகவும், இன்னம் குறைவாகவுங்கூடச் சுருக்கி விடப்படலாம்.

தையன்றி, (சில சமயங்களில்) ஏழு (ரக்ஆ'த்து)ம், (சில சமயங்களில்) ஒன்பதும், (சில சமயங்களில்) பதினொன்றும் (தொழுவார்கள்) என்று அப்பிராட்டியார் கூறினர்.— (பு'க'ா. 19 : 10)

4. இப்'னு உ'மர் கூறினர்: நபிகட் டிலகம் (சல்அ'ம்) மின்பர்மீது இருந்தக்கால், 'இராத் தொழுகையைக்குறித்து நீவிர் என் சொல்கின்றீர்?' என்று ஒரு மனிதன் வினவினன். (இதற்கு) அவர்கள் சொன்னர்கள் :—

"ஒரே முறையில் இரண்டு (ரக்ஆ'த்); இன்னம், விடியற்காலை (நெருங்கிவிட்டது) என்று உங்களுள்ளொருவருக்குத் தெரிந்து விடுங்கால், அன்னவர் இன்னமொன்றை—(ஒரு ரக்அ'த்தை)ச் சேர்த்துக் கொள்ள வேண்டும்; இஃது அவருடைய தொழுகையை வித்ராகச் செய்துவிடும்."— (பு'க'ா. 8 : 84)

5. இப்'னு உ'மர் கூறியுள்ளார்: நபி பெருமானர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"வித்ரே இரவில் உங்களுடைய இறுதித் தொழுகையா யிருக்கட்டும்."— (பு'க'ா. 14 : 4)

6. அபூ' ஹுரைரா கூறினர்: அல்லா (ஹ்) வின் திருத்தூதர் (சல்அ'ம்) உறங்கச் செல்லு முன்னே வித்ரைத் தொழுது கொள்ளுமாறு எனக்குக் கட்டளையிட்டார்கள்.[3]— (பு'க'ா. 14 : 2)

---

3. இதுதான் இக்காலத்திலே பொதுப்படையாய்ப் பின் பற்றப்பட்டு வருகிறது. நபிபெருமானரே வித்ரைத் 'தஹஜ்ஜுத்' தொழுகையின் ஒரு பகுதியாகச் சேர்த்துவிட் டிருக்கிறார்கள் என்பது வெளிப்படை.

7. அல்'ஹஸன் இப்'னு அ'லீ(ரலி') கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) வித்ரில் :குனூத்தில்[4] ஓதி ஒப்பிக்கவேண்டிய வாக்கியங்களை எனக்குக் கற்றுக்கொடுத்தார்கள் :—

"ஏ அல்லா(ஹ்)! எவர்களை நீ நேர்வழியில் நடாத்தி யிருக்கின்றாயோ, அவர்களில் என்னையும் (சேர்த்து) நடாத்தி வைப்பாயாக; இன்னம், எவர்களை (விட்டு நீ குற்றங் குறைகளைக்) களைந்து காத்திருக் கின்றாயோ, அவர்களில் என்னையும் (சேர்த்துக்) காத்தருள்வாயாக; இன்னம், எவர்களை நீ நேசம் பாராட்டி யிருக்கின்றாயோ, அவர்களில் என்னையும் (சேர்த்து) நேசம் பாராட்டுவாயாக; இன்னம், நீ அருளியிருப்பதிலே என்னையும் (சேர்த்து) ஆசீர்வதிக்கக் கடவாய்; இன்னம், (தீமையென) நீ திட்டப்படுத்தியுள்ள தீமையைவிட்டு என்னைக் காப்பாற்றிவிடக் கடவாய்; ஏனென்றால்,

---

4. :குனூத் தென்பது, "ஒரே உறுதியா யடிபணிந்து நடத்தல்" என்று கருத்துக்கொண்டு, முஸ்லிம்களின் தொழுகையில் ஒரு குறிப்பிட்ட து'ஆ'வைச் சுட்டிக் காட்டுகின்றது; வித்ரு தொழுகையின் இறுதி—(மூன்றாவது) ரக்அ'த்தில் ரு(க்)கூஉ'க்கு முந்தியேனும் பிந்தியேனும் நின்ற நிலையிலே ஓதப்படும் ஒரு வகைப் பிரார்த்தனையா யிருக்கிறது அது; வேறு தொழுகைகளிலும் :குனூத் து'ஆ' ஓதப்படுவ துண்டு. இமாம்—ஜமாஅ'த் தொழுகையில் ரு(க்)கூஇ'லிருந்து நிமிர்ந்த பின்பே இமாமால் இந்தப் பிரார்த்தனை புரியப்பட்டதென்று பு'கா'. 10 : 126 கூறிக் கொண் டிருக்கிறது :குனூத் து'ஆ'வாக ஓதப்பட வேண்டிய வேறு பிரார்த்தனைகளும் உண்டு; (எமது இஸ்லாம் பார்க்க). உண்மையிலே, அவரவருக்குப் பிடித்தமாயுள்ள ஏனை எந்தப் பிரார்த்தனையையும் :குனூத்தாக ஓதிக்கொள்ளலாம் என்க.

நீ திட்டப்படுத்தி விடுகின்றாய்; இன்னம், எந்தத் திட்டமும் உன்னுடைய திட்டத்தை மிகைத்து நிற்ப தில்லை; நிச்சயமாக எவனை நீ நேசிக்கின் றாயோ, அவன் அவமானத்திற் குள்ளாக்கப்படுவ தில்லை; எங்கள் ரக்ஷகா! நீ ஆசீர்வதிக்கப்பட்டு விட்டாய்; உன்னதமாக உயர்த்தப்பட்டும் விட் டாய்."— (அபூ'த'ா—மிஷ். 4:35)

8. அ'ப்'து'ர் ர'ஹ்மான் கூறினர்: ரமலா'ன் மா்தத்தில் ஒருநாளிரவு நான் உ'மருப்'னுல் க'த்தா பு'டனே மஸ்ஜிது'க்குச் சென்றேன்; (அங்கு) ஜனங் கள் தனித்தனியான கூட்டங் கூட்டமாகக் குழுமிக் கொண் டிருந்தார்கள்; ஒரு மனிதன் தனியே தொழுது கொண்டான்; இன்ன மொருவன், தன் தொழுகையைப் பின்தொடர்ந்து பல மனிதர்கள் தொழுதுகொள்ளு நிலையிலே தொழுதுகொண் டிருந்தான். ஆகவே, உ'மர்(ரலி') கூறலுற்றார்கள்: 'நான் நினைக்கிறேன்: ஓர் ஓதுவார்— (இமாம்) பின்னே இவர்களை (யெல்லாம்) நான் ஒன்று திரட் டுவேனாயின், அது மிக மேலா யிருக்குமே.' பின்பு அவர் தமது தீர்மானத்தைச் செய்துகொண்டு, உப'ய் இப்'னு கஃ'பி'ன் பின்னே அவர்களை ஒன்று திரட்டியும் விட்டார். பிறகு நான் மற்றொருநாளிர வில் அவருடனே புறப்பட்டுச் சென்றேன்; மேலும், ஜனங்கள் (அனைவரும்) தங்களுடைய (ஒரே) ஓதுவாரின் தொழுகையையே பின்பற்றி (த் தொழுது) கொண் டிருந்தார்கள். (அப்பொழுது) உ'மர் கூறினர்கள்: 'இந்தப் புதிய ஏற்பாடு மகா சிலாக்கியமா யிருக்கிறது; (ஆயின்) அவர்கள்

உறங்குகின்ற (இரவின்) பகுதி அவர்கள் தொழுது கொண்டிருக்கும் (இப்) பகுதியைப் பார்க்கினும் மேலானதா யிருக்கிறது.' (அஃது) இரவின் பிற்பகுதி யென்று அவர் கருதினர்; (ஏனென்றால்) அந்த ஜனங்கள் முற்பகுதியிலே (அவ்வாறு) நின்று தொழுதுகொண் டிருந்தார்கள்.[5] — (பு'க'ா. 31 : 1)

*

5. இந்த 'ஹதீ':தில் குறிக்கப்பட்டுள்ள 'தொழுகை ரமல'ானின் 'தராவீ'ஹ் தொழுகை யென்பது கண்கூடு. இத் தொழுகையில் இற்றைநாளில் :குர்ஆன் ஷரீ'பின் முப்பது பாகமும் முப்பது இரவுகளில் (அநேகமாய் இருபத்தேழு இரவுகளில்) ஓதி முடிக்கப் படுகின்றன. நபிகள் நாயகத்தின் காலத்திலே இப்படிப்பட்ட 'தராவீ'ஹ் தொழுகை இல்லை யென்பது இதனால் விளக்க மாகின்றது. இந்த ('ஹதீ':து) கிரந்தத்தின் அத். 8 : 15—ஐ நோட்டமிடுக: ரமல'ான் மாத இறுதியிலே நபி பெருமானார் இஃ'திகா'பில் இருந்து வந்தார்கள்; அவர்கள் அதுபொழுது 'தஹஜ்ஜுத்' தொழுதுகொண் டிருந்ததைப் பார்த்துவிட்ட ஒரு சிலர் அப்படியே அப் பெருமானாரைப் பின்தொடர்ந்து நின்று தொழத் தலைப்பட்டுவிட்டனர். நபிகள் திலகம் அத்தொழுகை அவ்வாறிருக்க வேண்டுமென விழையாதிருந்தும், அதுபொழுது அந்தத் 'தஹஜ்ஜுத்' தொழுகை அவ்வண்ணமாயே இமாம்—ஜமாஅ'த்துக்குரிய முறையிலே நடந்தேறுவ தாயிற்று. அவ்விதமாக அத்தொழுகை கூட்டத்துடனே மூன்றே நாள் நடைபெற்று வந்தது; அப்பாலுடனே நபிகணாயகர் (சல்) வேண்டுமென்றே அவ் வழக்கத்தை நிறுத்திவிட்டார்கள். இவ்வளவேதான் அப் பெருமானார் காலத்தில் நிகழ்வுற்றதெனல் வேண்டும். அப்பால் உ'மர் (ரலி') அவர்கள் இதுகாலை இருந்து வரும் 'தராவீஹ'ஹ 20 ரக்ஆ'த்தாகவும், இமாம்—ஜமாஅத்' தொழுகையாகவும் ஆக்கி வைத்தார்கள்.

# அத்யாயம்—14

## நானாவிதத் தொழுகைகள்

[இஸ்திக'ாரா, சலாத்துல் குஸூ'ப், இஸ்திஸ்:கா]

இஸ்திக'ாரா—(கை'ரை, அஃதாவது, நன்மையை, அல்லது கருணையை வேண்டல்) என்பது, ஒரு மனிதன் தான்செய்ய நாடிய காரியத்தில் அல்லா(ஹ்)வின் உதவியை, கிருபையை, அல்லது ஆசீர்வாதத்தைக் கோருதல் என்பதா யிருக்கிறது. "குஸூ'ப"ன்பது சூரியன், அல்லது சந்திரனுக்குரிய கிரஹணம் என்று பொருள் படும். இஸ்திஸ்:கா [ஸ(க்):கீ என்றால், "தாகத்திற்குத் தண்ணீர் கொடுத்தல்" என்று பொருள் கொள்ளும்] என்பது மழைக்காகத் தொழப்படும் தொழுகையாகும்.

1. ஜாபி'ர் கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) எல்லாக் காரியத்திலும், எங்கட்கவர்கள் :குர்ஆனிலிருந்து ஓர் அத்யாயத்தைக் கற்றுக் கொடுப்பதே போலத்தான், எங்களுக்கு இஸ்திக'ாராவையும் கற்றுக்கொடுப்பது வழக்கமா யிருந்தது; அவர்கள் சொன்னார்கள் :—

"உங்களிலொருவர் ஒரு காரியத்தைச் செய்ய நாடுங்கால், ('பர்ல்') கட்டாயத் தொழுகைகளையன்றி, இரண்டு ரக்ஆ'த் (ந'பில்) தொழுது முடித்து,[1] அப்பாலவர் (பின்வருமாறு) பிரார்த்தனை புரிதல் வேண்டும்: 'ஏ அல்லா(ஹ்)! யான் உன தறிவைக் கொண்டு உன்னுடைய ஆசீர்வாதத்தை விழைகின்றேன்; உனது திராணியைக் கொண்டு (அதனைச்

---

1. இஸ்திக'ாராவுக் குரிய உத்தமமான வேளை இ'ஷாத் தொழுகைக்குப் பின்னேரமாம்.

செய்து முடிக்க) எனக்குச் சக்தியை யளித்தருளு மாறும் உன்னைக் கெஞ்சிக் கேட்கின்றேன் ; உனது பேரனுக்கிரகத்தையும் யான் நின்பால் இறைஞ்சிக் கேட்கின்றேன் ; ஏனென்றால், எனக்கொன்றும் சக்தியில்லா திருக்க, உனக்கே அச் சக்தி (அதிகம்) இருக்கின்றது ; இன்னம், யானொன்றும் அறியா திருக்க, நீயே (சகலமும்) அறிகின்றாய் ; மேலும், நீதான் மறைவான கருமங்களை யெல்லாம் அறியும் பேரறிஞனா யிருக்கின்றாய். ஏ அல்லா(ஹ்) ! இக் காரியம் எனது சன்மார்க்க—(தீ’ன்) விஷயத்திலும், எனது வாழ்க்கையி(ன் விஷயத்தி)லும், எனது காரியத்தி(ன் முடிவு விஷயத்தி)லும்’—அல்லது அவர்கள் சொன்னார்கள்—‘எனது காரியத்தின் இதுபொழுதுள்ள நிலைமையிலும், அதன் எதிர்கால நிலைமையிலும் இந்தக் காரியம் எனக்கு நல்ல தென்று நீ அறிவையாயின், அப்பால் அதனை நீ எனக்குத் திட்டப்படுத்தி, எனக்கதனை இலேசாக் கித் தந்தும், அதில் (என்னை) ஆசீர்வதித்தும் வைக்கக் கடவாய் ; இன்னம், இக்காரியம் எனது சன்மார்க்க—(தீ’ன்) விஷயத்திலும், எனது வாழ்க் கையி(ன் விஷயத்தி)லும், எனது காரியத்தி(ன் முடிவு விஷயத்தி)லும்’—அல்லது அவர்கள் சொன் னார்கள்—‘எனது காரியத்தின் இதுபொழுதுள்ள நிலைமையிலும், அதன் எதிர்கால நிலைமையிலும் இந்தக் காரியம் எனக்குத் தீயதே யென்று நீ அறிவையாயின், அப்பால் அதனை நீ என்னைவிட்டு அப்புறப்படுத்தியும், அதனைவிட்டு என்னை அப்புறப் படுத்தியும், எனக்கு நன்மை பயக்கக் கூடியதை,

அஃது எங்கிருப்பினும் சரியே, திட்டப்படுத்தியும் வைக்கக் கட்வாய்; மேலும், என்னை நீ அதனைக் கொண்டு திருப்தி யுறுமாறும் செய்துவிடக் கடவாய்.' "

அவர்கள்—(நபிகள்திலகம்) மேலும் சொன்னார்கள்: "இன்னம், அன்னவன் தனக்குத் தேவையானதைச் சொல்லிக்கொள்ள வேண்டும்."[2] —(பு'க'ா. 19 : 25)

2. அ'ப்'து'ல்லா ஹிப்'னு அ'ம்ர் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) காலத்தில் சூரிய கிரஹணம் உண்டாயபொழுது, (ஜனங்களை) ஒன்றுதிரட்டிக் கூட்டத் தொழுகை நடாத்தப்படப் போகிற தென்று கூப்பீடு— (அ'தான்) விடுக்கப் பட்டது.— (பு'க'ா. 16 : 3)

3. ஆ'யிஷா பிராட்டியார் கூறினர்: நபி பெருமானர் (சல்அ'ம்) கிரஹணத் தொழுகையின் பொழுது தங்கள் ":கிராஅத்"தை இரைந்தே ஓதினர்கள்; மேலும், தாங்கள் ஓதியதை முடித்த பொழுது, 'தக்பீ'ர் சொன்னர்கள்; அப்பால் ரு(க்)கூஉ'ம் செய்தார்கள்; இன்னம், அன்னவர்கள் ரு(க்)கூஇ'லிருந்து (தங்கள் சிரத்தை) உயர்த்

---

2. இஸ்திக'ராத் தொழுகை அவரவருக்கு முரிய தனித் தொழுகையா யிருந்து வருகின்றமையால், அநேகநாள் வரை தொடர்ந்து தொழப்படலாம்; ஆண்டவ னுதவிகொண்டு அவரது மனம் ஒருவித ஸ்திரமான காரியத்தின்மீது நிலை கொள்ளுமட்டும் அவ்வாறு தொடர்ந்து தொழுது வருவது நலம். ஆனல், அன்னவர் இன்ன முறையைத்தான் மேற்கொள்ள வேண்டுமெனக் கஷ்'பில் —(சூக்ஷ்மதர்சனத்தில்) காண்பிக்கப்பட வேண்டு மென்பது கட்டாய மில்லை.

தியபொழுது “ தன்னைப் புகழ்கிறவ னிடத்திலிருந்து அல்லா(ஹ்) கேட்கிறுன் ; எங்கள் ரக்ஷகா! உனக்கே புகழனைத்தும்,” என்றுங் கூறினுர்கள். பின்பும் (:குர்ஆன் ஆயாத்களை) ஓதத் தலைப்பட்டார்கள். கிரஹணத் தொழுகையில் இரண்டு ரக்ஆ’த்தில், நான்கு ரு(க்)கூஉ’களும் நான்கு ஸஜ்த’ாக்களும் உண்டு.[3]— (பு’க’ா. 16 : 19)

4. அ’ப்’து’ல்லா(ஹ்) கூறியுள்ளார் : நான், நபிகள் திலகம் (சல் அ’ம்) மழைக்காகப் பிரார்த்தனை புரியப் புறப்பட்ட தினத்திலே அன்னவர்களைக் கண்டேன்.—(மேலும்) அவர் கூறினுர் : அவர்கள்—(நபிகணுதர்) ஜனங்கள் பக்கல் தங்கள் முதுகைத் திருப்பியும், :கிப்’லாவைப் பார்த்துப் பிரார்த்தனை புரிந்தும் நின்றுர்கள் ; பிறகு தாங்கள் போர்த்தி யிருந்த மேலாடையைப் புரட்டிப் போட்டுக்கொண்டு (அல்லது சுற்றிக் கட்டிக்கொண்டு) பின்பு எங்களுடனே இரண்டு ரக்ஆ’த் தொழுகையை, அதில் :கிராஅத்தை இரைந்து ஓதிய வண்ணம், தொழுது கொண்டார்கள்.[4]— (பு’க’ா. 15 : 17)

---

3. கிரஹணத் தொழுகை இமாம்—ஜமாஅ’த் துடனே சேர்ந்து நின்று தொழவேண்டிய தொழுகையாம் ; இதில் ஆண்களும் பெண்களும் கலந்து கொள்ளலாம் (பு’க’ா. 16 : 10). இந்த ‘ஹதீ’:தில் கூறப்பட்டுள்ள அந்தக் குறிப்பிடத் தக்க கிரஹணம் நபிகள் திலகத்தின் பதினெட்டு மாதமே கழிந்திருந்த இப்’ராஹீமென்னும் ஆண்மகவு இறந்த தினத்தன்று நிகழ்வுற்ற சூரிய கிரஹணமாகும் (பு’க’ா. 16 : 17).

4. இது மழைக்காகத் திறந்த இடத்தில் தொழப்படும் ஒரு பிரத்தியேகத் தொழுகையாகும். தொழுகை யென்பது இல்லாமலே வெறும் பிரார்த்தனை— (து’ஆ’)மட்டுமே செய்யப்படலாம் (பு’க’ா. சுருக். அத். 11 : 13 ; பு’க’ா. 11 : 35).

# அத்யாயம்—15

## மரித்தவர் (சம்பந்த) கருமம்

1. "இன்னம், நீர் பொறுமையுட னிருப்பவர்களுக்கு நன்மாராயம் கூறக்கடவீர்; அவர்கள் தங்களுக்குத் துன்ப மொன்று வந்தடுக்குங்கால், "நிச்சயமாக நாங்கள் அல்லா(ஹ்) வுக்கே (உரியவர்களாய்) இருக்கிறோம்; மேலும் நிச்சயமாக நாங்கள் அன்னவன்பக்கலே மீள்கிறவர்களா யிருக்கிறோம்," என்று கூறுகிறார்கள். அவர்களே தங்கள் ரக்ஷகன்பாலிருந்து தங்கள் மீது நற்பேறுகளும் நற்கிருபையும் உண்டாகப்பெற்ற வர்கள்; இன்னம், அன்னவர்களே நேர்வழி பெற்றவர்கள்." (:குர். 2 : 155—157).

2. "எங்கள் ரக்ஷகா! நீ எங்களையும், ஈமானைக்கொண்டு எங்களுக்கு முந்திய எங்கள் சகோதரர்க ளாயவர்களையும் பொறுத்தருளக் கடவாய்" (59 : 10).

3. "இன்னம், நீர் அன்னவர்களுள்ளே இறந்துபோகும் எவரொருவருக் காகவும் மரணத் தொழுகை தொழாதீர்; இன்னம், நீர் அன்னவனது புதைகுழிமீது (பிரார்த்தனைபுரிய) நிற்க வேண்டாம்; நிச்சயமாக அன்னவர்கள் அல்லா(ஹ்) வையும் அவனுடைய தூதரையுங்கொண்டு (ஈமான் கொள் ளாது) நிராகரித்து விடுகிறார்கள்" (9 : 84).

ஒருவர் இறந்துபோன மரணத்தின் செய்தியைக் கேட்ட வுடனே, இன்னு லில்லாஹி வ இன்னூ இலைஹி ராஜிஊ'ன் என்று கூற வேண்டும் (தலை. ஆயத் 1). இறந்துபோனவர்களுக்குப் பிழை பொறுக்குமாறு ஆண்டவன்பால் பிரார்த்தனைபுரிய வேண்டுவது ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிம்பால் காண்பிக்க வேண்டிய கடமையா யிருக்கிறது (தலை. ஆயத் 2). இறந்து போனவருக்

காகத் தொழவைப்ப தென்பதே அத்தகைய பிரார்த்தனையா யிருந்து வருகிறது; ஆயின், அல்லா(ஹ்)வையும் அவனுடைய திருத் தூதரையும் நிராகரித்தவர்களின் பிரேதத்துக்காகத் தொழ வேண்டு மென்பது அவசியமில்லை (தலை. ஆயத் 3). ஆனால், அவ் வாயத்தில் குறிப்பிடப்பட் டுள்ளவர்கள் நயவஞ்சகக் கள்ள முனா‘பி:க்குகளா யிருக்கிறார்கள்; அவர்களுடைய நயவஞ்சகத் திருட்டுத்தனம் பட்டவர்த்தனமாய் விளங்கக்கிடந்தது.

மரிக்கிறவர்கட்கும், மரித்துப்போனவர்கட்கும் உயிருடனே இருப்பவர்கள் செலுத்தவேண்டிய கடமைகள் இன்ன இன்னவை யென்று பற்பல ‘ஹதீ’:துகளில் மிக்க விவரமாய்க் காணப்படா நின்றன. வியாதியஸ்தரைப் போய்ப் பார்க்க வேண்டுவது ஓரொரு முஸ்லிம் மீதும் விதியாக்கப்பட்டிருக்கிறது (‘ஹதீ’. 11). ஒரு மனிதனுக்கு மரணம் வந்தடுத்துவிட்ட தென்னும் விஷயம் (அறிகுறிகள்) விளக்கமான வுடனே அவனது தலைமாட்டில் :குர்ஆன் ஓதப்படலாம் (‘ஹதீ’. 1). ஒரு பிணியாளியை அல்லது மரித்துப்போனவனைப் போய்ப் பார்க்க நேருங்கால், அவனைக் குறித்து நல்லவிதமாய்ப் பேசுவது சிலாக்கியமென்று ஸி‘பாரிஷ் செய்யப்படுகிறது (‘ஹதீ’. 2). இறப்பவருக்காக, அல்லது இறந்த வருக்காகத் துக்கங்கொள்வது இயற்கையே யாதலின், ஒருவர் அத் துக்கமேலீட்டால் அழுதும்விடலாம் (‘ஹதீ’. 3, 4); ஆனால், ஒப்பாரியுடன் அழுது பிரலாபித்தல், தலையிலும், முகத்திலும், நெஞ்சிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு அலறுதல், தலைமயிர் தாடி ரோமம் துணிமணி முதலியவற்றைப் பிய்த்துக்கொண்டு பிரலாபித்தல், தரையிற்கிடந்து புரண்டுருண்டழுது “பலாக் கணம்” பாடல் முதலிய அஞ்ஞான அநாசாரச் செய்கைகள் தடுக்கப்பட் டுள்ளன (‘ஹதீ’. 5, 6). பெற்றோர்களுக்கு முன்னே பிள்ளைகள் மரிப்பது ஒரு மறைமுகமான ஆசீர்வாத மென்றே கொள்ளப்படல் வேண்டும் (‘ஹதீ’. 7). மரித்த பிரேதம் அசுத்த மெல்லாம் நீங்குமாறு நன்கு கழுவிக் குளிப்பாட்டிச் சுத்தமான வஸ்திரத்தைக் கொண்டு க‘பனிடப்படல்—சுற்றி மூடப்படல்— வேண்டும் (‘ஹதீ’. 8, 9). பிரேதப் பெட்டியைத் தொடர்ந்து செல்வது ஒரு சிலாகிக்கத்தக்க நற்காரியமாய்க் கருதப்படுகிறது

('ஹதீ'. 10); இஃது இறந்துபோய்விட்ட தன் சகோதரனுக்கு ஒரு முஸ்லிம் காண்பிக்க வேண்டிய கடமையாய்க் காணப்படாநின்றது ('ஹதீ'. 11). பிரேதப் பெட்டியொன்று—(ஜனு'ஜா) முஸ்லிமின் பிரேதத்தைச் சுமந்து செல்லினும், முஸ்லிமல்லாத பிரேதமொன்றைச் சுமந்து செல்லினும், அதன்பால் மரியாதை காண்பிக்கப்படல் வேண்டும் ('ஹதீ'. 12, 13). பிரேதத்துக்குரிய (ஜனு'ஜாத்) தொழுகை அந்தமையித்–(பிரதேம்) இல்லாத இடத்திலும் தொழப்படலாம் ('ஹதீ'. 14). பெண்மணிகள் பிரேதப் பெட்டியைப் பின்தொடர்ந்து செல்லவேண்டாமென அறிவுறுத்தப் பெற்றூர்கள்; ஆயின், அவ்விதம் செல்லவே கூடாதெனத் தடையுத்தர வொன்றும் காணப்படவில்லை ('ஹதீ'. 15). பிரேதப் பெட்டியைப் பின்பற்றிக் கால் நடையாகவும் செல்லலாம்; சவாராகவும் செல்லலாம் ('ஹதீ'. 16). பிரேதத்தின் பின்னே செல்பவர் ஜனு'ஜாத் தொழுகையின் பொழுது இமாமுக்குப் பின்னே வரிசை வரிசையாய் நிற்பர் ('ஹதீ'. 17). ஜனு'ஜாத் தொழுகை நான்கு 'தக்பீ'ருடனும், இறுதித் 'தஸ்லீமுடனும் நின்ற நிலையிலே தொழப்படும்; இதற்கு ரு(க்)கூஉ' மில்லை, ஸுஜூது' மில்லை; ஆனுல், தொழத் தொடங்குமுன்னே வுலூ' செய்துகொள்ள வேண்டும் ('ஹதீ'. 17,18). இமாமுக்கு முன்னே ஜனு'ஜா (இந்நாட்டில்) தெற்கு வடக்காய் வைக்கப்படும்; அவர் அம்மையித்தின் நடுவுக்கு, அல்லது நெஞ்சுக்கு நேரே :கிப்'லாவை நோக்கிய வண்ணம் நிற்பார் ('ஹதீ'. 19). முதல் 'தக்பீ'ருக்குப் பின்னே (இஸ்தி'ப்'தா'ஹு'க்கு—முன் 201-ஆம் பக்கம் பார்க்க—பின்னே) ஸூரா 'பா(த்)தி'ஹா வாய்க்குள்ளே ஓதப்படும்; இரண்டாவது 'தக்பீ'ருக்குப் பின்னே அஸ்'ஸ'லவாத்து அலன் நபிய்யி ஓதப்படும்; மூன்ருவது 'தக்பீ'ருக்குப் பின்னே இறந்துபோனவரது நன்மைக்குரிய பிரத்தியேக து'ஆ' ஓதப்படும்; இதில் உயிருடனிருப்பவரது க்ஷேமமும் சேர்க்கப்படும்; நான்காவது 'தக்பீ'ருக்குப் பின்னே ஸலாம் சொல்லப்படும் ('ஹதீ'. 20—23). மஹா பாபியாயிருப்பினும், முஸ்லிமாயிருப்பவ னெருவன் மரித்துவிடுவானுயின், அவனது மையித்துக்கும் ஜனு'ஜாத் தொழுகை தொழப்படல் வேண்டும் (பு'கா'ர. சுருக். அத். 8: 6). இஸ்லா

மார்க்கப்படி தற்கொலை புரிந்துகொள்வதென்பது ஒரு "கிரிமினல் குற்ற"மாம்; அப்படிப்பட்டவனுக்குங்கூட ஜனு'ஜாத் தொழுகை இல்லையென்று ஒருவரும் மறுப்பது கூடாது ('ஹதீ'. 24). போர்க் களத்தில் கழுவிக் குளிப்பாட்டல், க'பனிடல், ஜனு'ஜாத் தொழுகை தொழவைத்தல் ஆகிய எல்லாம் வேண்டாமென்று விடப்பட்டன. மேலும், ஒரே குழியில் இரு சவங்கள் சேர்த்துப் புதைக்கப் பட்டன ('ஹதீ'. 25). புதைக்கும் பொழுது என்ன சொல்லப்பட வேண்டும், என்ன செய்யப்பட வேண்டும் என்பன 'ஹதீ'. 26, 27-இல் கூறப்பட்டுள்ளன. புதைகுழி பூமிக்குமேல் சிறிது உயர்ந்தும், நீட்டவாட்டில் மேல் குவியலாகவும் இருத்தல் வேண்டும் ('ஹதீ'. 28). புதைகுழிகள் கல் சுண்ணும்பு கொண்டு கட்டப்படுவதும், கோரிகள்—(தர்காக்கள்) அவற்றின்மீது கட்டப் படுவதும் தடுக்கப்பட் டுள்ளன ('ஹதீ'. 29). நண்பர்களும் உறவினர்களும் இறந்தவரில்லம் சென்று துக்கம் விசாரித்து ஆறுதன்மொழி கூறலாம்; இவ்வாறே அத் துக்கம் விசாரிக்க வந்தவர்கட்காக ஆகாரம் சித்தஞ்செய்து கொடுப்பதும் அங்கீகரிக்கப்பட்டுள்ளது; அவ்விருந்தில் மிகவு நெருங்கிய பந்துக்கள் மட்டுமே சேர்ந்துண்ணலாம் ('ஹதீ'. 30, 31). மரித்தோரைத் திட்டுவது தடுக்கப்பட்டுள்ளது ('ஹதீ'. 32). இறந்தவருக்காகத் தருமம் செய்வது அனுமதிக்கப்பட்டுள்ளது ('ஹதீ'. 33, 34). புதைகுழிகளைப் பார்க்கச் செல்லுங்கால், இறந்தவர் பொருட்டுப் பிரார்த்தனை புரியலாம் ('ஹதீ'. 35).

1. மஃகி':கில் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள்:

"உங்களுள்ளே இறப்பவர் மீது யாஸீன் ஸூராவை ஓதுங்கள்."[1]— (மஸ்—மிஷ். 5:3)

---

1. என்னெனின், ஆண்டவனுடைய பெருமையும் மாஹாத்மியமும் அந்த யாஸீன் ஸூராவில் அதிகம் பிரஸ்தாபிக்கப்பட்டுள்ளன என்பதனு லென்க.

2. உம்மு ஸலமா கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"நீங்கள் ஒரு நோயாளியை, அல்லது ஒரு மரித்தவனைப் போய்ப் பார்க்குங்கால், (அவனைக் குறித்து) நல்லதையே சொல்லக் கடவீர்கள்; என்னெனின், நீங்கள் கூறுவதன்மீது வானவர்கள் ஆமீன் கூறுகிறார்கள்."*—(முஸ்—மிஷ். 5 : 3)

3. ஆ'யிஷா பிராட்டியார் கூறினார்: உ':துமானு'ப்னு மள்'ஊ'ன் மரித்த பொழுது, அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) அன்னவரை முத்தமிட்டார்கள்; மேலும், அழுதார்கள்; ஆகையால், நபிகள் திலகத்தின் (சல்அ'ம்) கண்ணீர் உ':துமானது வதனத்தின்மீது வழிந்தோடிற்று.[2]—(திர்மி—மிஷ். 5 : 3)

4. அனஸ் கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதருடனே (சல்அ'ம்) நாங்கள் சென்று, கொல்லர் அபூ'ஸய்ஃப'ப் பார்த்தோம்; மேலுமவர் இப்'ராஹீமின் போஷகப் பிதாவாயிருந்தார். அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) இப்'ராஹீமை(த் தங்கள் கரங்களில்) எடுத்தார்கள்; இன்னம், அன்னவனை முத்தமிட்டார்கள்; மோந்தும் பார்த்தார்கள். பின்பு அதற்கப்பால், இப்'ராஹீம் தனதாவியை விட்டுக்

---

2. இந்த உ':துமான் இப்'னுமள்'ஊ'னே, அல்லா(ஹ்)வின்மீது தாங்கள் கொண்டுவிட்ட உறுதியின் காரணத்தால் மக்காவைத் துறந்து மதீனாவுக்கு ஹிஜ்ரத் சென்ற முஸ்லிம்களுள்ளே முதன் முதலாக மரித்த மூமினானவரா யிருந்தார்.

---

* மேல் வரும் 'ஹதீ'. 32ம் நோக்க.

கொண் டிருந்தபொழுது, நாங்கள் அவனைப்போய்ப் பார்வையிட்டோம்; ஆகவே, அல்லா(ஹ்)வின் திருத் தூதர் (சல்அ’ம்) அவர்களுடைய நேத்திரங்களி லிருந்து அவலக்கண்ணீர் வழிந்தோடத் தொடங் கிற்று. அ’ப்’து’ர் ர‘ஹ்மான் இப்’னு அ’வ்‘ப் அப் பெருமானார் பால், ‘ஏ அல்லா(ஹ்)வின் திருத் தூதரே! தாங்களுமா?’ என்று கூறினர். (இதற்கு) அவர்கள் சொன்னார்கள்:—“ஏ இப்’னு அ’வ்‘ப்! இதுதான் இரக்கம்.” பிறகும் அவர்கள் அழுதார் கள்; மீட்டும் (இவ்வாறு) சொன்னார்கள்:—

“நிச்சயமாக நேத்திரம் கண்ணீரை உகுக் கின்றது; உள்ளம் (உருகி) வருந்துகின்றது; இன்னம், நம்முடைய ரக்ஷகன் பிரீதியுற்றதை யன்றி (வேறெதையும்) நாம் கூறுவதில்லை; மேலும், ஏ இப்’ராஹீம்! நாம் உனது பிரிவாற்றாமையால் துக்கம் ததும்பியவரா யிருக்கிறோம்.”[3]—(பு’க்’ா. 23 : 43)

5. அ’ப்’து’ல்லா(ஹ்) கூறினர்: நபிகள் நாயகம் (சல்அ’ம்) சொன்னார்கள்:—

---

3. இப்’ராஹீம் என்னும் சிசு நபிகள் நாயகத்திற்கு மிசிர் தேச :கிப்’தீ மனைவியாய் விளங்கிவந்த மரியாள் வயிற்றிலே உதித்திருந்த ஒரே ஆண்மகவா யிருந்தது; அக்குழந்தை மரித்த பொழுது அதற்கு வயது ஒன்றரையே. அதுபொழுது நபிகளுதர் கூறிய வசனங்கள், மரணம்போன்ற பேரிடியால் விளையக்கூடிய விபத்துக்களின் போழ்து மக்கள் எவ்வாறு ஒழுகிக்கொள்ள வேண்டுமென்பதற்கொரு கலங்கரை விளக்கமேபோல் இக்குவலய முழுமைக்கும் அமைந்து கிடப்பதைக் கூர்ந்துநோக்க. அபூ’ஸய்‘பின் மனைவி குழந்தை இப்’ராஹீமுக்குப் பால்கொடுக்கும் போஷகத் தாயாக இருந்துவந்தாள்.

"கன்னத்தி லறைந்துகொண்டும், ஆடைகளைப் பிய்த்துக் கொண்டும் அறியாத (காலத்த)வர்கள் ஓலமிட் டழுததேபோல் ஓலமிட் டழுதுகொண்டு மிருப்பவன் எம்முடைய இனத்திலே சேர்ந்தவனல்லன்."[4] — (பு'க'ா. 23 : 35)

6. (பெரியார்) உ'மர் கூறினர் : தலையின் மீது மண்ணை வாரிப் போட்டுக்கொண்டு, அல்லது 'பலாக்கணம்' பாடிப் பிரலாபித்துக் கொண்டு, இல்லாது போகுமட்டும், அபூ' ஸுலய்மான் மீது அழுது கொண்டிருக்கும் அவர்களை—(பெண் பிள்ளைகளை) வாளா விட்டுவிடுங்கள்.[5] — (பு'க'ா. 23 : 33)

---

4. நங் தமிழ்நாட்டில் மார்பிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டும், ஒப்பாரி வைத்துப் 'பலாக்கணம்' பாடியும், தாடி தலை ரோமம் தலைப்பாகை சட்டை முதலியவற்றைப் பிய்த்துக்கொண்டும், கன்னத்திலறைந்தும் கட்டிக்கொண்டுருண்டும், 'மண்டையை உடைத்து உண்டையைப் பாய்ச்சிக்' கொண்டும் செத்தவருக்காகச் சாவவேண்டியவர்கள் ஆடாதகூத்தெல்லாம் ஆடிப் பாடாத பாட்டெல்லாம் பாடித் திரிகிறார்களே, அப்படிப்பட்டவரெல்லாம் இந்த 'ஹதீ'ஃதை ஊன்றி வாசிக்கக் கடவார்களாக.

5. முஸ்லிமாயிருப்பவர், தம்முடைய உறவினரோ, நெருங்கிய நண்பரோ இறந்துவிட்ட செய்தியை யறிந்துகொள்ளுங் கால், பொறுமையை மேற்கொண்டொழுகுதல் வேண்டும். அழுவதென்பது மனிதனது உள்ளத்திலுதிக்கும் உருக்கத்தையும் இரக்கத்தையுமே வெளிக்காட்டுவதா யிருக்கிறது. ஆயின், பொறுமைக்கு நேர்முரணா யுள்ள அநாகரிக ஒப்பாரி முதலிய கோஷ்டங்களெல்லாம் இஸ்லாத்தில் தடுக்கப்பட் டிருக்கின்றன; நபிகணாதர் இவற்றை யெல்லாம் வன்மையாய்க் கண்டித் துள்ளார்கள். பிறந்தோ ரெல்லாம் இறந்தே தீரவேண்டும். "பொன்றுதல் ஒருகா லத்தும் தவிருமோ பொதுமைத் தன்றே? இன்றுளார்

7. அனஸ் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

" தன்னுடைய மூன்று (பிள்ளைகள்) பருவ வயதை எய்துமுன்னே இறந்துபோய், அன்னவர்களின் பொருட்டு அல்லா(ஹ்) அவனை—(அத்தகப்பனைத்) தனது கடாக்ஷக் கிருபையைக் கொண்டு சுவர்க்கத்துள் நுழையச் செய்யமாட்டாத ஒரு முஸ்லிமும் ஜனங்களிடத்தே யில்லை." — (பு'க'ா. 23 : 6)

8. உம்மு அ'(த்)'திய்யா கூறினர்: நாங்கள் அவர்களுடைய குமாரி(யின் மேனி)யைக் கழுவிக் குளிப்பாட்டிக்கொண் டிருந்தபொழுது, அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) எங்களிடம் வந்தார்கள்; ஆகவே, அவர்கள் சொன்னர்கள் :—

" அவரை மூன்றுமுறை, அல்லது ஐந்துமுறை, அல்லது அதற்கு மேலாகவும், இலந்தை (யிலை கலந்து கொதிக்கவைத்த) வெந்நீரைக் கொண்டு குளிப்பாட்டக் கடவீர்கள்; இன்னம், இறுதி முறையில் சூடத்தையும் சேர்க்கக் கடவீர்கள்; மேலும், நீங்கள் (செய்ய வேண்டுவதைச் செய்து) முடித்தபின்பு எனக்கு அறிவியுங்கள்."[6]

---

நாளை மாள்வர் புகழுக்கும் இறுதி யுண்டோ?" என்ருன் கல்வியிற் பெரியான்.

6. சூடம், இலந்தையிலை ஆகியவற்றிற்குக் கிருமிகளை நாசஞ் செய்யும் சக்தியொன்று இருந்துவருகின்றமையால், அவற்றினை மையித்துக்கு அதிகம் உபயோகித்து வருகின்றனர்கள் நம் முஸ்லிம்கள்.

ஆகவே, நாங்கள் (எங்கள் காரியத்தை) முடித்துவிட்ட பிறகு அவர்கட்கு அறிவித்தோம்; அப்பா லவர்கள் எங்கள்பால் தங்கள் இடுப் பாடையை எறிந்து, மேலும் சொன்னார்கள்: "இதனை அவருக் கடுத்தாற்போலே வையுங்கள்." —(பு'க'ா. 23 : 9)

9. ஆ'யிஷா பிராட்டியார் கூறினார்: அல்லா(ஹ்) வின் திருத்தூதர் (சல்அ'ம்) எமனில் தையாரிக்கப் பட்ட, சலவை செய்யப்பட்டிருந்த, வெண்மையான மூன்று பருத்தித் துணிகளைக்கொண்டு[7] மூடிக் க'ப னிடப்பட்டார்கள்; அவற்றிலே :கமீசுமில்லை, தலைப் பாகையு மில்லை."— (பு'க'ா. 23 : 18)

10. அபூ' ஹுரய்ரா கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"எவனொருவன் ஒரு பிரேதப் பெட்டியுடனே (அம் மையித்துக் குரிய) ஜனா'ஜாத் தொழுகை தொழுது முடியுமட்டிலே தாமதித் திருக்கிறானோ, அவனுக்கு ஒரு பங்கு (நன்மை) உண்டு; இன்னம், எவ னொருவன் அந்தப் பிரேதம் அடக்கி முடியு

7. ஸ'ஹூலிய்யா என்று அத் துணிகள் அழைக்கப்பட்டு வந்தன; என்னெனின், எமன் பிராந்தியத்தி லுள்ள ஸ'ஹூல் லென்னும் இடத்திலே அவை நெய்யப்பட்டன; அல்லது அங் கிருந்து கொண்டுவரப்பட்டன என்க. அல்லது ஸ'ஹூல் என் பான், "அடித்துத் துவைத்து, சலவைசெய்து, வெண்மை யாக்கு கிறவனைக்" குறிப்பதனால், அடித்துத் துவைத்துச் சலவைசெய்து வெளுப்பாக்கப்பட்ட துணிகள் என்றும் கூறப்படலாயினவென்று கொள்ளலாம்.

மட்டும் (தாமதித்து) இருக்கிறானோ, அவனுக்கு இரு மடங்கு (நன்மை) உண்டு.''— (பு'க'ா. 23 : 58)

11. ப'ரா யிப்'னு ஆ''ஜிப்' கூறினார்: பிரேதப் பெட்டிகளை (அவற்றின் இறுதி யிடம் வரை) தொடர்ந்து செல்லு மாறும், வியாதியஸ்தரைப் போய்ப் பார்த்து வருமாறும், (விருந்துக்காக) அழைக்கும் ஒருவரது (விருந்தழைப்பை) ஏற்றுக் கொள்ளுமாறும், ஒடுக்கப்பட்ட ஒருவனுக்கு உதவி புரியுமாறும், சத்தியத்தை நிறைவேற்றி வைக்கு மாறும், ஸலாத்துக்குப் பதில் ஸலாம் கூறுமாறும், தும்மியவனுக் காகப் பிரார்த்தனை புரியுமாறும் நபி பெருமானார் (சல்அ'ம்) எங்களுக்குக் கட்டளை யிட்டார்கள்.[8] — (பு'க'ா. 23 : 2)

12. ஆ'மிர் கூறினார்: நபிகள் நாயகம் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"உங்களுள் ளொருவர் பிரேதப் பெட்டி யொன்று (சுமந்து) செல்லப்படுவதைக் காணுங்கால், அவர் அதனைத் தொடர்ந்து செல்லவில்லை யாயின், அன்னவர் அப் பெட்டியைப் பின்னே விட்டுச் செல்லு மட்டில், அல்லது அப்பெட்டி அவரைப் பின்னேவிட்டுச் செல்லு மட்டில், அல்லது அஃது அவரைப் பின்னேவிட்டுச் செல்லுமுன்னே கீழே வைக்கப்படு மட்டிலே அவர் எழுந்து நிற்கவேண்டும்.''— (பு'க'ா. 23 : 47)

---

8. இந்த 'ஹதீ':தி லுள்ள, பிரேதப் பெட்டியைப் பின் பற்றிச் செல்வதும், வியாதியஸ்தரைப் போய்ப் பார்த்து க்ஷேமம் விசாரித்து வருவதுமே இவ்வத்யாயத்துக்குப் பொருத்தமுள்ளன வாம்.

13. ஜாபி'ர் கூறினர்: ஒரு சவப்பெட்டி நாங்களிருந்த இடத்தின் வழியே (சுமந்து) செல்லப் பட்டது; ஆகவே, அதற்காக நபிக ணயகர் (சல்அ'ம்) எழுந்து நின்றூர்கள்; நாங்களும் (கூட) எழுந்து நின்றோம். பிறகு, "ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! இஃதொரு யூதனது சவப் பெட்டி," என்று நாங்கள் கூறினோம். (அது செவியேற்று) அவர்கள் சொன்னர்கள் :—

"நீங்கள் ஒரு பிரேதப் பெட்டியைக் காணுங் கால், எழுந்து நிற்கக் கடவீர்கள்."[9]—(பு'க'ா. 23 : 49)

14. அபூ' ஹுரய்ரா கூறி யுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) நஜ்ஜாஷீ இறந்த தினத்திலே அவரது மரணங் குறித்துச் செய்தி யறிவித்தார்கள்; (அப்பொழுது) அவர்கள் தொழுந் தலத்திற்குச் சென்றூர்கள்; மேலும், ஜனங்களை வரிசை வரிசையாய் நிற்கச் செய்தார் கள்; மேலும், நான்கு 'தக்பீ'ர் சொன்னர்கள்.[10]—(பு'க'ா. 23 : 4)

---

9. பிரேத மொன்று சுமந்து செல்லப்படுவதைக் காண நேரின், அது முஸ்லிம் ஜனு'ஜாவாயினும், முஸ்லிமல்லாதார் பிரேதமாயினும், அதன்பால் மரியாதை காண்பிக்கப்பட வேண்டு மென்று நபிகள்நாயகம்(சல்) நவின்றருளி யுள்ளார்கள்.

10. நஜ்ஜாஷீ அபிஸ்ஸீனியாவின் — (எதியோப்பியாவின்) மன்னரா யிருந்துவந்தார்; அவர் இஸ்லாத்தைத் தழுவிக்கொண் டிருந்தார். அவரது மரணத்தை நபிபெருமானுர் அறிந்து கூறி, அவருக்காக ஜனு'ஜாத் தொழுகையும் தொழவைத்தார்கள்; இதிலிருந்து இரு விஷயங்கள் புலப்படாநின்றன: மையித்

15. உம்மு அ’(த்):திய்யா கூறினர்: நாங்கள் பிரேதப் பெட்டியைப் பின்தொடர்ந்து வரவேண்டா மெனத் தடுக்கப் பட்டோம்; ஆனல், அஃதொரு தீர்மானமான தடையுத்தரவா யிருக்கவில்லை.[11]— (பு’க’ா. 23 : 29)

16. அல் மு:கீரா கூறி யுள்ளார்: நபிகள் திலகம் (சல்அ’ம்) சொன்னர்கள் :—

“சவாராகிச் செல்கிறவன் பிரேதப் பெட்டிக்குப் பின்னே செல்வான்; ஆயின், பாத சாரியாய் நடந்து செல்கிறவன் அதற்குப் பின்னேயும், அதற்கு முன்னேயும், அதன் வலப்புறத்தும், அதன் இடப்புறத்தும் அதற்கு நெருக்கமா யிருந்த படியே செல்லலாம்.”— (அபூ’த’ா—மிஷ். 5 : 5)

17. இப்’னு அ’ப்’ப’ாஸ் கூறியுள்ளார்: நபி பெருமானர் (சல்அ’ம்) எல்லாப் புதை குழிகளையும் விட்டு, ஒரு புதை குழியின்பாலே வந்தார்கள்; ஆகையினல், அவர்கள் ஜனங்களை வரிசை

---

தொன்று நேரில் இல்லாத பொழுதும் அதற்காக ஜனு‘ஜாத் தொழுகை தொழலா மென்பது ஒன்று; அதில் நபிபெருமான் (சல்அ’ம்) நான்கு ‘தக்பீ’ர் சொன்னர்களென்பது இன்னமொன்று.

11. பெண்மணிகள் பிரேதப் பெட்டியைப் பின்தொடர்ந்து செல்வது நன்றன்றென்று நவிலப்பட்டது எற்றுக்கெனின், அப் பூம்பாவையர் அப்பெட்டியைச் சுமந்துசெல்லும் முரட்டுவேலைக்கு உதவிபுரிய இயலார்கள் என்றதனு லென்க; அல்லது அப்பூங் கொடியினர் துக்க மிகுதியால் ஒருகால் தாங்க மாட்டாதவர் களாய்த் தளர்வுற்றுத் துவண்டு தொய்ந்து போய்விடுதல் கூடும். எனினும், இவ்வுத்தரவு கட்டாயச் சட்டமாக்கப்பட வில்லை யென்பது கவனிக்கத்தக்க தொன்ரும்.

வரிசையாய் (ஒழுங்காக) நிறுத்தினார்கள்; மேலும், நான்கு 'தக்பீ'ர் சொன்னார்கள்.[12]—(பு'கா. 23 : 54)

18. நபிகளுயகர் (சல்அ'ம்) நவின் றருளி னார்கள் :—

"எவ ரொருவர் பிரேதப் பெட்டியின் மீது தொழுகை நடாத்துகின்றாரோ...." அதனை அவர் கள் சலாத்—(தொழுகை) என்றே சொன்னார்கள்; இன்னமதில் ரு(க்)கூஉ' மில்லை. ஸஜ்த'ாவு மில்லை; மேலும், அத் தொழுகையின் பொழுது ஒருவரும் பேசக்கூடாது; இன்னமதில் 'தக்பீ'ரும் 'தஸ்லீமும் உண்டு; இன்னம், இப்'னு உ'மர் வுழூ' செய்து கொண்டா லன்றி, (ஜனு'ஜாத் தொழுகை) தொழ மாட்டார்.—(பு'கா. 23 : 56)

19. ஸமுரா கூறி யுள்ளார்: பிரசவத்திலே ஒரு பெண்பிள்ளை இறந்து போயினள்; ஆகவே, நபி பெருமான் (சல்அ'ம்) அவள்மீது ஜனு'ஜாத் தொழுகை தொழவைத்தார்கள்; இன்னம், அன்ன

12. இதற்குரிய முழுவிவரமும் பு'கா. 23:5-இல் காணப் படாநின்றது: அந்த இறந்துபோன மையித்தின் மீது தொழ வைக்க வேண்டிய ஜனு'ஜாத் தொழுகை அதற்கு முன்னிரவிலே ச'ஹாப'ாக்களால் தொழுது முடிக்கப்பட்டு விட்டது; ஆனால், அவ்விஷயம் நபிபெருமா னவர்கட்கு அறிவிக்கப்பட வில்லை. எனவேதான், எம்பெருமானார் மீட்டு மொருமுறை அப் புதை குழியின்மீது தொழவைத்தார்கள். அப்பொழுது அந்த இமாமுக் குப்பின்னே ச'ஹாப'ாக்கள் தாங்களாகவே வரிவரியாய்ச் சென்று நின்றுவிட்டார்க ளென்று அந்த 'ஹதீ':து கூறுகின்றது. பொது வாக ஜனு'ஜாத் தொழுகைக்கு மூன்று வரிசையேனும் குறைந்த பக்ஷம் நிற்கவேண்டும் (அபூ'த'ா—மிஷ். 5 : 5). ஆயின், இரண்டே வரிசை நின்றுவிட்டாலும் தோஷமொன்றுமில்லை (பு'கா. 23 : 54).

வளது (பிரேதப் பெட்டியின்) நடு மையத்திற் கெதிரிலே நின்றார்கள்.[13]— (பு'க'ா. 6 : 29)

20. 'தல்'ஹா கூறலாயினர்: நான் இப்'னு அ'ப்'ப'ாஸுக்குப் பின்னே நின்று ஒரு ஜனு'ஜாவின் தொழுகை தொழுது கொண்டேன்; அப்பொழுது அவர் (ஸூரா) 'பா(த்)தி'ஹாவை ஓதினர்; மேலும், கூறினர்: 'அது ஸுன்னத் தென்பதை நீங்கள் அறிந்துகொள்வான் வேண்டியே (நான் அவ்வாறு இரைந்து ஓதினேன்).'[14]— (பு'க'ா. 23 : 65)

---

13. இந்த 'ஹதீ':து மீட்டும் பு'க'ா. 23 : 64-இலே, "ஆண் பெண் ஜனு'ஜாத் தொழுகையிலே இமாம் எங்கே நிற்க வேண்டும்?" என்னும் தலைப்பின்கீழே வரையப்பட் டிருக்கிறது. ஆயின், இந்த 'ஹதீ':தால் விளக்கமாவது யாதெனின்: அந்த ஜனு'ஜாவிலுள்ள மையித் ஆணேயாயினும், பெண்ணேயாயினும், இமாமானவர் அதனெதிரில் ஒரே இடத்திலேதான் நிற்கவேண்டு மென்பதேதா னாகும். இமாம் அபூ' 'ஹனீ'பா (ர'ஹ்) அவர்கள் நடுமையம் என்பதை நெஞ்சுக்கு நேரேதானென்று வியாக்கியானம் செய்துள்ளார்கள்; ஆணேயாயினும், பெண்ணேயாயினும், இது தான் இமாம் நிற்றற்குரிய சரியான இடம் என்பதுதான் இந்த இமாமவர்களின் கருத்தா யிருக்கிறது.

14. இப்'னு அ'ப்'ப'ாஸ்(ரவி') ஸூரா 'பாத்தி'ஹாவை ஏனையோரெல்லாம் கேட்கும்படியாய் இரைந்தே ஓதினர்க ளென்பது அறியக்கிடக்கின்றது; அப்பொழுதுதான் அவர்கள்—(பின்நின்றவர்கள்) அது நபிபெருமானது பழக்க மென்பதைத் தெரிந்து கொள்ள வசதி ஏற்பட்டிருக்கும். இதனால் இனியொரு விஷயமும் விளக்கமாகாது போய்விடவில்லை: அஃதாவது, அத்தொழுகையில் 'பா(த்)தி'ஹா பிறருக்குக் கேளாது வாய்க்குள்ளேயே இமாமால் ஓதப்படவேண்டு மென்பதும், பின்னிற்பவர்க ளெல்லாருங்கூட அவ்வாறே ஓதவேண்டு மென்பதுமேயாம். ஏனைத் 'தக்பீ'ர்

21. அபூ' ஹுரய்ரா கூறினர்: அல்லா(ஹ்) வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"இறந்துபோன ஒருவர்மீது நீங்கள் தொழுது கொள்ளுங்கால், அன்னவருக் காகத் திரிகரண சுத்தியுடனே பிரார்த்தனை புரியக் கடவீர்கள்."[15]—(அபூ'த'ா—மிஷ். 5 : 5)

22. அபூ' ஹுரய்ரா கூறினர்: அல்லா(ஹ்) வின் திருத்தூதர் (சல்அ'ம்) ஜனு'ஜாவின் மீது தொழுகை நடாத்துங்கால், (பின்வருமாறு) சொல்வது வழக்கம் :—

"ஏ அல்லா(ஹ்)! எங்களுடைய ஜீவித்திருப்பவர்களையும், எங்களுடைய மரித்து விட்டவர்களையும்,

---

களுக்குப் பின்னேயும் இவ்வண்ணமாயே இமாமும் ஏனையவர்களும் வாய்க்குள்ளே எல்லாவற்றையும் ஓதவேண்டும் என்பர். முதல் 'தக்பீ'ர் கூறப்பட்டவுடனே ஸூரா 'பா(த்)தி'ஹா ஓதப்படல் வேண்டும்; இரண்டாவது 'தக்பீ'ருக்குப் பின்னே அஸ்'ஸ'லவாத்து அ'லன் நபி'ய்யி, தொழுகையின் இருப்பிலிருந்து ஓதுவதேபோல், ஓதப்படல் வேண்டும்; மூன்றுவது 'தக்பீ'ருக்குப் பின்னே அந்த இறந்த மனிதனுக்காகப் பிரார்த்தனை புரிதல்வேண்டும் ('ஹதீ'. 22, 23). நான்காவது 'தக்பீ'ருக்குப் பின்னே ஸலாம் கொடுபடல் வேண்டும். இதுதான் 'ஹதீ':து ஷரீ'பால் அறியப்பட்டுள்ள ஜனு'ஜாத் தொழுகையா யிருந்துவருகிறது. [இற்றை நாளில் தொழும் வழக்கத்திற்கு இஸ்லாம் எட்டாம் பதிப்பைப் பார்க்க.]

15. எனவே, இறந்தவர்பொருட்டுத் தொழப்படும் தொழுகை அவரது நன்மைக்காகவே செய்யப்படும் பிரார்த்தனையா யிருந்து வருகின்றமையால், எத்தகைய நல்ல பிரார்த்தனையும் அவருக்காகப் புரியப்படலா மென்பது ஏற்படுகிறது. 'ஹதீ':து ஷரீ'பில் பல்வகைப்பட்ட அத்தகைய பிரார்த்தனைகள் காணப்படாகின்றன. ஆனால், அனைவராலும் பொதுப்படையாய் ஓதப்படுவது அடுத்துவரும் 'ஹதீ':திலே காணப்படாகின்றது.

எங்களினின்று (இங்கு) 'ஹா'ஜிரா யிருப்பவர்களேயும், 'ஹா'ஜிரில் இல்லா திருப்பவர்களேயும், எங்களுடைய இளையவர்களையும், எங்களுடைய முதியவர்களையும், எங்களுடைய புருஷர்களையும், எங்களுடைய பெண்டுகளையும் நீ பொறுத்தருள்வாயாக. ஏ அல்லா(ஹ்)! எங்களுள்ளே எவனை நீ உயிருடனே விட்டுவைக்கின்றாயோ, அவனை நீ உனக்கு அடிபணிந்து — (இஸ்லாத்தின் மீது) நடக்குமாறு செய்யக்கடவாய்; இன்னம், எங்களுள்ளே எவனை நீ மரிக்கச் செய்து விடுகின்றாயோ, அவனை நீ ஈமான்மீதே மரிக்கச்செய்யக் கடவாய். ஏ அல்லா(ஹ்)! அவனது சம்மானத்தை நீ எங்களைவிட்டுப் பறித்து விடாதிருப்பாயாக; இன்னம், அன்னவனுக்குப் பின்னே எங்களை நீ சோதனைக்குள்ளே வீழ்த்தி விடாதிருப்பாயாக."— (அபூ'த'ா—மிஷ். 5 : 5)

23. (இமாம்) 'ஹஸன் கூறினார்: (இறந்து போன) குழந்தையின் மீது (ஸூரா) 'பா(த்)தி'ஹா ஓதப்படல் வேண்டும்; அப்பாலொருவர் (இப்படிச்) சொல்ல வேண்டும்: "ஏ அல்லா(ஹ்)! இனி வரப் போகும் (மறுமை) உலகில் பதிலுதவிக் குரிய பரிகாரமாகவும், முன்னடி செல்லும் 'முன்னோடும் பிள்ளை'யாகவும், ஒரு சம்மானமாகவும் இவனை நீ எங்களுக்கு ஆக்கிவைக்கக் கடவாய்."[16]— (பு'க'ா. 23 : 65)

---

16. இந்த 'ஹதீ':தின் இனியொரு பாட பேதப்படி, "சம்மானம்"—(அஜ்ரன்) என்னும் சொல்லுக்கு முன்னே து'க்'ரன்—(பேணிக்காத்த சேமநிதி) என்னும் பதம் காணப்படுகிறது. மரித்துப் பிறக்கும் சிசுவுக்கு ஜனா'ஜாத் தொழுகை அவசியமில்லை (பு'க'ா. 23 : 80).

24. அபூ' ஹுரைய்ரா கூறினர்: நபிகள் நாயகம் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

" எவனொருவன் தன்னையே கழுத்தை நெரித்து (மாய்த்து)க் கொள்கிறானோ, அவன் அக்கினியிலே தான் தனதுயிரை நெரித்து (மாய்த்து)க் கொள்கிறான்; எவனொருவன் தன்னையே ஈட்டிகொண்டு குத்திக்கொள்கிறானோ, அவன் அக்கினியிலேதான் தன்னைக் குத்திக்கொள்கிறான்."[17]—(பு'க'ா. 23 : 83)

25. ஜா'பி'ர் கூறினர்: நபிகள் திலகம் (சல்அ'ம்) ஒரே ஆடையில் உ'ஹு(தி'ன் யுத்தகளத்)தில் கொல்லப்பட்டவர்களி லிருந்து இரண்டு மனிதர்களைச் சேகரித்துச் சுருட்டினார்கள்; பிறகு, " இவர்களில் :குர்ஆனை எவர் அதிகம் அறிந்திருந்தார்?" என்று வினவினார்கள். அவ்விருவரி லொருவர் அவர்கட்குக் காண்பிக்கப் பட்டக்கால், அவர்கள்— (நபி பெருமானார்) அன்னவருக்கே ல'ஹ்தி'ல் முதலிட மளித்தார்கள்; " இறுதித் தீர்ப்புக்காக உயிர்த்தெழு நாளில் நான் இவர்கட்குச் சாக்ஷியா யிருப்பேன்," என்றுங் கூறினார்கள். இன்னம், அன்னவர்கள் (தங்கள்மீது படிந்திருந்த) அவர்களது உதிரத்துடனே புதைக்கப்பட வேண்டுமென்றும் உத்தரவிட்டார்கள்; அவர்கள் குளிப்

17. •இன்னமொரு 'ஹதீ':தின் பிரகாரம் நபிகள் திலகம்(சல்) தற்கொலை புரிந்துகொண்ட ஒரு மனிதனுக்காக ஜனா'ஜாத் தொழுகை தொழவைக்க முடியாதென மறுத்துவிட்டார்களென்றும், வேறு ச'ஹாப'ாக்களே அத்தொழுகையை நடாத்தினார்களென்றும் நாம் தெரிந்துகொள்கிறோம்.

பாட்டப்படவு மில்லை; அவர்கள்மீது (ஜன்‘ஜாத்) தொழுகை தொழப்படவு மில்லை.” –(பு’க’ா. 23 : 72)

26. இப்’னு உ’மர் கூறியுள்ளார்: பிரேதம் புதைகுழி யுள்ளே வைக்கப்படும் பொழுது, நபீ

---

18. ல‘ஹ்த்’ (ல‘ஹத’ என்பது, “அவன் ஒரு வஸ்துவின்பக்கல் சாய்ந்தான்,” என்று பொருள்கொள்ளும்) என்பது, புதைகுழியி னுள்ளே ஒரு சுவரோரமாய்த் தோண்டப்படும் நீளமான “பிள்ளைக்குழி”யாகும்; அதற்குள்ளேதான் மையித்—பிரேதம்—நீளமாய் வைக்கப்படும். அதன்மீது பரண்போல் மூங்கில் கீற்று அல்லது பாய்கொண்டோ, அல்லது பலகைகொண்டோ மூடப் படும். புதைகுழி மண்கொண்டு மூடப்படும்பொழுது, அந்தப் பிள்ளைக் குழியுள் உள்ள பிரேதம் தனியறையுள் இருப்பதே போல் சிதைவுறு திருக்கும். இந்த ‘ஹதீ’:தில் கூறப்பட்டுள்ள இருவருள் :குர்ஆனை அதிகமறிந்த மனிதன் ல‘ஹ்து’க்குள்ளும், மற்றொருவன் ஷ:க்கிலும்—பிள்ளைக் குழிக்கு வெளியிலும்—வைக்கப்பட்டனரென அறியக் கிடக்கின்றது. எனவே, ஷ:க்கில் மையித்தை வைத்துப் புதைப்பது தவறன்றென்பது வெள்ளிடை மலை. மரப்பெட்டியில் மையித்தை வைத்து அடக்கப்புகுங்கால், ல‘ஹ்தி’ன் தேவையில்லாது வெறும் ஷ:க்காகவே அப் புதைகுழி (ஒரு கிடங்குபோலே) இருக்கலாம்.

உ‘ஹதி’ன் போர்க்களத்திலே வீரசுவர்க்கம் புக்குமறைந்த வர்களின்—அம்முஸ்லிம்களின்—மேனிகள் கழுவிக் குளிப்பாட்டப் படவுமில்லை; அன்னவர்கள்மீது ஜனு‘ஜாத் தொழுகை தொழப் படவுமில்லை. அதேவிதமான அடக்கம், இன்றும் போர்க்களங் களிலும், அம்மாதிரியான வேறு ஏராள மரணமுண்டாகும் ஏனைச் சந்தர்ப்பங்களிலும் மேற்கொள்ளப்படலாம். ‘எனினும், எம்பெருமானு ரவர்கள் தங்கள் ஆயுட்கால எல்லைக்கு முன்னே அந்த உ‘ஹதி’ன் வீரத்தியாகிகளின் கல்லறைக்குச் சென்று ஜனு‘ஜாத் தொழுகை தொழவைத்தார்கள் என்பது சரித்திரச் சான்று.

பெருமானார் (சல்அ'ம்) (இவ்வாறு) சொல்வது வழக்கம் :—

"அல்லா(ஹ்)வின் திருநாமத்தைக் கொண்டும், அல்லா(ஹ்)வின் பாலும், அல்லா(ஹ்)வின் தூதரது சன்மார்க்கத்தின் மீதும்."— (மஸ்—மிஷ். 5 : 6)

27. நபிகள் திலகம்வரை தமது 'ஹதீ'ஃதைத் தொடர்ந்து செல்லாது, மு'ஹம்மத்' கூறியுள்ளார் : நபிகள் நாயகம் (சல்அ'ம்) பிரேதத்தின்மீது (அஃது அடக்கப்படுங்கால்) தங்களிரு கரங்களாலும் மூன்று முறை கைகள் நிறைய மண்ணை யள்ளிப் போட்டார்கள்; இன்னம், தங்கள் புதல்வன் இப்'ராஹீமின் புதைகுழிமீது தண்ணீர் தெளிக்குமாறும் ஏவினர்கள்; மேலும், அதன்மீது பருக்கைக் கற்களை அடுக்கிவைத்தார்கள்.[19]— (மிஷ். 5 : 6)

28. பேரீச்சம்பழம் விற்பவராகிய ஸு'ப்யான் சொல்வா ராயினர்: இவர் நபி பெருமானை ரது (சல்அ'ம்) புதைகுழி பூமிக்குமேலே ஒட்டகத் திமில் போலே குவிக்கப்பட் டிருந்ததைக் கண்டார்.[20]— (பு'கா. 23 : 96)

---

19. அரப் நாட்டின் மணற்குவியல் காற்றிலே தரிபடாது சீக்கிரம் பறந்துபோய் விடக்கூடுமாதலின், அவ்வாறு தண்ணீர் தெளிக்கப்பட்டு, அதன்மீது பருக்கைகளும் அடுக்கிவைக்கப் பட்டன போலும்.

20. நபிபெருமானது சமாதி முஸன்னம் போலே குவிக்கப்பட்டதென்று கூறப்பட்டிருக்கிறது; முஸன்னம் என்னும் அரபுச் சொல் "ஒட்டகத்தின் ஸனும் (திமில்) போலே பூமியைவிட்டு எழுப்பிக் குவிக்கப்பட்டுள்ளது," என்று பொருள்கொள்ளக் கூடியதாயிருக்கிறது.

29. ஜாபி'ர் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) கல்லறைக்குச் சுண்ணும்பு பூசுவதையும், அதன்மீது கட்டிடமொன்று நிருமிப்பதையும், அதன்மீது அமர்வதையும் தடைசெய்துள்ளார்கள்.[21]— (முஸ்—மிஷ். 5 : 6)

30. நபி பெருமானரின் (சல்'அம்) பிராட்டி ஆ'யிஷா (ரலி') கூறியுள்ளார்: இவருடைய குடும்பத்தவர் ஒருவர் இறந்தும், பெண்டுகளெல்லாம் வந்து அதன்மீது குழுமியும் கொண்டபொழுது, அப்பாலவர்கள் (எல்லாரும்) இறந்தவரின் குடும்பத்தினரையும் அவருடைய நெருங்கிய பந்துக்களையுமன்றிப் பிரிந்து போய்விட்ட பின்பு, 'தல்பீ'னை தையாரிக்கும் பாத்திரத்தைக் கொண்டுவரச் சொன்னர்கள்: அஃது அவ்வாறே சமைக்கப்பட்டது; அப்பால் :தரீத்' தையாரிக்கப்பட்டது; அதன்மீது, 'தல்பீ'னு போடப்பட்டது; பிறகு அப்பிராட்டியார்

21. கல்லறைகட்குச் சுண்ணும்பு பூசுவதும், அவற்றின்மீது கட்டிடம் கட்டுவதும் தடுக்கப்பட்டிருப்பது, பணத்தை வீண் விரயம் செய்யக்கூடாது என்பதனுலே யென்க; இன்னம், தக்யாக்களும், தர்காக்களும் அங்கு அடக்கப்பட்டுள்ள பெரியார்களுக்கு அளவுக்குமேற்பட்ட மரியாதை காண்பிக்கச் செய்து, விக்ரஹத் தொழும்பின் பக்கலே நல்லடியார்களையும் மெல்ல ஈர்த்துச் செல்லக் காரணபூதமாயிருப்பது கண்கூடு. ஹிந்துக் கோவில்களில் காணப்படும் பூஜை, நைவேத்தியம், ஆராதனை, நாட்டியம், நேர்ச்சை, மேள தாளக் கச்சேரி, கூண்டு, கொடியேற்றம் ஆதியவை போன்றவை யெல்லாம் அவ்லியாக்களின் தர்காக்களிலும் நடைபெற்றே வருகின்றன. ஐயகோ! சமாதிமீது குந்துவது மரியாதைக் குறைவைக் காண்பிப்பதால், அதுவும் தடுக்கப்பட்டுள்ளது.

கூறினர்: ' அதினின்று புசியுங்கள்; என்னெனின், யான் அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) (இவ்வாறு) சொல்லக் கேட்டிருக்கிறேன் :—

" தல்பீ'னு நோயாளி மனிதனுடைய ஹிருதயத்துக்கு விசிராந்தி யளிக்கிறது; இன்னம், (அன்னவரது) வருத்தத்தினின்று சிறிதைப் போக்குகிறது."[22] — (பு'க'ா. 70 : 24)

31. ஆ'யிஷா பிராட்டியார் கூறினர்; இப்'னு 'ஹாரி:தாவும், ஜஃ''பரும், இப்'னு ரவா'ஹாவும் கொல்லப்பட்டு விட்டார்களென்னும் செய்தி நபி நாயகத்திடம் (சல்அ'ம்) வந்து சேர்ந்த பொழுது, அவர்கள் (மஸ்ஜிதி'ல்) அமர்ந் திருந்தார்கள்; இன்னம், அன்னவர்கள் வதனத்தில் துக்கம் (தஹம்பிக்) காணப்படக் கூடியதா யிருந்தது;

---

22. தல்பீ'னு (லப'ன்—" பால் " என்பதிலிருந்து பிறந்துள்ள சொல்) என்பது, கோதுமைத்தவிடு பால் தேன், அல்லது தவிடு தேன் இரண்டுமே கொண்டு தையாரிக்கப்படும் ஒருவித ஆகார மாகும். :தரீதெ'ன்பது, கைவிரல்களால் உதிர்க்கப்படும் ரொட்டித் துணுக்குக்கள் மீது குழம்பு—(ஆணம்) வார்க்கப்பட்டுச் சித்தஞ் செய்யப்படுவது; சில வேளைகளில் எலும்பின் மூளைகளும் முட்டைகளும் கலந்து செய்யப்படுவதுமுண்டு; இது மிகவும் ருசியுள்ளதா யிருக்குமாம்.

இந்த 'ஹதீ':தில் கூறப்பட்டுள்ள மையித்தின்போழ்து பல ஜனங்கள் வந்து, துக்கங் கொண்டாடக் கூடினார்கள்; அவர்களெல்லாரும், ஒரு சிலரைத் தவிர்த்து, பிரிந்து சென்றுவிட்ட பின்னர் ஒரு சில நெருங்கிய உறவினரால் அந்த மையித்விழுந்த வீட்டிற்குச் சமையல் சமைத்தனுப்பப் பட்டது; எல்லாரும் அதனைப் புசிக்கவில்லை. எனினும், நெருங்கிய பந்துக்களும் உறவினர்களுமே அந்தச் சாப்பாட்டைச் சாப்பிடுவா ராயினார்கள்.

மேலும், யான் கதவின் குடுமியிடுக்கு வழியே பார்த்தேன். [23]— (பு'கா'. 23 : 40)

32. ஆ'யிஷா பிராட்டியார் கூறினர் : நபிகள் திலகம் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"இறந்து போனவர்களை ஏசாதீர்கள்; என்னெனின், அன்னவர்கள் தாங்கள் முன்னமே எதனை யனுப்பி யுள்ளார்களோ, அதனிடத்தே சென்றுளார்கள்." [24]— (பு'கா'. 23 : 97)

---

23. எனவே, உறவினர்களும் நண்பர்களும் வந்து இறந்தவர் வீட்டிலுள்ள முக்கியஸ்தரைக் கண்டு துக்கம் விசாரித்து, ஆறுதன் மொழியும் கூறிச் செல்லுமாறு வசதியளிப்பான் வேண்டி அவர் குறிப்பிட்ட இடத்திலே குந்தியிருப்பது நபிகள் நாயகத்தின் அனுஷ்டானத்தை அடியொற்றி நடக்கும் ஸுன்னத்தா யிருக்கிறது. மரித்தவர்பொருட்டுப் பிரார்த்தனை புரிவதும் தடுக்கப்பட் டில்லை. ஆயின், அன்னவருடனே வந்தவர் கட்டிக் கொண்டழுவது கூடாத காரியமாகும். இன்னம், நபிபெருமான் காலத்தில் ஜனு'ஜாத் தொழுகை தொழவைக்கப்பட்டது; பிறகு புதைக்கும் காரியம் முடிவடைந்த பின்னல் ஆங்கு ஒரு து'ஆ' ஓதப்பட்டது. இவ்வளவேதான். இதுபொழுது இறந்தவர்பெயரால் நடைபெறும் ஏனையவற்றிற் கெல்லாம் நபிகள் திலகத்தின் அனுமதி கிடையவே கிடையாதென்க.

24. இறந்தவர் முஸ்லிமாயிருந்தால் மட்டுமே ஏசக்கூடாதென எண்ணிவிடாதீர்கள்; அவர் எவரேயாயினும், இறந்தவரை இழித்துக் கூறுவது கூடாதென்க. இறந்தவர்கட்கு, பதில் கூறவோ, தங்கள் செய்கைகளுக்குச் சமாதானம் கூறவோ தருணமில்லாது போய்விட்டபின்னர் அன்னவர்களை ஏசுவதும் பேசுவதும் சட்டவிரோத மன்றோ? இறந்துபோனவர் குறித்துக் குணதோஷ ஆராய்ச்சி செய்யலாம்; இது நியாயமான முறையிலே செய்யப்படலாம். இதிலும் வரம்புகடந்து செல்வதும், ஏசுவதும் இழிவந்த செயல்களாம். குணதோஷ ஆராய்ச்சி வேறு; குற்றங் கூறி ஏசத்துவக்குவது முற்றிலும் வேறே.

33. ஆ'யிஷா பிராட்டியார் கூறியுள்ளார்: நபிகள் நாதரிடம் (சல்அ'ம்) ஒரு மனிதன் வந்து, 'என் மாதா திடீரென மரித்துவிட்டார்; இன்னம், அன்னவருக்குப் பேச இயன்றிருக்குமாயின், தர்மம் செய்திருப்பார் என்றே யான் நிச்சயமாய் நம்புகிறேன்; (இப்பொழுது) அவர்பொருட்டு யான் தர்மம் வழங்கினல், அன்னவருக்குச் சம்மானம் கிடைக்குமா?' என்று வினவலுற்றான்; (இதற்கு) "ஆம் (கிடைக்கும்)" என்று அவர்கள் விடையளித்தார்கள்.[25]— (பு'க'ா. 23 : 94)

---

25. இந்த 'ஹதீ':தாலும், அடுத்துவரும் 'ஹதீ':தாலும் இறந்தவர் பொருட்டுத் தர்மம் செய்வதால் அவருக்கு நன்மை கிடைக்குமென்பது நன்கு புலனுகின்றது இறந்தோருக் காகத் தர்மம் (ஏழை எளியவர்களுக்குச்) செய்வதென்பது ஆதிகால முஸ்லிம்களால் அநேகமா யனுஷ்டிக்கப்பட்டே வந்தது. இறந்துபோகு மனிதர்களின் தலைமாட்டிலே யிருந்து :குர்ஆன்ஷரீ'பு ஓதப்படலாம் ('ஹதீ'.1). ஆனல், இறந்த மையித்தின்மீது, அல்லது புதைகுழிமீது :குர்ஆன்ஷரீ'பு ஓதப்பட்டு வரும் இற்றைநாள் வழக்கத்திற்கு நபிபெருமானது ஆதாரமொன்றுமில்லை; இஃதொரு பி'த்'அ'த்தே யாகும். :குர்ஆன்ஷரீ'ப ஓதுவதென்பது தன்னளவிலே நன்மை பயக்கத்தக்க ஒரு காரியமேயாம். ஆயின், காசு கொடுத்துக் :குர்ஆனை ஓதுவதால், ஓதுகிறவருக்கு ஒரு புண்ணியமுமில்லை; நிச்சயமாக இறந்து போனவருக்கும் எத்தகைய நன்மையும் விளையப்போவ தில்லை. இன்னம், இறந்தபின் மூன்று நாள், ஐந்து, ஏழு, பத்து, இருபது, முப்பது, நாற்பதா நாள் போன்ற தினங்களில் செய்யப்பட்டு வரும் "'ஜியாரத்", "'பா(த்)தி'ஹா", "க'(த்)தம்" போன்றவற்றிற் கெல்லாம் நபிபெருமானது அனுமதி யொன்று மில்லை; இத்தகைய காரியங்கள் "தர்மம்" என்றும் கூறப்படுவது கூடாது; என்னெனின், இவையெல்லாம் ஏழைகளின் நன்மைக்காகவே செய்யப்படுவ தில்லை. பக். 280 பார்.

34. ஸஃ'தி'ப்'னு உ'ப'ாத'ாவின் ஆதாரத்தைக் கொண்டு அறையப்படுகிறது: .அவருடைய மாதா அவரில்லாதபொழுது இறந்துபோய்விட்டார். ஆகையால், அன்னவர், 'ஏ அல்லா(ஹ்)வின் திருத்தூதரே! யானில்லாதபொழுது என் தாயார் இறந்து போய் விட்டார்; அவர்பொருட்டு (இதுபொழுது) யான் தர்மம் செய்வேனாயின், அஃது அவருக்கு நன்மை பயக்குமா?' என்று வினவலுற்றார். (இதற்கு) "ஆம் (பயக்கும்)" என்று அப்பெருமானார் விடை பகர்ந்தார்கள். 'அவ்வாறாயின், அன்னவர் பொருட்டு எனது கனிவர்க்கத்தோட்டம் மிக்'ரா'பு தர்மமா யிருக்கிறது என்பதற்கு யான் தங்களைச் சாக்ஷியாக வைக்கிறேன்,' என்று அவர் கூறினார்.— (பு'க'ா. 55 : 15)

35. பு'ரய்த'ா கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) புதை குழிகளுக்கு அவர்கள் செல்லுங்கால், அன்னவர்கட்கு (இன்னவாறு சொல்ல)க் கற்பிப்பது வழக்கம் :—

"மூமினனவர்களினின்றும் முஸ்லிமானவர்களினின்றும் இவ் வுறைவிடத்தில் வசிப்பவர்களே! உங்கள்மீது சாந்தியுண்டாகக் கடவது; இன்னம், நாங்கள், அல்லா(ஹ்) நாடினால், உங்களுடனே நிச்சயமாக வந்து சேர்ந்துகொள்வோம்; எங்களுக்காகவும் உங்களுக்காகவும் நாங்கள் அல்லா(ஹ்)வின் பாலே க்ஷேமத்தைக் கோருகிறோம்."—(முஸ்—மிஷ். 5 : 8)

---

"ஆற்றுநர்க் களிப்போர் அறவிலை பகர்வோர்;
ஆற்றா மாக்கள் அரும்பசி களைவோர்
மேற்றே யுலகின் மெய்ந்நெறி வாழ்க்கை;
மண் திணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே"—

மணிமேகலை.

# அத்யாயம்—16

## தானமும் தர்மமும்

1. “தங்கள் ஆஸ்திகளை அல்லா(ஹ்)வின் பாதையிலே செலவு செய்கிறவர்களின் உவமையாகிறது, ஒவ்வொரு கதிரிலும் ஒரு நூறு வித்துக்களையுடைய (அப்படிப்பட்ட) ஏழு கதிர்களை முளைப்பிக்கின்ற ஒரு வித்தின் உவமையை ஒத்திருக்கிறது; இன்னம், அல்லா(ஹ்) தான் நாடியவருக்குப் பெருக்கிக் கொடுக்கிறான்; மேலும், அல்லா(ஹ்) விசாலக் கொடை கொடுப்பவனாக, மெத்த அறிகிறவனாக இருக்கிறான்” (:குர். 2 : 261).

2. “ஏ ஈமான் கொண்டவர்காள்! நீங்கள் சம்பாதித்ததில் நல்லவைகளிலிருந்தும், நாம் நுங்களுக்காகப் பூமியினின்று முளைப்பித்துக் கொடுத்ததிலிருந்தும் (தர்ம வழியிலே) செலவு செய்வீர்களாக; இன்னம், அதிலிருந்து கெட்டதைத் தர்மம் செய்ய நாட்டங் கொள்ளாதீர்கள்” (2 : 267).

3. “நீங்கள் தர்ம வழியில் பகிரங்கமாய்க் கொடுப்பீர்களேல், அது நல்லதுதான்; மேலும், அதனை நீங்கள் மறைத்தும் ஏழைகளுக்கு ஈந்தும் வருவீர்களேல், அது மெத்த சிலாக்கிய மானதே” (2 : 271).

4. “அல்லா(ஹ்)வைக் கொண்டும், இறுதித் தீர்ப்பு நாளைக் கொண்டும், வானவர்களைக் கொண்டும், வேதத்தைக் கொண்டும், நபிமார்களைக் கொண்டும் ஈமான்கொண்டு, அவன் மீது வைத்த உவப்பினிமித்தம் சுற்றத்தார் அகதிகள் (பொருள் முடையால்) வறுமையுற்றோர் வழிப்போக்கர் யாசகர் ஆகியோருக்கும், அடிமைகளை உரிமை விடுதற்கும் (தம்பாலுள்ள) ஐசுவரியத்தை அள்ளிக்கொடுத்தும், தொழுகையை

நியமத்துடனே கடைப்பிடித்தும், ஏழை விகிதத்தை ஈந்தும் நடப்பவர்களே சன்மார்க்கர்கள்" (2 : 177).

5. "'ஜ(க்)காத் தென்பது, ஏழைகளுக்கும் (பொருள் முடையால்) வறுமையுற்ற வர்களுக்கும், அதனை வசூல்செய்ய ஏற்படுத்தப்பட்டுள்ள தண்டற்காரர்களுக்கும், சத்தியத்தின் பக்கல் சாருமாறு செய்யப்பெற்றுள்ள உள்ள முடையவர் களுக்கும், அடிமைகளை உரிமை விடுதற்கும், கடனில் சிக்கி யுழல்பவர்க ளுக்கும், அல்லா(ஹ்)வின் பாதைக்கும், வழிப் போக்கருக்குமே உரித்தானது" (9 : 60).

தர்மம் என்பதைக் குறித்துக் காட்டக்கூடிய அரபுச்சொல் சத'(க்):கா என்பதா யிருக்கிறது ;—(சித்':க்—"உண்மை" என்பதி லிருந்து தோன்றியுள்ளது). 'ஜ(க்)காத்—சரியாகச் சொல்லவேண்டு மாயின், 'ஜ(க்)கா என்பதாகும்—என்பது அசலில் 'ஜ(க்)கவா என் பதா யிருக்கிறது; இது சத'(க்):கா என்பதற் குரிய வாய்பாட் டையே சார்ந்ததா யிருந்துவருகிறது. அதன் அசல் தாத்பரியம் "பெருக்கம்", அல்லது "பரிசுத்தம்" என்பதாகும். இஸ்லாத்தில் 'ஜ(க்)காத் தென்னும் தானம், பணக்காரர்களின் சேமிப்பிலிருந்து ஆண்டுக் கொருமுறை கணக்குப்பார்த்து இரண்டரை சதவிகிதம் கட்டாயமாய் வசூலிக்கப்பட்டு ஏழைகளுக்கு வினியோகிக்கப்படும் "ஏழை விகித"மா யிருந்துவருகிறது. இவ்வாறு பொருள்முடைப் பட்டவர்கட்குத் தானம் ஈந்து, அன்னவர்களின் கஷ்டத்தை நீக்குவது, முதலாளிகளின் முதல்கள் பரிசுத்த மடையச் செய்யவும் பெருக்கமடையச் செய்யவும் ஏதுவாயிருக்கிற தென் பது வெள்ளிடைமலை. எனவேதான், தர்மம்புரிவது ஒரு வித்தி லிருந்து அநேக வித்துக்கள் உற்பத்தியாவதற்கு உவமிக்கப் பட்டிருக்கிறது (தலை. ஆயத் 1). ஆயின், அவரவரும் சட்ட நியதியின்படி—('ஹலாலான வழியில்) சம்பாதிப்பதிலிருந்து தர்மம் வழங்குவதே அல்லா(ஹ்)வுக்குப் பொருத்தமா யிருக்கிறது (தலை. ஆயத் 2). தானதர்மங்கள் பகிரங்கமாகவும் வழங்கப்படலாம்; அந்தரங்கமாகவும் கொடுக்கப்படலாம் (தலை. ஆயத் 3). அவ ரவரும் தமதிஷ்டம் போலே வழங்கும் சத'(க்):காவோடு நின்று

விடாது, கடமையா யுள்ள 'ஜ(க்)காத்தையும் வருடந் தோறும் கணக்குப் பார்த்துக் கொடுக்கக் கட்டுப்பட்டுள்ளார்; நியமமான தொழுகையுடனே 'ஜ(க்)காத் தென்பதும் சேர்ந்து இஸ்லாத்தின் முதலிரண்டு மூலாதாரங்களா யிருக்கின்றன (தலை. ஆயத் 4; 'ஹதீ'. 10). 'ஜ(க்)காத்தை வசூலிக்கும் தண்டற்காரர்களும் அந்த வசூலிலிருந்து பங்கு பெறுகிறவர்களுடனே சேர்ந்து வீதம்பெற அருகதை பெற்றவர்களா யிருக்கிறார்கள் (தலை. ஆயத் 5). இதனால் விளக்கமாவது யாது? 'ஜ(க்)காத் தென்பது இஸ்லாத்தில் பொது நிதியாகவே வசூலிக்கப்படல் வேண்டும்; பொது நிதியாகவே வினியோகிக்கப் படவும் வேண்டும் என்பதேயாம்; இக்காரியம் தேசத் தலைவரால் — அரசரால் — அல்லது சமூகத்தலைவரால்— (நாட்டாண்மைக்காரரால்) நடாத்தப்படல் வேண்டும்; அவரே மேற்பார்வை யிடவும் கட்டுப்பட்டுள்ளார்.

'ஹதீ':துஷரீ'பிலும் தர்மத்துக்கு ஒரு முக்கியமான கௌரவமே யளிக்கப்பட் டிருக்கிறது. தர்மமென்பது 'ஹதீ':தில் மிக மிக விரிவான தாத்பரியத்தையே உடையதா யிருந்துவருகிறது: ஒரு மனிதனுக்கு, அல்லது ஒரு பிராணிக்கு ஏதேனுமொரு நன்மை செய்வது, அல்லது ஒரு தீமை செய்யாதிருப்பது, ஒரு சகோதர மனிதனைப் புன்முறுவல் பூத்த வதனத்துடனே முகாவலோகனம் செய்தல் போன்ற பற்பலவிதமான செய்கைகளெல்லாமும் தர்மமென்றே கருதப்படுகின்றன ('ஹதீ'. 1—6). இரகசியத்திலே தர்மம் செய்வதென்பது சிலாகிக்கப்படுகிறது ('ஹதீ'. 7) கஷ்டப் பாடுபட்டுத் தனது ஜீவனோபாயத்தைத் தானே தேடிக் கொள்வது மெத்த சிலாக்கியமா யிருக்க, அயலவரிடம் சென்று யாசகம் கேட்பது ஒரு வெறுக்கத்தக்க காரியமாய்க் கருதப்பட்டு வருகிறது ('ஹதீ'. 8).

'ஜ(க்)காத் தென்பது, சத'(க்):காவினும் வேறுபட்டு, ஒரு கட்டாயத் தானமா யிருந்துவருகிறது; இந்தக் கட்டாய "ஏழைவிகிதம்" இஸ்லாத்தில் தொழுகைக்கு அடுத்த படியிலேதான் நிறுத்தப்பட் டிருக்கிறது (பு'க'ா. சுருக். 2:5, 6; 'ஹதீ'. 9, 10). 'ஜ(க்)காத் கொடுப்பதற்குக் குறைந்தபக்ஷ முதல் வெள்ளியில் சற்றேறக் குறைய ரூபாய் 50 ஆகும் ('ஹதீ'. 11). ஓராண்டிலே மிச்சப்பட்டு

நிற்கும் எல்லாச் சேமிப்பின்மீதும் 2½ சதவிகிதம் ‘ஜ(க்)காத் கொடுக்கவேண்டும் (‘ஹதீ’. 12); அத்தொகை ஓராண்டு முழுதும் மிச்சப்பட்டதாய்க் கைவசம் இருந்திருக்க வேண்டும் (‘ஹதீ’. 13). ஸ்திரீகள் தங்கள் ஆபரணங்களினின்று ‘ஜ(க்)காத் கொடுக்கக் கட்டுப்பட் டுள்ளார்கள் (‘ஹதீ’. 14). வியாபாரியும் தன்பாலுள்ள சரக்குக்கள்மீது ‘ஜ(க்)காத் கொடுப்பது அவசியமாகும் (‘ஹதீ’. 15). ‘ஜ(க்)காத் தென்பது ஆஸ்தியின்மீது கொடுக்கப்படும் ஒருவித வரியாதலின், (மைனரான) அநாதையின் சொத்துக்கும் ‘ஜ(க்)காத் கொடுத்தேயாதல் வேண்டும் (‘ஹதீ’. 16). ‘ஜ(க்)காத் வரி முஸ்லிம் ராஜ்யத்தில் அதன் தலைவரிடம், அல்லது அதற்கென்று ஏற்பட்ட வரிடம் — ஒருத்தியோகஸ்தரிடம் — கொடுபடல்’ வேண்டும்; அஃதொரு மத்திப ஸ்தலத்திலே சேகரிக்கப்பட்டு, அங்கிருந்தே முறைப்படி வினியோகிக்கப்படல் வேண்டும் (‘ஹதீ’. 17, 18). ‘ஜ(க்)காத் கொடுப்பவர் தமதிஷ்டம் போலே வினியோகிக்க மூன்றிலொரு பாகம், அல்லது நான்கிலொரு பாகம் அன்னவர் கரத்திலே விடப்படலாம் (‘ஹதீ’. 19). பூமி ம‘ஹ்ஸூலின்மீது விதிக்கப்படும் வரி பத்திலொன்று, அல்லது இருபதிலொரு பாகமா யிருக்கிறது (‘ஹதீ’. 20). புதையலின்மீது, அல்லது பூமிக்குள் ளிருந்து வெட்டியெடுக்கப்படும் கனிப்பொருள்கள்மீது ஐந்தி லொருபங்கு வரியாய் வசூலிக்கப்படும் (‘ஹதீ’. 21, 22).

1. அபூ’ மூஸா கூறியுள்ளார்: நபிகள் நாய கம் (சல்அ’ம்) நவின்றருளினார்கள்:—

“சத’(க்):கா ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் விதி யாக்கப்பட் டிருக்கிறது.”

‘ஏ அல்லா(ஹ்)வின் நபி! இன்னம் (கொடுப் பதற்கு ஒன்றும்) இல்லாதவன் (என்செய்வது)?’ என்று அவர்கள்—(அப்பெருமானாருடைய தோழர் கள்) வினவினார்கள். (இதற்கு) அவர்கள் விடை யளித்தார்கள்:—

"அவன் தன்னுடைய கையைக் கொண்டு வேலை செய்து, தனக்கு லாபமும் சம்பாதித்து, பிறகு தர்மமும் செய்ய வேண்டும்."

'(அவ்வா றுழைத்தும்) அவன்பால் ஒன்று மில்லையேல்?' என்று அ(த்தோழராய)வர்கள் வினவினார்கள். (இதற்கு) அவர்கள் விடையளித்தார்கள் :—

"சங்கடத்துள்ளே சிக்கித் தேவையை நாடும் ஒருவனுக்கு அவன் உதவிபுரிய வேண்டும்."

'அவன் அதுவும் செய்ய முடியவில்லையாயின்?' என்று அவர்கள் வினவினார்கள். (இதற்கு நபி பெருமான்) விடையளித்தார்கள் :—

"அவன் நல்ல காரியங்களைச் செய்துகொண்டும், தீய (காரியத்)தைச் செய்வதைத் தவிர்த்துக் கொண்டும் இருத்தல் வேண்டும்;—இதுதான் அவனுக்குத் தர்மம்."*— (பு'க'ா. 24 : 31)

2. அபூ'ஹுரய்ரா கூறியுள்ளார்: நபி பெருமானார் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"விரல்களி லுள்ள ஒவ்வோர் எலும்பின் மீதும் தர்மம் (செய்ய வேண்டுவது) ஒவ்வொரு நாளும் விதி

---

* "நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்,
அல்லது செய்தல் ஓம்புமின்; அதுதான்
எல்லாரும் உவப்ப(து) அன்றியும்,
நல்லாற்றுப் படூஉம் நெறியுமா ரதுவே"—

புறநானூறு 195.

(நல்வினையைச் செய்ய மாட்டீ ராயினும், தீவினையைச் செய்தலைப் பரிகரிமின் ; அதுதான் யாவரும் புகழ்வரென்றது ஒழியவும், நல்ல நெறியின் கண்ணே செலுத்தும் வழியும் அதுதான்) என்பது ஈண்டு எமது நினைவிற்கு வருகின்றது.

யாக்கப்பட் டிருக்கிறது: ஒருமனிதன் தன் மிருகத்தின்மீது ஏறிச் சவாரி செய்வதில், அல்லது அப்பிராணியின் முதுகின்மீது அவனுடைய சாமான்களை ஏற்றுவதிலே ஒருவன் உதவி புரிகிறான்; இதுவும் தர்மந்தான்; இன்னம், ஒரு நல்லவார்த்தையும், தொழுகைக்காக நடந்து செல்ல ஒருவன் எடுத்துவைக்கும் ஒவ்வோ ரடியும் (கூடத்) தர்மந்தான்; இன்னம் (ஒருவருக்கு). வழிகாட்டுவதும் தர்மந்தான்."— (பு'க'ா. 56 : 72)

3. அபூ' ஹுரய்ரா கூறியுள்ளார்:நபிகணதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"(நடப்பதற்குத்) தொந்தரையா யிருப்பதைப் பாட்டையை விட்டு அப்புறப் படுத்துவதும் தர்மந்தான்."[1]— (பு'க'ா. 46 : 24)

4. ஜாபி'ர் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"ஒவ்வொரு நல்ல செய்கையும் தர்மந்தான்; புன்முறுவல் தவழ்ந்த வதனத்துடனே நீ யுன் சகோதரனைச் சந்திப்பதும் ஒரு நல்ல செய்கையே; நீ யுன் வாளியிலிருந்து உன் சகோதரன் பாத்திரத்தில் நீர்வார்ப்பதும் (நல்ல செய்கைதான்)"—(மஸ்—மிஷ். 6 : 6)

5. அபூ' ஹுரய்ரா கூறினர்: நபிகணயகர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

---

1. வழியிற் காணப்படும் கல் முள் ஆணி சீசாஓடு, அல்லது வேறு தொந்தரை கொடுக்கும் எத்தகைய வஸ்துவா யிருப்பினும், அதனை அப்புறம் அகற்றி விடுவது ஒருவித தர்மந்தான்.

"விதவை, ஏழை (இவர்)களி னிமித்தம் பிரயாசை எடுத்துக்கொள்கிற மனிதன் அல்லா(ஹ்) வின் பாதையில் பெரும் போராட்டம் புரியும் ஒரு வனைப் போலே, அல்லது (தொழுகைக்காக) இரவில் விழித்துக் கொண்டும் பகலில் நோன்பு நோற்றுக் கொண்டும் இருக்கும் ஒருவனைப் போலே இருக் கிறான்."— (பு'க'ா. 69 : 1)

6. அபூ' ஹுரய்ரா கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :

"ஒரு வியபிசாரி மன்னிக்கப்பட்டாள் : தன் நாக்கு நீண்டபடியே, நீருள்ள ஒரு கிணற்றின் உச்சியிலே, தாகவறட்சியால் அநேகமாய் உயிர் விட்ட வண்ணம் இரைத்துக் கொண்டு நின்ற ஒரு நாயைக் கடந்து சென்றாள் அன்னவள்; ஆகவே, அன்னவள் தன்னுடைய பாதகவசத்தைக் கழற்றி, தனது முக்காட்டுச் சீலையிற் கட்டி, அதற்காகத் தண்ணீரிழுத்துக் கொடுத்தாள் ; இதன் நிமித்தமாக அவள் மன்னிக்கப்பட்டாள்."

'மிருகங்களுக்கு (நன்மை) புரிவதில் எங்களுக் குச் சம்மான மிருக்கிறதோ?' என்று வினவப் பட்டது ; (இதற்கு) அவர்கள் சொன்னார்கள் :—

"புத்துயி ருள்ள ஈரலையுடைய ஒவ்வொரு பிரா ணிக்கும் (நன்மை) புரிவதிலே சம்மான மிருக் கிறது."[2]— (பு'க'ா., முஸ்—மிஷ். 6 : 6)

---

2. மிருகங்களுக்கு நன்மை புரிவது, மனிதப் பிராணிகட்கு நன்மை புரிவதே போலத்தான், ஒரு தர்மகாரியமாய்க் கருதப்பட்டு வருகிறது. இன்னம், மிருகங்களுக்குத் தீமை செய்வது, மனிதர் கட்குத் தீமை யிழைப்பதே போலத்தான் தடுக்கப்பட் டுள்ளது (பு'க'ா., முஸ்—மிஷ். 6 : 7).

7. நபிகட் டிலகத்தின் (சல்அ'ம்) ஆதாரத்தைக்கொண்டு அபூ' ஹுரய்ரா (இவ்வாறு) கூறியுள்ளார் :—

"தர்மம் வழங்குகிற மனித ஞெருவன் இருக்கிறான்; இன்னம், அன்னவன் அதனை மறைத்து வைக்கிறான்; ஆதலால், அவனது வலக்கரம் செலவு செய்வதை அவனுடைய இடக்கரம் தெரிந்து கொள்வது கிடையாது," (என்று அன்னவர்கள் சொன்ஞர்கள்).— (பு'க'ா. 24 : 13)

8. 'ஜுபய்ர் கூறி யுள்ளார்: நபிகணுதர் (சல்அ'ம்) சொன்ஞர்கள் :—

"உங்களுள்ளொருவன் தன்னுடைய கயிற்றை எடுத்துக்கொண்டு போய், தனது முதுகின்மீது ஒரு சுமை விறுயைச் சுமந்துவந்து, அப்பா லதனை விற்பாஞயின்,—இதைக் கொண்டு அல்லா(ஹ்) அவனது கண்ணியத்தைக் காப்பாற்றப் போதும்.—அவன் ஜனங்கள் பால் சென்று, அவர்கள் அவனுக்குக் கொடுத்தாலும் அவனுக்குக் கொடாவிட்டாலும், யாசகம் கேட்பதைக் காட்டிலும் அவனுக்கு மிக்க மேலானதா யிருக்கிறது."[3]— (பு'க'ா. 24 : 50)

---

3. இந்த 'ஹதீ:'தில் கையால் செய்யப்படும் வேலையின் பெருமை கூறப்பட் டுள்ளது; யாசகம் புரியாது கைப்பாடு பட்டுழைத்துக் காலங் கடத்தும் மனிதனது கண்ணியத்தை அல்லா(ஹ்)வே காப்பாற்றுகிறான். "தேகி!" என்று அயலவர்பால் சென்று கையேந்தி யாசிப்பதைப்பார்க்கினும், காட்டிற்குச்சென்று தலையில் விறகு சுமந்துவந்து விற்று ஜீவனோபாயம் செய்வது சாலச் சிறந்ததென்று நபிபெருமான் (சல்) வலியுறுத்தி யுள்ளார்கள். யாசகம் கேட்பவனுக்குக் கேட்கப்பட்ட மனிதன்

9. 'பா(த்)திமா பி'ன்த் :கய்ஸ் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர் கள் :—

"(ஒருவருடைய) முதலில் 'ஜ(க்)காத்தை யன்றி (வேறு) தர்மமும் இருந்து வருகிறது; பிறகு (பின் காணும்) ஆயத்தை ஒப்பித்தார்கள் :

"'நீங்கள் நுங்கள் வதனங்களைக் கிழக்குத் திக்கை நோக்கியும் மேற்குத் திக்கை நோக்கியும் திருப்பிக்கொள்வது நேரியமார்க்க மாகமாட்டாது'.... (2 : 177)."[4] (·திர்மி—மிஷ். 6 : 6)

---

ஏதேனும் ஈயட்டும், ஈயாமலே போகட்டும்; எப் பொழுதும் கைப்பாடுபட்டு உயிர்வாழ்வதே சாலச்சிறந்த துறையாகும். "கர வா(து) உவந்தியும் கண்ணன்னர் கண்ணும், இரவாமை கோடி யுறும்," என்பது குறள்.

யாசகத்தையே தம்முடைய ஜன்மத்தொழிலாய்க் கொண்டலை யும் மக்கள் இதனை ஊன்றிப்படிக்க மாட்டார்களா? இன்னம், பாடுபட்டுழைக்கக் கூடியவனேயாயினும், கூடாதவனேயாயினும், 'தேகி' என்பவனுக்கு இல்லையென்னது ஈயவேண்டும்; அவனது அருகதை, அல்லது அருகதையற்ற தன்மையைக் குறித்து நாம் வினவுவது சரியன்று; யாசகனுக்கு இல்லையென்னது ஈவதே இஸ்லாம் என்று கூறிவரும் புண்ணிய சீலரும் இதனை ஊன்றிப் பாரார்களா? திடசரீர முள்ளவன் யாசகத்தையே தனக்குரிய ஜன்மத்தொழிலாய்க் கொண்டு திரிவது கூடாதென்று நபிபெரு மானர் (சல் அ'ம்) நவின்றருளி யிருப்பது நுங்கட்குத் தெரியாதா? அந்தோ பரிதாபம்! ஐயகோ !!

4. தலை. ஆயத் 4 நோக்க; அதில் தர்மமே முதலில் கூறப் பட்டுள்ளது ;— ஆண்டவன்மீது வைத்துள்ள உவப்பி னிமித்தம் ஐசுவரியத்தை அள்ளிக்கொடுக்க வேண்டும். அத்தகைய தர்மத் துக்குப் பிறகே 'ஜ(க்)காத் தென்னும் தானம் கூறப்பட்டுள்ளது. எனவே, இஸ்லாத்தில் இருவிதக் கடமைகள் ஒவ்வொரு முஸ்லி

10. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறியுள்ளார்: நபிகள்திலகம் (சல்அ'ம்) முஆ'ஃத எமனுக் கனுப்பினார்கள்; மேலும், சொன்னார்கள் :—

"அல்லா(ஹ்)வைத் தவிர வணக்கத்திற் குரியவன் வேறெவனு மில்லையென்றும், நான் அல்லா(ஹ்)வின் தூதனாயிருக்கிறேனென்றும் சாக்ஷியம் கூற அவர்களை நீர் அழைக்கக் கடவீர்; அன்னவர்கள் இதனை அங்கீகரித்துக் கொள்வார்களாயின், அல்லா(ஹ்) அன்னவர்கள்மீது ஒவ்வொரு பகலிலும் இரவிலும் (சேர்ந்து) ஐந்து (நேரத்துத்) தொழுகைகளைக் கடமையாக்கியுள்ளானென்று அவர்களுக்குக் கூறக்கடவீர்; அவர்கள் இதனை அங்கீகரித்துக் கொள்வார்களாயின், அல்லா(ஹ்) அவர்கள் முதல்களில், அவர்களுள்ளே ஐசுவரியவான்களிடத்திருந்து எடுக்கப்பட்டும், அவர்களுள்ளே தரித்திரர்களுக்குக் கொடுக்கப்பட்டும் போகக்கூடிய தர்மமொன்றைக் கடமையாக்கியுள்ளானென்று அவர்களுக்குக் கூறக்கடவீர்."[5] — (பு'க'ா. 24 : 1)

---

யின்மீதும் சுமத்தப்பட்டுள்ளன: முதலாவதாக, அவரவரும் தத்தம்மாலியன்றமட்டும் தாமே வலுவில் செய்ய வேண்டுவதாய தர்மம் (சத':க்:கா) என்பதாயிருக்கிறது; அடுத்தபடியாக, அவரவரும் தம்பால் ஓராண்டு முழுதும் எஞ்சிநிற்கும் சொத்தின்மீது 2½ சதவிகிதம் ஆண்டுதோறும் கணக்குப் பார்த்துக் கொடுக்க வேண்டிய கடமையாய ஏழைவிகிதம் — ('ஜக்காத்) என்பதாயிருக்கிறது.

5. இந்த 'ஹதீ':தின் இறுதியிலே 'ஜ(க்)காத்தின் இலக்ஷணம் கூறப்பட்டிருப்பதைக் கூர்ந்து கவனிக்க: "ஐசுவரியவான்களின் ஆஸ்திகளிலிருந்து வசூலிக்கப்பட்டு, தரித்திரர்களின்

11. அபூ'ஸஈ'த்' கூறினர்: நபிகள் நாயகம் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"(வெள்ளியில்) ஐந்து அவ்:கியாவுக்குக் குறைந் திருப்பதில் 'ஜ(க்)காத்தில்லை ; ஐந்து ஒட்டகங்களுக் குக்குறைந்துள்ள விஷயத்திலும் 'ஜ(க்)காத் தில்லை ; ஐந்து வஸ:க்குக்குக் குறைந்திருப்பதிலும் 'ஜ(க்)காத் தில்லை."[6]— (பு'க'ா. 24 : 4)

---

நன்மைக்காக விநியோகிக்கப்படுவதே" அத்தகைய ஏழைவிகிதமா ('ஜக்காத்தா) யிருக்கிறது.

6. 'ஜ(க்)காத் விதிப்பதற்குரிய குறைந்தபக்ஷக் கணக்குக்கு நிசாப்' என்று பெயர் கூறப்படுகிறது. பழவர்க்கம், தான்யம் ஆகிய வற்றின் நிசாப்' ஐந்து வஸ:க்கா யிருந்தது ; இது பற்பல விதமான கணக்கின்படி 20 முதல் 30 வரையுள்ள மணங்கா யிருக்கிறது. ஒட் டகங்கள் விஷயத்தில் ஐந்தொட்டகமே நிசாப'ா யிருந்துவந்தன ; வெள்ளாடு செம்மறியாடுகளுக்கு 40 நிசாப'ா யிருந்தன. வெள்ளி விஷயத்தில் 5 அவ்:கியா, அல்லது 200 தி'ர்ஹம் நிசாப'ாகக் கணக் கிடப்பட்டது ; இது ரூ. 50-க்கு மேலே சிறிது அதிகமா யிருக்கும். வேறொரு 'ஹதீ':தின் பிரகாரம் (அபூ'த'ா. 9: 5) பொன்னுக்குரிய நிசாப'ானது இருபதுதீ'ஞரா யிருந்தது ; அஃதாவது, 3 அவுன்ஸ்— (ஏழரைத்தோலா) ஆகும். மீக்கூறியவற்றை யெல்லாம் கூர்ந்து நோக்குமிடத்து, இக்காலத்தில் ஒரே மாதிரியான நிசாபை' ஏற் படுத்துவதாயிருப்பின், அது மிக்க நலம்பயப்பதா யிருக்குமென்பது வெள்ளிடைமலை ; இன்னம், இற்றை நாளில் இவ் இந்தியநாட்டில் எல்லாப் பண்டங்களும் ரூபாய்க் கணக்கிலே மதிப்பிடப்பட்டு வருதலினால்—விற்றல் வாங்கல் எல்லாம் ரூ. அ. பைக் கணக்கி லேயே நடைபெற்று வருகின்றமையால்—எல்லாச் சொத்துக்கள் மீதும், சேமிப்புக்கள் மீதும் இந்திய வெள்ளி ரூ. 50-ஐயே 'ஜ(க்)காத்துக்குரிய நிசாப'ாக ஏற்படுத்துவதெனின், அது ஷரீஅ'த் துக்கு விரோதமில்லாமலே யிருக்குமென்பதுதான் இத்தமியேனின் (மௌலானு மு'ஹம்மத'லீயின்) அபிப்பிராய மாகும். அன்றுடப்

12. (‘ஹ’ஜ்ரத்) அ’லீ கூறி யுள்ளார்கள்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னர் கள்:—

“சவாரிக்காக உதவும் அசுவங்கள், வேலைக் காக உதவும் அடிமைகள் (இவர்கள் மீது ‘ஜக் காத்தை) நான் தள்ளுபடி செய்கிறேன்; ஆனல், வெள்ளியின்மீது, ஒவ்வொரு நாற்பது தி’ர்ஹத்தின் மீதும் ஒரு தி’ர்ஹம் (வீதம்) ‘ஜ(க்)காத் கொடுக்கக் கடவீர்கள்; மேலும், 190 தி’ர்ஹ மிருந்தால், ‘ஜ(க்) காத் (கொடுக்க வேண்டுவது) இன்று; ஆனல், அஃது இருநூற்றை எட்டி விட்டால், அதிலிருந்து ஐந்துதி’ர்ஹம் (‘ஜக்காத்தாகக் கொடுபடல்) வேண் டும்.”— (·திர்மி—மிஷ். 6 : 1)

13. இப்’னு உ’மர் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னர்கள்:—

“எவனெருவன் பொருளைச் சேகரிக்கிறானே, அதன்மீது ஓராண்டு கழியுமட்டிலே அதற்கு ‘ஜ(க்)காத் (கொடுக்க வேண்டுவது) இன்று.”[7]— (·திர்மி—மிஷ். 6 : 1)

14. உம்மு ஸலமா கூறினர்: நான் பொன்ன லாய ஆபரணங்கள் பூணுவதுண்டு. ஆகையால், ‘ஏ

---

புழக்கத்திற்கு அவசியமா யுள்ள சாமான்கள்மீது ‘ஜ(க்)காத் விதிக்கத் தேவையில்லை (·திர்மி—மிஷ். 6 : 2). நவரத்னங்கள்மீதும், நகைகள்—(அணிந்துகொள்ளப்படும் ஆபரணங்கள்) மீதும் ‘ஜ(க்) காத் கொடுக்கவேண்டுவ தின்று. (இன்னம், இஸ்லாம் நோக்க).

7. ஜ(க்)காத் தென்பது ஒவ்வோ ராண்டிலும் கணக்குப் பார்த்து, அவ்வருடத்திலே கைவயம் மிச்சப்பட்டு நிற்கும் சொத் தின்மீது கொடுபடல் வேண்டும். பொய்க்கணக்குக் கூடாது.

அல்லா(ஹ்)வின் தூதரே! இது (குவடு) சேகரிப்பாகுமா?' என்று யான் வினவினேன். (இதற்கு) அவர்கள் சொன்னார்கள் :—

"நீ அதினின்று 'ஜ(க்)காத் கொடுத்து விடக்கூடிய (முறையிலே) அவ் வெல்லையை எட்டியும், அதன்மீது ஜ(க்)காத் கொடுபட்டும் போகின்றது எதுவும் (குவடு) சேகரிப்பென்று கருதப்பட மாட்டாது."[8]— (அபூ'த்'ா—மிஷ். 6 : 1)

15. 'ஸமுரா கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) நாங்கள் வியாபாரத்துக்காகக் கொண்டுவந்து வைப்பதி(ன் பண்டங்களி)லிருந்தும் 'ஜ(க்)காத் கொடுக்க வேண்டுமென்று எங்களுக்குக் கட்டளை யிட்டார்கள்.[9]— (அபூ'த்'ா—மிஷ். 6 : 1)

---

8. உம்மு ஸலமா நபிபெருமானுடைய ஒரு பிராட்டியாயிருந்தார். இந்த 'ஹதீ':தின்பிரகாரம், அணிந்துகொண்டாலும் அணிந்துகொள்ளா விட்டாலும், பொன் வெள்ளி ஆபரணங்களுக்கு 'ஜ(க்)காத் கொடுக்க வேண்டு மென்பதே விளக்கமாகின்றது. இந்த 'ஹதீ':தில் கன்'ஜ் (குவடு) என்று வந்துள்ள பதம் கீழ்க்காணும் :குர்.ஆயத்தைச் சுட்டிக்காட்டுவதாயிருக்கிறது: "பொன்னையும் வெள்ளியையும் குவடாகச் சேகரித்தும், அல்லா(ஹ்)வின் பாதையிலே அதனைச் செலவு செய்யாமலும் (உலோபகுணம் படைத்து) இருப்பவர்கள் (குறித்தென்றாலோ) அன்னவர்களுக்கு நோவினையுண்ட வேதனையைக் கொண்டு நீர் அறிக்கை விடுக்கக் கடவீர்"—(9 : 34).

பொன்னும் வெள்ளியும், அவற்றின்மீது ஆண்டுதோறும் ஒழுங்கான முறையிலே 'ஜ(க்)காத்தும் கொடுக்கப்பட்டு வரின், அப்பொழுதுதான் குவடாகச் சேர்க்கப்படலாம் என்க.

9. வியாபாரத்தினிமித்தம் வைக்கப்பட்டிருந்த ஒட்டகங்கள் மீதும் ஆடுகள்மீதும் 'ஜ(க்)காத் வசூலிக்கப்பட்டு வந்தது. எனவே,

16. அ’ம்ரிப்’னு ஷு’ஐப்’ தம்முடைய பாட்டனாரின் ஆதாரத்தைக் கொண்டு கூறியுள்ளார் : நபிகணாயகர் (சல்அ’ம்) ஜனங்களுக்கு உபன்னியாசம் புரிந்து, மேலும் சொன்னார்கள் :—

“(சர்வ) ஜாக்ரதையா யிருக்கக் கடவீர்கள்! ஆஸ்தியுள்ள ஓரனாதைக்குப் பாதுகாவலனாக எவனொருவன் இருக்கிறானோ, அவன் அதைக்கொண்டு வர்த்தகம் புரியக்கடவன் ; மேலும், அதனை (அபிவிருத்தி செய்யாது) அவன் வாளா விட்டுவைப்பது கூடாது ; ஏனென்றால், ‘ஜ(க்)காத் தென்பது அந்த முதலைத் தின்றுவிடா திருக்க வேண்டும்.”[10] —(·திர்மி—மிஷ். 6 : 1)

---

ஏனை வர்த்தகங்களுக்காகவும் வைக்கப்பட்டுள்ள சரக்குக்களுக்கும் அந்த ஏழைவரி விதிக்கப்பட வேண்டு மென்றே அனுமானிக்க ஏது வுண்டாகின்றது. ஆடுமாடு ஒட்டகங்களெல்லாம் அடிக்கடி குட்டிபோட்டுப் பெருக்க மடைந்து கொண்டே வருவதால், அவற்றினின்று ‘ஜ(க்)காத் கொடுக்க இடமுண்டாகின்றது; ஆனால், வேறு உயிரில்லாப் பண்டங்கள் விற்பனையாகாமலே கட்டுகிடையாய்க் கிடந்துவிடலாம். இப்படிப்பட்ட வியாபாரச் சரக்குக்கள்மீது எப்படி ஏழைவரி விதிக்கப்பட்டு வந்ததென்று நிச்சயமாய்க் கூற ஆதாரபூர்வமான ‘ஹதீ’ஃதான்றும் காணப்படவில்லை ; ஆதலால், இத்தகைய வர்த்தகத்தால் கிடைக்கக்கூடிய இலாபத்தையே ‘ஜ(க்)காத்துக் குரிய நிசாப்’ கணக்காக எடுத்துக் கொண்டு ஏழைவிகிதத்தை வசூலிப்பது நியாயமெனக் கொள்ளப் படலாம்.

10. வருமானத்தின்மீது மட்டுமின்றி, சேமிக்கப்பட்ட சொத்தின்மீதும் சேகரிக்கப்பட்டுள்ள குவடுகள் மீதும் ‘ஜ(க்)காத் கொடுபடவேண்டி யிருப்பதால், அநாதக் குழந்தைகளின் ஆஸ்தியின்மீதுங்கூட ‘ஜ(க்)காத் கொடுபட வேண்டுவது அவசியமாயிருக்கிறது. ஆதலால், கால அடைவில் அனாதைகளின் முதலை

17. அபூ' ஹுரய்ரா கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) நிர்யாணமடைந்த பொழுது, அபூ'ப'க்ர் (அவர்களுடைய க'லீ'ப்பாவாக) ஆய்விட்டக்கால், அரபிகளுள் ளிருந்து (இஸ்லாத்தை) நிராகரிக்க நாடியவர்கள் நிராகரித்து விட்டார்கள்; (அப்பொழுது) உ'மர் கூறினார்: '(இஸ்லாத்தைத் தழுவிக்கொண்டுள்ள) ஜனங்களை நீர் எவ்வாறு சண்டை செய்கின்றீர்? இன்னம், அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள்: "அல்லா(ஹ்)வைத் தவிர வணக்கத்திற்குரியவன் (வேறெவனும்) இல்லையென்று[11] அவர்கள் கூறுகிறமட்டிலே ஜனங்களை யெதிர்த்துப் போர்புரிவதைத் தொடர்ந்து நடத்துமாறு யான் கட்டளையிடப் பெற்றுள்ளேன்; எவனொருவன் இதனைச் சொல்கிறானோ, அவனுக்கு அவனது பொருளும் அவனது ஆவியும்—அவன் கொடுக்க வேண்டுவது ஏதேனும் இருந்தாலன்றி, அவனது கணக்கு அல்லா(ஹ்)வின்பாலே இருக்கிறது—அன்னவனுக்குப் பத்திரமா யிருக்கும்."' (அது கேட்டு, அபூ'ப'க்ர்) சொன்னார்கள்:'அல்லா(ஹ்)வின்மீது சத்தியமாக! தொழுகைக்கும் 'ஜ(க்)காத்துக்கும் இடையிலே வேற்றுமை பாராட்டுகிறவர்களை நான் சண்டை செய்தே தீர்வேன்; என்

---

அந்த ஏழை வரியால் விழுங்கப்பட்டுப் போகா திருக்கும் பொருட்டு, அந்த அகதிகளின் பாதுகாவலர்கள் அந்த முதலைக் கொண்டு வியாபாரம் செய்து இலாபத்தைப் பெருக்குமாறு ஆணையிடப் பெற்றுளார்கள்.

11. இதன் தாத்பரியம் என்ன வென்பதற்கு, பு'க'ா. சுருக். 19 : 17-இல் காண்க.

னெனின், 'ஜ(க்)காத் தென்பது சொத்தின்மீது (விதிக்கப்படும்) ஒருவித வரியா யிருக்கின்றது; அல்லா(ஹ்)வின் மீது சத்தியமாக! அவர்கள் அல்லா(ஹ்)வின் திருத்தூதருக்கு (சல்அ'ம்) வழக்கமா யனுப்பிக்கொண் டிருந்த ஒரு பெட்டை யாட்டுக் குட்டியை யேனும் என்பாலிருந்து (அனுப்பாது) நிறுத்திக்கொள்வார்க ளாயின், அவர்கள் (அவ் வாறு) அதனை நிறுத்திக் கொள்வதற்காக நான் அன்னவர்களுடனே போர் புரிவேன்.' (அது செவி யேற்று) உ'மர் கூறினர்: 'அல்லா(ஹ்)வின் மீது ஆணையாக! அல்லா(ஹ்)வே அபூ'ப'க்ரின் ஹிருதயத் தை(ச் சத்தியத்தைக் கிரஹிக்கு மாறு) திறந்து விட் டிருக்கிறன்; ஆகவே, அஃது துண்மைதான் என்பதை யான் அறிந்து கொண்டேன்."[12]— (பு'க'ா. 24 : 1)

---

12. அக்காலத்தில் முஸ்லிம் அரசாங்கத்துக்கு முக்கிய முதல் வருவாயா யிருந்தது 'ஜ(க்)காத் வரியாகவே இருந்துவந்தது. நபிகள் திலகத்தின் காலத்திலே இந்த ஏழை வரி பை'த்துல்மால் என்னும் அரசாங்கப் பொதுப் பொக்கிஷத்திலே—(திரவிய சாலையிலே) வசூலித்துச் சேமிக்கப்பட்டு வந்தது. நபி பெருமா ஞரது நிர்யாணத்துக்குப் பின்னே, அதற்கு முன்னே சமீபத்திலே இஸ்லாத்தைத் தழுவிக்கொண் டிருந்த சிற்சில கூட்டத்தினர் தீ'னுலிஸ்லாத்தை விட்டு வெளியேறிவிட்டனர்; மற்றுஞ் சிலர் பை'த்துல்மாலில் 'ஜ(க்)காத் தொகையைக் கட்ட மறுத்துவிட் டிருந்தார்கள்; இப்படிப்பட்ட மனிதர்களே இந்த 'ஹதீ':தில் குறிக்கப்பட் டிருக்கிறார்கள்; என்னெனின், "அவர்கள்...... அனுப்பிக் கொண்டிருந்த ஒரு பெட்டை யாட்டுக் குட்டியை யேனும்...நிறுத்திக் கொள்வார்க ளாயின்," என்னும் அபூ'ப'க் ரின்(ரலி') சொற்கள் இதனையே உறுதிப் படுத்துகின்றன;

18. அபூ' ஹுரய்ரா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) ப'னூஸுலய்ம் (கூட்டத்தாரிட மிருந்து) 'ஜ(க்)காத் வசூல் செய்ய அஸத்' (கூட்டத்தி)னின்று ஒரு மனிதனை நியமித்திருந்தார்கள்;—அவன் இப்'னுல்லுத்பி'ய்யா என்றழைக்கப் பட்டான்; ஆகவே, அவன் அப் பெருமானரிடம் வந்த பொழுது, அவர்கள் அவனை அதற்குக் கணக்குக் கேட்டார்கள்.[13]— (பு'க'ா. 24 : 67)

---

இன்னம், "தொழுகைக்கும் 'ஜ(க்)காத்துக்கும் இடையிலே வேற்றுமை பாராட்டுகிறவர்கள்" என்பதும் இக்கருத்தையே ஊர்ஜிதப் படுத்துகின்றது. இவர்கள் இஸ்லாத்தைத் துறந்து முர்த்தத்' ஆய்விடவில்லை; ஆனால், பை'த்துல் மாவிலே 'ஜ(க்)காத் வரியைக் கட்ட முடியாதென்றே மறுதலித்து வந்தார்கள். இது மத்திய அரசாங்கத்தின் அதிகாரத்தை அங்கீகரிக்க மறுத்ததாகவே யிருந்துவந்தது. ஆயின், அதுகாலை 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ரவர்கள் எடுத்துக்கொண்ட ஏற்பாட்டைக் கவனிக்கப் புகுமிடத்து,'ஜ(க்)காத்தென்பது அவரவராலும் தத்தம் பிரியம்போலே செலவு செய்யப்படக் கூடாதென்றும், அந்தத் தொகை முழுவதும் பொது க''ஜானவில் வசூலிக்கப்பட்டு, அங்கிருந்தே அதிகாரிகளால் அது வினியோகிக்கப்பட வேண்டுமென்றும் நாம் நன்கு அறிந்துகொள்ளக் கடவோம்.

13. இந்தத் தண்டற்காரர் தாம் கொணர்ந்ததிலிருந்து ஒரு பகுதியைத் தாமே வைத்துக்கொண்டு, அது தமக்கு இனமாயளிக்கப்பட்ட தென்று சமாதானம் கூறினர். நபி பெருமானர் அவ் விஷயத்தைச் செவ்வையாய் விசாரித்து, 'ஜ(க்)காத் வரி வசூலிக்கச் செல்லும் எந்தத் தண்டற்காரனும் சொந்த ஹோதாவில் சம்மானமொன்றும் பெறக் கூடாதெனத் தீர்மானம் செய்து விட்டார்கள். இதன் முழு விருத்தாந்தமும் பு'க'ா. 51 : 17-இல் கூறப்பட்டிருப்பதைக் காணலாம்.

19. ஸஹ்ல் கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னார்கள்:—

“நீங்கள் ஓர் அபிப்பிராயத்தைக் கொண்டு விடுங்கால், அப்பால் (‘ஜக்காத்தை) எடுத்துக் கொண்டு, மூன்றிலொரு பாகத்தை விட்டு விடக் கடவீர்கள்; நீங்கள் மூன்றிலொன்றை விடாவிட்டால், நான்கிலொன்றை யேனும் விட்டு விடுங்கள்.”[14]—(‘திர்மி—மிஷ். 6 : 1)

20. அ’ப்’து’ல்லா(ஹ்) கூறியுள்ளார்: நபிகணாதர் (சல்அ’ம்) சொன்னார்கள்:—

“மழையாலும் ஊற்றுக்களாலும் நீர்பாய்ச்சப் பெற்ற நிலங்களி(ன் ம‘ஹ்ஸூலி)ல், அல்லது பூமியின் மேற்பரப்பிலே ஓடிக்கொண் டிருக்கும் தண்ணீரால் நீர் பாய்ச்சப் பெற்றதில் பத்திலொரு பங்கு (‘ஜக்காத்); கிணறுகளால் நீர் பாய்ச்சப் பெற்றதில் இருபதிலொன்று.”[15]—(பு’க’ா. 24 : 55)

---

14. அஃதாவது, மூன்றிலொரு பகுதி அல்லது நான்கிலொரு பகுதி ‘ஜ(க்)காத் கொடுப்பவரிடமே விட்டுக் கொடுத்துவிடப் படலாம்; அதனை அன்னவர் தமதிஷ்டம் போலே (விதிக்குக் கட்டுப்பட்டு) வினியோகித்துக் கொள்ளலாம்.

15. ஏனைப் பொருள்கள்மீது வரி விதிப்பதற்கும் நிலத்தில் விளையும் ம‘ஹ்ஸூல்மீது வரி விதிப்பதற்கும் சிறிது வேறுபாடுண்டு; முஸ்லிம் ராஜ்யத்திற்கு இதுவே நிலவரியா யிருந்து வந்தது. இஃது இந்தியாவில் பிரிட்டிஷ் அரசாங்கத்தால் விதிக்கப்பட்டுவரும் நில வரியில் ஒரு சிறு தொகையாகவே இருந்து வருவது கண்கூடு. முஸ்லிம் ராஜ்யமல்லாத அன்னியராட்சியில் நிலவரி யென்பது அவர்களுடைய அரசாங்கத்துக்குப் போய்ச் சேர்ந்துவிடுவதாயின், அப்பால் அந்த நிலத்தின் ம‘ஹ்ஸூலில் ஓராண்டுவரை எஞ்சிநிற்கும் தொகைமீது ‘ஜ(க்)காத் கொடுபடல்

21. அபூ' ஹுரைய்ரா கூறியுள்ளார்: நபிகள் திலகம் (சல்அ'ம்) நவின்றருளினார்கள் :—

"....புதையலில் (அல்லது கனிப்பொருள்களில்) ஐந்தி லொன்று (அரசாங்கத்தினரால் எடுத்துக் கொள்ளப்படும்)."[16]— (பு'க'ா. 24 : 66)

22. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினர்: அம்ப ரென்பது புதையற் பொருளன்று; அது கடலால் வெளியில் கக்கப்படும் ஒரு வஸ்துவாகும்.

இன்னும், (இமாம்) 'ஹஸன் கூறினர்: அம்பரி லும் முத்திலும் ஐந்திலொன்று (அரசாங்கத்தால் எடுத்துக் கொள்ளப்படும்).[17]— (பு'க'ா. 24 : 65)



வேண்டும். நிலத்தின்மீது ஆங்கிலேயருக்கோ பிரெஞ்ச்சுக்கார ருக்கோ நிலவரி செலுத்திவிடுவதனால், அம் ம'ஹ்ஸூலின்மீது 'ஜ(க்)காத் கொடுக்க வேண்டுவதின்று என்று வாதிக்கும் "மிராஸ் தார்" களெல்லாம் இதனை ஊன்றிப் படிப்பார்களாக.

16. புதையலி லிருந்து ஐந்திலொரு பங்கை அரசாங்கம் எடுத்துக்கொள்ளு மென்பது 'ஜ(க்)காத்தாக மாட்டாது; என் னெனின், இஃது ஆண்டுதோறும் வசூலிக்கப் படுவதில்லை; ஆனால், ஒரேமுறைதான் வசூலிக்கப்படுகிறது.

17. உ'மர் (ரலி') அம்பரிலிருந்து ஐந்திலொரு பாகத்தை அரசாங்கத்துக்காக வசூலித்து வந்தார்கள். இவ்விஷயத்தில் இமாம் 'ஹஸனது(ரலி') அபிப்பிராயமே பொதுவாக அங்கீகரிக் கப்பட்டுவருகிறது.

# அத்யாயம்—17

## நோன்பு நோற்றல்

1. "ஏ ஈமான் கொண்டவர்காள்! நீங்கள் (தீமையை விட்டுத்) தற்காத்துக் கொள்ளும் பொருட்டு, உங்களுக்கு முன்னுண்டாயவர்கள் மீது அது கடமையாக்கப்பட்டதே போல, உங்கள் மீதும் அந்நோன்பு கடமையாக்கப்பட்டிருக்கிறது...... மேலும், அ(ம்மாதத்)தில் நோன்பு நோற்க இயலாதவர்கள் ஓர் ஏழைக்கு அன்னமளித்(துக் கழுவாய் தேடிக்கொள்ளு)தல் வேண்டும்" (:குர். 2 : 183, 184).

2. "மனிதர்களுக்கு நேர்வழி காட்டியாகவும்......அமைந்துள்ள :குர்ஆன் அருளப்பட்டது ரமல'ான் மாதமேயாம். ஆதலால், உங்களுள் எவனொருவன் அம்மாதத்தில் உள்ளூரிலிருக்கிறானோ, அதிலவன் நோன்பு நோற்கக் கடவன்; இன்னமொருவன் பிணியாளியாகவேனும் பிரயாணத்திலேனும் இருப்பானாயின், வேறு நாட்களில் (அவ னதைப்) பூர்த்தி செய்துகொள்ளக் கடவன்" (2 : 185).

3. "நோன்பு நாட்களின் இரவிலே நுங்கள் மனைவியர்பால் நெருங்குவது நுங்கட்கு அனுமதியளிக்கப்பட் டிருக்கிறது; அவர்கள் உங்களுக்கு உடையாகவும், நீங்கள் அவர்களுக்கு உடையாகவும் இருக்கின்றீர்கள்...இன்னம், வைகறையில் இரவின் இருளைவிட்டுப் பகலின் ஒளி வேறு பிரிந்து காணப்படும்வரை புசித்தும் பருகியும் வருவீர்களாக; அப்பால் இரவுவரை நோன்பைப் பூர்த்தி செய்வீர்களாக" (2 : 187).

o

நோன்பு நோற்பதற்கு வேண்டிய கட்டளைக ளெல்லாம் :குர். 2 : 183—187 ஆயாத்களிலேயே அடங்கிக் கிடக்கின்றன. நோன்பென்பது ரமல'ான் மாதத்தின் 29, அல்லது 30 தினங்களிலே நோற்கப்படல் வேண்டும் (தலை. ஆயத் 2). ஒவ்வொரு நாளும்

கிழக்கு வெளுக்குமுன் முதற்கொண்டு சூரியாஸ்தமயம் வரை உண்பது குடிப்பது மனைவியுடன் சுகிப்பது ஆகிய காரியங்களை விட்டு நீங்கியிருப்பதே நோன்பாயிருக்கிறது (தலை. ஆயத் 3). நோன்பென்பது 'ஹதீ' : துகளில் இஸ்லாத்தின் முக்கிய தூண்களில் ஒன்றென்று கூறப்பட்டிருக்கின்றது (பு'க'ா. சுருக். 2 : 5, 6). சுயமே அளவுக்கதிகமாய் நோற்கப்படும் நோன்பு தடுக்கப்பட்டுள்ளது (பு'க'ா. சுருக். 2 : 3). நோன்பு நோற்குங்கால், மனிதர்கள் தீயன செய்தல், கெட்ட பேச்சுப் பேசுதல், பொய் குறளை ஆதியவை கூறுதல் முதலியவற்றினின்று தவிர்ந்து கொள்ளும் பழக்கத்தைக் கற்றுக்கொள்வது அத்தியாவசியமாகும் ('ஹதீ'. 1, 2) ; சகோதர மக்களுக்குத் தானதர்மம் வழங்கும் பழக்கத்தையும் மேற்கொள்ளுதல் வேண்டும் ('ஹதீ'. 3). ரமல'ான் மாதப் பிறை தெரிந்தது முதல் இந்நோன்பு ஆரம்பமாகி, அடுத்து வரும் ஷவ்வால் மாதப் பிறை பிறக்குமட்டும் தொடர்ந்து நடக்கும். ரமல'ான் மாதம் சாந்திரமானக் கணக்கைப் பின்பற்றி நடப்பதால், இந்த நோன்பின் ஆதியும் அந்தமும் பிறையின் தோற்றத்தையே சார்ந்து நிற்கின்றன (பு'க'ா. சுருக். 12 : 1, 2). சந்தேக தினத்திலே நோன்பு நோற்பது கூடாது ('ஹதீ'. 4). கிழக்கு வெளுக்கத் தொடங்கும்பொழுது நோன்பு துவக்கமாகிறது ('ஹதீ'. 5) ; சூரியாஸ்தமயத்துடனே முடிவுறுகின்றது ('ஹதீ'. 6). நோன்பைத் தொடங்குங்கால், விடியு முன்னே ஒரு வேளை ஆகாரம் செய்துகொள்ளுதல் நலமாம் ('ஹதீ'. 7) ; கிழக்கு வெளுக்கு முன்னே அதனைப் புஜித்தல் வேண்டும் ('ஹதீ'. 8).

ஒருவன் பிரயாணம் செய்துகொண்டு செல்லுங்கால், நோன்பை முறித்துவிடலாம் ; ஆனால், சகிக்க இயலாத சிரமம் இருந்தாலன்றி, அந்நோன்பை அனாவசியமாய் முறிப்பது கூடாது ('ஹதீ'. 9, 10). நோய்வாய்ப்பட்டிருப்பவர், கர்ப்பிணியாயிருப்பவள், சிசுவுக்குப் பால் கொடுப்பவள், வயது முதிர்ந்து தளர்ந்து போயிருப்பவர் ஆகியவர்கள் ஒவ்வொரு நாளும் ஓரேழைக்கு (இருவேளையும்) உண்டியளித்து நோன்பை நோற்காதிருக்கலாம் ('ஹதீ'. 11). மாதவிடாயிலிருப்பவள் அதுசமயம் நோன்பில்லாதிருக்கலாம் ; ஆயின், அப்பாலவள் அத்தனை நோன்புகளையும்

நோற்றுத் தீர்த்தல் வேண்டும் (‘ ஹதீ’. 12). எக்காரணத்தாலேனும் ஒரு ரமல’ானில் விட்ட நோன்பை எடுத்து நோற்க நேர்ந்தால், அதனை அடுத்துவரும் ரமல’ானுக் குள்ளே எப்பொழுதேனும் எடுத்து நோற்கலாம் (‘ ஹதீ’. 13). ஈ’து’டைய தினங்களில் நோன்பு நோற்பது கடுமையாய்த் தடுக்கப்பட்டுள்ளது (‘ ஹதீ’. 14). ஒருவன் தான் நோன்பிருப்பதை மறந்து உண்டாலும் குடித்தாலும் அந் நோன்பு முறிந்துபோவதில்லை (‘ ஹதீ’. 15). சரீரத்தைக் குளிரச் செய்தல், குளித்தல், வாய் கொப்புளித்தல், சமையற் பாத்திரத்தில் சித்தமாகும் பதார்த்தங்களை ருசி பார்த்தல் ஆகியவை நோன்பை முறிப்ப தில்லை (‘ ஹதீ’. 16); வாந்தி ‘ யெடுப்பதும் முறிக்க மாட்டாது (‘ ஹதீ’. 17). இஃ’திகா’ப்—அஃதாவது, ரமல’ான் மாத இறுதிப் பத்துத் தினங்களில் பள்ளிவாசலிலே தங்கிவிடுதல், ஆயின் அவசியத்தினிமித்தமா யன்றி வேறு காரியங்கட்காக வெளியில் செல்லாதிருத்தல் — என்னும் பழக்கத்தை நோன்பு நோற்பவர் மேற்கொள்ளலாம்; இவ் விரவுகளிலேதாம் லைலதுல் :கத்’ரென்னும் மாட்சிமை தங்கிய இரவைத் தேடிப் பிடித்தல் வேண்டும் (‘ ஹதீ’. 18, 19).

1. அபூ’ ஹுரய்ரா கூறியுள்ளார்: அல்லா(ஹ்) வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னார்கள்:—

“நோன்பென்பது ஒரு கேடகமா யிருக்கிறது; அதைக் கொண்டு ஒருவன் தன்னைத் தற்காத்துக் கொள்கிறான்; ஆதலால், (நோன்பு நோற்கும்) அவன் அசுசியான — (கெட்ட) பேச்சைப் பேசாதிருக்கக் கடவன்; இன்னம், அன்னவன் மடத்தனமாக நடந்து கொள்ளா திருக்கக்கடவன்; இன்னம், அன்னவ னுடனே எவனேனும் சண்டைக்கு வருவனாயின், அல்லது அவனை ஏசிவிடுவனாயின், ‘ நான் நோன்பு நோற்கிறேன்,’ என்று அவன் இருமுறை கூற வேண் டும். இன்னம், எவனது கரத்திலே எனது ஆத்மா

இருக்கின்றதோ அவன்மீது சத்தியமாக, நோன்பு நோற்பவனுடைய வாய் வாசனை அல்லா(ஹ்)வின் அபிப்பிராயத்திலே கஸ்தூரியின் வாசனையினும் சிறப்புற்றதா யிருக்கின்றது. [அல்லா(ஹ்) சொல்லுகிறான்]: அவன் எனக்காகத் தன்னுடைய ஆகாரத்தையும் தனது குடிப்பையும், தன்னுடைய (மனைவியுடன் உறவாடும்) வேட்கையையும் துறந்துவிடுகிறான்; நோன்பு நோற்பது எனக்காகவேயாம்; எனவே, யான் அதற்குரிய சம்மானத்தை யளிப்பேன்;' மேலும், ஒரு நற்கிரியை அதைப்போன்ற பத்துமடங்கு சம்மானத்தைக் கொண்டுவரும்."[1]— (பு'க'ா. 30 : 2)

2. அபூ' ஹுரய்ரா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"பொய் சொல்வதையும், அதற்கேற்ப நடப்பதையும் கைவிடாதவன் எவனோ, அவன் தனது

---

1. ஆண்டவன் ஏவியதற்காக உண்பதையும், குடிப்பதையும், வீடு கூடுவதையும்—இவை 'ஹலாலாயிருந்தும்—ஒருவன் விட்டுவிடுங்கால், 'ஹராமாயிருக்கும், வட்டியால் வரும், அல்லது திருட்டுக் கொள்ளையால் கிடைக்கும் போஜனம், சட்டவிரோத ('ஹரா)மான குடிப்பு, 'ஹராமான 'ஜினா—(வியபிசாரம்) ஆகியவற்றைவிட்டு அன்னவன் எவ்வளவு தூரம் விலகி நிற்கவேண்டுமென்பது செவ்வனே விளங்கக் கிடக்கின்றது. இன்னம், நோன்பு நோற்கும்போது ஒருவன் தன் பஞ்சேந்திரிய இச்சைகளனைத்தையும் விட்டு நெடுந்தொலைவிலே நீங்கியிருக்கக் கடவன்; மேலும், அந்தக்கரணமும் அதிக பரிசுத்தமா யிருந்து வருதல் வேண்டும். அடுத்து வரும் 'ஹதீ'ஃதில் விளக்கியுள்ளவாறு, நோன்பு நோற்பவன் அகப்பரிசுத்தம் புறப்பரிசுத்தம் ஆகிய இரண்டையுமே அடையப்பெறவில்லை யாயின், அன்னவன் வீண் பட்டினி கிடப்பதை அல்லா(ஹ்) விரும்புவது கிடையாது.

புசிப்பையும் தனது குடிப்பையும் விட்டிருப்பது அல்லா(ஹ்)வுக்குத் தேவையில்லை.''— (பு'க'ா. 30 : 8)

3. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினர்: அல்லா(ஹ்) வின் திருத்தூதர் (சல்அ'ம்) மனிதர்களி லெல்லாம் மகா உதாரகுணம் படைத்தவர்களா யிருந்தார்கள்; ஜிப்'ரீல் அவர்களைச் சந்தித்தும், அவர்கள் அன்னவரை ஒவ்வொரு ரமல'ானிரவிலும் சந்தித்தும் அன்னவ ருடனே :குர்ஆனை ஓதியும் வந்தபொழுது, ரமல'ா னி(ன் மாதத்தி)லே மேலும் மகா உதாரகுணம் குடிகொண்ட வர்களா யிருந்தார்கள்; ஆகவே, அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) நன்மையான காரியங்களைப் புரிவதில் (ஒவ்வொருவர் மீதும்) அனுப் பப்பட்டு வரும் காற்றைப் பார்க்கினும் அதிகமான உதாரகுணம் படைத்தவர்களா யிருந்தார்கள்.*— (பு'க'ா. 1 : 1)

4. சிலா என்பவர் அ'ம்மாரின் ஆதாரத்தைக் கொண்டு கூறியிருக்கின்றார்: சந்தேகாஸ்பதமான தினத்திலே நோன்பு நோற்பவன் எவனோ, அன்ன வன் அபு'ல் :காஸிமுக்கு (சல்அ'ம்) மாறு செய்தவ னாகின்றான்.[2]— (பு'க'ா. 30 : 11)

5. அ'தி'ய் யிப்'னு 'ஹா(த்)திம் கூறினர்: "உங்களுக்கு க'ய்(த்)':துல் அப்'யல்' க'ய்(த்)':துல் அஸ்வதி' னின்று வேறு பிரிந்து விளக்கமாகு மட்டில்'' என்னும் ஆயத் (குர். 2 : 187) அருளப்பட்டபொழுது,

---

2. "அபு'ல் :காஸிம்" என்பது நபிபெருமானுக்குரிய சொந்தக் குன்யத்தா (புனைபெயரா) யிருக்கிறது.

---

* பு'க'ா. சுருக். 5 : 26-ஆவது 'ஹதீ':தின் கீழுள்ள 17-ஆவது அடிக் குறிப்பை நோக்க.

யாளொரு கறுப்புக் கயிற்றையும் வெள்ளைக் கயிற்றை யும் எடுத்து,. அவற்றை என் தலையணையின் கீழே வைத்துக்கொண்டேன் ;[3] இன்னம், நான் அவற்றினை இரா முழுதும் (அடிக்கடி) எடுத்துப் பார்த்துக் கொண்டே யிருந்தேன் ; ஆனால், அவற்றிற்கிடையே வேற்றுமை யறிந்துகொள்வது என்னால் முடியாமற் போய்விட்டது ; பிறகு (விடிந்து) காலையில் நான் அல்லா(ஹ்)வின் திருத்தூதர்பால் (சல்அ'ம்) வந்து, இதனை அவர்களிடம் தெரிவித்தேன். "இதனால் கொள்ளப்படும் கருத்து, இரவின் கறுப்பும், பகலின் வெள்ளையுமேயாம்," என்று அவர்கள் (பதில்) கூறினார்கள்.—(பு'க'ா. 30 : 16)

6. உ'மர்(ரலி') கூறினார் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"அங்கிருந்து இராப்பொழுது வந்து, இப்பக்கத்தில் பகற்பொழுதும் சென்று, சூரியனும் (தொடுவானத்திற்குக்) கீழே சென்று விடுங்கால், நோன்பு நோற்பவன் அந்நோன்பைத் திறக்கவேண்டும்."— (பு'க'ா. 30 : 43)

7. அனஸ் கூறினார் : நபிகள் நாயகர் (சல்அ'ம்) நவின்றருளினார்கள் :—

"இரவின் இறுதிச் சாமத்தில் (கிழக்கு வெளுக்கு முன்னே) ஆகாரம் புசித்துக் கொள்ளுங்கள் ; என்னெ

3. ஃக'ய்:த் என்பது, அசலில் "கயிறு" என்று பொருள் கொள்ளும் ஒரு சொல்லா யிருக்கிறது. ஆகையால், அவர் ஒரு வெள்ளைக் கயிற்றையும் கறுப்புக் கயிற்றையும் வைத்துப் பரீக்ஷை பார்த்தார்.

னின், கிழக்கு வெளுக்கு முன்னே (புசிக்கப்படும்) ஆகாரத்தில் அபிவிருத்தி—சிரேஷ்டம், ப’ரக்கத்— இருக்கிறது.”— (பு’க’ா. 30 : 20)

8. அபூ’ ‘ஹா‘ஜிம், (பின்வருமாறு) ஸஹ்ல் இப்’னு ஸஃ’த்’ கூறியதைக் கேட்டதாகச் சொல்லி யுள்ளார் :

யான் என் குடும்பத்தில் கிழக்கு வெளுக்கு முன்னே போஜனம் புஜித்துவிடுவது வழக்கம்; அப்பால், அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) அவர்களுடனே அதிகாலைத் தொழுகையில் சேர்ந்து கொள்வதற்காக விரைந் தேகுவது வழக்கம்.— (பு’க’ா. 9 : 27)

9. அனஸ் கூறினர்: நாங்கள் நபிகள்நாயகத்துடனே (சல்அ’ம்) பிரயாணம் செல்வது வழக்கமா யிருந்தது; அப்பொழுது நோன்பை நோற்றுக் கொண் டிருந்தவர் அதனை முறித்து விட்டவர்மீது குறைகூற வில்லை; நோன்பை முறித்து விட்டவரும் அதனை நோற்றுக்கொண் டிருந்தவர்மீது குறைகூற வில்லை.— (பு’க’ா. 30 : 37)

10. ஜாபி’ர் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) ஒரு பிரயாணத்தி லிருந்தார்கள்; மேலு மவர்கள் ஒரு கூட்டத்தையும், நிழலின்கீழே குந்தவைக்கப்பட் டிருந்த ஒரு மனிதனையும் கண்டார்கள். “இஃதென்ன?” என்று அவர்கள் வினவினர்கள்; ‘இவன் ஒரு நோன்பு நோற்பவன்’ என்று அவர்கள் விடை யளித்தார்கள். (இதற்கு) அவர்கள் கூறினர்கள் :—

"பிரயாணத்தி லிருக்குங்கால், நோன்பு நோற்பதில் பெரியதொரு புண்ணிய மில்லை."— (பு'க'ா. 30 : 36)

11. அ'':தா'உ கூறினர்: வியாதியின் காரணத்தால், அஃது எதுவா யிருப்பினும், அல்லா(ஹ்) கூறியுள்ளவாறு, ஒருவன் நோன்பை விட்டுவிடல் வேண்டும். இன்னம், 'ஹஸனும் இப்'ராஹீமும், பால் கொடுக்கும் ஸ்திரீயைக் குறித்தும், கர்ப்பிணியைக் குறித்தும், இவர்கள் தங்களுக்காகவேனும் தங்கள் குழந்தைக்காகவேனும் அச்சங்கொண்டு விடுங்கால், இன்னவர்கள் நோன்பை விட்டுவிட வேண்டுமென்றும், அப்பால் வேறு தினங்களிலே (அவ்விட்ட) நோன்பை நோற்கவேண்டு மென்றும் கூறியுள்ளார்கள். இன்னம், வயது முதிர்ந்து அவனல் நோன்பு நோற்க முடியாது தள்ளாமை எய்திவிடும் வயோதிகன் குறித்தென்றலோ,—அனஸ், அன்னவர் வயது முதிர்ந்த பருவத்தை யெய்திவிட்டபொழுது, ஒன்று அல்லது இரண் டாண்டுகள் வரை, ஒவ்வொரு நாளும் ஓரேழைக்கு ரொட்டியும் க'றியுங் கொடுத்து, நோன்பை நோற்காது விட்டுவிட்டார்.— (பு'க'ா. 65 : ii, 25)

12. அபு''ஜ் 'ஜினத்' கூறினர்: மாதவிடாயி லிருக்கும் ஸ்திரீ அப்பால் (அவ்விட்ட) நோன்பை நோற்றல்வேண்டும்; ஆனல், (அதுபொழுது விட்டுப் போகும் தொழுகைகளுக்காக) அப்பாலவள் யாதொரு தொழுகையும் தொழ வேண்டுவதின்று.— (பு'க'ா. 30 : 41)

13. அபூ' ஸலமா கூறினர்: ஆ'யிஷா பிராட்டி

யார் (இவ்வாறு) சொன்னதை யான் கேட்டேன் :—
'ரமல'ானி(ல் விடப்பட்ட நோன்புகளி) னிமித்தம் (அப்பால்) நோன்பு நோற்கவேண்டிய அவசியத்திலே நான் அகப்பட்டுக் கொள்வது வழக்கம்; இன்னம், அந்த அவசியத்தை— :கல'ாவை— (அடுத்துவரும்) ஷஃ'ப'ானிலன்றி (அதற்கு முன்னே) நிறைவேற்ற என்னால் முடிந்ததில்லை.'[4]— (பு'க'ா. 30 : 40)

14. அபூ' உ'ப'ய்த்' கூறினர்: நான் ஈ'தி'ன் பொழுது உ'மருடனே இருந்து பார்த்தேன்.; இன்னமவர் சொன்னர் :— அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) இவ்விரு (பெரு) நாட்களிலும்— நீங்கள் நோன்பை முடிக்கும் (பெரு) நாளிலும், உங்கள் பலிகளினின்று (இறைச்சிகளை) நீங்கள் தின்னும் (பெரு) நாளிலும்— நோன்பு நோற்பதைத் தடை செய்துள்ளார்கள்.'— (பு'க'ா. 30 : 66)

15. அபூ' ஹுரய்ரா கூறியுள்ளார்: நபிகள் நாயகம் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"ஒருவன் (நோன் பிருப்பது) மறந்துபோய், அருந்தியும் பருகியும் விடுங்கால், அவன் அந் நோன்பினை (விடாது நோற்று) முடித்துவிடக்கடவன்; என்னெனின், அல்லா(ஹ்)வே அன்னவனை (அவ்வாறு) அருந்தவும் பருகவும் செய்து விட்டான்."— (பு'க'ா. 30 : 26)

16. இப்'னு உ'மர் ஒரு வஸ்திரத்தை நனைத்து, தாம் நோன்பு நோற்றுக்கொண் டிருந்தபொழுது, தம்

---

4. ஷஃ'ப'ான் என்பது ரமல'ானுக்கு முன்னேயுள்ள மாதமாயிருக்கிறது.

மீது போட்டுக்கொண்டார்; ஷஃ'பீ' யென்பார், தாம் நோன்பு நோற்றுக்கொண் டிருந்தபொழுது, ஸ்னன விடுதிக்குள்ளே சென்றார். சமையற் பாத்திரத்தி லுள்ள ஆகாரத்தையும், இன்னம் ஏனை எதுவொன் றையும் (நோன்பு நோற்கும்) ஒருவன் ருசி பார்க்க நேர்ந்தால், தவறொன்று மில்லை என்று இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினர். இன்னம், நோன்பு நோற்பவன் தண்ணீரைக்கொண்டு வாயைக் கொப்புளிப்பதிலும், (சரீரத்தைக்) குளிர்ச்சிபெறச் செய்து கொள்வதிலும் குற்றமில்லையென்று 'ஹஸன் கூறியுள்ளார்.— (பு'க'ா. 30 : 25)

17. அபூ' ஹுரய்ரா கூறினர்: ஒரு மனிதன் வாந்தியெடுத்தால், அவன் நோன்பை முறித்துவிடத் தேவையில்லை.— (பு'க'ா. 30 : 32)

18. ஆ'யிஷா பிராட்டியார் கூறினர்: அல்லா(ஹ்) வின் திருத்தூதர் (சல்அ'ம்) ரமல'ானின் இறுதிப் பத்து நாட்களிலும் (மஸ்ஜித்'லேயே) தங்கிவிடுவது வழக்கம்; மேலு மவர்கள் சொல்வார்கள் :—

"ரமல'ானின் இறுதிப்பத்து நாட்களிலே லைல(த்) துல் :கத்'ரைத் தேடிக்கொள்ளக் கடவீர்கள்."[5]— (பு'க'ா. 32 : 3)

---

5. லைல(த்)துல் :கத்'ர் என்பது "மஹா (ரமல'ான்) ராத்திரி", அல்லது, "மாட்சிமிக்க இரவு" என்று கருத்துக்கொள்ளும். அந்த மஹா ரமல'ான் ராத்திரியிலேதான் :குர்ஆன் ஷரீ'பு முதன் முதலாக வெளிப்படத் துவக்கிற்று: "நிச்சயமாக நாம் அதனை மாட்சிமிக்க இரவிலே இறக்கினோம்"—(:குர். 97: 1). வேறொரு 'ஹதீ':தில் விளக்கப்பட் டிருப்பதே போல், "லைல(த்)

19. ஆ'யிஷா பிராட்டியார் கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) தாங்கள் (அவ்வாறு) மஸ்ஜிதி'லே தங்கி விடுங்கால், தங்கள் சிரத்தை என்பாலே (நீட்டி) எட்டச் செய்வார்கள்; அப்பொழுது யான் அவர்களுடைய கேசத்தைச் சீவிவிடுவேன்; இன்னம், அன்னவர்கள் இஃ'திகா'பில் இருந்து வருங்கால், ஓர் அவசியத்திநிமித்தமா யல்லது (வேறு லௌகிக காரியத்திற்காக) வீட்டுக்குள் வந்து நுழைந்ததில்லை.— (பு'க'ா. 33 : 3)



---

துல் :கத்'ரை" ரமல'ான் மாதம் 25-ஆவது, அல்லது 27-ஆவது, அல்லது 29-ஆவது இரவிலே தேடிக் கண்டுபிடித்தல் வேண்டும் (பு'க'ா. 2 : 35). ரமல'ானின் இறுதிப் பத்து நாட்களிலே மஸ்ஜிதி'ல் தனித் திருத்தலுக்கு இஃ'திகா'ப் என்று பெயர் சொல்லப்படும். அடுத்து வரும் 'ஹதீ'ஸை நோட்டமிடுக. [நோன்பின் சார்பாயுள்ள ஏனைய விவரங்களெல்லாம் எமது இஸ்லாம் 8-ஆம் பதிப்பில் இனிது விளக்கப்பட்டுள்ளன.]

## அத்யாயம்—18

### திருமக்கா யாத்திரை

### ('ஹஜ்ஜும் உ'ம்ராவும்)

1. "நிச்சயமாக மனிதர்களுக்கென்று ஏற்பாடு செய்யப் பட்ட ஆதிவீடானது மக்காவிலுள்ள (மஸ்ஜி)தே' யாகும்; (அஃது) ஆசீர்வதிக்கப் பட்டதாகவும், பூலோகத்தவர்கட்கு நேர்வழி காட்டக்கூடியதாகவும் அமைந்திருக்கிறது......இன் னம், அன்னதன்பால் செல்லப் பிரயாண வசதிகளையுடைய மனிதர்கள்மீது அவ்வீட்டை அல்லா(ஹ்)வுக்காக யாத்திரை செய்து தரிசிக்க வேண்டுவது கடமையாக்கப் பட்டிருக்கிறது" (:குர். 3: 95, 96).

2. "'ஹஜ்ஜுக்குரிய காலம் நன்கறியப்பட்ட மாதங்க ளாகும்; எனவே, எவனேனும் அவைகளில் 'ஹஜ்ஜை ஏற் படுத்திக்கொண்டு விடுவானாயின், அந்த 'ஹஜ்ஜில் காமாதுர அஸப்பிய வார்த்தையாடல் கூடாது; கெட்ட வார்த்தையும் கூடாது; சண்டை சச்சரவும் கூடாது;......இன்னம், அதற்கு வேண்டிய சாமக்கிரியைகளைச் சித்தஞ் செய்துகொள்ளக் கட வீர்கள்......" (2: 197).

'ஹஜ் என்னுஞ் சொல் அசலில் :கஸ்த்'—(ஒருவனிடத்திற்கு, அல்லது ஒரு வஸ்துவினிடத்திற்குத் தன்னைக் கொண்டுசெல்லல்) என்று பொருள் கொள்வதாயிருக்கிறது; இச்சொல் இஸ்லாத்தில் ஐந்தாவது கடமையாகிய திருமக்காயாத்திரையைக் குறித்துக் காட்டுகின்றது. ஒரு குறிப்பிட்ட காலத்தில் மக்காவுக்குச் சென்று, ஆங்கு இஸ்லாத்தில் கூறப்பட்டுள்ள வண்ணம் சிற்சில மதக் கடமைகளை நிறைவேற்றி வைப்பதே 'ஹஜ் என்னும் புண்ணிய ஸ்தல யாத்திரையா யிருந்துவருகிறது. அ'மர—(அவன் ஓரிடத் திற்குத் தரிசனம் காணச் சென்றான்) என்பதிலிருந்து தோன்றி யுள்ள உ'ம்ரா என்பது ஆண்டின் எந்த மாதத்திலும் "மக்காவுக்குத்

தரிசனம் காணச் செல்வதைக்” குறித்துக் காண்பிக்கின்றது; ‘ஹஜ்ஜுக் குரிய ஒரு சில சடங்குகள் மட்டுமே உ’ம்ராவில் அனுஷ்டிக்கப் படுகின்றன. கஃ’ப’ா வென்று அழைக்கப்படும் அந்தப் பரிசுத்த ஆலயமாகிய நீள் சதுரக் கட்டிடத்தின் நீளம் 40 அடி, அகலம் 35 அடி, உயரம் 50 அடியா யிருக்கின்றன. அதனைத் தன்னுள் ளடக்கியுள்ள ‘ஹரம் என்பதும், திருமக்காவும், அதனைச் சூழ்ந்துள்ள ஒரு சில நிலப்பகுதியும் சேர்ந்தே ‘ஹஜ்ஜுக்கும் உ’ம்ராவுக்குமுரிய மதக் கடமைகளின் மத்திய ஸ்தானமா யிருந்து வருகின்றன.

கஃ’ப’ா வென்பது இத்தரணியில் அல்லா(ஹ்)வை வணங்க ஆதியிலேற்பட்ட அனாதிகால ஆலயமென்று அழைக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, அதனைச் சென்று தரிசிப்பதற்குப் போதிய பிரயாண வசதியும் சகல சாதனமுமுள்ள ஒவ்வொரு முஸ்லிமின்மீதும் அதன்பால் யாத்திரை சென்று அல்லா(ஹ்)வை வணங்கி வரவேண்டுமென்று ஒரு முக்கியக் கடமை ஏற்படுத்தப்பட்டிருக்கிறது (தலை. ஆயத் 1). மக்காவுக்குச் சென்று ‘ஹஜ்ஜு செய்துவர வேண்டுமென்பது இஸ்லாத்தின் ஐந்து தூண்களில் ஒன்றாயிருக்கிறது (பு’க’ா. சுருக். 2: 6). ஆயுளில் ஒரு முறையேனும் ‘ஹஜ்ஜு செய்ய வேண்டுவது அதற்குரிய வசதியுள்ளார்க்கெல்லாம் கடமையாக்கப்பட்டிருக்கிறது (‘ஹதீ’. 1). ஒருவருக்குத் தாமே நேரிற் சென்று ‘ஹஜ்ஜு செய்ய இயலவில்லையாயின், வேறொருவரைத் தமக்கீடாக அனுப்பி அக்கடமையை நிறைவேற்றிக் கொள்ளலாம் (‘ஹதீ’. 2). ஒருவர் ‘ஹஜ்ஜுக்குப் புறப்படு முன்னே அந்தப் பிரயாணத்துக்குத் தேவையான சாமக்கிரியைகளை யெல்லாம் சித்தம் செய்துகொள்ளல் வேண்டும் (‘ஹதீ’. 3). ‘ஹஜ்ஜென்பது ஒரு குறிப்பிட்ட காலத்திலேதான் நிறைவேற்றப்படல் வேண்டும் (‘ஹதீ’. 4); உ’ம்ரா வென்பது எப்பொழுதும் செய்யப்படலாம். இ’ஹ்ராம் என்பது ‘ஹாஜீ தம்மைத் தையார் செய்துவைத்துக் கொள்ளும் ஒரு பரிசுத்த நிலைமையைக் குறித்துக் காட்டுகின்றது. அந்த நிலைமையில் என்னென்ன காரியம் செய்யலாம், என்னென்ன காரியம் செய்யக்கூடா தென்னும் விஷயம் ‘ஹதீ’. 5 முதல் 8 வரை கூறப்பட்டுள்ளது. மக்காவுக்குச் செல்லும் வெவ்வேறு

பாட்டைகளில் வெவ்வேறு ஸ்தலங்கள் (மீ:க்:காத்கள்) குறிக்கப் பட்டுள்ளன; ஆகவே, அவரவரும் அந்த அந்த எல்லையிலே இ'ஹ்ராம் கட்டிக்கொள்ளக் கடவர் ('ஹதீ'. 9). 'ஹஜ்ஜுக்குரிய குறிப்பிட்ட 'திக்ரு, லப்'பை'க்க என்னும் தொடக்கத்தையுடைய வாக்கியத்தை இரைந்து ஓதுவதாகவே யிருந்து வருகிறது ('ஹதீ'. 10). 'ஹஜ்ஜிலும் உ'ம்ராவிலும் முதலில் செய்யவேண்டிய வணக்கக் காரியம் கஃ'ப'ாவைச் சுற்றி இடம் வரல் —:தவ்வா'ப்—என்பதாகவே இருந்து வருகிறது ('ஹதீ'. 11). அது புருஷர்களாலும் பெண்களாலும் வேற்றுமையின்றியே செய்யப்படுகிறது ('ஹதீ'. 12); சவாரி செய்த வண்ணமும் :தவ்வா'ப் சுற்றலாம் ('ஹதீ'. 13). :தவ்வாஃபென்பது, 'ஹஜருல் அஸ்வத்' என்னும் கறுப்புக்கல் பதிக்கப் பட்டிருக்கும் மூலையிலிருந்து அதனை முத்தமிட்டுத் தொடங்கப் படுகிறது; அக் கறுப்புக்கல்லை முத்தமிட நேரிலே முடியாவிடின், ஏதேனுமொரு வஸ்துவால் அவ்வாறு முத்தமிடுவதே போல் சயிக்கினை செய்துவிட்டுத் :தவ்வாஃபைத் துவக்க வேண்டும் ('ஹதீ'. 13). இவ்வாறு அதனை முத்தமிடுவதால், அக் கறுப்புக் கல்லுக்கு ஆண்டவனுக்குச் செய்யப்படும் மரியாதை போன்ற தொன்று செலுத்தப்படுவதாக எவரும் எண்ணத் துணிவது கூடாது; என்னெனின், ஏனைய மூலைகளும் முத்தமிடப்பட்டே வந்திருக்கின்றன ('ஹதீ'. 14, 15). :தவ்வாஃபென்பது ஒரு வணக்கத் துக்குரிய காரியமாய்க் கருதப்படுகின்றமையால், அது தொழுகையைப் போலவே கொள்ளப்பட்டு, மாதவிடாயிலுள்ள ஸ்திரீகள் அது (அந்தவிடாய்) முடிவுறுமட்டும் :தவ்வாஃபைப் பிற்படுத்திக் கொள்ளவேண்டியவரா யிருக்கின்றனர் ('ஹதீ'. 16, 17). :தவ்வாஃபில் முதல் மூன்று சுற்றுக்களும் சிறு ஓட்டமாகவும், மிகுதி நான்கும் நடையாகவும் சுற்றப்படுதல் வேண்டும் ('ஹதீ'. 18). ச'பா, மர்வா என்னும் இரு குன்றுகளுக் கிடையே "தொங் கோட்டம்"—ஸஃ'இ—ஓடுவதுடனே உ'ம்ராவின் காரியம் முடிவுற்று விடுகின்றது; 'ஹஜ்ஜில் இஃது இரண்டாவது வணக்கமாயிருக்கிறது ('ஹதீ'. 18). ஆனால், 'ஹஜ்ஜுக்குரிய உண்மையான காரியம் :துல்'ஹஜ் மாதம் 8-ஆந் தேதியன்று தான்—இது யவ்முத்தர் வியா என்னப்படும்—ஆரம்பமாகின்றது; அன்று 'ஹஜ்ஜாஜ்கள் மினு

வுக்குப் புறப்பட்டுச்சென்று, அங்கே ளு'ஹ்ரையும் அ'ஸ்ரையும் தொழுவார்கள் ('ஹதீ'. 19, 20). மறுநாள் ('துல்'ஹஜ்) 9-ஆந் தேதி, யவ்முல் அ'ர'பாத்தில், 'பஜ்ருக்கப்பால் மினுவிலிருந்து புறப்பட்டுச் சென்று, 'ஹஜ்ஜாஜ்கனெல்லாம் அ'ர'பாத்மைதானத்தில் ளு'ஹ்ரும், அ'ஸ்ரும் தொழுதுகொள்வார்கள்; அதுபொழுது இமாமானவர் கு'த்ப'ா பிரசங்கம் செய்வார் ('ஹதீ'. 21). சூரியாஸ்தமயத்துக்குப் பின்னே 'ஹஜ்ஜாஜ்கள் அ'ர'பாத்தை விட்டுப் புறப்பட்டு, மு'ஜ்த'லி 'பாவுக்கு வந்து, ம:க்ரிபு'ம் இ'ஷாவும் அங்கே சேர்த்துத் தொழுவார்கள்; மறுநாள் 10-ஆந்தேதி 'பஜ்ரும் அவ்விடத்திலே தொழுது விட்டு ('ஹதீ'. 22, 23), சூரியோதயத்துக்கு முன்னே மு'ஜ்த'லி 'பாவை விட்டுப் புறப்பட்டு, அனைவரும் மினுவுக்கு வந்து சேர்வர்; அங்கே காலையாகார வேளையிலே :குர்ப'ானீக்குரிய பிராணிகள் பலியிடப்படுகின்றன. அப்பால் :தவ்வா'புல் இ'பா'ல'ா செய்யப்படுகிறது; பிறகு 'ஹாஜீயானவர் இ'ஹ்ராமுக்குரிய நிலையைவிட்டு வெளிப்பட்டுவிடுகிறுர் ('ஹதீ'. 24). பலியிடப்பட்ட பிராணிகளின் இறைச்சி அப்பொழுதே புசிக்கப்படலாம்; அல்லது பங்கிடப்பட்டு விடலாம்; அல்லது பிற்கால உபயோகத்திற்காகச் சேமித்தும் வைக்கப்படலாம். அவற்றின் தோல்கள் தர்ம கைங்கரியத்துக்காக இனுமாய்க் கொடுபடல் வேண்டும் ('ஹதீ'. 25, 26). இ'ஹ்ராமை விட்டு வெளிப்படுவதற்கு அடையாளமாகச் சிரத்தின் ரோமம் முண்டனம் செய்யப்படலாம்; அல்லது தலைமயிர் சிறிது கத்தரிக்கப்படலாம் ('ஹதீ'. 27). 'துல்'ஹஜ் மாதம் 10-ஆந்தேதியும், அதனையடுத்துள்ள இரண்டு அல்லது மூன்று தினங்களும் —அய்யாமுத் தஷ்ரீ:க் என்று கூறப்படுவன—மினுவிலே கழிக்கப்படுகின்றன ('ஹதீ'. 28); அந்நாட்களில் 'ஹஜ்ஜாஜ்கள் மக்காவுக்குச் சென்று கஃ'ப'ாவைத் தரிசனம் செய்து வரலாம் ('ஹதீ'. 28). மினுவிலே மூன்று ஜம்ராத்களில்—(இடங்களில்) கற்கள் எறியப்படுகின்றன; அதுகாலை 'ஹாஜீயானவர் தம்மைவிட்டு ஷை(த்)தானை—மனக்குரங்கை—அப்புறப்படுத்தி வைக்குமாறு ஆண்டவன்பாலே வேண்டுதல் புரிகின்றுர் ('ஹதீ'. 29). 'ஹஜ்ஜுக்குரிய இறுதிச் சடங்கு :தவ்வா'புல் வித'ாஃ' என்பதாயிருக்கிறது; இது மக்காவை விட்டுச் சுதேசத்துக்குப் பிரயாண மாகுங்கால்.

'ஹஜ்ஜாஜ்கள் கஃ'ப'ாவைச் சுற்றி இடம் வரும் சுற்றைச் சுட்டிக் காட்டுகிறது ('ஹதீ'. 30). 'ஹஜ்ஜாஜ் 'ஹஜ்ஜு'க்கு முன்னுலும், அதற்குப் பின்னுலும் ஏதும் வர்த்தகம் புரிந்து இலாபமடையலாம் ('ஹதீ'. 31)

1. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறியுள்ளார்: அல் அ:க்ரஅ' நபிபெருமானை (சல்அ'ம்) 'ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! 'ஹஜ்ஜென்பது ஆண்டுதோறும் செய்யப்பட வேண்டுமா? அல்லது (ஆயுளில்) ஒரே முறை தானு?' என்று வினவினர்; (இதற்கு) அவர்கள், "ஒரே முறைதான்; இன்னம், எவரொருவர் ஒரு முறைக்கு மேலே அதனைச் செய்கின்றரோ, அஃது அதிகப்படி யானதே," என்று கூறினர்கள்.[1]— (அபூ'த'ா. 11 :1)

2. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினர்: 'பல்'லென்பார் அல்லா(ஹ்)வின் திருத்தூதருக்குப் பின்னே (சல்அ'ம்) சவாரி செய்துகொண் டிருந்தார்; அப்பொழுது க':த்அ'ம் (வர்க்கத்தின்) பெண்பிள்ளையொருத்தி வந்து,........'ஏ. அல்லா(ஹ்)வின் தூதரே! அல்லா(ஹ்)விஞல் அவனுடைய அடியார்களுக்குக் கடமையாக்கப்பட் டிருக்கும் 'ஹஜ்ஜின் சார்பான

---

1. இத்தென்னிந்தியாவில் எத்தனையோ கோடீசுவரர்களும், இலக்ஷாதிபதிகளும் (முஸ்லிம்களுள்ளே) இருந்துவந்தும், அவர்கட்கெல்லாம் 'ஹஜ்ஜு' செய்யவேண்டிய கடமையும் ஏனையெல்லா வசதிகளும் சௌகரியங்களும் இருந்துவந்தும், தங்கள் ஆயுளில் ஒருமுறைகூட அப்புண்ணிய ஸ்தல யாத்திரை செய்யாமலே இருந்து வருகிறுர்கள்; இவர்களெல்லாம் இறந்ததன் பின்னுல் (அம்மரணம் வருவது சரதமேயன்றே?) இறைவனிடம் என்ன பதில் கூறப்போகிறுர்களோ? யாமறிகிலேம்.

கட்டளை மிகவும் விருத்தாப்பியமடைந்துள்ள என்னு டைய தந்தையை ஒரு சவாரி யொட்டகத்தின்மீது ஸ்திரமாய்க் குந்தவும் முடியாதவராய்க் கண்டுகொண் டிருக்கிறது ; (ஆதலால்) அவரது சார்பாக யான் 'ஹஜ்ஜை நிறைவேற்றலாமா ?' என்றும் வினவ லுற்றாள். (அதுபொழுது) அவர்கள், " ஆம் ; (நிறை வேற்றலாம்) " என்று விடையிறுத்தார்கள். இன்னம், இது நிகழ்ந்தது (நபிபெருமானது) இறுதி 'ஹஜ்ஜின் போழ்துதான்.— (பு'க'ா. 25 : 1)

3. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினர் : எமன்தேச வாசிகள், தங்கள்பால் ('ஹஜ்ஜுக்குத் தேவையான) சவதரிப்புக்கள் இல்லாதிருக்கும்பொழுது 'ஹஜ்ஜுக் குச் செல்வது வழக்கம் ; மேலும், 'நாங்கள் [அல்லா(ஹ்) வின்மீது] சார்ந்து நிற்பவர்களா யிருக்கிறோம்,' என்று சொன்னார்கள். ஆனால், மக்காவுக்கு வந்தக்கால், அவர்கள் (ஏனை) ஜனங்களிடம் யாசகம் கேட்கத் துவக்கினர்கள் ; ஆதலால், அல்லா(ஹ்) (இவ்வாயத்தை) வெளியிட் டருளினன் : " மேலும், (ஆகாரச்) சவதரிப் புக்களை ஆயத்தஞ் செய்துகொள்ளக் கடவீர்கள் ; என்னெனின், அச் சவதரிப்பில் சிறந்தது ஒருவன் தன்னையே தற்காத்துக் கொள்வதா யிருக்கிறது " (:குர். 2 : 197).[2]— (பு'க'ா. 25 : 6)

---

2. இவ்வாறிருந்தும், இன்றும் பல ஏழை மக்கள் போதிய வசதிக ளில்லாமலே 'ஹஜ்ஜுக்குப் புறப்பட்டு விடுகின்றனர். இதனைத் தடுக்க அரசாங்கமும், 'ஹஜ்கம்மிட்டிகளும் தக்க ஏற்பாடு களெடுத்தும், சிலர் எல்லாரையும் ஏமாற்றிவிட்டுத் திருட்டுத்தனமாய்ச் சென்று விடுகின்றனர். இஃது ஒருசிறிதும் கூடாத காரியமேயாம்.

4. இப்'னு உ'மர் கூறினர்: 'ஹஜ்ஜுக்குரிய மாதங்கள் ஷவ்வால், 'துல்கஃ'த'ா, 'துல்'ஹஜ்ஜின் (முதற்)பத்து நாட்களா யிருக்கின்றன. இன்னம், இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறியுள்ளார்: 'ஹஜ்ஜுக்குரிய மாதங்களிலன்றி (மற்றை மாதங்களில்) இ'ஹ்ராம்[3] நிலையுள்ளே மனிதன் நுழையா திருப்பதே ஸுன்னத்தா யிருக்கிறது.— (பு'க'ா. 25:34)

5. இப்'னு உ'மர் நபிகளுதரை (சல்அ'ம்) க் குறித்துக் கூறியுள்ளார்: இ'ஹ்ராம் கட்டவேண்டிய நிலையில் ஒருவன் எதனை யணிந்துகொள்ள வேண்டு மென்று ஒரு மனிதன் அவர்களை வினவினன். (இதற்கு) அவர்கள் சொன்னர்கள் :—

" அவன் :கமீசு அணியலாகாது; தலைப்பாகை யும் ஆகாது; கால் சராயும் (அணிவது) கூடாது; தொப்பியும் கூடாது; வர்ஸ் அல்லது குங்குமப்பூக் கொண்டு சாயங் காய்ச்சிய ஆடையும் ஆகாது;

3. இ'ஹ்ராம் ('ஹரம்—"தடுக்கப்பட்டுள்ள வஸ்து"—என்பதி லிருந்து தோன்றியுள்ளது) என்னுஞ்சொல், "முன்னே அனுமதி யளிக்கப்பட்டுள்ளது பின்னே தடுக்கப்பட்டு, அல்லது சட்ட விரோதமாக்கப்பட்டுப் போய்விடக்கூடிய நிலைமையுள்ளே நுழை வதைக்" குறித்துக் காட்டுகின்றது. 'ஹஜ்ஜில் இ'ஹ்ராம் கட்டுவ தென்பது, அவர் அதற்கு முன்னே செய்துகொண்டிருந்த சிற்சில காரியங்களை (வீடு கூட லுட்பட)ச் செய்யாமல் தடுத்து வைக்கப் படுகின்றுர் என்னும் ஒரு தடைமுறைக் குரிய நிலைமையுள் இறங்கி விடுவதைச் சுட்டிக் காட்டுகின்றது. இ'ஹ்ராம் கட்டியவர் என்னென்ன காரியம் செய்யக்கூடா தென்று, அல்லது என்னென்ன வஸ்துக்களை உபயோகிக்கக் கூடாதென்று இந்த 'ஹதீ':திலும், இதனை யடுத்துள்ள மூன்று 'ஹதீ:'துகளிலும் காண்க. (இஸ்லாம் 8-ஆம் பதிப்பும் பார்க்க.)

இன்ன மவன் செருப்பு ஜோடியைப் பெற்றுக் கொள்ள இயலவில்லையாயின், தோற்காலுறைகளை யணிந்து கொள்ளட்டும்; ஆனால், அவை கணுக் காலுக்குக் கீழா யிருக்குமாறு அவன் அவற்றினைக் (குட்டையாய்க்) கத்தரித்துவிட வேண்டும்."[4] — (பு'க'ா. 3 : 53)

6. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினார்: இ'ஹ்ராம் கட்டியிருப்பவன் இனிய நறுமணமுள்ள செடிகளை மோந்து பார்க்கலாம்; முகம்பார்க்கும் கண்ணாடியிலும் பார்க்கலாம்; இன்னம், ('ஜய்த்தூன்) ஒலிவ எண்ணெய் வெண்ணெய் (போன்ற) அவன் சாப்பிடக் கூடியதினின்று மருந்துகளையும் அன்னவன் உபயோகிக்கலாம்; இன்னம், அ'(த்)தா'உ கூறினார்: அம் மனிதன் மோதிரம் அணிந்து கொள்ளலாம்; பணப் பையும் வைத்துக் கொள்ளலாம்; இன்னம், இ'ப்னு உ'மர் இ'ஹ்ராத்திலிருந்தபடியே 'தவ்வா'ப் சுற்றினார்; மேலுமவர் ஒரு வேஷ்டியைக்கொண்டு தமது (அடி) வயிற்றைச் சுற்றிக் கட்டியிருந்தார்; இன்னம், அரைச் சல்லடம் அணிந்துகொள்வதில் குற்றமில்லை

4. இ'ஹ்ராம் கட்டிய மனிதன் என்னென்ன அணியக்கூடாதென்று இந்த 'ஹதீ'து எடுத்துக் காட்டுகின்றது. 'ஹாஜீகள் தையலில்லாத இரண்டு வெள்ளாடைகளையே உடுத்துக்கொள்வர்: உந்தி முதல் முழந்தாளுக்குக் கீழ்வரை ஓர் அரையாடையும்—(இ'ஜார்) உடம்பைப் போர்த்துக்கொள்ள ஒரு மேலாடையும்—(ரித'ா) அணிந்து கொள்வர். ஸ்திரீகளோ, ஆடம்பரமற்ற சாதாரண உடைகளை உடுத்துக்கொள்வர்; வர்ஸ் என்பது மஞ்சள்சாயமேற்றக்கூடிய ஒருவகைப்பூடு. ஆகவே, மஞ்சள் சாயம், அல்லது சிவப்புச்சாயம் ஏற்றப்பெற்ற ஆடைகள் அணிவது கூடாதென்க.

யென்பதே ஆ'யிஷா பிராட்டியாரின் அபிப்பிராயமா யிருந்துவந்தது.[5] — (பு'க'ா. 25 : 18)

7. இப்'னு உ'மர் கூறியுள்ளார்: அல்லா(ஹ்) வின் திருத்தூதர் (சல்அ'ம்) இ'ஹ்ராம் கட்டியுள்ள ஸ்திரீகள் கையுறைகள், முகமூடி, வர்ஸும் குங்குமப் பூவுங்கொண்டு சாயங் காய்ச்சிய புடவைகள் ஆகிய வற்றை அணிவதைத் தடை செய்ததையும், அவர்கள் இதை (யெல்லாம்) அன்றி, குசும்பாப்பூச் சாய மேற்றிய, அல்லது பட்டாலாய, (அல்லது பட்டாலும் உரோமத்தாலு மாய) புடவைகளினின்று தாங்கள் நாடியதை, அல்லது ஆபரணங்களை, அல்லது கால் சராய்களை, அல்லது :கமீசை அணிந்துகொள்ளலா மென்று (சொல்லியதையு)ம் அவர் கேட்டிருக்கிறார்.[6] — (அபூ'த'ா. 11 : 29)

---

5. இமாம் பு'க'ாரீ இதற்கு இவ்வாறு வியாக்கியானம் கூறி யுள்ளார்; ஆ'யிஷா பிராட்டியார் தங்களுடைய சவாரியொட்ட கத்தை ஓட்டிவந்த மனிதருக்கே அவ்வாறு அரைச்சல்லடம் அணிந்துகொள்ள அனுமதியளித்துள்ளார். அரையாடை (இ'ஜார்) அறவே இல்லாதவர் காற்சராய் அணிந்துகொள்ளலாம் (பு'க'ா., முஸ்—மிஷ். 11 : 11).

6. முகமூடி அணிவதென்பது அவ்வரப் நாட்டிலே மேற்குல மகளிருக் குரிய அந்தஸ்தா யிருந்துவந்தது. ஆனால், இ'ஹ்ரா மென்பது மானிடரின் இகலோக அந்தஸ்துயர்வு, இனத்தின் மேன்மை, நிறத்திமிரின் வேறுபாடு போன்ற எல்லாவித வேற்றுமைகளையும் அடியுடன் ஒழித்துவிட் டிருக்கின்றமையால், ஸ்திரீகள் இ'ஹ்ராம் கட்டியிருக்கு நிலையிலே முகமூடியணிவது கூடாதெனத் தடுக்கப்பட் டிருக்கிறதென்க. 'ஹஜ்ஜின்போழ்து முகமூடி யணிவது தடுக்கப்பட்டிருப்பதைக் கொண்டு, பொது வாகவே முகமூடியணிவதென்பது :குர்ஆன்ஷரீ'பால் ஒரு கட்டாயக்

8. அ'ப்'து'ல்லா(ஹ்) கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) பிசினெட்டிய சிகையுடனே லப்'பை'க்க (என்னும் 'தல்பி'யா)வைச் சொன்னதை யான் கேட்டேன்.[7] — (பு'க'ா. 25 : 19)

9. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினர் : நபிகள் திலகம் (சல்அ'ம்) மதீனு ஜனங்களுக்கு, அவர்கள் இ'ஹ்ராம் கட்டிக்கொள்ள வேண்டிய ஸ்தலம் 'துல் 'ஹுலை'பா என்று ஏற்படுத்தி வைத்தார்கள் ; ஷாம் தேச ஜனங்களுக்கு ஜு'ஹ்'பாவையும், நஜ்த்' வாசிகளுக்குக் :கர்னல் மனு'ஜிலையும், எமன் தேச

---

கடமையாக்கப்பட் டில்லையென்றும், அவ்வாறு இருந்திருப்பின், இ'ஹ்ராத்தின் போழ்து அதனையணியக்கூடா தென்பது அந்த அல்லா(ஹ்)வின் கடமையான (கடுமையான) கட்டளைக்கு மாறு செய்வதாகவே வந்து மூண்டுவிட் டிருக்குமென்றும் மௌலானு மு'ஹம்மத'லீ போன்ருர் அபிப்பிராயம் கொண்டுள்ளார். கையுறை யணிவதும் அவ்வாறே மேற்குல மகளிர் அடையாளமா யிருந்து வருகின்றமையால், அதுவுங்கூட இ'ஹ்ராம் கட்டியுள்ள பெண்மணிகள் அணியக்கூடாதென்று விலக்கப்பட்டிருக்கிறது. ஆனுல், ஆபரணமணிவது தடுக்கப்பட்டில்லை ; என்னெனின், பணக்காரர் முதல் ஏழைகள் ஈருகவுள்ள எல்லாருமே ஆபரண மணிகின்ருர்கள் ; இதில் உயர்வு தாழ்வு கொண்டாடப்படுவ தில்லை. கூலி வேலை செய்வோருங்கூட் என்னவோ சில "நன்னி பின்னி"கள் அணியா திருப்பதில்லை.

7. 'தல்பீ'த்' என்பது, தலை ரோமம் காற்றில் கலைந்துபோகாது கெட்டியா யிருப்பான்வேண்டிப் பிசின், அல்லது அதுபோன்ற பசையுள்ள வஸ்துவைக் கொண்டு, அந்தச் சிகையின் மீது பூசிக் கொள்வதைக் குறிக்கும். இ'ஹ்ராத்தில் இஃது அனுமதிக்கப்பட் டிருக்கிறது ; என்னெனின், இவ்வாறின்றேல், அவ்வரப் நாட்டுக் காற்றினுல் தலைரோமம் கலைந்து பறந்து விகாரமாய்ப் போய்விடக் கூடுமன்ருே ?

வாசிகளுக்கு எலம்லமையும்[8] (இ'ஹ்ராம் கட்டும் எல்லை களாக ஏற்படுத்தி வைத்தார்கள்). இவைகள் அவர்க ளுக்கும், (அவர்களுக் கப்பாலுள்ள) வேறு பல இடங்களிலிருந்து அவர்கள் பா(தையி)ல் வந்து சேர்கிற வர்களுக்கும்—'ஹஜ்ஜும் உ'ம்ராவும் செய்யவேண்டு மென்னும் தீர்மானத்துடனே வருகிறவர்களுக்காக— ஏற்பட்டிருப்பவை; இன்னம், (அவற்றினைவிட மக்கா வுக்கு) நெருங்கியிருக்கும் மனிதனுக்கு நியமிக்கப் பட்டுள்ள இடம், அவன் எங்கிருந்து புறப்படுகிறானோ, அதுவாகவே யிருக்கிறது; ஆகவே, மக்காவாசி களுக்கு மக்காவே (அவ்வெல்லையா யிருக்கிறது).[9]— (பு'க'ா. 25 : 7)

10. இப்'னு உ'மர் கூறியுள்ளார்: அல்லா(ஹ்) வின் திருத்தூதரவர்களால் (சல்அ'ம்) கூறப்பட்ட லப்'பை'க்க[10] என்பது இவ்வாறு இருந்து வந்தது:—

---

8. எமன், இந்தியா, இலங்கை, பர்மா, மலாய்நாடு, ஜாவா, சைகோன் போன்ற பிரதேசங்களிலிருந்து விஜயம் செய்யும் 'ஹாஜீகளெல்லாம் இந்த எலம்லமில் (அல்லது அதற்கு எதிரே யுள்ள கடலில்) இ'ஹ்ராம் கட்டிக்கொள்ள வேண்டும். ஏனைய விஷயங்களை எமது இஸ்லாம் என்னும் விரிந்த நூலிலே பரக்கக் காணலாம்.

9. 'ஹஜ்ஜாஜ்கள் மேற்கூறிய இடங்களை, அல்லது அவற் றிற்கு எதிரேயுள்ள (கடலின்) இடங்களை எட்டியவுடனே இ'ஹ்ராம் கட்டிக்கொள்ள வேண்டும். அந்த இடத்திற்கு மீ(க்):காத்தென்று— ("நியமிக்கப்பட்ட இடம்" என்று) பெயர் சொல்லப்படுகிறது; மு'ஹில்— ("லப்'பை'க்க" என்பதைக் கொண்டு தொனிகளை உயர்த்துமிடம்) என்றும் அஃது அழைக்கப்படுகிறது.

10. லப்'பை'க்க (லப்'பு'ன்— வழிபடல், அல்லது வணங்கல் என்பதிலிருந்து தோன்றியுள்ளது) என்பது, "மீட்டும் மீட்டும்,

"யான் உனது பணிவிடையி லிருக்கிறேன்; ஏ அல்லா(ஹ்)! யான் உன் பணிவிடையி லிருக்கிறேன்.

"யான் உன் பணிவிடையி லிருக்கிறேன்; உனக்கொன்றும் இணையில்லை; யான் உன் பணிவிடையி லிருக்கிறேன்.

"நிச்சயமாக உனக்கே எல்லாப் புகழும்; இன்னம் உன்னுடையதே எல்லா அருட்கொடையும்; இன்னம், உனக்கே அரசாங்கம் (உரியது); உனக்கொன்றும் இணையில்லை."— (பு'க'ா். 25 : 26)

11. உ'ர்வா கூறினர்: நபிகள் திலகம் (சல்அ'ம்) ('ஹஜ்ஜுக்காக மக்காவினுள்ளே) பிரவேசித்த பொழுது, அவர்கள் செய்த முதற்காரியம், தாங்கள் வுழூ' செய்துகொண்டு, பின்பு (கஃ'ப'ாவைச் சுற்றி ஏழுமுறை) இடம் வருவதாகவே இருந்து வந்தது;[11] மேலும், உ'ம்ராவென்பது இல்லையென்று

---

யான் உன் பணிவிடையி லிருக்கிறேன், அல்லது யான் உனக்கு வழிபடக் காத்துக்கொண் டிருக்கிறேன், அல்லது யான் உனக்கு ஊழியம் புரிந்து வருகிறேன், அல்லது யான் உனது திருமுன்பிலே வழிபாடு செய்ய இருந்து வருகிறேன்," என்றெல்லாம் கருத்துக் கொள்ளும். 'ஹஜ்ஜு செய்வதாக உறுதி கொண்டுவிட்டவர், "லப்'பை'க்க......" என்னும் 'தல்பி'யாவை, இ'ஹ்ராம் கட்டியது முதல் அடிக்கடி உச்சரித்துக் கொண்டே யிருக்கக் கடவர். இன்னம், எமது இஸ்லாம் (8-ஆம் பதிப்பு) என்னும் நூலை நோக்கக் கடவீர்கள்.

11. இது 'தவ்வா'புல் 'குதூ'ம் என்றழைக்கப்படுகிறது. 'தவ்வா'ப் ('தா'ப—"அவன் சுற்றிவந்தான்," என்பதிலிருந்து தோன்றியுள்ளது) என்பது 'ஹஜ்ஜில் கஃ'ப'ாவைச் சுற்றி இடம் வருவதைக் குறித்துக் காட்டுகிறது. 'தவ்வாஃ'பன்பது ஏழு சுற்றுச் சுற்றுவதாகும் ('ஹதீ'. 18).

ஆ'யிஷா பிராட்டியார் என்னிடம் தெரிவித்துள்ளார்.
—(பு'க'ா. 25 : 62)

12. இப்'னு ஜுரய்ஜ் கூறியுள்ளார்: ஆடவர்களுடனே ஸ்திரீகளும் (கஃ'ப'ாவைச் சுற்றி) இடம் வருவதை இப்'னு ஹிஷாம் தடை செய்தபொழுது, 'நபிபெருமானுடைய (சல்அ'ம்) பிராட்டிமார் ஆடவர்களுடனே 'தவ்வா'ப் சுற்றி வந்திருக்க, நீர் எவ்வாறு தடை செய்கின்றீர்?' என்று அ'(த்)தா'உ கூறினர். 'அது படுதாவுக் (குரிய ஆயாத் அருளப்பட்டதற்) குப் பிந்தியா? அல்லது முந்தியா?' என்று யான் வினவினேன். (இதற்கு) அ'(த்)தா'உ, 'எனதாவியின்மீது ஆணையாக! படுதா (உத்தர) வுக்குப் பின்னேதான் யான் இ(வ் வழக்கத்)தைக் கண்டேன்,' என்று (பதில்) கூறினர். 'அவர்களுடனே ஆடவர்கள் எவ்வாறு கலந்திருந்தார்கள்?' என்று யான் கேட்டேன்; (இதற்கவர்) கூறினர்: 'அவர்கள் அன்னவர்களுடனே கலந்திருக்க வில்லை; ஆ'யிஷா பிராட்டி ஆடவர்களைவிட்டு ஒருபுறம் ஒதுங்கி நின்றே, அவர்களுடனே கலவாது இடஞ்சுற்றி வருவது வழக்கம்.... ....ஆனல், அவர்கள் (பரிசுத்த) ஆலயத்துள்ளே செல்ல நாடுங்கால், (அதில்) நுழையுமுன்னே ஆடவர்கள் (அனைவரும்) வெளியேற்றப்படுமட்டும் தாமதித்து நிற்பார்கள்.'[12]— (பு'க'ா. 25 : 63)

---

12. அக் காலத்தில் ஆண்களும் பெண்களும் சேர்ந்தே 'ஹஜ்ஜுக்குரிய காரியங்களனைத்தையும் செய்துவந்தார்களென்று இந்த 'ஹதீ':து கூறிக் காண்பிக்கிறது. ஆனல், ஆடவருடனே பெண்டிர் மிசிரமாய்க் கலந்துவிடாது, மஸ்ஜிதில் தொழும்பொழுது தனி வரிசையிலே நின்றதேபோல், தனிக்கூட்டமா

13. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினர்: நபிகள் திலகம் (சல்அ'ம்) ஒட்டகத்தின்மீது ஆரோகணித்த வண்ணமே, (கஃ'ப'ா) ஆலயத்தைச் சுற்றி இடம் வந்தார்கள்; இன்னம், அன்னவர்கள் (கறுப்புக்கல்) மூலைக்கு வந்த ஒவ்வொரு முறையும் தங்கள்பால் வைத்திருந்த ஏதோவொன்றைக் கொண்டு (முத்தியிடுவதே போல்) சயிக்கினை செய்து, "அல்லாஹு அக்ப'ர்" என்றுங்கூறினார்கள்.[13] — (பு'க'ா. 25 : 61)

யிருந்து வந்தார்கள். இந்த 'ஹதீ':தில் நிகழ்வுற்ற சம்பவம் நடைபெற்ற காலத்திலேயே நபிபெருமான் காலத்திலிருந்த "எளிய இஸ்லாம்" விடைபெற்றுச் சென்றுகொண் டிருந்ததென்னும் விஷயமும் இந்த 'ஹதீ':தால் வெளியாகின்றது; எனவே, அதுகாலையே இஸ்லாமிய ஸ்திரீகள் படுதாவுக்குள்ளே நன்கு அடைக்கப்பட்டுக் கிடக்கவேண்டு மென்னும் கடுமை உதயமாய்விட்டதென்னலாம். பெண்மணிகட்கு இஸ்லாம் ஆதியில் அளித்திருந்த சுதந்தரம் ஆண்களால் சிறுகச்சிறுகப் பிடுங்கப்பட்டு வந்துகொண்டிருந்தது. உண்மையிலே இதற்குரிய முக்கிய காரணம், முஸ்லிம்கள் தங்களுக்குக் கிடைத்துவந்த அபரிமிதமான வெற்றிகளுக் கப்பாலே சுகபோக வாழ்க்கையிலும் சோம்பேறிப் பொழுதுபோக்கிலுமே அதிகம் ஆழ்ந்து தாழ்ந்து மூழ்கிப் போய்க் கிடக்கத் தலைப்பட்டுவிட்டதே யாகும்.

13. கஃ'ப'ாவுக்கு நான்கு அர்க்கான் — (மூலைகள்) உண்டு; (அர்க்கானின் ஒருமை ருக்ன் என்பதாம்). "அர் ருக்ன்" — 'அந்த மூலை' என்பது, கறுப்புக்கல் பதித்துள்ள மூலையைக் குறிக்கும்; பொதுப்படையாய் இஃது அர்ருக்னல் அஸ்வத்' (அக் கறுப்புக்கல் மூலை) என்றே வழங்கப்பட்டு வருகிறது. எமன் பிராந்தியத்தை நோக்கி நிற்கு மூலை, "அர்ருக்னல் எமானீ" என்றும், ஷாம் — (சிரியா) தேசத்தை நோக்கி நிற்கு மூலை, "அர்ருக்னல் ஷாமீ" என்றும், இ'ர ா:க் — (மெஸபொட்டேமியா) தேசத்தை நோக்கி நிற்கு மூலை, "அர்ருக்னல் இ'ர ா:க்:கீ" என்றும் அழைக்கப்படும்.

14. இப்'னு உ'மர் கூறியுள்ளார்: (கறுப்புக்கல் பதித்துள்ள) மூலையைக் குறித்து உ'மர் பேசத் தொடங்கி (இவ்வாறு) சொன்னார்: 'நீயொரு (வெறுங்) கல்லே யென்பதை நா னறிவேன் என்பதற்கு அல்லா(ஹ்)வைச் சாக்ஷியா யிருக்க யான் அழைக்கின்

---

¹தவ்வா'ப் சுற்றத் துவக்குவது அந்தக் கறுப்புக்கல் மூலையிலிருந்தே யாம். இந்த 'ஹஜருல் அஸ்வத்' கஃ'ப'ாவின் வடகிழக்குச் சுவரில் அதன் வாயிலுக்குச் சமீபமாய்க் கிழக்கு மூலையில், சிறிது கருமை யும் சிவப்பும் வெண்மையும் கலந்த புளியங்கொட்டை நிற முடையதா யமைந்திருக்கிறது. இது சுமார் 8 அங்குல நீளமும், 7 அங்குல அகலமுமுள்ளதாயிருக்கிறது. இது முட்டை வடிவுள்ள ஒரு வெள்ளிச் சட்டத்திலே பதிக்கப்பட்டிருக்கிறது. இக்கல் பூமியிலிருந்து 4 அடி உயரத்திலே இருக்கிறது. கஃ'ப'ாவின் மூலைக்கல்லாகிய இந்தக் கறுப்புக் கல்லை மரியாதையாய் முத்த மிடுவது 'ஹஜ்ஜாஜ்கள் செய்யும் பெருவழக்கமா யிருந்து வருகிறது. ஏனை மூலைகளும் இவ்வாறே முத்தமிடப்பட்டு வந்திருக்கின்றன. எனவே, இந்த 'ஹஜருல் அஸ்வதை' முத்த மிடுவதில் ஒரு சிறிதும் கடவுட் பூசைக்குரிய கௌரவம் காண் பிக்கப்படவில்லை; அடுத்து வரும் இரு 'ஹதீ':துகளையும் கூர்ந்து நோக்க; இன்னம், பு'க'ா. 25 : 58ம் பார்க்க.

இன்னம், "வீடு கட்டுகிறவர்கள் ஆகாதென்று தள்ளின கல்லே மூலைக்குத் தலைக்கல்லாயிற்று," (மத்தேயு 21 : 42) என்று இயேசு—(ஈ'ஸா நபி) கூறியுள்ளது இந்தக் கல்லைக் குறித்தேதான். இப்'ராஹீம் நபியின் சந்ததியில் ஒரு கிளையினராய் விளங்கிய இஸ்மாயீ'ல் நபியையுள்ளிட்ட ப'னீ இஸ்மாயீ'ல்கள் ப'னீ இஸ்ரா யீல்களால் ஒதுக்கப்பட்டுப் போயிருந்தும், அல்லா(ஹ்)வின் அரசாங்கத்து—(தேவனது ராஜ்ஜியத்து)க் குரிய மூலைக்குத் தலைக்கல்லாய் விளங்கலாயிற்று என்னும் சரித்திரத்தை விளக்கிக் காண்பிக்கும் ஓர் அடையாளமாகவே,—(சின்னமாகவே) அக்கல் இருந்துவருகிறது.

றேன் ;[13A] நீ தீமையும் இழைக்க முடியாது ; நன்மை யும் புரிய முடியாது (என்பதையும் யானறிவேன்); இன்னம், அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) உன்னை முத்தியிட்டதை நான் பார்த்திராத பக்ஷத்தில், உன்னை நான் முத்தியிட மாட்டேன் ;' அப்பாலவர் அதனை முத்தியிட்டார்.— (பு’க’ா. 25 : 56)

15. இப்’னு உ’மர் கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) இவ் விரண்டையும்[14] முத்தி யிட்டதை யான் பார்த்திருந்தபடியால், கஷ்டத்திலும் இலகுவிலும் இவ்விரு மூலைகளையும் முத்தியிடுவதை யான் கைவிட்டது கிடையாது.— (பு’க’ா. 25 : 56)

16. இப்’னு அ’ப்’ப’ாஸ் கூறியுள்ளார் : நபிகளுதர் (சல்அ’ம்) நவின்றருளினர்கள் :—

“ அதில் நீங்கள் பேசுகின்றீர்கள் என்பதைத் தவிர்த்து, [அல்லா(ஹ்)வின்] ஆலயத்தைச் சுற்றித் :தவ்வா‘ப் வருவது தொழுகையைப் போலவே இருக் கிறது ;[15] இன்னமதில் எவரொருவர் பேசுகிறாரோ,

---

13 A. சென்ற அடிக்குறிப்பை (13) ஊன்றிப் படிக்க.

14. அ’ருக்னல் ஷாமீ, அ’ருக்னல் இ’ரா:க்:கீ என்பனவாம். இதிலிருந்து, எல்லா (4) மூலைகளும் அதுகாலை முத்தமிடப்பட்டே வந்தனவென்பது நன்கு தெரிகின்றது.

15. :தவ்வா‘ஃபென்பது தொழுகையைப்போலே பாவிக்கப்பட வேண்டுமென்பது, அத்தொழுகையைப்போலே இத் :தவ்வா‘பும் பயபக்தியுடனும், மனக்கண் முன்னே ஆண்டவன் பிரத்தியக்ஷமா யிருப்பதாக எண்ணப்படும் எண்ணத்துடனுமே செய்யப்படல் வேண்டுமென்று வற்புறுத்துவதா யிருக்கிறது. இவ்வாறு உவமை யாக்கப்பட்டிருப்பதிலிருந்து, தொழுகையைப் போலவே :தவ்வா ‘பிலும் உள்ளப் பரிசுத்தத் துடனே உடற் பரிசுத்தமும்

அன்னவர் நல்லதையன்றி வேறெதையும் பேசா திருக்கட்டும்.''— ('திர்மி—மிஷ். 11 : 3)

17. ஆ'யிஷா பிராட்டியார் கூறினார்: 'ஹஜ்ஜை யன்றி வேறேதும் நோக்கமின்றியே நாங்கள் புறப்பட்டோம்; மேலும், நாங்கள் ஸரிஃப எட்டியபொழுது, நான் வீட்டுக்கு விலக்காய் விட்டேன்; அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) என்னிடம் வந்து சேர்ந்தார்கள்; யானோ, அழுதுகொண்டிருந்தேன்; (அப்பொழுது) அவர்கள், "உனக்கென்ன நிகழ்ந்துவிட்டது? நீ வீட்டுக்கு விலக்காய் விட்டையோ?" என்று வினவினார்கள்; ஆமென்று நான் (பதில்) கூறினேன். (இதற்கு) அவர்கள் சொன்னார்கள் :—

"இஃது ஆதத்தின் குமாரிகட்கு அல்லா(ஹ்) விதித்துள்ள காரியமா யிருக்கிறது; ஆதலினால், (அவனது) ஆலயத்தைச் சுற்றி நீ இடம்வர வேண்டாம் என்பதைத் தவிர்த்து, 'ஹஜ்ஜாஜ்கள் செய்யும் ஏனைக் காரியங்களை (யெல்லாம்) நீ செய்துவரக் கடவாய்.''[16]— (பு'க'ர. 6 : 1)

---

உடைப்பரிசுத்தமும் அவசியமே யென்னும் விஷயமும் வெளியாகின்றது.

16. மாதவிடாயிலிருக்கும் ஸ்திரீகள் : தவ்வா'ப் செய்வதைத் தவிர்த்து, ஏனையெல்லா 'ஹஜ்ஜின் காரியங்களையும் செய்துவரலாம். இ'ஹ்ராம்கட்டுமுன்னே மாதவிடாய் வந்துவிடுமாயின், அதற்காக இ'ஹ்ராம் கட்டுவதை நிறுத்துவது அவசியமில்லை; இவ்வாறே ஏனைக்காரியங்களையும் அப்பெண்மணி செய்துகொள்ளலாம். அவற்றிற்குத் தடையில்லை.

18. இப்’னு உ’மர் கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) (மக்காவிற்குள்) முதலில் வந்தவுடனே ‘ஹஜ்ஜிலும் உ’ம்ராவிலும் :தவ்வா‘ப் செய்தபொழுது, அவர்கள் முதல் மூன்று சுற்றிலும் சிறிது வேகமாய் (ஓடுவதேபோல்) நடந்து தொடங்கினார்கள்; பிறகு நான்கு சுற்றையும் நடந்தே முடித்தார்கள்; பின்பு இரண்டு ரக்ஆ’த் தொழுது கொண்டார்கள்; அப்பால் ச‘பா மர்வாக் (குன்று)களுக்கிடையே ஓடினார்கள்.[17]— (பு’க’ா. 25 : 62).

19. ஜாபி’ர் கூறினர்: நாங்கள் நபிகள் நாயகத்துடனே (சல்அ’ம்) வந்தோம்; :தர்வியாவின் தினம்[18]

---

17. ச‘பா, மர்வா என்பன மக்காவிலே ‘ஹரம் ஷரீ‘புக்கு வெளியிலுள்ள இரு சிறு குன்றுகளாகும். இவ் விரண்டற்குமிடையே “தொங்கோட்டம்” ஓடவேண்டும்; இதற்கு ஸஃ’இ என்று பெயர் சொல்லப்படும். “நிச்சயமாகவே ச‘பாவும் மர்வாவும் அல்லா(ஹ்)வின் அடையாளங்களினின்றுள்ளனவாகும்; ஆதலால், அவ்வீட்டினிடம்—(கஃ’ப’ாவின்பால்) ‘ஹஜ்ஜையாவது, உ’ம்ராவையாவது ஒருவன் செய்ய நேருங்கால், அவன் அவ்விரண்டையும் சுற்றிக்கொண்டு (ஸஃ’இ) வருவதில் குற்றம் ஒன்றுமில்லை” (:குர். 2 : 158).

இந்த ஸஃ’இ ஏழுமுறை திரும்பித் திரும்பிச் செய்யவேண்டும் (பு’க’ா. 25 : 79). உ’ம்ராவுக் குரியவர் இந்த ஸஃ’இ முடிந்தவுடனே இ‘ஹ்ராமைவிட்டு வெளிப்பட்டுவிடுகிறுர். அவ்வளவேதான் அவருக்கு. இதன் ஏனை விவரமெல்லாம் இஸ்லாம் என்னும் எமது நூலில் காணப்படும்.

18. :தர்வியா என்பது, “தண்ணீர் காட்டுதல்,” அல்லது “தாகத்தைத் தணித்தல்” என்று கருத்துக் கொள்ளும். ‘துல் ‘ஹஜ் மாதம் 8-ஆந் தேதியே இப்பெயர் கொண்டு அழைக்கப்படுகிறது; இதன் காரணம், மினுவுக்கும் அ’ர‘பாத்துக்கும் வேண்டிய தண்ணீரை ‘ஹஜ்ஜாஜ்கள் அக்காலத்தில் அத்தேதியிலே சேகரம்

வரை நாங்கள் இ'ஹ்ராம் கட்டிக் கொள்ளாமலே இருந்தோம்; மேலும், எங்கள் முதுகின்புறம் மக்காவை வைத்து, நாங்கள் 'ஹஜ்ஜுக்காக லப்'பை'க்க வென்பதை (உரக்க) ஓதினோம்.— (பு'க'ா. 25 : 81)

20. அ'ப்'து'ல் அ''ஜீ'ஜ் கூறினர்: 'நபிகள் திலகங் குறித்து (சல்அ'ம்) :தர்வியாவின் தினத்தில் அவர்கள் எங்கே ளு'ஹ்ருடைய, அ'ஸ்ருடைய தொழுகைகளைத் தொழுது கொண்டார்களென்று உமக்குத். தெரிந்துள்ள எதையேனுங் குறித்து எனக்குச் சொல்லும்,' என்று யான் அனஸைக் கேட்டேன்; மினாவிலென்று அவர் (பதில்) கூறினர். — (பு'க'ா. 25 : 82)

21. ஸாலிம் கூறியுள்ளார்: 'ஹஜ்ஜாஜ் இப்'னு யூஸுப், தாம் இப்'னு'ஜ் 'ஜுப'ய்ரைத் தாக்கிய ஆண்டிலே அ'ப்'து'ல்லா(ஹ்) விடம், 'அ'ர'பாத் தினத்தில்[19] அத் தங்குமிடத்திலே நீங்கள் எவ்வாறு நடந்து கொண்டீர்கள்?' என்று வினவலுற்றார்;

---

செய்து கொண்டார்கள். உண்மையிலே 'ஹஜ்ஜென்பது அன்று 8-ஆந் தேதியன்றே ஆரம்பமாகின்றது. மினாவுக்கு அன்று புறப்படுமுன்னே இ'ஹ்ராமில்லாத 'ஹஜ்ஜாஜ்களெல்லாம் இ'ஹ்ராம் கட்டிக்கொள்ளவேண்டும்; :தவ்வா'பும் சுற்றவேண்டும். 8-ஆந் தேதி ளு'ஹ்ர் தொழுமுன்னே மினா சென்று சேரவேண்டும் ('ஹதீ'. 20).

19. அ'ர'பாத் தினமென்பது 'துல் 'ஹஜ் மாதம் 9-ஆந் தேதியாகும். 8-ஆந் தேதி ளு'ஹ்ருக்குச் சென்று சேர்ந்த 'ஹஜ்ஜாஜ்கள் 9-ஆந் தேதி காலையில் சுப்''ஹ் தொழுகையைத் தொழுது முடித்த பின்பு மினாவைவிட்டுப் புறப்பட்டு, அ'ர'பாத் மைதானம் செல்வார்கள். அது 'ஹரம் ஷரீ'பிலிருந்து 16-மைல் தூரத்திலே கிழக்கே யிருக்கிறது. அ'ர'பாத் தென்பது மஃ'ரி'பத் என்பதிலிருந்து

(இதற்கு) ஸாலிம், ‘நீர் ஸு‘ன்னத்தைப் பின்பற்று வதா யிருப்பின், அ’ர‘பாத் தினத்தில் சற்று முன்னே ரத்திலே தொழுதுகொள்ளக் கடவீர்,’ என்று (விடை) கூறினர். அப்பொழுது அ’ப்’துல்லா ஹிப்’னு உ’மர் சொன்னர்: ‘அவர் கூறியது சரிதான்; அவர்கள் ஸு‘ன்னத்தின் பிரகாரம் ளு’ஹ்ர், அ’ஸ்ர் (இரு)

---

ஜனித்திருக்கிறது. மஃ’ரி‘பத் என்பது சிறப்பாக “இறைவன் சம்பந்தமான ஞானம்” என்றே கருத்துக்கொள்கின்றது. (இஸ் லாம் 8-ஆம் பதிப்பு நோக்க).

‘ஹஜ்ஜாஜ்கள் அ’ர‘பாத்தில் 9-ஆந் தேதி சூரியன் மையஞ் சரிந்ததிலிருந்து சூரியாஸ்தமயம்வரை தாமதித்திருத்தல்வேண்டும். இதற்கு வு(க்):கூ‘ப்—(ஒடுங்கித்தரிபடல்) என்று பெயர்சொல்வர். இதுதான் ‘ஹஜ்ஜு‘க்குரிய முக்கியமான வணக்கக் காரியமாயிருக் கிறது; எனவே, இந்த வு(க்):கூ‘பில்லாமல் ‘ஹஜ் நிறைவேற மாட்டாது. ஆதலினல், அங்குத் தரிபட்டிருக்குங்கால், அதிகமான ‘தஸ்பீ’‘ஹ், ‘தஹ்லீல், ‘தக்பீ’ர்போன்ற நற்காரியங்களிலேயே முழு நேரத்தையும் கழித்து முடித்தல் வேண்டும். ஆயின், அ’ர‘பாத் மைதானத்தின் வு(க்):கூ‘பின்போழ்து ‘ஹஜ்ஜு‘க்கென்று பிரத்தி யேகமான வணக்கம்—(தொழுகை) ஒன்றும் தனியே தொழப்படுவ தில்லை. எனினும், இவ்வாறு அங்குத் தங்கியிருக்கும் போது இமாமானவர் “ஜப’லெ ர‘ஹ்மத்”—(கருணைப் பிரவாகமலை) என் பதன் அருகினிலிருந்து ‘ஹஜ்ஜாஜ்களுக்காகப் பாபமன்னிப்பும் பிழைபொறுக்கும் பிரார்த்தனையும் புரிவார். (இஸ்லாம் புத்தகம் 8-ஆம் பதிப்புப் பார்க்க).

அஞ்ஞானகாலத்திலே, :குறைஷிகள் தங்களை மற்றெல்லாக் கூட்டத்தாரினும் மேம்பட்டவரெனக் கருதிக்கொண்டு, அ’ர‘பாத் துக்குச் செல்வது வழக்கமில்லை. இஸ்லாம் தோன்றி இத்தீய வழக்கத்தை ஒழித்துவிட்டதென்க (:குர். 2: 199, பு’க’ா. 25: 91).

தொழுகைகளையும் ஒன்ருய்ச் சேர்த்துத் தொழு தார்கள்'.[20] — (பு'க'ா. 25: 88)

22. இப்'னு உ'மர் சொன்னர்: நபிகள் திலகம் (சல்அ'ம்) மு'ஜ்த'லி'பாவில் ம:க்ரிப்', இ'ஷாத் தொழுகைகளை ஒன்றுசேர்த்துத் தொழுதார்கள்;— அவற்றில் ஒவ்வொன்றுக் காகவும் (தனியான) இ:காமத் சொல்லப்பட்டது; இன்னம், அன்னவர்கள் அவற்றினுக் கிடையே (வேறு) அதிகப்படியான தொழுகையொன்றும் தொழவில்லை; அவற்றில் எந்த ஒன்றுக்குப் பின்னேயும் (வேருென்றும்) தொழ வில்லை.[21]— (பு'க'ா. 25 : 96)

---

20. மினுவினின்று சுப்''ஹ் தொழுகைக்குப் பின்னே அ'ர 'பாத் சென்று சேர்கிறவர்கள் அங்குள்ள மஸ்ஜிதில்—நிமிராவிலே —இமாம்-ஜமாஅ'த்துடன் சேர்ந்து தொழும்பொழுது, ளு'ஹ்ர்த் தொழுகையும் அ'ஸ்ர்த் தொழுகையும் ஒரே ப'ாங்குடனும், ஈர் இ:காமத்துடனும் அடுத்தடுத்தாற்போலே தொடர்ந்துதொழப் படும். இமாம்-ஜமாஅ'த்துடன் சேராது தனியே தொழுவோர், அவ்விரு தொழுகைகளை அவ்வாறு சேர்த்துத் தொழாமல் தனித் தனியே தொழுகிருர்கள்.

21. அ'ர'பாத்திலிருந்து சூரியாஸ்தமயத்துக்குப் பின்னே புறப்பட்டுவந்து, மினுவுக்குப் போகுமுன்னே மு'ஜ்த'லி'பாவில் தங்க வேண்டும். "அ'ர'பாத்தை விட்டு நீங்கள் திரும்புவீர்க ளாயின், மஷ்அ'ரில் 'ஹராமில் (மு'ஜ்த'லி'பாவில் தாமதித்து) அல்லா(ஹ்)வை நினைவுகூர்வீர்களாக" (:குர். 2: 198). அங்கே ஓர் அதான், ஈர் இ:காமத்துடனே ம:க்ரிபி'ன்'பர்ஸ'யும், இ'ஷாவின் 'பர்ஸ'யும் ஒன்றுக்குப்பின் மற்ருென்ருய்த் தொழவேண்டும். இமாம்-ஜமாஅ'த்தில் சேராமல் தனியே தொழுபவரும் இவ்வாறே அவ்விரண்டையும் சேர்த்துத்தான் தொழவேண்டும். இரண் டிற்கு மிடையிலும், இறுதியிலும் நபிபெருமானுர் வேருரு தொழுகையும் தொழுததில்லை யென்றறிக.

23. அ’ம் ரிப்’னு மய்மூன் கூறினர்: நான் உ’மரின்கூட இருந்தேன்; அவர் மு‘ஜ்த’லி‘பாவிலே சுப்‘‘ஹ் தொழுதுகொண்டார்.[22]— (பு’க’ா. 25 : 100)

24. இப்’னு உ’மர் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) (தங்கள் இறுதி) விடைபெறும் ‘ஹஜ்ஜில் ‘ஹஜ்ஜுடனே உ’ம்ராவையும் ஒன்று சேர்த்து இலாப மடைந்தார்கள்..............ஆகையால், அவர்கள் மக்காவுக்கு வந்தபொழுது, ‘தவ்வா‘ப் சுற்றினர்கள்; மேலுமவர்கள் முதலில் செய்த காரிய மாவது: அவர்கள் (‘ஹஜருல் அஸ்வத்’) மூலையை முத்தமிட்டார்கள்; பிறகு முதன் மூன்று (‘தவ்வா‘ப்) சுற்றிலே ஓடினர்கள்; இன்னம் நான்கில் நடந்து சென்றார்கள்; பிறகு [அல்லா(ஹ்)வின்] ஆலயத்தைச் சுற்றிவரும் ‘தவ்வாஃபை முடித்துக்கொண்ட பொழுது, (நபீ இப்’ராஹீம்) நின்றுகொண்டிருந்த இடத்திற்குச் சமீபத்திலே இரண்டு ரக்ஆ’த் (ந‘பில்) தொழுது கொண்டார்கள்; பிறகு தஸ்லீம் சொன்னர்கள்; மேலும், அவர்கள் இதனைச் செய்து முடித்தபொழுது, ச‘பாவுக்கு வந்து, ச‘பா—மர்வாவுக்குரிய ‘தவ்வாஃபை ஏழுமுறை (திரும்பித் திரும்பிச்) சுற்றிவந்தார்கள்; அப்பால், (இ‘ஹ்ராமில்) அவர்களுக்குத் தடுக்கப்பட் டிருந்த எந்தவொன்றும், அவர்கள் தங்கள் ‘ஹஜ்ஜை முடித்துக்கொள்ளுமட்டும், மேலும், பலிக்குரிய தினத்

---

22. ‘துல்‘ஹஜ் 10-ஆந் தேதி— (யவ்முன்னஹ்ர்) அதிகாலையில் மு‘ஜ்த’லி‘பாவிலே ‘பஜ்ர் தொழுதுகொண்டு, சூரியோதயத்துக்கு முன்னே அவ்விடத்தைவிட்டு மினுவுக்குப் புறப்பட்டுவிட வேண்டும். (இஸ்லாம் புத்தகம் பார்க்க).

திலே[23] (அந்தப்) பிராணியைப் பலிகொடுத்து முடியு மட்டும் அன்னவர்கட்கு அனுமதியளிக்கப்பட்டதாய்ப் போய்விடவில்லை; இன்னம், அன்னவர்கள் திரும்பி வந்து, [அல்லா(ஹ்)வின்] ஆலயத்துக்குரிய :தவ்வா‘பச் சுற்றினார்கள்;[24] அப்பாலே, (இ‘ஹ்ராமில்) அவர் கட்குத் தடுக்கப்பட்டிருந்த ஒவ்வொன்றும் அவர் களுக்கு அனுமதியளிக்கப்பட்டுப் போயிற்று.— (பு’க’ர. 25 : 104)

25. (‘ஹ‘ஜ்ரத்) அ’லீ கூறினர்: நபிபெருமான் (சல்அ’ம்) என்னை (உத்தியோகத்தில்) ஏற்படுத்தி னார்கள்; ஆகையால், யான் ஒட்டகங்கள் பலியிடப் படுவதை மேற்பார்வை யிட்டுவந்தேன்; மேலுமவர்கள் எனக்கு உத்தர விட்டார்கள்; ஆகவே, யான் அவற்றின் இறைச்சியைப் பங்கீடு செய்தேன்; பின்பும் எனக்குக் கட்டளை யிட்டார்கள்; ஆகையால், யான் அவற்றின் ஜுல்களையும், அவற்றின் தோல் களையும் பகிர்ந்துகொடுத்தேன்.[25]— (பு’க’ர. 25 : 120)

---

23. பலிக்குரிய தினம்— (யவ்முன் ன‘ஹ்ர்) ‘துல்‘ஹஜ் 10-ஆந் தேதியாம். அன்று காலையில் மினாவில் மூன்றிடங்களிலும்— (ஜம்ராத்களிலும்) கல்லெறிந்தபிறகு பலி— (:குர்ப’ானீ) கொடுத் திடல் வேண்டும்.

24. இதற்குத் :தவ்வா‘புல் இ‘பால’ா, அல்லது “:தவ்வா‘பு‘ஜ் ‘ஜியாரத்” என்று பெயர் சொல்லப்படுகிறது. மினாவில் அன்று செய்யவேண்டுவன எல்லாம் செய்து முடிக்கப்பட்டபின்பு மக்கா வுக்குச் சென்று “:தவ்வா‘புல் இ‘பால’ா” செய்யவேண்டும்; இதன் பொருள், அ’ர‘பாத்திலிருந்து திரும்பியபின்பு செய்யப் படும் :தவ்வாஃ‘பென்று கொள்ளப்படும்.

25. “ஜுல்” என்பது ஒட்டகத்தின்மீது போடப்படும் போர்வை யாகும். இதேவிதமாக ஈ’து’ல் அல்‘‘ஹாவின் பலித்

26. ஜாபி'ர் கூறினர்: மினாவுக்குரிய மூன்று நாட்களுக்கு மேலே நாங்கள் எங்கள் பலிகளின் இறைச்சியிலிருந்து புசிப்பது வழக்கமில்லாதிருந்தது; பின்பு நபிகள் திலகம் (சல்அ'ம்) எங்களுக்கு அனுமதியளித்து, "(நீங்கள்) புசியுங்கள்; (வழிப் பிரயாணத்துக்குச்) சவதரிப்பாகவும் அதனைச் சேமித்து எடுத்துக் கொள்ளுங்கள்," என்றுங் கூறினர்கள். ஆகையால், நாங்கள் புசித்தோம்; இன்னம், சவதரிப்பாகவும் அதனைச் சேமித்து எடுத்துக் கொண்டோம்.[26]—(பு'க'ா. 25:124)

27. அ'ப்'து'ல்லா(ஹ்) கூறினர்: நபிகள் திலகமும் (சல்அ'ம்) அவர்களுடைய தோழர்களுள் ஒரு சாராரும் தங்களுடைய சிரங்களை முண்டனம் செய்து கொண்டார்கள்; அவர்களில் (வேறு) சிலர் தங்கள் ரோமங்களைக் கத்தரித்துக் கொண்டார்கள்.[27]—(பு'க'ா. 25:127)

---

தோல்களுக்கும் ஏற்பாடு செய்யப்படலாம். இவ்வாறு ஓர் ஏற்பாடு செய்யப்படுவதாயின், அப்பொழுது இந்திய நாட்டிலுள்ள எல்லாக் :குர்ப'ானீத் தோல்களும் சேர்ந்து பொதுஜன முஸ்லிம்களின்— இஸ்லாத்தின்— நன்மைக்கு எத்துணைப் பெரிய பொருளாதார வருவாயுதவியா யிருந்துவருதல் கூடும்! மினாவிலும் இப்படிப்பட்ட ஏற்பாடொன்று செய்யப்பட்டால், மிக்க நன்மையுண்டாகுமென்பது திண்ணமேயாம்.

26. :குர்ப'ானீ இறைச்சி (கவாப்') வற்றலாகக் காயவைத்தும், பின்னாலேற்படக்கூடிய தேவைக்காகச் சேமித்தும் வைக்கப்படலாம்.

27. தலையினை முண்டனம் செய்துகொள்வதும், சிகையினைக் கத்தரித்துக்கொள்வதும் இ'ஹ்ராம் நிலையை விட்டு வெளிப்படுவதைக் குறித்துக்காட்டுவனவா யிருக்கின்றன.

28. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறியுள்ளார் : நபிகள் நாயகம் (சல்அ'ம்) மினுவின்— (ந'ஹ்றுக்குரிய) நாட்களில் [அல்லா(ஹ்)வின்] ஆலயத்தைத் தரிசிப்பது வழக்கம்.[28]— (பு'க'ா. 25 : 129)

29. ஜாபி'ர் கூறியுள்ளார் : நபிக ளுயகர் (சல்அ'ம்) பலியின் தினத்தில்— (10-ஆந் தேதி) முற்பகலில் கல்லெறிந்தார்கள் ; அதற் கப்பால் பிற்பகலிலே கல்லெறிந்தார்கள்.[29] — (பு'க'ா. 25 : 134)

30. அனஸ் கூறியுள்ளார் : நபிபெருமானுர் (சல்அ'ம்) ளு'ஹ்றர், அ'ஸ்ர், ம:'க்ரிப்', இ'ஷா ஆகிய தொழுகைகளைத் தொழுதுகொண்டார்கள் ; பின்பு மு'ஹஸ்'ஸ'பி'ல் சிறிது நேரம் கண்ணயர்ந்தார்கள் ; பிறகு [அல்லா(ஹ்)வின்] ஆலயத்துக்குச் சவாராகிச் சென்று :தவ்வாஃ'பச் சுற்றினுர்கள்.[30]— (பு'க'ா. 25 : 144)

---

28. மினுவின் நாட்களென்பன, அங்கே தங்கும் 'துல்'ஹஜ் 10-ஆந் தேதியும், அதனையடுத்துள்ள இரண்டு அல்லது மூன்று தினங்களுமாம். 10-ஆந் தேதியாய யவ்முன்ன'ஹ்றுக்குப் பிந்தியுள்ள நாட்கள் "அய்யாமுத் தஷ்ரீ:க்" கென்று அழைக்கப்படுகின்றன.

29. மினுவில் கல்லெறிவதன் விவரமெல்லாம் பு'க'ா. 25 : 142-இல் (இஸ்லாம் 8-ஆம் பதிப்பு நூலிலும்) விளக்கியுரைக்கப்பட்டுள்ளன. இச்செய்கை, மனிதன் தீமையை எதிர்த்துப் போராடத் துணியும் அவனது ஆத்மார்த்த யுத்தத்தை நினைப்பூட்டக்கூடிய ஒரு செயலா யிருந்துவருகிறது ; நல்லடியார் தீமையை வெறுக்கின்றூர் ; ஆதலினுல், அன்னவர் அத்தீமைக்குரிய (மனக்குரங்கை) ஷைத்தானைக் "கல்லெறி தூரத்திலே" ஒதுக்கி வைக்கின்றூர் என்பதைச் சுட்டிக்காட்டவே ஜம்ராத்களில் அக்கற்களை எறிகின்றூர். இதுதான் கல்லெறிவதா லேற்படும் கருத்தா யிருக்கிறது.

30. மு'ஹஸ்'ஸ'பெ'ன்பது மினுவிலிருக்கிறது. இங்கே கூறப்

31. இப்’னு அ’ப்’ப’ாஸ் கூறியுள்ளார்: ‘துல் மஜா‘ஜு’ம் உ’(க்)காஜு’ம் அஞ்ஞான நாட்களிலே (‘ஹஜ்ஜுக்குரிய காலத்தில்) வர்த்தகச் சந்தைகளா யிருந்து வந்தன. இஸ்லாம் வந்தக்கால், அவர்கள்—(முஸ்லிம்கள்) இதனை(க் கீழ்க்காணும்) ஆயத் அருளப் படும்வரை வெறுத்து வந்தார்கள்: “உங்கள் ரக்ஷக னிடத்திருந்து நீங்கள் பாக்கியந் தேடுவீர்களேல், உங்கள்மீது குற்றமில்லை” (2:198); (அஃதாவது) ‘ஹஜ்ஜுக்குரிய காலத்தில்.[31]— (பு’க’ா. 25:150)



---

பட்டுள்ள :தவ்வா‘ப் “:தவ்வா‘புஸ்ஸ‘த்ர்” அல்லது “:தவ்வா‘புல் வித’ாஃ’”—(பிரிவுக்குரிய :தவ்வா‘ப்) என்பதா யிருக்கிறது; அஃதாவது, ‘ஹஜ்ஜுக்குப்பிறகு மக்காவை நீத்துப் புறப்படுதற் குரிய இறுதித்தவ்வா‘பா யிருந்துவருகிறது.

31. ‘ஹஜ்ஜென்னும் பாரமார்த்திகத்துக் குரிய ஆத்மார்த்த அதியுச்சநிலையை எய்திநிற்குங்காலத்திலும் இவ்வுலக சம்பந்தமா யுள்ள வர்த்தகத்தைக்கொண்டு ஆண்டவனளிக்கும் பாக்கியத் தைப் பெற்றுக்கொள்ளலாமென்பது இஸ்லாத்தில் தடுக்கப்பட் டில்லை. எனவே, இம்மார்க்கத்தில் எவ்வாறு ஸ்தூலமும் ஸூக்ஷ்ம மும்—லௌகிகமும் வைதிகமும்—ஒன்றுடனொன்று மிசிரமாக்கப் பட்டிருக்கின்றனவென்பது மிகச் செவ்விதாய்ப் புலப்படுகின்ற தென்று நோட்டமிடக் கடவீர்கள். எனவே, எம் முஸ்லிம்கள் இல்லறத்தை வெறுத்துத் துறவறச் சன்னியாசிகளாய் மாறிப் போய்விடுவது கூடாதென்க.

# அத்யாயம்—19

## ஜிஹாத்'— (போராட்டம்)

1. "இன்னம், எமக்காகப் பெரும் பிரயாசை யெடுத்துக் கொள்கிறவர்கள் (குறித்தென்றாலோ) நிச்சயமாகவே நாம் அன்னவர்களை நம்முடைய பாதைகளிலே நேர்வழி காட்டு வோம்" (:குர். 29 : 69).

2. "அவர்கள் விஷயத்தில் அதனை—(:குர்ஆனை)க்கொண்டு மாபெரும் பிரயாசையாய்ப் பெரும் பிரயாசை யெடுத்துக் கொள்ளக் கடவீர்கள்" (25 : 52).

3. "இன்னம், உங்களுக்குள்ளே ஒரு கூட்டத்தார் (மானிடர்களை) நன்மையின் பக்கல் அழைக்கிறவர்களாகவும், நல்லதைக் கொண்டு ஏவுகிறவர்களாகவும், தீயதைவிட்டு விலக்குகிறவர்களாகவும் இருக்கக்கடவர்; மேலும், அவர்களே தாம் ஜயசீலர்கள்" (3 : 103).

4. "மத விஷயத்தில் பலவந்தம் கூடாது" (2 : 256).

5. "இன்னம், உங்களுடனே யுத்தம் புரிகின்ற அவர் களுடனே நீங்களும் அல்லா(ஹ்)வின் பாதையிலே யுத்தம் புரியக் கடவீர்கள்; மேலும் இவ்வரம்பைக் கடவாதீர்கள்" (2 : 190).

6. "மேலும், தாங்கள் சக்திபெறுவார்களாயின், உங்கள் மார்க்கத்தைவிட்டு உங்களை யவர்கள் (அப்புறம்) திருப்பிவிடும் வரை உங்களுடனே அன்னவர்கள் யுத்தம் புரிவதை (ஒரு போதும்) நிறுத்தமாட்டார்கள்" (2 : 217).

7. "இன்னம், இன்னல் விளைப்பதென்பது இல்லாது போய், (எல்லா) மதங்களும் அல்லா(ஹ்)வுக்காக வென்றே ஆகுமட்டும் அன்னவர்களுடனே போர்புரியக் கடவீர்கள்" (8 : 39).

8. "இன்னம், அன்னவர்கள் சமாதானத்தின் பக்கல் சார்வார்க ளாயின், நீரும் அதன் பக்கலே சாரக்கடவீர்;

மேலும், அல்லா(ஹ்)வின் மீதே சார்ந்து நிற்கக்கடவீர்...... இன்னம், அன்னவர்கள் உம்மை ஏமாற்றப் பார்க்கின், அது காலை நிச்சயமாக அல்லா(ஹ்)வே உமக்குப் போதும்" (8, 61, 62).

9. "(ஏனை) மதங்கள்— அவை எல்லாவற்றின்மீதும் அவன் இதனை மிகைத்து நிற்கச் செய்வான்வேண்டி நேர் வழியையும் மெய்யான மார்க்கத்தையுங் கொண்டு தன்னுடைய தூதரை யனுப்பி யிருப்பவனே அன்னவனுவான்" (61 : 9).

ஜிஹாத்' என்னுஞ்சொல், "பகைவனைத் தடுத்து விலக்குவதில், அல்லது பிரீதியற்ற ஒருபொருளோடு மல்லாடுவதில் ஒருவனுக்குள்ள சக்தி முழுதையும் செலவழித்துப்பார்த்தல்," என்று பொருள் கொள்ளும். எனவே, ஜிஹாதென்பது இஸ்லாத்தில் இருவிதக் கருத்தைக் கொண்டுநிற்கிறது : (1) முஸ்லிம்களின் மதப் பிரசாரத்திற்கே— இதில் எவருடனும் மல்லாட வேண்டிய, அல்லது போராட வேண்டிய அவசியம் சிறிதுமில்லை— இச்சொல் வழங்கப்பட்டுவருகிறது ; (2) அவசியம் நேர்ந்துவிடுங்கால், பலாத்காரத்தை உபயோகித்தேனும் சன்மார்க்கத்தைத் தற்காத்து நிறுத்துவதா யிருந்துவருகிறது எம்முஸ்லிம்களின் போராட்டம். இவ்விரண்டில் முதற்கடமை— இஸ்லாத்தின்பாலே ஏனையோரை யெல்லாம் அழைப்பது— எல்லாக் காலத்திலுமுள்ள எல்லா முஸ்லிம்கள்மீதும் சுமத்தப்பட்டிருக்கும் நிரந்தரக் கடமையா யிருந்துவருகிறது. இரண்டாவது கடமையோ, எப்பொழுதோ ஓரோவமயம் நேரக்கூடியதா யிருக்கிறது. இவ்விரு கடமைகளைப் பற்றியும் எமது :குர்ஆன்ஷரீ'ப் மிக விளக்கமாகவும் மிகமிக அழுத்தமாகவும் வலியுறுத்திக் கூறியிருக்கின்றது. முதன் முதலில் அல்லா(ஹ்)வி னிமித்தம் ஜிஹாத்'— (கடும்பிரயாசை) எடுத்துக் கொள்வதைக் குறித்து அவ்வேதம் அறைந்துகொண் டிருக்கிறது (தலை. ஆயத் 1). அடுத்தபடியிலே :குர்ஆன்ஷரீ'பக்கொண்டு இஸ்லாத்தை நிராகரித் துள்ளோருடனே ஜிஹாத்' நடத்த வேண்டிய விஷயம் விளக்கப்பட்டிருக்கிறது; இதுதான் ஜிஹாதன் கபீ'ரன் — (மாபெரும் ஜிஹாத்') என்று அழைக்கப்பட்டுள்ளது

(தலே. ஆயத் 2); எனவே, இஸ்லாத்தில் செய்யவேண்டிய மிகப் பெரிய ஜிஹாத்' :குர்ஆனைக்கொண்டேயன்றிக் கத்தியைக்கொண் டன்று என்பது வெள்ளிடைமலேயேயாம்; அஃதாவது, இச்சன் மார்க்கப் பிரசாரத்திற்காக "இஷாஅ'த்துல் இஸ்லாம்" செய்து வரல்வேண்டும்; இதுதான் "ஜிஹாதெ' கபீ'ர்" என்னப்படுவது. இன்னம், இம்மார்க்கத்தில் எப்பொழுதுமே இஸ்லாத்தின்பால் மனிதர்களை அழைத்தற்குரிய ஒரு கூட்டத்தினர் இருந்துவரக் கடவரென்று எமது திருமறை வற்புறுத்திக்கொண் டிருக்கிறது (தலே. ஆயத் 3). எனவே, எல்லாக் காலத்திலும் எல்லாத் தேசத்திலும் "இஷாஅ'த்துல் இஸ்லாம்" என்னும் ஜிஹாத்' இடைவிடாது நடந்துவர வேண்டுமென்று இப்பொழுது நாம் நன்கு தெரிந்துகொண்டுவிட்டோம்.

இஸ்லாத்தைப் பிறருக்கெடுத்துப் போதிப்பதில் வாளையுருவ வேண்டிய ஜிஹாது'க்கு அவசியமில்லை; :குர்ஆன்ஷரீ'பும் அவ்வாறு எவ்விடத்தும் அனுமதி யளித்திருக்க வில்லை; ஆனால், அதற்கு மாருக, மதபோதனை விஷயத்தில் பலவந்தம் கூடாதென்றே நந்தெய்வத்திருமறை நவின்றுகொண்டிருக்கிறது (தலே. ஆயத் 4). இஸ்லாத்தில், சந்தேகமில்லாமலே மதத்திற்காக வாளையுருவ அனுமதியளிக்கப்பட்டிருக்கிறது; ஆனால், மனிதர்களை நந் தீ'னுல் இஸ்லாத்தில் வந்து சேருமாறு கூப்பிடக் கத்தியை உருவக் கூடாது. ஆயின், வாட்படை யுதவிகொண்டு இஸ்லாத்தையே இத்தரணியிலில்லாது எடுத்துவிட வேண்டுமென்று கங்கணங் கட்டித்திரியும் எதிரிகளினின்று தற்காத்துக் கொள்ளும் பொருட்டே நம் முஸ்லிம்கள் வாளையுருவ வேண்டுமென்று விளக்கமான கட்டளை :குர்ஆன்ஷரீ'பால் துலக்கப்பட்டிருக்கிறது (தலே. ஆயாத். 5, 6). ஒருவர் மத விஷயத்தில் மற்றவர்கள் தலை யிட்டுத் துன்பம் விளைப்பதென்பது ஒழிந்துபோய், அவரவரும் தத்தமக்கு விருப்பமான ஒரு மதத்தைப் பின்பற்றி நடக்கலா மென்னும் மனச்சாக்ஷி சுதந்தரமும் ஏற்பட்டு விடுமாயின், அக்கணமே முஸ்லிம்களின் வாளாயுதம் தனது உறையினுள்ளே சொருகப்பட்டுவிடல் வேண்டும் (தலே. ஆயத் 7). மதப்போர் நடந்துகொண் டிருக்கும்பொழுதே எதிரி வந்து சமாதானம்

கோருவானாயின், அப்பொழுதே அந்த யுத்தம் நிறுத்தப்பட்டுப் போதல் வேண்டும் (தலை. ஆயத் 8). இறுதியாக ஒரு நன்மாராயம்— சுபசமாசாரம்— கூறப்படுகிறது: அஃதாவது, எந்த எதிரியின் எவ்வித முயற்சியாலும் இஸ்லாத்தை இப்பூவுலகினை விட்டு இல்லாதொழித்து விடுவதென்பது ஒருகாலும் சாலாதென்பது சரதம் என்பதோடுமட்டும் நின்றுவிடாது, இதுவே கால அடைவில் இத்தரணியிலுள்ள ஏனையெல்லா மதங்களைவிட்டும் மேலானதாய் மகோன்னத அந்தஸ்தை வகிக்கப் போகிறதென்பதும் மெய்யேயாம் என்க (தலை. ஆயத் 9).

'ஹதீ':துகளும் மேலே கூறப்பட்டுள்ள இருவகை ஜிஹாத்களைப் பற்றியும் கூறிக்கொண்டிருக்கின்றன. ஜிஹாதென்பதே முஸ்லிம்களின் முதற்கடமையா யிருந்துவருகிறது; ஒரு முஸ்லிம் செய்யக்கூடிய காரியங்களிலெல்லாம் இதுவே மகா சிலாக்கியமான கைங்கரியமாகவும் இருந்து வருகிறது ('ஹதீ'. 1, 2). இஸ்லாத்தின் கொடியை உயர்த்திப் பிடிக்க முஸ்லிம்கள் தங்களாலியன்றவையெல்லாம் செய்து மாபெரும் பிரயாசையை எடுத்துக்கொள்வார்களாயின், இவர்களே உச்சஸ்தானத்தை யடைந்து நிற்பார்களென்று ஒரு வாக்குறுதி அளிக்கப்பட்டிருக்கிறது ('ஹதீ'. 3, 4). இன்னம், இறைவனால் ஊக்கிவிடப்படும் நல்லடியார்கள்— முஜத்'தி'த்'களென்று அழைக்கப்படுகிறவர்கள்—தீ'னுல் இஸ்லாத்திற்கு அப்பொழுதைக் கப்பொழுது புத்துயிரளிக்க முஸ்லிம்களுள்ளிருந்தே தோன்றுவார்களென்றும் மற்றொரு வாக்குறுதி அளிக்கப்பட்டிருக்கிறது ('ஹதீ'. 5); குறிப்பாக இவ்வுலகிலுள்ள கிறிஸ்தவ ஜாதியார்களுக் கெல்லாம் இஸ்லாத்தின் செய்தியைக் கொண்டுசெல்ல இவர்களுக்குள்ளிருந்தே ஒரு மஸீ'ஹன்பார் தோன்றுவாரென்றும் ஒரு வாக்குறுதி கொடுக்கப்பட்டுள்ளது ('ஹதீ'. 6).

மனிதர்களின் சத்தியத்தின் பக்கல் நேர்வழி காட்டி அழைத்துச் செல்வதுதான் முஸ்லிமுக்குக் கிடைக்கக்கூடிய மிக மிகப் பெரியதொரு பொக்கிஷமா யிருந்துவருகிறது ('ஹதீ'. 7); நபிகள் திலகமவர்களே ஹி. 6-ஆவதாண்டில் பல அரசர்கட்கு இஸ்லாத்

ளைத் தழுவிக்கொள்ளுமாறு திருமுகங்களை வரைந்து விடுத்தார்கள் ('ஹதீ'. 8). அவர்களுள் ஒருவருக்கேனும், தங்கள் அழைப்பை ஏற்றுக்கொள்ளாவிடின், அன்னவர் நாட்டின்மீது தாங்கள் படையெடுத்துவர நேருமென்று அச்சுறுத்தி ஒரு பொழுதும் எழுதவில்லை ('ஹதீ'. 9). முஸ்லிம்கள் மதப்போர் புரிந்தார்கள்; அதற்கு வேண்டிய அத்தியாவசியம் ஏற்படாது போய்விடவில்லை. ஆயின், இஸ்லாத்தை வேர்கல்லி யெறிந்துவிட வேண்டுமென்னும் தீய எண்ணத்துடனே வாளையுருவிய எதிரிகள் மீதே தற்காப்புப் போர் தொடுக்கப்பட்டது (தலை. ஆயாத் 5, 6). எவ்வாற்றானும், சத்திய சன்மார்க்கம், உயிர்க்கிறுதி வருவதாயிருப்பினும், தற்காத்து நிலைநிறுத்தப் பெறல் வேண்டுவதாயே யிருந்து வருகிறது. ('ஹதீ'. 10); ஆகையால், அவசியம் நேருங்கால், சன்மார்க்கத்தை வாளின் உதவி கொண்டேனும்—இதுதான் வீர சுவர்க்கம் புகுமார்க்கமா யிருக்கிறது— தற்காத்து நிலைநிறுத்த முஸ்லிம்கள் எப்பொழுதுமே ஆயத்தமா யிருக்கவேண்டுமென்று கோரப் பெறுகிறார்கள் ('ஹதீ'. 11). நபி பெருமானது சொந்த ஆத்மாவே சத்தியத்தின் தற்காப்பிற்காகப் போராடி இரத்தசாக்ஷி மரணத்தையடைய வேணவாக் கொண்டு நின்றது; முடியுமானால், மீண்டும் மீண்டும் உயிர் பெற்றெழுந்து, மீண்டும் மீண்டும் சத்தியத்தினிமித்தம் உயிர்துறக்க விழைந்து நின்றது. ('ஹதீ'. 12). ஆதலால், ஒவ்வொரு முஸ்லிமுக்கும் இவ்வாறுதான் ஆவல் மிக்கிருத்தல் வேண்டும். வேறு வழிகளாலும் பிராணத் தியாகமென்பது கைகூடுவதுண்டு. ('ஹதீ'. 13). இஸ்லாத்தின் தற்காப்பினிமித்தம் ஏற்பட்டுள்ள ஒவ்வொரு போரிலும் ஓரோர் பெண்மணியும் கலந்தேயிருந்தார் ('ஹதீ'. 14, 15). போரில் கலந்து நின்று போர்புரியாதவர்கள் கொல்லப்படுவது கூடாது; இவ்வாறே ஸ்திரீகளும் குழந்தைகளுங்கூடக் கொல்லப்படுவது கூடாது. • ('ஹதீ'. 16). எதிரி சமாதானம் கோரினால், அவனது உள்ளக்கிடக்கை ஏமாற்று நோக்குடனிருப்பினும், முஸ்லிம்கள் தங்கள் சண்டையை நிறுத்திவிடுதல் வேண்டும் (தலை. ஆயத் 8); அல்லது எதிரி இஸ்லாத்தைத் தழுவிக்கொண்ட போதினும், அக்கணமே அப்போர் நிறுத்தப்பட்டுப் போய்விடும் ('ஹதீ'. 17).

1. அபூ' ஹுரைய்ரா கூறினார் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர்பால் (சல்அ'ம்) ஒரு மனிதன் வந்து, 'ஜிஹாது'க்கு நிகரான ஒரு காரியத்தளவிலே எனக்கொரு வழி காண்பிக்கக் கடவீர்கள்,' என்று கூறினன் ; (இதற்கு) அவர்கள், "யானொன்றையும் காணவில்லையே!" என்று (பதில்) கூறினார்கள். (அப்பாலும்) சொன்னார்கள் :—

"ஜிஹாதி'ல் ஈடுபட்ட ஒருவுன் வெளிப் புறப்பட்டுச் செல்லுங்கால், நீ உன் மஸ்ஜிது'க்குள்ளே நுழைந்து, தொழுகையில் நின்று, ஓய்வில்லாமலே (தொழுது கொண்டே) யிருக்கவும், மேலும், நீ நோன்பு நோற்று, அதனைத் திறக்காமலே யிருக்கவும் உன்னால் முடியுமா?" இதற்கவன், 'அஃது எவனால் முடியும்?' என்று கூறினன்.—(பு'க'ா. 56:1)

2. அபூ' ஸஈ'து'ல் கு'த்'ரீ கூறினார்: 'ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! மனிதர்களில் மகா சிலாக்கியமானவன் எவனோ?' என்று வினவப்பட்டது. (அதற்கு) அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள்: தனது உடலைக்கொண்டும் தனது பொருளைக்கொண்டும் அல்லா(ஹ்)வின் பாதையிலே கடும் பிரயாசை எடுத்துக்கொள்ளும் மூமினானவனே."— (பு'க'ா. 56 : 2)

3. மு'கீரா கூறி யுள்ளார்: நபிகள் திலகம் (சல்அ'ம்) சொன்னார்கள்:—

"தங்களிடம் அல்லா(ஹ்)வின் ஏவல் வந்து, தாங்கள் மிகைத்தவர்களாகவும் இருக்குமட்டிலே, என் (னைப் பின்பற்றும்) இனத்தைச் சார்ந்தவர்

களிலிருந்து சில ஜனங்கள் உச்ச ஸ்தானத்திலே யிருந்து வருவார்கள்.''[1]— (பு'க'ா. 61 : 28)

4. இ'ம்ரான் இப்'னு 'ஹுஸ'ய்ன் கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

" என்(னைப் பின்பற்றும்) இனத்தைச் சார்ந்தவர்களினின்று ஒரு கூட்டத்தினர் சத்தியத்திற்காகச் சண்டை செய்வதை நிறுத்தவே மாட்டார்கள் ; அவர்கள் தங்களுடைய எதிரிகள் மீது (எப்பொழுதும்) மிகைத்தவர்களா யிருப்பார்கள்.''[2] — (அபூ'த'ா—மிஷ். 18)

---

1. ச'ஹீ'ஹ் பு'க'ாரீயில் 97 : 10—இன் தலைப்பிலே இந்த 'ஹதீ':து ஒரு சிறு மாறுதலுடனே இவ்வாறு பொறிக்கப்பட்டிருக்கிறது : " என்னுடைய உம்மத்தினின்று ஒரு கூட்டத்தினர் சத்தியத்தைப் பிரசாரம் புரிந்தவர்களாய் உச்சத்திலே யிருந்து வருவர் ; இன்னம், இவர்கள் தாம் கற்றறிந்தவர்களா— (அஹ்லல் இ'ல்மா) யிருக்கிறார்கள்.'' இதிலிருந்து இமாம் பு'க'ாரீ ஜிஹாதென்னும் சொல்லை விரிவான பொருளிலேயே கொண்டிருக்கிறார்க ளென்பது நன்கு விளங்குகின்றது.

2. அபூ'த'ாவூது'க்குரிய வியாக்கியான கிரந்தமாகிய அ'வனல் மஃ'பூ'தி'ல் நவவீயின் ஆதாரத்தின்மீது, இந்த 'ஹதீ':துக்கு இவ்வாறு வியாக்கியானம் கூறப்பட்டிருக்கிறது : " இந்தக் கூட்டம் மூமினானவர்களுள்ளே வெவ்வேறு வர்க்கத்தினர்களை உளப்படுத்திக்கொண்டதா யிருந்து வருகிறது : அவர்களுள்ளே தைரியசாலிகளாயுள்ள போர்வீரர்களும், 'ப(க்)கீ'ஹ்— சட்டகலா சாஸ்திரி—களும், மு'ஹத்'தி':தீன்— ('ஹதீ':துகளைத் திரட்டுகிறவர்)களும், 'ஜாஹித்'— (ஆண்டவன் வணக்கத்திலே தங்களைத் திருப்பிக் கொண்டிருப்பவர்)களும், நல்லதைக்கொண்டு ஏவியும் தீயதைக் கொண்டு விலக்கியும் வைப்பவர்களும், வேறு பல நல்ல காரியங்களை யெல்லாம் செய்துவரும் வெவ்வேறு வகையான வேறு பல

5. அபூ' ஹுரய்ரா கூறியுள்ளார் : அல்லா(ஹ்) வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"நிச்சயமாக அல்லா(ஹ்) ஒவ்வொரு நூற்றாண்டின் துவக்கத்திலும் இந்த (என்னைப் பின்பற்றும்) இனத்தவருக்காக, இவர்களின் மதத்தை இன்னவர்கட்குப் புத்துயிரளித்துத் தரும் ஒருவரை எழுப்பித் தருவான்."[3]— (அபூ'த'ா. 36 : 1)

---

மக்களும் சேர்ந்திருக்கிறார்கள்." எனவே, அல்லா(ஹ்)வின் பாதையில் போர்புரிவதென்பது, இஸ்லாத்திற்காக எந்தவிதமான ஊழியம் புரிவதையும் தனக்குள்ளே அடக்கிக்கொண்டிருக்கிறதென்பது செவ்விதில் விளக்கமாகின்றது.

3. சென்ற இரு 'ஹதீ'ஃதுகளிலும் ஒரு மெய்யான தீர்க்கதர்சனம் முன்னறிவிக்கப் பட்டிருக்கிறது; அஃதாவது, முஸ்லிம் ஜாதியாருள்ளே, இஸ்லாத்தை இப்பாருலகினில் உச்சத்துக்கு உய்த்துச் செல்லுதற்குரிய அருகதை வாய்ந்த கற்றறிந்த பெரியார்கள் எப்பொழுதுமே தோன்றிக்கொண்டிருப்பார்களென்று கூறுவதுதான் அத் தீர்க்கதர்சனம் என்க. ஆயின், இந்த 'ஹதீ'தோ, இன்னம் ஓரடி முன்சென்று, இனியொரு தீர்க்கதர்சனத்தையும் முன்னறிவிக்கின்றது: அஃதாவது, ஒவ்வொரு நூற்றாண்டின் ஆரம்பத்திலும் முஸ்லிம் சமுதாயத்திலே ஓரோர் ஆண்டவனருள்பெற்ற ஞானவான் தோன்றிக்கொண்டேயிருப்பாரென்க; அப்படிப்பட்ட பெரியார்கள் முஸ்லிம்கள் பாலுள்ள மதத்திற்குப் புத்துயிரளித்தவண்ணம் இருந்து வருவார்கள்.

இத்தகைய இறையருள் பெற்றுத் தோன்றும் ஞானாசிரியர்கள் இஸ்லாத்தில் முஜத்'தி'த்'கள்— (புனருத்தாரணம் புரிவோர்) என்று அழைக்கப்படுகிறார்கள். முஜத்'தி'தென்பார் ,மு'ஹத்'த'தென்றும் (இன்னவர் ஒரு நபியாயில்லாதிருந்தும், இவருடனே இறைவன் சல்லாபம் புரிந்து வருவான்) அழைக்கப்படுவார். இன்னவர், முஸ்லிம்கள்பால் வந்து இடையிலே புகுந்துகொண்டு கிடக்கும் அனாசாரங்களையும் அட்டூழிய அடாச் செய்கைகளையு

6. அபூ' ஹுரய்ரா கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"மர்யத்தின் மகன் உங்கள் மத்தியிலே தோன்றி, அன்னவர் உங்களுள் ளிருந்தே உங்களுடைய இமாமாயிருக்க நேருங்கால், நீங்கள் எப்படியிருப்பீர்கள் ?"[4]— (பு'க'ா. 60 : 49)

---

மெல்லாம் அடியுடன் களைந்தெறிந்து, ஒவ்வொரு நூற்றாண்டிலும் புதிது புதிதாய்த் தோன்றும் நவீன காலதேச வர்த்தமானங்களுக்கேற்ற முறையிலே முஸ்லிம்களின் முன்னேற்றத்துக்காக இஸ்லாத்தின் இணையில்லாத் தத்துவங்களை நல்ல விதமாக நவீன மாதிரியிலே புத்துயிரளித்துப் புனருத்தாரணம் பண்ணி வைப்பதற்காக ஆண்டவனால் அனுப்பப்பட்டு வருகிறார் என்க.

4. இஃது இஸ்லாத்தின் உன்னதங் குறித்துள்ள இனியொரு தீர்க்க தர்சனமா யிருக்கிறது: மர்யத்தின் மகன் மஸீ'ஹ். அப்படிப்பட்ட மஸீ'ஹ் முஸ்லிம்களுள்ளே தோன்றுவார் என்று நாம் இங்கு அறிவிக்கப் பெறுகிறோம். இந்த மஸீ'ஹானவர், இமாம(க்)கும் மின்கும்— (உங்களுள்ளிருந்தே உங்களுடைய இமாம்) ஆக இருப்பாரென்று அறிவிக்கப்பட்டுள்ளார். இதே விஷயங் குறித்துக்கூறும் இனியொரு 'ஹதீ':தில்,— "ச'ஹீ'ஹ் முஸ்லி"மில் காணப்படுவதிலே— வ அம்ம(க்)கும் மின்கும்—(அவர்— அந்த மஸீ'ஹ —உங்களுக்குள்ளிருந்தே உங்களுடைய இமாமா யிருப்பார்) என்று வரையப்பட்டிருக்கிறது. இதனால் விளக்கமாவது யாது? முஸ்லிம் சமூகத்திலிருந்தே ஒரு பெரியார் இந்த மஸீ'ஹின் அந்தஸ்திற்கு உயர்த்தப் பெறுவார் என்பதா யிருக்கிறது ; மேலே கூறப்பட்டுள்ள 'ஹதீ':திலிருந்து இவ்வுண்மை ஐயஞ்சிறிதுமில்லாமலே அறியக்கிடக்கின்றது. முஸ்லிம்கள்பால் இஸ்ரவேல் இனத்தைச் சார்ந்த இயேசுவே மஸீ'ஹாக வரப்போகிறாரென்று ஒருகால் இவர்கள் எண்ணிவிடக் கூடுமென்னும் ஐயத்தினை அகற்றிடுவான் வேண்டியே நம் நபிகணாயகர் (சல்அ'ம்) அவ்வசனங்களை அவசியமாய்ச் சேர்த்துக் கூறியுள்ளார்கள் என்பது நன்கு கவனத்திலே இருத்தப்பட வேண்டுவதா யிருக்கிறது.

7. ஸஹ்ல் கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) (இவ்வாறு) சொன்னதைத் தாம் கேட்டிருக்கிறார்:—

---

முஸ்லிம்களுள்ளே மஸீ'ஹ் வருவது— மஸீ'ஹின் இரண்டாவது விஜயமென்று பொதுப்படையாய் அறியப்பட்டுக் கிடப்பது— குறித்துள்ள தீர்க்க தர்சனம், இஸ்ரவேலர்களுக்குள்ளே இல்யாஸின் இரண்டாவது வருகை குறித்துள்ள தீர்க்க தர்சனத்துக்கே முழுக்க முழுக்கப் பொருத்த முடையதா யமைந்து கிடப்பது கண்கூடு. "எலியா சுழல்காற்றிலே பரலோகத்திற்கு ஏறிப்போனான்" (II இராஜாக்கள் 2:11). "இதோ, கர்த்தருடைய பெரிதும் பயங்கரமுமான நாள்வருகிறதற்கு முன்னே நான் உங்களிடத்திற்கு எலியா தீர்க்கதரிசியை அனுப்புகிறேன்" (மல்கியா 4:5). ஆனால், இயேசுகிறிஸ்துதோன்றுமுன்னே எலியாதீர்க்கதரிசி இங்குத் திரும்பிவரவில்லை. எனவே, "அவருடைய சீஷர்கள் அவரை நோக்கி: அப்படியானால் எலியா முந்திவரவேண்டுமென்று வேதபாரகர் சொல்கிறார்களே, அதெப்படியென்று கேட்டார்கள்" (மத்தேயு 17; 10). இந்தச் சங்கடமான சந்தர்ப்பத்திலே இயேசு கிறிஸ்து சர்வசாதாரணமாய், "எலியா வந்தாயிற்று என்று நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்; அவனை அறியாமல்...அவனுக்குச் செய்தார்கள்...அவர் யோவான் ஞானஸ்நானனைக் குறித்துத் தங்களுக்குச் சொன்னாரென்று சீஷர்கள் அப்பொழுது அறிந்து கொண்டார்கள்" (மத். 17:11—13). ஏனென்றால், மேலும் வியாக்கியானம் செய்து காண்பிக்கப்பட்ட பிறகு, யோவான் ஞானஸ்நானனே "எலியாவின் ஆவியும் பலமும் உடையவனாய்"த் தோன்றியிருந்தான் என்பது அறியக்கிடந்தது (லூக்கா 1:17). எனவே, முஸ்லிம்களுக்குள்ளே மஸீ'ஹ்தோன்றுவதும் அப்படிப் போலவே அந்த மஸீ'ஹின் "ஆவியும் பலமும் உடையவராய்" அவதரிக்கும் ஒரு முஜத்'தி'த்'ாகவேதான் இருந்திடுதல் வேண்டும் என்றுணர்க.

மஸீ'ஹின்வேலை இன்னதென்று "பு'க'ாரீ"யில் இவ்வாறு வர்ணிக்கப்பட் டிருக்கிறது: "மர்யத்தின் மகன் (ஜனங்களுக்

"...........பிறகு நீர் அவர்களை இஸ்லாத்தின் பக்கல் அழைக்கக்கடவீர்; இன்னம், அன்னவர்கள் மீது கட்டாயமாக்கப்பட்டிருப்பது இன்னதென்று அவர்கட்கு அறிவிக்கக் கடவீர்; என்னெனின், அல்லா(ஹ்)வின்மீது சத்தியமாக, உம் மூலமாக ஒரு மனிதனேனும் நேர்வழி யடைந்துவிட்டால், அது சிவப் பொட்டகங்களைப் பார்க்கினும் உமக்குச் சிரேஷ்டமுள்ளதா யிருக்கிறது."[5]— (பு'க'ா. 56:102)

8. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) :கய்சருக்கு, அன்னவரை இஸ்லாத்தின்பா லழைத்து வரைந்து,

---

குள்ளே) நியதிவழங்கும் ஒரு நீதிபதியாக உங்கள் மத்தியிலே தோன்றுவார்; மேலுமவர் சிலுவையைத் தகர்த்துப் பன்றிகளைக் கொல்வார்" (பு'க'ா. 60 : 49). இதனால் மிக்க விளக்கமாவது, சிலுவையுடைய மதம் அதியுச்சத்தை யடைந்திருக்கு நேரத்திலே தான் மஸீஹ்'ஹன்பார் தோன்றுவார் என்பதேயாம்; இன்னம், அன்னவருடைய முக்கிய வேலை கிறிஸ்தவர் நாடுகளில் இஸ்லாத்தைப் பரவச் செய்வதாயே யிருந்துவருகிறது; இதுதான் இனியொரு 'ஹதீ':தில் மேற்கில் சூரியோதயமாவதென்று உருவக முறையால் உரைக்கப்பட்டுள்ளது. இதில் சூரியன் என்பது இஸ்லாமிய சூரியனேயாம்; மேற்கென்பது மேற்குத் திசையி லுள்ள கிறிஸ்தவர் சீமைகளேயாம். எனவே, இந்த 'ஹதீ':தி லுள்ள தீர்க்கதர்சனம் உண்மையிலே உலகத்தில் இஸ்லாமார்க்கம் உச்சநிலையை எய்தப்போகும் உறுதியையே உரக்கக் கூவிக் கொண்டிருப்பது கண்கூடு.

5. இந்த உத்தரவு க'ய்ப'ர்புடையெடுப்பின்பொழுது நபிகள் திலகத்தால் 'ஹ'ஜ்ரத் அ'லீ (ரலி') அவர்கட்குக் கொடுக்கப் பட்டது. இதனால் விளக்கமாவது யாது? இஸ்லாத்தின் பக்கல் மக்களை யழைப்பதே மாபெரும் ஜிஹாதென்று முஸ்லிம்களால் கருதப்பட்டு வந்திருக்கிறது என்பதேயாம்.

தி''ஹ்ய(த்)துல் கல்பீ'யுடனே தங்கள் திருமுகத்தை அன்னவருக் கனுப்பினார்கள்; மேலும், அல்லா(ஹ்) வின் திருத்தூதர் (சல்அ'ம்) பு'ஸ்ராவின் தலைவர் பால், அவர் அதனைக் :கய்சருக் கனுப்பிவைப்பான் வேண்டி, அதைச் சேர்ப்பிக்குமாறு அவருக்கு ஆணையிட் டனுப்பினார்கள்.[6]— (பு'க'ா. 56 : 102)

9. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறியுள்ளார் :........ மேலும், அத்திருமுகம் (இவ்வாறு) வரையப்பட் டிருந்தது :—

" அருளாளனும் அன்புடையோனு மாகிய அல்லா(ஹ்)வின் திருநாமத்தைக் கொண்டு. அல்லா(ஹ்) வின் அடியவனும் அவனுடைய தூதுவனுமாகிய மு'ஹம்மதி'டமிருந்து, ரோமராஜ்யத்தின் தலைவர் ஹிர்:க்:கலுக்கு. நேர் வழிகாட்டியைப் பின்பற்று கிறவர்மீது சாந்தி யுண்டாவதாக. அதற்குப் பின்னே, யானும்மை இஸ்லாத்தின்பால் அழைப் பதைக் கொண்டு அழைக்கின்றேன். நீவிர் முஸ்லி மாய் விடுக; மேலும், நீர் சாந்தியி லிருப்பீர்.— அல்லா(ஹ்) உமக்கு இருமடங்கு சம்மானமளிப்பான்.

---

6. இந்த 'ஹதீ':து மாபெரும் ரோமராஜ்யத்தின் மஹா சக்ரவர்த்தியான சீசரை— (:கய்சரை) இஸ்லாத்தின்பாலே எம் முடைய ரஸூல் நாயகமவர்கள் (சல்) அழைத்த விஷயத்தைக் குறித்துக் கூறுகின்றது; இது "பு'க'ாரீ"யில் ஜிஹாத்' என்னும் அத்தியாயத்திலே சேர்க்கப்பட்டிருக்கிறது. இதனாலும் அம் முஸ்லிம்கள் ஜிஹாதை' எத்துணை விரிவான கருத்திலே கொண் டிருந்தார்க ளென்பது தெளிவாகின்றது. அந்த ஸ்ரீமுகத்தில் என்ன எழுதப்பட்டிருந்த தென்னும் விஷயம் அடுத்துவரும் 'ஹதீ':தில் காணப்படுகிறது; எனவே, அஃது இந்த 'ஹதீ':துக் கோர் அனுபந்தமாயே அமைந்து கிடக்கிறது.

ஆனல், நீவிர் புறக்கணித்துத் திரும்பிவிடுவீரேல், நும்மீதே நும்முடைய குடிமக்கள் பாப (முழுவது)ம் சாரும்; இன்னம், ஏ வேதத்தை யுடையவர்காள்! அல்லா(ஹ்)வைத் தவிர்த்து வேறெவனுக்கும் நாம் வணக்கம் புரியமாட்டோ மென்றும், அவனைக் குறித்து எவ் வஸ்துவையும் நாம் இணைவைக்க மாட்டோ மென்றும், அல்லா(ஹ்)வை யன்றி நம் முள்ளே சிலர் சிலரை ரக்ஷகர்களாக நாம் பற்றிக் கொள்ள மாட்டோ மென்றும் எங்களுக்கும் உங்க ளுக்கு மிடையே நேர்மையாயிருக்கும் ஒரு வார்த்தை யின் பக்கலே வரக்கடவீர்கள்; ஆயின், அவர்கள் புறக்கணித்துத் திரும்பி விடுவார்களாயின், அப்பால் நீங்கள் சொல்லுங்கள்: நாங்கள் முஸ்லிம்களா யிருக்கிறோம் என்பதற்கு நீங்களே சாக்ஷியா யிருக்கக் கடவீர்கள்.[7]— (பு'க'ா. 1:1)

10. ஸலமா கூறினர்: நான் நபிகள் திலகத் துக்கு (சல்அ'ம்) விசுவாசப்பிரமாணம் பண்ணிக்

---

7. பு'க'ா. 1:1 மிகவு நீளமான 'ஹதீ':து; அதிலிருந்து :கய்சருக்கு வரையப்பட்ட விஷய மட்டுமே ஈண்டு எடுத் தெழுதப்பட்டுள்ளது. இதனை ஊன்றிப்படிப்பீர்களாக; இதிலே, :கய்சர் இஸ்லாத்தை ஏற்காவிடின், அவருடனே சண்டைசெய்யப் புறப்பட நேருமென்று ஒன்றும் பயமுறுத்தாட்டப்பட் டில்லை யென்பது தெற்றெனப் புலப்படுகின்றது. எனவே, ஒருவரை இஸ்லாத்தி லழைத்து, அவர் அவ்வாறு வர மறுத்துவிட்டால், அக்கணமே அவரைச் சண்டைக்கிழுப்பது கூடாதென்பது இந்த 'ஹதீ':தால் நன்கு விளங்கக் கிடக்கிறது. இம்மாதிரியான ஸ்ரீமுகங்கள் வேறு பல சக்ரவர்த்திகளுக்கும் வரைந்தனுப்பப் பட்டன. இந்த 'ஹதீ':தின் இறுதியிற் காணப்படுவது :குர்ஆன் ஆயத் 3:63.

கொடுத்தேன்; பிறகு நான் ஒரு மரநிழலின் பக்கல் திரும்பினேன். கூட்டம் கலைந்துவிட்ட பொழுது, அவர்கள்— (நபிபெருமானார்) “ஏ இப்’னுல் அக்வஃ! நீர் விசுவாசப்பிரமாணம் பண்ணித்தரமாட்டீரா?” என்று கேட்டார்கள்; அதற்கு, நான், ‘ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! யான் இதற்கு முன்பே விசுவாசப் பிரமாணம் பண்ணிக் கொடுத்து விட்டேனே,’ என்று கூறினேன் என்று அன்னவர் சொன்னார். “இன்னமொரு முறை மீட்டும் செய்துகொடுமே,” என்று அவர்கள் கூறினார்கள். ஆகையால், யான் இரண்டாமுறையாக அவர்களுக்கு விசுவாசப் பிரமாணம் பண்ணிக் கொடுத்தேன். (அப்பொழுது) நான்—[இந்த ‘ஹதீ’ஃதைச் சொன்னவர்]—‘ஏ அபூ’ முஸ்லிம்! (அவர்கட்கு) எதற்காக நீர் விசுவாசப் பிரமாணம் பண்ணிக்கொடுத்தீர்?’ என்று அவரைக் கேட்டேன். அவர், ‘மரணத்துக்காக,’ என்று (பதில்) கூறினார்.[8]— (பு’க’ா. 56 : 110)

11. அ’ப்’து’ல்லா ஹிப்’னு அபூ’ அவ்’பா கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னார்கள் :—

“இன்னம், ஜன்னத் தென்பது வாட்படை

---

8. இது நிகழ்ந்தது ‘ஹுதய்ப்பி’ய்யாவிலே; அங்கேதான் அப்பெயர்போன உடன்படிக்கை வரையப்படலாயிற்று. மரணத்துக்காக விசுவாசப் பிரமாணம் பண்ணிக்கொடுப்ப தென்பது, அம்மனிதன் இஸ்லாத்தைத் தற்காத்துவைத்தல் வேண்டும்; அதில் தனக்கு மரணமே சம்பவிப்பதா யிருப்பினும், அம்மனிதன் நபிகளுதரைவிட்டு ஓடிவிடாது ஒட்டிக்கொண்டே யிருத்தல் வேண்டும் என்பதைச் சுட்டிக்காட்டுவதாயே யிருக்கிறது.

களின் நிழலின் கீழேயே இருக்கிறதென்று அறியக் கடவீர்கள்.''[9]— (பு'க'ா. 56 : 22).

12. அபூ'ஹுரய்ரா கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) (இவ்வாறு) கூறியதை யான் கேட்டேன் :—

"எவனது கரத்திலே எனது ஆவி இருக்கின்றதோ, அவன்மீது ஆணையாக, மூமினனவர்களுள்ளே எனக்குப் பின்னே தாமதித்து நிற்கக் கூடிய மனமில்லாத மனிதர்கள் இல்லாமற் போய் விடின்,— இன்னம் அன்னவர்களைச் சுமந்து செல்லக்கூடிய (வாகன) வசதியை என்னுற் கண்டு கொள்ள இயல்வதில்லை— அல்லா(ஹ்)வின் பாதையிலே போர்புரியும் ஒரு சேனைக்குப் பின்னே நான் தாமதித்து நிற்கமாட்டேன்; இன்னம், எவனது கரத்திலே எனது ஆவி இருக்கின்றதோ, அவன் மீது ஆணையாக, அல்லா(ஹ்)வின் பாதையிலே நான் கொல்லப்பட்டு, பிறகு உயிரளிக்கப்பெற்று, பின்னரும் மீட்டுங் கொல்லப்பட்டு, பிறகும் உயிரளிக்கப் பெற்று, பின்னரும் மீட்டுங் கொல்லப்பட்டு,

9. ளி'லால் என்னும் வார்த்தை இந்த 'ஹதீ':தில் வழங்கப் பட்டுள்ளது; அது ளி'ல் (நிழல்) என்பதன் பன்மைச்சொல்லாகும். இச்சொல் சாதாரணமாய், "ஒன்றைக் காப்பதற்காக உபயோகிக் கப்படும் வஸ்து" என்று கருத்துக் கொள்ளும். சத்திய சன்மார்க்கத்தைத் தற்காத்து நிலைநிறுத்துவான் வேண்டி ஒவ்வொரு முஸ்லிமும் எப்பொழுதுமே ஆயத்தமாயிருக்க வேண்டுவது ஆவசியகமென்று இந்த 'ஹதீ':து வலியுறுத்திக் கூறுகின்றது. முஸ்லிம்கள் எப்பொழுதுமே இஸ்லாத்தின் தற்காப்பினிமித்தமாயே தங்கள் வாளையுருவ வேண்டியவர்களா யிருக்கிறார்கள் (தலை. ஆயத் 5).

பிறகும் உயிர்கொடுக்கப் பெற்று, பின்னரும் மீட்டுங் கொல்லப்பட வேண்டு மென்று விழைகின்றேன்."— (பு'க'ா. 56 : 7)

13. அபூ' ஹுரய்ரா கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"உங்களுள்ளே இரத்தசாக்ஷி மரணமடைகிறவர்— (ஷஹீத்') எவரென்று நீங்கள் கணிக்கின்றீர்கள் ?" (இதற்கு) அவர்கள் சொன்னார்கள் : 'ஏ அல்லா(ஹ்)வின் தூதரே ! அல்லா(ஹ்)வின் பாதையிலே எவனொருவன் கொல்லப் படுகிறானோ,— அவனே ஷஹீத'ா— (பிராணத்தியாகியா) யிருக்கிறான்.' (இதுகேட்டு) அவர்கள் சொன்னார்கள் :—

" அவ்வாறாயின், (என்னைப் பின்பற்றும்) என்னுடைய இனத்தவரில் ஷஹீதெ'னப்படுகிறவர் மிகச்சிலராகவே யிருப்பர் ;— அல்லா(ஹ்)வின் பாதையிலே எவனொருவன் கொல்லப்படுகிறானோ, அவனொரு ஷஹீத்'; அல்லா(ஹ்)வின் பாதையிலே எவனொருவன் இயற்கை மரணத்தை யடைகிறானோ, அவனொரு ஷஹீத்'; [அல்லா(ஹ்)வின் பாதையிலே] எவனொருவன் கொள்ளைநோயால் மரணமடைகிறானோ, அவனொரு ஷஹீத்'; [அல்லா(ஹ்)வின் பாதையிலே] எவனொருவன் வாந்திபேதியால் மரணமடைகிறானோ, அவனொரு ஷஹீத்'."[10]— (முஸ்லிஷ். 18)

---

10. பிராணத்தியாகி, அல்லது, "இரத்தசாக்ஷி மரணத்தால் உயிர்துறப்பவர்" என்பவர் அரபுமொழியில் ஷஹீத்' என்று அழைக்கப்படுகிறார். இச்சொல்லின் பொருள், "மெய்கண்டார்" என்பதா யிருக்கிறது. இஸ்லாத்தின் தற்காப்பிற்காக உயிர்

14. அனஸ் கூறினர்: உ'ஹுதி'ல் அந்தப் போர் நிகழ்த்தப்பட்டபொழுது, (ஒருசில) ஜனங்கள் நபிகள் திலகத்தை (சல்அ'ம்) விட்டு ஓட்டம்பிடித்து விட்டார்கள். அவர்கள்— (நபிபெருமானர்) சொன்னர்கள்: நானும் பார்த்தேன், அபூ'ப'க்ரின் குமாரி ஆ'யிஷாவை— (பிராட்டியை)யும் உம்முஸலைய்மையும்; இன்னம், அன்னவரிருவரும் தங்கள் ஆடைகளை வரிந்து கட்டிக்கொண்டார்கள்;— ஆகையால், அவர்களுடைய கணைக்கால்களில் நான் பாத சதங்கைகளைப் பார்த்தேன்;— மேலும், அவர்களிருவரும் தங்கள் முதுகுகள்மீது (தண்ணீர் நிறைந்த) தோல் (துருத்தி)களைச் சுமந்து வந்தார்கள்; இன்னம், அன்னவர்கள் ஜனங்களின் வாயிலே அத்தண்ணீரை வார்த்தார்கள்; பிறகும் அவர்களிருவரும் திரும்பிச் சென்று, மீட்டும் அவற்றினை நிரப்பிக்கொண்டு, பின்னரும் வந்து

---

துறப்பவர்— (கொல்லப்படுகிறவர்) ஏன் இவ்வாறு அழைக்கப்படுகிருரெனின், இன்னவர் தமது சொந்த நேத்திரத்தைக்கொண்டே மெய்யைக் காண்கின்ருர்; அக்கணமே அதனிமித்தம் தமதுயிரை அர்ப்பணம் செய்து விடுகின்ருர் என்பதனு லென்க. இந்த 'ஹதீ'தால் விளங்கக் கிடப்பது யாது? ஒருவன் இஸ்லாத்தின் தற்காப்புப் போரிலே சண்டைசெய்து உயிர்துறப்பினும், அல்லது அச் சண்டைக் கென்று சென்று, சாதாரண மரணத்தையேயடையினும், பிளேக், அல்லது காலராவால் மரணமடையினும், அன்னவன் ஷஹீதென்றே அழைக்கப்படுகிருன்; அஃதாவது, சத்திய சன்மார்க்கத்திற் கென்று தனதுடல் பொருள் ஆவியையெல்லாம் தத்தம் செய்கிற ஒவ்வொரு மனிதனும் ஷஹீதே யாவானென்பதே யாகும்.

ஜனங்களின் வாயிலே அவற்றினை ஊற்றினார்கள்.[11] — (பு'க'ா. 56 : 65)

15. மு அ'வ்வி'தின் குமாரி ருப'ய்யிஃ' கூறினார்: நாங்கள் நபிகள் திலகத்துடனே (சல்அ'ம்) (அவர்களுடைய போர்களின்போது) காயமடைந்தவர்களுக்குப் பருகக் கொடுத்துக்கொண்டும், பராமரித்துக்கொண்டும், கொல்லப்பட்டவர்களை மதீனாவுக்குச் சுமந்து சென்றுகொண்டும் இருப்பது வழக்கம்.— (பு'க'ா. 56 : 67)

16. அ'ப்'து'ல்லா(ஹ்) கூறியுள்ளார்: நபிகள் திலகத்தின் (சல்அ'ம்) சண்டைகளொன்றிலே கொல்லப்பட்டுக் கிடந்தவர்களுள் ஸ்திரீயொருத்தி காணப்பட்டாள்; ஆகையால், அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) பெண்டுகளையும் பிள்ளைகளையும்

---

11. இந்த 'ஹதீ':தால் விளங்கக் கிடப்பது யாது? நபிகள் திலகத்தின் காலத்திலே பெண்மணிகளும், போரில் காயமடைந்து வீழ்ந்த வீரர்களுக்குச் சயித்தியோபசாரம் புரிவதிலும், இஸ்லாத்தின் சேனைக்காக ஏனையெல்லா(த் தங்களாலான) உதவிகளையும் புரிவதிலும் ஈடுபட் டிருந்திருக்கிறார்கள். அடுத்துள்ள 'ஹதீ':தில் காணப்படுவதேபோல், போர்க்களத்தில் ஷஹீதாய் விட்டவர்களை மதீனாவுக்குச் சுமந்து செல்வதையும் அப்பெண்மணிகள் ஏற்றுக் கொண் டிருந்தார்கள். பு'க'ா. 56: 63-இல் ஒரு பெண்மணியின் விஷயம் காணப்படுகிறது: பி'ன்த் மில்'ஹான் என்ற அப் பெண்மணி அல்லா(ஹ்)வின் பாதையிலே சண்டை செய்யும் பொருட்டுக் கடல் யாத்திரை செல்லப் புறப்பட்ட மனிதர்களுடனே தன்னையும் சேர்த்துவைக்கப் பிரார்த்தனை புரியுமாறு நபிகளாதரை வேண்டிக்கொண்டதாக நாம் காண்கிறோம்.

கொல்லக் கூடாதெனத் தடைசெய்துவிட்டார்கள்.[12]
— (பு'க'ா. 56 : 147)

17. இப்'னு உ'மர் கூறியுள்ளார் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"இவர்கள் அல்லா(ஹ்)வைத் தவிர்த்து வணக்கத்திற் குரியவன் (வேறெவனும்) இல்லை யென்று சாக்ஷியம் கூறியும், தொழுகையை நியமமாய் நிலை நிறுத்தியும், ஏழை விகிதத்தை யீந்தும் வருகிற(தை ஏற்றுக்கொள்ளும்) வரை இந்த ஜனங்களுடனே போர்புரிய வேண்டுமென்று நான் கட்டளையிடப் பெற்றுள்ளேன்.[13] அவர்கள் இதனைச் செய்துவருங்

---

12. எனவே, இஸ்லாமிய யுத்தங்களில் வாளெடுத்துச் சண்டை செய்யாதவர்கள் கொல்லப்படக் கூடா தென்பது தெள்ளிதிற் புலனாகின்றது. "ஸ்திரீகளையும், ஊழியர்களையும் கொல்லாதீர்கள்," "கிழவர்களையும், குழந்தைகளையும் பெண்மணிகளையும் கொலை புரியாதீர்கள்," என்பன வேறு 'ஹதீ':தில் காணப்படுகின்றன (அபூ'த'ா—மிஷ். 18 : 4).

13. இந்த 'ஹதீ':து அரபு மூலத்திலே, "நான் கட்டளையிடப் பெற்றுள்ளேன்," என்னும் வசனங்களைக்கொண்டே துவக்கப் பட்டுள்ளது. ஆனால், போர்புரிதற்குரிய கட்டளை :குர்ஆன்ஷரீ·பிலே இவ்வாறு கொடுக்கப்பட்டிருக்கிறது: "இன்னம், உங்களுடனே யுத்தம் புரிகின்ற அவர்களுடனே நீங்களும் அல்லா(ஹ்)வின் பாதையிலே யுத்தம் புரியக் கடவீர்கள்; மேலும், இவ்வரம்பைக் கடவாதீர்கள்" (தலை. ஆயத் 5). ஆகையால், முஸ்லிம்கள், எதிரி யொருவன் தங்கள்மீது போர்புரிய முனைந்து முன்னாலே இறங்கி வந்தாலல்லது, வலியச் சென்று வாளையுருவ அனுமதி யளிக்கப்பெற்றில்லை. எனவே, இந்த 'ஹதீ':தின் தாத்பரிய மென்ன? மேற்கூறிய நிபந்தனையின் பிரகாரம் போர்நிகழ்ந்து வருங்கால், எதிரிகள் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டு விடுவார்க

கால், அவர்களுடைய உதிரமும் அவர்களுடைய பொருளும், இஸ்லாம் (தேவையென்று) விழைந்தாலல்லது, என்பால் பத்திரமாகவே யிருக்கும்; இன்னம், அன்னவர்களின் (கேள்விக்) கணக்கு அல்லா(ஹ்)வின்பாலே இருக்கிறது.— (பு’க’ா. 2: 16)



ளாயின், அக்கணமே அந்தப் போர் நிறுத்தப்பட்டு விடல் வேண்டும். இமாம் பு’க’ாரீயே இதனை ஏற்றுக்கொண்டுள்ளார் என்னும் விஷயம் அவர் இந்த ‘ஹதீ’தை, “ஆனால், அவர் பச்சாத்தாபப்பட்டும், தொழுகையை நியமமாய்க் கடைப்பிடித்தும், ஏழைவிகிதத்தை ஈந்தும் வரத்தொடங்கினால், அப்பொழுது அவர்களை எதேச்சையாய் விட்டுவிடக் கடவீர்கள்,” என்னும் தலைப்பின் கீழே வரைந்திருப்பதிலிருந்து செவ்விதில் விளக்கமாகின்றது. “எதேச்சையாய் விட்டுவிடுவ” தென்பது அவர்களுடனே ஆரம்பித்த யுத்தம் அக்கணமே நிறுத்தப்படல் வேண்டுமென்பதேயாம்.

# அத்யாயம்—20

## திருமணம்

1. "இன்னம், மனிதனை(ச் சுக்கில)த் தண்ணீரிலிருந்து சிருஷ்டித் திருப்பவன் அன்னவனே யாவான்; அப்பால் அவனுக்கு உதிரக் கலப்புள்ள உறவின் முறையையும், திருமண சம்பந்த உறவின் முறையையும் அவனே உண்டாக்கி யிருக்கிறான்" (:குர். 25 : 54).

2. "இன்னம், உங்களுள்ளே மணமில்லாதிருப்பவர்களை மணமுடித்துக் கொடுங்கள்" (24 : 32).

3. "பிறகு அவர்கள்—(கணவனும் மனைவியும்) நியாயப் பிரமாண முறையிலே தங்களுக்குள்ளே ஒத்துப்போவார்களாயின், அவர்கள் (விவாக விமோசனம் பெற்ற மனைவியர்) தங்கள் (சொந்தக்) கணவன்மார்களை (மறு)மண முடித்துக் கொள்வதினின்று அன்னவர்களை நீங்கள் தடுத்து நிறுத்தாதீர்கள்" (2: 232).

4. "இன்னம், அன்னவர்கள்—(உங்கள் மனைவிமார்) உங்களுடனே ஓர் உறுதியான ஒப்பந்தம் செய்துகொண்டிருக்கிறார்கள்" (4 : 21).

5. "உங்களை ஒரே ஆன்மாவிலிருந்தே படைத்திருப்பவன் அவனேயாவான்; மேலும், அ(தே இனத்)திலிருந்தே அவன் அன்னவனுக்குரிய மனைவியையும் அவன் அவள்பால் சார்வதற்காக வேண்டிப் படைத்துளான்" (7 : 189).

6. "இன்னம், அன்னவனுடைய அடையாளங்களுள் ஒன்றுவது: நீங்கள் அவர்கள்பால் மனச்சாந்தியடைவான் வேண்டி, அன்னவன் உங்களுள்ளிருந்தே உங்களுக்காக மனைவிமார்களைச் சிருஷ்டித்திருக்கிறான்; மேலுமவன் உங்களுக்கிடையே விசுவாசத்தையும் காருண்யத்தையும் அமைத்து வைத்திருக்கிறான்" (30 : 21).

7. “அவன் உங்களுக்காக உங்களுள்ளிருந்தே மனைவி மார்களைப் படைத்திருக்கிறான்......அதனால் உங்களைப் பல்கிப் பெருகச் செய்யு நிலையிலே” (42 : 11).

8. “இன்னம், ஈமான் கொண்டுள்ள ஸ்திரீகளுள்ளிருந்து பதிவிரதைகளா யுள்ளவர்களும், உங்களுக்கு முன்னே வேதத்தை யருளப்பெற்றுள்ள ஸ்திரீகளுள்ளிருந்து பதி விரதைகளா யுள்ளவர்களும், நீங்கள் (அவர்களுடனே) வியபி சாரம் புரியாதவர்களாகவும் அன்னவர்களை அந்தரங்கத்திலே வைப்புக்களாக வைத்துக் கொள்ளாதவர்களாகவும் இருக் கின்ற நிலையிலே, அவர்களுக்குரிய மாங்கல்யக் கட்டணத்தை நீங்கள் அன்னவர்களுக்கு அளித்துவிடுங்கால், அவர்கள் உங்களை மணமுடித்துக்கொள்ளச் சட்டபூர்வமா யனுமதிக்கப் பட்டுள்ளார்கள்” (5 : 5).

9. “உங்கள் (ஈன்ற) தாய்மார்களும், உங்கள் (சொந்தப்) புத்திரிகளும், உங்கள் (சொந்தச்) சகோதரிகளும், உங்கள் (தந்தை வழி) அத்தைமார்களும், உங்கள் (தாய் வழிச் சிறிய) பெரிய அன்னைமார்களும், (உங்கள்) சகோதரர் புத்திரிகளும், (உங்கள்) சகோதரிகளின் புத்திரிகளும் உங்களுக்குப் பாலூட் டிய உங்கள் (போஷகத்) தாய்மார்களும், பால்குடி முறையா லாய உங்கள் சகோதரிகளும், உங்கள் மனைவிமாரின் மாதாக் களும், உங்கள் மனைவிமாருள் எவர்களுடனே நீங்கள் வீடு கூடியிருக்கின்றீர்களோ, அப்படிப்பட்ட பெண்கள்பாலிருந்து (வேறு புருஷனுக்குப்) பிறந்து, உங்கள் பாதுகாப்பிலேயிருந்து வளரும் உங்கள் குமாரிகளும்,— ஆனால், அவர்களுடனே நீங்கள் வீடுகூடவில்லை யாயின், (அன்னவர்களின் அக்குமாரி களை மணந்துகொள்வது) உங்கள்மீது குற்றமில்லை— உங்கள் முதுகந்தண்டிலிருந்து உண்டாய உங்கள் சொந்த மைந்தர் களின் மனைவியரும், இரு சகோதரிகளை நீங்கள் ஏககாலத்தில் மனைவியரா யேற்றுக்கொள்வதும், இதற்கு முன்னே சென்று

போனதை யன்றி—, உங்கள் வலக்கரங்கள் உடைமையாக்கிக் கொண்டவர்களைத் தவிர்த்து, எல்லா மணமுடிக்கப் பெற்றுள்ள பெண்களும் உங்களுக்கு (விவாகத்தினின்று) விலக்கப்பட்டிருக்கிறார்கள்" (4 : 23, 24).

10. "இன்னம், ஸ்திரீகளுக்கு அவர்களுக்குரிய மாங்கல்யக் கட்டணத்தை இனமாயளித்துவிடக் கடவீர்கள்; ஆகவே, அவர்கள் அதிலிருந்து ஒரு பாகத்தைத் தாங்களாகவே உங்களுக் களித்தால், அதனை நீங்கள் சுகமாகவும் ரம்மியமாகவும் புசிக்கக் கடவீர்கள்" (4 : 4).

11. "இன்னம், அன்னவருள் ஒருத்திக்கு நீங்கள் ஸ்வர்ணக் குவடொன்றை யளித்திருப்பினும், அதிலிருந்து ஒரு சிறிதையும் (திரும்ப) எடுத்துக் கொள்ளாதீர்கள்" (4 : 20).

12. "மாங்கல்யக் கட்டணத்தினின்று ஒரு தொகை நிர்ணயிக்கப்பட்டபிறகு, நீங்கள் எது குறித்துப் பரஸ்பரம் ஒத்துப் போகின்றீர்களோ, அதுவிஷயத்தில் உங்கள் மீது குற்றமில்லை" (4 : 24).

13. "இன்னம், அனாதைகள் விஷயத்தில் உங்களால் நீதி செலுத்த முடியாதென்று நீங்கள் அஞ்சுவீர்களேல், அதுகாலை உங்களுக்கு நல்லவர்களாய்ப் புலப்படும் பெண்களில் இரண்டாகவும் மூன்றாகவும் நான்காகவும் மணந்துகொள்ளக் கடவீர்கள்; ஆயின், அவர்களுக் கிடையே உங்களால் நீதி செலுத்த முடியாதென்று நீங்கள் அஞ்சுவீர்களேல், அப்பொழுது ஒருத்தியையே, அல்லது உங்கள் வலக்கரங்கள் உடைமையாக்கிக் கொண்டவர்களையே (மணக்கக் கடவீர்கள்)" (4 : 3).

14. "இன்னம், ஈமான் கொண்டுள்ள எதேச்சையான ஸ்திரீகளை மணந்துகொள்ள உங்களுள்ளே எவனொருவன் போதிய சாதன இயல்பைப் பெறவில்லையோ, அன்னவன் உங்களுடைய ஈமான் கொண்டுள்ள கன்னிகைகளிலிருந்து

உங்கள் வலக்கரங்கள் உடைமையாக்கிக் கொண்டவர்களி னின்று (விவாகம் செய்துகொள்ளலாம்)......ஆகையால், அவர்களை— (அடிமைப் பெண்களை) அன்னவர்களின் எஜ மானர்களின் அனுமதிகொண்டு விவாகம் செய்துகொள்ளக் கடவீர்கள்; மேலும், அவர்களுக்குரிய மாங்கல்யக் கட்ட ணத்தை அன்னவர்களுக்கு நியதிமுறைப்படி கொடுத்துவிடக் கடவீர்கள்" (4 : 25).

திருமணத்திற்கு அரபு பாஷையில் நி(க்)கா'ஹ் என்று பெயர் சொல்லப்படுகிறது; இச் சொல்லின் அசல் தாத்பரியம் அ':க்த்'— (பிணைத்துவைத்தல்) என்பதாகும். மனித சமுதாயத்திற்குத் திருமணமே அடிப்படை யென்று தீ'னுல் இஸ்லாம் இயம்பிக் கொண் டிருக்கிறது. எனவே தான், திருமணத் தொடர்பால் ஏற்படும் உறவின் முறைக்கு உதிரக்கலப்பால் உண்டாகியுள்ள உறவின் முறைக்குள்ள முக்கியத்துவமே அளிக்கப்பட்டு வருகிறது (தலை. ஆயத் 1). ஒவ்வொரு முஸ்லிமும் விவாகம் செய்துகொண்டு இல்லற தர்மத்தை மிக்க நல்ல முறையிலே நடாத்திவர வேண்டுமென்பதே இஸ்லாத்தின் கட்டளை; எனவே தான், இம் மார்க்கத்தில் பிரமசரிய, அல்லது வானப்பிரஸ்த, அல்லது சன்னியாச வாழ்க்கை யென்பது ஆடவருக்கேனும் பெண்டிருக்கேனும் இல்லாது போய்விட்டிருக்கிறது (தலை. ஆயத் 2; 'ஹதீ'. 1). பீஜத்தைப் பிளந்து, அல்லது பிசைந்து, அல்லது பொசுக்கி யெடுத்தல் இஸ்லாத்திலே தடுக்கப்பட்டிருக்கிறது ('ஹதீ'. 2, 3). திருமண ஒப்பந்தமென்பது ஒரு பரிசுத்த உடன் படிக்கையாய்க் கருதப்பட்டு வருகிறது (தலை. ஆயத் 4); இதனைக் கணவனும் மனைவியும் பரஸ்பர சம்மதத்தின்மீதே நிறைவேற்றிக் கொள்கின்றனர் (தலை. ஆயத் 3). எனவே, இத்தகைய ஒப்பந்தம் ஆயுளொப்பந்தமாகவே யிருந்துவருகிறது; ஆதலினால், "தாற்கா லிகத் திருமண மென்பது" இஸ்லாத்தில் தடுக்கப்பட்டிருக்கிறது ('ஹதீ'. 4). விவாகமென்பது இருவகை நோக்கமுடையதா யிருந்து வருகிறது: மானிடரின் ஒழுக்கம் உயர்வதற்கு இஃதொரு சாதனமா யிருந்துவருகிறது; மேலும், மனிதகோடிகள் பல்கிப்

பெருகுவதற்கும் இஃதொரு சன்மார்க்கமா யிருந்துவருகிறது (தலை. ஆயாத் 5—7). ஒரு முஸ்லிம் முஸ்லிமல்லாத நங்கையை மணந்து கொள்ளலாம் (தலை. ஆயத் 8). சொந்த பந்துக்களில் பலரை மணமுடித்துக்கொள்வது தடுக்கப்பட் டிருக்கிறது (தலை. ஆயத் 9). ஒரு புருஷன் ஒரு பெண்ணை மணப்பதே சாதாரண ஒழுக்கம்— (சட்டம்); ஆனால், சிற்சில சந்தர்ப்பங்களில் அத்தியா வசியத்தினிமித்தம் இரண்டு, மூன்று, நான்கு தாரங்கள்வரை ஒரு புருஷன் மணமுடித்துக் கொள்ளலாம் (தலை. ஆயத் 13). எதேச்சா ஸ்திரீ யொருத்தியை விவாகம் செய்துகொள்ள இயல் பில்லாத, வசதியற்ற மனிதன் அடிமைப் பெண்ணை மணமுடித்துக் கொள்ள அனும்தியளிக்கப்பட்டிருக்கிறது (தலை. ஆயத் 14).

மண முடிப்பதற்கு முன்னே அதற்குரிய 'பேச்சுவார்த்தை' நடைபெறல் வேண்டும் ('ஹதீ'. 5). ஒரு மனிதன் தனது வேட் கையை வெளிப்படுத்து முன்னே, தான் கோரும் பெண் தனக்குப் பொருத்தமானவளா வென்று ஆராய்ந்து திருப்தியடைதல் வேண்டும் ('ஹதீ'. 6, 7). ஒரு பெண்ணை மணமுடித்துக் கொடுக்கு முன்னே அவளுடைய போஷகன் அன்னவளின் அனுமதியைப் பெற்றுக்கொள்ளுதல் வேண்டும் ('ஹதீ'. 8). ஒரு பெண்ணை அவளுடைய தந்தையே மணமுடித்துக் கொடுத்தான்; அந்நங்கை அதனை விரும்பவில்லை; ஆகையால், அவ்வொப்பந்தம் ரத்து செய்யப்பட்டுப் போய்விட்டது ('ஹதீ'. 9). திருமண ஒப்பந்தம் சரிசமமான அந்தஸ்துடையவர்களுக் கிடையே நடப்பதுதான் சரி; ஆயின், முஸ்லிம்களெல்லாம் சரிசமமான சகோதரர்களா யிருந்துவருகின்றமையால், ஆடவனொருவன் தனக்கு வேண்டிய பெண்ணை வரித்துக்கொள்ள அளவிறந்த வசதியை யெல்லாம் அளிக்கப் பெற்றுளான் ('ஹதீ'. 10). குணத்தின் அழகே குலமகட்கு அழகெனக் கொள்ளப்பட்டு வருகின்றமையால், அன்னவளை வரிக்குங்கால், அவளது குணத்தை ஒரு பொக்கிஷ மாய்க்கொண்டு பூஷணமாய்ப் பூண்டுகொள்ளலாம் ('ஹதீ'. 11). திருமண முடிக்கப்படும் நங்கைக்கு ஒரு மாங்கல்யக் கட்டணம் (மஹர்) நிர்ணயிக்கப்படல் வேண்டும்: அதற்கு இம்மட்டுந்தான் எல்லை யென்று ஒரு தொகை வரையறுக்கப்பட் டில்லை (தலை.

ஆயாத் 10, 11; 'ஹதீ'. 5); விவாகம் நிறைவேறிய பின்னால், பரஸ்பர சம்மதத்தால் அத்தொகை குறைக்கப்படலாம், அல்லது கூட்டப்படலாம் (தலே. ஆயத் 12). இஸ்லாத்தின் நியாயப் பிரமாணத்துக்கு நேர்முரணுயில்லாத வேறெந்த நிபந்தனைகளும் விவாககாலத்தில் ஏற்படுத்தப்படலாம் ('ஹதீ'. 12). ஷி:கார் என்பது தடுக்கப்பட் டிருக்கிறது ('ஹதீ'. 13). விவாகமென்பது பஹிரங்கமாய் நடத்தப்பெறுதல் வேண்டும்; அஃதொரு பஹிரங்க ஸ்தலத்திலே நடைபெறுவதும், த'ப் பென்னும் "வட்டப்பறை" யைக் கொண்டு வாத்தியகோஷம் செய்யப்பெறுவதும் நலமெனக் கொள்ளப்படுகின்றன ('ஹதீ'. 14). மாப்பிள்ளையும் பெண்ணும் தங்கள் பரஸ்பர அபிப்பிராயத்தை வெளியிடு முன்னம் ஒரு சிறு இதோபதேசம் செய்யப்பட்டு, அவ்வொப்பந்தம் புனிதமாக்கப் படுகிறது ('ஹதீ'. 15). விவாக காலத்தில் கூட்டங்கூடி நி(க்)கா'ஹ நிறைவேற்றுவதும் அதைப் பகிரங்கப்படுத்தும் சாதனமாயிருந்துவருகிறது ('ஹதீ'. 16). விவாக காலத்தில் வாத்தியங்கள் வாசிக்கப்படலாம் ('ஹதீ'. 17). திருமண வைபவத்தின் பொழுது சம்மானங்களும் வழங்கப்படலாம் ('ஹதீ'. 18). மணமகள் மணமகனில்லம் சென்று சேருங்கால், ஆங்கொரு விருந்து நடாத்தப்படுவது சிலாக்கியமெனக் கொள்ளப்படுகிறது ('ஹதீ'. 19, 20). பெண்ணும் மாப்பிள்ளையும் முதன்முதலில் சந்திக்கும்பொழுது, அல்லா(ஹ்)வின் ஆசீர்வாதத்துக்காக அன்னவன்பால் பிரார்த்தனை புரிவது மெத்த நலமெனக் கொள்ளப்படுகிறது ('ஹதீ'. 21). அவசியம் நேருங்கால், கர்ப்பத்தடையும் செய்துகொள்ள அனுமதியளிக்கப்பட்டுள்ளது ('ஹதீ'. 22, 23). சிசுவொன்று ஜனித்து விடுங்கால், அதன் செவியுள் "அ'தான்"—ப'ாங்கு—சொல்லப்படல் வேண்டும் ('ஹதீ'. 24). பிறகு நாமஞ் சூட்டலும், 'த'ஹ்னீக்கும் தொடர்ந்து செய்யப்படுகின்றன ('ஹதீ'. 25). கூடுமாயின், அ':கீ:காவும் கொடுப்பது அவசியமேயாம் ('ஹதீ'. 26—28).

1. அ'ல்:கமா கூறினர்: நான் அ'ப்'து'ல்லா(ஹ்)வுடன் சென்றுகொண் டிருந்தபொழுது, அவர் கூறினர்: நாங்கள் நபிகள் திலகத்துடனே

(சல்அ'ம்) இருந்தோம்; இன்னமவர்கள் சொன்னார்கள் :—

" மணமுடித்துக் கொள்ள இயல்பு வாய்ந்தவன் மணமுடித்துக் கொள்ள வேண்டும் ; என்னெனின், அது கண்ணைக் கவிழ்ந்து கொள்ளச் செய்கிறது ; இன்னம், மனிதனை (ப் பெண்கள் விஷயத்தில்) மர்மத்தைப் பேணிக்கொள்ளச் செய்துவைக்கின்றது ; இன்னம், இயல்பில்லாதவன் நோன்பை மேற்கொள்ள வேண்டும் ; என்னெனின், அஃது அவன்மீது 'காயடிப்பதே' போன்ற (தன்னடக்கத்) தன்மையைக் கொண்டுவந் தளிக்கும்."[1] — (பு'க'ா. 30 : 10)

2. இப்'னு மஸ்ஊ'த்' கூறினார் : நாங்கள் நபி பெருமானுடனே (சல்அ'ம்) சண்டையிடுவது வழக்கம் ; (ஏனென்றால்) இன்னம் யாங்கள் (எங்கள்) மனைவிமார்களை (எங்களிடம்) பெற்றுக் கொள்ளாதிருந்தோம் ; ஆகையால், நாங்கள் சொன்னோம் :

---

1. திருமணமென்பது, இவ்விடத்தில் ஒழுக்கத்தின் உயர்வுக்கும், ஆத்மார்த்த முன்னேற்றத்துக்கு முரிய ஒரு சரியான சாதனமென்று கூறப்பட்டிருக்கிறது. நோன்பு நோற்பது "காயடிப்பதே" போன்ற தன்னடக்க நன்மையை விளைப்பதாயிருக்கிறதென்றும் வலியுறுத்தப்பட்டிருக்கிறது ; என்னெனின், இதனால் பஞ்சேந்திரியங்களுக் குரிய சித்தவிகார உத்வேக உணர்ச்சி மழுங்கிக் கழுந்தாய்விடுகிறது. இனியொரு 'ஹதீ':தின் பிரகாரம், திருமண முடித்துக்கொள்வது நபிபெருமானது "ஸுன்னத்"தை— (அனுஷ்டானத்தை)ப் பின்பற்றுவதா யிருக்கிறது ; இன்னமதில், "என்னுடைய ஸுன்னத்தினின்று விலகிக்கொள்கிறவன் என்னுடைய சிஷ்யகோடியைச் சார்ந்தவனல்லன்," என்றும் காணப்படுகிறது (பு'க'ா. 67: 1).

'ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! நாங்கள் (எங்கள்) பீஜத்தைப் பிசைந்தெடுத்துக் கொள்ளலாமல்லவா?' ஆனால், அவர்கள் எங்களை அவ்வாறு செய்து கொள்ள வேண்டாமென்று தடுத்துவிட்டார்கள்.[2]— (பு'க'ா. 67 : 6)

3. ஸஃ'த்' கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) உ':துமானுப்'னு மள்'ஊ'ன் விவாகமில்லாதிருந்ததை நிராகரித்து விட்டார்கள். மேலுமவர்கள் அவருக்கு (வெறுமனே யிருக்க) அனுமதியளித்திருந்தால், நாங்களும்(கூட) விதையடித்துக் கொண்டிருப்போம்.— (பு'க'ா. 67 : 8)

4. அ'லீ (ரவி') கூறியுள்ளார்கள்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) க'ய்ப'ர் தினத்தன்று, பெண்களைத் தாற்காலிகத் திருமணம் புரிந்துகொள்வதையும், வீட்டுக் கழுதைகளை (அறுத்து)த் தின்பதையும் தடைசெய்து விட்டார்கள்.[3]— (பு'க'ா. 64 : 40)

---

2. எனவே, இஸ்லாத்தில் "தேவலோக ராஜ்ஜியத்துக்காக ஆண்மையற்ற அலிகள்" வேண்டுமென்னும் அவசியமில்லை. அத்தேவலோக ராஜ்ஜியத்திற்குச் செல்லக்கூடிய மார்க்கம் சன்னியாசு, அல்லது துறவற வாழ்க்கையன்று; ஆயின், அதனை எய்தக்கூடிய நேரான மார்க்கம் இல்லற வாழ்க்கையேயாம்; 'இல்லற மல்லது நல்லற மன்று,' என்பது ஒரு தமிழ்ப்பெரியார் வாக்கு. சம்சார வாழ்க்கையிலே நிலைநின்று, ஒழுக்கத்தை உயர்வுறப் பேணிக்கொள்வதே அவ்வுயரிய தர்ம மெனப்படுகிறது. "அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை!" என்றார் வள்ளுவரும்.

3. தாற்காலிகத் திருமணம் இஸ்லாத்தில் முத்ஆ' என்று அழைக்கப்படுகிறது; இது மத்ஆ' (சுகம், அல்லது இலாபம் பெறுதல்) என்பதிலிருந்து பிறந்திருக்கிறது. முத்ஆ'— (தாற்காலிக நிபந்தனையின்மீது திருமணமுடித்து, தவணை முடிந்ததன்பின்னால் :தலா:க்

5. ஆ'யிஷா பிராட்டியார் கூறியுள்ளார்: இஸ்லாத்திற்கு முற்பட்ட காலத்திலே திருமண மென்பது நான்குவிதமாய் நடைபெற்று வந்தது; அவற்றிலொன்று, இன்று மக்களின் மணம் நடப்பதே போன்றது: ஒரு மனிதன் மற்றொரு மனிதனை நோக்கி, அவனுடைய புத்திரியை, அல்லது அவனது சம்ரக்ஷணையி லுள்ளவளைத் தனக்குத் திருமண முடித்து வைக்குமாறு கோருவான்; பிறகு

---

கொடுத்துவிடும் நிக்கா'ஹ்) ஷீஆ'க்களால் ஒரு சட்டபூர்வமான விவாகமென்றே கருதப்பட்டு வருகிறது; ஆனால், இங்கே கூறப்பட்டுள்ள 'ஹதீ':தின் ஆதாரத்தைக்கொண்டு, முத்ஆ'வை முஸ்லிம் சமுதாயப் பெரும்பான்மையினர் நிராகரித்துவிட்டிருக்கின்றனர். :குர்ஆன்ஷரீ'ப் விவாகபந்தத்தை இ'ஹ்சான்— (இதன் தாதுப் பொருள், "அரணுகுதல்", அல்லது, "பலப்படுத்திவிடல்", அல்லது, "பராமரித்தல்" என்பதாயிருக்கிறது) என்னும் அழகிய சொல்லைக்கொண்டு சிறப்பித்துக்கூறியுள்ளது; இதன் தாத்பரியம், திருமண ஒப்பந்தம் அதிக பத்திரமாய்ப் பாதுகாக்கப்படல் வேண்டும் என்பதேயாம்; மரணத்தால், அல்லது :தலா:க்கினால் மட்டுமேதான் அவ்வொப்பந்தம் தறிக்கப்படல் கூடும் என்க. வேறுவித ஆண்பெண் கூட்டுறவெல்லாம் ஸி'பா'ஹ்— (வியபிசாரம் புரிதல்) என்னும் சொல்லைக் கொண்டே அத் திருவேதத்தில் வர்ணிக்கப்பட்டுள்ளன. வேறொரு 'ஹதீ':தின்படி ஒரு போர்க் காலத்தில் நபிகள் பெருமானார் முத்ஆ'வை அனுமதித்திருந்தார்களென்று அறியக்கிடக்கின்றது; இது மெய்யேயென்று வைத்துக் கொண்டபோதினும், இஸ்லாத்தின் ஆரம்பகாலத்திலே அவ்வாறு அனுமதியளிக்கப்பட்டிருக்கலாம்; என்னெனின், இஸ்லாத்தின் சீர்திருத்தம் சிறுகச் சிறுகவே அவ்வரபியர்பால் செய்யப்பட்டு வந்திருக்கிறது. எனினும், இறுதியாக இஸ்லாத்தில் இந்த முத்ஆ'ப் பழக்கம் கூடாதென்றே தடுத்துநிறுத்தப்பட்டு விட்டதென்பதில் சிறிதும் சந்தேகமென்பது கிடையாது.

அவன்— (மணமகன்) அன்னவள்மீது ஒரு மாங்கல்யக் கட்டணத்தை— மஹறை— ஏற்படுத்துவான்; அப்பா லவளை மணந்து கொள்வான்.[4]— (பு'க'ா. 67 : 37)

6. ஜாபி'ர் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"உங்களுள் ஒருவன் ஒரு பெண்ணைத் திருமண முடிக்க விரிக்குங்கால், அவளை மணமுடித்துக் கொள்ளுமாறு அவனை எது தூண்டிற்றோ, அதனைத் துருவிப் பார்க்கக்கூடிய சக்தி அவனுக் கிருப்பின், அன்னவன் அதனைச் செய்து பார்க்க வேண்டும்." — (அபூ'த'ா. 12 : 17)

7. மு'கீரா கூறி யுள்ளார்: இவர் ஒரு பெண்ணை விவாகம் செய்துகொள்ள வரித்து நின்றார்; அதுபொழுது நபிபெருமான் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

---

4. கி'த்ப'ா என்பது பெண் கேட்பதைக் குறிக்கும்; இதுதான் திருமணத்துக்கு முதற்படியாகும். பிறகு அப் பெண்ணுக்காகக் கொடுக்கப்படவேண்டிய மாங்கல்யக் கட்டணம்— (மஹர்) இவ்வளவுதா னென்று அத் திருமணத்திற்கு ஏற்பாடு செய்யப்படல் வேண்டும். இத்தொகை இவ்வளவுதானென்று பொதுப்படையாய் ஒரு வரையறை யில்லை. அஃதொரு பொற்குவியலாக (தலை. ஆயத் 11) அல்லது ஓர் இருப்புமோதிரமாக இருக்கலாம்; அல்லது, அவளுக்குப் படிப்புக் கற்றுக்கொடுத்ததில் அவளுக்குப் புரிந்த ஊழியமாயிருக்கலாம் (பு'க'ா. 67 : 51). உண்மையிலே ஒரு பெண்ணுக்கு ஏற்படுத்தப்படும் மஹர்த்தொகை பெண்மாப்பிள்ளையின் அந்தஸ்தையும், அவர்களது சுக செளகரிய வசதியையும் பெரும்பாலும் பொறுத்து நிற்கின்றது.

" அவளை (முற்கூட்டியே நீர்) பார்த்துக் கொள்ளும்; என்னெனின், உங்களுக்குள்ளே ஒற்றுமையை உண்டுபண்ண அது மெத்த உதவிபுரியலாம்."[5] — ('திர்மி. 9 : 5)

8. அபூ' ஹுரய்ரா கூறியுள்ளார்: நபிபெருமான் (சல்அ'ம்) நவின்றருளினார்கள் :—

" விதவையாயிருப்பவள், அவள் கலந்தாலோசிக்கப்படாதவரை, விவாகம் செய்துவைக்கப்படுவது கூடாது ; இன்னம், கன்னிப் பெண்ணும், அவளது அனுமதி பெறப்படாதவரை, மணமுடித்து வைக்கப்படுவது கூடாது."

'ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! அவளது அனுமதி எவ்வாறு பெறப்படல் கூடும்?' என்று அவர்கள் கேட்டார்கள். (இதற்கு நபிபெருமான்) அவர்கள், " அன்னவள் மௌனமா யிருப்பதே (போதும்)" என்று நவின்றருளினார்கள்.[6] — (பு'க'ா. 67 : 42)

---

5. இதனால், மாப்பிள்ளையானவன் தான் வரிக்கும் பெண்ணை முற்கூட்டியே பார்வையிட்டுத் திருப்திசெய்துகொள்ளலாமென்று ஏற்படுகிறது ; சென்ற 'ஹதீ':திலிருந்து, அவளது சார்பாயுள்ள ஏனைவிஷயங்களையும் விசாரித்துத் திருப்தி யடைந்துகொள்ளக் கடவன் என்பதும் வெளியாகின்றது.

6. 'ஹதீ'. 8, 9 ஆகியவற்றிலிருந்து, ஒரு பெண் அவளுடைய போஷகனாலேதான்— (கார்டியனாலே) மணமுடித்துக் கொடுக்கப்படவேண்டு மென்பது தெளியக் கிடக்கிறது. அந்தப் போஷகன் தந்தையேயாயினும், வேறெவனேயாயினும், அப்பெண்மணியின் அனுமதியை முற்கூட்டியே பெற்றுக்கொள்ளக் கடவன். வேறு பல 'ஹதீ':துகள் கூறியிருப்பதுபோல், பெண்ணொருத்தி— (மேஜரானவள்) தனதிஷ்டம்போலே ஒரு புருஷனுக்கு வாழ்க்கைப் பட்டுக்கொள்ளலாம் ; எனவேதான், இமாம்பு'க'ாரீ தம்முடைய

9. க’ன்ஸா கூறியுள்ளார்: இவளுடைய தந்தை இவளை மணமுடித்துக் கொடுத்தார்; இன்னம், இவளொரு :தய்யிப’ா யிருந்தாள்; மேலு மிவள் அ(த்திருமணத்)தை விரும்பாமலே இருந்து வந்தாள். எனவே, இவள் அல்லா(ஹ்)வின் திருத் தூதர்பால் (சல்அ’ம்) வந்து சேர்ந்தாள்; அப் பொழுது அப்பெருமானர் அத்திருமணத்தை ரத்து செய்துவிட்டார்கள்.[7]— (பு’க’ா. 67 : 43)

10. ஆ’யிஷா பிராட்டியார் கூறினர்: அல் லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னர்கள் :—

“உங்கள் விதை(யைத் தெளிப்பது)க்காக, (குணுதிசயத்தில் சிலாக்கியமான) பெண் பிள்ளை களையே பொறுக்கிக்கொள்ளக் கடவீர்கள்; இன் னம், (உங்களுக்குச்) சமமான (அந்தஸ்தி)லுள்ளவர் களையே மணமுடித்துக் கொள்ளக் கடவீர்கள்; மேலும், அப்படிப்பட்டவர்களுக்கே (உங்கள் குமாரி களையும்) மணமுடித்துக் கொடுக்கக் கடவீர்கள்.”[8]— (இப்’னுமா. 9 : 46)

---

அத்யாயங்களுள் ஒன்றுக்கு, “பெண்ணொருத்தி ஒரு நல்ல மனித னுக்குத் தன்னை மனைவியாய்ச் செய்துகொள்ள விழைதல்” என்று பெயர் வைத்துள்ளார்கள் (பு’க’ா. 67 : 33). அப்படிப்பட்ட சந்தர்ப் பத்திலே அரசாங்கமே அவளுக்கு “கார்டியனு” யிருப்பதாய்க் கருதப்படுகிறது (பு’க’ா. 67 : 41).

7. எனவே, பெண்பிள்ளையின் இஷ்டமில்லாது கட்டப்படும் தாலியை நிராகரித்துவிட அவளுக்கு அதிகார மிருக்கிறதென்பது தெளிவாகின்றது. :தய்யிப்’ என்பவள் விதவையாய்ப் போய்விட் டவள், அல்லது விவாக விமோசனம் பெற்றுக்கொண்டவள் என்பவளா யிருக்கிருள்.

8. கூடியவரை திருமணமென்பது சரிசரியான அந்தஸ்தி

11. அபூ' ஹுரய்ரா கூறியுள்ளார்: நபிகள் நாயகம் (சல்அ'ம்) சொன்னார்கள்:—

"ஒரு பெண்மணி நான்கு விஷயங்களுக்காக மணமுடிக்கப் பெறுகிறாள்: அவளுடைய செல்வத்துக்காகவும், அவளது குடும்பத்(தின் மேலான கௌரவத்)துக்காகவும், அன்னவளின் அழகுக்காகவும், அவளுக்குள்ள குணத்துக்காகவும்.[9] ஆகையால், மேலான குண விசேஷத்தையுடைய ஒருத்தியைக் கொண்டே நீர் வெற்றி பெறக்கடவீர்."— (பு'க'ா. 67 : 16)

12. உ':க்ப'ா கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள்:—

---

விருப்பவருள்ளேயே செய்யப்படல் வேண்டும். இத்தகைய சம அந்தஸ்தென்பது இஸ்லாத்தில் கு'ப்'உ, அல்லது கு'பு'உ என்று கூறப்படுகிறது. இமாம்பு'க'ாரீ தமது அத்யாயத்துக்கு, "அல் அக்'பா'உ 'பித்'தீ'ன்"— "மார்க்கத்தில் சம அந்தஸ்துள்ளவர்கள் (67:16) என்று நாமஞ்சூட்டி, அதன் தாத்பரியத்தை ஒருவாறு விளக்கியிருக்கின்றார்; இதனால் விளங்கக்கிடப்பது யாதெனின், எல்லா முஸ்லிம்களும் ஒருவிதத்தில் சரிசமானமுள்ள சகோதரர்களாகவே யிருந்துவருகிறார்கள் என்பதேதாகும். :குறைஷிப் பெருங்குலத்துப் பெண்ணொருத்தி அடிமை, அல்லது விடுதலை பெற்ற அடிமைக்கு மணமுடித்து வைக்கப்பட்ட விஷயம்போன்ற திருஷ்டாந்தங்கள் பல 'ஹதீ':துகளில் காணப்படாநின்றன (பு'க'ா. 64:12).

9. மற்ற மூன்று விஷயங்களுக்கு மாறாக, மதமென்பதே குணவிசேஷத்தை யுண்டுபண்ணத் தக்கதாயிருந்து வருகிறது. எனவேதான், தீ'ன் என்னுஞ் சொல் இவ்விடத்தில் குணவிசேஷத்தைக் குறித்துக்காட்டுகின்றது. "அழகுங் குணமுமுள்ள அவள் நல்ல ஜோடு; அழகில்லை யாயினும், குணத்தை நீ தேடு," என்றார் வேதநாயகம் பிள்ளையும்.

"நீங்கள் நிறைவேற்றி வைத்தற்குரிய மகா யோக்கியப் பொறுப்புள்ள நிபந்தனைகள், நீங்கள் எவற்றைக் கொண்டு உங்கள் மணவாழ்க்கைத் தொடர்புகளைச் சட்டபூர்வமானவையாய்ச் செய்து கொள்கிறீர்களோ, அவைகளாகவே யிருந்து வருகின்றன."[10]— (பு'க'ா. 54 : 6)

13. இப்'னு உ'மர் கூறியுள்ளார்: அல்லா(ஹ்) வின் திருத்தூதர் (சல்அ'ம்) ஷி:காரைத் தடுத்திருக்கிறார்கள்; மேலும், ஷி:கார் என்பது இதுவா யிருக்கிறது: ஒரு மனிதன் தன் புத்திரியை வேறொரு மனிதனுக்கு, அம்மனிதன் அவனுடைய புதல்வியைத் தனக்குத் திருமணம் முடித்துக் கொடுக்க வேண்டு மென்னும் நிபந்தனையின்மீது, விவாகம் செய்து வைக்கின்றான் என்பதேயாம்;— (இதில்) அவ்விருவருமே (ஒருவருக்கொருவர்) மஹர் கொடுப்பதில்லை.[11]— (பு'க'ா. 67 : 29)

---

10. பெண்ணும் மாப்பிள்ளையும் ஒத்துக்கொள்ளும் எத்தகைய நிபந்தனையும், அஃது இஸ்லாத்தின் சட்டத்துக்கு முரணில்லாதவரை, விவாக ஷரத்துடனே சேர்த்து வரையப்படலாம். உதாரணமாக, ஒரு நங்கை தன் தமக்கையை அவளுடைய கணவன் விவாகவிலக்குச் செய்துவிடவேண்டுமென்னும் நிபந்தனையின்மீது அன்னவனைத் தான் மணமுடித்துக் கொள்வதாய்க் கூறுவது கூடாது (பு'க'ா. 67 : 54). ஆனால், ஒரு புருஷன் ஒரு பெண்ணை மணக்க நேருங்கால், அவனுக்கு இன்னம் மூன்று மனைவியரை மணந்துகொள்ள அளிக்கப்பட்டுள்ள அவ்வுரிமையை விட்டுக் கொடுக்குமாறு அம்மங்கை நிப்ந்தனை விதிக்கலாம்; இதற்கு அந்தப் புருஷன் சம்மதிக்கலாம்.

11. மஹறென்னும் மாங்கல்யக் கட்டணம் அந்தப் பெண்ணுக்கே உரிய சொந்தச் சொத்தாகும்; அதில் அவளுடைய

14. ஆ'யிஷா பிராட்டியார் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"விவாகத்தைப் பகிரங்கமா யறிவித்துவைக்கக் கடவீர்கள்; இன்னம், பள்ளிவாசலிலிருந்தே அதனை நடத்துங்கள்; மேலும், அதில் து''ப் அடியுங்கள்."[12] — (·திர்மி—மிஷ். 13: 3)

15. அ'ப்'து'ல்லா(ஹ்) கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) எங்களுக்கு(ப் பின்வருமாறு) திருமணத்தின்பொழுது (முன்னல்) ஓத வேண்டிய கு'த்ப'ாவை— பிரசங்கத்தை—க் கற்றுக் கொடுத்தார்கள் :—[13]

---

தந்தைக்கேனும், வேறு கார்டியனுக்கேனும் ஒன்றும் உரிமையில்லை. எனவேதான், ஷி:கார் தடுக்கப்பட்டிருக்கிறது. "கடைத் தேங்காயை யெடுத்து வழிப்பிள்ளையாருக்கு உடைப்பது கூடாது" என்பது ஹிந்துக்கள் கூறும் ஒரு பழமொழி.

12. து''ப், அல்லது த''ப் என்பது ஒருவகை "வட்டப்பறை"; முஸ்லிம் 'ப(க்):கீர்கள் வைத்துக் கொட்டுகிறார்களே, அதுதான். விவாகத்தைப் பகிரங்கமாய்ப் பிரகடனப்படுத்த அஃதொரு சாதனமா யிருக்கிறது; இன்னம், அஃதொரு வாத்தியமாயு மிருக்கிறது.

13. நி(க்)கா'ஹுக்கு முன்னே ஓதப்படும் கு'த்ப'ா— (பிரசங்கம்) அத்திருமணத்தைப் பகிரங்கப்படுத்த ஒரு நற்சாதனமாயிருந்து வருகிறது. இதில் இன்னம் இருவகைப் பிரயோஜனமும் இல்லாது போய்விடவில்லை: நி(க்)கா'ஹைப் புனிதப்படுத்தவும் அது பயன்படுகிறது; சதிபதிகளின் கடமைகளை அவரவருக்கும் உணர்த்திவைக்கவும் உதவிபுரிகின்றது. இந்த உபன்யாசத்தில் காணப்படும் :குர்ஆன் ஆயாத்கள் மூன்று அத்தியாயங்களிலிருந்து எடுக்கப்பட்டிருக்கின்றன: 4: 1 (ஒரு பகுதி); 3: 101; 33: 70, 71. :குர். 4:1 முழுதும் இவ்வாறு கூறுகின்றது: "ஏ மானிடர்காள்! உங்களை ஓரே ஆன்மாவினின்றே படைத்து, அதன் துணைவியை

"எல்லாப் புகழும் அல்லா(ஹ்)வுக்கேயாம்; நாங்கள் அவனிடத்தே உதவி தேடுகிறோம்; மேலும், அவன்பாலே பாதுகாவல் தேடுகிறோம்; இன்னம், எங்கள் ஆத்மாக்களின் விஷமங்களைவிட்டு அன்னவன்பாலே தஞ்சம் தேடுகிறோம்; எவனொருவனை அல்லா(ஹ்) நேரிய வழியில் நடாத்துகிறானோ, அவ

---

யும் அதே இனத்திலிருந்தே படைத்து, அவ் விரண்டிலிருந்தே அநேக ஆண்களையும் பெண்களையும் (பல்கிப்) பரவுமாறும் செய்துள்ள உங்கள் ரக்ஷகன்பால் (உங்களுடைய கடமையிலே சர்வ) ஜாக்கிரதையாய் ஒழுகிக்கொள்ளக் கடவீர்கள்; இன்னம், நீங்கள் ஒருவர் மற்றொருவர் பாலிருந்து உங்கள் பாத்தியதைகளை எவனைக்கொண்டு உரிமையாய்க் கேட்கின்றீர்களோ, அத்தகைய அல்லா(ஹ்)வின் பா(ல் உங்கள் கடமையி)லும், பந்துக்களின் (பாலுள்ள உங்கள்) உறவு முறையிலும் சர்வ ஜாக்கிரதையாயிருந்துகொள்ளக் கடவீர்கள்; நிச்சயமாக அல்லா(ஹ்) உங்கள்மீது (கவனத்துடன்) காத்து நிற்கிறான்."

இந்த 'ஹதீ':தில் கூறப்பட்டுள்ள (4 : 1) ஒரு சிறு பகுதிக்கு ஈடாக இந்த ஆயத் முழுவதுமே ஓதப்படலாம். அந்த உபன்யாச முழுதுமே, கணவன் மனைவியரின் கடமைகளையும் உரிமைகளையுமே வலியுறுத்துவதா யிருக்கிறது; எனவே, நி(க்)கா'ஹ் செய்துவைக்கும் க'(த்)தீப்'சா'ஹிப்' அவற்றினை அங்குக் குழுமியிருப்பவருக் கெல்லாம் நன்கு விஸ்தரித்துக் கூறவேண்டும். [ஆயின், இதுகாலை இத் தென்னாட்டிலே இஃதொரு திருமந்திரமே போல் நமது தாய் மொழியல்லாத அன்னிய அரபுமொழியிலே ஓதப்பட்டு வருகிறது; வேறு சில ஊர்களிலே 'பார்ஸீ பாஷையின் மந்திரமொன்று கடபடாமென்று ஓதப்படுவதுண்டு; இம் மந்திரத்தின் பொருளை ஓதும் க'(த்)தீபு'ம் அறியார்; கூடியிருக்கும் பொது மக்களும் உணரமாட்டார்கள். அந்தோ, அந்தப் புரோகித மாயவலையே!] தமிழிலே அவ்வுபன்யாசத்தைச் செய்தால், அஃது எத்துணை நன்மையுண்டாக்கு மென்பதைச் சிந்தித்துப் பார்க்கக் கடவீர்களாக. அந்த உபன்யாசத்துக் கப்பால்,

னைக் கோடியவழியில் திருப்புவது எவனாலு மாகாது; இன்னம், எவனொருவனை அல்லா(ஹ்) கோடிய வழியிலாய்க் காண்கிறானோ, அவனை நேரிய வழியில் திருப்புவதும் எவனாலு மாகாது; இன்னம், யான் அல்லா(ஹ்)வைத் தவிர்த்து வணக்கத்திற்குரியவன் (வேறெவனும்) இல்லையென்றும், மு'ஹம்மத்' அவனுடைய அடியவரும் தூதுவருமா யிருக்கிறாரென்றும் அறுதியிட்டு உறுதி கூறுகிறேன். 'ஏ ஈமான் கொண்டவர்காள்! நீங்கள் ஒருவர் மற்றவர்பாலிருந்து உங்கள் பாத்தியதைகளை எவனைக்கொண்டு உரிமையாய்க் கேட்கின்றீர்களோ, அத்தகைய அல்லா(ஹ்)வின் பாலு(ங்கள் கடமையிலு)ம், பந்துக்களின்(பாலுள்ள உங்கள்) உறவு முறையிலும் சர்வ

ஈஜாப்'— (மெய்யாக ஏற்றுக்கொள்ளுதல்) :கபூ'ல்— (அதனை ஒத்துக் கொள்ளுதல்) என்னும் சடங்கு நடைபெறுகின்றது; அதுபொழுது மாப்பிள்ளையும் பெண்ணும் தங்கள் விவாக சம்மதத்தைத் தெரிவிக்கின்றனர்; இந்நாட்டிலே இங்கொரு நாடகம் நடிக்கப்படுகிறது: மாப்பிள்ளை வீட்டாரும் பெண் வீட்டாரும் திருமணத்தைத் தமக்குள்ளே (பெண்ணை அனுசரிக்காமலே) திட்டப் படுத்திக்கொண்டு, எல்லாக் காரியங்களையும் முடித்துவிட்டு, இறுதியிலே, மணவறைக்கு வந்தபிறகு பெண்ணைச் சம்மதம் கேட்பர். அப்பெண் தன் வாய்ப்பிறப்பை வெளியிடா முன்னே, 'பெண் சரி சொல்லிவிட்டது,' எனக் கூறித் தாலிகட்டி விடுகின்றனர். அந்தோ பரிதாபம்! அந்தோ அநியாயம்!! மாங்கல்யக் கட்டணமும் இவ்வளவென்று அதுகாலை அறிவிக்கப்படுகிறது. அதன் பிறகு ஒரு பிரார்த்தனை— தம்பதிகள் ஜோடியாய்ச் சுகவாழ்வு வாழவேண்டுமென்று புரியப்படுகிறது. இதனையும் அந்த அரபு மொழியிலே, அல்லது 'பார்ஸீ பாஷையிலேயே ஓதி, நம்மை யெல்லாம் அறிவில்லா ஆட்டுக்கிடாய்களா யாக்கி விடுகின்றனர்கள்' அந்தப் பாழும் புரோகிதர்கள். ஐயகோ!

ஜாக்கிரதையா யிருந்துகொள்ளக் கடவீர்கள். நிச்சயமாக அல்லா(ஹ்) உங்கள்மீது (கவனத்துடன்) காத்து நிற்கிறான்.' 'ஏ ஈமான் கொண்டவர்காள்! அல்லா(ஹ்)வின்பால் உங்கள் கடமையில், அன்னவன்பால் செலுத்தப்பட வேண்டிய சர்வ ஜாக்கிரதையுடனே, ஜாக்கிரதையா யிருந்துகொள்ளக் கடவீர்கள்; இன்னம், நீங்கள் முஸ்லிம்களா யிருந்தாலன்றி, மரணமடைந்து போகாதீர்கள்.' 'ஏ ஈமான் கொண்டவர்காள்! அல்லா(ஹ்)வின்பால் உங்கள் கடமையில் சர்வ ஜாக்கிரதையா யிருந்துகொள்ளக் கடவீர்கள்; மேலும், சரியான வார்த்தையையே பேசக் கடவீர்கள். அவன் உங்களுக்கு உங்களுடைய செய்கைகளை யெல்லாம் செம்மையான நிலைமையிலே வைத்தருள்வான்; மேலும், உங்களுக்கு உங்களுடைய பாபங்களை யெல்லாம் பொறுத் தருள்வான்; இன்னம், எவனொருவன் அல்லா(ஹ்)வுக்கும் அவனுடைய தூதருக்கும் வழிபட்டு நடக்கிறானோ, அன்னவன் மகத்தான சித்தியையே பெற்றுக் கொள்கிறான்.' "— (அபூ'த'ா. 12 : 31)

16. அனஸ் கூறினார்: நபிகள் திலகம் (சல்அ'ம்) பெண்டுகளும் பிள்ளைகளும் ஓர் உ'ருஸிவிருந்து வந்து கொண் டிருந்ததைப் பார்த்தார்கள்; ஆகவே, நபிகள்நாயகம் (சல்அ'ம்) நேராயெழுந்து நின்று, இவ்வாறும் இயம்பலுற்றார்கள்:— "ஏ அல்லா(ஹ்)! எல்லா ஜனங்களிலும் என்பால் அதிக

உவப்புள்ளவர்கள் நீங்களே." அவர்கள் இதனை மூன்று முறை செப்பினார்கள்.[14] — (பு'க'ா. 63 : 5)

17. ஆ'யிஷா பிராட்டியார் கூறினர் :—அன்சார் இனத்தைச் சார்ந்த ஒரு மனிதன் வீட்டுக்கு இவர் ஒரு பெண்ணை இட்டுக் கொண்டு சென்றார்; (அது கண்டு) அல்லா(ஹ்)வின் திருநபி (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"ஏ ஆ'யிஷா! உன்னுடன்கூட ஏன் வாத்தியத்தை அழைத்துச் செல்லவில்லை? என்னெனின், அன்சார்கள் வாத்திய (கோஷ)த்தை விரும்புகிறார்களே."[15] — (பு'க'ா. 67 : 64)

---

14. நி(க்)கா'ஹுக்குப் பின்னே அம் மணப்பெண் மாப்பிள்ளை யில்லத்துக்கு இட்டுக்கொண்டு செல்லப்பட்டாள்; இந்தச் சடங்கு உ'ருஸ் என்று அழைக்கப்படுகிறது; அதில் பல ஜனங்களும் சேர்ந்துகொள்வர். ஆகையால், அத்திருமண வைபவம் இன்னம் அதிகமான பகிரங்கத்தை யடையும். இந்த 'ஹதீ':தி லிருந்து, நபி பெருமானுக்குப் பெண்மணிகள் பாலும் பிள்ளைகள் பாலும் எத்துணைப் பெரிய பிரியமும் கரிசனமும் இருந்து வந்தனவென்று நாம் நன்கு தெரிந்துகொள்கிறோம். இந்த உ'ருஸில் சேர்ந்திருந்த பெண்களும் பிள்ளைகளும் அன்சார் இனத்தைச் சார்ந்தவர்களா யிருந்துவந்தமையால், இந்த 'ஹதீ':தை இமாம் பு'க'ாரீ, "அன்சார்கள்பால் அபிமானம்" என்னும் தலைப்புள்ள அத்யாயத்தின் கீழே எழுதிவைத்திருக்கிறார்கள்.

15. இந்த 'ஹதீ':தில் லஹ்வ் என்னும் பதம் வழங்கப்பட்டிருக்கிறது; லஹ்வென்பது, "ஒருவன் ஆனந்தமடையக் கூடியதும், அவனுக்குப் பராக்கையளிக்கக் கூடியதுமாகிய வஸ்து" என்பதைச் சுட்டிக் காட்டுகிறது; எனவே, இச்சொல், பராக்கு, பொழுதுபோக்கு, விளையாட்டு, தமாஷா என்றெல்லாம் கருத்துக்கொள்கிறது; ஆயின், இவ்விடத்திலே அது "வாத்தியம்" என்று தாத்பரியம் கொண்டு நிற்கிறது.

18. அனஸ் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) தாங்கள் ‘ஜய்னபை’ மணந்து கொண்ட தருணத்திலே தங்கள்பால் அன்னவரைத் தருவித்துக் கொண்டார்கள்; ஆதலால், உம்மு ஸுலய்ம் என்னைப் பார்த்து, ‘அல்லா(ஹ்)வின் திருத்தூதருக்கு (சல்அ’ம்) நாமொரு சம்மானத்தை அனுப்பிஞலென்ன!’ என்று கூறினர். (அதற்கு) ‘அவ்வாறே செய்க!’ என்று நான் அவருக்குச் சொன்னேன். ஆகவே, அம்மாதரார் பேரீந்தின் கனிகளையும், வெண்ணெயையும், பாலாடைக்கட்டியையும் எடுத்து ஒரு சமையற் பாத்திரத்திலே ஒன்ருய்ப் போட்டுக் கலந்து, ஒருவகைத் தீம்பண்டத்தைத் தையார் செய்தனர்; அப்பால் அதனுடனே என்னையும் அன்னவர்கள்— (நபிபெருமானர்)பால் அனுப்பி வைத்தார். மேலும், நான் அதனுடன்கூட அவர்கள்பால் சென்றேன். அதுபொழுது அவர்கள், “அதனை (இங்கே) வை,” என்று சொன்னர்கள்.[16]— (பு’க’ா. 67 : 65)

19. அனஸ் கூறினர்; ‘ஜய்னப்’ பி’ன்த் ஜ’ஹ்ஷ் நபிகள்நாயகம் (சல்அ’ம்) அவர்கள்பால்

---

16. எனவே, விவாக காலங்களில் பெண் மாப்பிள்ளைகளுக்குச் சம்மானம் செய்வதென்பது ஸுன்னத்தாம். தென்னாட்டில், மொய்யெழுதுவதென்பதும், வட்டியில்லாக் கடனேபோல் சம்மானம் போன்ற அவற்றினை யெல்லாம் அவரவர் தேவையின்போது, ஈட்டுக்கீடு திருப்பித்தான் கொடுக்கவேண்டு மென்பதும் வீண் டாம்பிகமான வெறுஞ் சம்பிரதாயமாகவே காணப்பட்டு வருகின்றன. இவ் வழக்கத்தை எவ்வாறு ரஸுலுல்லா(ஹ்)வின் ஸுன்னத்தென்று சொல்லமுடியும்?

மணப்பெண்ணைக அழைத்துச் செல்லப்பட்டார்; அதுகாலை ரொட்டியும் கறியும் பரிமாறப்பட்டன; மேலும், நான் அவ் விருந்துக்கு ஜனங்களை அழைத்துவர அனுப்பப்பட்டேன். (முதலில்) ஒரு கூட்டம் வந்து ஆகாரம் அருந்திவிட்டுப் பிறகு திரும்பிச் சென்றனர்; பிறகு மற்றொரு கூட்டம் வந்து ஆகாரம் அருந்திவிட்டு அப்பால் திரும்பிச் சென்றனர்: நான் அழைக்க வேண்டியிருந்தவர்களில் ஒருவரும் எஞ்சியிராது போகுமட்டும் (ஜனங்களை) அவ்வாறே அழைத்துக் கொண்டே யிருந்தேன்.[17] — (பு'க'ா. 65–33 : 8)

20. இப்'னு உ'மர் கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள்:—

"உங்களுள் ஒருவன் திருமண விருந்துக்கு அழைக்கப்படுங்கால், அவன் அதற்குச் செல்லக் கடவன்."— (பு'க'ா. 67 : 72)

21. இப்'னு அ'ப்'ப'ாஸ், அதனை— (தாம் கூறுவதை) நபிகள்திலகம் (சல்அ'ம்) வரை பின்னுக்குக் கொண்டு சென்று, கூறியுள்ளார்: (அவர்கள்) சொன்னார்கள்:—

"உங்களுள்ளே ஒருவன் தன்னுடைய மனை

---

17. இவ்விருந்து வலீமா விருந்தென்று அழைக்கப்பட்டு வருகிறது; பெண் மாப்பிள்ளை வீட்டுக்கு அழைத்துச் செல்லப்படுங்கால், அம் மாப்பிள்ளையால் அளிக்கப்படும் விருந்து அந்த வலீமா வென்று கூறப்படுகிறது. இச்சொல், இல்'தியாம் என்பதிலிருந்து ஜனித்திருக்கிறதாம்; இல்'தியாம் என்பது, இருதிறத்து ஜனங்கள் ஒன்று கூடுதல் என்று கருத்துக் கொள்ளும்; அஃதாவது, "சம்மந்தம் கலத்தல்" என்பதாகும்.

வியை (வீடுகூட) நெருங்கிச் செல்லுங்கால்; அவன் (இவ்வாறு) கூறக் கடவன் : 'அல்லா(ஹ்)வின் திரு நாமத்தைக் கொண்டு. ஏ அல்லா(ஹ்)! எங்களைவிட்டு நீ ஷைத்தானை விலக்கி வைக்கக் கடவாய்; நீ எங்களுக்கு அளிக்கப்போகும் அதனை விட்டும் (அந்த) ஷைத்தானை விலக்கி வைக்கக் கடவாய்.' அப்பால் அவர்கட்குக் குழந்தை யருளப்படுகிறது; அஃது—(அந்த ஷைத்தான்) அதற்கொன்றும் தீங்கிழைக்க மாட்டாது."— (பு'க'ா. 4 : 8)

22. ஜாபி'ர் கூறினர் : நாங்கள் நபிகள்திலகத்தின் (சல்அ'ம்) காலத்திலே அ''ஜ்லைக்[18] கைக்கொண்டு வருவது வழக்கம்; இன்னம், அப்பொழுது குர்ஆன் (ஆயத்) அருளப்பட்டு வந்தது.— (பு'க'ா. 67 : 97)

23. அபூ ஸஈ'த்' கூறினர் : .......நாங்கள் அ''ஜ்லை மேற்கொண் டொழுகினோம்; அப்பொழுது நாங்கள் (அதுகுறித்து) அல்லா(ஹ்)வின் திருத்தூதர்பால் (சல்அ'ம்) கேட்டோம்; இன்னம் அன்னவர்கள் சொன்னார்கள் :—

---

18. அ''ஜ்ல் என்பது, சதிபதி வாழ்க்கையில் கர்ப்பத்தடைக்குரிய ஒருபாயமா யிருக்கிறது; இச்சொல் அசலில், "ஒரு வஸ்துவை ஒன்றைவிட்டு நீக்கிவிடுதல்," அல்லது, "விலக்கி விடுதல்" என்று பொருள் கொள்கிறது. வீடு கூடலில் அ''ஜ்லென்பது—(கழற்றிவிடல்) என்னவென்பதை அறிந்தவர்களிடம் கேட்டுத் தெரிந்துகொள்க. சிசு உற்பத்தியால் மனைவியின் உயிருக்கோ, அல்லது சரீரசுகத்துக்கோ, விபத்து நேருமென்று அஞ்சப்படும் பொழுது, கணவன் அ''ஜ்லைக் கைக்கொள்ளலாமென்று அனுமதியளிக்கப்பட்டுள்ளது போலும்.

"என்ன! நீங்கள் அதனையா செய்கின்றீர்கள்?"— இதனை மூன்று முறை கூறினார்கள்.

"தான் உயிர் பெற்றெழ மாட்டாது, இறுதித் தீர்ப்புக்காக உயிர்த்தெழு நாள்மட்டிலே தரித்து நிற்கும், எத்தகைய ஆத்துமாவும் இல்லை."— (பு'கா'ர. 67 : 97)

24. அபூ' ரா'பிஃ' கூறினார்: 'பா(த்)திமா (ரலி') அச்சிசுவை ஈன்றபொழுது, 'ஹஸன் இப்'னு அ'லீயின் செவியிலே, தொழுகைக் குரிய அ'தானை அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) ஓதியதை யான் கண்டேன்.[19]— ('திர்மி—மிஷ். 19 : 3)

25. அபூ' மூஸா கூறினார்: எனக்கொரு புதல்வன் பிறந்தான்; அவனை நான் நபிகளாரிடம் (சல்அ'ம்) கொண்டு வந்தேன். அவர்கள் அவனுக்கு இப்'ராஹீம் என்று நாமஞ் சூட்டினார்கள்;

---

19. ஒரு முஸ்லிம் சிசு ஜனித்தவுடனே முதன் முதலில் செய்யவேண்டிய காரியம் இதுவேதான். அ'தானின்— (ப'ாங்கின்) கூப்பீடுகள் முதலிலே வலப்புறச் செவியில் கூறப்படுகின்றன; அப்பால் இ:காமத்தின் கூப்பீடுகள் இடப்புறச் செவியில் கூறப்படும்; இ:காமத் கூறுவதற்குள்ள ஆதாரம் "ஷர்'ஹுஸ் ஸுன்னு"வில் காணப்படுகிறது; உ'மருப்'னு அ'ப்'துல் அ'ஜீ'ஜ் இவ்வழக்கத்தையே பின்பற்றி யொழுகினாரென்று அந்நூலில் காணப்படாநின்றது. இப்பழக்கம் நபிபெருமானாலேயே அனுஷ்டிக்கப்பட்டு வந்துள்ளதென அபூ' யஃ'லாவின் "மஸ்னதில்" கூறப்பட்டிருக்கிறது. 'புதிதாய்ப் பிறந்துள்ள சிசுவின் செவிகளிலே அல்லா(ஹ்)வின் ஏகத்துவத்துக்கும் இணையற்ற பெருமைக்குமுரிய வசனங்களை ஓதவேண்டு மென்பதிலிருந்து, நபிகள் திலகம் மானிடர்கட்கெல்லாம் உள்மன ஸொன்று இருந்துவருகிற தென்பதை நன்கறிந்தே யிருந்தார்களென்பது செவ்விதாய் அறியக் கிடக்கின்றது.

மேலும், ஒரு பேரீச்சங் கனியை (நைய) மென்று, அதைக் கொண்டு அவனது மேலண்ணத்திலே தேய்த்தும் விட்டார்கள்; இன்னம், அன்னவனுக்கு வேண்டிய ஆசீர்வாதங்களுக்காகப் பிரார்த்தனையும் புரிந்து, அவனை என்பால் திருப்பியுங் கொடுத்து விட்டார்கள்.[20]— (பு'க'ா. 71 : 1)

26. ஸல்மான் இப்'னு ஆ'மிர் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) (பின்வருமாறு) சொன்னதை யான் கேட்டேன்:—

“ஆண் குழந்தை விஷயத்திலே அ':கீ:கா (அவசியமாக) இருக்கிறது; ஆகவே, அவனுக்காக உதிரத்தை ஓட்டக் கடவீர்கள்; இன்னம், அன்னவனைவிட்டு அசுத்தத்தை நீக்கக் கடவீர்கள்.”[21]— (பு'க'ா. 71 : 2)

---

20. இந்த 'ஹதீ':தில் 'ஹன்ன(க்)கஹு' என்னும் சொல்லொன்று காணப்படுகிறது; 'த'ஹ்னீக் கென்னும் சொல் 'ஹனக் கென்பதிலிருந்து தோன்றியிருக்கிறது; 'ஹனக் கென்பது, “வாயின் உட்புறமேன்” முகட்டை— (அண்ணத்தை)க் குறிக்கும். இங்கே கூறப்பட்டிருப்பதே போன்று நையமென்ற பேரீச்சங் கனியைக்கொண்டு சுவைக்கச் செய்யலாம்; அல்லது தேன் அச்சிசுவின் வாயில் ஒரு பெரிய மனிதரால் தடவப்படலாம். இவ்வாறு பெயர்வைத்தல், 'த'ஹ்னீக் செய்தல், பிறகு பிறந்த குழந்தைக்காகப் பிரார்த்தனை புரிதல் ஆகியவெல்லாம் நபிபெருமான் பழக்கத்தைப் பின்பற்றி யொழுகும் ஸுன்னத்களாம்.

21. அ':கீ:கா என்பது, அ':க்:க— (பிளந்தான், கிழித்தான், அல்லது வெட்டினன்) என்பதிலிருந்து தோன்றியிருக்கிறது; அ':க்:க அ'ன் வலதி'ஹீ என்பது, “அவன் தன் குழந்தைக்காகப் பலியாக ஒரு செம்மறியை, அல்லது ஒரு வெள்ளாட்டை (அச்சிசு ஜனித்து 7-ஆவது நாளிலே) அறுத்தான்,” என்று பொருள் கொள்

27. உம்மு குர்'ஜ் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) (இவ்வாறு) சொன்னதை யான் கேட்டேன் :—

"ஆண் குழந்தை விஷயத்தில் இரு வெள்ளாடுகளும், பெண் குழந்தை விஷயத்தில் ஒரு வெள்ளாடும் (அ':கீ:கா கொடுத்திடல் வேண்டும்)."[22]—(திர்மி—மிஷ். 19 : 3)

28. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினர். அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) 'ஹஸன், 'ஹுஸைன் விஷயத்திலே ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு செம்மறி வீதம் அ':கீ:கா கொடுத்தார்கள்.—(அபூ'த'ா—மிஷ். 19 : 3).



---

கிறது. இதுதான் இஸ்லாத்தில் அ:கீ:கா என்று இயம்பப்பட்டு வருகிறது. ஆனால், இச்சொல், "சமீபத்திலே பிறந்த சிசுவின் தலையில், தாயின் கர்ப்பாசயத்திலே முளைத்துள்ள துடனே வெளிவரும் ரோமத்தையும்" சுட்டிக் காட்டுகின்றது; இந்த ரோமமும் ஏழாவது தினத்தில் சௌளம் செய்யப்பட்டு விடுகிறது. இந்த 'ஹதீ':தில், "அசுத்தத்தைப் போக்குதல்" என்று காணப்படுவது அந்தப் பிறவி ரோமங்களையும் சடங்கையே குறித்துக் காட்டுவதா யிருக்கிறது.

22. இந்த 'ஹதீ':தில் கூறப்பட்டிருப்பதே பெரும்பான்மையான வழக்கம்; ஆயின், அடுத்துள்ள 'ஹதீ':தில் காணப்படுவதே போல், ஆண் குழந்தைக்கும் ஒரே ஆடு அ':கீ:கா கொடுப்பதே போதுமா யிருக்கிறது. செல்வர்களா யிருப்பவர்கள் இரண்டாடு கொடுக்கவேண்டும்.

## அத்யாயம்—21

### விவாக விமோசனம்— (:தலா:க்)

1. "இன்னம், நீங்கள் (கணவன் மனைவியாகிய) அவ்விருவருக்கிடையே பிளவை அஞ்சுவீர்களேல், அப்பொழுது அவன் குடும்பத்திலிருந்து ஒரு மத்தியஸ்தனையும், அவள் குடும்பத்திலிருந்து ஒரு மத்தியஸ்தனையும் ஏற்படுத்தி விடுங்கள்; இவ்விருவரும் இணக்கத்தை விழைவார்களாயின், அவ்விருவருக்கு மிடையே அல்லா(ஹ்) சுமுகத்தை யுளித்தருள்வான் (:குர். 4 : 35).

2. "இன்னம், ஒரு ஸ்திரீ தன் கணவன்மாட் டிருந்து (உபேக்ஷயான) வெறுப்பை, அல்லது புறக்கணிப்பை அஞ்சினளேல், அவ்விருவரும் தமக்குள்ளே ஒரு சமாதானத்தை ஏற்படுத்திக் கொள்வது அவ்விருவர் மீதும் குற்றமன்று; மேலும், சமாதானமே சிறந்தது......(ஆனால்) அவ்விருவரும் (விவாக விமோசனத்துடனே) பிரிந்துவிடுவார்க ளாயின், அல்லா(ஹ்) தனது விஸ்தீரண (ர'ஹ்ம)த்தினின்று அனைவரையும் தேவையற்றவராகச் செய்துவைப்பான்" (4 : 128—130).

3. "நீங்கள் பெண்டுகளை விவாக விமோசனம் செய்யுங்கால், அவர்களை அன்னவர்களுக் குரிய குறிப்பிட்ட காலத்திற்காக விவாக விமோசனம் செய்யுங்கள்......அவர்கள் பகிரங்க ஒழுக்கக்கேட்டை இழைத்துவிட்டாலன்றி, அன்னவர்களை அவர்களுடைய இல்லங்களைவிட்டு நீங்களும் வெளிப்படுத்த வேண்டாம்; அவர்களும் (தாமாகவே) வெளிப்பட வேண்டாம்" (65 : 1).

4. மேலும், விவாக விமோசனம் செய்யப்பெற்ற பெண்டுகள் தங்களை மூன்று :குரூ'உ வரை காத்துக்கொண்டிருக்கக் கடவர்...இன்னம், அன்னவர்களுடைய கணவன்மார்கள் சமாதானத்தை நாடுவார்களாயின், அந்தப்பெண்டுகளை

அந்தத் தவணைக்குள்ளே மீட்டுக்கொள்ளும் விஷயத்தில் அதிக பாத்தியதையுடையவர்களா யிருக்கிறார்கள்" (2: 228).

5. "மேலும், நீங்கள் பெண்டுகளை விவாக விமோசனம் செய்துவிடுவீர்க ளாயின், அப்பால் அவர்களும் தங்களுக்குரிய தவணையை முடித்துவிடுவார்க ளாயின், பிறகு அவர்கள்—(அக்கணவனும் மனைவியும்) நியாயப் பிரமாண முறையிலே தங்களுக் குள்ளே ஒத்துப் போவார்களாயின், அவர்கள் —(:தலா:க் சொல்லப்பெற்ற அம்மனைவியர்) தங்கள் கணவன் மார்களை மறுமண முடித்துக்கொள்வதி னின்று அன்னவர் களைத் தடுத்து நிறுத்தாதீர்கள்" (2: 232).

6. "விவாக விமோசனம் இருமுறை கூறப்படலாம்; பிறகு (அம்மனைவியரைத்) தடுத்து நிறுத்தி, மீட்டும் நல்ல முறையிலே வைத்துக்கொள்ளலாம்; அல்லது அழகான முறையிலே (பக்ஷத்துடன்) அவர்களை எதேச்சையாய் விட்டு விடலாம்; இன்னம், அன்னவ ரிருவரும் அல்லா(ஹ்)வின் வரையறைகளைக் கடைப்பிடிக்க முடியாதென்று அஞ்சினு லன்றி, (புருஷர்களாய) நீங்கள் அவர்களுக்குக் கொடுத்ததி னின்று யாதொரு வஸ்துவையும் எடுத்துக்கொள்வது நுங்க ளுக்கு (நியாயப்படி) கூடாது; அப்பால் அல்லா(ஹ்)வின் வரையறைகளை அவர்களிருவரும் சரிவரக் கடைப்பிடிக்க மாட்டார்களென்று அஞ்சுவீர்களேல், (தன்னை விடுவித்துக் கொள்ள மனைவியாகிய) அன்னவள் எதையேனுங் கொண்டு ஈடுகொடுப்பதில் அவர்களிருவர் மீதும் குற்றமில்லை...... பிறகும் (அக்கணவன்) அவளுக்கு விவாக விமோசனம் கூறி விடுவானுயின், பின்னர் அன்னவள் அவனல்லாத வேறொரு கணவனை மணந்துகொள்ளும் வரை அ(ம் முதற் கண)வனுக்கு மீட்டும் (சட்டப்படி) உரியவளாகாள்; பிறகு (அவ்விரண்டாங்) கணவனும் அவளை விவாக விமோசனம் செய்துவிடுவானுயின், (முதற் கணவனும் இவளுமாகிய) அவர்களிருவரும் அல்லா(ஹ்)

வின் வரையறைகளை (இனிச் சரிவரக்) கடைப்பிடிக்க இயலு மென்று எண்ணுவார்களாயின், ஒருவரையொருவர் அண்மி, மணமுடித்துக் கொள்வதால், அவ்விருவர் மீதும் குற்றமில்லை" (2 : 229, 230).

7. "இன்னம், நீங்கள் ஒரு மனைவியின் ஸ்தானத்திலே மற்றொரு மனைவியை மாற்றிக்கொள்ள விழைந்து, இன்னம் அன்னவருள் ஒருத்திக்கு நீங்கள் ஸ்வர்ணக் குவடொன்றை யளித்திருப்பினும், அதிலிருந்து ஒரு சிறிதையும் திரும்ப எடுத்துக் கொள்ளாதீர்கள்; அவள்மீது அவதூறு கூறியும், அன்னவளுக்குப் பகிரங்க அநீதியிழைத்தும் அதனை நீங்கள் எடுத்துக் கொள்வீர்களோ?" (4 : 20).

8. "ஏ ஈமான் கொண்டவர்காள்! நீங்கள் மூமினான பெண்டுகளை மணந்து, அவர்களைத் தொடுமுன்னே அன்னவர் களை நீங்கள் விவாக விமோசனம் செய்து விடுங்கால், அவர்கள் விஷயத்தில் நீங்கள் கணிக்கக்கூடிய தவணை யொன்றும் உங்களுக்கில்லை" (33 : 49).

9. "ஆகவே, அவர்கள் தங்கள் தவணைக் காலத்தை எய்திவிடுங்கால், அப்பொழுது அன்னவர்களை நல்ல விதமாய் நிறுத்திக்கொள்ளுங்கள்; அல்லது அவர்களை நல்லவிதமாய்ப் பிரித்து விடுங்கள்; இன்னம், உங்களுள்ளிருந்து இரு நீத முள்ளவர்களைச் சாக்ஷிகளாய் வைத்துக்கொள்ளக் கடவீர்கள்" (65 : 2).

10. "இன்னம், உங்கள் ஸ்திரீகளுள்ளே மாதவிடாயை விட்டு நம்பிக்கையற்றுப் போனவர்கள் குறித்தென்றாலோ, நீங்கள் சந்தேகிக்க நேர்ந்தால், அப்பொழுது அவர்களுக்குரிய குறிப்பிட்ட காலம் மூன்று மாதங்களா யிருக்கும்; மேலும், தங்கள் மாதவிடாயைப் பெற்றுக் கொள்ளாதவர்களுக்கும் (அப்படியேதான்); இன்னம், கர்ப்பிணிகள் குறித்தென்றாலோ, அன்னவர்களின் குறிப்பிட்டகாலம் அவர்கள் தங்கள் சுமை யை(க் கீழே) இறக்குவதா யிருக்கிறது" (65 : 4).

:தலா:க்— (தளேயை, அல்லது முடிச்சை அவிழ்த்துவிடல்) என்பது இஸ்லாத்தில் விவாக விமோசனத்துக்குச் சொந்தமாய்ச் சொல்லப்பட்டு வருகிறது ; இச்சுதந்தரம் இம்மார்க்கத்தில் அனு மதிக்கப்பட் டிருக்கிறது. ஆயின், ":தலா:க் சொல்வ" தென்பது அத்தியாவசியமான சந்தர்ப்பத்திலேதான் கைக்கொள்ளவேண்டிய ஓர் அபூர்வ உரிமையா யிருந்துவருகிறது ('ஹதீ'. 1, 2). கணவன் மனேவியருக் கிடையே அபிப்பிராய பேதம் ஏற்பட்டுவிடுங்கால், பொதுவான மத்தியஸ்தர்களே ஏற்படுத்தி, எல்லாவிதத்தாலும் அன்னவர்களுக் கிடையிலே சமரசம் ஏற்படுத்த முயற்சிகள் எடுத்துக்கொள்ளப்படல் வேண்டும் (தலே. ஆயத் 1). அத்தகைய சமாதான முயற்சிகளெல்லாம் பயன்படாது போய்விட்டபின்னரே ":தலா:க்"கில் இறங்கவேண்டும் (தலே. ஆயத் 2). தக்க காரண மிருந்தால், மனேவியும் :தலா:க் கேட்கலாம் (தலே. ஆயத் 2, 6 ; 'ஹதீ'. 2) ; கணவனுடைய கொடுமையொன்றும் இல்லாத பொழுதும் மனேவி வேறு தக்க காரணத்துக்காக அதனேக் கேட்க லாம் ('ஹதீ'. 3). :தலா:க் சொல்லவேண்டிய காலம் மனேவி மாதவிடாயிலில்லாது பரிசுத்தமாயிருக்கு நேரமேயாம் ('ஹதீ'. 4). :தலா:க் சொல்லப்பட்டவுடனே அந்தப் பெண்பிள்ளே இ'த்'த்'ர வென்னப்படும் "தவணே"க் குள்ளே சென்றுவிடக் கடவள் ; இது மூன்று :குரூ'உடைய— (3 மாதவிடாய்களுக்குரிய) காலமா யிருக்கிறது ; அப்பொழுதெல்லாம் அவள் தன்னுடைய கணவன தில்லத்திலே தாமதித்திருக்கவேண்டும் ; அக்காலத்திலே அவ்விரு வரும் சமரசம் செய்துகொண்டு கணவன் மனேவியராய்ச் சேர்ந்து கொள்ளலாம் (தலே. ஆயாத் 3, 4). மாதவிடாயில்லாத பெண்டு களுக்கு இ'த்'த்'ாவின் காலம் மூன்று மாதமாம் ; கர்ப்பிணி களுக்குப் பிரசவ காலம் வரையிலாம் (தலே ஆயத் 10). ஆனல், கணவனும் மனேவியும் ஒருவரை யொருவர் சந்திக்கு முன்னே :தலா:க் சொல்லப்பட்டு விட்டால், அப்பெண்ணுக்கு இ'த்'த்'ர இல்லே (தலே. ஆயத் 8). இ'த்'த்'ரவின் தவணே கழிந்து விட்டால், அக்கணவனும் மனேவியும் மணமுடித்துக் கொள்ளலாம் (தலே ஆயத் 5). இவ்வாறு :தலா:க் சொல்லி, இ'த்'த்'ாவும் காத்த பின்பு அவ்வாறு அவ்விருவரும் மணமுடித்துக் கொள்வது இருமுறை

நடைபெறலாம் ; இவ்வண்ணமாக இலாபமடைந்துள்ள கணவன் மூன்ருவதாகவும் :தலா:க் சொல்லி விடுவாஞயின், அவன் அவளது இ’த்’த’ாவின் காலத்தில் சமரசம் செய்துகொள்ளவும் முடியாது; அப்பால் அவளை மணமுடித்துக் கொள்ளவும் கூடாது. மூன்று :தலா:க்குக்கும் இ’த்’த’ாவுக்கும் பின்னரும் அந்தக் கணவனும்மனை வியும் மறுபடியும் மணந்துகொள்ள நாடினுல், அதற்கு ஒரே வழி தான் இருக்கிறது : அம்மனைவி வேருெரு கணவனை மணந்து அவ னுடனே வாழ்ந்து அறுத்த பின்னுல், அல்லது அவனுலும் :தலா:க் சொல்லப்பட்டு, இ’த்’த’ா இருந்த பின்னுலே அம்முதற் கணவன் இம்மனைவியை மறுமண முடித்துக்கொள்ளலாம் (தலே. ஆயத் 6). தற்கால சாந்தியான திருமணம்— (‘ஹலாலா என்னப்படுவது) இஸ்லாத்துக்கு நேர்முரணுயிருப்பதால், இதனை நபிபெருமானவர் கள் கண்டித்துவிட் டிருக்கிருர்கள் (‘ஹதீ’. 8). ஆதியில் விவாக காலத்திலே நிச்சயிக்கப்பட்ட மஹர்த்தொகையை, அப்பெண் உண்மையிலே வியபிசாரம் புரிந்துவிட்டாலன்றி, அவளுடைய கணவன் :தலா:க்கின் காலத்தில் திருப்பியெடுத்துக் கொள்வது கூடாது (தலே. ஆயத் 7) ; கணவன் மீது குற்றமொன்றும் இல்லா திருக்குங்கால், மனைவி விவாக விமோசனத்தை விரும்பினுல், அப்பொழுது அவள் தான் பெற்ற மஹரைத் திருப்பிக் கொடுத்து விடல் வேண்டும் (‘ஹதீ’. 3). :தலா:க்கென்பது சாக்ஷிகள் முன்னிலை யிலே சொல்லப்படல் வேண்டும் (தலே. ஆயத் 9 ; ‘ஹதீ’. 9). :தலா:க் ஒரு சமயத்தில் ஒரே முறைதான் சொல்லப்படல் வேண்டும்; ஒரே சமயத்தில் மூன்று முறை :தலா:க் சொல்வது இஸ்லாத்துக்கு மாருன கர்மமா யிருக்கிறது (‘ஹதீ’. 5, 6). இஸ்லாத்திலுள்ள மூத் :தலா:க்கும் மூன்று தனித்தனியான செயல்களே யாம் ; ஒன்றுக்கும் மற்ருென்றுக்கும் இடையில் காலதாமதம் வேண்டும் (‘ஹதீ’. 7). மனைவிக்கு விருப்பமிருந்தால் கணவனது கட்டி லிருந்து கழற்றிக்கொண்டு போய்விடலா மென்று அனுமதி யளிக்கப்பட்டால், அம்மனைவி அவ்வுரிமையை உபயோகிக்க முற்பட்டாலல்லது, அவ்வெறு அனுமதி :தலா:க்காக மாட்டாது (‘ஹதீ’. 10). கணவன் ம’ப்:கூத்’ாய் விட்டால், மனைவி :தலா:க் வாங்கியவளே போலாய் விடுகிருள் (‘ஹதீ’. 11). லிஆ’ன்— (அவ

தூற்று)க்குச் சத்தியம் கூறும் சந்தர்ப்பங்களிலே :தலா:க் ஏற்பட்டு விடுகிறது; ஆனால், கணவன் மனைவியிடத்திருந்து மஹரை வா(ப்)பஸ் பெறுவது இயலாது ('ஹதீ'. 12). ஒருவன் ஈலாயில்— (மனைவியுடன் தாற்காலிகமாய் மணவாழ்க்கைச் சம்பந்தம் வைத்துக்கொள்வதில்லை யென்று) புகலிடம் தேடிக்கொள்வானாயின், அவன் அதற்கொரு தவணையும் ஏற்படுத்தவில்லையாயின், அன்னவன் நான்கு மாத காலம் கழிந்தவுடனே அவளைத் தன் பள்ளியறைக்குள்ளே அழைத்துக்கொள்ள வேண்டும்; அல்லது அத்தவணை கழிந்தவுடனே அம்மனைவிக்குத் :தலா:க் சொல்லி விடக்கடவன் ('ஹதீ'. 13).

1. இப்'னு உ'மர் கூறியுள்ளார்: நபிபெருமானார் (சல்அ'ம்) நவின்றருளினர்கள் :—

"அல்லா(ஹ்)வின்பால், அனுமதி யளிக்கப்பட்டுள்ள எல்லாக் காரியங்களிலும் மிகவும் வெறுக்கத் தக்கதா யிருப்பது விவாகவிமோசனமே யாம்."[1]— (அபூ'த'ா. 13 : 3)

---

1. இந்த 'ஹதீ':து, அதிக நெருக்கடியான (தவிர்க்க முடியாத) சங்கடத்தின் போதுதான் :தலா:க் கென்னும் விமோசனத்தைத் தேட நாடவேண்டுமென்று வலியுறுத்திக் காண்பிக்கின்றது. முஸ்லிமாயிருப்பவர் இல்லற தர்மத்தில் மணமுடித்து, அதன் சிரமங்க ளனைத்தையும் சகித்துக்கொண்டு, தம்மாற் கூடியவரை குடித்தனச் சச்சரவில்லாமலே பாங்குடனே நல்லற வாழ்க்கை நடாத்த வேண்டியவரா யிருக்கின்றார்; எடுத்ததற்கெல்லாம் மூக்கின் நுனிமீது கோபத்தை வைத்துக்கொண்டிருப்பது கூடாது. சமாளிக்க முடிகிறவரை சமாளித்துப் பார்த்துவிட்டு, இனிமேல் முடியாதென்னும் எல்லைக்கப்பால் தாண்டிவிடுங்காலே, இறுதிப் பரிகாரமாய்த் :தலா:க்கின்பால் தலையைத் திருப்பவேண்டும். எடுத்ததற்கெல்லாம் 'பிடி சாபம்!' என்றுகூற இஸ்லாத்திலே இடமளிக்கப்பட்டில்லை யென்க.

2. :தவ்ப'ான் கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"எந்த ஒரு பெண்பிள்ளை தன் கணவன்மாட்டிருந்து, (அவளுக்கு அவனொரு) துன்பம் விளைவிக்காதிருக்க, :தலா:க் கேட்கின்றனளோ, அன்னவளுக்குச் சுவர்க்கானந்த நறுமணம் மறுக்கப்பட்டிருக்கிறது."[2]— (மஸ். V, 277)

3. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறி யுள்ளார் : :தர்பி'த் இப்'னு :கய்ஸின் மனைவி நபிகள் திலகத்திடம் (சல்அ'ம்) வந்து சொன்னள் : 'ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! :தாபி'த் இப்'னு :கய்ஸிடம் அவரது ஒழுக்கங் குறித்தேனும் ஈமான் குறித்தேனும் யான் யாதொரு குற்றத்தையும் காணவில்லை; ஆயின், இஸ்லாத்தில் கு'புரை யான் வெறுக்கின்றேன்.' (அப்பொழுது) அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"நீ அவருக்கு அவரது கனிவர்க்கத் தோட்டத்தைத் திருப்பிக் கொடுத்து விடுகிறையா?" (இதற்கு) அவள் சரியென்று கூறினள்; ஆகவே, அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) (:தாபி'த்

2. இந்த 'ஹதீ':தால் முஸ்லிம் மனைவிக்குத் :தலா:க் கேட்கச் சுயமே உரிமையுண்டென்னும் உண்மை ஊர்ஜிதமாகின்றது; இஃது எத்துணைப் பெரிய உரிமையெனின், அவளுடைய கணவன் அவளுக்கு எத்தகைய தீங்கேனும் கொடுமையேனும் இழைக்காமலிருக்கும் பொழுதுங்கூட அன்னவள் அவன்பாலிருந்து :தலா:க் கேட்கலாம் என்பதேயாம்; ஆயின், இப்படிப்பட்ட செய்கையால் அவள் அல்லா(ஹ்)வின் அப்பிரீதிக்கு ஆளாய்விடுவாள் என்று மட்டுமே எச்சரிக்கப் பெறுகிருள். எனினும், வேறு எப்படிப்பட்ட தடையும் அவளுக்கில்லையென்க.

துக்குச்) சொன்னார்கள் :— "அக் கனிவர்க்கத் தோட்டத்தை(த் திரும்ப) ஏற்றுக்கொண்டு, நீர் அவளுக்குத் :தலா:க்கும் கொடுத்துவிடும்."[3]— (பு'க'ா. 68 : 12)

---

3. இந்தச் சம்பவத்தில் இம்மனைவி— (ஜமீலா என்பவளு)க்குத் தன் கணவனைக்குறித்து எந்தவிதமான குறிப்பிடத்தக்க குறையுமில்லை; அவன் அவளைத் துன்புறுத்தவுமில்லை; துரத்திவிடவுமில்லை. ஆயின், அன்னவள்மீது அதிகமான காதலே கொண்டிருந்தான். ஆனாலும், அவனுடன் கூடி வாழத் தனக்கு விருப்பமில்லை யென்று அம்மனைவி தெரிவித்தாள்; ஆகவே, அவளது விருப்பத்திற்கேற்ப விவாக விமோசனம் பெற்றுக் கொண்டாள். ஆயின், அவளுக்குரிய மஹருக்காக அவளுடைய கணவன் ஒரு கனிதருங் காவைக் கொடுத்திருந்தான்; அதனை அன்னவள் திருப்பிக் கொடுத்துவிட வேண்டுமென்று கட்டளையிடப்பெற்றாள். இஃது இஸ்லாத்தில் கு'லஃ' என்று கூறப்படுகிறது; இதன் பொருள், "முடிச்சை அவிழ்த்துவிடல்" என்பதாயிருக்கிறது. "இஸ்லாத்தில் கு'புரை யான் வெறுக்கின்றேன்," என்பது, அவளொரு மூமினான மனைவி நடப்பதைப் போலே அக்கணவனுடன் இணங்கி நடந்துகொள்ள இயலாதவளாய் விட்டாள் என்றே கருத்துக் கொள்கிறது. எவ்வாறெனின், இஸ்லாத்தின் அனுஷ்டானப்படியும் இதன் கொள்கையின்படியும் மனைவியொருத்தி தன் கணவன்மாட்டு எப்போதுமே உண்மை அன்புடனும் கருத்தொருமித்தும் வாழ்க்கை நடாத்தக் கட்டுப்பட்டிருக்கிறாள். ஆனால், இந்த ஜமீலாவோ, தன் கணவனை மெய்யாகக் காதலிக்க முடியாமையால், இஸ்லாத்திலே இருந்து கொண்டு நயவஞ்சக மனைவியாக நடிப்பதைப் பார்க்கினும், தன் கணவனிடமிருந்து விவாக விமோசனம் பெற்றுவிடுவதே மேலென்று கருதினாள். தன்னால் இஸ்லாத்திலிருந்து கொண்டே உண்மையான மனைவிபோலே பொய்நடிப்பை மேற்கொள்வது கு'புரியத்தாகும் என்று அவள் கருதினாள். எனவே, முஸ்லிமாகிய் தான் இனியும் அக்கணவனுடனிருந்துகொண்டு பொய்வேஷம்

4. இப்'னு உ'மர் கூறியுள்ளார்: இவர் தம்முடைய மனைவி மாதவிடாயிலிருந்த நேரத்திலே :தலா:க் கூறினர்; இதனை உ'மர் அல்லா(ஹ்)வின் திருத்தூதர்பாலே (சல்அ'ம்) அறிவித்துவிட்டார்; ஆகவே, அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) இதனிமித்தம் அதிருப்தியுற்று, மேலும் சொன்னார்கள் :—

" அவன் அவளைத் திரும்பப் பெற்றுக்கொள்ள வேண்டும்; அப்பாலவள் பரிசுத்தமாகுமட்டும் வைத்திருத்தல் வேண்டும்; பிறகும் மாதவிடாயடைந்து, (மறுபடியும்) பரிசுத்தையாக வேண்டும்; அப்பாலவனுக்கு அவளை விவாக விமோசனம் செய்துவிட வேண்டுமென்று தோன்றுமாயின், அன்னவள் பரிசுத்தமா யிருக்கு நிலையிலே, அவளை அவன் நெருங்கா முன்னம், அன்னவன் அன்னவளுக்குத் :தலா:க சொல்ல வேண்டும். அல்லா(ஹ்) அதனைக் கட்டளை யிட்டிருக்குமாபோல், இதுதான் இ'த்'த'ா."[4] — (பு'க'ா. 65 : 65)

---

போடுவது கு'ப்ரான செய்கையென்று அவள் குறிப்பிட்டாள். இதற்கீடாக, வேறொரு பாடபேதத்தில், "என்னால் அவரைப் பொறுக்க முடியவில்லை," என்னும் பாடமே காணப்படா நின்றது.

4. இந்த 'ஹதீ':து :தலா:க் சொல்லவேண்டிய முறையைக் குறித்துக் கூறியுள்ளது: மனைவி மாதவிடாயி லில்லாமல் பரிசுத்த நிலையிலே இருக்கும்போதுதான் :தலா:க் சொல்லப்படல் வேண்டும். விவாக விமோசனம் பெற்ற பெண்ணொருத்தி மறுபடியும் வேறொருவனை மணப்பதற்கு முன்னே மூன்று :குரூ'உடைய காலம்வரை (இ'த்'த'ா) காத்திருத்தல் வேண்டுமென்று :குர். 2:228 கூறுகின்றது (தலை. ஆயத் 4). :குரூ'உ—[இதன் ஒருமை :கர்(உ) என்பதாகும்] என்பது, "பரிசுத்தமான நிலைமையிலிருந்து

5. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) காலத்திலும், அபூ'ப'க்ரின் காலத்திலும், உ'மருப்'னுல் க'த்தாபி'ன் கி'லா'பத்தின் முதலிரண்டு ஆண்டுகள் மட்டும் :தலா:க் சொல்லவேண்டிய (முறையாவ)து: (ஒரே சமயத்தில்) மூன்றுமுறை :தலா:க் சொல்லப்பட்டால், அவை ஒரே :தலா:க்கென்றேதான் கருதப்பட்டு வந்தன ; அப்பால் உ'மர் கூறலுற்றார் : 'ஜனங்கள், தங்களுக்கு நிதான மிருக்க வேண்டிய(தென்று உத்தரவிடப்பட்ட) ஒரு விஷயத்தில் துரிதத்தை மேற்கொள்ளத் துணிந்துவிட்டார்கள் ; ஆகையால், அவர்கள் விஷயத்தில் அஃது அ'மலுக்கு வருமாறு நாம் செய்துவிடலாம்.' ஆகவே, அன்னவர் அவர்கள் விஷயத்தில் அஃது அ'மலுக்கு வருமாறு செய்துவிட்டார்.[5]— (மஸ். I, 314)

6. ம'ஹ்மூ தி'ப்'னு லபீ'த்' கூறினர் : ஒரு மனிதன் தன் மனைவியை, ஒரேயடியில் மூன்று முறை :தலா:க் சொல்லி, விவாக விலக்குச் செய்து விட்டா னென்னும் செய்திகுறித்து அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) அறிவிக்கப் பெற்றார்கள் ; ஆகவே, அவர்கள் அதிகமான பொருத்தக் கேட்டுடனே எழுந்து நின்று, அப்பால் (இப்படிச்) சொன்னார்கள் :—

---

மாதவிடாயின் நிலைமையுள் நுழைதல்" என்பதைக் குறித்துக் காட்டுகின்றது. ஒரு மாதவிடாய்க்கும் அடுத்துவரும் மாதவிடாய்க்கும் இடையிட்ட காலம் சாதாரணமாக நான்கு வாரங்களாம் ; உத்தேசம் 28 நாட்களாம்.

5. அடுத்துவரும் அடிக்குறிப்பைப் பார்க்க.

"நான் உங்கள் மத்தியில் இருந்துவரும் பொழுதே, அல்லா(ஹ்)வின் வேதம் விளையாட்டாய்ச் செய்யப்படுகிறதோ?"— (நஸா. 27 : 6)

7. ருக்)கானு இப்'னு அ'ப்'து' ய'ஜீத்' கூறியுள்ளார்: இவர் தம்முடைய மனைவி ஸுஹய்மாவுக்கு மூன்று முறை (ஏககாலத்தில்) ':தலா:க் கூறினர்; மேலும், அதுகுறித்து நபிபெருமானுக்கு (சல்அ'ம்) அறிவித்து, அப்பாலும் சொன்னர்: 'நான் ஒரே (':தலா:க்காகவே) எண்ணிச் சொன்னேன் என்பதற்கு அல்லா(ஹ்)வைச் சாக்ஷிக் கழைக்கின்றேன்.' (அதுகேட்டு) அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள்: "ஒரே (':தலா:க்கைத்) தவிர்த்து அதிகம் நீ எண்ணவில்லை யென்பதற்கு அல்லா(ஹ்)வைச் சாக்ஷிக் கழைக்கின்றாயா?" (இதற்கு) அவர், 'ஆம், ஒரே (':தலா:க்கைத்) தவிர்த்து அதிகம் யான் எண்ணவில்லை யென்பதற்கு அல்லா(ஹ்)வைச் சாக்ஷிக் கழைக்கின்றேன்,' என்று கூறினர். ஆகவே, அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) அவளை அவர்பால் திருப்பி யனுப்பினர்கள்.[6]

---

6. இந்த 'ஹதீ':தும், சென்ற 5-ஆவது 'ஹதீ':தும் என்ன கூறுகின்றன? ஒரே சமயத்தில் கூறப்படும் ':தலா:க், அஃது ஒரு முறை, அல்லது மூன்று முறை— ஏன், இன்னம் எத்தனை முறையானலும் சரி,— கூறப்பட்டாலும், ஒரு ':தலா:க் கென்றே கருதப்பட்டுவந்தது; ஒரு முறையில் கூறப்படுவன (எல்லாம் சேர்ந்து) ஒன்றேயாயின. இதும் நபி பெருமானலேயே நன்கு விளக்கப்பட் டிருக்கிறது. ஒரே சமயத்தில் மூன்று ':தலா:க் சொல்வது :குர்ஆன் ஷரீ'பின் கட்டளைக்கே முரணு யிருக்கிற தென்று 'ஹதீ'. 6 கூறிக்கொண் டிருக்கிறது. முஸ்லிம் சட்ட

ஆனாலவர் உ'மரின் காலத்தில் இரண்டாமுறையாய் அவளுக்குத் :தலா:க் சொன்னார் ; மேலும், உ':து மான் காலத்திலே மூன்றாமுறையாக அன்னவளுக் குத் :தலா:க் கூறிவிட்டார்.— (அபூ'த'ா. 13 : 13)

---

கலா நிபுணர்களும் இப்பழக்கத்தை (ஒரே சமயத்தில் கூறப்படும் 3 :தலா:க்கையும் மூன்றாகவே கொள்வதை)த் :தலா:க் பி'த்'ஈ'— (நூதனமா யுண்டாக்கப்பட்டது) என்றே அழைக்கின்றனர். எனினும், :குர். 2 : 230-இன் ஆதாரத்தைக்காட்டி, அவர்கள் ஒரே நேரத்தில் மூன்று :தலா:க் சொல்லப்பட்டாலும், அவை மூன்றாகவே பாவிக்கப்பட வேண்டுமென்று கூறுகின்றார்கள். ஆனால், இங்குள்ள இம்மூன்று 'ஹதீ':துகளையும் கூர்ந்து நோக்கின், நபிபெருமானார்(சல்) அவ்வாறு கருத்துக் கொள்ள வில்லையென்பது செவ்விதிற் புலனாகாது போய்விட மாட்டாது. இஸ்லாத்தில் எவ்வாறு :தலா:க் சொல்லப்பட வேண்டுமென்பது :குர்ஆன் ஷரீ'பில் மிக விளக்கமாய்த் துலக்கப்பட்டுள்ளது: மனைவி மாதவிடாயிலில்லாமல் பரிசுத்தமா யிருக்கும்பொழுது கணவனால் ஒரு :தலா:க் சொல்லப்படல்வேண்டும் ; அப்பாலுடனே அவள் இ'த்'த'ா காக்கத் துவங்கிவிடுவாள் (65 : 1). அது முடியு முன்னே அக்கணவனும் மனைவியும் சமாதானமாய்ப் போய் ஒன்று சேர்ந்து கொள்ளலாம் ; அல்லது, அந்த இ'த்'த'ாவின் எல்லை கடந்து விட்டால், அவர்களிருவரும் புது மணம் புரிந்துகொள்ளலாம் (2 : 228, 232). இந்தத் :தலா:க் "மாற்றத்தக்க" :தலா:க்கென்று அழைக்கப்படுகிறது. இனியொரு முறையும் இரண்டாவதாக இம்மாதிரியான "மாற்றத்தக்க" :தலா:க் சொல்லப்படலாம் ; அதுபொழுதும் முன்போலவே செய்யப்படலாம் (2 : 229). இவ்விரு :தலா:க்கிலும் இ'த்'த'ாவின்பொழுது சமரச மாவதற்கு, அல்லது அது கழிந்து புது மணம் புரிந்துகொள்வதற்கு அக்கணவன் மனைவியருக்கே சுதந்தர மிருக்கிறது. ஆனால், மூன்றாவதொரு முறை :தலா:க் சொல்லப்பட்டுப் போய்விடுமாயின், அது, 2 : 230-இல் கூறப்பட் டிருப்பதேபோல், "மாற்றத்தகாத" :தலா:க்காய்ப்போய் முடிவடைந்து விடுகிறது. ஆயினும், ஒரே

---

சமயத்தில் சொல்லப்பட்டாலும், மூன்று :தலா:க் முத்தலா:க் காகவே, மாற்ற முடியாததாய்ப் போய் முடிவடைந்துவிடுமென்று உ'மர்(ரலி') அவர்கள் செய்துவைத்ததன் ('ஹதீ'. 5) நோக்கம், இஸ்லாத்துக்கு மாறான பழக்கத்தை மேற்கொள்வதால், அதனால் விளையும் தீயபயனை (மனைவியை அடியுடன் இழந்துவிடுவதை) அவரவரும் அனுபவித்தே தீரவேண்டுமென்று பொதுமக்களுக்கு எச்சரிப்பதாகவே யிருந்திருக்கிறது. ஆனால், அவர்கள் செய்து வைத்ததன் பலன் அன்னவரின் நோக்கத்திற்கு நேர்மாறாய்வந்து விளைந்துவிட்டது: இஸ்லாத்துக்காகாத வழக்கமே— ஒரேமூச்சில் மூன்று :தலா:க்கையும் கூறி, அதனை "மாற்றத்தகா"தெனக் கூறுவது— இஸ்லாத்தில் பிற்காலத்தில் பெருவழக்காய் வந்து மூண்டுவிட்டது; அறியாத்தனத்தாலோ, அவசரத்தாலோ, அல்லது முன்கோபத்தாலோ ஒரே நேரத்தில் மூன்று :தலா:க் கூறுவோரெல்லாம் "மாற்றத்தகாத" :தலா:க்கென்னும் விலங்கினுள்ளே மாட்டிக்கொண்டு தத்தளித்து விழிக்கின்றனர்; அந்தோ பரிதாபம்! ஆனால், இந்த 'ஹதீ':து என்ன கூறிக்கொண்டிருக்கிறது? ஒருமுறை ஒரு மனைவிக்கு அவளுடைய கணவன் :தலா:க் கூறிவிடுவானாயின், அச்சமயத்தில் அவன் ஒரு :தலா:க் சொல்லட்டும், அல்லது மூன்றே சொல்லட்டும், எல்லாம் சேர்ந்து ஒரு :தலா:க்காகவே, மாற்றப்படத் தக்கதாகவே கருதப்படல் வேண்டும். இவ்வாறு இரண்டா முறையும் ஒரு "மாற்றத்தக்க" :தலா:க் சொல்லப்படலாம். அதற்குமப்பாலே மூன்றா முறையாகச் சொல்லப்பட்டால், அதுதான் "மாற்றத்தகாத" இறுதித் :தலா:க் காய்ப் போய் முடிவடைந்துவிடும் (2 : 230). :குர்ஆன் ஷரீ'பும் நபிகள் திலகமும் (சல்அ'ம்) கூறியுள்ள முறையைப் பின்பற்றுவதாயிருப்பின், அப்பொழுது மாற்றமுடியாத மூன்றாவது :தலா:க் குக்கே அநேகமாய் இவ்வவனியில் இடமில்லாது போய்விட்டிருக்குமே.

யும், எவனுக்காக 'ஹலாலா செய்யப்பட்டதோ, அவனையும் சபித்தார்கள்.[7]— (·திர்மி. 9 : 25)

---

7. இஸ்லாத்துக்கு முற்பட்ட காலத்தில் :தலா:க்கென்பது ஒரே சமயத்தில் மூன்றுமுறை கூறப்படும்; அக்கணமே அது மாற்ற முடியாததாகவும் கருதப்பட்டுவிடும். அப்பால் அவ்விருவரும் மறுமணம் புரிந்துகொள்ள விரும்பினால், அம்மனைவி வேறொரு புருஷனைத் தற்கால சாந்தியான திருமணம் புரிந்து கொள்ள வேண்டும்; இந்தப் புருஷன் அவளுடனே வீடுகூடி ஸம்ஸர்க்கம் செய்தபின்பு அவளுக்குத் :தலா:க் சொல்வான். இவ்வழக்கம் 'ஹலாலா என்று கூறப்பட்டு வந்தது; அஃதாவது, ஒன்றை 'ஹலாலாக— சட்டப்படி செல்லத்தக்கதாக—ச் செய்வதாகும். இவ்வாறு 'ஹலாலா செய்யாமல் பழைய கணவனும் மனைவியும் மறுமணம் புரிந்துகொள்வது கூடாதகாரியமா யிருந்து வந்தது. ஆனால், இஸ்லாத்தில் தற்கால சாந்தியான திருமணம் தடுக்கப்பட்டிருக்கிறது (பு'க'ா. சுருக். 20:4). எனவேதான், 'ஹலாலாப் பழக்கம் இம்மார்க்கத்தில் கடுமையாய்க் கண்டிக்கப்படுகிறது. ஆனால், இதுகாலை இந்நாட்டில் நடைபெறுவதென்ன? :தலா:க் சொன்ன கணவனும், :தலா:க் சொல்லப்பட்ட மனைவியும் மறுபடியும் மணந்துகொள்ள நாடினால், இடையில் 'ஹலாலா விவாகம்போன்ற தொன்றையே செய்து வைக்கிறார்கள்; இதில் இனியொரு விசேஷம் யாதெனின், அந்த 'ஹலாலாவுக்கு இணங்கும் இடைக்காலக் கணவன் அன்றிரவு அம்மனைவியைத் தீண்டக் கூடாதென்றும், மறுநாள் விடிந்தவுடனே அவன் :தலா:க் சொல்லி விட வேண்டுமென்றும் பணத்தைக் கொண்டோ, பயத்தைக் கொண்டோ, நிபந்தனை ஏற்படுத்துவதே யாகும். இஃது எவரை ஏய்க்கவோ? ஆனால், இஸ்லாத்தில் கூறப்பட்டுள்ள வேறு மணம்—முதற் கணவன் மூன்று :தலா:க்கும் கூறி, மாற்ற முடியாத விவாக விமோசனம் விளைந்துவிட்ட பின்பு வேறொரு புருஷனை அந்தப்பெண் மணந்துகொள்ள வேண்டு மென்பது (2 : 230)— 'ஹலாலாவான தாற்காலிகத் திருமணமன்று; இது நிரந்தரமான திருமணமே யாகும்; இந்த நிரந்தரத் திருமணமும்

9. மு‘தர்ரி‘ப் கூறி யுள்ளார்: தன்னுடைய மனைவிக்குத் ‘தலா:க் சொல்லிவிட்டு, அப்பால் அன்னவளுடனே சங்கமமும் வைத்துக்கொண்ட ஒரு மனிதனைக் குறித்து இ’ம்ரான் வினவப்பட்டார்; இன்னமவன் ‘தலா:க் சொன்னபொழுதும் சாக்ஷிகளை அழைத்து வைத்துக்கொள்ளவில்லை; அவளைத் திரும்ப ஏற்றுக்கொண்டபொழுதும் (சாக்ஷிகளை) வைத்துக்கொள்ளவில்லை. (அப்பொழுது) இ’ம்ரான் சொன்னார்: ‘நீ ஸுன்னத்துக்கு முரணாய்த் ‘தலா:க் சொல்கிறாய்; மேலும், ஸுன்னத்துக்கு மாற்றமாய் (அவளை நீ) மீட்டும் ஏற்றுக்கொள்கிறாய்; அவளுக்குத் ‘தலா:க் சொல்லும்பொழுதும், அவளை மீட்டும் ஏற்றுக் கொள்ளும்பொழுதும் நீ சாக்ஷிகளை வைத்துக்கொள்ளக் கடவாய்.[8]— (இப்’னுமா. 10:5)

10. ஆ’யிஷா பிராட்டியார் கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) (அவர்களுடன் இருக்க, அல்லது பிரிந்துபோய்விட) எங்களுக்கு அனுமதி யளித்துவிட்டார்கள்; ஆகவே, நாங்கள் அல்லா(ஹ்)வையும் அவனுடைய திருத்தூதரையுமே

---

பிறகு அகஸ்மாத்தாய்த் ‘தலா:க்கில் வந்து முடிவுற்றுவிடுமாயின், அப்பாலே இம்மனைவியும், இவளுடைய பழைய முதற்கணவனும் புது மணம் புரிந்துகொள்ளலாம்; அல்லது அவள் தன்னுடைய இரண்டாங் கணவனை யிழந்து விதவையாய்ப் போய்விட்டால், அப்பால் அம் முதற்கணவன் இவ்விதவையை வரித்துக்கொள்ளலாம்.

8. திருமணமென்பது ஒரு பகிரங்கக் காரியமாம்; அவ்வாறே விவாக விமோசனமும் பகிரங்கமாகவே சாக்ஷிகள் முன்னிலையில் நடைபெறல் வேண்டும் என்று இந்த ‘ஹதீ’து கூறியிருக்கின்றது.

தேர்ந்துகொண்டோம். இஃது எங்கள்மீது ஏதொரு வஸ்துவாகவும் கணிக்கப்படவில்லை.[9]—(புகா. 68 : 5)

11. இப்'னு முஸய்யப்' கூறினர் : சண்டை செய்துகொண் டிருக்கும்பொழுதே ஒரு மனிதன் காணமற் போய்விட்டால், அவனுடைய மனைவி ஓராண்டுவரை காத்திருக்கக் கடவள்.[10]— (பு'க'ா. 68 : 22)

12. அ'ப்'து'ல்லா(ஹ்) கூறியுள்ளார் : அன்

---

9. இஸ்லாம் அபிவிருத்தியடைந்து, நபி பெருமானுக்கும் எல்லாவித மேதைமரியாதைகளும் கிடைக்கத் தலைப்பட்ட, பிந்திய நாட்களில் பொதுப்படையாக்வே எல்லா முஸ்லிம் மாதர்களின் அந்தஸ்தும் உயர்ந்துகொண்டேவரத் துவக்கிற்று ; அதுகண்டு, நபிகணைதரின் பிராட்டிமாரும் தங்களந்தஸ்திற் குகந்த சில சுக சௌகரியங்களை வேண்டி நின்ருர்கள். அதுகாலை நபிபெருமானுக்கு வ'ஹீயொன்று வந்து, அந்தப் பிராட்டிமார்கள் அத்தகைய சுகசௌகரியங்க ளெல்லாம் இல்லாமலே இருக்க நாடினல் திரு நபியின் இல்லத்தி லிருக்கலாம் ; இன்றேல், தாங்கள் விழையும் சுக சௌகரியங்களைத் தேடும் நோக்கத்துடனே விவாக விமோசனம் பெற்றுக்கொண்டு வெளியிற் போய்விடலாம் என்று அவர்களுக்கெல்லாம் சொல்லிவிடுமாறு அந்த வ'ஹீ கூறிற்று ; அது கண்டு, அப்பிராட்டிமார்கள் ஒருசௌகரியமும் வேண்டாமென்று நபி பெருமானுடனேயே தாமதித்திருக்கச் சம்மதித்துவிட்டார்கள். இது :தலா:க் காகமாட்டாது. என்னெனின், அவர்கள் அவ்வுரிமையை ஏற்க மறுத்துவிட்டனர்.

10. எனவே, இந்தக் கால எல்லைக்குள்ளே அவனது 'தகவல்' எதுவும் கிடைக்காமற் போய்விட்டால், அவனுடைய மனைவி வேறு புருஷனை மணந்துகொள்ளலாம். இமாம் மாலிக் கூறியுள்ளார் : எந்தச் சந்தர்ப்பத்திலும் கணவன் ம'ப்:கூது'ல் க'ப'ராகப் போய்விட்டால், மனைவி நான்காண்டுகள் மட்டும் காத்திருத்தல் வேண்டும் ; அப்பால் அவள் வேறுவிவாகம் செய்துகொள்ளலாம்.

சார்களுள்ளே ஒரு மனிதன் தன் மனைவி வியபி சாரம் புரிந்துவிட்டாளென்று குற்றப்பழி சாட்டினன்; ஆகையால், நபிகள்திலகம் (சல்அ'ம்) அவர்களிருவரையும் சத்தியம் செய்யச் சொன்னார்கள்; அப்பால் அவர்களிருவரையும் ஒருவரைவிட்டொருவர் பிரிந்து போய்விடுமாறு உத்தரவிட்டார்கள்.[11] —(பு'கா'. 68 : 27)

13. எதுகுறித்து அல்லா(ஹ்) கூறியுள்ளானோ, அந்த ஈலா(உ) குறித்து இப்'னு உ'மர் (இவ்வாறு) கூறுவது வழக்கம் :

குறிப்பிடப்பட்டுள்ள (நான்கு மாத) காலம் கழிந்துவிட்ட பிறகு அவன் (அந்த மனைவியை) நல்ல நேசத்துடனே வைத்துக் கொள்ளவேண்டும், அல்லது :தலா:க் சொல்ல முடிவு செய்துகொள்ள வேண்டும் என்பதை யன்றி, எவனொருவனுக்கும் (வேறெதுவுஞ் செய்ய) நியாய வரம்பில்லை.[12]— (பு'கா'. 68 : 21)

---

11. லிஆ'னில், அஃதாவது, கணவன் தன் மனைவிமீது வியபிசாரக் குற்றத்தைச் சுமத்துகிறான்; ஆனால், அதற்கு வேண்டிய சாக்ஷிகள் அகப்படவில்லை யென்னும் சந்தர்ப்பத்திலே என்ன செய்ய வேண்டுமென்று :குர்ஆன் ஷரீ'பு 24 : 6–9-இல் விளக்கியிருக்கிறது. இதில் விவாகபந்தம் தறிக்கப்பட்டுப் போய்விடுகிறது; ஆனால், மஹர்த்தொகை அவளுடனே இருந்துவிடும் (பு'கா'. 68 : 53).

12. ஈலா(உ) சம்பந்தமாகக் :குர்ஆன் ஷரீ'பில் (2 : 226-இல்) இவ்வாறு கூறப்பட் டிருக்கிறது: "தங்கள் மனைவியர்பால் நெருங்குவதில்லை யென்று சத்தியம் செய்கிறவர்கள் நான்கு மாதங்கள் காத்திருத்தல் வேண்டும்."

# அத்யாயம்—22

## வாங்குவதும் விற்பதும்— (பு'யூஃ')

1. "ஆடவருக்கு அவர்கள் சம்பாதிப்பதினின்று உரிமையிருக்கிறது; பெண்டிருக்கும் அவர்கள் சம்பாதிப்பதினின்று உரிமை யிருக்கிறது" (:குர். 4:32).

2. "உங்களுக்குள்ளே பரஸ்பரச் சம்மதத்தைக் கொண்டுள்ள வர்த்தக முறையாலன்றி, (வேறு) பொய்யான முறையைக்கொண்டு நீங்கள் உங்கள் பொருள்களை உங்களுக்குள்ளே புசித்துவிடாதீர்கள்" (4:29).

3. "எவர்களை வியாபாரமும், விற்றலும் வாங்கலும் அல்லா(ஹ்)வின் தியானத்தை விட்டு அப்புறம் விலக்கவில்லையோ, அப்படிப்பட்ட ஆடவர்கள்" (24:37).

4. "ஆயின், (அத்)தொழுகை முடிவடைந்த பொழுது, அப்பால் நீங்கள் பூமியிலே பரந்துசென்று, அல்லா(ஹ்)வின் அனுக்ரஹத்தைத் தேடவுங் கடவீர்கள்" (62:10).

5. "நீங்கள் அளக்குங்கால் முழுஅளவா யளக்கக்கடவீர்கள்; மேலும், சரியான தராசைக் கொண்டே நிறுக்கக் கடவீர்கள்" (17:35).

வர்த்தகத்துக்கு அரபுபாஷையில் ப'ய்ஃ' என்று சொல்லப்படுகிறது; இச்சொல் வாங்குவதையும் விற்பதையும் குறித்துக் காட்டும்; ஒவ்வொரு மனிதனும் அவனவனுக்கு வேண்டிய ஜீவனோபாயத்தைச் சம்பாதித்தல் வேண்டும் (தலை. ஆயத் 1; 'ஹதீ'. 1). ஒவ்வொரு தொழிலும் நல்லதே; ஆகையால், காட்டுக்குச்சென்று விறகு வெட்டி வந்து விற்று ஜீவனஞ் செய்வது கூடக்கௌரவமான தொழிலேயாம்(பு'கா'. சுருக். 16:8).மானிடன் தனக்குப் பிரியமுள்ள எந்தக் கண்ணியத் தொழிலையும் இவ்வுலகிலே செய்துவரலாம்; ஆனாலும், அல்லா(ஹ்)வுக்கு அடியான் செலுத்தவேண்டிய கடமையே ஏனைய வெல்லாக் கடமையினும்

முதலிடம்— (அக்ரஸ்தானம்) பெற்றதாயிருந்துவருதல் வேண்டும் (தலை. ஆயத் 3; 'ஹதீ'. 2). ஜீவனோபாயத் தொழில்களெல்லா வற்றிலும் தலைசிறந்து விளங்குவது வர்த்தகத் தொழிலேயாம்; எனவே, யோக்கியனாகிய வர்த்தகன் அல்லா(ஹ்)வின் நல்லடியார்க ளுள்ளே சேர்ந்தவனா யிருக்கிறான் (தலை. ஆயத் 2; 'ஹதீ'. 3) சரக்கு விற்பவன் அளப்பதிலும் நிறுப்பதிலும் நியாயமாகவே நடந்துகொள்ளக் கடவன் (தலை. ஆயத் 5); பற்றுவரவுக்காரர்கள் பால் அவன் தாராள மனப்பான்மையுடனே நடந்து கொள்ளுதல் வேண்டும் ('ஹதீ'. 4); சௌகரியமான நிலைமையிலிருப்பவர்பாலும் தவணை கொடுத்தே வாங்கவேண்டும்; மிக்க நெருக்கடியான நிலைமையி லிருப்பவர்களை அடியுடன் மன்னித்தும் விடவேண்டும் ('ஹதீ'. 5). விற்கும் பண்டத்தில் ஏதேனும் 'சோடை'யிருந்தால், அதனை வெளிப்படையாய்ச் சொல்லிக்காட்டி விற்கவேண்டும் ('ஹதீ'. 6). இஸ்லாத்துக்கு முன்னே இருவித விற்பனைகள்— முனாப''தா, முலாமஸா என்பன— இருந்து வந்தன; அவ்விரண்டிலும் வாங்குகிறவனுக்கு அதுபொழுது அச்சரக்கைப்பரீக்ஷித்துப்பார்க்க இடங்கொடுக்கப் படுவதில்லை. இவைகள் சட்ட விரோதமானவை யெனத் தடுக்கப்பட்டு விட்டன ('ஹதீ'. 7). பண்டங்களை விற்கும் பொழுது சத்தியம் செய்வது தடுக்கப்பட்டுள்ளது ('ஹதீ'. 8). ஆகார தான்யங்களை விற்பதற்குப் பிரத்தியேக விதிகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன; என்னெனின், ஏழையாயினும் பணக் காரனாயினும், ஆகாரதான்யம் அனைவர்க்கும் அத்தியாவசியப் பொருளா யிருந்து வருதலினால் என்க. அத்தகைய தான்யங்கள் சந்தைக்குக் கொண்டுவந்து விற்கப்படல்வேண்டும்; ஏனென்றால், அங்கே அவற்றை, நடுவில் நிற்கும் தரகர்கொள்ளைலாபம் அடிக்க இடமில்லா விதத்திலே பொதுஜனங்கள் பெறத்தக்க முறையிலே அந்தத் தான்யங்கள் கிடைக்கவேண்டும் என்பதேதான் கருத் தென்க ('ஹதீ'. 9) இப்படிப்பட்ட ஆகாரதான்யத்திலே "சட்டா" (speculation) வியாபாரம் கூடாதெனத் தடுக்கப்பட் டுள்ளது; என்னெனின், தான்யங்கள் கைக்குக் கிட்டியபின்னரே விற்பனை செய்தல்வேண்டும்; அதற்கு முன்னே உத்தேசமாய் விலைபேசுவது கூடாது ('ஹதீ'. 10). வேண்டுமென்றே விலையை ஏற்றிவைக்க

நாடி, தான்யங்களைச் சேகரித்துக் "கட்டுகிடை" கட்டிவைப்பதும் கூடாதகாரியமேயாம் ('ஹதீ'. 11). நஜ்ஷ்ம்—அஃதாவது, வேறொரு மூன்றாவது மனிதனைத் தூண்டிவிட்டு விலையை ஏற்றிவிடச் செய்து, அதனைக் கொண்டு வாங்குகிறவனை ஏமாற்றுவதும்—தடுக்கப்பட்டுள்ளது ('ஹதீ'. 12); ஆனால், பகிரங்க ஏலத்தில், அல்லது விற்பனையில் அதிகமான தொகை கொடுப்பவருக்கே ஒரு சரக்கை விற்பது அனுமதிக்கப்பட் டுள்ளது ('ஹதீ'. 13). அவ்வாறே, பால்கறக்கும் பிராணிகளின் கிரயத்தை உயர்த்தி விடுவான்வேண்டி, விற்பனைக்கு முன்னே பாலைக் கறக்காமல் சுரக்கவிட்டு வைப்பதும் தடைசெய்யப்பட்டுள்ளது ('ஹதீ'. 14). எடை அல்லது அளவு, சரக்கு ஒப்புவிக்கப்படும் காலம் ஆகியவை நிச்சயமாய்த் தீர்த்துக்கொள்ளப் படும்பொழுதுதான் அச்சாரம்—(முன்பணம், அல்லது "அட்வான்ஸ்") கொடுப்பது கூடும் ('ஹதீ'. 15). வேறு ஸ்தாவர சொத்தொன்றை வாங்கும் நோக்கமிருந்தாலன்றி, ஒருவன் தன்பாலுள்ள பழைய ஸ்தாவரசொத்தை விற்பது கூடாது ('ஹதீ'. 16). விக்கிரகங்கள், விலக்கப்பட்ட ஆகாரங்கள்— மதுவஸ்துக்கள், பன்றிகள், தானே செத்த பிராணிகள் போன்றவை— ஆகியவைகளைக் கொண்டு வியாபாரம் செய்வதும் விலக்கப்பட்டிருக்கிறது ('ஹதீ'. 17). ஆயின், தாமே மரித்த பிராணிகளேயாயினும், அவற்றின் தோல்கள் எறியப்பட்டுப்போய்விடக் கூடாவென்றும், அவற்றிலிருந்து பிரயோஜனம் பெறலா மென்றும் வெளிப்படையான உத்தரவு கிடைத்திருப்பதால் ('ஹதீ'. 18) அத்தோல்களைக் கொண்டு வர்த்தகம் செய்வது தடுக்கப்பட்டில்லை; மேலும், இதே மாதிரியில், செத்த பிராணிகளின், அல்லது விலக்கப்பட்ட பிராணிகளின் ஏனைப் பண்டங்களையும்— எலும்பு, கொழுப்பு, சவ்வு, ரோமம், கொம்பு போன்றவைகளை— விக்கிரயம் செய்வதும் தடுக்கப்பட் டில்லை யெனக் கொள்ளப்படலாம்.

•

1. மி:க்த'ாம் கூறி யுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள்:—

"எவ னொருவனும், தனது கரங்கொண்டே

செய்யப்படும் வேலையினின்று புசிப்பதைக் காட்டி னும் மேலான ஆகாரத்தைப் புசிப்பதில்லை."[1]— (பு'க'ா. 34 : 15)

2. :க(த்)தாத'ா கூறினர்: ஜனங்கள் (சரக் குக்களை) வாங்குவதும் விற்பதும், வியாபாரம் செய்வதும் வழக்கமாக வைத்துக்கொண் டிருந் தார்கள்; ஆனால், அல்லா(ஹ்)வினால் விதிக்கப்பட் டுள்ள கடமைகளினின்று ஒரு கடமையைச் செய்ய வேண்டிய நேரம் வந்துவிடுங்கால், அவர்களை வியா பாரமும், விற்றலும் வாங்கலும் அல்லா(ஹ்)வின் தியானத்தைவிட்டு அப்புறம் விலக்கி விடுவதில்லை; ஆகவே, அன்னவர்கள் அல்லா(ஹ்)வுக்குத் தாங்கள் செலுத்தவேண்டிய கடமையையே (முதலில்) செய்து வந்தார்கள்.[2]— (பு'க'ா. 34 : 8)

---

1. இஸ்லாத்தில் எப்படிப்பட்ட கைத்தொழிலும் இழி வென்று கருதப்படுவது கிடையாது; அந்த அந்தத் தொழிலுக்கும் அஃததற்குரிய கௌரவமுண்டு. இமாம் பு'க'ாரீ தாங்கள் வரைந் துள்ள அத்யாயங்களின் தலைப்புக்களில் அநேகவிதக் கைத் தொழில்களையெல்லாம் குறிப்பிட்டிருக்கிறார்கள்: உதாரணமாக, இறைச்சி விற்பவரும் :கஸ்ஸாப்', வேலைசெய்பவரும் (பு'க'ா. 34:21), செம்பொற்கொல்லரும் (பு'க'ா. 34 : 28), கரும்பொற் கொல்லரும் (பு'க'ா. 34 : 29), தையற்காரரும் (பு'க'ா. 34 : 30), நெய்தற்காரரும் (பு'க'ா. 34 : 31), தச்சுவேலைக்காரரும் (பு'க'ா. 34 : 32) ஆதிய கைவேலைக்காரர்க ளெல்லாம் நபிகள் பெருமானால் கண்ணியத் துடனேயே கருதப்பட்டு வந்துளார்கள்; இவர்க ளெல்லாரும் ஏனை முஸ்லிம்களுடன் கூடச் சரிசமமான அந்தஸ்திலேயே வைத்து நடாத்தப்பட்டு வந்திருக்கிறார்கள்.

2. எனவே, அல்லா(ஹ்)வின்பால் செலுத்த வேண்டிய கடமையே, அவரவரும் தம்மாட்டும் ஏனையோர்மாட்டும் காட்ட

3. அபூ' ஸஈ'த்' கூறியுள்ளார் : நபிகள் திலகம் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"சத்தியசந்தனான கண்ணியவர்த்தகன் நபிமார்களுடனும், சத்தியசந்தர்களுடனும், ஷுஹதா'க்களுடனுமே யிருக்கிறான்."[3]— ('திர்மி. 12 : 4)

4. ஜாபி'ர் கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

" தான் வாங்கும் பொழுதும், தான் விற்கும் பொழுதும், (தனக்கு வரவேண்டிய கடனைக்) கேட்கும் பொழுதும் தாராள மனப்பான்மையுடனே நடந்துகொள்ளும் மனிதன்மீது அல்லா(ஹ்) தன் கருணையைச் சொரியக்கடவன்."— (பு'கா'. 34 : 16)

5. 'ஹுதய்'பா கூறினார்: நபிகள் பெருமானார் (சல்அ'ம்) நவின்றருளினார்கள் :—

" உங்களுக்கு முன்னே யிருந்தவர்களிலிருந்து ஒரு மனிதனது ஆத்மாவை அமரர்கள் சந்தித்து, 'நீ ஏதும் நன்மை செய்திருக்கிறாயா ?' என்று கேட்டார்கள் ; (இதற்கவன்) சொன்னான் : 'சௌகரியமான நிலைமையிலிருப்பவருக்கு நான்

---

வேண்டிய கடமைகளினின்றெல்லாம் மிகமிக மேலாயதா யிருந்து வருகிற தென்று இங்கு நாம் செவ்விதாய்த் தெரிந்து கொள்கிறோம்.

3. சத்தியசந்தனான கண்ணியவர்த்தகன் ஜனசமுதாயத்தின் நன்மைக்கென்றே உழைத்துவருகிறான் ; எனவேதான், பொது ஜன நன்மைக்கென்றே சதா உழைத்துவரும் உத்தமர்களின் கோஷ்டியில் வைத்து இவனும் எண்ணப்படுகிறான். ஷுஹதா'— (ஷஹீதி'ன்பன்மை) இஸ்லாத்தின் முன்னேற்றத்துக்காக இரத்த சாக்ஷிமரணத்தால் பிராணத்தியாகம் புரிகிறவர்களாவர்.

தவணையளிப்பது வழக்கம்; மேலும், மிக்க நெருக்கடியான நிலைமையி லிருப்பவருக்கு நான் மன்னிப்பளிப்பது வழக்கம்.’ ஆகையால், அவர்கள் அவனை மன்னித்துவிட்டார்கள்.”— (பு’க’ா. 34 : 17)

6. ‘ஹ(க்)கீம் இப்’னு ‘ஹி‘ஜாம் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்ஞர்கள் :—

“ வாங்குகிறவனும் விற்கிறவனும், ஒருவரை விட்டொருவர் பிரிந்துசெல்லாத முன்வரை (தங்கள் ஒப்பந்தத்தை முறித்துக் கொள்ளச்) சுயேச்சை பெற்றிருக்கிறார்கள்; அதுபொழுது அவர்க ளிருவரும் மெய்யையே பேசி, (உள்ளதை ஒளிக்காது) வெளிப்படையாய் நடந்து கொள்வார்க ளாயின்,[4] அவர்களுடைய விற்றலும் வாங்கலும் அபிவிருத்தியடையும். ஆயின், அவர்கள் (உள்ளதை) ஒளித்துப் பொய்களும் புகல்வார்களாயின், அன்னவர்களின் விற்றலுக்கும் வாங்கலுக்கு முரிய அபிவிருத்தி அழிக்கப்பட்டுப் போய்விடும்.”— (பு’க’ா. 34 : 19)

7. அபூ’ ஸஈ’த்’ கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) முனப’‘தாவைத் தடுத்து விட்டார்கள்; மேலுமிது, விற்பனையில் ஒரு மனிதனுடைய ஆடையை (அவன்பா லிருப்பதை) மற்றொருவன்பால், அவன் அதனைப் பரீக்ஷிப்பதற்கு, அல்லது அதனைப் பார்ப்பதற்குமுன்னமே எறிவதா

4. விற்கும் சரக்கில் ஏதேனும் ‘சோடை’யிருந்தால், அதை வெளியிட்டுச் சொல்லி விற்கவேண்டும். பண்டமாற்று யிருந்தால், இருதிறத்தாரும் தத்தம் சரக்கிலுள்ள குற்றங்குறைகளை வெளியிட்டுச் சொல்லிவிடல் வேண்டும்.

யிருக்கிறது. இன்னமவர்கள் முலாமஸாவையும் தடுத்துவிட்டார்கள்; மேலும், முலாமஸா என்பது, ஓராடையை (க் கண்ணுற்) பாராமலே அதனை(க் கையால்) தொட்டுப் பார்ப்பதா யிருக்கிறது.[5]—(பு'க'ா. 34 : 62)

8. அபூ' ஹுரய்ரா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) (இவ்வாறு) சொன்னதை யான் கேட்டேன் :—

"சத்தியம் செய்வது சரக்கை விற்க உதவி புரிகின்றது; ஆயின், அதிலுள்ள அபிவிருத்தியை அஃது அழித்துப் போடுகிறது."— (பு'க'ா. 34 : 26)

9. இப்'னு உ'மர் கூறியுள்ளார்: நபிகள் திலகத்தின் (சல்அ'ம்) காலத்திலே அவர்கள்—(வர்த்தகர்கள்) ஒட்டகக்காரர்களிடத்திருந்து ஆகார தான்யங்களை வாங்குவது வழக்கம்; இன்னம், அப்பெருமானர் அவர்கள்பால் ஒரு மனிதனை யனுப்புவார்கள்; அவன் (அன்னவர்கள்பால் சென்று) ஆகார தான்யங்கள் விற்பனை செய்யப்படும் இடத்திற்கு அது கொண்டு செல்லப்படும்வரை, அவர்கள் வாங்கின இடத்திலேயே அதனை விற்பது கூடா

5. இஸ்லாத்திற்கு முற்பட்ட காலத்தில் முனப'தாவும் (நப்தென்பது "வீசியெறிதல்" என்று பொருள்படும்) முலாமஸாவும்—(லம்ஸ் என்பது "தொடுதல்" என்று பொருள்படும்) இருவிதமான ஏமாற்று வியாபாரங்களா யிருந்துவந்தன; அவ்விரண்டிலும் வாங்குகிறவன் அந்தச் சரக்கைப் பார்த்துப் பரீக்ஷிப்பதற்கு அனுமதியளிக்கப்படுவ தில்லை. இதனைக் கண்கட்டு வியாபாரம் என்னலாம்.

தென்று அன்னவர்களைத் தடைசெய்து விடுவான்.[6] —(பு'க'ா. 34 : 49).

10. இப்'னு உ'மர் கூறினர் : நபிகள்நாயகம் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

" எவனொருவன் ஆகார தான்யங்களை வாங்குகிறானோ, அவன் அவற்றினைத் தன் கைவயம் பெற்றுக் கொள்ளுகிற மட்டில் (வேறு மனிதர்களுக்கு) விற்பது கூடாது."[7] — (பு'க'ா. 34 : 54)

11. மஃ'மர் கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

" எவனொருவன் ஆகார தான்யங்களை, அவை அருந்தலாகவும் கிராக்கியாகவும் போக வேண்டு

---

6. வெளியிலிருந்துவரும் தான்யங்களை வர்த்தகர்கள் வாங்கித் தங்கள் கடைகளுக்குக் கொண்டுபோய் ஜனங்களுக்கு விற்ருல், அவ்வர்த்தகர்களின் லாபத்தோடுமட்டும் போகும் ; இவ்வாறின்றி, ஒட்டகக் காரரிடம் வாங்கும் வர்த்தகர் அவ் விடத்திலேயே வேறொருவருக்கு மேல்லாபத்துக்கு விற்பதாயிருப்பின், இப்படி இரண்டு மூன்றுகை ஏறியேறி மாறினல், இடையிட்ட தரகர்களின் அல்லது வேறு மனிதர்களின் கொள்ளை லாபத்தால் பொது மக்களே கூடுதலான கிரயம் கொடுத்து இறுதியில் நஷ்டமடைய வேண்டியவர்களா யிருக்கிறார்கள்.

7. சரக்குக் கைக்குக் கிட்டு முன்னே " சட்டா " வியாபாரம் செய்வதும், சரக்கு எங்கோ இருக்கக் கணக்கிலே வரவு செலவு செய்து ஊகமாய் விற்பதும் (speculation) பொதுஜனங்களை அதிகம் பாதிக்கக்கூடியதா யிருத்தலினல், அம் மாதிரியான உத்தேச வியாபாரம்— (சட்டா) கூடாதெனத் தடுக்கப்பட்டிருக்கிறது.

மென்று கட்டுகிடை கட்டுகிறானே, அப்படிப் பட்டவன் ஒரு பாபியே."[8] — (முஸ்—மிஷ். 12 : 8)

12. அபூ' ஹுரய்ரா கூறினர் : பட்டணவாசி காட்டுப்புறத்திலிருந்து வரும்ஒருவனுக்கு (இவ்வாறு) விற்கக்கூடா தென்று அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) தடைசெய்து, மேலும் (சொன்னார்கள்) :—

"நஜ்ஷ்[9] வேலையி லிறங்க முற்படாதீர்கள் ; இன்னம், ஒரு மனிதன் தன்னுடைய சகோதரன் வியாபாரத்துக்கு விரோதமாய்த் தானந்த வியா பாரத்தை(ப் போட்டிபோட்டு)க் கெடுக்காதிருக்கக் கடவன்."— (பு'க'ா. 34 : 58)

---

8. இதனை இ'ஹ்திகார் என்று கூறுவர். இது, விலையேறிய பின்னல் அதிக விலைக்கு விற்கலாமென்னும் அபிலாஷை நோக்கத் துடனே ஆகார தான்யங்களைக் கட்டிவைத்தலாகும். விலை யேற்றத்தை எதிர்பார்த்துக் களஞ்சியத்தில் கொட்டிவைத்தல், சேர்கட்டிச் சேமித்துவைத்தல் ஆதிய காரியங்களெல்லாம் பாப கிருத்தியங்களென்றே இந்த 'ஹதீ':து கூறியிருக்கிறது ; இப்படிப் பட்ட உலோபி ஒரு பாபியென்றே நபிபெருமானார் நவின்றருளி யுள்ளார்கள். கவனிப்பீர்களாக.

9. நஜ்ஷ்—(நஜஷ என்பது, "அவன் வேட்டையைக் கிளப்பி விட்டான், அல்லது தொடர்ந்து சென்றான்," என்று பொருள் படும்) என்பது, "தான் வாங்கும் நோக்கமின்றியே, வேறொருவன் தனது ஏறிய விலையைக் கேட்டு அவ்வாறே ஏறியவிலை கொடுக்க முற்படுவானென்னும் கெட்ட எண்ணத்துடனே ஒரு வியாபாரச் சரக்கின் விலையை அனுவசியமாக ஏற்றிவிடுதல், அல்லது, ஏலத்தில் இனி யொருவனை வலையுள்ளே சிக்கவைக்க வேண்டுமென்னும் தீய எண்ணத்துடனே, தனக்கு அந்தச் சாமான் வேண்டாதிருந்தும், போட்டிபோட்டு விலையை ஏற்றிவிடுதல், அல்லது, அயலா னொருவனை ஏமாற்றும் பொருட்டு ஒரு சரக்கின், அல்லது சாமானின் தன்மையை மிகைபடுத்திச் சிலாகித்துக் கூறுதல்."

13. அனஸ் கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) ஓர் உண்கலமும் ஒட்டகப் போர்வையும் வாங்கினார்கள்; மேலும், சொன்னார்கள் :—

"இந்த உண்கலத்தையும் ஒட்டகப் போர்வையையும் எவர் வாங்குவார்?"

'நான் அவற்றினை ஒரு தி'ர்ஹத்துக்கு எடுத்துக் கொள்கிறேன்,' என்று ஒரு மனிதன் கூறினான்.

(அப்பொழுது) நபிகள் நாயகம் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"ஒரு தி'ர்ஹத்துக்கு மேலே எவர் கொடுப்பார்? ஒரு தி'ர்ஹத்துக்குமேலே எவர் கொடுப்பார்?"

(அதுபொழுது) ஒரு மனிதன் அவர்களிடம் இரண்டு தி'ர்ஹம் கொடுத்து, அவர்கள்பாலிருந்து அவற்றினை வாங்கிக் கொண்டான்.[10]— ('திர்மி. 12 : 10)

---

என்பதாயிருக்கிறது. எனவே, வர்த்தகத்தில் முழு யோக்கியப் பொறுப்புடனே சுத்த கண்ணியமான முறையிலேயே ஒழுகிக் கொள்ள வேண்டுவது அத்தியாவசியமா யிருக்கிறது என்க. இந்த 'ஹதீ':தின் முற்பகுதி, "கம்மிஷன் ஏஜெண்ட்"டின் தேவையை இல்லாமலாக்கிவிட நாட்டங்கொண்டு நிற்கிறது; இந்தப் "பேர்வழி" தன்னுடைய சாகசக்கியங்களால் கிராமவாசிக்கு, அல்லது வஞ்சனை சூதற்ற குடியானவனுக்கு ஒரு சாபக்கேடாகவே வந்து முளைத்துவிடுகிறான்; எனவே, இந்த 'ஹதீ':து அந்தக் 'கவடு சூதற்ற' ஏழைக் குடியானவனைக் காப்பாற்றவே தோன்றியிருக்கிறது.

10. இதனால் பகிரங்க ஏலம் அனுமதிக்கப்பட்டிருப்பதைக் கவனிக்க.

14. அபூʼ ஹுரய்ரா நபிகள் திலகத்தின் (சல்அ'ம்) ஆதாரத்தின்மீது கூறியுள்ளார்: (அவர்கள் சொன்னார்கள்) :—

"நீங்கள் ஒட்டகங்களையும் வெள்ளாடுகளையும் (விற்பனைக்காகப்) பால் கறக்காமல் விட்டு வைக்காதீர்கள் ;[11](அப்படிக் கறக்காதிருக்கு நிலையிலே) எவனொருவன் அவற்றினை வாங்குகிறானோ, அவன், அவற்றினைப் பால் கறந்து பார்க்குங்கால், இரண்டு காரியங்களில் ஒன்றைச் செய்யலாம்: அவனுக்குப் பிடித்திருந்தால், அவற்றினை அவன் வைத்துக் கொள்ளலாம் ; இன்னமவனுக்கு (வேறுவிதம்) பிரியமிருந்தால், அவன் அவற்றினை ஒரு சாஆ' பேரீச்சங்கனியுடனே (சொந்தக்காரனிடம்) திருப்பிக் கொடுத்துவிடலாம்."— (பு'க'ா. 34 : 64)

15. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினார்: நபிகள் திலகம் (சல்அ'ம்) மதீனாவுக்கு வந்தார்கள் ; மேலும் (கண்டார்கள் :) அ(ங்குள்ள) வர்கள் இரண்டு வருடங்களுக்கும் மூன்று வருடங்களுக்கும் முன்னமே பேரீச்சங் கனிகளுக்காக முனபணம் அச்சாரம் கொடுத்துக்கொண் டிருந்தார்கள் ;[12] ஆகவே, அப்பெருமானார் சொன்னார்கள் :—

---

11. இவ்வாறு செய்வதனால், வாங்குகிறவன் அப்பொழுது பாலைக் கறந்துபார்த்து, அதிகப்பால் பீச்சியிருப்பது கண்டு ஏறிய விலை கொடுக்கச் சம்மதிக்கிறான் ; இஃதோர் ஏமாற்றுவித்தையே. எனவே, இது கண்டிக்கத்தக்கதே. இதற்குரிய பரிகாரம் இந்த 'ஹதீ':தில் கூறப்படாது போகவில்லை.

12. இஃதொருவித உத்தேசச் 'சட்டா' வியாபாரமாயிருக்கிறது ; இது நேர்மையான வர்த்தக முறையன்று ; என்னெனின்,

“ஒரு சரக்குக்காக முன்பணம் கொடுக்கிறவன், ஒரு குறிப்பிட்ட அளவைக்காகவும், ஒரு குறிப்பிட்ட எடைக்காகவும், ஒரு குறிப்பிட்ட காலத்தில் கொடுபட வேண்டுமென்பதற் காகவும் (திட்டமேற்படுத்திக்) கொடுக்கவேண்டும்.”— (பு’க’ா. 35 : 2)

16. ஸஈ’ தி’ப்’னு ‘ஹுரய்:த் கூறினார் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னார்கள் :—

“எவனொருவன் வருவாயளிக்கும் வீடொன்றை, அல்லது நிலத்தை விற்கிறானோ, அப்பா லவன் அவ்விக்கிரயத் தொகையை அதைப்போன்ற ஒரு சொத்தின்மீது போடாது போய்விடுகிறானோ, அவனுக்கு அதிலே அபிவிருத்திக்கு மார்க்க மில்லை.”[13]— (மஸ். IV, 307)

---

இதில் வாங்கப்படும் சரக்கு ஆ‘ஜிரில் இல்லை; மேலும், விலையும் உத்தேச விலையே. “அடுத்த அறுவடையில் களத்துமேட்டில் இத்தனை கலநெல், இன்ன விலைக்கு அளப்ப” தென்று முற்கூட்டியே உத்தேசம் பேசி, அச்சாரம் கொடுத்துக்கொள்வதும் ஒரு வகைச் ‘சட்டா’ வேலையே யாகும்.

13. இந்த ‘ஹதீ’:திலுள்ள நல்லுபதேசத்தைக் கருதிப் பாராமல் முஸ்லிம்கள் இந்நாட்டில் நடந்துவரத் தலைப்பட்டதனாலேயே இந்தியாவில் பெரும்பான்மையான முஸ்லிம்களின் கையைவிட்டு ஸ்தாவர சொத்தெல்லாம் மிக விரைவிலே அன்னியராதிக்கத்திலே சென்று சேர்ந்துகொண் டிருக்கின்றன. உண்மை முஸ்லிமா யிருப்பவர் தமது சம்பாத்தியத்தினின்றே, அல்லது சேமிப்பினின்றே தமக்கு நேரிடும் எதிர்பார்க்கப்பட்ட, அல்லது எதிர்பார்க்கப்படாத செலவினங்களை யெல்லாம் சமாளித்துக் கொள்ள வேண்டியவரா யிருக்கின்றார். அவர் தம்பாலுள்ள

17. ஜாபி'ர் கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத் தூதர் (சல்அ'ம்) (மக்கமா நகர்) வெற்றி கொள்ளப்பட்ட ஆண்டிலே அவர்கள் மக்காவின் கண் இருந்து வந்தபொழுது (இவ்வாறு) சொன்னதை இவர் கேட்டார் :—

" அல்லா(ஹ்)வும் அவனுடைய தூதரும், சாராயமும், செத்தவை(யான பிராணி)களும், பன்றிகளும், விக்கிரகங்களும் ஆகியவற்றில் வியாபாரம் செய்யக் கூடாதெனத் தடுத்துவிட் டிருக்கிறார்கள்."[14]— (பு'க'ா. 34 : 112)

---

ஸ்தாவர சொத்தை விக்கிரயம் செய்வது கூடாதெனத் தடுக்கப் பட்டுள்ளார் ; அவ்வாறு ஒருகால் விற்க நேர்ந்தால், அவர் அத் தொகையை வீண்விரயம் செய்யாமல், அதேமாதிரியான வேறொரு ஸ்தாவரப் பொருளை வாங்கிவிடக் கட்டுப்பட்டுள்ளார்.

14. தீ'னுலிஸ்லாம் விக்கிரகாராதனையைக் கண்டித்தொழிக்கின்றமையால், இஃது அவ்விக்கிரகங்களைக் கொண்டு வியாபாரம் செய்வதையும் கண்டித்துக்கொண்டிருக்கிறது ; இன்னம், ஆகார பதார்த்தங்களா யில்லாது விலக்கப்பட்டுள்ள வஸ்துக்களைக் குறித்துக் கூறப்புகுங்கால், அவை முஸ்லிம்களுக்கு எவ்வித போஜன சம்பந்தமும் இல்லாது போய்விட்டிருக்கின்றன வென்றே கொள்ளப்படல் வேண்டும். எனவே, இத்தகைய தடுக்கப்பட்டுள்ள பண்டங்களை முஸ்லிமாயிருப்பவர் ஏனையவர்க்கு வாங்கிக் கொடுப்பதும், 'ஸப்ளை' செய்வதும் கூடாத காரியங்களேயாம். இதுவரை இஸ்லாத்துக்கு இந்த 'ஹதீ'தின் விஷயம் முற்றிலும் பொருத்த முடையதாகவே யிருந்து வருவது கண்கூடு. முஸ்லிமொருவர் எத்தகைய தொழிலைச் செய்துவந்த போதினும், அஃது அவருக்கொரு ஜீவனோபாயமா யிருந்துவருவதோடு, ஜனசமூகத்துக்கும் ஒருபகாரமான சேவையாகவே யிருந்துவருதல் வேண்டும். ஆனால், நபிபெருமா னுடைய இந்த வசனங்களைக் கவனிப்பீர்களாக:

18. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினர் : நபிக ளுயகர் (சல்அ'ம்) மய்மூனவின் பாங்கிக்கு 'ஜகாத்தி னின்று கொடுக்கப்பட்டிருந்த வெள்ளாடொன்று

---

இந்த 'ஹதீ':தின் பிற்பகுதியிலே, "ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! இறந்த பிராணியின் கொழுப்பைக் குறித்து எங்களுக்குக் கூறக் கடவீர்கள் ; ஏனென்ருல், அதைக்கொண்டு 'பாதபூட்ஸ்'கள் (பளபளப்பாய்த்) தேய்க்கப்படுகின்றன ; மேலும், தோல்கள் மிருதுவாகப் பதமாக்கப்படுகின்றன ; இன்னம், ஜனங்கள் அதைக் கொண்டு தங்கள் விளக்குக்களைக் கொளுத்துகிருர்கள் என்று சொல்லப்பட்டது. இதற்கவர்கள், 'கூடாது ; அது தடுக்கப்பட் டிருக்கிறது,' என்று கூறிவிட்டார்கள்" (புகா. 34 : 112) என்று காணப்படுகிறது.

இந்த 'ஹதீ':தின் இப் பிற்பகுதி மெய்யானதே யென்று ஒத்துக் கொள்ளப்படக் கூடுமாயின், செத்த பிராணியின் கொழுப்பை முஸ்லிம்கள் தங்கள் விளக்கைக் கொளுத்தவும் தோல்களைப் பதமாக்கவும் உண்மையிலே உபயோகிக்கக் கூடா தென்றுதான் அவர்களைத்தடுத்து நிறுத்திவிட்டார்களா வென்னும் ஐயவினு எழத் துவக்குகிறது. அவ்வாருயின், செத்த பிராணி களைப் புசிக்கக் கூடாது என்பதுடனே, அவற்றின் சம்பந்தமா யுள்ள வேறெந்த வஸ்துவுங்கூட முஸ்லிம்களால் வேறுவிதத்திலே உபயோகப்படுத்தப் படுவது கூடாது என்றும் ஏற்படுவதாயிருக் கிறது. இவ்வாறு :குர்ஆன்ஷரீ'பில் ஒன்றும் கூறப்பட்டில்லை ; அத்திருமறையில் சொல்லப்பட்டிருப்பதெல்லாம், அப்படிப்பட்ட மாம்சம் புசிக்கப்படக் கூடாதென்பதாகவே யிருந்து வருகிறது. இன்னம், அடுத்து வரும் 'ஹதீ':து, அப்படிப்பட்ட வஸ்துக்களைக் கொண்டு பிரயோஜனமடைவது சட்ட முறைப்படி செல்லத் தக்கதாயிருப்பதோடு அத்தியாவசியமா யிருக்கிறதென்றும் வற் புறுத்திக் காண்பிக்கின்றது ('ஹதீ'. 18). செத்துப்போய்விட்ட ஆடொன்று தோலுடனே கிடந்ததை நபிபெருமானுர் கண்டார் கள் ; அப்பொழுது, "அதன் தோலைக்கொண்டு நீங்களேன் பிர யோஜன மடையவில்லை?" என்று வினவலுற்ருர்கள். செத்த

*மரித்துக் கிடந்ததைக் கண்டார்கள்; "அதன் தோலைக்கொண்டு நீங்களேன் பிரயோஜனமடைய வில்லை?" என்று நபிபெருமானுர் (சல்அ'ம்) வினவி*

---

ஆட்டின் தோலைக்கொண்டு பயன் பெறலாம் என்றிருக்கும் பொழுது, வேறு மரித்த பிராணிகளின் கொம்பு குளம்பு கொழுப்பு எலும்பு உரோமம் ஆகியவற்ருலும்— இவையெல்லாம் புசிக்கப்படுவது வழக்கமில்லை— ஏன் பிரயோஜன மடைவது கூடாது? எனவே; விலக்கப்பட்ட பிராணிகளின் மாம்சம் மட்டுமே விலக்கப்பட் டிருக்கிறதேயன்றி, அவற்றின் சம்பந்தமா யுள்ள ஏனைய வஸ்துக்களெல்லாமுங்கூட விலக்கப்பட்டிருக் கின்றனவென்று நபிகள் திலகம் (சல்) கூறியிருக்கமாட்டார்கள்; எனவே, இந்த 'ஹதீ':தின் இறுதிப் பகுதியில் ஐயத்திற்கு இட மில்லா திருந்துவரவில்லை.

ஷா'பிஈ' இமாமும் ஏனைச் சிலரும் இந்த இறுதிப் பகுதிக்கு ஒரு குயுக்தியான வியாக்கியானம் கூறியுள்ளார்கள்; என் னெனின், கொழுப்புக்களை வைத்து, "கொழுப்பு வியாபாரம்" செய்வதுதான் தடுக்கப்பட்டிருக்கிறதல்லது, கொழுப்பை உபயோ கிப்பதை இந்த 'ஹதீ':து தடைசெய்ய வில்லையாம். இவ்வாறு யுக்தி வாதம் செய்வது புத்திக்குப் பொருத்தமா யில்லை. ஒரு வஸ்துவை ஒரு காரியத்துக்கு உபயோகிக்கலா மென்று கூறிய பின்னர், அஃது அவ்வாறே உபயோகிக்கப்பட்டு வருவதாயிருப் பின், அதில் வர்த்தகம் செய்யக் கூடாதென்பதில் அர்த்தமொன்று மில்லை. செத்த பிராணியின் மாம்சம் மறுக்கப்பட் டிருக்குங்கால், அதன் தோலைக்கொண்டு பிரயோஜனமடையச் சொன்னுர்கள் நம் நபிபெருமா னவர்கள். அப்படிப்பட்ட தோலை ஒருவன் விற்க வேண்டும்; இனியொருவன் வாங்க வேண்டும். இதுதானே வர்த்தகம் என்னப்படுவது? தோல் வியாபாரம் செய்யாமல் எவ்வாறு அதைக்கொண்டு பயனடைதல் கூடும்? இவற்ரு லெல்லாம் விளக்கமாவது யாது? இந்த 'ஹதீ':தின் இறுதிப் பகுதி குறித்து ஏதோ ஒருவிதத் "துறட்டு" இருந்தே வருவதுதா னுகும்.

னார்கள்; 'அது செத்துப்போய்விட்டது,' என்று அவர்கள் விடை பகர்ந்தார்கள்; (இதற்கு) அவர்கள் "அதைப் புசிப்பதுதானே தடுக்கப்பட்டிருக்கிறது," என்று கூறினார்கள்."[15] — (பு'க'ா. 24 : 61)



15. செத்த பிராணி சார்பாயுள்ள— புசிக்கத் தகாத, புசிக்கப்படாத— ஏனைச் சாமான்கள் மக்களின் உபயோகத்திற்காகப் பிரயோஜனப்படுத்தப் படலாமென்று நபிபெருமானுடைய திருவசனங்கள் மிக வெளிப்படையாய்க் கூறிக்கொண்டிருக்கின்றன. தோல் போன்ற வஸ்துக்கள் அவ்வாறு பயன்படுத்தப்படலாம் என்று சொல்லப்படுங்கால், அவற்றை விற்றும் வாங்கியும் வியாபாரம் செய்யலாமென்பதும் அருத்தாபத்தியால் பெறப்படாநின்றது.

# அத்யாயம்—23

## நிலச் சாகுபடி

### (அல் 'ஹர்:து வல் மு'ஜாரஆ')

1. "நாம், பயிர் பச்சை யில்லாத நிலத்தின்பால் தண்ணீரை யோட்டுகிறோம்; அப்பால் நாம் அதனைக்கொண்டு வேளாண்மைகளை வெளிப்படுத்துகிறோம்; அதினின்று அவர்களுடைய ஆடு மாடு ஒட்டகங்களும், அவர்களுங்கூடப் புசிக்கிறார்கள் என்பதை அன்னவர்கள் கருதிப்பார்க்க வில்லையா?" (:குர். 32 : 27).

2. "இன்னம், தோட்டங்களைப்—படரக் கூடியவைகளாகவும், படராதவைகளாகவும்— பேரீந்தின் மரங்களையும், வேளாண்மைகளையும், அவற்றின் கனிகளை(ப் பல்வேறுவித) விகற்பமுடையவைகளாகவும், ஒலிவுகளையும் மாதுளைகளையும் ஒற்றுமையுள்ளவைகளாகவும் வேற்றுமையுள்ளவைகளாகவும் உற்பத்தி செய்கிறவன் அவனேயாம்" (6 : 142).

3. "தனது முளையை வெளிப்படுத்தி, அப்பால் அதனை வலுப்படுத்தி, ஆகவே பயிர் செய்தவர்களை மகிழ்விக்குமாறு, ...விளையும் வேளாண்மையைப்போலே" (48 : 29).

'ஹர்:த் என்பது, "நிலத்தை உழுதல்" என்று பொருள் கொள்கிறது; மு'ஜாரஆ'— ('ஜரஅ' என்பது, "அவன் விதைவிதைத்தான்," என்று பொருள் கொள்ளும்) என்பது, "அதன் ம'ஹ்ஸூலில் ஒரு பங்குபெற நிலத்தில் விதைக்கவும், அதனை உழவும் ஏனை வேலை செய்வதற்காகவும் ஒரு மனிதனுடனே ஒப்பந்தம் செய்து கொள்வதைக்" குறித்துக் காட்டும். தரிசு நிலங்களை— அவற்றிற்குத் தண்ணீர் பாய்ச்சவேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் செய்து, வேளாண்மைக்குரிய உரத்தை யூட்டி, தோட்டக் கால்களாக மாற்றி, அவற்றிலே நல்ல நல்ல பயிர்களையெல்லாம் உற்பத்தி செய்ய வேண்டுமென்னும் அவசியங் குறித்துக் :குர்ஆன்

ஷரீ'ப் நமது கவனத்தை ஈர்க்கின்றது (தலை. ஆயாத் 1—3). 'ஹதீ':தும் ஏராண்மைத் தொழிலை ஒரு பெரும் புண்ணிய கைங்கரியமென்றேதான் கூறியிருக்கிறது ('ஹதீ'. 1) ஆயின், அதே மூச்சில் அது நமக்கோர் எச்சரிக்கையும் விடுக்காமலிருக்கவில்லை: வியவசாயத்தையே கவனித்துக்கொண்டும், தங்கள் அபிவிருத்திக்குரிய ஏனைப் பிரவர்த்திகளை யெல்லாம் அலக்ஷியம் செய்துகொண்டும் இருந்துவரும் ஜாதியினர் மாபெரும் மகத்துவம் வாய்ந்த பெருங் காரியங்களை யெல்லாம் செய்யச் சக்திபற்றுப் போய்விடுவர் ('ஹதீ'. 2) தரிசு நிலங்களைச் சாகுபடி செய்ய அதிக ஆக்கமளிக்கப்படுகிறது ('ஹதீ', 3). ம'ஹ்ஸூலிலிருந்து ஒரு பகுதியைக் குடியானவன் எடுத்துக்கொள்வதென்னும் நிபந்தனையின் மீது அன்னவன்பால் நிலத்தைப் பயிரிட வாரத்துக்கு விடலாம் ('ஹதீ'. 4, 5); அல்லது. பணத் தொகைக்காகவும் குத்தகைக்கு விடலாம் ('ஹதீ'. 6). இன்னம், சௌகரியம் வாய்ந்துள்ள நிலச்சுவான்தார்கள் தங்கள் ஏழைச் சகோதரர்களுக்கு மேல்வாரமில்லாமலே— (தங்களுக்கொன்றும் லாபமில்லாமலே) நிலங்களைப் பயிரிடக் கொடுப்பது சிலாக்கியமான காரியமென்றே சி'பாரிஷ் செய்யப்பட்டுள்ளது ('ஹதீ'. 7). பாய்காலருகில் நிலமுடைய மனிதன் தன்னுடைய நிலங்களுக்கு நீர்பாய்ச்சிக் கொள்ளலாம்; தனக்கு வேண்டியதற்கு மேற்பட்ட தண்ணீரைக் கீழேயுள்ள கழனிகளுக்கு விட்டுவிடக்கடவன் ('ஹதீ'. 8). கிணறு வெட்டுவது ஒரு பெரும் புண்ணிய காரியமென்று கருதப்பட்டு வருகிறது. ('ஹதீ'. 9). 'அக்கம்பக்கத்து' நிலத்துக்குடையவர்களின் உரிமைகள் ஒழுங்குடனே பாதுகாக்கப்படல் வேண்டும். ('ஹதீ'. 10).

1. அனஸ் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"ஒரு மரத்தை நடுவதாலோ, அல்லது நிலத்தைச் சாகுபடி செய்வதாலோ, பின்பு அதிலிருந்து (விளையும் பலனைப்) பறவைகளோ, மனிதனோ, அல்லது (வேறொரு) பிராணியோ, புசிக்(கும் வண்ணம் பேருதவி செய்)கிறதால் ஒரு முஸ்லிமுக்காவது

அ(ச் செய்கையான)து தர்மமானதா யில்லாத முறை யில் இல்லை."— (பு'க'ா. 41 : 1)

2. அபூ' உமாமாவைக் குறித்து (இவ்வாறு) கூறப்பட்டுள்ளது ; இவர் சொன்னர்: அவர்கள்— (நபிபெருமான்) ஓர் ஏர்க்கலப்பையையும் வேறுசில வியவசாயக் கருவிகளையும் கண்ட பொழுது, நபிகட்டிலகம் (சல்அ'ம்) (பின்வருமாறு) புகன்றதை யான் கேட்டேன் :—

"இது தன்னுடனே தாழ்வை—(அவமதிப்பை)க் கொண்டு வாராது, ஒரு ஜாதியாருடைய இல்லத்தி னுள்ளே நுழைவது கிடையாது."[1]— (பு'க'ா. 41 : 2)

3. ஆ'யிஷா பிராட்டியார் கூறி யுள்ளார்: நபிகள் நாயகம் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"எவ ரொருவருக்கும் சொந்தமா யில்லாத நிலத்தை எவ ஞெருவன் பயிரேற்றுகிருனே, அவ னுக்கே அதன் சார்பாயுள்ள உரிமை ஏற்பட்டு விடுகிறது."— (பு'க'ா. 41 : 15)

---

1. இந்த 'ஹதீ':துக்குரிய அத்யாயத்தின் தலைப்பிலே இமாம் பு'கா'ரீ, "வியவசாயத் தளவாடங்களிலேயே மூழ்கிப் போய்க் கிடப்பதனுல், அல்லது அதற்கென்று ஏற்பட்டுள்ள எல்லைக் கப்பாலே சென்று விடுவதனுல் விளையக்கூடிய தீய பயனைக் குறித்துள்ள எச்சரிக்கை" என்று வரைந்து வைத்துளார்; எனவே, இந்த 'ஹதீ':தால் கொள்ளப்படும் கருத்து யாதெனின், ஒரு ஜாதியினர் தங்களுடைய அபிவிருத்திக்குரிய ஏனைத் துறைகளையெல்லாம் கைவிட்டு, வியவசாயத் தொழில் ஒன்றை மட்டுமே கவனித்து வருவார்களாயின், அந்த ஜாதியினர் கௌர வத்துக்குரிய கண்ணிய அந்தஸ்தைப் பெற்றுக்கொள்ள மாட் டார்கள் என்பதே யாகும். வியாபாரத்தைப்போல் வேளாண்மை அத்துணை இலாபந் தருவது கிடையாதன்றே!

4. அபூ’ ஜஃ’’பர் கூறினர்: (ம‘ஹ்ரஸ்லி லிருந்து) மூன்றிலொன்றையும் நான்கிலொன்றை யும் முஹாஜிரீன்கள் (நிலச்) சாகுபடி செய்யா திருந்த—அவர்கள் குடியிருந்த— எத்தகைய இல்ல மும் மதீனாவிலே இருந்தது கிடையாது.......இன்னம், உ’மர் (நிலச் சாகுபடி செய்வதற்காக) ஜனங் களைக் கீழ்க்கண்ட நிபந்தனையின்மீது அமர்த்திக் கொண்டார்: உ’மரே தமது கையிலிருந்து விதை முதல் கொடுத்தால் (விளைச்சலில்) சரிபாதியை அவர் பெற்றுக்கொள்ள வேண்டும்; ஆனல், வியவ சாயிகளே விதைமுதல் போட்டுக்கொண்டால், அவர் களுக்கு இன்ன இன்ன விகிதம்[2] அளிக்கப்படும். — (பு’க’ா. 41 : 8)

5. இப்’னு உ’மர் கூறியுள்ளார்: அல்லா(ஹ்) வின் திருத்தூதர் (சல்அ’ம்) க’ய்ப’ரை(ச் சார்ந்த நிலங்களை) எஹூதிகளுக்கு, அவர்கள் அவற்றிலே பாடுபட்டு, சாகுபடியும் (செவ்வனே) செய்து, ம‘ஹ்ரஸ்லிலிருந்து அன்னவர்கள் அரைப்பங்கை யும் எடுத்துக்கொள்ள வேண்டுமென்னும் நிபந்தனை யின்மீது, அளித்தருளினர்கள்.— (பு’க’ா. 41 : 11)

6. ரா‘பிஃ’ கூறி யுள்ளார்: நபிகளுதரின் (சல்அ’ம்) காலத்தில், நீரோட்டத்திலே விளைந்ததை, அல்லது நிலச் சொந்தக்காரர் தமக்கென்று ஒதுக்கிக்கொண்டதை எடுத்துக்கொண்டவர்களாய், அவர்கள் நிலச்சாகுபடி செய்துகொள்வது வழக்

---

2. இது, கிருஷித் தொழிலில் முக’ாப’ரா என்று அழைக்கப் படுகிறது; இது க’ப’ர் (செய்தி, சமாசாரம்) என்பதிலிருந்து பிறந்திருக்கிறது. ‘ஹதீ’. 7 நோக்க.

கமா யிருந்தது. ஆகவே, நபிகள் திலகம் (சல்அ'ம்) இதனைத் தடுத்து விட்டார்கள். நான்— (இந்த 'ஹதீ'ஃதைக் கூறியவர்) ரா'பிஉ'க்குச் சொன்னேன்: "தீ'னார்களும் தி'ர்ஹங்களும் கொடுத்துவிட்டுச் செய்வதாயிருப்பின், அதற்கென்ன (சொல்லலாம்)?' (இதற்கு) ரா'பிஃ' கூறினர்: 'தீ'னார்களும் தி'ர்ஹங் களும் பெற்றுக்கொள்வதில் குற்றமொன்றுமில்லை.' — (பு'க'ா. 41 : 19)

7. 'அ'ம்ர் கூறினர்: நான் 'தாவூஸுக்குச் சொன்னேன்: 'நீ முக'ாப'ராவை விட்டுவிடக் கட வாய்; ஏனென்றால், நபிகள் நாயகம் (சல்அ'ம்) அதனைத் தடுத்துவிட்டார்க ளென்று அவர்கள் கூறுகிறார்கள்.' (இதற்கு) அவர் சொன்னர்: '....... நபிபெருமான் (சல்அ'ம்) அதனைத் தடை செய்ய வில்லை; ஆனல், அவர்கள் இவ்வாறுதான் சொன் ஞர்களென்று இப்'னு அ'ப்'ப'ாஸ் எனக்கு அறிவித் துள்ளார் :—

"உங்களுள் ஒருவர் அதனைத் தம்முடைய சகோதரருக்கு இனமாய்க் கொடுத்தால், அன்னவர் அதற்காக ஒரு குறிப்பிட்ட கட்டணத்தைப் பெற்றுக்கொள்வதைப் பார்க்கினும் அவருக்கு அது மெத்த இலாக்கியமே."[3] — (பு'க'ா.,முஸ்-மிஷ். 12 : 13)

---

3. இது பெரும் பெரும் நிலச்சுவான்தார்களுக்கு உரைக்கப் பட்ட அறிவுரை யாகும்; அவர்கள் தங்களுக்குள்ள ஏராளமான நிலப் பகுதிகளைச் சாகுபடிசெய்ய வியலாது தரிசாகப் போட்டு விடுகிறார்கள்; இப்படிப்பட்ட தரிசு நிலங்களை இந்த 'ஹதீ'ஃதில் சொல்லப்பட்ட வண்ணம் ஏழைகளுக்கு இனமாக ஏராண்மைக்கு விடலாம்; இதனல் அவற்றினைக் குடியானவர்களிடம் குத்த

8. அபூ' ஹுரைய்ரா கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள்:—

"மேல் மிச்சமான தண்ணீர், அதைக் கொண்டு பயிர் பச்சை விளைவதைத் தடைசெய்யக் கூடிய முறையிலே தடுத்து நிறுத்தப்படுவது கூடாது."[4] — (பு'க'ா. 42 : 2)

9. நபிகட் டிலகம் (சல்அ'ம்) நவின் றருளினார்கள்:—

• "ரூமாவின் கிணற்றை எவரொருவர் வெட்டுகிறாரோ, அவருக்குச் சுவர்க்கப் பதவி இருக்கிறது." ஆகவே, உ':துமான் அதனை வெட்டு வித்தார்.[5] — (பு'க'ா. 62 : 7)

---

கைக்கு விடக்கூடாதென்று ஒன்றும் இந்த 'ஹதீ':து தடுத்து நிறுத்த வில்லை.

4. நீர்ப்பாய்ச்ச வில்லாது பயிர்பச்சை முளையா; எனவே, நீரோட்டத்தில் நிலம் வைத்திருப்பவர் தம்முடைய நிலத்துக்கு வேண்டிய தண்ணீர் போக எஞ்சுவதை ஏனையோரின் நிலங்களுக்கும் ஓடிச் செல்லுமாறு விட்டுவிட வேண்டும்; பொட்டல் நிலங்கள்மீது பாய்ந்தாலும், புற்பூண்டு முளைத்து ஆடுமாடுகளுக்குத் தீபனமாகும். நீர்ப்பாசன இலாகா சம்பந்தமுள்ள விஷயம் முஸா(க்):காத் என்று கிருஷிக சாஸ்திரத்தில் அழைக்கப் பட்டு வருகிறது; இதன் பொருள், "குடிக்கக் கொடுத்தல்" என்பதா யிருக்கிறது.

5. கிணறு தோண்டுவ தென்பது, அதுவும் அரப்நாடு போன்ற ஒரு பாலைவனப் பிரதேசத்தில், ஒரு பெரும் புண்ணிய கைங்கரியமாகவே கருதப்பட்டு வருகிறது. நபிகள் திலகம் மதீனாவுக்கு ஹிஜ்ரத் சென்று சேர்ந்தபொழுது, அந்நகரிலே ஒரே நல்ல தண்ணீர்க் கிணறே இருந்துவந்தது; அதுவும் ஒரு யூதனுக்குச் சொந்தமா யிருந்தது; அவனிடத்தில் கிரயம் கொடுத்தே அம் மூஸ்லிம்கள் குடிதண்ணீர் வாங்கி வந்தார்கள். ஆதலினால்,

10. இப்'னு உ'மர் கூறினர்: நபிக ளாதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"எவனொருவன் ஒரு நிலத்தின் ஏதாவதொரு பாகத்தை, அதன்மீது தனக்கொன்றும் பாத்தியதை இல்லாத நிலையில், (திருட்டுத்தனமாக) எடுத்துக் கொள்கிருனே, அதற்குரிய தண்டனையாக, அன்னவன் இறுதித் தீர்ப்புக்காக உயிர்த்தெழு நாளிலே ஏழு பூமிகளுக்குரிய ஆழத்திலே இப் பூமிக்குள்ளே தாழ்த்தப்பட்டுப் போய்விடுவான்."[6] — (பு'க'ா. 46 : 13)



---

'ஹ'ஜ்ரத் உ':துமான்(ரலி') ரூமாவின் கிணற்றை வாங்கி வெட்டி, வ:க்'பு செய்துவிட்டார்கள்.

6. பிறருடைய நிலத்தைத் தங்களுடைய நிலத்துடனே திருட்டுத்தனமாய்ச் சேர்த்துக்கொள்வது பெரும் பாபமான காரியமேயாம். அவரவர் நிலத்தின்மீதுள்ள அவரவர் உரிமையில் அன்னியர் ஒருசிறிதும் தலையிடுவது தகாது. இவ்விஷயத்தில் முஸ்லிம்கள் சர்வ ஜாக்ரதையா யிருந்துவருதல் வேண்டும்.

# அத்யாயம்—24

## வேலையும் கூலியும்

### (இஜாராத்)

1. " நீர் எங்களுக்காக (எங்கள் ஆடுகளுக்கு) நீர் குடிப்பாட்டியதன் சம்பளத்தை—கூலியை—உமக்குக் கொடுப்பான் வேண்டி, என் தந்தையார் உம்மை யழைக்கின்றார்" (:குர். 28 : 25).

2. " நீர் (உமது) ஊழியத்திற்காக (ப் பொறுக்கி) எடுத்துக்கொள்பவர்களுள் மிகச் சிறந்தவர் பலசாலியா யிருப்பவர், விசுவாசத்துடனே நடப்பவரே" (28 : 26).

3. " அடைக்கலங்களை அவைகளுக்கு உரியவர்களிடம் ஒப்படைத்து விடுமாறு..................நிச்சயமாக அல்லா(ஹ்) உங்களுக்குக் கட்டளையிடுகிறான்" (4 : 58).

4. " இப்பூமிக்குரிய பொக்கிஷங்களுக்கு மேலே என்னை நீ அதிகாரத்தில் அமர்த்தக்கடவாய்; நிச்சயமாக நான் நல்ல காப்பாளனாக, நன்கறிந்தவனாக இருக்கிறேன்" (12 : 55).

5. " எவனொருவன் (நம்பிக்கை) மோசம் பண்ணுகிறானோ, அவன் தான் எது குறித்து மோசம் பண்ணினானோ, அதனை இறுதித் தீர்ப்புக்காக உயிர்த்தெழு நாளிலே கொண்டு வருவான்" (3 : 160).

இஜாரா— (அஜ்ர்—" கூலி, சம்மானம்" என்பதிலிருந்து தோன்றியுள்ளது) என்பது, " செய்த வேலைக்குப் பிரதிப்பிரயோஜனம்," அல்லது, " புரிந்த ஊழியத்திற்காக ஒருவர் மற்றொருவருக்குக் கொடுக்கும் கூலி" என்று கருத்துக் கொள்கிறது. இதன் சார்பாய்க் கூறுமிடத்துக் :குர்ஆன் ஷரீ'பாலும் 'ஹதீ':து ஷரீ'பாலும் குறிக்கப்பட்டுள்ள இரு முக்கிய விதிகள் யாவையெனின்: வேலை செய்கிறவன் மோசஞ் செய்யாமலும், தன்னாலியன்ற முழுப் பிரயாசையுடனும் உழைக்கவேண்டும், வேலை

வாங்கும் எஜமானனும் அவ்வூழியனுக்குரிய முழுக் கூலியையும் குறைக்காமற் கொடுத்துவிட வேண்டும் என்பனவேயாம் (தலை. ஆயாத் 1, 2). சர்க்கார் உத்தியோகஸ்தர்கள், அவர்கள் எத்துணை உயர்பதவிகளிலிருப்பினும், பொதுஜன ஊழியர்களாகவே கருதப் படுகிறார்கள்; தலை. ஆயத் 3-இல் கூறப்பட்டுள்ள "அடைக்கலம்" (அமானத்) என்பது அன்னவர்கள் கரங்களில் ஒப்படைக்கப்பட்டிருக்கும் அதிகாரமாயிருக்கிறது; இவ்விஷயம் பு'கா. 3 : 2-இல் நபிபெருமானாலே நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. ஆளுவதற்குரிய அதிகாரம் அதனைச் செவ்வனே நிர்வகிப்பவர் கரத்தினிலே ஒப்படைக்கப் படுதல் வேண்டும் (தலை. ஆயத் 4). வேலையில் மோசஞ் செய்வதென்பது கடுமையாய்க் கண்டிக்கப்படுகிறது (தலை. ஆயத் 5).

ஆடு மேய்ப்பதைப்போன்ற ஒரு சாதாரணத் தொழில்கூடக் கண்ணிய முள்ளதாகவே கருதப்பட்டு வருகிறது; நபிகள் திலகமும் தங்கள் பால்யத்திலே இத்தொழிலைச் செய்திருக்கிறார்கள் ('ஹதீ'. 1). நபிபெருமான் தோழர்கள் சிலர் மூட்டை தூக்கும் கூலி வேலையையும் உதாசினமாய் மதித்திருக்கவில்லை ('ஹதீ'. 2). தன்னுடைய எஜமானனது கட்டளையைச் செவ்வனே செய்துமுடிக்கும் வேலைக்காரன் தர்மம் வழங்கும் மனிதர்களுடனே சேர்த்துக் கணிக்கப்படுகிறான் ('ஹதீ'. 3). வெவ்வேறு வேலைகளுக்குரிய வெவ்வேறு நிலைமைகளும் வெவ்வேறுவிதமாயே யிருந்து வருமாதலின், எஜமானனும் வேலைக்காரனும்— முதலாளியும் தொழிலாளியும்—இன்னம், ஒரு காரியத்தினிமித்தம் ஒப்பந்தம் செய்து கொள்கிறவர்களும் அவ்வக்காரியத்துக்கு முரிய நிபந்தனைகளின் ஷரத்துப்படியே நடந்துகொள்ளுதல் வேண்டும் என்பது தான் ஒரே பொது விதியா யிருந்துவருகிறது ('ஹதீ'. 4). முஸ்லிமா யிருப்பவர் முஸ்லிமல்லாதாரைத் தமது வேலையில் அமர்த்திக் கொள்ளலாம் ('ஹதீ'. 5); இவ்வாறே முஸ்லிமும் முஸ்லிமல்லாதாரிடம் வேலைசெய்ய ஒத்துக்கொள்ளலாம் ('ஹதீ'. 6). :குர்ஆன் ஷரீஃப ஓதிக் கொடுப்பதற்காக ஊதியம் பெறப்படலாம்; எல்லா ஊழியத்துக்கும் ஊதியம் கொடுப்பதேபோல் :குர்ஆனை ஓதிக் கொடுப்பதற்கும் ஊதியம் கொடுக்கப்படலாம் ('ஹதீ'. 7).

"கம்மிஷன் ஏஜெண்ட்"டும் தனக்குரிய லாபத்தைப் பெற்றுக் கொள்ளலாம் ('ஹதீ'. 8). செய்த ஊழியத்துக்குள்ள ஊதியத்தைப் பிடித்துக்கொள்வது மகா கொடிய பாபமென்று கருதப்பட்டு வருகிறது ('ஹதீ'. 9). பிடித்து நிறுத்திக்கொள்ளப்படும் சம்பளம் ஏதேனும் லாபந்தருந் தொழிலிலே போட்டுவைக்கப் படலாம்; அதினின்று அப்பால் கிடைக்கும் லாபமுழுவதும் அவ் வேலைக்காரனையே சேரும் ('ஹதீ'. 10). பொதுஜன ஊழியத்திற்கு உத்தியோகஸ்தர்களைத் தேர்ந்தெடுப்பதில் அதிக ஜாக்கிரதையாயிருந்துகொள்ளுதல் வேண்டும் ('ஹதீ'. 11). அத்தகைய கண்ணியமான யோக்கிய உத்தியோகஸ்தர்கள் பொதுமக்கள்பாலிருந்து உபயதானம் பரிதானம் போன்ற "இலஞ்சம்" பெறமாட்டார்; எனவே, இவர்கட்கெல்லாம் அரசாங்கமே சம்மானம், அல்லது சம்பளம் கொடுத்துவரல் வேண்டும் ('ஹதீ'. 12). எஜமானருக்குரிய பொருளை அவருக்குத் தெரியாது அயோக்கியத்தனமாய் அபகரித்துக் கொள்வது, அல்லது சொந்த உபயோகப்படுத்திக் கொள்வது மிகக் கடுமையாய்க் கண்டிக்கப்படுகிறது ('ஹதீ'. 13).

1. அபூ' ஹுரைய்ரா கூறியுள்ளார்: நபிகள் நாயகர் (சல்அ'ம்) நவின்றருளினர்கள் :—

"அல்லா(ஹ்) ஒரு நபியையும், அவர் ஆடுகளை மேய்க்காத முறையிலே, எழுப்பியது கிடையாது."

'தாங்களுமோ?' என்று அவர்களுடைய தோழர் வினவினர்கள்.

"ஆம்! மக்கா வாசிகளுக்காக நான் ஒரு சில :கராத்துக்காக அவைகளை மேய்த்ததுண்டு," என்று அன்னவர்கள் விடை யளித்தார்கள்.[1]— (பு'க'ா. 37 : 2)

---

1. :கரத் என்பதுதான் ஆங்கிலத்தில் 'காரட்' (Carat) என்று வழங்கப்பட்டு வருகிறது. :கரத்தின் நிறை 4 கோதுமைத் தான்ய எடை என்பதாயிருக்கிறது; 'காரட்'டின் நிறையோ, 3½ தான்ய எடைதான். சில பகுதிகளில் :கரத் ஒரு தீ'னாரில் 20-இல் ஒன்

2. அபூ' மஸ்ஊ'த்' கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) தர்மம்வழங்க வேண்டுமென்று எங்களுக்குக் கட்டளை யிட்டபொழுது, எங்களுள்ளிருந்து ஒருவர் சந்தைக்குச் சென்று, ஒரு மூட்டையை(க் கூலிக்கு)ச் சுமந்தார்; அதற்காக அவருக்கு ஒரு முத்'— (கால்மரக்கால்) கிடைத்தது; மேலும், அ(ப்படிப்பட்ட) வர்களுள் சிலர் இன்று இலக்ஷாதிபதிகளாயிருக்கின்றனர்.—(பு'க'ா. 24:10)

3. நபிகளுைதர் (சல்அ'ம்) (இவ்வாறு) சொன்னர்களென்று அபூ' மூஸா கூறியுள்ளார்:—

"தமக்குக் கட்டளையிடப்பட்டதை உள்ளன்புடனே உவந்து கொடுத்துவிடும் நம்பிக்கைக்குரிய பொக்கிஷாதிபதி தர்மம் வழங்குகிறவர்களுள்ளே ஒருவரா யிருக்கின்றார்."— (பு'க'ா. 37:1)

4. நபிகள் திலகம் (சல்அ'ம்) நவின்றருளினர்கள்:—

"முஸ்லிம்கள் தாங்கள் செய்து கொடுக்கும் நிபந்தனைகளுக்குக் கட்டுப்பட்டே நடக்கக்கடவார்கள்."[2]— (பு'க'ா. 37:14)

---

றென்றும், வேறு சில பகுதிகளில் 24-இல் ஒன்றென்றும் கருதப்பட்டு வருகிறது. ரஆ' என்னுஞ் சொல், "கால்நடைகளை மேய்த்தான்," என்றும், "ஆட்சி புரிந்தான்," என்றும் பொருள் கொள்கிறது. இதிலிருந்து, கால்நடைகளைப் பராமரிப்பதென்பது மன்பதையின் யோக க்ஷேமத்தைப் பாதுகாப்பதென்பதேபோலவென்று குறித்துக் காட்டுவதா யிருக்கிறது என்பது அறியக்கிடக்கின்றது.

2. இந்த 'ஹதீ':தில் கூறப்பட்டுள்ள விஷயம் ஒரு பொதுப்படையான கட்டளையாகவே யிருந்துவருகிறது. இஃது எல்லாவிதமான ஒப்பந்தங்களுக்கும் பொருத்தமுடையதாயே யிருக்கிறது.

5. ஆ'யிஷா பிராட்டியார்(ரலி') கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதரும் (சல்அ'ம்) அபூ'ப'க்ரும் ப'னீத்'தீ'ல் வர்க்கத்தைச் சேர்ந்த ஒரு மனிதனை வழி காட்டியாக அமர்த்திக் கொண்டார்கள்; அவனொரு சாமர்த்தியசாலி; மேலுமவன் கா'பிர்களாய :குறைஷியர் மதத்தைப் பின்பற்றியவனு யிருந்தான். ஆகவே, அவர்கள் அன்னவன்பாலே தங்களுடைய சவாரி யொட்டகங்களை ஒப்புக்கொடுத்து, மூன்றிரவுகள் கழிந்து அம் மூன்றாவது இரவுக்குப் பின்னே வரும் காலையிலே, தங்கள் சவாரி யொட்டகங்களுடனே, :தவ்ரென்னுங் குகைக்குத் தங்கள் பால் வந்துசேருமாறு அவனுக்குச் சொல்லியும் விட்டார்கள்.[3]— (பு'க'ா. 37 : 4)

6. க'ப்'ப'ாப்' கூறினர்: (இஸ்லாத்துக்கு முற்பட்ட) அஞ்ஞான நாட்களிலே யானொரு கருமானு— (கொல்லனு) யிருந்துவந்தேன்; மேலும்,

---

எந்தவித ஒப்பந்தத்துக்கும் ஒரே விலக்கு விதிதான் உண்டு: அஃதாவது, இஸ்லாத்தின் நியாயப் பிரமாணத்துக்கு முரணுயுள்ள எத்தகைய நிபந்தனையும் செல்லமாட்டாது என்பதேயாகும். இமாம் பு'க'ாீ இந்த 'ஹதீ'ஃதை இஜாராத் என்னும் அத்யாயத்திலே அடக்கியிருப்பதன் நோக்கம், ஓர் எஜமானனுக்கும் அவனுடைய வேலைக்காரனுக்கும் இடையிலுள்ள தொடர்பு உண்மையிலே ஒருவித ஒப்பந்தமா யிருந்துவருவதுதாணுகும்.

3 இந்த 'ஹதீ':தில் கூறப்பெற்றுள்ள சம்பவம் நபிபெருமானது ஹிஜ்ரத் சம்பந்தமாயுள்ளது. இந்த 'ஹதீ':துடனே அடுத்துவரும் 'ஹதீ'ஃதையும் சேர்த்துப் படித்தால், எஜமானன் ஊழியன் என்னுமுறையில் எஜமானனே, அல்லது ஊழியனே முஸ்லிமல்லாதவனு யிருக்கலாமென்பது பெறப்படும்.

ஆ'ஸிப்' னு வாயிலிடத்திலிருந்து எனக்கு (ஒரு) கடன் தொகை வரவேண்டியிருந்தது; ஆகையால், அதை நான் கேட்டுக்கொண்டு அவரிடம் வந்தேன். 'நீ மு'ஹம்மதை' நிராகரித்தா லன்றி நான் அதை உனக்குக் கொடுக்க மாட்டேன்,' என்று அவர் கூறினர். (அதற்கு) நான், 'அல்லா(ஹ்) உம்மை மரிக்கச் செய்து, அப்பால் நீர் உயிர் பெற்று எழுப் பப்படினும், நான் அவர்களை நிராகரியேன்,' என்று (பதில்) கூறினேன்.— (பு'க'ா. 34 : 29)

7. நபிகள் திலகத்தின் (சல்அ'ம்) ஆதாரத் தைக்கொண்டு இப்'னு அ'ப்'ப'ாஸ் (இவ்வாறு) கூறி யிருக்கின்றார் :—

"நீங்கள் கூலி பெறத்தக்க வஸ்துக்களுள் ளெல்லாம் மகா சிலாக்கியமானது அல்லா(ஹ்)வின் வேதமாகவே இருந்து வருகிறது."[4]

இன்னம், இப்'னு ஸீரீன் கூறினர் :........கனி வர்க்கத்தின் அளவு இவ்வளவென்று ஊகித்து மதிப்புச் சொல்வதற்காக ஜனங்கள் கூலி கொடுத்து வந்தார்கள்.— (பு'க'ா. 37 : 16)

---

4. இழுக்கில்லாத தொழில் எதுவாயிருப்பினும், அதற்குகந்த கூலி, அல்லது சம்பளம் பெறுவதில் ஒன்றும் குற்றமில்லை. அல்லா(ஹ்)வின் :குர்ஆன் சார்பாயுள்ள ஊழியமா யிருப்பினும், அதற்கும் சம்பளம், அல்லது சம்மானம் பெறலாம். :குர்ஆன் ஷரீ'ப் பாடமோதிக் கொடுத்தல், வரைந்து கொடுத்தல், மொழி பெயர்ப்பு அல்லது வியாக்கியானம் எழுதிக்கொடுத்தல் போன்ற காரியங்களுக்கெல்லாம் ஊதியம் அல்லது சம்மானம் பெறலாம். ஒரு பெண்ணுக்குக் :குர்ஆன் ஓதிக் கொடுக்கும் ஊதியத்தை மஹ்ராக வைத்து அப்பெண்ணை மணந்தும் கொள்ளலாம் (பு'க'ா. சுருக். 20 : 5-இன் அடிக் குறிப்பு 4).

8. 'கம்மிஷன் ஏஜெண்ட்'டுக்குக் கூலி கொடுப்பதில் குற்ற மிருப்பதாய் இப்'னு ஸீரீன் காணவில்லை.

இன்னம், இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினர்: (பின் வருமாறு) ஒருவர் சொன்னல், அதில் குற்றமொன்று மில்லை :—

'எனக்காக நீ இந்த ஆடையை விற்றுக் கொடுக்கக் கடவாய்; இவ்வளவுத் தொகைக்கு மேலே உனக்கு எவ்வளவு கிடைக்கிறதோ, அஃது உனக்காகவே யிருக்கும்.'— (பு'க'ா. 37 : 14)

9. அபூ' ஹுரய்ரா கூறியுள்ளார்: நபிகள் நாயகம் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"அல்லா(ஹ்) கூறுகிறான்: 'நியாயத் தீர்ப்புக்காக உயிர்த்தெழு நாளிலே நான் எவருக்கு எதிர் வழக்காளியா யிருப்பேனே, அப்படிப்பட்ட மனிதர்கள் மூவர்களா யிருக்கிறார்கள்: என் நாமத்தைக் கொண்டு சத்தியம் செய்துவிட்டு, அப்பால் (அதற்கு) மாறாய் நடக்கும் மனிதன் (ஒருவன்); இன்னம், ஒரு சுதந்தர புருஷனை விக்கிரயம் செய்துவிட்டு, அப்பால் அவனது கிரயத் தொகையை விழுங்கிவிடும் மனிதன் (மற்றொருவன்); இன்னம், ஊழியனொருவனை வைத்து அவன்பா லிருந்து கிடைக்கக்கூடிய முழு ஊழியத்தையும் பெற்றுக் கொண்டு, அப்பால் அவனுக் குரிய கூலியைக் கொடா திருப்பவன் (இன்ன மொருவன்).'"*— (பு'க'ா. 34 : 106)

* "கூலியைக் குறைக்காதே, வேலையைக் கெடுக்காதே," என்பது ஒரு பழமொழி.

10. இப்'னு உ'மர் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) (இவ்வாறு) சொல்லியதை யான் கேட்டுளேன் :—

"........இன்னம், மூன்றாமவன் சொன்னான்: 'நான் ஊழியர்களை அமர்த்தியிருந்தேன்; மேலும், ஒரு மனிதனைத் தவிர்த்து மற்றவர்களுக்கு அன்னவர்களுக்குரிய சம்பளத்தைக் கொடுத்துவிட்டேன்; அ(வ்வொரு)வன் மட்டும் தனக்குச் சேரவேண்டுவதை விட்டுப் போய்விட்டான். ஆகவே, அவனது சம்பளத்தை நான் லாபந்தரும் ஒரு தொழிலிலே போட்டேன்; (எதுமட்டி லென்றால்) அஃதோர் ஏராளமான ஐசுவரியமாகப் பெருக்கெடுத்து விட்டமட்டிலே."[5]— (பு'கா'ர். 37 : 12)

11. அபூ' மூஸா கூறினர்: நான் நபிகள் திலகம் (சல்அ'ம்) அவர்களிடம் சென்றேன்; என்னுடன்கூட அஷ்அ'ரீகளினின் றுள்ள இருமனிதர்கள் இருந்தார்கள். அவர்கள் தங்களை வேலையிலமர்த்திக் கொள்ள வேண்டுமென்று விரும்பியது எனக்குத் தெரியா தென்று யான் கூறினேன். (இதற்கு நபிபெருமான்) நவின் றருளினர்கள்:—

5. இஃதொரு நெடிய 'ஹதீ':தின் சிறிய பகுதியாகும்; மூன்று மனிதர்கள் மிகவுங் கடுமையான இக்கட்டுள்ளே சிக்கிக்கொண்டார்கள்; ஆயின், அவரவரும் செய்திருந்த ஏதோவொரு நன்மையி னிமித்தம் அச்சங்கடத்தி னின்று அல்லாஹு'த் தஆலா விடுவித்து விட்டான்; இந்த மூன்றாவதுமனிதன் செய்திருந்த நன்மை யாதெனின்: இவன் அந்தக் கூலியாளின் சம்பளத்தை வெறுமனே வைத்திராமல் லாபந்தரும் ஒரு தொழிலில் முதலாய்ப் போட்டு, அப்பால் அவனுக்கு ஒருசில அணுக்களுக்குப் பதிலாக ஏராளமான செல்வத்தை யளித்தான் என்பதேயாம்.

"தான் அவ்வாறு நியமிக்கப்பட வேண்டு மென்று விழைகின்ற ஒரு மனிதனை நாம் நியமிக்கிற தில்லை; அல்லது நியமிக்க மாட்டோம்."[6]—(பு'க'ா. 37 : 1)

12. அபூ' 'ஹுமய்த்' கூறினர்: நபிகள் திலகம் (சல்அ'ம்) அ'ஜ்த்'வர்க்கத்திலிருந்து இப்'னு உத்பி'ய்யாவென் றழைக்கப்பட்ட ஒரு மனிதனை 'ஜ(க்)காத் வசூலுக்காக ஏற்படுத்தினர்கள். அவன் (திரும்பி) வந்து சேர்ந்தபொழுது கூறினன்: 'இது தங்களுக்கு; இஃதெனக்கு இனமாய்க் கொடுக்கப் பட்டது.' (அதுகேட்டு, நபி பெருமான்) நவில லுற்றூர்கள்:—

"அவன் தன்னுடைய தந்தையின் வீட்டிலே னும், அல்லது தன்னுடைய தாயின் வீட்டிலேனும் குந்தியிருக்க வேண்டும்; அதுபொழுது அவனுக் கோர் இனம் அளிக்கப்படுகிறதா, இல்லையா? என்பதைப் பார்த்திருக்கலாம்."[7]—(பு'க'ா. 51 : 17)

---

6. இவ்வாறு நபிபெருமான் கூறியதன் கருத்து யாது? ஒரு வேலையில் ஒரு மனிதனை அமர்த்துவ தென்ருல், நபிபெரு மாஞர் அதற் குரியவர்களினின்று மிக்க திறமை வாய்ந்தவனையே பொறுக்கி யெடுப்பார்கள். ஒருவன் அண்மிவந்து கேட்டானென் பதற்காக அவனுக்கோர் உத்தியோகம் அளித்துவிடமாட்டார்கள்; வேருெருவன் நெருங்கிவந்து கேட்கவில்லை யென்பதற்காக அவனை அலக்ஷியம் செய்துவிட மாட்டார்கள். இன்னம், தலை. ஆயத் 4 கூறி யிருப்பதேபோல், ஒருவன் தனக்கு யோக்யதை இருக்கிற தென்று கூறி, அதன்பொருட்டு வேலை கேட்பதில் ஒன்றும் தோஷமில்லை யென்க.

7. பொதுஜன ஊழியன்—(ஓர் உத்தியோகஸ்தன்) இனம், வெகுமதி, சம்மானம் போன்ற இனிய பரிதான மொன்றும்

13. அபூ' ஹுரய்ரா கூறினர்: நபிகள் திலகம் (சல்அ'ம்) எங்கள் மத்தியிலே எழுந்து நின்றார்கள்; இன்னம், நம்பிக்கை மோசம் செய்வது குறித்துப்பேசி, அதன் அபாரத் தன்மையைப் பற்றியும் விளக்கினர்கள்; இன்னம், அ(ந்நம்பிக்கை மோசத்)தைச் செய்வதன் அபார விளைவைப் பற்றியும் பேசினர்கள்; அவர்கள் சொன்னார்கள்:—

"இறுதித் தீர்ப்புக்காக உயிர்த்தெழு நாளிலே உங்களுள் எவனையும், அவனது கழுத்திலே ஒரு வெள்ளாடிருந்து கத்தும் நிலையிலே, ஒரு குதிரையிருந்து கனைக்கும் நிலையிலே, நான் பார்க்க விரும்பேன்; ஆகவே, 'ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! எனக்கு உதவிபுரிய வாருங்களே!' என்று அவன் கதறுவான்; (அதுகாலை) நான் கூறுவேன்: உனக்காக ஒன்றையும் என்னால் தடுத்து நிறுத்துவது இயலாது; நான் உனக்கு (எனது) தூதுச் செய்தியை(முன்னர்)ச் சேர்ப்பித்து விட்டேன்.'"[8]—(பு'க'ா. 56 : 189)

---

வாங்குவது கூடாது. அவன் செய்யும் ஊழியமனைத்தும் அவன் பெறும் சம்பளத்துக்கே யாம்; அவனுக் கிருக்கும் கௌரவமனைத்தும் அவ்வுத்தியோகத்தின் காரணத்தினலேயாம் என்றறிக.

8. இந்த 'ஹதீ':தில் குதிரையின் பிரஸ்தாபத்துக்குப் பின்னே ஒட்டகம் பிரஸ்தாபிக்கப்பட் டுள்ளது. பொன்னும் வெள்ளியுங்கூட இவ்வாறு கண்டிக்கப்பட் டுள்ளன. இவ் வருணனை இறுதித் தீர்ப்புக்காக உயிர்த்தெழு நாளைக்குரிய விஷயமா யிருக்கிறது. அவ்வுலக ஆத்மார்த்த வாழ்க்கைக்குரிய வருணனை இவ்வுலக ஜடவஸ்துக்களைக்கொண்டு விவரிக்கப்பட் டுள்ளது. இதன் கருத்தாவது: இவ்வுலகில் இழைக்கப்படும் ஒவ்வொரு மோசமும்—அது பெரிதேயாயினும், சிறிதேயாயினும்—பகிரங்கமாய் வெளியாக்கப்பட்டுச் சிக்ஷிக்கப்படும் என்பதாகவே இருந்து வருகிறது. அணுத்துணை நன்மைக்கும் அம்மறுமை வாழ்க்கையில் சம்மானமுண்டு; அணுத்துணைத் தீமைக்கும் அதற்குரிய தண்டனையுண்டு (:குர். 99 : 7, 8).

# அத்யாயம்—25

## கடனும் அடைமானமும்

1. "ஒரு குறிப்பிட்ட தவணைக்காக நீங்கள் ஒருவருக்கொருவர் கடன் கொடுத்துக் கொள்ளுங்கால், அதை வரைந்து (தஸ்தாவீஜாக) வைத்துக்கொள்ளுங்கள்;..........இன்னம், எவன்மீது (கடனிறுக்க வேண்டிய) கடமை ஏற்பட்டிருக்கிறதோ, அவனே எழுத்துவாசகம் சொல்லட்டும்" (:குர். 2 : 282).

2. "இன்னம், நீங்கள் பிரயாணத்திலிருந்து, எழுதுகிறவனையும் நீங்கள் பெற்றுக்கொள்ளவில்லையாயின், ஏதேனுமொரு பொருளை(க் கடனீந்தவனுக்கு) ஒப்புக்கொடுத்த (விதமாக) அடைமானம் வைத்தல் வேண்டும்" (2 : 283).

3. "இன்னம், அல்லா(ஹ்) வர்த்தகத்தை ஆகுமென்று அனுமதி யளித்துள்ளான்; மேலும், வட்டியை ஆகாததாக்கி(த் தடுத்து) வைத்திருக்கிறான்" (2 : 275).

4. "இன்னம், கடன்பட்டவன் கஷ்டத்துள்ளே சிக்கிக் கொள்வானாயின், அவனுக்கு இலேசுண்டாகும்வரை தாமதித்திருத்தல் வேண்டும்; இன்னம், நீங்கள் அறிந்தவர்களாயிருப்பீர்களேல், (அக்கடன் தொகையைத்) தர்மமாய் விட்டுவிடுவது உங்களுக்கு மெத்த நன்மையே" (2 : 280).

மனித சமுதாய வாழ்க்கையில் கடன் கொடுக்கலும் வாங்கலும் சர்வ சாதாரணமாய் நடைபெற்றே வரவேண்டுவனவாயிருக்கின்றன. இவற்றிற்கு வேண்டிய சட்ட திட்டங்கள் :குர்ஆன் ஷரீ'பிலே கூறப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு கடன் வாங்கலும் எழுத்துவாயிலாக எழுதி வைக்கப்படல் வேண்டும்; மேலும், கடன் வாங்குகிறவனே பத்திரவாசகத்தையும் சொல்ல வேண்டும் (தலை. ஆயத் 1). இவ்வாறு இவனே வாசகம் சொல்ல வேண்டுமென்பது இந்தக் கடன்காரனுக்கு அநீதி யிழைக்கப்படா

திருப்பதற்காகவே யாம். சொத்தை அடைமானம் வைத்துக் கடன் வாங்குவதும் அனுமதிக்கப்பட்டுள்ளது (தலே. ஆயத் 2). பிரயாணத்திலிருப்பதென்பதும், நெட்டெழுத்துக்காரன் அகப்படவில்லையென்பதும், அடைமானம் வைக்கப்படவேண்டிய சந்தர்ப்பம் இப்படியிருக்கலாமென்று காட்டக்கூடிய ஓருதாரணமாயே எடுத்தோதப்பட்டிருக்கின்றன. இது "போக்கியக் கடன்" போன்றது. வட்டிவாங்குவது கூடாதென்றும், வர்த்தகம் செய்வது கூடுமென்றும் இஸ்லாம் இயம்பிக்கொண்டிருக்கிறது; என்னெனின், இவ்விரண்டற்கு மிடையே வானத்துக்கும் பூமிக்குமுள்ள வேற்றுமை காணப்பட்டு வருகிறது: வர்த்தகலாபம் உழைப்பின் பயனு யுண்டாகிறது; இதில் லாபம் நஷ்டம் இரண்டு முண்டு. வட்டியிலோ, எல்லாம் லாபமே; எதிரி என்னவானுலும் பணம் கொடுத்தவனுக்கு வட்டியே பிரதானம்; இது சோம்பேறி வாழ்க்கையையும், பணப்பேராசையையுமே அபிவிருத்தியடையச் செய்து விடுகின்றது (தலே. ஆயத் 3). எனவேதான், பந்தகக் கடனுக வட்டிக்குப் பணம் கொடுப்பது கூடாதாகின்றது. கடன்பட்டவன் சங்கடத்துள் சிக்கித் தவிக்குங்கால், அவனுக்கு இலேசான நிலைமை வருமளவும் தவணை கொடுத்தல் வேண்டும்; அவனுல் அந்தக் கடனை இறுக்க முடியாமற் போய்விடின், அத்தொழுகையை அடியுடன் தர்மமாகத் தள்ளுபடி செய்துவிடலாம்; இஃதொரு புண்ணிய காரியமேயாம் (தலே. ஆயத் 4).

கடன்வாங்கி வாழ்க்கை நடாத்துவது கூடாத காரியமாயிருக்கிறது; எனவேதான், நபிகள் திலகம் கடனிலும் பாபத்திலும் சிக்கிவிடாதவாறு அடிக்கடி அல்லா(ஹ்)வின்பால் தஞ்சம் தேடிக்கொண்டிருப்பார்கள் ('ஹதீ'. 1). அவர்கள் திருமுன்பினில் ஒரு ஜனு'ஜா— (பிரேதப் பெட்டி) கொண்டுவரப்பட்டது; அந்த மரித்துப்போன மனிதன் கடனுடனே செத்துவிட்டானென்றும், அக்கடனைத் தீர்க்க ஏதொன்றும் விட்டுச் செல்லவில்லையென்றும் அவர்களுக்கு அறிவிக்கப்பட்டது; அதுகேட்டு, நபிபெருமான், வேறொருவர் அக்கடனைக் கொடுத்துத் தீர்க்க உடன்படும்வரை தாங்கள் முன்னின்று அவனுக்கு ஜனு'ஜாத் தொழுகை தொழவைக்க மறுத்துவிட்டார்கள் ('ஹதீ'. 2). கடன்வாங்கும்பொழுது

திருப்பிக்கொடுக்கும் எண்ணமில்லாது கெட்ட நாட்டத்துடனே நடந்துகொள்வது சபிக்கப்பட் டுள்ளது (‘ஹதீ’. 3). வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்க வேண்டிய விஷயத்தில் நபிகள் பெருமான் எத்துணைப் பெரிய கவலையைக் காண்பித்து வந்தார்கள் என்னும் விஷயம் ‘ஹதீ’. 4-இல் கூறப்படுகிறது. சாதாரணக் கடனுக்கும் தவணை கொடுப்பதும், சங்கட நிலையிலுள்ள கடன்காரனை மன்னித்து விடுவதும் சிலாகிக்கப் படுகின்றன (பு’க’ா. சுருக். 22 : 5). ஒருவர் கொடுக்கவேண்டிய கடன் தொகைக்கு மேலே சிறிது சேர்த்துக்கொடுப்பது வட்டியன்று; ஆயின், அது நல்லதென்று கொள்ளப்படுகிறது (‘ஹதீ’. 5). கடனைத் திருப்பிக் கொடுக்கும் இயல்புடையவன் அவ்வாறு கொடாது காலதாமதம் செய்துவருவது அநியாயமெனக் கண்டிக்கப்படுகிறது (‘ஹதீ’. 6). இதற்காகச் சிக்ஷிக்கவும்படலாம் (‘ஹதீ’. 7). அத்தியாவசியத்தினிமித்தம் கடன்பட்டு விடுவோரின் கடன்களை முஸ்லிம் அரசாங்கம் கொடுத்துத் தீர்க்கவேண்டும்; இன்னம், ஆதரவற்ற அநாதக் குடும்பங்களையும் அரசாங்கமே பாதுகாத்துவரல் வேண்டும் (‘ஹதீ’. 8). கடனுக்கீடாக வேறு சொத்தை அடைமானமாக— போக்கியமாக—க் கொதுவை வைக்கலாம்; அவ்வாறு போக்கியம் வாங்குகிறவன் அச்சொத்தை அனுபவித்துப் பயன் பெறலாம் (‘ஹதீ’. 9, 10). கடனிறுக்க முடியாது “இன்ஸால்வெண்ட்”டாகப் போகிறவர் விஷயம் ‘ஹதீ’. 11, 12-இல் விளக்கப்பட்டுள்ளது. கொடு வட்டி, சாதாரண வட்டி எல்லாமே கண்டிக்கப்பட் டுள்ளன; ஆனால், ஜனங்களெல்லாம் இவ்வட்டியுள்ளே சிக்கிச் சுழலவேண்டிய காலமொன்று வந்தே தீருமென்று தீர்க்கதர்சனம் கூறப்பட்டுள்ளது (‘ஹதீ’. 13—15).

1. ஆ’யிஷா பிராட்டியார் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) தொழுது கொள்ளுங் காலங்களிலே (பின்வருமாறு) பிரார்த்தனைபுரிந்து, மேலும் சொல்வார்கள் :—

“ஏ அல்லா(ஹ்)! பாபத்தை விட்டும், கடனில்

சிக்குவதை விட்டும் யான் உன்பாலே தஞ்சம் தேடுகிறேன்.''

'ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! நீங்கள் எத்தனை முறை கடனில் சிக்குவதினின்று அபயம் தேடுகிறீர்கள்?' என்று எவரோ ஒருவர் அவர்களை வினவினர். (இதற்கு) அவர்கள் சொன்னார்கள் :—

"ஒரு மனிதன் கடனில் சிக்கிக்கொள்ளுங்கால், அவன் பேசுகிறான்; ஆயின், பொய் பேசுகிறான்; மேலுமவன் வாக்களிக்கிறான்; ஆயின், அவ் வாக்குறுதியை முறித்துவிடுகிறான்."— (பு'க'ா. 43 : 10)

2. ஸலமா கூறியுள்ளார்: நபி பெருமான் (சல்அ'ம்) திருமுன்பினில் ஒரு ஜனா'ஜா, அதன்மீது பிரேதத் தொழுகை தொழவைப்பதற் காகக் கொண்டுவரப் பட்டது; அப்பொழுது, "இவன் கடன்பட் டிருந்தானோ?" என்று அவர்கள் வினவினார்கள்; இல்லையென்று அவர்கள்— (ஜனங்கள்) விடையளித்தார்கள். ஆக்வே, அவர்கள் அதன்மீது (ஜனா'ஜாத் தொழுகை). தொழ வைத்தார்கள். வேறொரு ஜனா'ஜா அன்னவர்கள்பால் கொண்டு வரப்பட்டது; அப்பொழுதும், "இவன் கடன் பட்டிருந்தானா?" என்று அவர்கள் வினவினார்கள்; ஆமென் று அவர்கள் விடை யளித்தார்கள்; (ஆகவே) அவர்கள், "உங்கள் தோழன்மீது நீங்களே தொழுங்கள்," என்று கூறினார்கள்; (அப்பொழுது) அபூ' :க(த்)தாத'ா, 'ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! யான் இவரது கடனைக் கொடுத்து

விடுகிறேன்,' என்று கூறினர். ஆகவே, அவர்கள் அதன்மீது தொழவைத்தார்கள்.[1]— (பு'க்'ா. 39 : 3)

3. அபூ' ஹுரய்ரா கூறியுள்ளார்: நபிகள் திலகம் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"எவனொருவன் திருப்பிக் கொடுக்கும் நாட்டத் துடனே கடன் வாங்குகிருனே, அவனது சார்பில் அல்லா(ஹ்)வே அதனைக் கொடுத்து விடுவான்;[2]

---

1. கடனாளியாயிருந்து இறந்துபோகிறவர்மீது ஜனு'ஜாத் தொழுகை தொழவைக்க வேண்டாமென நபிபெருமான்(சல்) தடுத்துவிட வில்லை. தாங்கள் அவ்வாறு தொழவைக்க முடியா தென்று கூறியதன் கருத்து, ஒருவனுக்குத் திருப்பிக் கொடுக்கும் சக்தியில்லாத பொழுது அவன் கடன்வாங்கத் துணிவது கூடா தென்னும் தங்கள் அதிருப்தியை வெளிப்படுத்துவதாயே யிருந்து வருகிறது. 'கடன்பட் டாவது செய்யுஞ் சடங்கு செய்,' என்று ஒரு சிலர் கூறும் பழமொழி நபிபெருமாஞ ரவர்கட்குப் பிடித்த மில்லை யென்க. இதே 'ஹதீ':தின் வேறொரு பாடபேதப் பிர காரம் (பு'க்'ா. 38: 3) நபிபெருமானர் ஒருவனது பிரேதத்தின்மீது ஜனு'ஜாத் தொழுகை தொழவைத்தார்கள்; அவன் எப்படிப் பட்டவ னெனின்: அன்னவன் கடன்காரஞ யிருந்தே மரித்துப் போய் விட்டான்; ஆயின், அந்தக் கடனைக் கொடுத்துத் தீர்ப்ப தற்குப் போதிய முதலையும் விட்டுச் சென்றுன். இனி, 'ஹதீ'- 8-இல் காணப்படுவதேபோல்,' கடனாளிகளாயிருந்து மரித்துப் போகிறவர்களின் கடன்களை நபிபெருமானே கொடுத்துத் தீர்க்க உடன்பட்டார்கள் என்று நாம் அறிந்து கொள்கிறோம்; அஃதாவது, அம்முஸ்லிம் ராஜ்யத்தின் அரசாங்க க'ஜானு பணப் பிதுக்கத்தைப் பெற்றுக்கொண்டு விட்டபொழுது, கடனாளிகளின் (இறுக்கமுடியாத) கடன் சுமையை அவ் வரசாங்கமே ஏற்றுக் கொண்டு விட்டதென்க.

2. இதன் தாத்பரியம், அந்தக் கடனைத் திருப்பிக் கொடுத் தற்குரிய வழி வகைகளை அல்லா(ஹ்) உண்டுபண்ணிக் கொடுக் கிறுன் என்பதாயே யிருக்கிறது.

இன்னம், எவனொருவன் வீண் விரயம் செய்வான் வேண்டிக் கடன் வாங்குகிருனே, அன்னவனை அல்லா(ஹ்) விநாசத்துள்ளே ஈர்த்துச் செல்வான்.”— (பு’க’ா. 43 : 2)

4. அபூ’ ‘தர் கூறினர்: நான் நபிபெருமானுடனே (சல்அ’ம்) அவர்கள் உ‘ஹுத்’ பருவதத்தைப் பார்த்த ஒரு சமயத்திலே உடனிருந்தேன்; அவர்கள் சொன்னார்கள்:—

“இஃது— (உ‘ஹுத்’மலை) எனக்காகப் பொன் மலையாக மாற்றப்பட வேண்டுமென்று நான் விழைய வில்லை; (ஏனென்றால்) அப்பொழுது (வாங்கிய) கடனைத் திருப்பிக் கொடுக்க யான் வைத்துக்கொள்ள வேண்டிய ஒரு தீ’னரைத் தவிர்த்து, மூன்று நாட்களுக்கப்பாலே அதினின்று- (அப் பொன் மலையிலிருந்து) ஒரு தீ’னருக்கு மேலே என்பால் எஞ்சியிருக்க மாட்டாது.”

அப்பாலும் அவர்கள் சொன்னார்கள்:—

“இப்படியும் இப்படியும் ஐசுவரியத்தை அள்ளி யிறைப்பவனையன்றி, (ஏனைப்) பணக்காரரெல்லாம் ஏழைகளே; அ(வ்வாறு அள்ளி யிறைப்ப)வர்கள் மிகச் சிலரே.”[3]— (பு’க’ா. 43 : 3)

---

3. தனவந்தர்களா யிருப்பவர்கட்கு மேன்மேலும் ஐசுவரியம் திரட்டுவதென்பது ஒரு பெரும் பித்தாகவே யிருந்துவருகிறது. வாழ்க்கையின் நலத்திற்காகப் போதிய பொருள் தேடவேண்டுமென்று தொடங்கப்படுங் காரியம், பிறகு காலஅடைவில் அந்தப் பொருளை மேன்மேலும் திரட்டுவதிலேதான் ஆனந்த மிருக்கிறதென்று எண்ணுமாறு அம்மனிதனை ஒரு மாய மயக்கத்துள்ளே ஆழ்த்தித் தாழ்த்தி விடுகிறது. இதுதான் செல்வத்தின் மாயை

5. ஜாபி'ர் கூறினர்: நான் நபிபெருமா னிடம் (சல்அ'ம்) அவர்கள் மஸ்ஜிதி'லிருந்த பொழுது வந்து சேர்ந்தேன்; ஆகவே, அவர்கள் சொன் ஞர்கள்:—

"நீர் இரண்டு ரக்ஆ'த் தொழுது கொள்ளும்." இன்னம், அன்னவர்கள் எனக்குக் கடன் கொடுக்க வேண்டியவர்களா யிருந்தார்கள்; ஆகையால், அவர்கள் அதனை எனக்கு(த் திருப்பி)க் கொடுத் தார்கள்; மேலும், எனக்கு(ச் சேரவேண்டுவதற்கு) அதிகமாகவே கொடுத்தார்கள்.[4]—(பு'க'ா. 43 : 7)

---

யென்ப. இத்தகைய பணப் பேராசை, இல்லை, பித்துப் பிடித்தவர் பால் மானிடனுக் குரிய உயரிய உன்னத சற்குணங்கள் உற் பத்தி யாவதென்பது குதிரைக் கொம்பாய் விடுகிறது. இவ்வுலக முழுதையும் தன் வசப்படுத்தி யாண்டிடினும், தனது ஆத்மாவை (அதற்குரிய சுகிர்தத்தை) இழந்து விடுகிறவன் ஒரு பரிதபிக்கத் தக்க அஷ்ட தரித்திரனே யாவான். "இப்படியும் இப்படியும் ஐசுவரியத்தை அள்ளியிறைப்ப" தென்று கூறியபொழுது, இந்த 'ஹதீ'ஃத எடுத்துரைத்தவர் தம்முடைய கைகளை வலப்பக்கமும் இடப்பக்கமும் அசைத்தசைத்து விரித்து விரித்து வீசிக் காண் பித்தார்; அஃதாவது, ஒருவருக்கு அதிருஷ்டவசத்தால் ஐசுவரியம் சேரின், அன்னவர் அதனை அல்லா(ஹ்)வுக்காக நல்ல தர்மவழியிலே அதிக தாராளமாய் அள்ளியள்ளி யிறைத்திடுதல் வேண்டும் என்க.

நபிபெருமான்(சல்) எவ்வாறு ரூபாய் இருபத்தையாயிரத்தை ஒரேநாளில் தங்கள் திருக்கரங்கொண்டு "இப்படியும் இப்படியும்" அள்ளியள்ளி யிறைத்து முடித்துத் தீர்த்துவிட்டார்களென்ப தைச் சென்ற அத். 5. 'ஹதீ'. 27-இன் கீழுள்ள அ. கு. 17-இல் காண்க. இதுபோன்ற தர்மங்குறித்தே "நாலடியா" ரிலும் ஒரு செய்யுள் காணப்படாநின்றது. (முன் பக். 123 நோக்க).

4. எனவே, கடனிறுக்க வேண்டியவர் தாமே வலுவில்

6. அபூ' ஹுரய்ரா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"கடனைத் திருப்பிக் கொடுக்க (இயல்புடைய) பணக்காரன் காலஹரணம் செய்வது அக்கிரமமே யாம்."— (பு'க'ா. 43 : 12)

7. நபிகளுதர் (சல்அ'ம்) (இவ்வாறு) இயம்பியதாய்ச் சொல்லப்படுகிறார்கள் :—

"(கடனைத் திருப்பிக்) கொடுக்க வழிவகையுள்ளவன் (அவ்வாறு) கொடுக்காது காலந்தாழ்த்துவது, அவனுக்குத் தண்டனை யளிக்கப்படுவதையும் கண்ணியம் (குறைக்கப்) படுவதையும் நியாயமாகவே ஆக்கிவிடுகிறது."[5]— (பு'க'ா. 43 : 13)

8. அபூ' ஹுரய்ரா கூறியுள்ளார்: நபிகளுதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"எவ ரொருவர் ஆஸ்தியை விட்டுச் செல்கிறாரோ, அஃது அவருடைய வாரிஸ்களுக்கே; இன்

---

கொடுக்கவேண்டிய தொகைக்கு மேலே சேர்த்துக் கொடுப்பது வட்டியாக மாட்டாது என்றுணர்க.

5. இ'ர்ல்'— (கண்ணியம்) குறைக்கப்படுவது நியாயமாகுதல் என்பது, கடினமொழிகளை வழங்குவதைக் குறித்துக் காட்டும். உ'(க்):கூப'ா— (தண்டனை) அளிக்கப்படுவ தென்பது சரீர சிக்ஷையைக் குறித்துக் காட்டுகிறது (பு'க'ா 43 : 13). கடனிறுக்க வசதியுள்ளவன் அதனைக் கொடுக்க மழுப்பி மறுப்பனுயின், அவன் சிறைக் கூடத்திற்கு அனுப்பப்படலா மென்பது பெறப்படுகின்றது; ஆனால், கடனிறுக்க வழிவகையில்லாது பரம சங்கடத்திலே சிக்கிச் சுழல்பவன் விஷயத்தில், அக்கடனை மன்னித்துத் தள்ளுபடி செய்துவிடுமாறு சி'பாரிஷ் செய்யப்பட்டுள்ளது (பு'க'ா சுருக். 22 : 5). அல்லா(ஹ்)வும் மன்னிக்கச் சொல்லுகிறான் (2 : 280).

னம், எவரொருவர் (கடன்) சுமையை விட்டுச் செல்கிருரோ, அஃது எம்முடைய பாரமே."[6]— (பு'க'ா. 43 : 11)

9. ஆ'யிஷா பிராட்டியார் கூறினர்: நபிகள் திலகம் (சல்அ'ம்) ஒரு குறிப்பிட்ட தவணையில் (கிரயம்) கொடுப்பதாகச் சொல்லி, ஓர் எஹூதியிடத்திருந்து ஆகார(ப் பண்ட)ம் வாங்கினர்கள்; இன்னம், அதற்காக இரும்பினல் செய்யப் பட்டிருந்த ஒரு போர்க்கவசத்தை அடைமானம் வைத்தார்கள்.— (பு'க'ா. 43 : 1)

10. அபூ' ஹுரய்ரா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"அடைமானம் வைக்கப்பட்ட பிராணி, அஃது அடைமானமா யொப்படைக்கப் படுங்கால், அதன் (போஷணையின்) நிமித்தம் செலவழிக்கப்படும் தொகைக் கீடாகச் சவாரி செய்ய உபயோகிக்கப் படலாம்; மேலும், பால் கறக்கும் பிராணியின் பால், அஃது அடைமானமாய் வைக்கப்படுங்கால், பருகப் படலாம்; இன்னம், (அம் மிருகத்தின்மீது) சவாரி செய்கிறவனும், (அந்தப் பாலை) அருந்துகிற

---

6. கல்— (பாரம், அல்லது சுமை) என்பது ஒரு குடும்பத்தைச் சுமப்பதையும், அதற்குள்ள கடனைத் தீர்ப்பதையும் சேர்த்துக் குறிக்கும். எனவே, இஸ்லாமிய ராஜ்யம் அநாதக் குடும்பங்களை ஆதரிப்பதையும், கடன்கொடுக்க முடியாதவர் கடன்களை இறுப்பதையும் ஏற்றுக்கொள்ளக் கடமைப்பட்டதா யிருக்கிறது என்றறிக.

வனுலுமே (அதற்குரிய) செலவு சுமந்து கொள்ளப் படும்."[7] — (பு'கா. 48 : 4)

11. அபூ' ஹுரய்ரா கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"எவனொருவன் தன்னுடைய பொருளே ஓர் 'இன்ஸால்வெண்ட்' டானவனது வசத்தி லிருப்

---

7. 'ஹதீ'. 9, 10 இரண்டையும் கூர்ந்து நோக்குவோமாயின், குர்ஆன் ஷரீ'பில் (தலை. ஆயத் 2) அடைமானம் வைப்பது குறித்துக் கூறப்பட்டுள்ள அவ்விரண்டு நிபந்தனைகளுமே — பிரயாணத்திலிருக்க வேண்டுவதும், கெட்டெழுத்துக்காரன் அகப்படாது போய்விடுவதும் ஆகிய இரண்டும்— அத்தியாவசியமெனக் கொள்ளத் தேவையில்லை யென்னும் உண்மையை நாம் ஓர்ந்துகொண்டு விடுவோம். அடைமானக் கடனென்பது — போக்கியம்— பொதுவான விதியாகவே இருந்து வருகிறது; இதற்குரிய ஓரே நிபந்தனை, அடைமானம் வைக்கப்படும் பொருள் கடன் கொடுப்பவர் வசம் போய்விட வேண்டுமென்பதே யாம். அடைமானப் பொருளின்மீது கடன் கொடுத்தவன் செலவு செய்துவர வேண்டியிருப்பதால், அவன் அப்பொருளை அனுபவித்துக் கொள்ளலா மென்பது இந்த 'ஹதீ':தால் விளக்கமாய்ப் புலப்படுகின்றது. எனவே, நிலம், அல்லது வீடு போக்கியத்துக்கு அடைமானம் வைக்கப் படலாம். அச்சொத்துப் பணம் கடன் கொடுத்தவன் சுவாதீனத்திலே விட்டுவிடப்படல் வேண்டும். ஆகவே, அவன் அவ்வீட்டுக்குப் பழுது பார்த்தல் முதலிய காரியங்களுக்குச் செலவு செய்து, தானே அதில் குடியிருந்து கொள்ளலாம்; அல்லது இன்னொருவருக்குக் குடிக்கூலிக்கு— (வாடகைக்கு) அது விடப் படலாம்; இவ்வாறே, போக்கியம் பெற்றவன் செலவுசெய்து உழுது சாகுபடி செய்து அந்த அடைமான நிலத்தில் அறுவடையாகும் ம'ஹ்ஸூலை அனுபவித்துக் கொள்ளலாம். எனவேதான், வெறு ஈடுகாட்டும் அடைமானம் எனப்படும் பந்தகத்தின்மீது கடன் கொடுப்பது கூடாததாகின்றது; என்னெனின், இது வட்டி வியாபாரமே யாகும் என்பதனுலென் றறிக.

ப்தாய்க் கண்டு கொள்கிறனே, அவனுக்கே அத னிடத்து ஏனையோரைப் பார்க்கினும் அதிகமான உரிமை இருக்கிறது."— (பு'க்'ா. 43 : 14)

12. ஸஈ' து'ப்'னுல் முஸய்யிப்' கூறினர் : ஒரு மனிதன் "இன்ஸால்வெண்ட்" டாக ஆய்விடு முன்னே எவனொருவன் தனக்குச் சேரவேண் டியதை எடுத்துக் கொள்கிறனே, அஃது அவனுக் குரியதே என்றும், ஓர் "இன்ஸால்வெண்ட்" டான வனிடத்து எவனொருவன் தனது பொருளே இருப் பதாக அடையாளம் கண்டு பிடிக்கிறனே, அவனுக்கே அதனிடத்து அதிகமான உரிமை இருக்கிறதென்றும் உ'ஃதுமான் (ரலி') தீர்ப்புச் செய் தார்.[8]— (பு'க்'ா. 43 : 14)

13. ஆ'யிஷா பிராட்டியார் கூறினர் : அல்ப'ஃகரா வென்னும் (2-ஆம்) அத்யாயத்திலுள்ள வட்டி சம்பந்தமான ஆயாத்கள் வெளியாக்கப்பட்ட பொழுது, நபிகள் திலகம் (சல்அ'ம்) மஸ்ஜிது'க்குப் புறப்பட்டுச் சென்று, அவற்றினை ஜனங்களுக்கு ஓதியுங் காண்பித்தார்கள் ; அப்பால் (மயக்கந்தரும்) மது வஸ்துக்களில் வர்த்தகம் செய்வதைத் தடுத்து விட்டார்கள்.[9]— (பு'க்'ா. 8 : 73)

---

8. இவ்விரு (11, 12) 'ஹதீ'ஃதுகளிலும் கூறப்பட்டுள்ள விதி, "இன்ஸால்வெண்ட் பேர்வழி" யும், கடன் கொடுத்தவனும் உட் கையில் ஒன்று சேர்ந்துகொண்டு, ஏனைக் கடன்காரர்களை ஏமாற்று திருக்கும் பொழுதுதான் செல்லத் தக்கதாகும்.

9. இங்கே குறிக்கப்பட்டுள்ள ஆயாத்களின் பகுதிகள் இவ் வத்யாயத்தின் தலைப்பிலே பொறிக்கப்பட் டுள்ளன (தலை, ஆயாத் 3, 4). அந்தத் தலை. ஆயத் 3-இல் ஆண்டவன் வர்த்த

14. ஜாபி'ர் கூறி யுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) வட்டி வாங்குகிறவனையும், வட்டி கொடுக்கிறவனையும், அத்தொழிலுக் குரிய (வர்த்தமானத்)தை வரைகிறவனையும், அதற்குரிய இருசாக்ஷிகளையும் சபித்துத் தீர்த்தார்கள்; மேலும், சொன்னார்கள்:—

"அவர்கள் (அனைவருமே) ஒரே மாதிரி தான்."[10]— (முஸ்–மிஷ். 12:4)

---

கத்தை அனுமதித் திருப்பதாகவும், வட்டியைத் தடுத்திருப்ப தாகவும் கூறியிருக்கிறான்; ஆனால், வர்த்தகம் அனுமதிக்கப் பட்டிருப்பதால் 'மது' வர்த்தகமும் ஆகுமென்று ஒரு சிலர் கருதி விடக்கூடு மல்லவா? ஆதலினால், மயக்க வஸ்துக்கள் தடுக்கப் பட் டிருத்தலினால், அம்மயக்கந்தரும் வஸ்துக்களில் வர்த்தகம் செய்வதும் கூடாதென்று அவ்வாயத்தை ஓதிக் காட்டியபொழுது, நபிகட்டிலகம் உடன்கூறி வற்புறுத்தி யுள்ளார்கள். ஆதலால், மது—(கஞ்சா, அபின் போன்றவை யுட்பட) விற்றல், மதுக் கடையை ஏலத்திலெடுத்தல், கள்ளுக்காகத் தென்னை பனை ஈச்சை களை விடுதல் ஆதியவெல்லாம் இதில் சேரவில்லையா வென்று நீங் களே நிதானித்துப் பாருங்களேன்! ஒரு சிலர் மதுக்கடைகளை ஏலத்தில் எடுப்பர். ஏனென்றால், 'இனி யொருவருக்கு விற்க' என்பர். இந்த முஸ்லிமே ஏலப்பேர்வழி; அப்பால் மேல் லாபத் திற்கு விற்றுவிடுவர். இது கூடுமோ?

10. "வட்டி" என்பது அரபில் ரிப'ா—(சேர்ந்தது, அல்லது அதிகப்படியானது) என்று அழைக்கப்படுகிறது; என்னெனின், இது, கடனுகக் கொடுக்கப்படும் "அசல் தொகை"க்கு மேலே அதிகமாய்ச் சேர்க்கப்படும் இலாபமா யிருக்கிறது. எனவே, இச் சொல், வட்டி, கடுவட்டி யிரண்டையுமே சுட்டிக்காட்டுகிறது. வட்டி வாங்கித் தின்னுகிறவர்களைக் :குர்ஆன்ஷரீ'ப் ஷைத்தானால் தொடப்பட்டு ஸ்மரணையற்று வீழ்த்தாட்டப் பட்டவர்களுக்கே நிகராக்கிக் காண்பித்துள்ளது (2:275); என்னெனின், வட்டி

15. அபூ'ஹுரைய்ரா கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"ஜனங்கள்மீது (இனி) ஒருகாலம் வரும்;

---

வாங்கித் தின்பவன் சுயநலத்திலும் மிகவுங் கீழ்மையான சுயநயத்திலே ஆழ மூழ்கிப்போய்க் கிடப்பவனு யிருந்துவருகிறுன் என்க. இஸ்லாம், "கோஆப்பரேட்டிவ்" முறையிலே பாங்க் நடத்துவதையும், வர்த்தகம் செய்வதையும் தடைசெய்வதில்லை; என்னெனின், இத்தகைய தொழில்களில் முதல் போடுகிறவர்கள் லாப நஷ்டம் இரண்டுக்கும் ஜவாப்தாரி யாகிறுர்கள். சாதாரண வட்டித்தொழிலில் கடன்பட்டவன் என்னவாறுலும், முதல் கொடுத்தவன் தனக்குரிய வட்டியின்மீதே கண்ணுங் கருத்தும் உள்ளவனு யிருக்கிறுன். இன்னம், வட்டி வாங்கக்கூடா தென்னும் சித்தாந்தத்தின் அந்தரங்கத் தாத்பரியம், பணத்தை விடத் தொழிலே சிறந்ததென்பதா யிருக்கிறது என்பதேயாம். பணத்தைக் கொடுப்பவன் ஒன்றுஞ் செய்யாமலே வெறுமனே குந்திக்கொண்டு வட்டிக் கணக்கைப் பார்த்துக்கொண் டிருக்கிறுன்; ஆனுல், கடன் பெறுகிறவன் அந்தப் பணத்தைக்கொண்டு லாபஞ் சம்பாதிக்கப் பல்வேறு தொழில்களையும் புரிகிறுன். இறுதியில் ஒருகால் நஷ்டமடைந்து விடுகிறுன்; அவன் பட்ட பாடெல்லாம் வீணுய்ப் போய்விடுவதுடன், கடன் கொடுத்தவன் தொல்லைக்கும் உள்ளாய் விடுகிறுன். எனவே, இவனது தொழிலைக்காட்டினும், அவனது முதலே பெரிதென்றுதான் அன்னவன் விவாதிக்கிறுன். இதுதான் இஸ்லாத்துக்கு முரணு யிருக்கிறது. வெறு முதலைவிடத் தொழிலல்லவா லாபத்தைக் கொண்டுவருகிறது? வட்டியானது பணத்தைக் கைக்குக் கை மாற்றியே விடுகிறது; ஆனுல், தொழிலோ, லாபத்தை உற்பத்தி செய்கிறது.

இந்த 'ஹதீ':து வட்டி வாங்குகிறவ னுடன்கூட வட்டி கொடுப்பவனையும், பத்திரம்வரையும் நெட்டெழுத்துக்காரனையும், சாக்ஷிகளையும் சேர்த்துக் கண்டிக்கின்றது. என்னெனின், வட்டிக் கடைக்காரனுக்கு ஏனையோரெல்லாம் உதவிபுரியும் உடந்தைக் குற்றவாளியா யிருக்கிறுர்கள்.

அப்பொழுது வட்டியை உள்ளே விழுங்காத ஒரு மனிதன்கூட இருக்கமாட்டான் ; இன்னம், ஒருவன் அதனை விழுங்க வில்லையாயினும், அதன் ஆவிவந்து அவனைப் பொதிந்து கொள்ளும்."[11]— (அபூ'த'ா-மிஷ். 12 : 4)



11. இஃது இக்காலத்துக் குரிய ஓரரிய தீர்க்கதர்சனமாயிருந்து வருகிறது. உலகாயத சீர்திருத்த மென்பது தன் துச்சநிலையிலே இப்பூவுலகத்தை எங்குக்கொண்டு சென்றுவிட்டிருக்கிறதெனின், இற்றைநாளில் எவருமே வட்டிகொடாது எவ்விதத் தொழிலிலும் பிரவர்த்திக்க முடியாத இக்கட்டான நிலையிலே வந்து சிக்கித்தவித்து நிற்கிறார்கள் என்க. இதுகாலை முதலில்லாது ஒரு தொழிலும் செய்வதற் கியலாது; வட்டிகொடாது ஒரு பைசாவும் கடன் பெறுவதும் சாலாது. எனவே, இந்த வட்டியின் வாடை அனைவரையும் இதுகாலை அடைய வளைந்து கொண்டே கிடக்கிற தென்பது கண்கூடு. என்னே வட்டிப் பிசாசின் இறுகிய எஃகு விலங்கு !

## அத்யாயம்—26

### நன்கொடையும் தர்மமும்

### (ஹிப'ாவும் வ:க்'பும்)

1. "ஆதலின், (நன்கொடை) கொடுத்து, தீமையை விட்டுத் தற்காத்துக் கொண்டும், நல்ல விஷயத்தை மெய்யாக மேற்கொண்டும் நடக்கிறவனைப்பற்றி யென்றாலோ, அன்னவனை நாம் இலேசின் பக்கலிலே சேர்ப்பிப்போம்" (:குர். 92 : 5—7).

2. "ஆதலின், தொழுதுகொள்கிறவர்களுக்குக் கேடே! (ஏனென்றால்) அவர்கள் தங்கள் தொழுகைகளை மறந்திருக்கிறார்கள்; அவர்கள் பிறருக்கு (ப் பகட்டாய்)க் காண்பிக்கிறார்கள்; அற்ப தருமங்களையும் தடுக்கிறார்கள்" (107 : 4—7).

ஹிப'ா என்பது நன்கொடை கொடுப்பதாகும்; இஃது ஏழைக்கும் கொடுக்கப்படலாம்; பணக்காரனுக்கும் கொடுக்கப்படலாம். இது சத'(க்):காவினின்று வேறுபட்டுள்ளதே: உறவினராயினும், அல்லாதாராயினும், சத'(க்):காவென்பது ஏழைகளுக்கே அளிக்கப்படும். கொடை கொடுத்தலென்பது (தர்மத்துடனே) சிலாகித்துக் கூறப்படுகிறது (தலை. ஆயத் 1). சிறு சிறு தருமங்களைத் தடுப்பது இஸ்லாத்தின் தத்துவத்துக்கே முரணாயிருக்கிறதென்று கண்டிக்கப்படுகிறது (தலை. ஆயத் 2). சிறிதேயாயினும் பெரிதேயாயினும், கொடை கொடுப்பதைக்கொண்டு முஸ்லிம்கள் தங்கள் சகோதர வாஞ்சையை அபிவிருத்தி செய்துகொள்ள வேண்டுமென்று வற்புறுத்தப் பெறுகிறார்கள் ('ஹதீ'. 1, 2). ஏழை மனிதனுங்கூடத் தான் பெற்றுள்ள தர்மத்தினின்று கொடை கொடுக்கலாம் ('ஹதீ'. 3). ஒருவர் தாம் பெற்றுக்கொள்ளும் கொடைக்குப் பதிலாகப் பிரதியுபகார மொன்றைச் செய்யலாம் ('ஹதீ'. 4). ஒருவர் பெற்ற குழந்தைகளுள் ஒன்றுக்குமட்டுமே ஒரு பொருளைக் கொடுத்து, மற்றக் குழந்தைகளுக்கு ஒன்றுங்

கொடாது விட்டுவிடுவது அநீதியாதலின், அது கூடாதெனத் தடுக்கப்பட் டுள்ளது ('ஹதீ'. 5). கணவன் தன் மனைவிக்கு நன்கொடை கொடுக்கலாம்; இப்படியே மனைவியும் தன் கணவனுக்கு நன்கொடை கொடுக்கலாம் ('ஹதீ'. 6). ஒரு மனைவி தன் கணவன்பாலிருந்து பெற்றுக்கொண்டுள்ள பொருளிலிருந்து வேறு நன்கொடை யளிக்கலாம் ('ஹதீ'. 7). ஒருவருக்கு மேற்பட்ட பல பேருக்குச் சேர்த்து ஒரே கொடையாகக் கொடுக்கலாம் ('ஹதீ'. 8). பொதுவான சொத்திலிருந்தும் கொடை கொடுக்கப் படலாம் ('ஹதீ'. 9). முஸ்லிமல்லாதவர்பா லிருந்து ஒரு நன்கொடை பெறப்படலாம்; அப்படிப்பட்டவருக்கு ஒரு நன்கொடை கொடுக்கப்படலாம் ('ஹதீ'. 10, 11). ஒருமுறை நன்கொடையாய்க் கொடுக்கப் பட்டதை வாபஸ் பெறுவது தடுக்கப்பட் டுள்ளது ('ஹதீ'. 12). ஆயுள் முழுமைக்கு மென்று ஒரு கொடை கொடுக்குங்கால், அதற்குச் சில நிபந்தனைகளை ஏற்படுத்துவது அவசியமாகும் ('ஹதீ'. 13). ஒருவர் தமது ஆஸ்தியினின்று வ:க்'பு எழுதி வைக்கலாம்; அது விற்கவோ வாங்கவோ சுவாதீனமில்லாதது, அல்லது வ:க்'பு அ'லல் அவ்லாத்' என்பதாய்ச் செய்யப்படலாம் ('ஹதீ'. 14). ஒருவர் மற்றொருவர்பாலிருந்து ஒரு நன்கொடையை, அல்லது வேறேதேனு மொரு நன்மையைப் பெற்றுக்கொள்ளுங்கால், அதற்காக நன்றி கூறும் வந்தனம் செலுத்துவது அன்னவர்மீது கடமையா யிருந்துவருகிறது ('ஹதீ'. 15).

1. அபூ' ஹுரைய்ரா கூறியுள்ளார்: நபிகள் திலகம் (சல்அ'ம்) நவின் றருளினார்கள்:—

"ஏ முஸ்லிம் மாதர்காள்! ஓரண்டை வீட்டுக்காரி தன்னுடைய அண்டை வீட்டுக்காரிக்கு (அனுப்பும் கொடையை) அஃதோர் ஆட்டின் குளம்பேயாயினும், அலக்ஷியமாய்க் கருதா திருக்கட்டும்."—(பு'க'ா. 51 : 1

2. ஆ'யிஷா பிராட்டியார் கூறி யுள்ளார்: நபிகணயகர் (சல்அ'ம்) சொன்னார்கள்:—

“ நீங்கள் ஒருவருக்கொருவர் கொடை கொடுத்துக்கொள்ளக் கடவீர்கள் ; என்னெனின், நன் கொடைகள் குரோதத்தை எடுத்தெறிந்து விடுகின்றன.”— (‘திர்மி—மிஷ். 12 : 17)

3. அனஸ் கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) இடத்து இறைச்சி கொண்டுவரப் பட்டது ; மேலும், அது ப’ரீராவுக்குத் தர்மமா யளிக்கப்பட்டது என்று கூறப்பட்டது. (அப்பொழுது நபீபெருமான்) அவர்கள் சொன்னார்கள் :—

“ அவளுக்கு அஃதொரு தர்மமே ; இன்னம், எமக்கோ, அஃதொரு நன்கொடையா யிருக்கிறது.”[1] — (பு’க’ா. 51 : 7)

4. ஆ’யிஷா பிராட்டியார் கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) ஒரு நன்கொடையைப் பெற்றுக் கொள்வதும், அதற்குப் பிரதிப்பிரயோஜனம் அளிப்பதும் வழக்கமா யிருந்தன.[2]— (பு’க’ா. 51 : 11)

5. நுஃ’மான் கூறினர் : என் தந்தை எனக்கொரு நன்கொடை யளித்தார் ; ‘அல்லா(ஹ்)வின் திருத்தூதரை (சல்அ’ம்) நீர் சாக்ஷியாக ஏற்படுத்து

---

1. ப’ரீரா என்பவள் ஒரு விடுதலை யடைந்திருந்த அடிமைப் பெண்ணா யிருந்துவந்தாள் ; அவள் தனக்குத் தர்மமாய்க் கிடைத்திருந்த இறைச்சியி னின்று நபி பெருமானுக்கு நன்கொடை யனுப்பினுள் ; அதனை அப்பெருமானார் அங்கீகரித்துக் கொண்டார்கள்.

2. நபிகள் திலகம் நன்கொடை பரிமாறிக் கொள்வதை ஆமோதித்து, அதனைக் கற்றுக்கொடுத்து முள்ளார்க ளென்பது இந்த ‘ஹதீ’:தால் விளக்கமாகின்றது.

கிறவரை நான் ஒத்துக்கொள்ள மாட்டேன்,' என்று அ'ம்ரா பி'ன்த் ரவா'ஹா கூறினர். ஆகையால், அவர்— (என் பிதா) அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) பால் வந்து, மேலும், சொல்வா ராயினர்: 'அ'ம்ரா பி'ன்த் ரவா'ஹாவின்பாலிருந்து (வந்ததை) நான் என் குமாரனுக்கு ஒரு நன்கொடை யளித்தேன்; இன்னம், அன்னவள், ஏ அல்லா(ஹ்)வின் திருத்தூதரே! உங்களைச் சாக்ஷியாக வரிக்க எனக்குக் கட்டளை யிட்டுளாள்.'

(இதற்கு)"அதைப்போன்றதை நீர் உம்முடைய எல்லா மைந்தர்கட்கும் கொடுத் திருக்கின்றீரா?" என்று (நபிபெருமான்) அவர்கள் வினவினர்கள். அ(தற்கென் தந்தையான)வர் இல்லை யென்று விடை யளித்தார். (இதுகேட்டு, நம்பெருமான்) அவர்கள், " அல்லா(ஹ்)வின்பால் உமது கடமையிலே ஜாக்ரதையா யிருந்துகொள்ளக் கடவீர்; உம்முடைய குழந்தைகளுக் கிடையிலே நீர் நீதத்தைக் கடைப்பிடிக்கக் கடவீர்!" என்று கூறினர்கள். ஆகவே, அவர்— (என் தந்தை) மீண்டுவந்து, தமது நன்கொடையைத் திரும்பப் பெற்றுக்கொண்டு விட்டார்.[3]— (பு'க'ா. 51 : 13)

---

3. நன்கொடை யளிக்குங்கால், சாக்ஷியொருவரை வைத்துக் கொள்வது நன்றென்று எடுத்துக் காட்டவே இமாம் பு'கா'ரீ இந்த 'ஹதீ'ஃதை ஈங்கெடுத்துக் கூறியுள்ளார். அ'ம்ரா என்பவள் நுஃ'மானுடைய மாதாவா யிருந்துவந்தாள்; எனவே, அம்மாது தன்னுடைய சொந்த மைந்தனுக்கு இனும் கொடுத்தாள். ஆயின், அவளுடைய கணவன் தனக்குப் பிறந்துள்ள எல்லாக் குழந்தைகளையும்—அவர்கள் வேறுமனைவியர் வயிற்றி லுதித்திருப்பினும்—

6. இப்’ராஹீம் கூறினர்: ஒரு மனிதனல் தன்னுடைய மனைவிக்கு நன்கொடை கொடுக்கப் படுவதும், ஒரு மனைவியால் தன்னுடைய கணவனுக்கு நன்கொடை கொடுக்கப்படுவதும் செல்லத் தக்கனவே.

உ’ம ருப்’னு அ’ப்’து’ல் அ’‘ஜீ‘ஜ், அவர்கள் (நன்கொடைகளைத்) திருப்பி யெடுத்துக்கொள்வது கூடாதென்று கூறினர்.[4]— (பு’க’ா. 51 : 14)

---

ஒரேவிதமாகவே பாவிக்க வேண்டுமென்று நபிபெருமானர்(சல்) நவின்றருளி யுள்ளார்கள். இதனை எம் முஸ்லிம்கள் ஊன்றிக் கவனிப்பார்களாக. ஒரு கணவன் தன்னுடைய ஒரு மனைவியின் சொத்தை அவளுடைய சொந்த மகனுக்கு மட்டுமே கொடுத்து விடக் கூடாதென்றும், அதனை அன்னவன் தன்னுடைய ஏனைக் குமாரர்களுக்கும்—வேறு தாரங்களின் பிள்ளைகளுக்கும்—சரிசமமாய்ப் பங்கிட்டுக் கொடுக்க வேண்டு மென்றும் நபிபெருமானர் (சல்அ’ம்) நவின்றருளி யிருக்க, இத்தரணியில் எத்தனையோ பிதாக்கள், தம்முடைய ஒரேமனைவியின் வயிற்றிலுதித்த எல்லாப் பிள்ளைகளையும் ஒரே சமமாய்ப் பாவிக்காது, சில பிள்ளைகளை விட்டுச் சில பிள்ளைகளுக்கு மட்டுமே தம்முடைய ஆஸ்தி முழுதையும் அளித்துவிட்டு, மற்றக் குமாரர்களை நடுத்தெருவிலே திரிய விட்டுவிடுகிறார்கள். இப்படிப்பட்ட துரோகிகள் அல்லா(ஹ்) வையும் அவனுடைய ரஸூலையும் ஏமாற்ற “ஸெட்டில்மெண்ட்” என்னும் பிரிட்டிஷ் அரசாங்கத் திரைக்குள்ளேயோடிப் புகலிடம் தேடிக் கொள்ளுகிறார்கள். இன்னார் இறந்த பின்னல், எந்த அரசாங்கம் “அங்கே” சென்று இவருக்குப் பாதுகாப்பளித்திடல் கூடும்?

4. இவ்வாறு செய்வது கூடாத காரியமே யாம்; என்னெனின், நபிபெருமான் (சல்அ’ம்) நன்கொடை கொடுத்ததைத் திருப்பி யெடுத்துக்கொள்வது வாந்தியெடுத்த வஸ்துவைத் திரும்ப எடுத்துச் சுவைக்க வாயில் போட்டுக்கொள்வதை யொக்குமென்று

7. அஸ்மா[5] கூறினர்: 'ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! 'ஜுபை'ர் எனக் களித்ததை யன்றி, வேறெந்தச் சொத்தும் எனக்கில்லை; (அதனை) யான் தர்மமாய்க் கொடுத்து விடட்டுமா?' என்று நான் கேட்டேன். (இதற்கு) அவர்கள் சொன்னர்கள் :—

"(அதிலிருந்து) நீ தர்மம் கொடுக்கக் கடவாய்; அதனை நீ தடுத்து நிறுத்திக் கொள்ளாதே; இன்றேல், அஃது உன்னைவிட்டுத் தடுத்து நிறுத்திக் கொள்ளப்படும்."— (பு'க'ா. 51 : 15)

8. அஸ்மா, :காஸிம் பி'ன் மு'ஹம்மது'க்கும் இப்'னு அபீ' அ'(த்)தீ:க்குக்கும் கூறினர்: நான் :காப'ாவில் என் சகோதரி ஆ'யிஷாவின் பாலிருந்து (சில சொத்தைச்) சுதந்தரித்துக் கொண்டேன்; மேலும், முஆ'வியா அதற்காக எனக்கு ஒரு நூறுயிரம் கொடுப்பதாய்க் கூறினர்: இப்பொழுது இஃதுங்கள் இருவருக்கும் (சொந்தம்).[6] — (பு'க'ா. 51 : 22)

9. நபிகள் திலகமும் (சல்அ'ம்) அவர்களுடைய தோழர்களும், அவர்கள்பா லிருந்து— (ஹவா'ஜின்கள்பா லிருந்து) யுத்தத்தில் தாங்கள்

---

கூறியுள்ளார்கள் ('ஹதீ'. 12). வாந்தி யெடுத்த வஸ்துவினிடத்துண்டாகும் அருவருப்புப் "பயிர்ப்பு" என்று அழைக்கப்படும். எனவே, கொடுத்த நன்கொடையை வாபஸ் எடுத்துக்கொள்வது அத்தகைய பயிர்ப்பேயாகும் என்க.

5. அஸ்மா என்பவர் 'ஜுபை'ரின் மனைவியா யிருந்தார்.

6. இந்த 'ஹதீ':து, ஒரு நன்கொடையை இருவருக்கு (அல்லது அதற்கு மேற்பட்டவர்கட்கு)ப் பொதுவாகவே கொடுத்துவிடலா மென்பதற்கு ஒரு திருஷ்டாந்தமா யிருக்கிறது.

அடைந்திருந்ததை ஹவா'ஜின்களுக்கே நன் கொடையாய்க் கொடுத்துவிட்டார்கள்; இன்னமது பிரிவினையாகாமலே இருந்து வந்தது.[7]— (பு'க'ா. 51 : 23)

10. அபூ' 'ஹுமய்த்' கூறினர்: ........அய்லா வின் அரசன் நபிபெருமானுக்கு (சல்அ'ம்) ஒரு வெள்ளைப் பெட்டைக் குதிரையை நன்கொடையாக அனுப்பி வைத்தான்; இன்னம், அன்னவர்கள் அவனுக்கு அணிந்துகொள்ள ஒரு போர்வையைக் கொடுத் தனுப்பினர்கள்.[8]— (பு'க'ா. 24 : 54)

11. அஸ்மா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத் தூதர் (சல்அ'ம்) காலத்திலே என் தாயார் என் னிடம் வந்தார்; ஆனாலவர் ஒரு விக்கிரஹ வணக்கக் காரரா யிருந்துவந்தார். ஆகையால், யான் அல்லா(ஹ்) வின் திருத்தூதரை (சல்அ'ம்) வினவலுற்றேன்: 'அவர் (இஸ்லாத்தின்பால்) சார மனமில்லாதவரா யிருக்கின்றார்; அவருக்கு யான் நன்மை செய்ய லாமா?' என்று கேட்டேன்; (இதற்கு) அவர்கள்

---

7. எனவே, இதிலிருந்து, ஒருவர் தமக்கென்று வேறு பிரிக் கப்படாது பொதுவாயுள்ள பொருள்களிலிருந்து தமக்குரிய வீதத்தைத் தர்மஞ் செய்துவிடலா மென்பது அறியக் கிடக் கின்றது.

8. இவ் வெள்ளைக் குதிரையை—(மாதுவானை)யனுப்பியவன் இஸ்லாத்தைத் தழுவாத அயல் மதவாதியா யிருந்தான். அவ னனுப்பிய குதிரை அங்கீகரிக்கப்பட்டு, பதிலுக்கு ஒரு போர்வை யும் அனுப்பப்பட்டது.

சொன்னார்கள்:— "ஆம்; உன் மாதாவுக்கு நீ நன்மை செய்யக் கடவாய்."[9]— (பு'க'ா. 51 : 29)

12. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினார்: நபிகள் நாயகம் (ஸல்அ'ம்) சொன்னார்கள்:—

"தான் நன்கொடையாக அளித்துள்ளதைத் திரும்ப எடுத்துக் கொள்கிறவன், தான் வாந்தியெடுத்ததன் பக்கல் திரும்புகிறவனைப் போலேயிருக்கிறான்."— (பு'க'ா. 51 : 30)

13. ஜாபி'ர் கூறினார்: உ'ம்ரா விஷயத்தில், எவனுக்கு அது வெகுமானிக்கப்பட்டதோ, அஃது அன்னவனுக்கே உரியதென்று நபிகள் திலகம் (ஸல்அ'ம்) தீர்ப்புக் கூறினார்கள்.[10]— (பு'க'ா. 51 : 32)

---

9. முஸ்லிமல்லாதார்க்கு ஒரு முஸ்லிம் கொடை கொடுக்கலா மென்பதற்கு இந்த 'ஹதீ':து அனுமதி யளிக்கின்றது. இன்னம், "தந்தை தாய்ப்பேண்" என்பதற்கும் இஃதோர் எடுத்துக்காட்டா யிருக்கிறது.

10. உ'ம்ரா— (அ'மர— "அவன் உயிர் வாழ்ந்தான்," என்பதாகும்) என்பது, இஸ்லாத்துக்கு முற்பட்ட காலத்து வழக்கமா யிருந்துவந்தது: ஒருவன் வேறொருவனுக்கு இவனது ஆயுளளவும் அனுபவித்துக்கொள்ள வீடொன்றைக் கொடுப்பான்; அவ்வாறு பெற்றுக்கொள்கிறவன் இறந்துவிட்ட பின்பு அவ்வீடு கொடை கொடுத்தவனுடைய வாரிஸ்களுக்குப் போய்ச் சேர்ந்துவிடும். இது கூடாதென்று நபிபெருமான் (ஸல்அ'ம்) தடுத்துவிட்டார்கள்.

அவ்வாறே, ரு:க்ப'ா— (ர:கப'—"வழி பார்த்தான்" என்பதாகும்) என்பது ஒரு பழங்கால வழக்கமா யிருந்துவந்தது: ஒருவன் வேறொருவனுக்கு ஒரு வீட்டைக் கொடுப்பான்; அதற்கொரு நிபந்தனை விதிப்பான்: கொடுத்தவன் முதலில் மரித்துவிட்டால், அப்பொழுது பெற்றுக் கொண்டவனுக்கே அவ்வீடு உரித்தாய் விடும்; பெற்றுக்கொண்டவன் முதலில் மரித்துவிட்டால், அது

14. இப்'னு உ'மர் கூறியுள்ளார்: உ'மருப்'னுல் க'த்தாபு'க்கு நிலமொன்று க'ய்ப'ரில் கிடைத்தது; ஆகவே, அன்னார் நபிபெருமானர் (சல்அ'ம்) பால் அதுகுறித்து அவர்களிடம் பரியாலோசனை புரிய வந்துசேர்ந்தார்; மேலும், கூறுவாராயினர்: 'ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! க'ய்ப'ரில் எனக்கு நில மிருக்கிறது; அதனைப் பார்க்கினும் விலை யுயர்ந்த வேறு சொத்தை யான் எப்

---

பொழுது அவ்வீடு கொடுத்தவனுக்கே திரும்பிப் போய்விடும்; இதில் இருவரும் எதிரியின் மரணத்தையே எதிர்பார்த்து நிற்பர். இமாம் பு'க'ாரீ இந்த ருஃப்'ாவை ஒரு விஷயமா யெடுத்துக் கொள்ளவில்லை; என்னெனின், சரியான அறிவாளிகளின் அபிப்பிராயப் பிரகாரம் ருஃப்'ா என்பது இஸ்லாத்துக்கே நேர்மாறான — (அங்கீகரிக்கப்படாத) வழக்கமா யிருக்கிறதனுல் என்க. உ'ம்ரா என்பதன் நிலைமை வேறு: இதில் கொடை கொடுப்பவன், பெற்றுக் கொள்கிறவனுக்கே அச்சொத்துச் சொந்தமென்று நிபந்தனை ஏற்படுத்தினுலும், அல்லது ஒரு நிபந்தனையும் ஏற்படுத்தாதுபோனுலும், அது முற்றமுற்ற நன்கொடையென்றே கொள்ளப்படும்; அப்பா லொருபொழுதும் அது கொடை கொடுத்தவனுக்குத் திரும்பிச்செல்ல மாட்டாது; ஆனுல், அந்தச் சொத்தைப் பெற்றுக் கொள்கிறவன் மரித்துவிட்ட பின்னுல் அது கொடுத்தவனுக்கோ, அல்லது அவனுடைய வாரிஸ்களுக்கோ திரும்பிப் போய்விட வேண்டுமென்று ஒரு நிபந்தனை ஏற்படுத்தப்பட்டிருப்பின், அது விஷயத்தில் இருவித அபிப்பிராயங்கள் காணப்படாநின்றன: ஒன்று, அச்சொத்து, ஒரு கடனேபோற் கருதப்பட்டு, அந்நிபந்தனையின் பிரகாரம் கொடுத்தவன் குடும்பத்துக்குத் திரும்பிப் போய்ச் சேர்ந்துவிடும்; அல்லது, அந்நிபந்தனை சட்டவிரோத மானதென்றும், ஆகையால் செல்லத்தக்கதன்றென்றும் தள்ளிவிடப்பட்டு, அச்சொத்தைப் பெற்றுக் கொண்டவனுக்கே அது சொந்தமாக்கப்பட்டு விடும்.

பொழுதுமே பெற்றுக்கொண்ட தில்லை; அது குறித்துத் தாங்கள் என்ன ஆலோசனை கூறுகின்றீர்கள்?' (இதற்கு) அவர்கள் சொன்னார்கள்:— "நீர் விழைந்தால், அந்தச் சொத்துப் பராதீனப் படுத்தப்படாமலே இருந்துவிடுமாறு செய்துவிடும்; இன்னம், அத(னின்று வரும் இலாபத்தி)னைத் தர்மத்திலே செலவு செய்துவிடும்." ஆகவே, உ'மர் அதனை(ப் பின்வரும்) நிபந்தனையின்மீது தர்மமாய்ச் செய்து வைத்து விட்டார்; (அஃதாவது:) அது விக்கிரயம் செய்யப்படக் கூடாது; நன்கொடையாகக் கொடுக்கப்படவுங் கூடாது; (வாரிஸ் கிரமத்தில்) சுதந்தரித்துக் கொள்ளப்படவுங் கூடாது. மேலுமதனை வறுமையுற்றோர்க்கும், உறவின்முறையார்க்கும், அடிமைகளை விடுவித்தற்கும், அல்லா(ஹ்)வின் பாதையிலே செலவு செய்தற்கும், தேசாந்தரிகளுக்கும், விருந்தினரை உபசரித்தற்கும் தர்மமாய்ச் செய்து வைத்துவிட்டார்; அதனை மேற்பார்வையிட்டுக் கண்காணிப்பவன்மீது, அதினின்று அன்னவன் புசித்தாலும், (ஏனையோரைப்) புசிக்கச் செய்தாலும் குற்றமில்லை; அதைக்கொண்டு (அவன்) செல்வம் சேர்ப்பது (மட்டும்) கூடாது.[11]— (பு'க'ா. 54 : 19)

---

11. இந்த 'ஹதீ':தில் விளக்கப்பட்டுள்ள விஷயம் வ:க்'ப் என்று கூறப்படுகிறது; (வ:க'ப– "அவன் வாளா நின்றான்," அல்லது, "நின்றுவிட்டான்," என்று பொருள்படும்). வ:க்'புக்குரிய பொருள் பொதுப்படையாய் ஸ்தாவர சொத்தாகவேயிருப்பது வழக்கம். இந்த 'ஹதீ':தில் அச்சொத்து விற்கப் படவோ, வேறுவிதத்தில் பராதீனப் படுத்தப்படவோ கூடா

15. உஸாமா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத் தூதர் (சல்அ’ம்) சொன்னர்கள் :—

“ எவ னெருவனுக்கு நன்மை செய்யப்பட்டு இன்னமவன் (அது) செய்தவனை நோக்கி, ‘அல்லா(ஹ்) உனக்குச் சம்மானமளிக்கக் கடவன்!’ என்று கூறியும் விடுகிறனே, அன்னவன் (அப்பொழுது) தன்னுலான சிறந்த துதியைச் செய்தவனய் விடுகிறன்.”[12]— (·திர்மி—மிஷ். 12 : 17)

---

தென்று கூறப்பட்டுள்ளது. ஆயின், அதினின்று வரும் வருவாய் மட்டுமே தர்மவழியில் செலவிடப்படலாம். ஆனல், இந்த வ:க்‘பில் குறிப்பிடப்பட் டிருப்பதேபோல், அந்தச் சொத்திலிருந்து வரும் இலாபத்தில் சொந்தக்காரரும், இவர்கள் ஏழைகளாயில்லா திருப்பினும், பங்கு பெறலாமென்பது விளக்கமாகின்றது; இது தான் பின்னே வ:க்‘பு அ’லல் அவ்லாத்’— “ ஒரு மனிதனுடைய மக்களுக்கு நன்மை செய்யக்கூடிய வ:க்‘ப் ”— என்று ஏற்படுத்தப் பட்டுள்ள வழக்கத்திற்கு அடிப்படையா யிருந்துவருகிறது. இந்தச் சொத்தை ஒருவரும் பராதீனப் படுத்துவது கூடாது; வாரிஸ்களும் பாகப் பிரிவினை செய்து கொள்வது கூடாது. அதிலிருந்து வரும் லாபத்தை மூலபுருஷனுடைய வாரிஸ்கள் சொந்த உபயோகத்திற்காக எடுத்துக் கொள்ளலாம்; அந்த லாபத்தி னின்று ஒருபகுதி அவசியமாகத் தர்மத்திற் கென்று செலவிடப்படல் வேண்டும்.

12. ஜ‘ஜாக்கல்லா(ஹ்)— [அல்லா(ஹ்) உனக்குச் சம்மானமளிக்கக் கடவன்!] என்று கூறக்கூடியதே, ஒரு மனிதன்பாலிருந்து ஒருவன் பெற்றுக்கொண்ட ஒரு நன்மைக்கு, அல்லது ஒரு நன்கொடைக்குப் பிரதியா யுள்ள சிறந்த நன்றிகூறலா யிருக்கிறது; இஃது அவனுக்குச் செலுத்தப்படும் ஒரு நன்றியாகவும், அவனுக்காகச் செய்யப்படும் ஒருயரிய பிரார்த்தனையாகவும் இருந்துவருகிறது. இவ்வா றுகத்தான் ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமுக்குச் சாதாரணமாய் நன்றி வந்தனம் கூறுவது வழக்கம்.

# அத்யாயம்—27

## மரணோபதேசஞ் செய்தலும் அனந்தரங் கொள்ளலும்
## (வசிய்யத்தும், விராஸத்தும்)

1. "உங்களுள் ஒருவனுக்கு மரணம் வந்தடுக்கும் பொழுது, அவன் (அதிகமான) ஐசுவரியத்தைப் பெற்றோர் களுக்கும், நெருங்கிய சுற்றத்தார்களுக்கும் விட்டுச் செல்வா னாயின், நியதி முறைப்படி வசிய்யத் செய்வது உங்கள்மீது கடமையாக்கப்பட் டிருக்கிறது ;— (இஃது) அல்லா(ஹ்)வை அஞ்சிக்கொள்பவர்மீது ஒரு கடமையாம்" (:குர். 2 : 180).

2. "ஏ ஈமான் கொண்டவர்காள்! உங்களுள் ஒருவ னுக்கு மரணம் நெருங்கி வரும்பொழுது, (அவன்) மரணோப தேசம் கூற நேருங்கால், உங்களுள்ளேயிருந்து இரு நீதமுள்ள மனிதர்களை, அல்லது...உங்களைப் பார்க்கினும் வேறாயுள்ளவர் களிலிருந்து இரு மனிதர்களை உங்களுக்கிடையில் சாக்ஷிகளாக வரித்துக் கொள்ளுங்கள்" (5 : 106).

3. "உங்களுடைய பிள்ளைகள் விஷயத்தில் அல்லா(ஹ்) உங்களுக்கு அறிவுறுத்துகிறான்: இரண்டு பெண் பிள்ளைக ளுக்குள்ள பாகத்தைப் போன்றது ஓர் ஆண்பிள்ளைக் குண்டு; ஆயின், அவர்கள் இருவருக்கு மேற்பட்ட பெண்களாயிருப் பின், அவர்களுக்கு அவன் (தந்தை) விட்டுச்சென்றதில் மூன்றில் இரண்டு பாகம் உரித்தாகும்; மேலும், ஒருத்தி மட்டுமே யிருந்தால், அன்னவளுக்கு (அதில்) சரிபாதியுண்டு; (மரித்துப் போன) அவனுக்குப் பிள்ளையிருந்தால், அவனுடைய தாய் தந்தையர் ஒவ்வொருவருக்கும் அவன் விட்டுச் சென்றதில் ஆறிலொரு வீதம் இருக்கிறது; ஆயின், அவனுக்குப் பிள்ளை யில்லாதிருந்து, அவனுடைய பெற்றோர் இருவர் மட்டுமே அவனுக்குரிய வாரிஸ்களா யிருப்பின், அதுபொழுது அவ னுடைய மாதாவுக்கு மூன்றிலொரு பாகம் உண்டு; (எஞ்சி

யது தந்தைக்கே). ஆனால், (இறந்துபோன) அவனுக்குச் சகோதரர்களிருந்தால், அப்பொழுது அவனுடைய மாதாவுக்கு ஆறிலொரு பாகம் உண்டு ;— (மேலே கூறப்பட்ட வீதங்களெல்லாம் மரித்துப்போன) அவன் செய்துள்ள வசிய்யத்துக்கோ (அவனுடைய) கடனுக்கோ (கொடுத்து முடித்த) பிறகேதான் (பிரிக்கப்படும்)...இன்னம், உங்கள் மனைவியர்— அவர்களுக்குப் பிள்ளை இல்லையாயின்— விட்டுச் செல்வதில் உங்களுக்குப் பாதிப் பாகம் இருக்கிறது ; ஆயின், அவர்களுக்குப் பிள்ளை இருந்தால், அதுபொழுது அவர்கள் விட்டுச் செல்வதில், அன்னவர்கள் செய்துள்ள வசிய்யத்திற்கோ, கடனுக்கோ (கொடுத்து முடித்த) பின்பு உங்களுக்குக் கால் பாகம்(தான்) உண்டு ; மேலும், உங்களுக்குப் பிள்ளை இல்லையாயின், நீங்கள் (மரிக்கு முன்னே) விட்டுச்சென்றதில் (உங்கள் மனைவியராய) அவர்களுக்குக் கால் பாகம் இருக்கிறது ; ஆயின், உங்களுக்குப் பிள்ளை இருந்தால், அதுகாலை நீங்கள் விட்டுச் சென்றதில், நீங்கள் செய்துள்ள வசிய்யத்திற்கோ, கடனுக்கோ (கொடுத்து முடித்த) பிறகு அவர்களுக்கு அரைக்கால் பாகம் இருக்கிறது. இன்னம், தாய் தந்தையரும் சந்ததியும் அற்றவராயிருக்கு நிலையிலே, (மரித்த) ஓர் ஆண், அல்லது ஒரு பெண் (சொத்தைவிட்டுச்) சுதந்தரம் கொள்ளப்படின், (அன்னவருக்கு) ஒரு சகோதரனோ, அல்லது ஒரு சகோதரியோ இருந்தால், அவ்விருவரில் ஒவ்வொருவருக்கும் (அச் சொத்திலிருந்து) ஆறிலொரு பாகம் உண்டு ; ஆயின், அதைவிட அதிகம் (பேர்) இருந்தால், (மரித்தவரால்) செய்யப்பட்டுள்ள வசிய்யத்திற்கோ ஏனையோருக்குத் தீமை பயக்காத கடனுக்கோ (கொடுத்து முடித்த)பிறகு அவர்கள் (அனைவரும்) மூன்றிலொரு பாகத்தில் கூட்டாவார்கள்" (4 : 11, 12).

அதிக சொத்தை விட்டுச்செல்லும் ஒவ்வொருவரும் வசிய்யத்— (மரணோபதேசம்) செய்யக் கட்டுப்பட்டுள்ளார் (தலை. ஆயத் 1 ; 'ஹதீ'. 1) ; அதற்குச் சரியான சாக்ஷியங்கள் ஏற்படுத்தப்படல்

வேண்டும் ('ஹதீ'. 2). வசிய்யத் செய்யப்படுவது தர்ம கைங்கரியத்துக்காக உபயோகிக்கப்படல் வேண்டும்; இன்னம், அது முழுச்சொத்தில் மூன்றிலொரு பங்குக்கு மேலே போகாதிருத்தல் வேண்டும் ('ஹதீ'. 2). வாரிஸ்களுக்குக் குறிப்பிட்ட பாகம் கிடைக்க வேண்டும் (தலை. ஆயத் 3; 'ஹதீ'. 9). வாரிஸ்களுக்கு வசிய்யத் செய்வது கூடாது ('ஹதீ'. 3). வறியவர்களான உறவினர்கட்குச் சொத்துக் கொடுப்பது தர்ம காரியமாய்க் கருதப்படுகிறது ('ஹதீ', 4).

இறந்துபோனவன் கடனை விட்டுச் செல்வானாயின், அன்னவன் சொத்தினின்று அந்தக் கடன் முதலில் கொடுபடல் வேண்டும்; அதன் பிறகுதான் அவனது வசிய்யத் நிறைவேற்றப்படல் வேண்டும் ('ஹதீ'. 5). முஸ்லிம்கள் முஸ்லிமல்லாதாரிடத்திருந்து வசிய்யத் சொத்துப் பெறுவது கூடாது; இவ்வாறே முஸ்லிம்களிடத்திலிருந்தும் முஸ்லிமல்லாதார் வசிய்யத் பெறுவது கூடாது; என்னெனின், அவ்விரு திறத்தினரும் அதுகாலைப் பகைவர்களாய் யுத்தம் புரிந்துகொண்டிருந்தனர் ('ஹதீ'. 6). நபிமார்கள் (சொந்த வாரிஸ்கள்) சுதந்தரித்துக் கொள்ளக்கூடிய சொத்தொன்றையும் விட்டுச் செல்வதில்லை ('ஹதீ'. 7).

வாரிஸ் கிரமப்படி பங்கீடு செய்யவேண்டியதை யெல்லாம் செய்து முடித்த பின்பு ஏதேனும் எஞ்சியிருந்தால், அது மிகவு நெருக்கமாயுள்ள ஆண் உறவினனுக்கே கொடுபடல் வேண்டும் ('ஹதீ'. 8). 'ஹதீ'. 9—11, நபிபெருமானுடைய தோழர்கள் சிற்சில வாரிஸ் பாத்திய வியாஜ்யங்களில் செய்துள்ள தீர்ப்புக்களை எடுத்துக் காட்டுகின்றன. நெருங்கிய உறவினர்கள் இல்லையாயின், பூட்டன் பூட்டியுடைய கிளையிலுள்ள வாரிஸ்களிலுள்ள நெருங்கிய பந்துக்களுக்குப் போய்ச் சேரும் அச்சொத்து; விடுவிக்கப்பட்டுள்ள அடிமைக்குங்கூடக் கொடுக்கப்படலாம். ஒருவனுடைய சொத்துக்கு ஒருவருமே வாரிஸ் இல்லாமற் போய் விடுங்கால், முஸ்லிம் அரசாங்கம், அல்லது முஸ்லிம் சமூகமே அவனுக்கு வாரிஸாய் விடுகின்றது ('ஹதீ'. 12—14). ஒருசிசு கத்திக் கொண்டே ஜனித்தால், அது வேறொருவர் சொத்துக்கு வாரிஸாவதற்கும், பிறருக்குச் சொத்துச் சுதந்தரிக்கக் கொடுப்பதற்கும்

அருகதை பெற்றுவிடுகிறது; அந்தச் சிசு அடுத்தாற்போலே மரித்து விட்டாலும் சரிதான் ('ஹதீ'. 15). ஒருவன் இனியொருவனைக் கொன்றுவிட்டு, அவனுடைய சொத்துக்கு வாரிஸாய் வருவது கூடாது ('ஹதீ'. 16). சட்டவிரோதமாய், 'ஹராத்தில் பிறக்கும் குழந்தை இனியொருவருடைய சொத்துக்கு வாரிஸாவதும், தன்னுடைய சொத்தை இனியொருவருக்குச் சுதந்தரித்துக்கொள்ள விடுவதும் கூடா ('ஹதீ'. 17).

1. இப்'னு உ'மர் கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"சொத்துள்ள ஒரு முஸ்லிமுக்கு,— அது குறித்து அவன் வசிய்யத் செய்தல் வேண்டும்— அவனுக்காக அன்னவனது வசிய்யத் வரைந்து வைக்கப்பட்டாலன்றி, ஈரிரவுகளுக்கு(த் தொடர்ச்சியாய்) உறங்குவது உரிமையா யில்லை."— (பு'க'ா. 55 : 1)

2. ஸஃ'தி'ப்'னு அபீ'வ:க்:காஸ் கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) (தங்கள்) இறுதி 'ஹஜ்ஜின் வருடத்திலே (எனக்கிருந்த) வியாதியின் காரணத்தினால்— அது மிகவுங் கடுமையாய்விட் டிருந்தது— மக்காவிலே என்னை வந்து பார்ப்பது வழக்கமா யிருந்தது. எனவே, 'எனது வியாதி மிகவுங் கடுமையாய் விட்டது; எனக்கோ அதிகமான ஆஸ்தி யிருக்கிறது; இன்னம், ஒரே குமாரியை யன்றி என்பாலிருந்து சுதந்தரங் கொள்ளக் கூடியவர் வேறெவருமே இல்லை; எனவே, யான் எனது சொத்திலிருந்து மூன்றிலிரண்டு பாகத்தைத் தர்மத்திற்கென்று வசிய்யத் செய்து விடட்டுமா?' என்று நான் கேட்டேன்;

(இதற்கு) அவர்கள், "கூடாது," என்று கூறிவிட்டார்கள். 'பாதி?' என்று நான் கேட்டேன்; (இதற்கும்) அவர்கள், "வேண்டாம்," என்று விடையளித்து விட்டார்கள். அப்பா லவர்கள் சொன்னார்கள் :—

"மூன்றிலொன்றை வசிய்யத் செய்க; மூன்றிலொன்றே அதிகம். என்னெனின், நீர் உம்முடைய வாரிஸ்களை வறுமையி னின்று அப்புறப்படுத்தி வைப்பீராயின், அஃது, அவ்வாறு அன்னவர்களை (ஏனை) ஜனங்கள்பாற் சென்று யாசகம் புரியும் நிலையில் வறுமையிலே விடுவதைப் பார்க்கினும் மேலானதா யிருக்கிறது; இன்னம், நீர் ஏதொன்றையும், அதற்காக, நீர் உம்முடைய மனைவியின் வாயிலே தீற்றும் ஒரு வஸ்துவுக்காகவுங்கூட நீவிர் சம்மானம் அளிக்கப் பெறாத முறையிலே, அதைக் கொண்டு அல்லா(ஹ்)வின் பிரீதியைநாடிச் செலவு செய்ய இயல மாட்டீர்."[1] — (பு'க'ா. 23 : 36)

---

1. இந்த ஸஃ'தென்பார் அப்பால் உ'மர் (ரலி') கி'லா'பத் ஆட்சியின்பொழுது பாரசீகத்தை வெற்றிகொண்ட மகா ஜெயசீலராய் உயர்ந்தெழுந்து நிற்பா ராயினார். இந்த 'ஹதீ'தில் கூறப்பட்டுள்ள விஷயம் ஹி. 10-இல் நடைபெற லாயிற்று; என்னெனின், அவ்வாண்டிலேதான் நபிபெருமானது இறுதி—(விடைபெற்றுக்கொள்ளும்) 'ஹஜ் நிறைவேற்றப் பட்டது. இதனால் விளக்கமாவது யாது? :குர். 2: 180-இல் கூறப்பட்டுள்ள வசிய்யத் விஷயம் எப்பொழுதுமே ரத்தாய் விடவில்லையென்பது தெளிவாய் விளங்கக் கிடக்கிறது. வசிய்யத் தென்பது தர்மகாரியங்களினிமித்தமாயே ஏற்படுத்தப்பட் டுள்ளதென்பதும் இந்த 'ஹதீ'தால் நன்கறியப்பட்டிருக்கிறது. எனவே, ஏனை வாரிஸ்களுக்குக் கிடைக்கவேண்டிய அனந்தரங்கள் தீங்குறா திருக்கும்பொருட்டு,

3. அபூ' உமாமா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) தங்கள் இறுதி 'ஹஜ்ஜில் செய்த உபன்யாசத்திலே (இவ்வாறு) கூறியதை யான் கேட்டேன் :—

"நிச்சயமாக அல்லா(ஹ்), ஏதேனும் (பாகம்) பெறுதற்கு உரிமை வாய்ந்துள்ள ஒவ்வொருவருக்கும் அவரவர் பாகத்தை அளித் துள்ளான்; ஆதலால், அனந்தரங் கொள்ளும் ஒருவருக்கும் மரணோபதேசம் செய்(து சொத்தை ஈ)வது கூடாது."[2]— (அபூ'த'ா— மிஷ். 12 : 20)

---

மூல புருஷன் தன் சொத்திலிருந்து மூன்றிலொரு பாகத்தையே வசிய்யத் செய்யலாம். அதற்கு மேலே செல்ல நபிபெருமானது அனுமதி இல்லையேயில்லை யென்றறிக. ஒரு மனிதன் தன் மனையாட்டியின் வாயிலே ஒரு கவளம் தின்னும் பண்டத்தை வைத்துத் தீற்றுவதுங்கூட ஒருவகைத் தர்மமென்றே நம் பெருமானார் நவின்றருளியுள்ளதும் ஈண்டுக் கவனிக்கத்தக்கதே யாம்.

2. ஒருவனுடைய சொத்தில் அனந்தரங்கொள்ளும் வாரிஸ்களுக்குரிய பாக வீதாசாரம் :குர்ஆன்ஷரீ'பிலே குறித்துக் கூறப்பட்டிருக்கின்ற படியால், அப்படிப்பட்ட வாரிஸ்தார்களுக்கு வசிய்யத் செய்வது கூடாததே யாகும். மீறிச் செய்தால், அந்த வசிய்யத் செல்லுபடியாகாது. வசிய்யத் செய்யப் பெறுகிறவர் வாரிஸ் கிரமத்தில் பங்கு பெருத பந்துவாகவேனும், பந்துவேயல்லாத அன்னியராகவேனும் இருக்கவேண்டும். ஆயின், பங்கு பெறக்கூடிய வாரிஸ்களெல்லாரும் ஒத்துக்கொண்டால், அப்பொழுது மூல புருஷன் வேறு விதத்திலே தன் சொத்தை வினியோகம் செய்யலாம். அனந்தரங் கொள்ளும் வாரிஸ்களின் அனுமதியின்றி அவ்வாறு வேறு முறையிலே வினியோகம் செய்ய அந்த மூல புருஷனுக்கு அதிகாரமில்லை யென்பது ஞாபகத்திலிருக்கட்டும். ஒருவனுக்கு ஆண்டவன் ஆஸ்தியை யளித்திடுங்

4. அனஸ் கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) அபூ'(த்) ':தல்'ஹாவுக்குச் சொன்னார்கள் :—

---

கால், அவன் அதனைத் தனதாயுள் முழுவதும் அனுபவித்துத் தீர்த்தபிறகு, அவனுடைய ஆயுளுக்குப் பின்னே இன்னாரின்னார் இன்னஇன்ன வீதாசாரப் பிரகாரம் பங்கீடு செய்துகொள்ள வேண்டுமென்று அல்லாஹுத் தஆ'லா தன் திருமறையிலே நன்கு விளக்கியுள்ளான்; நபிகள் திலகமும் (சல்) நன்றாக வியாக்கியானம் செய்திருக்கிறார்கள். இக் காரணத்தினாலேயே இஸ்லாத்தில் "உயில்"—(Will) என்பதொன்றுக்கு இடமில்லை; எனவே, எவரேனும் "உயில்"— மரண சாஸனம்— (தான் மரித்த பின்னால் தன் சொத்து இன்ன முறைப்படி வின்னியோகம் ஆகவேண்டுமென்று எழுதிவைக்கும் தஸ்தாவீஜ்) என்பதை எழுதி வைத்தாலும், இஸ்லாத்தின் சட்டப்படி அது செல்லாது. ஆனால், அல்லா(ஹ்)வையும் அவனுடைய ரஸூலையும்— ஏன், அனந்தரங் கொள்ளக்கூடிய வாரிஸ்களனைவரையுங்கூடச் சேர்த்து— ஏமாற்றிவிட நாடி ஒருசிலர், "தானசாஸனம்", "ஸெட்டில் மெண்ட்" என்றெல்லாம் இந்திய இங்கிலீஷ் ஆட்சியாரால் கூறப்பட்டுவரும் ஒளியுந் திரைகளுக்குப் பின்னே சென்று புகலிடம் தேடிக்கொள்கின்றனர். இவர்கள் ஏனைவாரிஸ்களின் அனுமதியின்றி, இந்த வாரிஸ்களுடைய கண்ணிலே— இல்லை, வாயிலே— மண்ணைத் தெள்ளிப்போட நாடித் திருட்டுத்தனமாய்ச் சதியாலோசனை செய்து, மேற்கூறப்பட்டுள்ள ஆங்கில ஆட்சிக்குடையாரின் சட்ட நிழலிலே சென்று ஒதுங்கிப் பதுங்கிக் கொள்கின்றனர். அவ்வாறு அல்லா(ஹ்)வையும், அவனுடைய ரஸூலையும், ஏனையெல்லா வாரிஸ்களையும் ஏய்க்கப் பார்க்கின்றனர்; இங்குள்ள ஆங்கில ஆட்சியின் சட்டப் பாதுகாப்பால் எல்லாரையும் ஏய்த்துவிட்டதாகவே எண்ணி மனப்பாலுங் குடிக்கின்றனர் அன்னார். ஆனால், அந்தோ! அவர்கள் தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொண்டு விடுகின்றனர்! இப்படிப்பட்ட "ஏமாந்த சோணகிரி"கள் இந்த ஆங்கில ஆட்சியின் பாதுகாப்பை விட்டு அதிசீக்கிரத்திலே

"உம்முடைய நெருங்கிய உறவினர்களுள் மிடியவரா யிருப்பவருக்கே அதனைக் கொடுக்கக் கடவீர்.'' ஆகையால், அன்னவர் அதனை 'ஹஸ் ஸானுக்கும், உப'ய் யிப்'னு கஃ'பு'க்கும் ஈந்து

---

வேறோர் நீதமுள்ள ஆட்சி நடைபெறும், மறுமையுலகுக்குச் சென்று சேர்வர். "......எப்போ தாயினும் கூற்றுவன் வருவான்; அப்போ தந்தக் கூற்றுவன் தன்னைச் சாற்றவும் போகான், தமரொடும் போகான், போற்றவும் போகான்; பொருளொடும் போகான்; நல்லாரென்னான், நல்குரவறியான்; தீயா ரென்னான், செல்வரென் றுன்னான்; தரியா னொருகணம் தறுக ணாளன், உயிர்கொட்டு போவான்......"

ஆங்கு இந்த ஆங்கில ஆட்சியாரின் பாதுகாப்புப் பின் தொடர்ந்து வரமாட்டாது: "ஸெட்டில்மெண்ட்", அல்லது "தான சாஸனம்" என்பதன் பெயரைக் கொண்டு சொத்துப் பெற்றுக்கொண்டவர்களும் அந்த மூல புருஷனுக்காகப் பரிந்து பேச, ஸி'பாரிஷ் செய்ய, இலஞ்சங் கொடுக்க வரமாட்டார் கள்; அவனுடைய பெண்டு பிள்ளைகளும் ஏனைப் பந்துக் களும் வந்து அந்த முதலாளிக்கு உதவிபுரிய உதவமாட்டார் கள்; இன்னம், அன்னவனுக்குரிய சொத்தும் சுதந்தரமும் ஒரு சிறிதும் அல்லா(ஹ்)வுக்கு இலஞ்சங் கொடுக்கப் பயன்பட மாட்டா;— என்னெனின், அம்மறுமை வாழ்க்கையில் இலஞ்சம் போன்ற இனிய பரிதானத்திற்கு இடமே யில்லையன்றே! அப்படிப் பட்ட ம'ஹ்ஷரிலே இம்மூலபுருஷன் தன்னந்தனியனாய், உதவு வாரற்று, தான் இவ்வுலகில் இழைத்துள்ள நன்மை தீமைகள் மட்டுமே தனக்குரிய சாக்ஷிகளாய்ப் புடைசூழ்ந்து கொண்டிருக்கு நிலையிலே, அல்லா(ஹ்)வையும், அவனுடைய ரஸூலையும், ஏனை யெல்லா வாரிஸ்களையும் ஒருமிக்க ஏய்த்துவிட்டதா யெண்ணி இறுமாந்து கொண்டிருந்த மனிதன்— இல்லை, "பிரபு" என்ன ஜவாப்' தன்னைப் படைத்த நாயகனுக்கும் நபிகள் நாயகத்துக்கும் சொல்லப்போகிறான்? அல்லா(ஹ்) கூறியுள்ள வாரிஸ்களை ஏமாற்றப் பார்க்கும் பிரபுக்கள், "ஸெட்டில்மெண்ட்", "தானசாஸனம்"

விட்டார்....இன்னம், அன்னவ ரிருவரும் என்னைப் பார்க்கினும் அவருக்கு நெருக்கமா யிருந்தார்கள்.[3]— (பு'க'ா. 55 : 10)

5. நபிகள் திலகம் (சல்அ'ம்) வஸிய்யத்தை நிறைவேற்று முன்னே கடனைக் கொடுத்துவிடுமாறு கட்டளை யிட்டார்க ளென்று ஒரு சமாசாரம் குறிக்கப்பெற் றிருக்கிறது.[4]— (பு'க'ா. 55 : 9)

6. உஸாமா கூறியுள்ளார்: நபிகள் நாயகர் (சல்அ'ம்) நவின் றருளினர்கள் :—

---

என்றெல்லாம் கூறித் தங்கள் சொத்தை வேறொருவருக்கு எழுதி வைக்கத் துணியுங்கால், மேற்கூறிய உண்மைகளை ஓர்ந்து பார்ப்ப தில்லையா? அல்லது, சூன்யவாதிகள் சொல்வதே போல், இந்த முஸ்லிமும் மரணத்துக்குப் பின்னே (மரணமே யில்லை யெனச் சாதிக்கத் துணியார்) மறுவுலக வாழ்க்கையு மில்லை, உயிர்த்தெழுவது மில்லை, நன்மை தீமையு மில்லை, நியாய விசாரணையு மில்லை, நாயனு மில்லை, நாயகமு மில்லை யென்றே நவின்றுகொண்டிருக்கின்றாரா, என்ன? அந்தோ மதியீனம்! மௌட்டிய மதியீனம்!!

3. அபூ'(த்) :தல்'ஹாவுக்குச் சிறிது ஆஸ்தியிருந்தது ; அதனை அவர் தர்மத்திற் கென்று கொடுத்துவிட நாடினார் ; அதனை அவருடைய நெருங்கிய உறவினருள் வறியவர்கட்கே கொடுப்பது நலமென நபிபெருமான் (சல்) நவின்றருளி விட்டார்கள் ; வாரிஸ்க ளென்னு முறையிலே அவர்களே அச்சொத்தைப் பெற்றுக்கொள்ள அதிக அருகதை வாய்ந்தவர்களா யிருந்தார்கள்.

4. இறந்தவ னுடைய சொத்திலிருந்து முதன்முதலாய்(ப் பிரேத வடக்கச் சடங்கிற் கப்பால்) அவனது கடன் தொகை கொடுபடல் வேண்டும் ; ஏனென்றால், அப்பாலேதான் வசிய்யத்துக்கும் விராஸத்துக்கு முரிய எஞ்சிய சொத்து இத்துணை யென்பது நிச்சயமா யேற்படும்.

“முஸ்லிமா யிருப்பவர் கா‘பிரானவர்பா லிருந்து அனந்தரங் கொள்ளார்; கா‘பிரா யிருப்பவரும் முஸ்லிமானவர்பா லிருந்து அனந்தரங் கொள்ளார்.”[5]— (பு’க’ா. 85 : 25)

7. ஆ’யிஷா பிராட்டியார் கூறி யுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) நிர்யாண மடைந்த பொழுது, நபிகள் திலகத்தின் (சல்அ’ம்) பிராட்டிமார் தங்களுக் குரிய வாரிஸ் பாத்தியதையைக் கேட்க உ’:துமானை அபூ’ப’க்ரின்பால் அனுப்ப நாடினார்கள்; (அப்பொழுது) ஆ’யிஷா கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) (இவ்வாறு) இயம்ப வில்லையா?—

“நாங்கள் (நபிமார்கள்) அனந்தரங் கொள்ளப் பெறுவதில்லை; நாங்கள் விட்டுச் செல்வதெல்லாம் தர்மத்திற்கே சேரும்.”[6]— (பு’க’ா. 85 : 2)

---

5. மதீனாவிலே எட்டாண்டுகள்மட்டும் மூமினானவர்களும் கா‘பிரானவர்களும் ஒருவரோடொருவர் யுத்தம் புரிந்துகொண்டு இருபெருங் கக்ஷிகளாய்ப் பிளவுபட்டுக் கிடந்தார்கள்; எனவே, இவ்வுத்தரவு அப்படிப்பட்ட காலத்திலே விடுக்கப்பட்டிருத்தல் வேண்டும்.

6. அபூ’ப’க்ர் சித்’தீ’:க் (ரலி’) அவர்கள் க’லீபாவாக நியமனம் பெற்றபொழுது இவ்வாறே, நபிகள் திலகத்தின் சொத்துகளெல்லாம்— அப்படிப்பட்ட சொத்து ஏதேனும் இருந்திருக்குமாயின்,— தங்களுக்கே வாரிஸ்கிரமத்தில் கிடைக்க வேண்டுமென்று ‘ஹ’ஜ்ரத் ‘பா(த்)திம(த்)து’ஜ் ’ஜாஹ்ரா (ரலி’) விண்ணப்பித்துக் கொண்டதை ‘ஹ’ஜ்ரத் அபூ’ப’க்ர் (ரலி’) செவியேற்காது, அத்தகைய நபிமாரின் சொத்துக்கள் சிஷ்யகோடிகளாகிய ஞானக் குழந்தைகட்கே உரியனவாகு மல்லது, சொந்தக் குழந்தைகளுக்கு

8. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறியுள்ளார்: நபிகள் திலகம் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"பாகங்களைப் பெற்றுக் கொள்ள உரிமை யுள்ளவர்கட்கு (அன்னவர்களுக்கு) ஏற்பட்டுள்ள வீதங்களை அளித்து விடுங்கள்; அப்பால் என்ன எஞ்சி யிருக்கிறதோ, அது நெருங்கியுள்ள ஆண் உறவினனுக்கா யிருக்கிறது."[7] — (பு'க'ா. 85 : 4)

9. 'ஜய்த்' கூறினார்: ஓராண்பிள்ளை, அல்லது ஒரு பெண்பிள்ளை தனக்குப் பின்னே ஒரு குமாரியை விட்டுச் செல்லுங்கால், அவளுக்குச் சரிபாதி யுண்டு; இன்னம், இரண்டு (குமாரிகள்) அல்லது அதிகமானவர்கள் இருப்பார்க ளாயின், அவர்கள் (அச் சொத்திலிருந்து) மூன்றிலிரண்டு பங்கு பெறுவார்கள்; இன்னம், அன்னவர்களுடனே ஆண்பிள்ளை யொருவன் சேர்ந்துவிடு வானாயின், அவர்களுடனே சுதந்தரங்கொள்ளும் அன்னவனைக் கொண்டே ஆரம்பம் செய்யப் படுகிறது; மேலும், அவனுக்குள்ள பாகம் அவனுக்கு அளிக்கப்பட்டு விடுகிறது; அப்பால் எஞ்சியிருப்பது, இரு பெண் களுக்குரியபாகம் ஓர் ஆணுக்கென்னும் முறையிலே

---

உரித்தாவது கூடாதென்று, இந்த'ஹதீ'ஃதஆதாரமாய்க்கொண்டு, கூறிவிட்டார்கள்.

7. இதுதான் இஸ்லாத்திலுள்ள விராஸத் சட்டத்துக்குரிய ஒரு முக்கிய மூலவிதியாய்க் கருதப்பட்டு வருகிறது. வாரிஸ்களுக் குரிய குறிப்பிடப்பட்டுள்ள பங்குகள் தலை. ஆயத் 3-இலே கூறப்பட் டிருக்கின்றன. அப்பங்குக ளெல்லாம் கொடுபட்டு முடிந்தபின்னால் ஏதேனும் எஞ்சியிருக்குமாயின், அஃது இறந்து போனவனுடைய நெருங்கிய ஆண் பந்துவுக்குப் போய்ச்சேரும்,

(அக் குழந்தைகளுக்கிடையே) பிரித்துக் கொடுக்கப் படும்.[8]— (பு'க'ா. 85 : 4)

---

8. இந்த 'ஹதீ':தின் முதற்பகுதியிலே கூறப்பட்டுள்ள விதி சில சமயங்களில் சங்கடமாய்வந்து முடிகிறது: இறந்துபோகும் ஒருவன் (அல்லது ஒருத்தி) இரு பெற்ருேர்களையும், இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட குமாரிகளையும், தன்னுடைய மனைவியையும் (அல்லது கணவனையும்) விட்டுச் செல்கிருன் (அல்லது செல்கிருள்). இந்த 'ஹதீ':தின் முற்பகுதியிலுள்ள விதிப்படி, பெற்ருேர்கள் செத்தவனுடைய சொத்திலிருந்து மூன்றிலொருபாகம் பெற்றுக்கொள்வார்கள்; குமாரிகளெல்லாரும் மூன்றி லிரண்டு பாகத்தை எடுத்துக் கொள்வார்கள். அப்பால் கணவனுக்கோ, அல்லது மனைவிக்கோ ஒன்றும் எஞ்சியிருக்க மாட்டாது. இஃதொரு தர்மசங்கடம். ஆயின், எல்லாக் குழந்தைகளும்— அவர்க ளனைவரும் குமாரர்களே யாயினும், குமாரிகள்மட்டுமே யாயினும், குமாரர்களும் குமாரிகளும் கலப்பா யிருப்பினும் — ஒரேவிதமாய் நடத்தப்பட்டால், மேற்கூறிய சங்கடம் ஏற்பட மாட்டாது. இந்த 'ஹதீ':தின் பிற்பகுதியில், குமாரர்களும் குமாரிகளும் இருக்க நேருங்கால், அவர்களுடனே அனந்தரங்கொள்ளும் ஆடவனொருவன்கூட இருந்து விடுவனுயின், அவனைக் கொண்டே ஆரம்பம் செய்யப்பட வேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது. இந்த விதி ஏகலசந்தர்ப்பங்களிலும் அனுஷ்டிக்கப்பட்டுவந்தால், சங்கடமொன்றும் விளையமாட்டாது. எவ்வா றெனின்: இறந்தவரின் இரு பெற்ருேர்களும், கணவன் அல்லது மனைவியும், குழந்தைகளுடனே பிழைத்திருப்பார்க ளாயின், அவர்கள்— (முதலிற் கூறப்பட்டவர்கள்) முதலிலே தங்கள் பாகங்களைப் பெற்றுக் கொள்வார்கள் ; — பெற்ருேர்களுக்குத் தலைக்கு ஆறிலொரு பங்கு கிடைக்கும்; கணவன், அல்லது மனைவிக்கு நான்கிலொன்று, அல்லது எட்டிலொன்று கிடைக்கும்; எஞ்சியது ஆண்மக்களுக்கு, அல்லது ஆணும்பெண்ணும் கலந்த மக்களுக்குக் கிட்டும் ; ஆனல், பெண் மக்கள்மட்டுமே இருப்பார் களாயின், அன்னவர்கட்கு நிலைமைக்குத் தக்கவாறு எஞ்சியதி லிருந்து பேர்பாதி, அல்லது மூன்றிலிரண்டு பங்கு போய்ச்சேரும்.

10. 'ஜய்த்' கூறினர்: ஒரு (மரித்த) மகனுடைய பிள்ளைகள், இவர்களையன்றி (இறந்தவன் தந்தைக்கு) வேறு மகன் இல்லா திருக்குங்கால், அம் மகனுடைய ஸ்தானத்தில் வந்து நிற்பார்கள்; அவர்களுள் ஆண்கள் அவர்களுடைய ஆண்களே போலும், அவர்களுள் பெண்கள் அவர்களுடைய பெண்களே போலும் ஆய்விடுகிறார்கள்; அவர்கள் அனந்தரங் கொள்வதேபோல் இவர்களும் அனந்தரங் கொள்வார்கள்; இன்னம், அன்னவர்கள் (ஏனை உறவினர்களை) விலக்குவதேபோல் இன்னவர்களும் விலக்குவார்கள்; இன்னம், (மரித்த) மகனுடைய மகன் (வேறு உயிருள்ள) மகனுடனே அனந்தரங் கொள்ளான்.[9]— (பு'க'ா. 85: 6)

9. மரித்தவன் தந்தைக்கு வேறொருமகன் உயிரோடிருந்தால், இறந்துபோன மகனுடைய மக்களுக்கு ஒன்றும் கிடைப்பதில்லை; அஃதாவது, தந்தை இருக்கும்பொழுது அவனுடைய மகன் இறந்துபோய்விட்டால், இறந்தமகனுடைய மக்களுக்கு அந்தப் பாட்டன் ஒன்றும் பங்குகொடுப்பது வழக்கத்தி லில்லை. இது குறித்து நபிபெருமானது தீர்ப்பொன்றும் காணக்கிடைக்கவில்லை. இப்படிப்பட்ட சிக்கலான விஷயங்களில் நபிகள் நாயகரின் தோழர்கள் பற்பலவிதமான அபிப்பிராயங்களைக் கூறியுள்ளார்கள் ('ஹதீ'. 11) எனவே, இந்த 'ஹதீ':தில் 'ஜய்தெ'ன்பார் கூறியுள்ள அபிப்பிராயமே முடிவான தீர்ப்பென்று கூறிவிடுதல் கூடாது. பு'க'ா. 85 : 7-இல் இவ்வாறு ஒரு விஷயம் காணப்படாநின்றது: இப்'னுமஸ்ஊ'த்' தம்முடைய இறந்துபோனமகனுடைய மகளை இரண்டாவது குமாரியாய்க் கருதி, அன்னவளுக்கும் ஒரு பகுதி சொத்துக் கொடுத்துள்ளார். இந்த 'ஹதீ'தை ஆதாரமாய்க் கொண்டு ஆராயப் புகுமிடத்து, தந்தை யிருக்க மகனிறந்துவிட்டால், இறந்தவனுடைய குழந்தைகளை இறந்த அம்மனிதன் ஸ்தானத்திலே வைத்து அவனுக்குரிய பாகத்தை அவனுடைய

11. இப்’னு அ’ப்’ப’ாஸ் கூறினர்: என்னுடைய மகனுடைய மகன், என்னுடைய (எல்லாச்) சகோதரர்களையும் விலக்கி விட்டு என்பாலிருந்து அனந்தரங் கொள்ளுகிறான்; எனவே, யானும் ஏன் என் மகனுடைய மகனிடத்திருந்து அனந்தரங் கொள்ளுவது கூடாது? ஆயின், உ’மர், அ’லீ, இப்’னு மஸ்ஊ’த்’, ‘ஜய்த்’ ஆகியவர்களிடத் திருந்து வெவ்வேறுவித அபிப்பிராயங்கள் கூறப்பட்டுள்ளன.— (பு’க’ா. 85 : 8)

12. பு’ரைய்த’ா கூறினர்; கு’‘ஜாஆ’ வர்க்கத்தினின்று ஒரு மனிதன் மரித்துப் போயினன்; அப்பொழுது அவனுக்கிருந்த அனந்தரச் சொத்து நபிகள் நாயகத்திடம் (சல்அ’ம்) கொண்டுவரப்பட்டது. அதுகாலை, “இவனுடைய வாரிஸை, அல்லது பெண்டுகள் வழியில் இவனுக்குப் பந்துவாயுள்ள ஒருவனைத் தேடிப்பிடியுங்கள்,” என்று எம்பெருமானர் இயம்பலுற்றார்கள். ஆனல், அவர்கள் அவனுக்குரிய வாரிஸையேனும், பெண்டுகள் வழியில் அவனுக்குப் பந்துவாயுள்ள வேறெவனையேனும் காணமுடியவில்லை. ஆகவே, அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) அறைய லாயினர்கள் :—

---

குழந்தைகளுக்கே ஈயவேண்டு மென்னும் விஷயம் நன்கு விளக்கமாகின்றது. இதுதான் நியாயமாகவும் புத்திக்குப் பொருத்தமாகவும் புலப்படுகின்றது. (‘ஹதீ’. 15-ம் இதையே கூறுகிறது). இதனை இந்திய அரசாங்கமும் மத்திய சட்டசபை யங்கத்தினர்களும் கவனித்து, இங்குள்ள “முஹம்மதியலா”வைச் செப்பஞ் செய்து சீர்படுத்திவைக்க மாட்டார்களா?

"கு''ஜாஆ' வர்க்கத்தினின்று, பூட்டன் தலை முறையின் வழியாய் இவனுடனே சம்பந்தப்படக் கூடிய நெருங்கிய பந்துவுக்கு அதனைக் கொடுத்து விடுங்கள்."[10]— (அபூ'த'ா—மிஷ். 12 : 19)

13. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறியுள்ளார்: ஒரு மனிதன் இறந்து போனான்; ஆனால், அவனுக்கு, அன்னவன் உரிமை யளித்திருந்த ஓரடிமையை யன்றி, வேறு (எவ்வித) வாரிஸு்ம் இருக்கவில்லை. "அவனிடத்திருந்து (அனந்தரங்கொள்ள) எவனேனும் இருக்கிறானா?" என்று நபிகள் திலகம் (சல்அ'ம்) வினவினார்கள். (இதற்கு) அவர்கள், அன்னவன் உரிமை யளித்திருந்த ஓரடிமையை யன்றி வேறெவனுமே இல்லை யென்று விடையளித்தார்கள். ஆகவே, நபிகள் திலகம் (சல்அ'ம்)

---

10. இந்தக் "கேஸில்" இறந்தவனுடைய பாட்டன்பூட்டன் தலை முறையிலே தோன்றியுள்ள நெடுநெடுந்தூர உறவினனுக்கே அந்தச் சொத்து அளிக்கப்பட்டுவிட்டது; அப்படியும் ஒரு பந்துவுமே கிடையாமற் போகும் நேரத்திலே இறந்தவனால் விடுவிக்கப் பட்டுள்ள அடிமைக்கு அவனுடைய ஆஸ்தி அளிக்கப்பட்ட தென்று அடுத்துவரும் 'ஹதீ':து அறைந்துகொண் டிருக்கிறது. வேறெந்த வழியும் இல்லாது போய்விடுங்காலே அப்படிப்பட்ட அனாதைச் சொத்து அரசாங்கப் பொக்கிஷமாகிய பை'த்துல் மாலுக்கு வந்துசேரவேண்டியதா யிருக்கிறது ('ஹதீ'.14 நோக்க). ஆகையால், இறந்துபோகும் மனிதர்களுள் சிலர் தங்களால் நியாயமாய் வாங்கப்பட்டு, பிறகு திருப்பிக்கொடுக்க இயலாதுபோய்விடும் கடன்களை விட்டுச் செல்லுங்கால், அன்னவர்களின் கடன்களைக் கொடுத்துத் தீர்க்க வேண்டுவதும் முஸ்லிம் அரசாங்கத்தின் பொறுப்பாகவே போய்விடுகின்றது.

அவனது அனந்தர(ச் சொ)த்தை அவ்வடிமைக்கே அளித்துவிட்டார்கள்.— (அபூ’த’ா—மிஷ். 12 : 19)

14. மி:க்த’ாம் கூறினார் : அல்லா(ஹ்)வின் திருத் தூதர் (சல்அ’ம்) சொன்னார்கள் :—

“ஒவ்வொரு மூமினனவருக்கும், அவர் அன்னவருக்கே நெருக்கமா யிருப்பதைப் பார்க்கினும் நானே நெருக்கமா யிருக்கிறேன். எனவே, எவனொருவன் தனக்குப் பின்னே கடனை, அல்லது ஆதரிக்க வேண்டிய குழந்தைகளை விட்டுச் செல்கிறானோ, அது (கவனிக்கப்பட வேண்டிய பொறுப்பு) நம்மைச் சார்ந்ததே ; இன்னம், எவனொருவன் ஆஸ்தியை விட்டுச் செல்கிறானோ, அஃது அவனுடைய வாரிஸ்களுக்கே ; இன்னம், வாரிஸில்லாத மனிதனுக்கு நானே வாரிஸா யிருக்கிறேன் ; (ஆகவே) அவனது ஆஸ்தியை நானே அனந்தரங் கொண்டு, அன்னவனை(க் கடன்) சிறையிலிருந்து காப்பாற்றியும் விடுகிறேன்.”[11]— (அபூ’த’ா—மிஷ். 12 : 19)

15. ஜாபி’ர் கூறினார் : அல்லா(ஹ்)வின் திருத் தூதர் (சல்அ’ம்) சொன்னார்கள் :—

---

11. முஸ்லிம் அரசாங்கமொன்று இருந்து அரசு செலுத்தி வருவதாயின், அது நபிகள் திலகத்தின் ஸ்தானத்திலே வந்து நின்றுகொள்ளும் ; அப்படிப்பட்ட அரசாங்கமொன்றும் இல்லாத காலத்திலே, இறந்தவனுக்கு நெருங்கிய அல்லது தூரத்திய பந்து எவனும் இல்லாது போய்விடும் வேளையிலே, முஸ்லிம் சமுதாயம் முன்னுக்கு வந்து அவனது ஆஸ்தியை அனந்தரங் கொண்டு ஆவன செய்யக் கட்டுப்பட்டுள்ளது.

"அழுதுகொண் டிருக்கும் நிலையிலே ஒரு குழந்தை ஜனிக்குங்கால், (அது மரித்துப் போய் விடின்) அதன்மீது பிரேத வடக்கத் தொழுகை தொழவேண்டும்; அஃது அனந்தரங் கொள்ளவும் படும்."— (இப்'னுமா—மிஷ். 12 : 19)

16. அபூ' ஹுரய்ரா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள்:—

"கொலை செய்தவன் அனந்தரங் கொள்ள (அருகதை பெற) மாட்டான்."[12]— ('திர்மி—மிஷ். 12 : 19)

17. அ'ம் ரிப்'னு ஷுஐ'ப்' கூறி யுள்ளார்: நபிகள் திலகம் (சல்அ'ம்) சொன்னார்கள்:—

"எவனொருவன் சுயேச்சையுள்ள ஒரு ஸ்திரீயுடனோ, அல்லது அடிமைப் பெண்ணுடனோ சட்ட விரோதமான—('ஹராமான) முறையிலே சம்பந்தம்—('ஜினா) செய்து விடுகிறானோ, (அதனால் பிறக்கும்) குழந்தை ('ஜினாவில் ஜனித்த குழந்தையாதலின்) அனந்தரம் கொள்ளவு மாட்டான்; அனந்தரம் கொள்ளப்படவு மாட்டான்."— ('திர்மி—மிஷ். 12 : 19)

---

12. ஒருவன் தான்கொன்று தீர்த்துவிட்ட மனிதனது சொத்திலிருந்து அனந்தரம் பெற்றுக்கொள்ள ஒரு சிறிதும் அருகதைபெற லாயிக்கில்லையென்று இந்த 'ஹதீது' வலியுறுத்தியுள்ளது.

# அத்யாயம்—28

## போனகமும் பானகமும்

1. "ஏ மானிடர்காள்! பூமியிலிருந்து (முளைத்து) அனுமதிக்கப்பட்டதாகவும் பரிசுத்தமுள்ளதாகவும் இருக்கும் நல்ல வஸ்துக்களைப் புசிக்கக் கடவீர்கள்" (:குர். 2 : 168).

2. "இன்னம், நீங்கள் புசிக்கக் கடவீர்கள்; பருகவுங் கடவீர்கள்; மேலும், அதீதமாய்ப் போய்விடாதீர்கள்; (என்னெனின்) நிச்சயமாக அவன்— (ஆண்டவன்) அதீதமாய்ப் போகின்றவர்களை நேசிப்பதில்லை" (7 : 31).

3. "ஏ ஈமான் கொண்டவர்காள்! அல்லா(ஹ்) உங்களுக்கு அனுமதித்துள்ள நல்ல வஸ்துக்களை நீங்கள் (வீணே) விலக்கிக் கொள்ளாதீர்கள்; மேலும், வரம்பைக் கடவாதீர்கள்" (5 : 87).

4. "இன்னம், எதன்மீது அல்லா(ஹ்)வின் நாமம் ஓதப் (பெற்று அறுக்கப்) பெறவில்லையோ, அதிலிருந்து நீங்கள் புசித்திட வேண்டாம்" (6 : 122).

5. தானே மரித்ததும், இரத்தமும், பன்றியின் இறைச்சியும், அல்லா(ஹ்) அல்லாததன் பெயர் சொல்லி(ப் பலியாக்கி)யதும், குரல்வளை நெரிந்(திறந்)ததும், அடி(த்துக் கொல்லப்) பட்டதும், (உயரத்திலிருந்து) விழுந்(து செத்)ததும், (ஒன்றுடனொன்று) முட்டிக்கொண்டு மரித்ததும், வன விலங்குகள் தின்றதும்,— நீங்கள் (அல்லாஹ்வின் நாமங் கொண்டு) அறுத்ததையன்றி;—மேலும், நடப்பெற்றிருப்பவைக(ளாகிய விக்கிரகங்க)ளுக்கு(ப் பலியாக) வெட்டப்பட்டதும்...உங்கள்மீது தடுக்கப்பட் டிருக்கின்றன" (5 : 3).

6. "கடல் வேட்டையும், அதன் ஆகாரமும் உங்களுக்கு அனுமதி யளிக்கப்பெற் றிருக்கின்றன...இன்னம், நீங்கள்

இ'ஹ்றாம் கட்டியவர்களா யிருக்கும் கால முழுதும் உங்களுக்குத் தரைவேட்டை தடுக்கப்பட் டிருக்கின்றது" (5:96).

7. "இன்னம், வேதத்தை யருளப்பெற்றவர்க ளுடைய ஆகாரம் உங்களுக்கு அனுமதிக்கப்பட் டிருக்கிறது; மேலும், உங்களுடைய ஆகாரம் அவர்களுக்கு அனுமதிக்கப்பட் டிருக்கிறது" (5:5).

8. "நீங்கள் சேர்ந்து புசிப்பதிலும், அல்லது தனித் தனியாய்ப் புசிப்பதிலும் உங்கள்மீது தோஷமில்லை" (24:61).

9. "ஈமான் கொண்டவர்காள்! நிச்சயமாக மயக்கந் தரும் வஸ்துக்களும், சூதாட்டங்களும்...ஷைத்தானுடைய காரியங்களி னின்றுள்ள அசுசியா யிருக்கின்றன; ஆகவே, நீங்கள் ஜயசீலர்க ளாவான்வேண்டி அவற்றினை உதறித் தள்ளக் கடவீர்கள்" (5:90).

ஆகார சம்பந்தமாய்த் திருக் :குர்ஆன் ஒரு சில பொது விதிகளையே எடுத்தோதி யிருக்கின்றது. புசிக்கப்படும் வஸ்துக்கள் சார்பாய்க் கூறுமிடத்து, அது முதலிலே 'ஹலாலான— (சட்ட பூர்வமாய் அனுமதிக்கப்பட்டுள்ள) பண்டமாயிருத்தல் வேண்டும் (தலை. ஆயத் 1); இந் நிபந்தனைக்கு இரண்டு ஷரத்துக ளுண்டு: அது 'ஹராமல்லாத— (விலக்கப்பட்டிராத) ஆகாரமாயும், 'ஹராமல்லாத வழியால் சம்பாதிக்கப்பட்ட பொருளாயும் இருத்தல் வேண்டும். அதற்குரிய இரண்டாவது நிபந்தனை, அவ்வாகாரம் பரிசுத்த முள்ளதாக— (:தய்யிப'ாக—நல்லதாக) இருக்க வேண்டு மென்பது (தலை. ஆயத் 1); அஃதாவது, புசிப்பதற்கு அருகதையுள்ளதா யிருக்கவேண்டு மென்பதாம். துர்க்கந்த முள்ளதாக, அல்லது அழுகி ருசி மாறிப்போனதாக இருப்பது கூடாது. அடுத்தபடியாக, மனிதர்கள் அருந்துவதிலும் பருகுவதிலும் மிதமா யிருந்து கொள்வதே சாலவும் சிறந்த மத்திப மார்க்கமா யிருக்கிறது (தலை. ஆயத் 2); என்னெனின், அளவுக்கு மிஞ்சினால், அமிர்தமும் நஞ்சாம்; போஷணைக் குறைவுள்ள போஜனத்தால் தேகம்

மெலிந்து போவதேபோல், அதி புஷ்டியுள்ள ஆகாராதிகளை இரைப்பையுள்ளே அதிகம் திணிப்பதாலும் உடல்நிலை உபாதைக் குள்ளாய் விடுகின்றது. மிதபோஜன மென்பது அளவுக்கு, அல்லது அவசியத்துக்கு மேற்போகு முறையிலே ஆகாரம் அருந்தா திருப்பதாகும். ஆண்டவனால் அனுமதிக்கப்பட்டுள்ள ஆகாராதிகளைத் தாமே வேண்டாமென்று தடுத்து விலக்கிக் கொண்டு வீண் பட்டினி கிடப்பது தலை. ஆயத் 3-இல் கண்டிக் கப்பட் டிருக்கிறது. அல்லா(ஹ்)வின் பேரால் அறுக்கப்படும் பிராணிகளின் இறைச்சி அனுமதிக்கப்பட்டுள்ளது (தலை. ஆயத் 4). விலக்கப்பட்டுள்ள ஆகாராதிகள் தலை. ஆயத் 5-இல் விவரிக்கப் பட்டுள்ளன. கடலிலும் கரையிலும் வேட்டையால் கிடைக்கும் ஆகாரங்கள்— ஒரே விலக்குவிதியுடனே— அனுமதிக்கப்பட்டுள் ளன (தலை. ஆயத் 6). முஸ்லிமல்லாதா ருடனேயும் சமபந்தி போஜனம் செய்வது அனுமதிக்கப்பட்டிருக்கிறது (தலை. ஆயத் 7). முஸ்லிம்கள் தனித்தும் புசிக்கலாம்; ஏனையவர்களுடனே கலந்தும் பந்திபோஜனம் செய்யலாம் (தலை. ஆயத் 8). மது— (மயக்கந்தரும்) வஸ்துக்கள் இஸ்லாத்திலே முற்றும் தடுக்கப்பட் டிருக்கின்றன (தலை. ஆயத் 9).

ஆகார சம்பந்தமாயுள்ள ஏனை விதிமுறைகள் 'ஹதீ':துகளில் காணப்படுகின்றன: ஒரு பிராணி அறுக்கப்படுங்கால், அதன்மீது அல்லா(ஹ்)வின் திருநாமம் ஓதப்படுதல் வேண்டும் ('ஹதீ'. 1). அதன் உதிரத்தை ஓடச்செய்யும் எத்தகைய கூர்மையான கருவி யைக் கொண்டும் அறுக்கலாம் ('ஹதீ'. 2). அறுப்பதென்பது, கழுத்திலுள்ள மிடற்று நாளங்கள் மட்டுமே அறுபடும்படியாக வும், பிடரியிலுள்ள முதுகந்தண்டு துண்டிக்கப் படாமலும் இருக்குமாறு சேதிப்பதாகும் ('ஹதீ'. 3, 4). அதற்குத் துன்பம்— (ஏதேனும் சங்கடம்) நேர்ந்து விடுங்கால், அந்தப் பிராணியை அறுத்துப் புசிக்கலாம் ('ஹதீ'. 5). அறுக்கவேண்டிய ஒழுங் கின்படி முறையாக அறுக்கப்படின், முஸ்லிமல்லாதவனால் அறுக் கப்படும் பிராணியை நம் முஸ்லிம்கள் புசிக்கலாம் ('ஹதீ'. 6). சந்தேகமான சந்தர்ப்பங்களிலே அல்லா(ஹ்)வின் திருநாமத்தை அதன்மீது உச்சரித்துவிட்டுப் புசிக்கலாம் ('ஹதீ'. 7). சிற்சில

நிபந்தனைகளுக்குக் கட்டுப்பட்டு வேட்டையாடிய பிராணிகளைப் புசிக்கலாம் ('ஹதீ'. 8, 9). மாம்சபக்ஷணம் செய்யும் மிருகங்கள், பற்களுள்ளனவா யிருப்பின், தடுக்கப்பட் டிருக்கின்றன ('ஹதீ'. 10). மயக்கந் தரக்கூடிய மது வஸ்துக்கள் விலக்கப்பட் டிருக்கின்றன ('ஹதீ'. 11, 12); அன்னவை, மயக்க முண்டாக்கக் கூடிய அளவினுக்குக் குறைந்திருப்பினும், அருந்தப்படுவது கூடாது ('ஹதீ'. 13). ஆகார மருந்தப்போகு முன்னே கைகளைக் கழுவிக் கொள்ளுதல் அவசியமாம்; அருந்தி முடித்த பின்னரும் அக் கைகளைக் கழுவுவது அவசியமே; அதுபொழுது வாயையும் நன்ருகக் கழுவிக் கொப்புளித்தல் வேண்டும் ('ஹதீ'. 14, 15). ஆகாரம் அருந்த ஆரம்பிக்குங்கால், பி'ஸ்மில்லா(ஹ்) என்று கூறித் துவக்குவதும், ஆகாரம்செய்து முடித்தபின்பு ஒரு சிறு பிரார்த்தனை புரிவதும் நபிபெருமானுருக் குரிய வழக்கமா யிருந்துவந்தன ('ஹதீ'. 16, 17). போனகத்தையும் பானகத்தையும் வாயால் ஊதி ஆறவைப்பது ஆகாது; அவற்றினை மூடிவைத்தல் வேண்டும் ('ஹதீ'. 18—20). ஆகார மருந்துவதில் கத்தியை உபயோகிக்கலாம் ('ஹதீ'. 21); கரண்டியையும் முள்ளையும் உபயோகிப்பது குற்றமன்று. பொன்னும் வெள்ளியும் ஆடம்பரவஸ்துக்களா யிருத்தலினுல், அவற்ருலாய ஆகாரமருந்தும் கருவிகளையும் பாத்திரங்களையும் இஸ்லாம் அ்னுமதிக்கவில்லை ('ஹதீ'. 22). ஒரு மனிதன் ஒரு விருந்துக் க்ழைக்கப்பட்டால், அவன் அதனை ஏற்காது மறுப்பது கூடாது; ஆனுல், ஒருவன் எந்த விருந்துக்கும் அழைக்கப்படாமல் வலுவிலே சென்று நுழைவதுங் கூடாது ('ஹதீ'. 23). இஸ்லாத்தில் எஜமானனுடன்கூட வேலைக்காரனும் அதே பந்தியில், அதே மேஜையில் அமர்ந் துண்ணலாம் ('ஹதீ'. 24). தனித்தனியாய்ப் புசிப்பதைவிட ஒன்றுகூடி உண்பதே சிலாகிக்கப்பட்டுள்ளது ('ஹதீ'. 25); அவ்வாறு கூடி யுண்ணுங்கால், ஒருவர் மற்றையோரின் சௌகரியத்தையும் கவனத்தி லிருத்துதல் வேண்டும் ('ஹதீ'. 26, 27). விருந்தினரை வெளியி லனுப்புங்கால், வீட்டுக் குடையவர் வெளிவாயில் வரை வந்து வழியனுப்புதல் வேண்டும் ('ஹதீ'. 28).

1. அனஸ் கூறினர்: நபிகள் திலகம் (சல்அ'ம்) கறுப்புடன் கலந்திருந்த வெளுப்புநிறச் செம்மறிகள் இரண்டைப் பலி கொடுத்ததை யான் கண்டேன்; அவற்றின் முகத்தின் ஒரு பக்கத்தின் மீது தங்கள் பாதத்தை வைத்து, பி'ஸ்மில்லாஹ், அல்லாஹு அக்ப'ர் என்று அவர்கள் ஓதியதைப் பார்த்தேன்; இன்னம், அன்னவர்கள் தங்கள் கரங்கொண்டே அவற்றினை அறுத்தார்கள்.[1]—(பு'க'ா. 73 : 9)

2. ரா'பிஃ' கூறினர்: நாங்கள் நபிபெருமானுடனே (சல்அ'ம்) 'துல் 'ஹுலைஃ'பாவில் இருந்தோம்.... ஆகவே, ரா'பிஃ' சொன்னர்: 'நாளைத் தினம் எதிரிகள் வரக்கூடுமென்று நாங்கள் எதிர் பார்க்கிறோம், அல்லது அஞ்சுகிறோம்; மேலும்,

1. இந்த 'ஹதீ':தின் இறுதியிலே காணப்படும் "பி'ஸ்மில்லாஹ், அல்லாஹு அக்ப'ர்" என்னும் வசனங்களே ஒரு பிராணியை அறுக்குங்கால் ஓதவேண்டிய மந்திரங்களா யிருக்கின்றன. ஓருயிர்ப் பிராணியை அறுக்குங்கால், அல்லா(ஹ்)வின் நாமம் அதன் மீது உச்சரிக்கப்படுதல் வேண்டும்; ஏன்? அறுக்கப்படுவது ஒரு சிறு பிராணியின் உயிரேயாயினும், அது சாமான்யமான ஓர் எளிய காரியமென்று எண்ணத்தகாது என்னும் உண்மையினையும், நாம் நமக்குள்ள அதிகமான பலத்தைக் கொண்டல்லாமல், அல்லா(ஹ்)வின் அனுமதி கொண்டே அதனை அறுக்கிறோமென்னும் உண்மையினையும் உணர்த்திக்காட்ட வேண்டுமென்பதே அவ்வாறு அல்லா(ஹ்)வின் திருநாமம் ஓதப்பட வேண்டுமென்பதன் உள் நோக்கமா யிருந்து வருகிறது. ஒரு பிராணியை அறுக்கும்பொழுது ஒருவன் அல்லா(ஹ்)வின் திருநாமத்தை உச்சரிக்க மறந்து விடுவானாயின், அப்பொழுதும் அந்த மாம்சத்தைப் புசிக்கலாம் (பு'க'ா. 72 : 15).

எங்கள்பால் கத்தியொன்றும் இல்லை. 'மூங்கி(ற் பிளாச்சி)யால் அறுக்கலாமா (ஆட்டை)?' (என்று நாங்கள் வினவினோம்; இதற்கு) நபிபெருமானார் நவில லுற்றார்கள் :—

"உதிரத்தை ஓட்டக்கூடிய வஸ்துவால் (அறுக்கக் கடவீர்கள்); பற்களும் நகங்களும் கூடா; இன்னம், அதன்மீது அல்லா(ஹ்)வின் நாமமே ஓதப்படட்டும்; (பிறகு) அதனைப் புசியுங்கள்."[2]—(பு'க'ா. 47 : 3)

3. நா'பிஃ' கூறினர்: (பிடரியி லுள்ள) முதுகந்தண்டை(த் துண்டிப்பதை) இப்'னுஉ'மர், 'அந்த எலும்புக்கு மேலாயுள்ளதையே அறுங்கள்; அப்பால் அது மரிக்கும்வரை (அப்படியே) விட்டு விடுங்கள்,' என்று கூறித் தடை செய்துள்ளார்.—(பு'க'ா. 72 : 24)

4. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினர்: (ஒரு பிராணியை) அறுப்பது தொண்டையிலாம்; இன்ன

---

2. இந்த 'ஹதீ'ஃதால் விளக்கமாவது யாது? ஓர் உயிர்ப் பிராணியின் உதிர முழுவதையும் ஓட்டிவிடக்கூடிய எத்தகைய கூரிய ஆயுதத்தையுங் கொண்டு அதனை அறுக்கலாம்; ('ஹதீ'. 5-ம் நோக்க). இரத்தமென்பது வெளியில் ஓட்டப்படாத இறைச்சி —தனதகத்தே உதிரமெல்லாம் உறுஞ்சப்பெற்றுப் போன மாம்சம் —உடம்புக்கு நஞ்சூட்டக் கூடியதா யிருக்கிற தென்பது ஆயுர்வேத ஆராய்ச்சியா யிருந்து வருகிறது. எனவேதான், விஷத்தை விருத்தி செய்யவல்ல இரத்த முழுவதும் அவ்விறைச்சியைவிட்டு அப்புறப்படுத்தப்பட வேண்டிய அவசியம் ஏற்பட்டு விடுகிறது. இரத்தமும், பன்றி யிறைச்சியும் நாம் புசிக்கக்கூடா தென்று ஃகுர்ஆன்ஷரீ'ப் கூறியிருப்பதன் கருத்தும் இதுவேதா னாகும்.

மது காரை யெலும்புகட்கு இடையிலே நெஞ்சுக்கு மேலேயுள்ள குழியிலேயாம்.[3]— (பு'க'ா. 72 : 24)

5. முஆ' 'திப்'னு ஸஃ'த்' கூறியுள்ளார்: கஃ'பி'ப்'னு மாலிக்கின் அடிமைப் பெண்ணொருத்தி ஸல்ஃ' என்னுமிடத்தில் ஆடு மேய்த்துக்கொண்டிருந்தாள்; இன்னம், அவ் வெள்ளாடுகளில் ஒன்றுக்கு (ஏதோ) துன்பம் நேரிட்டுவிட்டது; ஆகையால், அவள் அதைப் பிடித்து, ஒரு (கூர்மையான) கல்லைக்கொண்டு அறுத்துவிட்டாள். நபிகள்திலகம் (சல்அ'ம்) அது குறித்து வினவப் பட்டார்கள்; இன்னம், அன்னவர்கள் சொன்னார்கள்:— "அதனைப் புசியுங்கள்."— (பு'க'ா. 72 : 19)

---

3. பிராணிகளை அறுப்பது இருவிதமா யிருக்கிறது: 'தப்'ஹ்' என்பது தொண்டையைக் குரல்வளைப் பக்கம், தலையை யொட்டிக் கழுத்திலே கத்தியைவைத்து அறுப்பதாகும்; இஃது அம்மிருகத்தின் தலையை நம்முடைய பாதத்தின்கீழே கொண்டு வரக்கூடிய சந்தர்ப்பத்திலேதான் முடியும். மிருகமொன்று நின்ற நிலையிலிருக்க நேருங்கால், அதனைச் சேதனம் செய்வது ந'ஹ்ர் என்று அழைக்கப்படுகிறது; ந'ஹ்ரென்பது, நெஞ்சைவிட்டுக் கழுத்துப் புறப்படுமிடமாம்; குரல்வளையின் அடிப்புற ஆரம்ப ஸ்தலமாயிருக்கிறது. இத்தகைய ந'ஹ்ர் ஒட்டகம், காளைமாடு போன்ற மிருகங்கள் விஷயத்திலே அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது; என்னெனின், இப்படிப்பட்ட மிருகங்களைப் படுக்க வைப்பதென்பது சிரமசாத்தியமான செய்கையாமன்றோ? ந'ஹ்ர் செய்யப்படவேண்டிய மிருகம் 'தப்'ஹும் செய்யப்படலாம். இவ்விரு முறைகளிலும் உதிரமுழுவதும் வெளியில் ஓட்டப்படல் வேண்டும்; பிடரியிலுள்ள முதுகந்தண்டு துண்டிக்கப்படுவதும் கூடாது. ஆனால், தவறுதலாய்த் தலை துண்டிக்கப்பட்டுப் போய்விடுமாயின், அக்காரணத்தால் அவ்விறைச்சி புசிக்கத்தகாததாய் மாறிப்போய் விடுவதில்லை (பு'க'ா. 72 : 24).

6. 'ஜுஹ்ரீ கூறினர்: அரப்நாட்டுக் கிறிஸ் தவனல் அறுக்கப்பட்ட பிராணியி(னைப் புசிப்பதி)ல் குற்ற மொன்று மில்லை; அவன் அல்லா(ஹ்)வின் நாமத்தை யன்றி வேறு பெயரை யுச்சரிப்பதை நீ செவிமடுத்தால், அப்பொழுது அதனைப் புசிக் காதே; இன்னம், அன்னவனை (அவ்வாறு) நீ செவிமடுக்கவில்லை யாயின், அதுகாலை நிச்சயமாக அல்லா(ஹ்) அதனை அனுமதிக்கப்பட் டுள்ளதாய்ச் செய்து விடுகிறான்; மேலும், அவனே அவர்களது சத்திய நிராகரிப்பை யறிந்துளான்.[4]— (பு'க'ா. 72 : 22)

7. ஆ'யிஷா பிராட்டியார் கூறினர்: 'ஜனங் கள் எங்கள்பால் இறைச்சி கொண்டுவருகிறார்கள்; அதன்மீது அல்லா(ஹ்)வின் நாமம் ஓதப்பட்டதா? இல்லையா? என்று அதுகுறித்து நாங்கள் அறிய மாட்டோம்,'[5] என்று சில ஜனங்கள் நபிபெருமானா ரிடம் (சல்அ'ம்) சொன்னார்கள்; (அப்பொழுது)

---

4. இங்கு 'ஜுஹ்ரீயால் கூறப்பட்டுள்ள அபிப்பிராயத்தை இப்'னு அ'ப்'ப'ாஸும் ஆதரித்துள்ளார் (மஸ். I, 302). :குர். 5 : 5-இல் வந்துள்ள "ஆகாரம்" என்னும் சொல்லை,— "வேதத்தை யருளப் பெற்றவர்களுடைய ஆகாரம் உங்களுக்கு அனுமதிக்கப் பட்டிருக்கிறது"— என்று காணப்படும் ஆயத்திலுள்ள வார்த் தையை, "அவர்களால் அறுக்கப்பட்டுள்ள பிராணி" என்றே விளக்கி யிருக்கின்றார். அல்லா(ஹ்)வின் நாமமல்லாத வேறு பெயர் சொல்லி யறுக்கப்பட்டதென்னும் விஷயம் வெளிப்படையாய்ப் புலப்பட்டா லன்றி, அவர்களால் அறுக்கப்பட்டது தடுக்கப் பட்டில்லை.

5. அந்த ஜனங்கள், ஆ'யிஷா பிராட்டியார் கூறியதேபோல், சமீபத்திலே தீ'னுலிஸ்லாத்தைத் தழுவியவர்களா யிருந்தார்கள்.

"அதன்மீது அல்லா(ஹ்)வின் நாமத்தை உச்சரித்து, அப்பா லதனைப் புசியுங்கள்,'' என்று அப்பெருமானார் கூறினர்கள்; (ஆ'யிஷா) சொன்னர்: 'மேலும் மவர்கள் இப்பொழுதுதான் கு'ப்ரியத்தை விட்டு வெளிவந்திருக்கிறார்கள்.'— (பு'க'ா. 72 : 21)

8. அபூ' :தஃ'லப'ா கூறினர்: 'ஏ அல்லா(ஹ்) வின் தூதரே! வேதத்தை யுடையவர்களது தேசத்திலே நாங்கள் வசித்துவருகிறோம்; அவர்களுடைய பாத்திரங்களிலே நாங்கள் புசிக்கலாமா? இன்னம், வேட்டையாடக் கூடிய ஒரு நாட்டிலே (நாங்கள் வசிக்கிறோம்); நான் என்னுடைய வில்லைக்கொண்டும், (வேட்டையாடக்) கற்றுக் கொடுக்கப்படாத எனது நாயைக் கொண்டும், (வேட்டையாடக்) கற்றுக் கொடுக்கப்பட்டுள்ள எனது நாயைக் கொண்டும் வேட்டை யாடுகிறேன்; ஆகவே, எஃதெனக்குச் சரியானது?' என்று யான் வினவினேன். (இதற்கு) அவர்கள் (இவ்வாறு) விடை கூறினர்கள்:—

"வேதத்தை யுடையவர்களைப் பற்றி நீர் கேட்பது குறித்தென்றாலோ, அவர்களுடையவை(களான பாத்திரங்)களை யல்லாமல் வேறாயவை(களான பாத்திரங்)களை நீர் கண்டுகொள்ளக் கூடுமாயின், அவற்றிலே புசிக்க வேண்டாம்; இன்னம், நீர் (வேறு பாத்திரங்களைக்) கண்டுகொள்ள வில்லையாயின், அவற்றினை அலம்பிவிட்டு, அவற்றிலேயே

---

ஆதலால், அவர்கள் அறுப்பதற் குரிய விதி முறைகளை ஒழுங்குடனே அனுசரித்தார்களா, இல்லையா? என்பது ஐயப்பாட்டிற் குரிய விஷயமா யிருந்துவந்தது.

புசியும்.[6] இன்னம், நீர் உமது வில்லைக் கொண்டு வேட்டை யாடுவதை, (அதன்மீது) அல்லா(ஹ்)வின் நாமத்தை நீர் உச்சரித்து விடுங்கால், புசிக்கக் கடவீர்;[7] மேலும், நீர் கற்றுக்கொடுத் துள்ள நாயைக்கொண்டு வேட்டையாடியதை, (அதன்மீது) அல்லா(ஹ்)வின் நாமத்தை நீர் உச்சரித்து விடுங்கால், புசிக்கக் கடவீர்; மேலும், நீர் கற்றுக் கொடுக்காத நாயைக் கொண்டு வேட்டையாடியதை, அதனை நீர் அறுத்துவிடக் கூடுமேல், புசிக்கக் கடவீர்."—(பு'க'ா. 72 : 4)

9. ('ஹ'ஜ்ரத்) உ'மர் கூறினர்: கடல் வேட்டை யென்பது வேட்டையாடிப் பிடிக்கப்படும் (மச்சம்) என்பதாகும்; இன்னம், அதன் ஆகாரம் (:தஆ'ம்) என்பது அது (கரையிற் கொணர்ந்து) ஒதுக்கித் தள்ளுவதாகும்.... இன்னம், இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினர்: கடல் வேட்டையி னின்று, அது கிறிஸ்தவனல், அல்லது யூதனல், அல்லது

---

6. அவர்கள் தங்கள் உண் கலங்களில் முஸ்லிம்கள் உண்ணத்தகாத உணவுகளையும் உண்டிருத்தல் கூடுமாதலின், அவற்றினை அலம்பிவிட வேண்டியது அவசியமா யிருக்கிறதென்க.

7. இதே விதிதான் துப்பாக்கியால் சுடப்படும் வேட்டைகளுக்கும் ஒக்கும். அஃதாவது, துப்பாக்கியில் மருந்தைப் போட்டுக் கிடிக்கும்பொழுது, அல்லது அதனைச் சுடத் துவக்கும் பொழுது, பிஸ்மில்லா(ஹ்) சொல்ல வேண்டும்; இவ்வாறு சொல்ல மறந்து விட்டால், அப்பொழுதும், அறுக்குங்கால் பிஸ்'மில்லா(ஹ்) சொல்ல மறந்துபோன பிராணியின் இறைச்சி விலக்கப்படாததா யிருப்பதே போல், இவ் விறைச்சியும் விலக்கப்படாத தாகவே இருந்து வருகிறது.

மேஜியனால் (கொல்லப்பட்டு) இருப்பினும், புஜிக்கக் கடவீர்.[8]— (பு'க'ா. 72 : 12)

10. அபூ' :தஃ'லப'ா கூறினார்: சிங்கப்பற்களை யுடைய, மாம்சபக்ஷணிகளாயுள்ள எல்லா விலங்கு களையும் அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) விலக் கி(த் தடைசெய்து) இருக்கிறார்கள்.[9]— (பு'க'ா. 72 : 29)

11. அனஸ் கூறினார்: அபூ'(த்) :தல்'ஹாவின் வீட்டிலில் யான் ஜனங்களுக்குக் குடிக்கக் கொடுத்துக் கொண் டிருந்தேன்; மேலும், அதுசமயம் அவர் களது சாராயம் பேரீச்சங் கனிகளிலிருந்து தையாரிக்

8. இந்த 'ஹதீ':து தலை. ஆயத் 6-க்குரிய வியாக்கியானமா யிருந்து வருகிறது. கடலின் ஆகாரம் (:தஆ'ம்) அதன் வேட்டையி னின்று வேறா யிருக்கிறது. கடல் வேட்டையென்பது கடலில் சென்று வலைகொண்டு, அல்லது வேறு உபாயத்தால் பிரயாசை யின்மீது பிடிக்கப்படும் மச்சமாகும்; கடலாகாரம் என்பது, கடல் தன்னுடைய அலைகளால் கரையின்மீது கொண்டுவந்து விடும், அல்லது கடல்நீர் பின்னிடைந்து சென்று விடுவதால் தரையில் பின்தங்கிவிடும் மச்சவகைகளைக் குறிக்கும்; இவற் றினைப் பிடிக்க ஒன்றும் பிரயாசை வேண்டிய தில்லை. மீன் உயிருடனே பிடிக்கப்பட்டாலும், அஃது அறுக்கப்பட வேண்டு மென்பது அவசியமில்லை. என்னெனின், மச்சத்தை யறுப்பதால் ஓடக்கூடிய உதிரம் ஒன்றுமில்லை என்பதனா லென்க. இந் நாட்டிலே இந்துவால் பிடிக்கப்படும் மீனையும் முஸ்லிம்கள் புசிக்கலாம். கடல் நண்டு, ஆமை, தவளை மலங்கு—(விலாங்கு) மீன் ஆகியவை சில இமாம்களின் அபிப்பிராயப் பிரகாரம் தின்னத்தக்க வஸ்துக்களா யிருக்கின்றன.

9. "முஸ்லிம்" (ச'ஹீ'ஹ்) கிரந்தத்திலே கிழித்துத் தின்னும் நகங்களை யுடைய மாம்சபக்ஷணப் பறவைகளும் சேர்த்து விலக்கப் பட்டிருக்கின்றன (முஸ்—மிஷ். 19 : 2).

கப்பட் டிருந்தது. அதுகாலை, அல்லா(ஹ்)வின் திருத் தூதர் (சல்அ'ம்) சாராயம் தடுக்கப்பட்டு விட்ட தென்று பிரகடனப்படுத்துமாறு கூவுகிறவனுக்குக் (கூறிக்) கட்டளையிட்டார்கள். அவன் (அவ்விதமே) சொன்னான். ஆகையால், 'நீர் வெளியிற் சென்று, அதனைக் கீழே கொட்டியும்விடக் கடவீர்,' என்று அபூ'(த்) 'தல்'ஹா எனக்குக் கூறினார். நான் அதனைக் கீழே (கவிழ்த்துக்) கொட்டினேன்; மேலும் அது மதீனாவின் வீதிகளில் (வேகமாக) ஓடிற்று.[10]— (பு'க'ா. 46 : 21)

12. ஆ'யிஷா பிராட்டியார் கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) பி'த்ஃ' என்பது குறித்து வினவப்பட்டார்கள்;— அது —(பி'த்ஃ') தேனைக்கொண்டு செய்யப்படும் ஒருவகை மதுவா

10. சாராயத்துக்கு அரபு பாஷையில் க'ம்ர் என்று பெயர் சொல்லப் படுகிறது. க'மர (அவன் ஒரு பொருளை மூடினான், அல்லது மறைத்தான்) என்பதிலிருந்து தோன்றியிருக்கிறது க'ம்ர் என்னுஞ் சொல். சாராயம் ஏன் க'ம்ர் என்று அழைக்கப் படுகிறதெனின், அது மனிதனுடைய அறிவை மூடி (மறைத்து) மழுங்கச்செய்து விடுவதனால் என்க. திராக்ஷைப்பழம் பிழியப் பட்டு, அந்த ரசத்தில் புளிப்பும் ஏறிவிடுமாயின், அது க'ம்ர் என்று அழைக்கப்படுவ தோடு, வேறு எத்தகைய கனிகளிலிருந்து பிழிந்து புளிப்பேறியுள்ள ரசமுங்கூட அப்பெயரிட்டே அழைக் கப்பட்டு வருகிறது. அக் காலத்தில் அரப் நாட்டில் சாராய மென்பது திராக்ஷை, பேரீச்சை, கோதுமை, வாற்கோதுமை, தேன் ஆகியவற்றிலிருந் தெல்லாம் தையார் செய்யப்பட்டு வந்தது (பு'க'ா. 74 : 4). புளிப்பேறாத, புதிதாய்ப் பிழியப்பட்டுள்ள திராக்ஷை பேரீச்சை ஆகியவற்றின் ரசங்கள் தடுக்கப்பட் டில்லை (...'ா. 67 : 72).

யிருக்கிறது ; மேலு மதனை எமன் தேசவாசிகள் பருகிக்கொண் டிருந்தார்கள். ஆகவே, அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) அறைய லுற்றூர்கள் :—

“மயக்கந்தரக் கூடிய ஒவ்வொரு(வித) மது வஸ்துவும் தடுக்கப்பட்டே யிருக்கிறது.”[11]— (பு’க’ா. 74 : 3)

13. ஜாபி’ர் கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னர்கள் :—

“எந்த ஒரு வஸ்துவிலிருந்து அதிகமான அள்வு மயக்கத்தை யளிக்கின்றதோ, (அதினின்று) குறைவான அளவும் தடுக்கப்பட்டே யிருக்கிறது.”[12] — (அபூ’த’ா. 25 : 5)

14. ஸல்மான் கூறியுள்ளார் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னர்கள் :—

“ஆகாரத்தின் அபிவிருத்தி, அதற்குமுன்னே கைகளைக் கழுவிக் கொள்வதிலும், அதற்குப்

---

11. உட்கொண்டால் மயக்கந்தரும் எவ்வஸ்துவும்,— அது திரவபதார்த்தமாயினும்,கட்டி பதார்த்தமாயினும்,— இஸ்லாத்தில் தடுக்கப்பட்டே யிருக்கிறது ; எனவே, அபின், கஞ்சா, ‘ஹல்வா, லேகியம், மு‘பர்ரா போன்ற மருந்துகளும், கள்ளும் மயக்கந் தருவனவா யிருப்பின், உட்கொள்வது ‘ஹராமேயாம்.

12. எனவே, மயக்கந்தரும் வஸ்து எத்துணைச் சிறிய அளவினதேயாயினும், உட்கொள்வதென்பது கூடாது ; உயிரைக் காப்பாற்றும்பொருட்டு அருமருந்தாக உபயோகிக்கப்படலா மென்பதற்குக் :குர். 2 : 173-ம், 6 : 146-ம் நோக்க :— “(அவசியத்தினிமித்தம்) வேண்டுமென்றே விழைவு செய்கிறவனு யில்லாமலும், வரம்பைக் கடக்கிறவனு யில்லாமலும் (வேறு போக்கில்லாது) எவனொருவன் நிர்ப்பந்திக்கப்படுகிருனே, அவன்மீது (தடுக்கப்பட்ட வஸ்துக்களை உட்கொள்வதாயின்) பாபமொன்றும் இல்லை.”

பின்னே கைகளைக் கழுவிக் கொள்வதிலுமே இருக்கிறது."[13]— (·திர்மி—மிஷ். 20)

15. ஸ¬வய் தி'ப்'னுல் நுஃ'மான் கூறினர்: நாங்கள் அல்லா(ஹ்)வின் திருத்தூதருடன் (சல்அ'ம்) க'ய்ப'ருக்குச் சென்றோம்; நாங்கள் சஹ்றப'ாவுக்குச் சென்று சேர்ந்த பொழுது, அவர்கள் ஆகாரம் பரிமாறச் சொன்னார்கள்; அதுபொழுது வறுத்த வாற்கோதுமை மாவை யன்றி வேறோர் ஆகாரமும் அவர்கள்பால் கொண்டுவரப் படவில்லை; மேலும், நாங்கெளெல்லாம் (அதனையே) சாப்பிட்டோம். பிறகு அப் பெருமானார் தொழுதுகொள்ள எழுந்திருந்தார்கள்; அப்பொழுது அவர்கள் தங்கள் வாயைக் கொப்புளித்துக் கொண்டார்கள்; நாங்களும் எங்கள் வாய்களைக் கொப்புளித்துக் கொண்டோம்.[14]— (பு'க'ா. 50 : 51)

16. உ'மருப்'னு அபூ' ஸலமா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) அவர்களது

---

13. இந்த 'ஹதீ':தின் அரப் மூலத்திலே வுலூ' என்னுஞ் சொல் உபயோகிக்கப்பட் டிருப்பினும், இவ்விடத்தில் "கை கழுவுதல்" என்றே அதற்குத் தாத்பரியம் கொள்ளப்படுகிறது. எனவே, உண்ண உட்காருமுன்னும், உண்டபின்னும் கைகளை நன்கு யலம்பவேண்டும் என்றறிக.

14. ஆகாரமருந்திய பின்பு வாயை நன்குகக் கொப்புளித்தல் வேண்டும்; என்னெனின், ஆகாரத் துணுக்குக்கள் வாயிலே—பல்லிடுக்கில்— தங்கி அழுக இடந்தரலாகாது என்பதனுல் என்க. பற்களில் மிக்க இடுக்குள்ளவர்கள், அவ்விடுக்கை யெல்லாம் நன்குகக் குத்திக் கிளறி அங்கே மறைந்துகொண்டிருக்கும் துண்டு துணுக்குக்க ளனைத்தையும் கிண்டி வெளிப்படுத்தி விடல் வேண்டும். தந்த சுத்தியே தேகசுகத்துக்கு மூலாதாரமாகும்.

மேற்பார்வையிலே யான் வளர்க்கப்பட்ட ஒரு (சிறு) பையலா யிருந்தேன்; உண்கலத்தில் என் கையோ (அதன்) ஒவ்வொரு பக்கத்திலும் (உளம்பி) வேலை செய்துகொண் டிருந்தது. ஆகையால், அல்லா(ஹ்) வின் திருத்தூதர் (சல்அ'ம்) எனக்குச் சொன்னார் கள்:— "ஏ பையா! நீ (உண்ணத் துவக்குங்கால்) பி'ஸ்மில்லா(ஹ்) சொல்; உன் வலக்கரத்தாலே சாப்பிடு; (உண்கலத்தில்) உனக்குச் சமீபத்தி லுள்ள பக்கத்தி லிருந்தே புசிக்கக் கடவாய்." ஆகவே, அப்பால் எனது சாப்பிடுமோதிரி இப்படி யாகவே இருந்துவந்தது.[15]— (பு'க'ா. 70 : 2)

17. அபூ' ஸஈ'து'ல் கு'த்'ரீ கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) தங்கள் போஜனத்தை முடித்துக் கொள்ளுங்கால் (பின்வருமாறு) சொல்வது வழக்கம் :—

"எங்களுக்கு உண்ணவும் பருகவும் அளித்து, எங்களை முஸ்லிம்களாகச் செய்தும் வைத்துள்ள

---

15. இந்த 'ஹதீ'ஃதால் மூன்று விஷயங்கள் அறியப்படலாகின்றன: ஆரம்பிக்குங்கால் அல்லா(ஹ்)வின் திருநாமத்தை பி'ஸ்மில்லாஹ் என்று கூறித் துவக்க வேண்டும்; அடுத்தபடியில் வலக் கரத்தால் புசிக்கக் கற்றுக்கொள்ளல் அத்தியாவசிய மாகும்; (ஐரோப்பிய அசுத்தர்களின் அநாகரிகத்தை அவசிய மில்லாது பின்பற்றி நடிக்கும், மலங்கழுவும் இடக்கரத்தால் புசிக்கும் நம் நண்பர்கள் இந்த அழகிய 'ஹதீ'ஃதை ஆழச் சிந்தித்துப் பார்ப்பார் களாக). மூன்றாவதாக, உண்கலத்தில் நமக்கு அண்மியுள்ள இடத்திலிருந்தே புசித்திடல் வேண்டும்; அஃதாவது, பாத்திரத்தின் (நமக்குச் சமீபித்துள்ள இடத்தைவிட்டு) எதிர்க்கோடியி லிருந்து உண்ணத் துவக்குவது கூடாது.

அல்லா(ஹ்)வுக்கே எல்லாப் புகழும்!"[16]— ('திர்மி—மிஷ். 20).

18. அபூ' :க(த்)தாத'ா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"உங்களு ளொருவர் பருகுங்கால், அவர் (அச்சூடுள்ள) பாத்திரத்தில் (வாயால்) ஊதுவது கூடாது."[17]— (பு'க'ா. 4:18)

19. ஜாபி'ர் கூறினர்: ந(க்):கீஃ' என்னும் இடத்திலிருந்து அபூ''ஹுமய்த்' ஒரு கிண்ணம் பால்

---

16. முஸ்லிம்கள் உண்ணத் துவக்கும்பொழுது, "அல்லா(ஹ்)வின் திருநாமத்தின் உதவிகொண்டு" என்று கூறிப் புசிக்க வேண்டும்; அவ்வாறு உண்டு முடித்து விடுங்கால், "எல்லாப் புகழும் அல்லா(ஹ்)வுக்கே!" என்று கூறி, நன்றிசெலுத்தவேண்டும். எனவே, தங்கள் ஸ்தூலதேக இச்சைகளைப் பூர்த்திசெய்யுங் காலத்தும் எம் முஸ்லிம்கள் அல்லா(ஹ்)வின் அருள்மாரியை மறவா திருக்கக் கட்டளையிடப்பெற் றுள்ளார்கள். இவ்வாறு ஸ்தூல தேக இச்சைகளை நிறைவேற்றிக் கொள்ளும்பொழுது, ஸூக்ஷ்ம தேக முன்னேற்றத்துக்கு (எம்மை முஸ்லிம்களாகச் செய்து) உதவிபுரிந்த அவனது அனுக்கிரஹத்தையும் மறப்பதென்பது கூடாதென்பது இங்கு நன்கு அறியக் கிடக்கின்றது.

17. இதேபோன்ற இனியொரு 'ஹதீ':தில் (மஸ். I, 309) நபிபெருமானார் ஆகாரம் அல்லது பருகும் பானம் எதுவாயிருப்பினும், வாயால் ஊதுவது கூடாதென்றே தடை செய்துள்ளார்கள். மனிதன் வெளிவிடும் சுவாசம் கரியமில வாயு முதலிய விஷ பதார்த்தங்கள் நிரம்பியுள்ள நிச்சுவாசமா யிருத்தலினால், அவ்வாறு ஊதுவது கூடாது. தம் வாயில், பிறரால் சிறிதும் சகிக்க முடியாத அத்துணையழுகிய துர்நாற்றமுள்ள ஒருவனை நீங்கள் நினைத்துக் கொண்டால், அப்பால் உண்பதையும் குடிப்பதையும் வாயால் ஊதுவதென்பது எத்துணைப் பொல்லாத மாபெருந் தீய காரியமென்பது செவ்விதாய்ப் புலப்படத் தலைப்பட்டுவிடும்.

கொண்டு வந்தார்; அதுபொழுது அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) அவருக்குச் சொன்னார்கள் :—

“நீர் ஏன் அதனை மூடிக் கொணர வில்லை? அதன்மீது நீர் ஒரு பலகைத் துண்டை(யேனும்) வைத்திருத்தல் வேண்டுமே.”— (பு’க’ா. 74 : 11)

20. ஜாபி’ர் கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னார்கள் :—

“நீங்கள் உறங்கச் செல்லுங்கால், விளக்கை அணைத்துவிடக் கடவீர்கள்; கதவையும் (நன்கு) மூடிவிடக் கடவீர்கள்; தண்ணீர்த் துருத்திகளின் வாய்களையும் மூடிவைக்கக் கடவீர்கள்; போனகத்தையும் பானகத்தையுங்கூட மூடிவைக்கக் கடவீர்கள்.”— (பு’க’ா. 74 : 21)

21. ஜஃ’‘பரிப்’னு அ’ம்ர் கூறியுள்ளார்: இவருடைய தந்தை, அன்னவர் நபிகள்திலகம் (சல்அ’ம்) ஒரு வெள்ளாட்டின் தோட் சப்பையினின்று (இறைச்சியை) நறுக்கிக்கொண்டிருந்ததைக் கண்டதாய் அவருக்கு— (மைந்தருக்கு)க் கூறினர். அதுபொழுது அவர்கள் தொழுகைக்கு அழைக்கப் பட்டார்கள்; ஆகையால், அவர்கள் அக்கத்தியைப் போட்டுவிட்டு, தொழுது கொண்டார்கள்; ஆயின், புதிதாக வுழூ’ செய்து கொள்ள வில்லை.[18]— (பு’க’ா. 4 : 51)

---

18. இந்த ‘ஹதீ’:தி லிருந்து, நபிபெருமானார் (சல்) கத்தி கொண்டு அறுத்துப் புசித்தார்களென்னும் விஷயம் வெளியாகின்றமையால், சாப்பிடுங்காலத்தில் கத்தி முள் கரண்டி போன்றவற்றின் உதவியை வைத்துக்கொண்டு சாப்பிடலா மென்னும் அனுமதி கிடைத்துவிடுகிற தென்று மௌலானா முஹம்மதலீ

22. 'ஹு'தய்'பா கூறினர் :....................நபி பெருமான் (சல்அ'ம்) (இவ்வாறு) கூறியதை யான் செவிமடுத்தேன் :—" பட்டையேனும் பட்டுமுகதலை யையேனும் அணிந்து கொள்ளாதீர்கள் ; இன்னம், பொன்னாலும் வெள்ளியாலு மாகிய பாத்திரங்களில் பருகாதீர்கள் ; மேலும், அவற்றாலாய உண்கலங் களில் (ஆகாரம்) அருந்தாதீர்கள் ; ஏனென்றால், அவை இவ்(வுலக) வாழ்க்கையில் அவர்கட் குரியன ; மேலும், நமக்கோ, மறு(வுலக) வாழ்க்கையில் உரியன."[19]— (பு'க'ா. 70 : 29)

23. அ'ப்'து'ல்லா ஹிப்'னு உ'மர் கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன் னார்கள் :—

" ஒருவன் (விருந்துக்கு) அழைக்கப்படுங்கால், அவன் அங்கீகரியாமல் (அல்லது பதில் கூறாமல்) இருந்து விட்டால், அன்னவன் அல்லா(ஹ்)வுக்கும்

---

கூறியுள்ளார். புதிய வுலூ' நபிபெருமானார் செய்யாவிடினும், கையையும் வாயையும் நன்கு கழுவியே சுத்தஞ் செய்துகொண் டிருப்பார்கள் ; இதுதான் அவர்களது வழக்கம் ('ஹதீ'. 14-ம் 15-ம் பார்க்க).

19. இவ்வுலகில் ஏழைகளுக்குக் கிடைக்கக்கூடியவற்றையெல் லாம் அபகரித்து எடுத்துக்கொள்வதனாலேயே பணக்காரர்கள் பொன் வெள்ளிப் பாத்திரங்களை ஆகாரமருந்த வைத்துக் கொண்டு, சுகபோக மென்னப்படும் சோம்பேறி வாழ்க்கையை நடாத்தி வருகின்றமையால், அப்படிப்பட்ட அனாவசிய ஆடம் பரங்கள் எம் முஸ்லிம்கட்கு வேண்டாமென்று நபிகள் திலகம்(சல்) நவின்றருளி யுள்ளார்கள். இவ்வாறே பட்டும் பீதாம்பரமும் ஆடவருக்கு வீண் பெருமையையே யளிக்க வல்லனவா யிருக் கின்றன என்க.

அவனுடைய தூதருக்கும் மாறுசெய்தவ ஞகின்ருன்; இன்னம், எவ ஞெருவன் அழைக்கப் படாமலே (ஒரு விருந்துக்குப்) போகிருனே, அவன் ஒரு திருடனைப்போலே (உள்ளே) நுழைகிருன்; இன்னம், சின்னபின்னச் சூறையாடியவனே போல வெளிப் புறப்படுகிருன்.[20]— (அபூ'த'ா. 26 : 1)

---

20. விருந்துக் கழைத்தால், ஆண்பிள்ளையிடம் சொன்னல், "பெண்டுகளிடம் (வீட்டில்) சென்று சொல்" லென்று தாக்கீத் பிறப்பித்தும், பெண்டுகளிடம் தெரிவித்தால், ஆண்பிள்ளையிடம் சொல்லவில்லையே யென்று வீண்சாக்குச் சொல்லியும், விருந்துக் குடையவன் முதலில் ஒருமுறை சொல்லி, இரண்டா முறையும் "சாப்பிட வாருங்கள்," என்று கூப்பிட்டு, மூன்ருவது நான்காவது முறையும் அவர் போகுமிடமெல்லாம் பின்தொடர்ந்து சென்று வருந்தி வருந்தி யழைக்குமாறு செய்தும் ஒரு சிலர் நடிப்பதுண்டு. இது விருந்தளிப்பவனுக்குப் "போதும் போதுமென்" ருய்விடு கிறது. வேறு சிலர், விருந்துக்கு அழைக்கப்பட்ட வேளைக்கு வெகு நேரத்துக்கு முன்னே சென்று விருந் தளிப்பவருக்குத் தொந்தரை கொடுக்க அவன் வீட்டிலே குந்திக்கொண்டும், விருந் துண்டபின்னல் நெடுநேரமட்டும் அவ்வீட்டிலே குந்தி வம்பு வளர்த்துக்கொண்டும் வீண்பொழுது போக்குவதுண்டு; இப்படிச் செய்வது கூடாதென்று ஆண்டவனே தடுத்துவிட்டிருக்கிருன் (33 : 53). இன்னம், விருந்துக் கழைக்காம லிருக்கும்பொழுதே ஒருவருடைய விருந்துக்காக வலுவில் உள்ளே நுழைகிறவன் திருடனே யென்றும், அவ்வாறு தனக்கு 'ஹலாலல்லாத சோற்றைத் தின்றுவிட்டு வருகிறவன் கொள்ளைக்காரனே யென்றும் நபி பெருமானர் நவின்றருளி யுள்ளார்கள். இதனை இத்தென்னட்டி லுள்ள, "அழையா வீட்டுக்குள்ளே தாமே வலியச் சென்று நுழையலா" மென்று கூறித்திரியும் மாக்களெல்லாம் நன்கு ஆழ்ந்து ஆராய்ந்து பார்க்கக் கடவார்கள்.

24. நபிகள் திலகத்தின் (சல்அ'ம்) ஆதாரத்தைக் கொண்டு அபூ' ஹுரய்ரா கூறியுள்ளார் :—

"உங்களுள் ஒருவருக்கு ஊழியன் உணவு கொணருங்கால், அதுபொழுது (அதே பந்தியில் அமர்ந்துண்ண) அவனையும் தம்முடனே உட்கார வைத்துக்கொள்ள வில்லையாயின், இவர் அவனுக்கு ஒன்று அல்லது இரண்டு கவளம் அளிக்கட்டும்; என்னெனின், அன்னவன் அதனைத் தையார் செய்யப் பிரயாசைப்பட் டிருக்கிறான்."[21]— (பு'க'ா. 49 : 18)

25. ('ஹ'ஜ்ரத்) உ'மர் கூறினார் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"ஒன்றாய்ச் சேர்ந்து உண வருந்துங்கள்; மேலும், தனித்தனியே (பிரிந்து) அருந்தாதீர்கள்; என்னெனின், கூட்டரவிலேதான் அபிவிருத்தி இருக்கிறது."[22]— (இப்'னுமா—மிஷ். 20 : 1)

---

21. முதலாளி தன்னுடனே தன் வேலைக்காரனையும் அமர வைத்துக்கொண்டு சமபந்திபோ'ஜனம் செய்வதென்பது எத்துணை மட்டும் விசுவ சகோதரத்துவத்தை அபிவிருத்தியடையச் செய்யக் கூடியுதா யிருக்கிறதென்று அவரவருமே ஆழ்ந்தாராய்ந்து பார்ப்பாராக. இஸ்லாத்தில் எல்லாரும் ஒரே ஏக சகோதர கோஷ்டியைச் சார்ந்தவரென்பது அனுஷ்டானத்திலே காணத்தக்க ஓர் அரிய காட்சியே யன்றோ ?

22. எனவே, நண்பர்களும் விருந்தினரும் பந்தியி லமர்ந்து ஒன்றாய்ப் புசிப்பதுடன், ஒரு வீட்டிலுள்ள அனைவருமே ஒன்றாயிருந்து சமபந்திபோஜனம் செய்யலாமென்பதும் இதனால் அறியக் கிடக்கின்றது.

26. ஜஃ’‘ப ரிப்’னு மு‘ஹம்மத்’, தம்முடைய தந்தையின் ஆதாரத்தைக்கொண்டு கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) (ஏனை) ஜனங்களின் கூட்டரவில் அமர்ந்து புஜிக்குங்கால், அவர்களே (அவ்வாறு) புஜி(த்து முடி)ப்பதில் அவர்களுள்ளே இறுதியா யிருப்பார்கள்.[23]—(மிஷ். 20:1)

27. இப்’னு உ’மர் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னார்கள்:—

“(ஒரு கூட்டத்தினர் முன்னே) ஆகாரம் (புசிக்க) வைக்கப்படுங்கால், (பசியாறிய பின்னல்) அவ் வாகாரம் (எஞ்சியது) அகற்றப்படு மட்டிலே ஒருவரும் எழுந்திருப்பது கூடாது; இன்னம், அன்னவர் தமது பசியை ஆற்றிக்கொண்டு விட்டாலும், அவர் (எழுந்திருக்கச்) சமாதானம் கூறுவதா யிருப்பினும், ஜனங்கள் (எல்லாரும் சாப்பிட்டு) முடியுமட்டும் ஒருவரும் தமது கரத்தை (அவ்வாகா

---

23. இந்த ‘ஹதீ’:தும், இதனை யடுத்துள்ள ‘ஹதீ’:தும் பந்தி போஜனத்தில் அனுஷ்டிக்கவேண்டிய சில ஒழுங்குகளைக் கற்றுக் கொடுக்கின்றன: பந்தியில் ஒரு சிலர் மெல்ல மெல்ல மென்று தின்பர்; மற்றும் பலர் துரிதமாய்க் கவளங்களை விழுங்குவர். சிற்சில சமயங்களில் அமரிக்கையா யுண்பவரைவிடத் துரிதமாய்ப் புசிப்பவர் இரண்டு மூன்று பங்கு அதிகம் உட்கொண்டுவிட்டு, மெல்லப் புசிப்பவருக்கு அவசியமான அளவுகூட அருந்த நேரமில்லாது செய்துவிடுவது பெரிதும் வருந்தத்தக்கதே யாம். இதே விதமாக, மெல்லத் தின்பவரும் சிறிதளவே புசித்துவிட்டு, ஏனையோரைப் பந்தியிலே விட்டுவிட்டு முன்னதாகவே எழுந்துவிடுவது கூடாது; எல்லாரும் சாப்பிட்டு முடியுமட்டும் கொஞ்சம் புசிப்பவரும் எழுந்து வந்து விடாது மரியாதையுடன் அமர்ந்திருத்தல் வேண்டும்.

ரத்தை விட்டு) எடுத்துவிடுவது கூடாது. ஏனென்ருல், இஃது அவருடைய கூட்டாளிமாரை லஜ்ஜையுறச் செய்து விடுகிறது; ஆகையால், அவருக்கு இன்னம் ஆகாரம் தேவைப்படினும், அன்னவர் தம்முடைய கையை இழுத்துக் கொள்கிருர்."—(இப்'னுமா—மிஷ். 20 : 1)

28. அபூ' ஹுரய்ரா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"ஒரு மனிதன் தன்னுடைய விருந்தினனை வீட்டு (வெளி)க் கதவுவரை(யேனும்) பின்தொடர்ந்து செல்ல வேண்டுவது ஸுன்னத் தாகும்."—(இப்'னுமா—மிஷ். 20 : 1)

# அத்யாயம்—29

## ஆடையாபரணம்

1. "ஏ ஆடைகொண்டு போர்த்துகிறவரே! எழுந்து (சென்று) அப்பால் அச்சமூட்டி எச்சரிக்கக் கடவீர்; இன்னம், நும்முடைய ரக்ஷகனை மகிமைப்படுத்தக் கடவீர்; உம்முடைய உடைகளையும் பரிசுத்தம் பண்ணிக் கொள்ளக் கடவீர்; ஏனையெல்லா அசுத்தத்தையும் ஒழித்துவிடக் கடவீர்" (:குர். 74: 1—5).

2. "நீர் கூறுவீராக: தன்னுடைய அடியவர்கட்கென்று அவன் வெளியாக்கித் தந்துள்ள அல்லா(ஹ்)வின் அலங்காரத்தையும், ஜீவனோபாயப் பொருளினின்று நல்ல வஸ்துக்களையும் எவர் விலக்கிக் கொண்டார்?" (7: 32).

3. "ஏ ஆதத்தின் மக்களே! தொழுகைக் குரிய ஒவ்வொரு வேளையிலும் உங்கள் சிங்காரிப்பைக் கவனித்துக் கொள்ளக் கடவீர்கள்" (7: 31).

உடைகளைப் பரிசுத்தம் பண்ணிக் கொள்ள வேண்டுமென்பதும், ஏனையெல்லா அசுத்தங்களையும் ஒழித்துவிட வேண்டுமென்பதும், ஜனங்களுக்குப் பிரசாரம் புரியவேண்டுமென்றும் ஆண்டவனை மகிமைப்படுத்த வேண்டுமென்றும் கட்டளையிடப்பட்டிருப்பதுடனே சேர்த்துக் கூறப்பட்டிருக்கின்றன (தலை. ஆயத் 1). இதனால் விளக்கமாவது யாதெனின், அவரவரும் தத்தம்முடைய உடையிலும் உடலிலும் பரிசுத்தமாயிருப்பதோடு, ஏனையெல்லாக் காரியங்களிலுமே மெத்தப் பரிசுத்தமா யிருந்துவர வேண்டுமென்பதுதா னாகும். அல்லா(ஹ்) அளித்துள்ள அலங்காரத்தை அடியவர் அணிந்துகொள்ள வேண்டுமென்பது அவன் அருளியதற்கு வந்தனை செலுத்துவதாயிருக்கிறது; ஆகவே, அது விலக்கப்பட்டில்லை யென்க (தலை. ஆயத் 2). அலங்காரம் (அரபில் 'ஜீனத்) என்பது சாதா

ரணமாய் ஆடையலங்காரத்தையே குறிப்பதாய்க் கொள்ளப் படினும், சிங்காரிப்பையும் சிறப்பித்துக் கூறுவதாயே கருத்துக் கொள்ளப்படுவ துண்டு. தொழுகைக்குச் செல்லும் பொழுதும் ஆடையலங்காரம் செய்துகொள்ள அனுமதியளிக்கப்பட்டுள்ளது (தலை. ஆயத் 3). வீணுடம்பரமும், வெற்றிடம்பமும் ஒருவன் அணியும் ஆடையிலே இருப்பது கூடாது; அவ்வாறில்லாது உடையுடுத்துங்கால், அஃது இன்னதினுசில், இன்னவிதத் துணியில்தான் இருக்க வேண்டுமென்று ஒன்றும் நிபந்தனை விதிக்கப்பட்டில்லை ('ஹதீ'. 1). நிர்வாணமாயிருப்பது தடுக்கப்பட்டுள்ளது ('ஹதீ'. 2). போதிய காரணம் இருந்தாலல்லது, ஆடவர் பட்டணிவது ஆகாது; ஆயின், பெண்டிர் அதனை அணிந்து கொள்ளலாம் ('ஹதீ'. 3-6). ஆண்பிள்ளைகள் வெள்ளிமோதிரம் அணியலாம்; ஆனால், பொன் மோதிரம் அணிவது கூடாது; ஆயின், பெண்பிள்ளைகளோ, எத்தகைய ஆபரணங்களையும் அணிந்துகொள்ளலாம் ('ஹதீ'.7-10). ஆடவன் செய்துகொள்ள வேண்டிய அலங்காரம், மீசைதாடி கேசம் வைத்துக்கொள்ள வேண்டியவிதம், வாசனைத்திரவியம் அணிந்து கொள்ளவேண்டிய மாதிரி ஆகியவை 'ஹதீ'. 11-16-இல் விவரிக்கப்பட்டுள்ளன. 'ஹதீ'.17—20 உருவப்படங்களைக் குறித்தும், வேறு பல அலங்காரங்களைக் குறித்தும் கூறிக்கொண் டிருக்கின்றன.

1. நபிகள் திலகம் (சல்அ'ம்) நவின் றருளினார்கள் :—

"கடப்பான துறையில் இறங்கி விடாமலும், தற்பெருமை மிக்கவராய் உயர்ந்து விடாமலும் இருந்து கொண்டு, (நல்ல விதமாய்ப்) புசியுங்கள்; மேலும், பருகுங்கள்; இன்னம், ஆடையணியுங்கள்; மேலும், தர்மசீலர்களாயிருந்து கொள்ளுங்கள்."[1]—(பு'க'ா. 77 : 1)

---

1. நெடுஞ்ஜுப்ப'ா, அல்லது நெடிய மேற்சட்டை யணியவர்கள் தங்களை எல்லாரும் பார்க்கவேண்டு மென்று, அல்லது

2. மிஸ்வர் கூறினர்: நான் ஒரு பளுவான கல்லை யெடுத்துக் கொண்டு, (அதனைச் சுமந்து) போய்க்கொண் டிருந்தபொழுது, எனது (அரை) ஆடை அவிழ்ந்து விழுந்தது; ஆகையால், அல்லா(ஹ்) வின் திருத்தூதர் (சல்அ’ம்) எனக்குச் சொன்னர் கள்:—

“உமது ஆடையை எடுத்து உம்மீது அணிந்து கொள்ளும்; மேலும், நீர் நிர்வாணமாய் நடப்பது கூடாது.”[2]— (அபூ’த’ா. 30 : 2)

---

வீண் ஆடம்பரத்துக்கென்று அணிந்துகொள்வார்க ளாயின், அது கூடாத காரியமே யாகும் (பு’க’ா. 77: 4, 5). ஆனல், சாதாரண மாகவே ஒருவன் அத்தகைய நெடுஞ்ஜுப்’ப’ாவை வழக்கமா யணிந்துவருவானயின், அதனலொன்றும் குற்றமில்லை; ஆகையால், அது தடுக்கப்பட் டில்லை (பு’க’ா. 77: 2.)

2. சரீரத்தில் மறைத்துக் கொள்ள வேண்டிய பாகங்கள் அ’வ்ரத் தென்று அழைக்கப் படுகின்றன. அ’வ்ரத் இவ்வாறு இலக்ஷணிக்கப்பட் டிருக்கிறது: “திறந்து காண்பிப்பதற்கு அஸப் பியமா யிருக்கும் தேகத்தின் பகுதி, அல்லது பகுதிகள்; ஆண் பிள்ளைக்குக் கொப்பூழிலிருந்து முழந்தாள் முட்டுக்குக்கீழ் வரையிலாம்; பெண்பிள்ளைக்கு முகமும், கைம்மணிக்கட்டுக் களுக்கு வெளிப்புறங்களும் அல்லாத ஏனைப்பகுதிக ளெல்லாம் மறைக்கத்தக்கனவே யாம்.”

அத்தியாவசியம் ஏற்பட்டாலன்றி, ஒருவன் அந்தரங்கத்தி லிருக்குங்காலும் அம்மணமாயிருப்பது தடுக்கப்பட் டிருக்கிறது. இரக்சியத்தில் தனித்திருக்குங்கால் நிர்வாணமா யிருக்கலாமா வென்று வினவப்பட்டக்கால், நபிகட்டிலகம் இவ்வாறு விடை யளித் துள்ளார்கள்: “ஒருவன் அவன்— (ஆண்டவன்) முன்னே லஜ்ஜையுற வேண்டு மென்பதில் மனிதர்களைப் பார்க்கினும் அல்லா(ஹ்)வுக்கே அதிக உரிமை இருக்கிறது” (அபூ’த’ா. 30 : 2).

3. அபூ'உ'துமான் கூறியுள்ளார் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) இவ்வளவல்லாத (அதிகமான) பட்டை அணிவதினின்று எங்களைத் தடுத்துள்ளார்களென்று உ'மரின்பாலிருந்து ஒரு நிருபம் எங்களுக்கு வந்தது; இன்னம், அன்னவர் பெருவிரலுக்கு அடுத்தாற்போ லுள்ள தம்முடைய இரு விரல்களைக் கொண்டு சுட்டிக் காண்பித்தார். எங்களுடைய அறிவுக் கெட்டிய மட்டில், அவர் அஃ'லாம் என்றே கருத்துக் கொண்டதாய்க் கூறினர்.[3]— (பு'க'ா. 77 : 25)

4. அனஸ் கூறினர்: சொறியின் காரணத்தால் 'ஜு'பய்ருக்கும் அ'ப்'து'ர் ர'ஹ்மானுக்கும் பட்டையணிந்து கொள்ள நபிகள் திலகம் (சல்அ'ம்) அனுமதி யளித்தார்கள்.— (பு'க'ா. 77 : 29)

---

இஸ்லாத்திற்கு முற்பட்ட காலத்தில் அந்த அஞ்ஞானிகள் அம்மணமாகவே கஃ'ப'ாவைச்சுற்றித் தவ்வா'ப் (இடம்) வந்து கொண்டிருந்தார்கள்; அக்கொடிய வெட்கக்கேடான வழக்கம் நபிபெருமானாலே அப்பால் நிறுத்தப்பட்டுப் போய்விட்டது.

3. அஃ'லாம் என்பது அ'லம்— (குறி, அல்லது அடையாளம்) என்பதன் பன்மையா யிருக்கிறது. ஆடையின் அஃ'லாம் என்பது, அலங்காரம், அல்லது சித்திரவேலை செய்யப்பட்டுள்ள அதன் ஓரப்பட்டி, அல்லது கரையென்பதா யிருக்கிறது. அத்தியாவசியமான காரணங்களுக்காக வன்றி, ஆடவர்கள் பட்டையணிவது கூடாது; பெண்டிருக்கோ, அத்தகைய நிபந்தனை யில்லை. ஆண் மக்கள் வெளியிற் சென்று கடினமான முரட்டு வேலைகளைச் செய்ய வேண்டியவர்களா யிருக்கிறார்கள்; எனவே, இவர்கட்குப் பட்டுப் போன்ற மிருதுவான ஆடம்பர ஆடை கூடா தன்றோ? ஆனால், ஆடவர்கள் க''ஜ் ஜென்னும் (ரோமமும் பட்டும் கலந்து நெய்த) ஆடையை யணிந்து கொள்ளலாம் (மஸ். IV, 233).

5. அனஸ் கூறி யுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) குமாரியாம் உம்மு குல்:தூம் கோடுபோட்ட பட்டாடை யொன்றை அணிந்திருந்ததை இவர் கண்ணுற்றார்.— (பு’க’ா. 77 : 30)

6. உ’:க்ப’(த்)திப்’னு ஆ’மிர் கூறினர்: நபிகள் திலகத்திற்கு (சல்அ’ம்) பட்டாலாய ‘பர்ரூஜ்[4] ஒன்று சம்மான மளிக்கப்பட்டது; மேலு மவர்கள் அதனை அணிந்து கொண்டார்கள். இன்னம், அதனை அணிந்து கொண்டே தொழுது கொண்டார்கள். பின்பு, அதனை வெறுத் தொதுக்குகிறவரைப் போலே வேகமாய்க் கழற்றி வீசியெறிந்தார்கள்; மேலும், “இது முத்த(க்):கீன்களுக்கு லாயிக்கில்லாததா யிருக்கிறது,”[5] என்றுங் கூறினர்கள்.— (பு’க’ா. 8 : 16)

7. அபூ’ ஹுரய்ரா, நபிகள் நாயகத்தின் (சல்அ’ம்) ஆதாரத்தைக் கொண்டு, அப்பெருமானார் பொன்மோதிரம் அணிவதைத் தடைசெய்துள்ளார்களென்று கூறியுள்ளார்.— (பு’க’ா. 77 : 45)

8. அனஸ் கூறினர்: நபிகள் திலகம் (சல்அ’ம்) உரோமருக்கு(த் திருமுகம்) வரைய நாடிய

---

4. ‘பர்ரூஜ் என்பது, :கப’ா— (ஒருவகைச் சொக்காய்) போன்ற குடுத்தாவாகும்; இதன் பின்புறத்தில் பிளந்து விடப்பட்டிருக்கும்.

5. முத்த(க்):கீன்கள் அல்லா(ஹ்)வின்பாலே அச்சத்துடன் தங்கள் கடமையில் சர்வ ஜாக்ரதையாய் நடந்து கொள்கிறவர்களாவார்கள்; இங்கு ஆண் முத்த(க்):கீன்களே குறிக்கப்பட்டுள்ளார்கள்; என்னெனின், பெண்மணிகள் பட்டணிவது அனுமதிக்கப்பட்டிருத்தலினால் என்க (‘ஹதீ’. 5).

பொழுது, அவர்கள் இவர்களுடைய நிருபத்தை, அதிலொரு முத்திரை அழுத்தப்படா திருப்பின், வாசிக்கமாட்டார்க ளென்று இவர்களுக்குக் கூறப் பட்டது. ஆகையால், வெள்ளியினுல் மோதிர மொன்று சித்தஞ் செய்யுமாறு இவர்கள் உத்தர விட்டார்கள்; அதில் காணப்பட்ட முத்திரை அல்லா(ஹ்)வின் தூதர் மு'ஹம்மத்' என்பதா யிருந் தது.[6]— (பு'க'ா. 77 : 52)

9. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினர்: நபி பெரு மானுர் (சல்அ'ம்) வெளியிற் சென்றூர்கள்; அவர் களுடனே பி'லாலும் இருந்தார் என்பதற்கு நபிகள் நாயகர் (சல்அ'ம்) குறித்து யான் சாக்ஷியம் கூறு வேன்; இன்னம், அன்னவர்கள், தாங்கள் பெண் மணிகளைக் கேட்குமாறு செய்யவில்லையோ வென்று எண்ணினுர்கள்; ஆகையால், அவர்கள் அன்னவர் களுக்கு—அந்தப் பெண்மணிகட்கு, நல்லுபதேசம் புரிந்து, தர்மம்வழங்குமாறு அவர்களுக்குக் கட்டளை யும் இட்டார்கள்; அப்பொழுது பெண்மணிக ளெல்லாம் (தங்கள்) காதணிகளையும் மோதிரங்களை

---

6. ஹி. 6-ஆவதாண்டில் நபிகள்பெருமானுர் (சல்) அண்டை அயலிலுள்ள அரசர்கட்குத் திருமுகங்கள் வரைந்தனுப்பியக்கால், அவற்றிலே முத்திரையிட்டனுப்ப ஒரு வெள்ளி மோதிரம் செய்து கொண்டார்கள். அம் முத்திரையில் மு'ஹம்மத் ரஸூல் அல்லா(ஹ்) என்று வரையப்பட் டிருந்தது; இனி [illegible] காணப் படுவதேபோல், அம்மூன்று வார்த்தைகளும் மூன்று வரிகளாக வரையப்பட் டிருந்தன. மேல் வரியில் அல்லா(ஹ்) என்றும், நடு வரியில் ரஸூல் என்றும், அடி வரியில் மு'ஹம்மத் என்றும் வரையப் பட்டிருந்தன.

யும் கழற்றி யெறியத் துவக்கினார்கள்; மேலும், பி'லால் தமது ஆடையின் ஒரு பக்கத்திலே அவற்றினைச் சேகரித்துக் கொண்டார்.— (பு'க'ா. 3 : 32)

10. உம்மு ஸலமா கூறினர்: நான் பொன்னாலாய ஆபரணங்கள் அணிவ துண்டு; ஆகையால், 'ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! இது (குவடு) சேகரிப்பதாகுமா?' என்று யான் வினவினேன். (இதற்கு) அவர்கள் சொன்னார்கள் :—

"எது வொன்று 'ஜகாத்தின் எல்லையை எட்டி, அதன்மீது 'ஜகாத்தும் கொடுபடுகின்றதோ, அது (குவடு) சேகரிப்பு ஆகமாட்டாது." [7]— (அபூ'த'ா. 9 : 4)

11. அபூ'ஹுரய்ரா கூறி யுள்ளார்: ஐந்து காரியங்கள் இயற்கைக்கு ஏற்றவைகளா யிருக்கின்றன: விருத்த சேதனம் செய்தல், அரையின் உரோமத்தை அகற்றுதல்,[8] கட்கத்தின் மயிரைக் களைதல், நகங்களை நறுக்குதல், மீசை (யுரோமத்தைக்) கத்தரித்தல் (ஆகியவைகளே).— (பு'க'ா. 77 : 63)

12. இப்'னு உ'மர் கூறியுள்ளார்: நபிகள் பெருமான் (சல்அ'ம்) நவின் றருளினார்கள் :—

---

7. உம்மு ஸலமா நபிபெருமானாரின் ஒரு பிராட்டியா யிருந்தார். இந்த 'ஹதீ'துகளால் பெண்மணிகள் எந்தவித ஆபரணங்களும் அணிந்துகொள்ளலா மென்று விளக்கமாகின்றது. பட்டும் பணிகளும் பெண்மணிகளுக்கு விலக்கப்பட்டில்லை.

8. அடி வயிற்றுக் கீழுரோமத்தைக் கத்தியாற் சிரைத்தல் இஸ்தி'ஹ்தா'த்' என்று சொல்லப்படும். அஃதாவது, அடிவயிற்றின் கீழே அரையிலுள்ள ரோமத்தை அகற்றுவ தென்பதாம்.

"பலதெய்வ வணக்கக் காரர்களை நீங்கள் எதிர்த்துச் செய்யுங்கள் ;— தாடியை (அதிக) அடர்த்தியாக வளர விட்டு,[9] மேலும் மீசையைக் (குறுகலாய்க்) கத்தரித்துக் கொள்ளுங்கள்." இன்னம், இப்'னு உ'மர் 'ஹஜ்ஜை அல்லது உ'ம்ராவை முடித்துக்கொள்ளும் பொழுது, அவர் தமது தாடியைக் கையாற் பிடித்துப் பார்ப்பார்; (அவரது கைப் பிடிக்குமேலே) நீண்டிருப்பதை வெட்டிக் கொண்டு விடுவார்.— (பு'க'ா. 77 : 64)

13. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) தங்கள் தலை ரோமத்தைத் (தங்கள் நெற்றியின் மீது) தொங்க விட்டுக்கொண் டிருந்தார்கள் ; பலதெய்வ வணக்கக் காரர்களோ, தங்கள் கேசத்தைச் சீவி, இருபகுதிகளாக (வகிடு) பிளந்து இரு பக்கங்களிலும் விட்டுக் கொண் டிருந்தார்கள் ; வேதத்தையுடையவர்களோ,

---

9. இதனால் விளக்கமாவது, அக்காலத்தில் இஸ்லாத்தைத் தழுவாத அரபிகள் தாடியைச் சிரைத்து வந்தார்க ளென்பது தானாகும். இக்கால முஸ்லிம் யுவர்கள்— ஏன் பெரிய பெரியவர்களுங்கூட— தாடிவைப்பது இதுபொழு துள்ள நாகரிகத்துக்கு விரோதமா யிருக்கிறதென் றெண்ணி முகத்தை மழுங்கச்சிரைத்து விடுகிறார்கள் ; மீசையுங்கூட வேண்டாமென்று பெண்களேபோல மொட்டை மூஞ்சியாய்க் காணப்படுகின்றனர் பலர். நபிகள் நாயகத்தின் பழக்க வழக்கங்களை மேற்கொள்வதைவிட மேனாட்டு நிரீசுவர் மக்களைப் பின்பற்றி நடப்பதே தங்களுக்கு விமோசன மளிக்கு மென்று எண்ணி யிருக்கின்றனர் போலும், இந்த முஸ்லிம்க ளென்னப்படுபவர்கள். எல்லாவித நடையுடை நாகரிகங்களிலும் நம்ரஸூல் நாயகத்தைவிட மேனாட்டு நிரீசுவரவாதிகளே இவர்களுக்கு நேர்வழி காட்டிகள் போலும்! ஐயகோ !!

தங்கள் தலைமயிரைத் (தங்கள் நெற்றியின் மீதே) தொங்க விட்டுக்கொண் டிருந்தார்கள். அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) தங்களுக்கு இன்னதை (இன்ன விதந்தான்) செய்ய வேண்டு மென்று உத்தரவு கிட்டாத காரியங்களில் வேதத்தையுடையவர்களுடனே ஒத்துப்போவதையே விழைந்து நிற்பார்கள். அப்பால் அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) தங்கள் கேசத்தை இருபகுதிகளாக வகிர்ந்து சீவிக்கொண்டார்கள்.[10]— (பு'க'ா..61 : 23)

14. ஆ'யிஷா பிராட்டியார் கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) அவர்களது கேசத்தை யான் சீவி(ச் சிக்கறுத்து) விடுவது வழக்கம்.— (பு'க'ா. 6 : 2)

15. ஆ'யிஷா பிராட்டியார் கூறி யுள்ளார்:

10. இதனால் விளக்கமாவது யாது? நபிகள் நாயகர் (சல்) வெவ்வேறு சமயங்களில் வெவ்வேறு விதமாய்த் தங்கள் கேசத்தை வகிர்ந்துவந் திருக்கிறார்கள். ஒருவர் இன்னவித மாகத்தான் கேசத்தை வளர்க்க வேண்டு மென்றோ, வளர்க்க வேண்டா மென்றோ நபிபெருமானார் குறிப்பிட்டுக் கூறியதில்லை. ஸத்'ல்— (அஃதாவது, கிறிஸ்தவர் வைத்துக்கொள்ளும் வகை) என்பது முன்னெற்றியில் தொங்கும் குடுமி விடுவதா யிருந்தது; 'பர்க்கென்பது— (அரபிகள் வைத்துக்கொள்ளும் கேசவகை) தலையுரோமத்தை இருகூறாக வகிர்ந்து, இடையிலே "வகிடு" கீறி, இருபுறத்தும் செவிகளுக்குப் பின்னே விட்டுவிடுவ தாகும். நபிகள் திலகம் மேற்கூறிய இருவிதமாகவும் வெவ்வேறு சமயங்களில் தங்கள் கேசத்தை வளர்த்துவந் திருக்கிறார்கள். இனியொரு 'ஹதீ'தில், இப்'னு அ'ப்'ப'ாஸின் முன்னெற்றியில் 'தவாஇப்'— (சிகையின் பின்னிவிட்ட சடை) இருந்ததாகக் காணப்படாநின்றது (பு'க'ா. 77 : 71).

நபிகணுயகருக்கு (சல்அ'ம்) அவர்களாற் கூடுமான வரை, தங்களது (கேசத்தைச்) சீவிக்கொள்வதிலும், தங்களுடைய வுளூ'விலும் வலப் பக்கத்திலே தொடங்குவதற்குப் பிரியம் அதிகமாயுண்டு.[11]— (பு'க'ா. 77 : 77)

16. ஆ'யிஷா பிராட்டியார் கூறினர்: நான் நபிகள் திலகத்திற்கு (சல்அ'ம்) அவர்கள் பெறக் கூடிய மகாநேர்த்தியான வாசனைத் திரவியத்தைக் கொண்டு நறுமணம் ஊட்டிவைப்பது வழக்கம்;— ஆகவே, நான் அவர்களுடைய தலையிலும், அவர்களுடைய தாடியிலும் நறுமணத்தின் புதுமணத்தை நன்கறிந்து கொள்ளக்கூடும்.— (பு'க'ா. 77 : 74)

17. பு'ஸ் ரிப்'னு ஸஈ'த்' கூறி யுள்ளார்: பு'ஸ் ரிப்'னு ஸஈ'து'டனே உ'ப'ய்து'ல்லா(ஹ்) இருந்துவந்த பொழுது, "எந்த வீட்டில் உருவம் இருக்கிறதோ, அந்த வீட்டிற்குள்ளே அமரர்கள் நுழைய மாட்டார்கள்,"[12] என்று நபிகள் திலகம்

---

11. இந்த 'ஹதீ':துகளாலெல்லாம் நபிபெருமானுர் தங்கள் காரியங்களில் எத்துணை ஜாக்கிரதையா யிருந்து வந்தார்களென்பது செவ்விதாய் அறியக் கிடக்கின்றது.

12. சூரத்தென்பது உருவச்சிலையை, அல்லது உருவப்படத்தைக் குறித்துக் காட்டுவதா யிருக்கிறது. இந்த 'ஹதீ':தின் இனியொரு பாடபேதப் பிரகாரம் (பு'க'ா. 59 : 7) "எந்த வீட்டில் உருவம் அல்லது நாய் இருக்கிறதோ, அந்த வீட்டிற்குள்ளே அமரர்கள் நுழைய மாட்டார்கள்," என்று எம்பெருமானுரவர்கள் திருவாய் மலர்ந்தருளி யுள்ளார்களென்னும் விஷயம் காணப்படாநின்றது. ஆனல், வேட்டைக்காக நாய்களை வைத்துக்கொள்ளலா மென்று :குர்ஆன்ஷரீ'ப் அனுமதிய ளித்திருக்கிறது (5 : 4). 'ஹதீ':து ஷரீ'பிலும் (பு'க'ா. சுருக். 28 : 8) வேட்டை நாய்க்கு அனுமதி

(சல்அ’ம்) நவின்றருளி யுள்ளார்க ளென்று அபூ’(த்):தல்‘ஹா தமக்கு அறிவித்துள்ளா ரென்று ‘ஜய்தி’ப்’னு க’ாலித்’ அவருக்கு— (பு’ஸ்ருக்கு)க் கூறினர். (மேலும்) பு’ஸ்ர் கூறினர்: இதற்குப் பின்னே ‘ஜய்தி’ப்’னு க’ாலித்’ வியாதியுற்று வீழ்ந் தார்; இன்னம், நாங்கள் அன்னவரைப் போய்ப் பார்த்தோம்; மேலும், நாங்கள் அவருடைய வீட்டி லிருந்த பொழுது, ஆங்கொரு திரைச் சீலையைக் கண்டோம்; அதில் உருவங்கள் (வரையப்பட்டு) இருந்தன. ஆகையால், ‘இவர் உருவங்களைக் குறித்து நமக்குக் கூறியிருக்க வில்லையா?’ என்று

---

யளிக்கப்பட் டுள்ளது. இவ்வாறே காவலுக்காக வைத்துக் கொள்ளப்படும் நாய்களுக்கும் அனுமதி யிருக்கிறது. இவ்வண்ண மாயே, ஸுலைமான் நபிக்காகத் தமா:தீல்—(உருவச்சிலைகள்)செய்யப் பட்டன வென்று :குர்ஆன்ஷரீ‘ப் கூறிக்கொண் டிருக்கிறது. அத் தகைய உருவச்சிலைகள் இருந்து வந்த காரணத்தால் அல்லா(ஹ்)வின் ஒரு பெரிய நபியாய் விளங்கி வந்த அந்த ஸுலைமான் நபியவர்கள் பால் அமரர்கள் விஜயம் செய்யவில்லை யென்று கூறத் துணிவது கூடாததே யாகும். எனவே, உருவச்சிலைகளும் (அல்லது உருவப் படங்களும்) நாய்களும் இருக்கும் வீட்டிற்குள்ளே வானவர்கள் நுழையத் துணியார்க ளென்று கூறும் ‘ஹதீ’:துக்கு அப்படியே நேர்பொருள் கொடுக்கக்கூடா தென்னும் விஷயம் விளக்க மாகின்றது. இக் காரணத்தினலேதான் இமாம்ரா:கிப்’ போன்ற மஹான் இந்த ‘ஹதீ’:திலே காணப்படும் ப’ய்த்— (வீடு) என்னும் சொல்லுக்கு “ஹிருதய கமலம்” என்றே பொருள் கூறியுள்ளார்: இதன் கருத்தாவது, எவருடைய உள்ளத்தினுள்ளே ‘உருவச் சிலைகள், அல்லது விக்கிரகப்படிவங்கள் இடம்பெற்று, அவற்றின் முன்னே அன்னவர் சிரங் குனிகின்ருரோ, அப்படிப்பட்டவர் அருளைக்கொணரும் அமரருடைய விஜயத்தைப் பெற்றுக்கொள்ள மாட்டார் என்பதாயே காணப்படாநின்றது. இந்த ‘ஹதீ’:தின்

நான் உ'ப'ய்து'ல்லா(ஹ்)வுக்குச் சொன்னேன். '(ஆம்) இவர் கூறினர்; (ஆனல்) ஆடையின் மீதுள்ள உருவங்களையன்றி யென்று; நீர், இவர் (அவ்வாறு) கூறியதைக் கேட்கவில்லையா?' என்று அவர்-(உ'ப'ய்து'ல்லாஹ்) பதில் கூறினர். (கேட்க) இல்லையென்று யான் சொன்னேன்; 'ஆம்! இவர் இதனைச் சொன்னர்,' என்று அவர் (எனக்குச்) சொன்னர்.—(பு'க'ா. 59 : 7)

18. அ'ப்'து'ல்லா ஹிப்'னு உ'மர் கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள்:—

''இந்த உருவச்சிலைகளை—(சுவர்களை) உண்டு பண்ணுகிறவர்கள் மரித்தவர் உயிர்த்தெழு நாளிலே தண்டிக்கப் படுவார்கள்; 'நீங்கள் உண்டுபண்ணியதற்குள்ளே உயிரைப் புகுத்துங்கள்,' என்று அவர்கட்குச் சொல்லப்படும்.''[13]—(பு'க'ா. 77 : 89)

---

இறுதிப்பகுதி, திணியில் அச்சிடப்பட்டுள்ள உருவங்களை—ர:க்ம'பில்:தவ்ப்'—நீக்கிவிட் டிருப்பது கவனிக்கத்தக்கதா யிருக்கிறது; இதே விலக்குவிதி காகிதத்தில் அச்சிடப்பட்டுள்ள உருவங்களுக்கும் ஒக்கும். இந்த விலக்குவிதி—(புறனடை) மேலே கூறப்பட்ட அபிப்பிராயத்தை உறுதிப்படுத்துவதா யிருக்கிறது. சுருக்கிச் சொல்லுமிடத்து, பூஜிக்கப்படுவதற்காக, அல்லது அல்லா(ஹ்)வின் ஸ்தானத்திலே வைத்து வணங்கப்படுவதற்காக உருவச்சிலைகளோ, உருவப்படங்களோ வைத்திருப்பது கூடாதென்பதே இந்த 'ஹதீ':தால் விளக்கப்பட்டிருக்கிறது என்க.

13. சென்ற அடிக்குறிப்பில் விளக்கப்பட் டிருக்குமா போன்று, பூஜைக்காக, அல்லது வணக்கத்திற்காக உருவங்களை—(படிமங்களை, அல்லது படிவங்களை) நிருமிப்பவர்களே அவ்வாறு அந்நாளில் தண்டிக்கப்படுவார்கள் என்றறிக.

19. ஆ’யிஷா பிராட்டியார் கூறியுள்ளார்: நபிகள் பெருமானார் (சல்அ’ம்) தங்களில்லத்தில் உருவங்கள் அமைந்திருந்த எந்த ஒருவஸ்துவையும், அதனைத் தாங்கள் உடைக்காமலே விட்டதில்லை.[14] — (பு’க’ா. 77 : 90)

20. இப்’னு உ’மர் கூறினார்: நபிகள் பெருமான் (சல்அ’ம்) ‘பா(த்)திமாவின் வீட்டிற்கு வந்தார்கள்; ஆனால், அதனுள்ளே நுழையவில்லை. அ’லீ (ரலி’) வந்தபொழுது, அவர்— (‘பாத்திமா) அன்னவர்பால் அதனைத் தெரிவித்தார்; அவர்— (அ’லீ)

---

14. இவ்வாறு அப்பெருமானார் செய்தது, அவர்களது எளிய வாழ்க்கையின் காரணத்தாலே இருக்கலாம்; அவர்கட்கு அலங்காரத்திலும் ஆடம்பர வாழ்க்கையிலும் எப்பொழுதுமே பிரியம் இருந்ததில்லை. இக்கருத்து அடுத்துவரும் ‘ஹதீ’:தால் நன்கு நிரூபணமாகின்றது; தங்கள் திருக்குமாரி ‘பா(த்)திமாவின்(ரலி’) வாயிலின்மீது போடப்பட்டிருந்த உருவம் வரைந்திருந்த ஒரு திரையை நம் நபிபெருமான் (சல்) விரும்பவில்லை; ஆனால், அதன் தேவை எவருக் கிருந்ததோ, அவருக்கு அதனை யனுப்பிவிடுமாறு கட்டளை யிட்டுவிட்டார்கள். இதனால், அப்பெருமானார் சித்திரம், அல்லது உருவம் வரைந்திருந்த காரணத்தால் அத்திரைச் சீலையை விரும்பவில்லை யென்பது சரியாகமாட்டாது என்பது விளக்கமாகின்றதன்றோ? அவ்வுருவத்தின் காரணத்தால் அவர்கள் அந்தத் திரையை வெறுத்திருப்பின், அதனை அக்கணமே கிழித்து விட்டிருப்பார்கள். அவ்வாறில்லை. அதனை வேறு தேவைப்பட்டவர்களுக்கு அனுப்பச் செய்துவிட்டார்கள். தங்களைப்போலவே தங்கள் அருமைப் புதல்வியும் வீண் ஆடம்பரம், அல்லது அலங்காரமற்ற சர்வசாதாரண எளிய வாழ்க்கையே நடாத்த வேண்டுமென்று எண்ணியிருந்தார்கள்போலும் எம்பெருமானாரவர்கள். என்னே அன்னவர்களின் எளிய ஸௌலப்ய வாழ்க்கை!

அது குறித்து நபிகள் நாயகத்திடம் (சல்அ'ம்) பிரஸ்தாபித்தார்; அதற்கு அவர்கள்—(நபிகணாதர்) "நான் அவரது (வீட்டு) வாயிலின்மீது ஓர் உருவம் வரைந்துள்ள திரையைக் கண்டேன்," என்று சொன்னார்கள்; மேலும், கூறினார்கள்: "இவ்வுலக (அலங்கார)த்துடனே எனக்கொன்றும் சம்பந்த மில்லை." ஆகவே, அ'லீ அவர்பால் திரும்பிவந்து, இதனை அன்னவர்— ('பாத்திமாவின்)பாலே அறி வித்து விட்டார். 'இது குறித்து அவர்கள் தாங்கள் நாடியபடி எனக்குக் கட்டளை யிடட்டுமே,' என்று அவர்— (பாத்திமா) கூறினர். (அப்பொழுது) அவர் கள்— (நபிகள் திலகம்) சொன்னார்கள் :—

"அதனை இன்ன இன்ன ஜனங்களுக்கு அனுப்பிவிடக் கடவாய்; அவர்கள் (இதன்) தேவை யிலே யிருக்கின்றார்கள்."— (பு'க'ா. 51 : 27)



## அத்யாயம்—30

### ஒழுக்கம்— (அத'ப்')

1. அல்லா(ஹ்)வின் பார்வையில் உங்களுள்ளே மகா புருஷனு யிருப்பவன் தனது ஒழுக்கத்தில் உங்களுள்ளே சர்வ ஜாக்ரதையா யிருப்பவனே" (:குர். 49 : 13).

2. "இன்னம், உங்கள் பெற்றோர்களுக்கு நன்மை புரியக் கடவீர்கள்; அவர்களுள் ஒருவரேனும், அவ்விருவருமேனும் உன்னுடனே— (உ'னதாயுளிலே) வயது முதிர்ச்சியை எய்தி விடுவாராயின், அவர்களை நோக்கிச் சை யென்று (கூடச்) சொல்லாதே; இன்னம், அன்னவர்களை (ஏதும் திட்டி) ஏசாதே; மேலும், அவர்கள்பால் பக்ஷமான (பெரிய) சொல்லையே சொல்லக் கடவாய். இன்னம், அன்னவர்கட்கு இரக்கத்துடனே நீ பக்ஷமாய்ப் பணிந்து நடக்கக் கடவாய்; இன்னம், பின்வருமாறு கூறக்கடவாய்: 'என் ரக்ஷகா! யான் சிறு குழந்தையா யிருந்துவந்தக்கால், அவர்கள் என்னைப் பாலித்து வளர்த்து வந்தமையால், அவர்க ளிருவர்மீதும் நீ கருணைகூரக் கடவாய்" (17 : 23, 24).

3. "மேலும், தரித்திரத்தின் பயத்தால் உங்கள் குழந்தைகளை நீங்கள் கொல்லாதீர்கள்; நாம் அவர்களுக்கும், உங்களுக்கும்கூட(ச் சேர்த்து) ஜீவனோபாயத்தை யளிக்கிறோம்" (17 : 31).

4. "இன்னம், அன்னவள் என்ன பாபத்திற்காகக் கொல்லப்பட்டா ளென்று உயிருடன் புதைக்கப்பட்டவள் (குறித்து) வினவப்படுங்கால்" (81 : 8, 9).

5. நேரிய மார்க்கமாவது: அல்லா(ஹ்)வைக் கொண்டும், ......ஈமான் கொண்டு, மேலும் (அல்லாஹ்வாகிய) அவன் மீது வைத்த அன்பின் காரணத்தால், சுற்றத்தார்களுக்கும், அகதிகளுக்கும், வறுமையுற்ற ஏழைகளுக்கும், வழிப்போக்கர்

களுக்கும், யாசகம் கேட்பவர்களுக்கும், அடிமைப்பட்டவர் களுக்கு (உரிமை யளித்தற்கும் தம்பாலுள்ள) ஐசுவரியத்தை அள்ளிக்கொடுத்து, தொழுகையை (நியமமாய்) நிலைநிறுத்தி யும், ஏழை விகிதத்தை ஈந்தும் வருபவனே யாவான்" (2 : 177).

6. "இன்னம், புருஷர்களுக்குப் பெண்டுகள் மீது (உரிய) பாத்தியதை இருப்பதேபோல், பெண்டுகளுக்கும் நன்மையான முறையிலே புருஷர்கள்மீது (உரிய) பாத்தியதை உண்டு" (2 : 228).

7. "நீங்கள் நல்ல முறையிலே அவர்களை— (உங்கள் மனைவியரை உங்கள்பால்) தடுத்து நிறுத்திக்கொள்ளுங்கள்" (2 : 229, 231).

8. "மூமினனவர்க ளெல்லாம் சகோதரர்க ளாகவே இருக்கிறார்கள் ; ஆதலால், உங்கள் சகோதரர்களுக் கிடையே சமரசத்தை ஏற்படுத்தக் கடவீர்கள்" (49 : 10).

9. "மு'ஹம்மத்' அல்லா(ஹ்)வின் தூதரா யிருக்கின்றார் ; இன்னம், அன்னவருடனே யிருப்பவர்கள் (சத்யத்தை) நிரா கரித்து விட்டவர்களுக்கு விரோதமாய் உள்ளத்தின் உறுதியை உடையவர்களா யிருக்கிறார்கள் ; தங்களுக் கிடையே (மகா) கிருபையுள்ளவர்கள்" (48 : 29).

10. "இன்னம், மெய்பேசும் ஆடவரும் மெய்பேசும் பெண்டிரும்......ஆகியவர்களுக் கெல்லாம் அல்லா(ஹ்) பிழை பொறுத்தலையும் மகத்தான சம்மானத்தையும் சித்தப்படுத்தி வைத்திருக்கிறான்" (33 : 35).

11. "ஒவ்வொரு புறம்பேசுகிறவனுக்கும், அவதூற்றுப் பழிதூற்றுகிறவனுக்கும் அதோகதிதான்!" (104 : 1).

12. "ஒருவித ஜனங்கள் மற்றொருவித ஜனங்களைக் குறித்து எள்ளி நகையாட வேண்டாம்......இன்னம், ஒருவித ஸ்திரீகள் வேறொருவித ஸ்திரீகளைக் குறித்து எள்ளி நகை

யாடா திருக்கட்டும்......நீங்கள் உங்கள் சொந்த ஜனங்களைக் குறித்து இழிவான குறைகளைக் கூறவேண்டாம்; மேலும், ஒருவரையொருவர் நிந்தனைப் பெயர்களைக்கொண்டு (ஏளனமாக) அழைக்கவேண்டாம்......சந்தேகாஸ்பத எண்ணங்களினின்று அதிகமானவற்றைத் தவிர்த்துக் கொள்ளுங்கள்; மேலும், (ஒண்டியிருந்து) வேவு பாராதீர்கள்: இன்னம், உங்க ளுள்ளே சிலர் சிலர்மீது புறங்கூறித் திரியாதீர்கள்" (49 : 11, 12).

**13.** "இன்னம், நீங்கள் வாக்குறுதியை நிறைவேற்றக் கடவீர்கள்; நிச்சயமாக ஒவ்வொரு வாக்குறுதியும் ஏன் முறிக்கப்பட்டதென்று விசாரிக்கப்படும்" (17 : 34).

**14.** "இன்னம், நீங்கள் அளந்து கொடுக்குங்கால், முழு அளவாக அளந்து கொடுக்கக் கடவீர்கள்; மேலும், சரியான தராசைக் கொண்டு நிறுத்துக் கொடுக்கக் கடவீர்கள்." (17 : 35).

**15,** "இன்னம், ஒரு நியாயமான காரியத்துக்காக வன்றி, அல்லா(ஹ்) தடுத்துள்ள எந்த ஒருவனையும் கொல்லாதீர்கள்" (17 : 33).

**16.** "இன்னம், பெரும்பாபங்களையும் அஸப்பிய துராசாரங்களையும் தவிர்த்துக் கொண்டும், தங்களுக்குக் கோபம் பிறக்குந்தோறும் பொறுத்து விட்டும் இருப்பவர்கள்" (42 : 37).

**17.** "இன்னம், தீமைக்குக் கூலி அதுபோன்ற தண்டனையே; ஆனால், எவனொருவன் (குற்றமிழைத்தவனை) மன்னித்தும் திருத்தியும் விடுகிறானோ, அதுபொழுது அவனுக்குச் சம்மானம் அல்லா(ஹ்)வினிடத்தே கிடைக்கும்" (42 : 40).

**18.** "மேலும், அருளாளனாகிய ஆண்டவனுடைய அடியார்கள், தரணியின்மீது மிகப் பணிவுடனே நடந்து செல்பவர்களா யிருக்கிறார்கள்; மேலும், அறியாத முழுமக்கள்

அவர்களை (நிந்தனையாய்) விளிக்கும்பொழுது, அன்னவர்கள், ‘சாந்தி:’ என்றே சொல்வார்கள்” (25 : 63).

19. “நீங்கள் வியபிசாரத்திற்கு அருகே நெருங்காதீர்கள்; ஏனென்றால், அஃதொரு (பெருந்) துராசாரமா யிருக்கிறது; மேலும், அம்மார்க்கம் (முற்றிலும்) தீயதே” (17 : 32).

20. “அவர்கள்—(ஆடவர்கள்) தங்கள் பார்வைகளைக் கீழே கவிழ்த்துக் கொண்டு தங்கள் மர்மஸ்தானங்களைக் காத்துக்கொள்ளவும் வேண்டுமென்று மூமினான ஆண்பிள்ளைகளுக்குக் கூறக் கடவீர்கள்.

“அவர்கள்— (பெண்டிர்) தங்கள் பார்வைகளைக் கீழே கவிழ்த்துக் கொண்டு, தங்கள் மர்மஸ்தானங்களைக் காத்துக் கொள்ளவும் வேண்டுமென்றும், தங்களுடைய அலங்காரத்தை, அதினின்று வெளியில் (வழக்கமாய்த்) தெரிவதைத் தவிர்த்து, அதிகம் காட்டவேண்டா மென்றும், தங்கள் தலை முக்காட்டைத் தங்களுடைய மார்புகள் மீது இழுத்துவிட்டுக் கொள்ள வேண்டுமென்றும் மூமினான பெண்பிள்ளைகளுக்குச் சொல்லக் கடவீர்கள்” (24 : 30, 31).

21. “இன்னம், விவாகம் புரிந்துகொள்ள நம்பிக்கை வைக்காத வயது முதிர்ந்த ஸ்திரீகள்குறித் தென்றாலோ, இவர்கள் தங்கள் அழகை வெளிக்காட்டாது, தங்களுடைய உடைகளைக் களைந்து வைப்பதானால், இன்னவர்கள் மீது பாபமொன்று மில்லை” (24 : 60).

22. “உங்களுடைய சொந்த இல்லங்களை யன்றி, அன்னிய ரில்லங்களுள்ளே, அனுமதியின்றியும், அவற்றில் வசிப்பவர்களுக்கு வந்தனங் கூறாமலும் நீங்கள் நுழையாதீர்கள்.....,மேலும், ‘திரும்பிப் போங்கள்,’ என்று உங்களுக்குச் சொல்லப்பட்டால், அப்பொழுதே திரும்பிவிடக் கடவீர்கள்” (24 : 27, 28).

அத'ப்' என்பது, "மனத்தைப் பழக்கிப் பக்குவப் படுத்தல்," அல்லது "யாதொரு விசேஷப் பயிற்சியைக் கொண்டும் எவ ஞெருவன் மிக்க நல்ல முறையிலே பயிற்றுவிக்கப் பெறுகிருனே, அத்தகைய மேதை மரியாதை" என்று கருத்துக்கொள்ளும் ஒரு சிறந்த சொல்லா யிருக்கிறது. உபசாரம், ஒழுங்கு, ஆசாரச் சட்டம் என்றெல்லாமும் பொருள்கொள்ளும். சற்குணங்களும் சன்மார்க்க ஒழுக்கமுமே ஒரு மனிதனது உண்மையான உயரிய மேன்மையை உதஹரித்துக் காண்பிப்பனவா யிருக்கின்றன (தலை. ஆயத் 1; 'ஹதீ'. 1, 9). பெற்ருேர்பால் புத்திரன் காண்பிக்க வேண்டிய பிரியமே இஸ்லாமிய ஒழுக்கச் சட்டத்தில் உயரிய அந்தஸ்தைத் வகித்துக்கொண் டிருக்கிறது; அதிலும் தாயினிடத் தன்பே அதியுச்சஸ்தானத்தைப் பெற்றுக்கொண் டிருக்கிறது (தலை. ஆயத் 2; 'ஹதீ'. 2). ஆகவேதான், மக்களின் சுவர்க்கம் மாதாவின் பாதத்தடியிலே இருந்துவருகிற தென்று இயம்பப் புட்டிருக்கிறது ('ஹதீ'. 3). குழந்தைகளிடத்தில் பக்ஷமும் பிரிய மும் பாராட்ட வேண்டும் என்று நாம் கற்பிக்கப்படுகிருேம் (தலை. ஆயாத் 3, 4; 'ஹதீ'. 4, 5). அவர்களுக்காகத் தாய் தந்தையர் கஷ்டப்படுவதற் கெல்லாம் அன்னவர்கள் நரகத்தீயினின்று காக் குந் திரையாக இருந்து வருகிருர்கள் ('ஹதீ'. 6). பந்து மித்திரர் களுக்கு நன்மை செய்வது இவ்வுலக வாழ்க்கையிலும் மறுவுலக வாழ்க்கையிலும் ஆசீர்வாதம் பெறுதற்குரிய அஸ்திபாரமா யிருந்து வருகிறது (தலை. ஆயத் 4; 'ஹதீ'. 7, 8). மனைவிமார் தங்கள் கணவர்கள்மீது சில்வகை உரிமைகளைப் பெற்றவர்களா யிருக்கிருர்கள்; ஆதலால், அன்னவர்கள் அதிக பக்ஷத்துடனே நடாத்தப்படுதல் வேண்டும் (தலை. ஆயாத் 6, 7). மனிதர்களுள் -மகா சிலாக்கியமானவர் தம்முடைய மனைவியின்பால் மெத்தப் பிரியத்துடனே நடந்து கொள்கிறவராயே யிருக்கின்ருர் ('ஹதீ'. 9). இன்னம், அன்னவளின் வேலையிலே அவளுடைய கணவன் உதவிபுரிய வேண்டுமென்றும். உரைக்கப்பட்டிருக்கிறது ('ஹதீ'. 10). முஸ்லிம்கள் அனைவரும் ஏகசகோதரர்க ளாகவே இருக்கின்ருர்கள்;— ஒருடம்பின் உறுப்புக்களே போன்றும், ஒரு கட்டிடத்தின் பல்வேறு பகுதிகளே போன்றும் இருந்து வரு

கிருர்கள். ஆதலால், அவர்கள் ஒருவருக்கொருவர் உதவிபுரிந்து கொண்டும், ஒருவரோடொருவர் பக்ஷமாய் நடந்துகொண்டும் இருந்துவரக் கடவர் (தலை. ஆயாத் 8, 9; 'ஹதீ'. 11—14). எனவே, அன்னவர்களின் உயிரும் பொருளும் கண்ணியமும் குலைக்கப் படுவது கூடாது ('ஹதீ'. 15). நம் முஸ்லிம்கள் ஒருவரை யொருவர் வெறுப்பதும், ஒருவரையொருவர் பகிஷ்கரிப்பதும் கூடாவென்று தடுக்கப்பட் டிருக்கின்றனர் ('ஹதீ'. 16); அவர்கள் ஒருவரை யொருவர் கா'பிர் அல்லது 'பாஸிக் என்று அழைத்துக்கொள்வது கூடாது ('ஹதீ'. 17); எனவே, அவர்கள் ஒருவரோடொருவர் சண்டையிட்டுக் கொள்வதும் தகாது ('ஹதீ'. 18). அண்டை வீட்டுக்காரர் முஸ்லிமே யாயினும், அல்லாதாரே யாயினும், அன்னவர் அன்புடனே நடாத்தப்படல் வேண்டும் ('ஹதீ'. 19, 20). முஸ்லிமாயிருப்பவர் தம்முடைய அடிமைகள் பாலும் ஊழியர்கள் பாலும் பக்ஷத்துடனும் தாராள மனப்பான்மையுடனும் நடந்து கொள்ளல் வேண்டும்; அன்னவர்கள் எல்லா விஷயத்திலும் சரிசமான முள்ளவர்களாகவே நடாத்தப்படுதல் வேண்டும் ('ஹதீ'. 21—23). விதவைகளையும் அனுதைகளையும் கவனித்துக் காப்பாற்றுவது மகா சிலாக்கியமுள்ள காரியமாய்க் கருதப்பட்டு வருகிறது ('ஹதீ'. 24, 25). முஸ்லிம்கள் எதிரிகளையும் பக்ஷத் துடனே நடாத்திவரல் வேண்டும் ('ஹதீ'. 26, 27). அல்லா(ஹ்)வின் சிருஷ்டிகள்பால் அன்புடனே நடந்து கொள்ளுகிறவனுக்கு ஆண்டவனும் அன்பு காட்டுகிருன் ('ஹதீ'. 28, 29); வாயில்லாப் பிராணிகள் மாட்டும் பக்ஷம் பாராட்டக் கடவர் ('ஹதீ'. 30). மனிதன் மெய்பேசும் பழக்கத்தைக் கற்றுக்கொள்ளுதல் வேண்டும்; என்னெனின், உண்மையே எல்லா நற்குணங்களுக்கும் அடிப்படையா யிருந்து வருகிறது; பொய்யென்பதோ, தீமையின் துறையிலே இழுத்துக்கொண்டு போய்விடுகிறது (தலை. ஆயத் 10; 'ஹதீ'. 31). ஒரு மனிதன் மற்ற மனிதர்களுடனே பழகி வருங்கால், நீதத்துடனும் மன்னிக்கும் தாராள மனப்பான்மை யுடனுமே நடந்துகொள்ளல் வேண்டுமென்றும், எதிரிக்கு மன நோவினையை உண்டுபண்ணுது தவிர்ந்துகொள்ளல் வேண்டுமென்றும் பிரத்தியேகமான கட்டளைகள் பிறப்பிக்கப்பட் டிருக்கின்றன (தலை.

ஆயாத் 11—19; 'ஹதீ'. 32). இறுதியிலே நன்னடக்கைக்குரிய ஒரு சில ஆயாத்களும், 'ஹதீ':துகளும் குறிக்கப்பட்டிருக்கின்றன (தலை. ஆயாத் 20—22; 'ஹதீ'. 33—41).

இவ் வத்யாயத்திற் குரிய பற்பல விஷயங்கள் இதற்குமுன் சென்றுள்ள அநேக அத்யாயங்களில் மறைமுகமாகக் குறிக்கப்பட்டே வந்திருக்கின்றன.

1. அ'ப்'து'ல்லா ஹிப்'னு அ'ம்ர் கூறினர்: ........நபிகள்திலகம் (சல்அ'ம்)........(இவ்வாறு) நவில்வது வழக்கம் :—

“உங்களுள்ளே மகா சிலாக்கிய மானவர்கள் மிகவு மேலான குணாதிசயங்களை— (ஒழுக்கங்களை) உடையவர்களா யிருக்கிறார்கள்.”[1]—(பு'க'ா. 61 : 23)

2. அபூ' ஹுரய்ரா கூறினர்: ஒரு மனிதன் அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) பால் வந்து, 'ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! நான் நல்ல முறையிலே அவருடனே தோழமை வைத்துக்கொள்ள வேண்டுமென்று எவருக்கு (என்மீது) அதிகமான உரிமை இருக்கிறது?' என்று கேட்டான்; (இதற்கு) அவர்கள், “உன்னுடைய மாதாவுக்கு,” என்று சொன்னார்கள். 'அப்பால் எவருக்கு?' என்று அவன் கேட்டான்; (அப்பொழுதும்) அவர்கள், “உன்னுடைய மாதாவுக்கு,” என்று கூறினர்கள்.

---

1. “ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்;”

“பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித்
தேரினும் அஃதே துணை.”— குறள்.

இந்த வள்ளுவர் வாக்கை அந்த வள்ளலார் வாக்கியத்துடனே ஒப்புநோக்கிக் காண்பீர்களாக.

'அப்பால் எவருக்கு?' என்று அன்னவன் வினவினன்; (அதுபொழுதும்) அப்பெருமானர், "உன்னுடைய மாதாவுக்கே," என்று விடையளித்தார்கள். 'அப்பால் எவருக்கு?' என்று அம்மனிதன் (மீட்டும்) வினவினன்; (அதுகாலே) நம் பெருமானர், "அப்பால் உன்னுடைய பிதாவுக்கு," என்று நவின்றருளினர்கள்.[2]— (பு'க'ா. 78 : 2)

3. முஆ'விய(த்) திப்'னு ஜாஹிமா கூறியுள்ளார்: ஜாஹிமா நபிகணுதர் (சல்அ'ம்) பால் வந்து, 'ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! யான் போர் புரியும் படையிலே சேர்ந்து கொள்ள வேண்டுமென்று நாட்டங் கொண்டுள்ளேன்; ஆகையால், தங்களைக் கலந்து ஆலோசிக்க (இங்கு) வந்துளேன்,' என்று கூறினர். (இதுகேட்டு) அவர்கள், "உமக்குத் தாயார் இருக்கின்றாரா?" என்று வினவினர்கள்; 'இருக்கின்றார்,' என்று அவர் விடையளித்தார். (அதுகேட்டு) அவர்கள், "அவ்வாருயின், அன்னவர் பாலே நீர் ஒட்டிக்கொண் டிருக்கக் கடவீர்; ஏனென்றால், சுவர்க்க மென்பது அவ்வருடைய இரு பாதங்களின் கீழே அமைந்திருக்கிறது," என்று சொன்னர்கள்.[3]— (நஸா. 25 : 6)

---

2. "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்று தமிழ் மூதாட்டி கூறியிருப்பினும், இஸ்லாம் அல்லா(ஹ்) ஒருவனையன்றி வேறெவரையும் தெய்வமாய்க் கொண்டாடச் சொல்ல வில்லை; எனினும், இறைவனுக்கு அடுத்த படியிலே இஸ்லாம் தாய் தந்தையரை மதித்து நடக்குமாறு ஏவியிருக்கின்றது. "தந்தை தாய்ப்பேண்," என்பது ஈண்டுக் கருதிப் பார்க்கத்தக்க தாகும்.

3. இந்த 'ஹதீ':தால், இஸ்லாத்தில் மாதாவுக்கு— பொது

4. ஆ'யிஷா பிராட்டியார் கூறினர்: காட்டரபி யொருவன் நபிகள் திலகத்திடம் (சல்அ'ம்) வந்து, 'நீங்கள் குழந்தைகளை முத்தமிடுகிறீர்களே;[4] ஆனல், நாங்கள் அவர்களை முத்தமிடுவ தில்லை,' என்று கூறினன். (அது கேட்டு) நபிகணயகர் (சல்அ'ம்) சொன்னர்கள்:—

"உனதுள்ளத்தை விட்டு அல்லா(ஹ்) அன்பென்பதை அப்புறப்படுத்தி விட்டானயின், உனக்காக நான் எதனையேனும் (தடுத்துக்) கட்டுப்படுத்த முடியுமா?"— (பு'க'ா. 78 : 18)

5. ஆ'யிஷா பிராட்டியார் கூறியுள்ளார்: நபிகணதர் (சல்அ'ம்) ஒரு குழந்தையைத் தங்கள் கரங்களிலே தூக்கி, அதன் அண்ணத்தைத் (தாங்கள் நைய மென்ற பேரீச்சங் கனியைக் கொண்டு) தேய்த்தார்கள்; (அதுகாலை) அஃது அவர்கள்மீது சிறுநீர் பெய்துவிட்டது; ஆகவே, அவர்கள் தண்ணீர் தருவித்து, அந்தச் சிறுநீரைத் தொடர்ந்து ஓடுமாறு அதனை ஊற்றினர்கள்.— (பு'க'ா. 78 : 21)

---

வாக மாதரார்களுக்கு— அளிக்கப்பட்டுள்ள உயரிய அந்தஸ்து நன்கு விளங்கக் கிடக்கின்றது. ஆருவது வயதிலே அன்னையை இழந்து அகதியாய்ப் போய்விட்டிருந்த ஓர் உம்மீ உரைத்துள்ள,— அன்னையின் அன்பு இன்னதென் றறியாத அனதை யொருவர் கூறியுள்ள— ஆழிய கருத்தைக் கூர்ந்து நோக்க.

4. நபிகள் திலகம் குழந்தைகளை அதிகம் நேசிப்பார்கள்; வீதி வழியே நபிபெருமான் நடந்து செல்லுங்கால், சிறுவர்களும் சிறுமிகளும் அவர்கள்பால் அண்மி ஓடிவருவார்கள்; அவர்களை வாரியணைத்து, உச்சி மோந்து உள்ளங்குளிர முத்தமும் கொடுப்பார்கள். அடுத்த 'ஹதீ'தும் நோக்க.

6. ஆ'யிஷா பிராட்டியார் கூறினர்: 'பெண் பிள்ளை யொருத்தி, அவளுடனே இரு குமாரிகள் தொடர்ந்துவர, தர்மங்கேட்டு வந்தாள்; ஆயின், அன்னவள் என்னிடத்தில் ஒரே பேரீச்சங்கனியைத் தவிர்த்து வேறெதையும் கண்டு கொள்ள வில்லை. அதனை நான் அவளுக்குக் கொடுத்தேன்; மேலு மவள் அதனைத் தன்னிரு குமாரிகளுக்கும் பகிர்ந்து கொடுத்து விட்டு, தானொன்றையும் புசிக்காமலே யிருந்து விட்டாள்; பிறகவள் எழுந்து, வெளியே சென்று விட்டாள்; அப்பால் நபிகள் நாயகம் (சல்அ'ம்) எங்களிடம் வந்து சேர்ந்தார்கள்; அது காலை அவர்கள்பால் யான் அதுகுறித்து அறிவித்து வைத்தேன். ஆகவே, நபிகள் திலகம் (சல்அ'ம்) நவின் றருளினர்கள்:—

"இந்தக் குமாரிகளி னிமித்தம் எவரொருவர் சோதனைக் குள்ளாக்கப் படுகின்றாரோ, அவருக்கு அவர்கள் அக்கினியினின்று (தடுக்கும்) திரையா யிருக்கின்றார்கள்."— (பு'க'ா. 24 : 10)

7. அனஸ் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத் தூதர் (சல்அ'ம்) (இவ்வாறு) சொன்னதை யான் கேட்டேன் :—

"எவ னொருவனுக்குத் தனது ஜீவனோபாயம் தனக்கு விஸ்தீரணமாக்கப்பட வேண்டு மென்று, அல்லது தனது ஜீவதசை (தனக்கு) நீடிக்கப்பட வேண்டு மென்று விழை விருக்கின்றதோ, அவன் தன்னுடைய பந்துக்களிடத்தே பக்ஷமா யிருந்து கொள்ளட்டும்."— (பு'க'ா. 34 : 13)

8. அபூ' ஹுரய்ரா கூறியுள்ளார்: நபிகள் திலகம் (சல்அ'ம்) நவின்றருளினார்கள் :—

"ர'ஹிம் என்பது ர'ஹ்மான் என்பதன் தூறு யிருக்கிறது. ஆகவே, அல்லா(ஹ்) சொன்னான்: 'எவனொருவன் உன்னுடனே தன்னுடைய தளைகளை நெருக்கமாக்கிக் கொள்ளுகிறானோ, அவனுடனே யானும் என்னுடைய தளைகளை நெருக்கமாக்கிக் கொள்ளுவேன்; இன்னம், எவனொருவன் உன்னுடனே தன்னுடைய தளைகளைத் தறித்துக்கொள்ளுகிறானோ, அவனுடனே யானும் என்னுடைய தளைகளைத் தறித்துக்கொள்ளுவேன்.' "[5]— (பு'க'ா. 78 : 13)

---

5. ர'ஹிம் என்பது கர்ப்பாசயத்தைக் குறிக்கும்; எனவே, இச்சொல் பெண் (தாய்) வழிப் பந்துக்களைக் குறிக்கும். இன்னம், எல்லாவிதமான உறவினர்களென்றும் விரிவான வியாக்கியானம் கொள்ளப்படுவது முண்டு. ர'ஹ்மான் என்னுஞ் சொல், "அருளாளன்," அல்லது "கிருபாநிதி" என்று தாத்பரியம் கொள்ளும். உறவின் முறையென்பது தன தியற்கையிலேயே அருளென்பதுடனே மிக நெருக்கமான சம்பந்தத்தைப் பெற்றுக்கொண்டிருக்கிற தென்னும் உண்மையினை இந்த 'ஹதீ':து உறுத்திக் கூறுகின்றது. எனவே, எவனொருவன் பக்ஷத்துடனே தன்னுடைய பந்துக்களையெல்லாம் அணைத்துத் தழுவிக்கொள்கிறானோ, அவனை அருளாளனாகிய ஆண்டவனும் பக்ஷத்துடனே அணைத்துத் தழுவிக் கொள்வான் என்க. இன்னம், எவனொருவன் பக்ஷம் பாராட்டாது வெறுப்புடனே உறவினர்களை உதறித்தள்ளுகிறானோ, அன்னவனை அல்லா(ஹ்)வும் ஒதுக்கியே தள்ளிவிடுகிறான். முஸ்லிமாயிருப்பவர், தம்முடைய உறவினர்கள் முஸ்லிமல்லாதாரா யிருப்பினும், அவர்கள்பாலும் பக்ஷம் பாராட்டக் கட்டுப்பட்டுள்ளார் (பு'க'ா. 11 : 7).

9. அபூ' ஹுரைய்ரா கூறினர் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) அறைய லுற்றூர்கள் :—

"ஈமானில் உறுதிகொண்டுள்ள மூமினனவர்களுள் பரிபூரணமானவர், குணதிசய ஒழுக்கப் பண்பில் அவர்களுள்ளே மகா சிலாக்கியமுள்ளவராகவே யிருந்துவருகிறூர்; இன்னம், உங்களுள்ளே மகா சிலாக்கியமானவர் உங்களுள்ளே தங்கள் மனைவியர்பால் மிகவும் பக்ஷத்துடனே நடந்துகொள்கிறவராகவே யிருந்துவருகின்றூர்."[6]—(திர்மி. 10 : 11)

10. அஸ்வத்' கூறினர் : தங்கள் வீட்டிலிருந்தக்கால் நபிபெருமானுர் (சல்அ'ம்) என்ன செய்துகொண் டிருந்தார்களென்று யான் ஆ'யிஷா பிராட்டியாரை வினவினேன்; 'தங்கள் மனைவிக்கு அன்னவர்கள் பணிவிடை புரிந்துகொண் டிருந்தார்கள்,' என்று அவர்— (ஆ'யிஷா) விடை யளித்தார்; இதனுல் அவர் கொண்ட கருத்து, 'அவர்கள் தங்கள் மனைவிக்கு உதவியாக ஊழியம் புரிந்துகொண் டிருந்தார்கள்,' என்பதாயே யிருந்துவந்தது. — (பு'க'ா. 10 : 44)

---

6. தங்கள் மனைவியர்பால் மிகவும் பக்ஷத்துடனே நடந்துகொள்பவரே மகா சிலாக்கிய புருஷராயிருக்கின்றூர் என்றதனுல் மனைவியரைக் கணவன்மார் நடத்தவேண்டிய மகாகரிசனம் எத்துணைப் பெரிதா யிருக்கிறதென்பது நன்கு விளங்கக் கிடக்கின்றது; மனைவிமார்களுக்குக் கணவர்கள் கவளங்கள் ஊட்டலாமென்று மற்றொரு 'ஹதீ':து கூறிக்கொண்டிருக்கிறது (பு'க'ா. சுருக். 27 : 2). அடுத்துள்ள 'ஹதீ':தையும் ஆழ்ந்து நோக்க.

11. இப்’னு உ’மர் கூறி யுள்ளார்: அல்லா(ஹ்) வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னார்கள் :—

“ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமின் சோதரரா யிருக்கின்றார்; அவர் இவருக்கு யாதோர் அநீதியும் இழைக்க மாட்டார்; இன்னம், அன்னவர் இன்னவரை, (அயலா னொருவனுடைய அக்கிரமத்துக்கு ஆளாகுமாறு) தனியே விட்டுவிட மாட்டார்; இன்னம், எவனொருவன் தன்னுடைய சோதருனுக்குத் தேவையானதைச் செய்து வைக்கிறானோ, அவனுக்குத் .தேவையானதை அல்லா(ஹ்) செய்து வைக்கிறான்; இன்னம், ஒரு முஸ்லிமுக்கு நேரிடும் துன்பத்தை எவனொருவன் போக்கி விடுகிறானோ, அவன் பாலிருந்து, இறுதித் தீர்ப்புக்காக உயிர்த்தெழு நாளின் துன்பங்களி னின்று ஒரு துன்பத்தை அல்லா(ஹ்) போக்கிவிடுகிறான்; இன்னம், எவனொருவன் ஒரு முஸ்லிமானவ(னது குற்றத்தி)னை மறைக்கிறானோ, அவனுடைய பாபங்களை இறுதித் தீர்ப்புக்காக உயிர்த்தெழு நாளில் அல்லா(ஹ்) மறைத்து விடுவான்.”— (பு’க’ா. 46 : 3)

12. அனஸ் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) சொன்னார்கள் :—

“உன்னுடைய சகோதரனுக்கு, அவனே தீமை யிழைப்பவனா யிருப்பினும், அல்லது அவனுக்குத் தீமை யிழைக்கப்படுவதா யிருப்பினும், நீ உதவி புரியக் கடவாய்.”

(இது கேட்டு) அவர்கள்— (நபிபெருமான் தோழர்கள்) கேட்டார்கள்: ‘ஏ அல்லா(ஹ்)வின்

தூதரே! எவனுக்குத் தீமை யிழைக்கப்படுகிறதோ, அந்த மனிதனுக்கு நாங்கள் உதவி புரிய முடியும்; ஆனால், அவனே தீங்கிழைப்பவனா யிருக்குங்கால், நாங்கள் எவ்வாறு அன்னவனுக்கு உதவிபுரியக் கூடும்?' (இதற்கு) அவர்கள் சொன்னார்கள் :— "தீமை யிழைப்பதை விட்டு அவனுடைய கைகளைத் தடுத்து நிறுத்தக் கடவீர்கள்."— (பு'க'ா. 46 : 4)

13. நுஃ'மான் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"நீ மூமினனவர்களை, ஒரே சரீரத்(தின் அவயவத்)தைப் போலே, ஒருவர்மீ தொருவர் தாங்கள் கருணை கூர்வதிலும், ஒருவர்மீ தொருவர் அவர்கள் அபிமானம் பாராட்டுவதிலும், ஒருவர்மீ தொருவர் அன்னவர் பக்ஷம் பாராட்டுவதிலும் கண்டுகொள்வாய். அதன் ஓரவயவம் நோவுற்றால், ஒருறுப்பு மற்றோருறுப்பை நித்திரையின்மையைக் கொண்டும் ஜுரத்தைக் கொண்டும் விளித்தவண்ணம் சரீர முழுதுமே நோவுறுகின்றது."— (பு'க'ா. 78 : 27)

14. அபூ' மூஸா கூறி யுள்ளார்: நபிகள் நாயகம் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"மூமினனவர்கள் ஒருவருக் கொருவர் ஒரு கட்டிடத்தின் (பல்வேறு பாகங்களே) போல் தொங்கித்து இருந்து வருகிறார்கள்; அதன் ஒரு பகுதி மற்றொரு பகுதியைப் பலப்படுத்திக்கொண் டிருக்கிறது." இன்ன மவர்கள்— (நபிபெருமானர்) ஒரு கையின் விரல்களை மற்றொரு கையின் விரல்

களுடனே கோத்து (அவ்வா றிருக்க வேண்டு மென்று) காண்பித்தார்கள்.[7] — (பு'க'ா. 8 : 88)

15. இப்'னு உ'மர் கூறியுள்ளார்: நபிபெருமானார் (சல்அ'ம்) மினவி லிருந்தபொழுது சொன்னார்கள் :—

"இஃதென்ன தினமென்பதை நீங்கள் அறிவீர்களா ?" (இதற்கு) அவர்கள், அல்லா(ஹ்)வும் அவனுடைய தூதருமே நன்கறிவார்கள், என்று கூறினார்கள். (அப்பொழுது) அவர்கள் சொன்னார்கள் :— "இஃதொரு பரிசுத்த தினமா யிருக்கிறது. இஃதென்ன நகரமென்பதை நீங்கள் அறிவீர்களா ?" (இதற்கு) அவர்கள், அல்லா(ஹ்)வும் அவனுடைய தூதருமே நன்கறிவார்கள், என்று கூறினார்கள். (அப்பொழுது) அவர்கள் சொன்னார்கள் :— "பரிசுத்த நகரம். இஃதென்ன மாதமென்பதை நீங்கள் அறிவீர்களா ?" (இதற்கு) அவர்கள், அல்லா(ஹ்)வும் அவனுடைய தூதருமே நன்கறிவார்கள், என்று கூறினார்கள். (அதுபொழுது) அவர்கள் சொன்னார்கள் :— "பரிசுத்த மாதம்." பிறகும் சொன்னார்கள் :— "நிச்சயமாக அல்லா(ஹ்) உங்கள் உதிரத்தையும், உங்கள் பொருளையும், உங்கள் கண்ணியத்தையும் உங்களுடைய இந்த நகரத்திலே உங்களுடைய இந்த மாதத்திலே

---

7. கோக்கப்பட்ட கைவிரல்களே போலும், ஒரு கட்டிடத்தின் உறுப்புக்களேபோலும், ஒருடம்பின் அவயவங்களேபோலும் இருக்கவேண்டிய முஸ்லிம் சமுதாயம்— ஜமாஅ'த்— இப்பொழுது எப்படி யிருந்துவருகிறது, பாருங்களே! எங்குப் பார்த்தாலும் பிளவு ; எங்குப் பார்த்தாலும் பூசல்.

உங்களுடைய இந்த நாளானது பரிசுத்தமா யிருப் பதேபோல், உங்களுக்குப் பரிசுத்தமாக்கி யிருக் கிறான்."[8]— (பு'க'ா. 25 : 132)

16. அனஸ் கூறி யுள்ளார் : அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"நீங்கள் ஒருவரையொருவர் வெறுக்காதீர்கள் ; ஒருவர்மீ தொருவர் அசூயையுங் கொள்ளாதீர்கள் ; ஒருவரையொருவர் பகிஷ்காரமுஞ் செய்யாதீர்கள் ; இன்னம், சோதரர்களே (போல்) அல்லா(ஹ்)வின் அடியவர்களா யிருந்துகொள்ளக் கடவீர்கள் ; மேலும், ஒரு முஸ்லிம் தன்னுடைய சோதர னுடனே மூன்று நாட்களுக்கு மேலே தனது சம்பந்தத்தை முறித்துக்கொள்வ தென்பது சட்ட சம்மதமா யிருப்பதில்லை."[9]— (பு'க'ா. 78 : 57)

17. அபூ' 'தர் கூறியுள்ளார் : நபிகள் திலகம் (சல்அ'ம்) (பின்வருமாறு) சொன்னதைத் தாம் கேட்டார் :—

---

8. ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமின் உதிரத்தையும் பொருளையும் கண்ணியத்தையும் கௌரவித்துப் பாதுகாக்க வேண்டுமென்று கட்டளையிடும் இவ்வசனங்கள் பரிசுத்த மக்கமா நகரின் எல்லையிலே— (மினாவில்) பரிசுத்த 'ஹஜ்மாதத்திலே, :குர் ப'ானீக்குரிய பரிசுத்த தினத்திலே— (யவ்முன்ன'ஹ்ரில்) பகரப் பட லாயின.

9. இந்த 'ஹதீ'ஸால், ஒரு முஸ்லிம் வேறொரு முஸ்லிமுடனே மூன்று நாட்களுக்குமேலே விரோதமாய்ப் பேசாதிருத்தல் கூடா தென்பது தெற்றெனெ விளக்கமாகின்றது. ஆயின், இற்றைநாள் முஸ்லிம் சோதரர்களைப் பாருங்களேன். எத்தனை மாற்சரியம்! எத்தனை மனஸ்தாபம் !!

"ஒரு மனிதன் மற்றொரு மனிதனை 'பாஸி:க்—(வரம்பைக் கடந்தவன்) என்றோ, கா'பிர்— (இஸ்லாத்தை நிராகரித்தவன்) என்றோ, இந்தத் தோழன் அப்படிப்பட்டவனா யில்லா திருப்பின், அஃது—(அந்தப் பட்டம்) அவன்மீதே திரும்பி வாராத முறையிலே (அவ்வாறு) குற்றங்கூற மாட்டான்."[10] — (பு'க'ா. 78 : 44)

18. அபூ' ப'க்ரா கூறினர் : ...........அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) (இவ்வாறு) சொன்னதை யான் கேட்டேன் :—

"இரு முஸ்லிம்கள் தங்கள் வாட்களைக் கொண்டு ஒருவரை யொருவர் சந்திப்பராயின், அவ்விருவரும் அக்கினியிலே இருக்கின்றார்கள்."

நான் சொன்னேன் : 'ஏ அல்லா(ஹ்)வின் தூதரே ! இது கொலை செய்தவனுக்குச் சரிதான் ; ஆனல், கொலை செய்யப்பட்டவன் குறித்து என்ன (சொல்வது) ?' (இது கேட்டு) அவர்கள் சொன்னர்கள் :—

---

10. இவ்வாறாக நபிகள் திலகம், ஒரு முஸ்லிம் இனியொரு முஸ்லிமைக் கா'பிர்— இஸ்லாத்தை நிராகரித்துவிட்டவர்— என்றோ, 'பாஸி:க்— வரம்பைக் கடந்துசென்றவர்— என்றோ கூறுவது கூடாதென்று வற்புறுத்தி யுள்ளார்கள் ; இக் கட்டளையை மீறி ஒரு முஸ்லிம் நடந்துகொள்வானயின், அவனது அடாத செய்கைக்குத் தண்டனையாக அத்தகைய இழிய பட்டங்கள் அன்னவனுக்கே உரியனவாய் விடுகின்றன வென்றுங் கூறியுள்ளார்கள். "அதனல் அவன் கா'பிராய்விட்டான், இதனல் இவன் கா'பிராய்விட்டான்," என்று வாய்கூசாது வழுத்திக்கொண்டு திரியும் மாந்தர் இதனை உற்றுநோக்கக் கடவர்.

"அவனும் தன்னுடைய தோழனைக் கொல்ல விழைந்தே நின்றான்."— (பு'க'ா. 2 : 21)

19. அபூ' ஹுரய்ரா கூறினார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னார்கள் :—

"எவனொருவன் அல்லா(ஹ்)வைக் கொண்டும் இறுதிநாளைக் கொண்டும் ஈமான் கொள்கிறானோ, அவன் தன்னுடைய அண்டைவீட்டுக் காரனுக்குத் துன்பமிழைப்பது கூடாது; இன்னம், எவனொருவன் அல்லா(ஹ்)வைக் கொண்டும் இறுதிநாளைக் கொண்டும் ஈமான் கொள்கிறானோ, அவன் தன்னுடைய விருந்தினனைக் கண்ணியப்படுத்தக் கடவன்."[11]— (பு'க'ா. 78 : 31)

20. ஆ'யிஷா பிராட்டியார் கூறி யுள்ளார்: நபிகள் நாயகம் (சல்அ'ம்) நவின் றருளினார்கள் :—

"அண்டை வீட்டுக் காரனை நல்ல விதமாய் நடத்துவது குறித்து ஜிப்'ரீல் எனக்குத் தொடர்ச்சியாய் உபதேசம் புரிந்துகொண்டே யிருந்தார்;

11. அண்டையயல் வீட்டுக்காரர்களுக்குச் சம்மான மனுப்புவது முன்னமே ஸி'பாரிஷ் செய்யப்பட்டுள்ளது (பு'க'ா. சுருக். 26 : 1). இக்ராமுல்ல'ய்'ப்—விருந்தோம்பல்—முஸ்லிம்களுக்கு அவசியமாய் வற்புறுத்தப்பட் டிருக்கிறது. "விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று," என்றார் வள்ளுவனாரும். இனியொரு 'ஹதீ':தில் இவ்வாறு காணப்படுகிறது: விருந்தினருக்காக ஒருநாளும் ஓரிரவும் விசேஷச் சாப்பாடு செய்துவைத்தல் வேண்டும்; இஃது அவரது ஜாயி'ஜா என்று அழைக்கப்படும்; மொத்தத்தில் அவ்விருந்தினரை உபசரிப்பது— லி'யா'பத் மூன்று தினங்களுக்காம்; அதற்குமேலே அன்னமளிப்பது சத':க்:கா— (தர்மம்) என்று அழைக்கப்படும்.

(எதுமட்டி லென்றால், இறந்துபோன அயல்வீட்டுக்காரனது) சொத்துக்கு அவனை— (அந்த அண்டை வீட்டுக்காரனை) அவர்— (ஜிப்’ரீல்) வாரிஸாக்கி விடவும் நாடினாரென்று நான் எண்ணியமட்டிலே.”— (பு’க’ா. 78 : 28)

21. அபூ’ ‘தர் கூறினர் : நபிகளுதர் (சல்அ’ம்) எனக்குச் சொன்னர்கள் :—

“....உங்க ளடிமைகள் உங்களுடைய சோதரர்களாயிருக்கிறார்கள் ; அல்லா(ஹ்) அவர்களை உங்களுடைய ஆட்சியின் கீழே வைத்திருக்கிறான் ; எனவே, எவனொருவன் தனது ஆட்சியின் கீழே தன்னுடைய சோதரனை வைத்துக்கொண் டிருக்கிறானே, அவன் தான் புசிப்பதிலிருந்தே அவனுக்கும் புசிக்கக் கொடுத்தல் வேண்டும் ; இன்னம், தான் உடுத்துவதிலிருந்தே அவனுக்கும் உடுக்க உடை கொடுத்தல் வேண்டும் ; மேலும், அன்னவர்கள்மீது, அவர்களை நசுக்கிவிடக்கூடிய அத்துணைப் பெரிய காரியத்தை நீங்கள் சுமத்தாதீர்கள் ; மேலும், அப்படிப்பட்ட காரியத்தை அவர்கள்மீது நீங்கள் சுமத்துவீர்களேல், அதுபொழுது (அதனைச் செய்து முடிப்பதற்கு) அவர்களுக்கு உதவிபுரியக் கடவீர்கள்.”[12]— (பு’க’ா. 2 : 21)

---

12. இஸ்லாத்தில் அடிமைகள் இல்லத்தின் அங்கத்தவர் போலவே நடாத்தப்படுகின்றனர். இஸ்லாமேதான் ஆதியிலே அடிமைகளின் மேன்மைக்காகவும் அவர்களுடைய விடுதலைக்காகவும் அதிகம் பாடுபடத் தொடங்கிற்று. இந்த ‘ஹதீ’:தின் பிற்பகுதி எல்லா வேலைக்காரர்களுக்குமே பொதுப்படையாய் உபயோகமாகக் கூடியவிதமா யமைந்திருப்பது கவனிக்கற்பாலது.

22. அனஸ் கூறினர்: நான் நபிபெருமானர் (சல்அ'ம்) அவர்களுக்குப் பத்து வருட காலம் பணிவிடை புரிந்தேன்; ஆனல், அவர்கள் என்னைச் சீ யென்றுகூட ஒருபொழுதும் சொன்னது கிடையாது. "ஏன் (இதை) நீ செய்தாய்?" என்றேனும், "ஏன் (இதை) நீ செய்யவில்லை?" என்றேனுங் கூட(க் கூறியதில்லை).*— (பு'க'ா. 78 : 39)

23. அபூ' ஹுரைரா கூறினர்: நபிகள் திலகம் (சல்அ'ம்) நவின் றருளினர்கள் :—

"விதவையின் காரியத்தையும் ஏழைமனிதன் காரியத்தையும் கவனித்துக் காரியம் நடாத்திவரும் மனிதன் அல்லா(ஹ்)வின் பாதையிலே பெரும் பிரயாசை யெடுத்துக் கொள்ளும் ஒருவனை, அல்லது இரவில் (எல்லாம்) தொழுகைக்காக நின்று கொண்டும், பகலில் (எல்லாம்) நோன்பு நோற்றுக் கொண்டும் இருக்கும் ஒருவனையே நிகர்த்து நிற்கிறான்."— (பு'க'ா. 69 : 1)

24. ஸஹ்ல் இப்'னு ஸஃ'த்' கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"நானும் ஓர் அகதியை வளர்க்கும் அம் மனிதனும் சுவர்க்கத்தில் இதைப்போலே (நெருங்கி)யிருப்போம்."

மேலு மவர்கள், ஆட்காட்டி விரலும் பாம்பு

*"ஒழுக்கம் உடையவர்க்(கு) ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்"— என்பது குறள்.

விரலுமாகிய தங்கள் இரு விரல்களைக் கொண்டு (சேர்த்துக்) காண்பித்தார்கள்.[13]— (பு‘க‘ா. 78 : 24)

25. அபூ’ ஹுரய்ரா கூறியுள்ளார்: ‘து‘பய்லிப்’னு அ’ம்ருத்’ த’வ்ஸீயும் அவருடைய தோழர்களும் நபிகள் நாயகத்திடம் (சல்அ’ம்) வந்து, மேலும் சொன்னார்கள்: ‘ஏ அல்லா(ஹ்)வின் தூதரே! த’வ்ஸ்கள் மாறுசெய்து, மறுதலித்தும் விட்டார்கள். ஆகையால், அன்னவர்களின் சிக்ஷைக்காகத் தாங்கள் அல்லா(ஹ்)வின்பாலே பிரார்த்தனை புரியுங்கள்.’ த’வ்ஸ்கள் நாசமாய்ப் போய்விட்டார்கள் என்றுங் கூறப்பட்டது; ஆனால், அவர்கள்— (நபிபிரான்) சொன்னார்கள் :— “ஏ அல்லா(ஹ்)! நீ த’வ்ஸ்களை நேர்வழியிலே நடாத்தி(த் திருப்பி)க் கொணரவுங் கடவாய்.”[14]— (பு‘க‘ா. 56 : 100)

26. ஆ’யிஷா பிராட்டியார் கூறி யுள்ளார்: யூதர்கள் நபிபெருமானா ரிடம் (சல்அ’ம்) நண்ணி,

---

13. நபி பெருமானார் அநாத விதவைகள்பாலும் அகதிகள்பாலும் அத்தியந்த அபிமானம் பாராட்டிவந்தார்கள்; தாங்களும் அனாதைகளைப் பராமரிப்பவனும் அந்தச் சுவர்க்க லோகத்திலே அருகருகாய் நெருங்கியிருப்பார்களென்பதைச் சுட்டிக்காட்டவே அடுத்தடுத்துள்ள தங்களுடைய இரு விரல்களை— ஆட்காட்டி விரலையும் நடுவிரலையும்— நீட்டிக் காண்பித்தார்கள்.

14. இறைவனுக்கு மாறுசெய்து, இஸ்லாத்தை ஏற்கமறுத்து முற்றும் பாழாய்ப்போய்விட்ட மாக்களுக்காகவும் நபிகணாதர் (சல்) சாபத்தை வருத்தாது, அவர்களை நேர்வழியிலே கொண்டுவந்து சேர்க்குமாறே ஆண்டவனிடம் பிரார்த்தனை— (து’ஆ’) புரிகின்றார்கள். அப்பெருமானார் எப்பொழுதுமே எந்தப் பகைவரையும் — தங்களுடைய ஜன்ம சத்துருவையுங்கூட— “லஃ’னத்” செய்தது— (சபித்தது) கிடையாது.

'உம்மீது மரணம் வரக்கடவது!' என்று கூறினர்கள்; (அது கேட்டு) ஆ'யிஷா சொன்னர்: 'உங்கள் மீதே! மேலும், அல்லா(ஹ்) உங்களைச் சபிக்கக் கடவன்; இன்னம், அல்லா(ஹ்)வின் கோபம் உங்கள் மீது இறங்கக் கடவது.' (அப்பொழுது) அவர்கள் — (நபிகள் திலகம்) சொன்னர்கள் :—

"ஏ ஆ'யிஷா! அமரிக்கையாக; நீ மரியாதையுடன் நடந்துகொள்; மேலும், கடுகடுத்த சுபாவத்தைக் கைவிட்டு, உன்னை நீ தவிர்த்துக்கொள்ளக் கடவாய்."[15] — (பு'க'ா. 78 : 38)

27. ஜரீர் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"மனிதர்கள்பால் கருணை கூராதவன்மீது அல்லா(ஹ்)வும் கருணை கூர்வது கிடையாது."[16] — (பு'க'ா., முஸ்—மிஷ். 24 : 15)

---

15. முஸ்லிம்கள் ஒருவரையொருவர் சந்திக்க நேருங்கால், அஸ்ஸலாமுஅ'லைக்கும்—(உங்கள்மீது சாந்தியுண்டாகக்கடவது!) என்று வந்தனங்கூறுவர்; இவ் வாக்கியத்தைச் சற்றே மாற்றி, அஸ்ஸாமு அ'லைக்கும்— (உங்கள்மீது சாக்காடு வரக்கடவது!) என்று அந்த யூதர்கள் விஷமத்தனமாய்க் கூறினர். அப்படிப்பட்ட பகைவர் பாலும் மரியாதைக் குறைவுடன் நடந்துகொள்ளக் கூடாதென்று நபிபெருமானர் (சல்) நல்லறி வுறுத்தினர்கள். "இன்ன செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால், என்ன பயத்ததோ சால்பு?" என்றர் வள்ளுவனரும்.

16. எனவே, முஸ்லிம்கள் ஏனை முஸ்லிம்கள்மாட்டு மன்றி, எல்லா மக்களிடத்துங்கூடக் கிருபைகூர்ந்தே நடந்துவருதல் வேண்டும். அயல் மதவாதிகள்பாலும் இவர்கள் அருவருப்புடன் நடந்துகொள்வது கூடாதென்க. அனைவர்மாட்டும் அன்புகூர்தல் அத்தியாவசியமே யாம்.

28. இப்'னு அ'ப்'ப'ாஸ் கூறினர்: அல்லா(ஹ்) வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"நம்முடைய சிறியோர்கள்பால் கருணையும், நம்முடைய பெரியோர்கள்பால் மரியாதையும் காட்டாதவன் எம்முடைய இனத்திலே சேர்ந்தவனல்லன்."— (திர்மி—மிஷ். 24 : 15)

29. ஸஹ்ல் கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) மிகவு மெலிந்துபோ யிருந்த ஓர் ஒட்டகத்தின் ஓரமாய்ச் சென்றார்கள். ஆதலால், அவர்கள் சொன்னர்கள் :—

"இந்த வாயில்லாப் பிராணிகள் விஷயத்திலே நீங்கள் அல்லா(ஹ்)வின்பால் உங்கள் கடமையில் சர்வ ஜாக்ரதையா யிருந்துகொள்ளக் கடவீர்கள்: அவை சரியான நிலையிலிருக்குங்கால் அவற்றின்மீது ஏறிச் சவாரி செய்யுங்கள்; இன்னம், அன்னவை சரியான நிலையி லிருக்குங்கால் அவற்றினை .(அறுத்து)ப் புசித்து விடுங்கள்."— (அபூ'த'ா. 15 : 43)

30. அ'ப்'து'ல்லா(ஹ்) கூறியுள்ளார்: நபிகள் திலகம் (சல்அ'ம்) நவின்றருளி யுள்ளார்கள் :—

"நிச்சயமாக, சத்யமென்பது சற்குணத்திற்கு வழி கோலுகின்றது; மேலும், நிச்சயமாக, சற்குண மென்பது சுவர்க்கத்திற்கு வழி காட்டுகின்றது; இன்னம், ஒரு மனிதன், தான் முழுக்க முழுக்கச் சத்யசந்தனுகுமட்டும் சத்யத்தையே பேசிக் கொண் டிருக்கிறன். மேலும், நிச்சயமாக, அசத் யமென்பது தீமைக்கே வழி கோலுகின்றது; மேலும், நிச்சயமாக, தீமை யென்பது அக்கினிக்கு

வழி காட்டுகின்றது; இன்னம், ஒரு மனிதன், தான் அல்லா(ஹ்)வி னிடத்தே ஒருபெரும் புளுகனென்று வரையப்படுமட்டும் அசத்யத்தையே பேசிக்கொண்டிருக்கிறான்".[17]— (பு'க'ா. 78 : 69)

31. அனஸ் கூறினர்: நபிகள் நாதர் (சல்அ'ம்) (எவரையும்) ஏசுவது வழக்க மில்லை; அஸப்பிய மாகவும் பேச மாட்டார்கள்; சபிக்கவு மாட்டார்கள்; எங்களுள் ஒருவரைக் கண்டிக்க வேண்டுமாயின், "அவருக்கென்ன (கேடு)? அவரது முன்னெற்றி புழுதியால் நிரம்பட்டும்," என்றே கூறுவார்கள்.[18]— (பு'க'ா. 78 : 38)

32. ('ஹ'ஜ்ரத்) அ'லீ கூறினர்கள்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள்:—

"ஒரு முஸ்லிம் (மற்றொரு) முஸ்லிமுக்கு, அவர் மீது தாராளமாய் வழங்க, ஆறு (கடமை)களைச் செலுத்த வேண்டியவரா யிருக்கிறார்: அவர் இவரைச் சந்திக்குங்கால், இவருக்கு வந்தனமளித்திடல் வேண்டும்;[19] மேலும், இன்னவர் அன்ன

---

17. "ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்,"
"ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி," — என்பன குறள்.

"மெய் சொல்லிக் கெட்டவனு மில்லை, பொய் சொல்லி வாழ்ந்தவனு மில்லை," என்னும் பழமொழியும் பார்க்க.

18. இதன் தாத்பரியம், அவர் அடிக்கடி ஸுஜூத்— (இறைவனுக்குச்) சிரந்தரையிற் சாய்ப்பதைச்— செய்யக்கடவர் என்பதாயிருக்கிறது.

19. முஸ்லிம்கள் ஒருவரையொருவர் சந்திக்குங்கால், "அஸ்ஸலாமு அ'லைக்கும்"— (உங்கள்மீது சாந்தியுண்டாகக் கடவது!)

வரை (விருந்துக்கு) அழைக்குங்கால், அன்னவர் (அதனை) ஏற்றுக்கொள்ளுதல் வேண்டும்; இன்னம், இவர் தும்முங்கால், அவர் இவருக்காகப் பிரார்த்தனைபுரிதல் வேண்டும்; இன்னம், இவர் வியாதியுற்றுவிடுங்கால், அவர் இவரைப் போய்ப் பார்த்துவிட்டு வருதல் வேண்டும்; மேலும், இவர் மரித்துவிடுங்கால், அவர் இவரது பிரேதப் பெட்டியைப் பின்தொடர்ந்து செல்லுதல் வேண்டும்; இன்னம், அன்னவர் இன்னவருக்காகத் தாம் தமக்கு வேண்டுமென்று பிரியங் கொள்வதையே பிரியங் கொள்ளுதல் வேண்டும்.”— (‘திர்மி—மிஷ். 24 : 1)

33. அபூ’ ஹுரய்ரா கூறியுள்ளார்: நபிகள் திலகம் (சல்அ’ம்) நவின்றருளினார்கள்:—

“சிறியவர் பெரியவருக்கு வந்தன மளித்தல் வேண்டும்; மேலும், அமர்ந்துகொண் டிருப்பவர்பால் சென்று சேர்கிறவர் (வந்தனமளித்தல் வேண்டும்); இன்னம், சிறு கூட்டத்தினர் பெருங் கூட்டத்தினருக்கு (வந்தன மளித்தல் வேண்டும்).”— (பு’க்’ா. 79 : 4)

34. அ’ப்’து’ல்லா ஹிப்’னு அ’ம்ர் கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதரை (சல்அ’ம்)

---

என்று ஒருவர் கூறுவார்; இதற்கு விடையில் மற்றவர், “வ அ’லைக்கு முஸ்ஸலாம்”—(உங்கள் மீதும் சாந்தியுண்டாகக்கடவது!) என்று ஜவாப்’ சொல்வார். இவ்வந்தனத்துடனே சில வேளைகளில் “வ ர‘ஹ்மதுல்லாஹி வ ப’ரக்காத்’துஹு”—(இன்னம், அன்னவனது கருணையும் ஆசீர்வாதமும்) என்பதும் சேர்க்கப்படுவதுண்டு. ஆண்களும் பெண்களுக்கு ஸலாம் சொல்வதுண்டு, பெண்களும் ஆண்களுக்கு ஸலாம் சொல்வதுண்டு (பு’க்’ா. 79 : 16).

'எத்தகைய இஸ்லாம் மிகவுஞ் சிறந்தது?' என்று ஒரு மனிதன் வினவினான்; (இதற்கு) அவர்கள் சொன்னார்கள் :—

"(ஏழைகளுக்கு) நீ அன்னமளிப்பதும், உனக்குத் தெரிந்தவருக்கும், உனக்குத் தெரியாதவருக்கும் நீ வந்தன மளிப்பது மாகும்."— (பு'க'ா. 2 : 5)

35. :க(த்)தாத'ா கூறினார்: 'நபிகள் நாயகத்தின் (சல்அ'ம்) தோழர்கள் (ஒருவரை யொருவர் சந்திக்குங்கால்) கை குலுக்குவதுண்டா?'[20] என்று நான் அனஸை வினவினேன்.

(இதற்கு) அவர் ஆமென்று விடைகூறினார்.— (பு'க'ா. 79 : 27)

36. ஆ'யிஷா பிராட்டியார் கூறினார்: 'ஜய்தி'ப்'னு 'ஹாரி:தா[21] மதீனாவுக்கு வந்து சேர்ந்தார்; மேலும், அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) அவரை வரவேற்க எழுந்து நின்றார்கள்; இன்னம்,

---

20. முஸ்லிம்கள் தங்களிரு கரங்களைக்கொண்டு எதிரிலிருப்பவருடைய இரு கரங்களையும் பிடித்து நெஞ்சுக்கு நேராக் உயர்த்திக் குலுக்குவார்கள்; அதுசமயம் நபி பெருமான்மீது ஆசிமொழி— (சலவாத்) கூறுவர். இதற்கு முஸா'ப'ஹா என்று பெயர் சொல்லப்படும். இஃது அவர்களுடைய அன்னியோன்னிய அபிமானத்தைக் காட்டும். (ச'ப்'ஹான் என்பது "பக்கம்", அல்லது "முகமுகமாகுதல்" என்று பொருள் கொள்ளும்.)

21. இந்த 'ஜய்த்' நபி பெருமானால் விடுதலை யளிக்கப்பெற்றிருந்த ஓர் அடிமையா யிருந்தார்; இவர் அப் பெருமானார்பால் வைத்திருந்த (தந்தையைப் பார்க்கினும்) அத்தியந்த பிரியத்தின் காரணத்தால் நபிகள் நாயகத்தின் மைந்தரென்றேகூட மதிக்கப்பட்டுவந்தார்.

அன்னவரை இறுகத் தழுவினார்கள்;[22] மேலும், அவரை முத்தியிட்டார்கள்.— (·திர்மி–மிஷ். 24 : 3)

37. உ’ப’ய் து’ப்’னு உ’மய்ர் கூறியுள்ளார்: அபூ’ மூஸா— அல் அஷ்அ’ரீ உ’மரைப் பார்க்க அனுமதி கோரினர்; அவர்—(உ’மர் வேறு காரியத்தில்) ஈடுபட்டிருந்தாற் போலே, அன்னவர் அனுமதிக்கப்பட வில்லை; மேலும், அபூ’ மூஸா திரும்பி வந்துவிட்டார்.— (பு’க’ா. 34 : 9)

38. ஸஈ’ தி’ப்’னு அபு’ல் ‘ஹஸன் ‘ஹஸனுக்குச் சொன்னர் :—

‘அரப் மாதர்களல்லாத ஸ்திரீகள் தங்கள் மார்புகளையும் தலைகளையும் திறந்தே வைத்துக் கொள்கிறார்கள்; (ஆகையால்) நீ அவர்களை விட்டு உன்னுடைய நேத்திரங்களை அப்பால் திருப்பிக் கொள்ளக் கடவாய்,’ என்று அவர் கூறினர்.[23]— (பு’க’ா. 79 : 2)

---

22. இவ்வாறு கட்டித்தழுவுதல் முஆ’ன(க்):கா என்று கூறப்படும்; உ’னு:க்— (கழுத்து) என்பதிலிருந்து இது தோன்றியிருக்கிறது. இவ்வாறு ஆலிங்கனம் செய்து அணைப்பதை நபி பெருமானார் தடுத்துவிட்டார்களென்று வேறுசில ‘ஹதீ’:துகளால் விளங்கக் கிடக்கின்றது. இவ்வாறு அடிக்கடி ஆலிங்கனம் செய்யக் கூடாதென்பதை அறிவித்தற்பொருட்டே அவ்வாறு அப்பெருமானார் அதுகாலை ஆபூர்வமாய்ச் செய்து காண்பித்தார்கள் போலும்?

23. இது நிகழ்வுற்ற காலம் அரப்நாடு முழுதும் இஸ்லாத்தைத் தழுவிக்கொண்ட பிறகேயாம். இஸ்லாத்திற்கு முன்னே அரப் ஜாதிப் பெண்களும் தங்கள் தலையையும் மார்பையும் திறந்து கொண்டே திரிந்தார்கள். எனவேதான், :குர்ஆன் திருமறை (24 : 31) பெண்மணிகளைத் தங்கள் முக்காட்டுச் சேலையை மார்பின் மீதும் இழுத்துவிட்டுக்கொள்ளுமாறு ஏவியிருக்கின்றது. மார்பின்

39. ஆ'யிஷா பிராட்டியார் கூறி யுள்ளார்: ஸவ்த'ா பி'ன்த் 'ஜம்அ'த் ஒருநாளிரவில் வெளியே சென்றார்; உ'மர் அவரைக் கண்டு, அடையாளமும் தெரிந்து கொண்டார்; மேலும், கூறினர்: 'ஏ ஸவ்த'ா! அல்லா(ஹ்)வி ஞணை! நீ எம்மை விட்டு உன்னை மறைத்துக்கொள்வது முடியாது; ஆகவே, அவர்— (ஸவ்த'ா) நபிபெருமா னிடம் (சல்அ'ம்) திரும்பிவந்து, எனதறையிலே அவர்கள் இராப் போஜனம் புஜித்துக்கொண் டிருந்தக்கால், இதனை அவர்களிடம் தெரிவித்தும் விட்டார்........இன்னம், அன்னவர்கள் சொன்னார்கள்:—

"உங்களுடைய தேவைகளுக்காக நீங்கள் வெளியே செல்ல உங்களுக்கு— (ஸ்திரீகளுக்கு முழு) அனுமதி யளிக்கப்பட் டிருக்கிறது."[24]— (பு'க'ா. 67 : 116)

---

புடைப்பு வெளியில் தெரியாதிருக்கும் பொருட்டே இவ்வாறு நெஞ்சின்மீது முக்காட்டுச் சேலையை இழுத்துத் தளர்த்தியாய் விடல் அத்தியாவசியமாம்.

24. நபி பெருமானார் காலத்திலே பெண்மணிகள் ஜமாஅ'த்துடன் சேர்ந்து தொழ மஸ்ஜிது'க்கு பு'ர்க'ா அணியாமலே சென்று வந்தனரென்று நாம் அறிந்துகொள்கிறோம் (பு'க'ா. 10 : 162); போர்வீரர்களுக்கு அம்மாதரார் ஆகாராதிகளைக் கொண்டுசென்றார்கள் (பு'க'ா. 56 : 66); பிணிவாய்ப்பட்டவர்களையும் காயமடைந்தவர்களையும் கவனித்துச் சயித்தியோபசாரம் செய்துவந்தார்கள் (பு'க'ா. 56 : 67); அவசிய சந்தர்ப்பங்களிலே சண்டைகளிலும் அவர்கள் கலந்துகொண்டார்கள் (பு'க'ா. 56 : 62); கழனி வேலைகளில் கணவருக்கு மனைவியர் உதவிபுரிந்து வந்தார்கள் (பு'க'ா. 67 : 108); களரிகளில் ஆண்விருந்தினருக்குப் பெண்டிர்கள்

40. ஆ'யிஷா பிராட்டியார் கூறி யுள்ளார்: அபூ'ப'க்ரின் குமாரி அஸ்மா அல்லா(ஹ்)வின் திருத் தூதர்பால் (சல்அ'ம்) வந்து சேர்ந்தாள்; மேலுமவள் மெல்லிய ஆடை யணிந்திருந்தாள். அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) அவளை விட்டுத் தங்கள் வதனத்தைத் திருப்பிக்கொண்டு (பின்வருமாறும்) சொன்னார்கள் :—

"ஏ அஸ்மா! பெண்மணி தனது பருவவயதை எய்தி விடுங்கால், இதுவும் இதுவும் அல்லாமல் அவளது மேனியில் எந்தப் பகுதியும் (வெளியில்) காணப்படக்கூடிய விதமாய்(த் திறந்து) இருப்பது கூடாதாகும்."[25]

---

போஜனம் பரிமாறி யிருக்கிறார்கள் (பு'க'ா. 67 : 78); வியாபாரம் செய்திருக்கிறார்கள் (பு'க'ா. 11 : 54); ஆடவர்களுடனும் வர்த்தகம் புரிந்திருக்கிறார்கள் (பு'க'ா. 34 : 67); இன்னம் பல வேலைகளும் செய்துள்ளார்கள் என்றறியக் கடவீர்களாக.

25. பெண்கள் முகமூடி யணியவேண்டுவதின்றென்று இந்த 'ஹதீ'ஃதால் அறியக் கிடக்கிறது. 'ஹஜ்ஜின்போது இவர்கள் முகமூடியணியாமலே இருக்கவேண்டுமென வேறொரு 'ஹதீ'ஃது கூறுகின்றது (பு'க'ா. 25 : 23); ஏனென்றால், முகமூடியென்பது உயர்குல மாதர்களுக்குரிய கௌரவ உடையா யிருந்துவந்தது; 'ஹஜ்ஜென்பதோ, எல்லாவித உயர்வு தாழ்வுகளையும் சமன்செய்து ஓரேவித மட்டமாக்குவதா யிருக்கின்றது. "எல்லாரும் ஓர்குலம், எல்லாரும் ஓரினம்" இ'ஹ்ராத்திலே என்க.

இன்னம், ஏனை ஜாதிப் பெண்களே போலில்லாது முஸ்லிம் மாதர்கள் தங்கள் மார்பை—(மேட்டை— முகிழ்முலையை) மறைத்து முக்காட்டையும் அதன்மீது இழுத்து விட்டுக்கொள்ளுதல் அத்தியாவசியமாம்; இன்னம், உள்ளேயுள்ள உறுப்புக்கள் ஆடைக்கு வெளியே தெரியக்கூடிய முறையிலும் பெண்மணிகள்

மேலு மவர்கள் தங்கள் முகத்தையும், கை(க ளின் மணிக்கட்டுக்)களையும் சுட்டிக் காட்டினார் கள்.— (அபூ'த'ா. 31 : 30)



உடையுடுத்துவது கூடாது. இக்கால நவநாகரிகப்(?) பெண்கள் முக்காட்டையும் துறந்து, அகஉறுப்புப் புறத்தே புடைத்துத் தெரியக்கூடா தென்பதையும் மறந்து, வேறுமத மங்கையரைப் போலவே வெட்கமில்லாது ஆடவருடனும் வெளியிலெல்லாம் வீண் டம்பத்துடனே உலவித் திரிகின்றனர். அந்தோ! ஐயகோ! மானக்கேடே!

# அத்யாயம்—31

## அரசாங்க (விஷய)ம்

### (அல் இமாரா)

1. "இன்னம், அன்னவர்களது ஆட்சிமுறை அவர்களுக்குள்ளே பரியாலோசனை புரிந்துகொள்வதனால் நடைபெறுகின்றது" (:குர். 42 : 38).

2. "அவர்களை நீர் மன்னித்து விடுவீராக; மேலும், அவர்களுக்காகப் பாதுகாப்புந் தேடுவீராக; இன்னம், (அரசாங்கக்) காரியங்களில் அன்னவர்களுடனே கலந்து பரியாலோசனை புரிவீராக" (3 : 158).

3. "அடைக் கலங்களை அவற்றைப் பெற அருகதை வாய்ந்தவர்க ளிடமே ஒப்படைக்கக் கடவீர்கள் என்றும், ஜனங்களுக் கிடையே நீங்கள் நியாயம் வழங்க நேருங்கால், நீதத்தைக் கொண்டே நியாயம் புரியக் கடவீர்கள் என்றும் அல்லா(ஹ்) உங்களுக்குக் கட்டளை யிடுகிறான்" (4 : 58).

4. "ஏ த்'ஆவூத்'! உம்மை நாம் இப்பூமியின்மீது ஓர் அரசனா யாக்கியிருக்கிறோம்; ஆகையால், நீர் ஜனங்களுக் கிடையே நீதத்தைக் கொண்டே நியாயம் வழங்கக் கடவீர்; மேலும், (உமது சுய) இச்சையைப் பின்பற்றாதிருக்கக் கடவீர்" (38 : 26).

5. "அவரைப் பார்க்கினும் நாங்களே அரச பதவிக்கு அதிக அருகதை பெற்றிருக்கும்போது, எங்கள்மீது அவருக்கு (ஆட்சி புரிய) எங்ஙனம் அரச பதவி கிடைத்திடுதல் கூடும்? இன்னமவர் ஐசுவரியத்தில் விஸ்தீரணத்தை அளிக்கப் பெற்றவராகவு மில்லை," என்று அவர்கள் கூறினார்கள். (இதற்கு) அவர் சொன்னார்: "நிச்சமாக அல்லா(ஹ்) உங்களுக்கு மேலே. அவரையே அரசராகத் தேர்ந்தெடுத் துள்ளான்; மேலும்,

ஞானத்திலும் தேக பலாட்டியத்திலும் அவருக்கு அபி விருத்தியை அதிகமாக்கி யிருக்கிறுன்" (2 : 247).

6. "அல்லா(ஹ்)வுக்கு வழிபடுங்கள்; மேலும், (அவ னுடைய) தூதருக்கும், உங்களுள்ளிருந்து அதிகாரத்தில் அமர்ந் திருப்பவர்களுக்கும் வழிபடக் கடவீர்கள்; இன்னம், நீங்கள் எது குறித்தும் சச்சரவிட்டுக் கொள்வீர்களேல், அதனை அல்லா(ஹ்)வின்பாலும், (அவனுடைய) தூதரின்பாலும் ஒப்படைக்கக் கடவீர்கள்" (4 : 59).

அம்ர் என்னுஞ் சொல், "ஏவல்", அல்லது, "கட்டளை" என்று பொருள் கொள்ளும்; எனவே, இமாரா என்பது, "கட்டளை பிறப் பிக்கும் அதிகாரத்தை உடைத்தாயிருத்தல்," அல்லது, "படைத் தலைவன், அல்லது ஆட்சிபுரிகிறவன், அல்லது அரசன் என் பானுக்குரிய காரியாலயம், அல்லது அதிகாரம்" என்பதைக் குறிக்கும். ஆகவே, அமீர் என்பவர், "சேனைத்தலைவ ரதிகாரி, அல்லது ஆட்சி செலுத்துகிறவர், அல்லது அரசாங்கத்தின் தலைவர்" என்பவராவார். இமாம்— (எவரை, அல்லது எவரது உதாரணத்தை எல்லாரும் பின்பற்றுகிறுரோ, அப்படிப்பட்டவர்) என்னும் சொல்லும் ஓர் அரசாங்கத்தின் தலைவரைக் குறிக்க வழங்கப்படுவதுண்டு; இப்படியே க'லீ'பா— (பிரதிநிதி, அல்லது நபிபெருமானுடைய பிரதிநிதி) என்னுஞ் சொல்லும் அரசாங்கத் தலைவரை, அல்லது ராஜ்யாதிகாரியைக் குறித்துக் காட்டுவ துண்டு.

:குர்ஆன்ஷரீ'பின் கொள்கைப்படி முஸ்லிம் அரசாங்கம் ஒரு குடியரசாகவே யிருந்து வருகிறது; அதற்குரிய அடிப்படை ஆலோசனைச் சபையாகவே மிளிர்ந்து வருகிறது (தலை. ஆயத் 1); நபிகள் நாயகருங்கூட அரசாங்கக் காரியங்களில் தங்களுடைய தோழர்களுடனே கலந்து பரியாலோசனை புரிந்து கொள்ளுமாறு ஆண்டவனுல் ஆணையிடப் பெற்றுளார்கள் (தலை. ஆயத் 2). ஜனங்கள், அரசபதவிக்கு அருகதை பெற்றவர்களையே— அடைக் கலங்களைப்பெற அருகதை வாய்ந்தவர்களையே— தங்களுடைய அரசர்களாகத் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டுமென்று அறி

வுறுத்தப் பெறுகிறார்கள்; அவ்வாறு தேர்ந்தெடுக்கப் பெறும் மன்னர்கள் ஜனங்கள்பால் நீதத்துடனே நடந்துகொள்ள வேண்டியவர்களா யிருக்கிறார்கள் (தலை. ஆயாத் 3, 4). "கெட்டிக் கார" அரசனுக்கு விசாலமான அறிவும், சரியான தேகதிடமுமே அதிகம் வேண்டப்படுகின்றன வல்லது, ஏராளமான திரவியம் இருக்கவேண்டு மென்பது ஆவசியகமில்லை (தலை. ஆயத் 5). எல்லா வியவகாரங்களிலும் அல்லா(ஹ்)வின் ை'பஸலும், அவனுடைய திருத்தூதரின் ை'பஸலுமே இறுதியான முடிபாய்க் கொள்ளப் படல் வேண்டும்; எனவே, எந்தவிதமான சட்டமும் :குர்ஆன் ஷரீ'பும், திருநபியின் ஸுன்னத்தும் கூறியிருக்கும் நியாயச் சட்டத்துக்கு நேர்மாறா யிருப்பது அறவே கூடாது (தலை. ஆயத் 6).

அரசாங்க மென்பது பொது ஜனங்களின் நன்மைக்காக அத்தியாவசியமா யிருக்கிறது என்று 'ஹதீ':து ஷரீ'பு கூறிக் கொண் டிருக்கிறது; தந்தையாதல், அல்லது தாயாதல் தன்னுடைய குழந்தைகளின் க்ஷேமத்திற்கு ஜவாப்'த'ாரியா யிருந்து வருவதேபோல, அல்லது வேலைக்கார னொருவன் தன்பால் ஒப்படைக்கப்பட்ட எஜமானன் சொத்துக்கு ஜவாப்'த'ாரியா யிருந்து வருவதேபோல, ஓர் அரசாங்கத் தலைவன், அல்லது அரசன் தன்னால் ஆளப்பட்டுவரும் மன்பதைகளின் க்ஷேமலாபத்திற்கு அத்துணைப் பெரிய ஜவாப்'த'ாரித் தனத்தைப் பொறுப்பேற்றவனா யிருக்கிறான் ('ஹதீ'. 1). அரசாங்கத்துக்குப் பொது மக்கள் செலுத்த வேண்டிய கடமை அதன் சட்ட திட்டங்களையும் கட்டளைகளையும், அல்லா(ஹ்)வுக்கும் அவனுடைய திருத்தூதருக்கும் மாறுசெய்ய வேண்டுமென்று அவை கூறாதவரை, மதித்துநடக்க வேண்டுமென்பதாகவே யிருந்து வருகிறது ('ஹதீ'. 2—5). சட்டப் பிரகாரம் நிலைபெறுத்தப்பட்டுள்ள அதிகாரத்துக்கு எதிர்ப்புச் செய்வதும், அதற்கு விரோதமாய்க் கலகஞ் செய்வதும் கூடாத காரியங்களாம் ('ஹதீ'. 6); ஆனால், அத்தியாவசியமான சந்தர்ப்பங்களிலே அரசாங்கத் தலைவரின் அதிகாரத்தை நிராகரித்து விவாதிக்கலாம்; அவ் வதிகாரியைப் பட்டத்தை விட்டுங்கூட நீக்கிவிடலாம் ('ஹதீ'. 7, 8). நபிகள் திலகத்தால் நிலை நிறுத்தப் பெற்ற குடியாட்சி முறையானது, அவர்களது நிர்யாணத்துக்குப்

பின்னே, எஞ்சியிருந்தவருள்ளே மிகவும் தகுதிவாய்ந்தவரையே அரசாங்கத் தலைவராய்த் தேர்ந்தெடுத்துக் கொண்டது; அது பொழுது அரசாங்கத் தலைவர் ஒருவராயே யிருக்கவேண்டு மென்றும், அன்னவர் ஆட்சிபுரியுங்கால், வேறு சில அமைச்சரே போன்றாரின் ஆலோசனைகளைக் கேட்டுக் கலந்துகொள்ள வேண்டு மென்றும் ஏகமனதாக ஏற்றுக்கொள்ளப்பட்டது ('ஹதீ'. 9, 10). எல்லாப் பொதுஜன ஊழியர்களையும் போலவே க'லீ'பாவும் ஒரு சம்பளம் பெறும் பொதுமக்களின்— (அரசாங்கத்தின்) ஊழியராகவே யிருந்து வருகிறார் ('ஹதீ'. 11). சர்க்கார் உத்தியோகத்திலிருக்கும் எவரும் பொதுஜனங்க ளிடத்திலிருந்து சம்மானமோ வெகுமதியோ வாங்குவது கூடாது (பு'க'ா. சுருக். 16 : 18). அரசாங்கக் காரியத்தை நடாத்தி வருமாறு நம்பிக்கையுடன் நியமிக்கப் பட்டுள்ள சர்க்கார் உத்தியோகஸ்தர்கள், அரசனுட்பட, பொது ஜனங்களின் நன்மைக்கென்றே உழைத்துவரக் கடமைப்பட் டுள்ளார்கள் ('ஹதீ'. 12). குடிமக்களிடம் அன்னவர்கள் தக்க மேதை மரியாதையுடனும் மிருதுத் தன்மையுடனுமே நடந்து கொள்ளுதல் வேண்டும் ('ஹதீ'. 13). அவர்கள் எளிய வாழ்க்கையே நடாத்துதல் வேண்டும் ('ஹதீ'. 14); எல்லாருக்கும் எட்டக்கூடிய எளிய சுபாவத்தையே மேற்கொண் டொழுகுதல் வேண்டும் ('ஹதீ'. 15); அல்லா(ஹ்)வுக்கு அஞ்சி நடக்கிறவர்களா யிருந்து வருதல் வேண்டும் ('ஹதீ'. 16); வெவ்வேறுவகை மனிதர்களுக்கு அவர்களது சக்திக் கியைந்தவாறு வெவ்வேறு விதமாய் வரி விதித்தல் வேண்டும்; சம்பாதிக்க இயலாதவர்களின் சம்ரக்ஷணைக்கு வழி கோலுதல் வேண்டும்; முஸ்லிம்களின் உரிமைகளைப் போலவே முஸ்லிமல்லாதாரின் உரிமைகளையும் பாதுகாத்து ரக்ஷித்தல் வேண்டும் ('ஹதீ'. 16).

1. இப்'னு உ'மர் கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) (இவ்வாறு) சொன்னதை யான் கேட்டேன் :—

"உங்களுள்ளே ஓரொருவரும் ஆட்சி புரியும் அதிபதியா யிருக்கின்றார்; ஆகவே, உங்களுள்ளே

ஓரொருவரும் அவரவரின் ஆட்சியின்கீ ழுள்ளவர் களைக் குறித்து விசாரிக்கப் பெறுவார்; அரசனும் ஓராட்சிக் குரியவனே; ஆகையால், அவன் தன் னுடைய குடிமக்களைக் குறித்து விசாரிக்கப் பெறு வான்; இன்னம், ஆடவன் தனது குடும்பத்திலே ஆட்சி புரிகிறவனு யிருக்கிறுன்; ஆதலால், அன்ன வன் தன்னுடைய பராமரிப்பின் கீழேயுள்ளவர் களைக் குறித்து விசாரிக்கப் பெறுவான்; மேலும், பெண்பிள்ளையோ, தன்னுடைய கணவனது இல்லத் திலே ஆட்சி செலுத்துகிறவளா யிருக்கிறுள்; ஆன படியால், அவள் தனது பராமரிப்பின் கீழேயுள்ள வர்களைக் குறித்து விசாரிக்கப் பெறுவாள்; இன் னம், வேலைக்காரனுங்கூட, அவனுடைய எஜமான னது சொத்து சம்பந்தப்பட்டவரை ஆட்சி செலுத் தக்கூடியவனு யிருக்கிறுன்; ஆகவே, அவன்பால் ஒப்படைக்கப் பட்டது குறித்து அன்னவனும் விசாரிக்கப் பெறுவான்."[1] — (பு'க'ா. 11 : 11)

---

1. இந்த 'ஹதீ':தில் வந்துள்ள ராஃ' என்னும் அரபுச் சொல் ("கால் நடை மேய்த்தல்" என்று பொருள்படும் ரஃ'யிலிருந்து தோன்றியுள்ளது) பேணிக்காப்பவன், பாதுக்காப்பவன், ஆட்சி புரிகிறவன், அதிபதி என்றெல்லாம் கருத்துக் கொள்ளும். இமாம் என்பது, "தலைவன்" என்று பொருள் கொள்ளும்; அரசனுங்கூட இமாமென்று அழைக்கப்படுவ துண்டு. இங்கு அரசன், அல்லது ஆட்சிபுரிகிறவன் என்பவன் ஊழியன், அல்லது வேலைக்காரனது இனத்துடனேயே சேர்த்துக் கணிக்கப்பட் டுள்ளான்; தன் னுடைய எஜமானனது சிற்சில உடைமைகளை ஒப்படைக்கப் பெற்றுள்ள வேலைக்கார னெருவன் அவ்வெஜமானனுக்கு அவ் வுடைமைகள் சம்பந்தப்பட்ட மட்டிலே ஜவாப்'த'ாரியா யிருந்து வருவதே போல, அரசனும் பொதுஜனங்களின் பராமரிப்பும்,

2. அனஸ் கூறி யுள்ளார்: நபிகள் திலகம் (சல்அ'ம்) நவின்றருளி யுள்ளார்கள்:—

"தனது சிரம் திராக்ஷைப்பழ வற்றலைப் போலிருக்கும் நீகிரோவன்— ('ஹப'ஷீ) ஒருவன் (உங்கள்மீது ஆட்சிபுரிய) நியமிக்கப் பெறுவனு யினும், அவனுக்கு நீங்கள் செவிதாழ்த்தி வழிபடக் கடவீர்கள்."[2]— (பு'க'ா. 10 : 54)

---

அவர்களுடைய உரிமைகளின் பாதுகாப்பும் உத்தரவாதத்துடனே ஒப்படைக்கப் பெற்றவனு யிருக்கிறுன்; இவன் தன்னுடைய கடமைகளைச் செவ்வனே நிறைவேற்றி வைப்பதற்கு முதன் முதலில் உண்மை எஜமானனுகிய அல்லா(ஹ்)வுக்கு ஜவாப்' சொல்ல வேண்டியவனு யிருக்கிறுன்; அப்பாலே எவர்களுக்காக இவன் பொதுஜன ஊழியனு யிருக்கிறுனே, அவர்களுக்கு உத்தரம் கூறவேண்டியவனு யிருக்கிறுன். எனவே, இஸ்லாத்தின் கருத்துப் படி, "முடியரசு" என்பது—(அஃதாவது, பரம்பரையாய் அரச பதவியை ஒரு வம்சத்தவரே வகித்துவருவ தென்பது) கூடாத காரியமா யிருந்துவருகிறது. இக் குறிப்பின் கருத்தை ஊர்த் தலைமைக்காரர், நாட்டாண்மைக்காரர், அல்லது அம்பலகாரர் என்பவர்கள் நன்கு நோட்டமிடக் கடவார்களாக. ஜமாஅ'த்தார் களும் தங்களுக்குள்ள உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்வார் களாக.

2. ஒருத்தியோகத்துக் குள்ள அருகதை பெற்றிருந்தால், கறுப்பு நீகிரோவன்கூட வெள்ளைநிற மக்கள்மீது அதிகாரத்தில் அமர்த்தப்படலாமென்பது இதனுல் விளக்கமாகிறது; இஸ்லாத்தில் ஜாதிவித்தியாசமும் நிறவேறுபாடும் ஒரு பொருளாக மதிக்கப் படுவதில்லை யென்பது வெள்ளிடைமலை. இனியொரு பாடபேதப் பிரகாரம் "ஒரு நீகிரோவ அடிமை" என்னும் சொற்கள் காணப் படுகின்றன (முஸ். 17). எனவே, அடிமைகள்கூட அதிகார பீடத் திலே அமர்த்தப்படலாமென்பது இதனுல் ஏற்படுகிறது. இந்தியா வின் பண்டை முஸ்லிம் சரிதையைப் படித்துப் பார்க்க.

3. இப்'னு உ'மர் கூறியுள்ளார்: நபிகள் நாயகம் (சல்அ'ம்) நவின்றருளியுள்ளார்கள்:—

"(இறைவனுக்கு) மாறு செய்யுமாறு ஒருவன் கட்டளையிடப் பெறாதவரை (அதிகார பீடத்தில் அமர்ந் திருப்பவருக்குச்) செவி சாய்த்து வழிபட வேண்டுவது கட்டாயமா யிருக்கிறது; ஒருவன் (இறைவனுக்கு) மாறு செய்யுமாறு கட்டளையிடப் பெறுங்கால், அவன் (அதனைச்) செவியேற்கவோ, வழிபடவோ வேண்டுவ தின்று."[3]—(பு'க'ா.56 : 108)

4. அபூ' ஹுரய்ரா கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) (இவ்வாறு) சொன்னதை அன்னவர் கேட்டார்:—

"எனக்கு வழிபடுகிறவன் எவனோ, அவன் அல்லா(ஹ்)வுக்கு வழிபடுகிறான்; மேலும், எனக்கு மாறு செய்கிறவன் எவனோ, அவன் அல்லா(ஹ்)வுக்கு மாறு செய்கிறான்; இன்னம், அமீருக்கு வழிபடுகிறவன் எவனோ, அவன் எனக்கு வழிபடுகிறான்; மேலும், அமீருக்கு மாறு செய்கிறவன் எவனோ, அவன் எனக்கு மாறு செய்கிறான்; இன்னம், இமாமென்பவர் பாதுகாப்பிற் குரிய கேடகமா யிருக்

3. அல்லா(ஹ்)வின் நியாப்பிரமாண மென்பது, இவ்வுலக அரசனது, அல்லது எப்படிப்பட்ட ஏகசக்ராதிபதியின் அதிகாரத்தை, அல்லது கட்டளையைவிட மிகமிக மேம்பட்டதா யிருக்கிறது. எனவே, :குர்ஆன்ஷரீ'புக்கு, அல்லது மெய்யான 'ஹதீ':துக்கு முரணுள்ள எத்தகைய உத்தரவும் கீழ்ப்படியப்பட வேண்டுமென்பது கட்டாயமில்லை.

கின்றார்;[4]— இவரது பாதுகாப்பிற்காகச் சண்டை செய்யப்படுகிறது; இன்னம், இவரது மூலமாயே பாதுகாப்புத் தேடப்படுகிறது. ஆகவே, அல்லா(ஹ்)வுக்குரிய கடமையைச் செய்யுமாறு அவர் கட்டளையிட்டு, நீதியும் நெறியாய் வழங்குவராயின், அதற்காக அவருக்கொரு சம்மானம் இருக்கிறது; இன்னம், அன்னவர் வேறுவிதம் செய்வராயின், அவர் அதற்குரிய தீய பலனை அனுபவிப்பார்."[5]— (பு'க'ா. 56 : 109)

---

4. "அமீர்" என்பவர், "அதிகாரத்தை வகித்துக் கொண்டிருக்கும் தலைவன்" என்பவராவார்; ஏனையவர்மீது (ராணுவம், ராணுவமல்லாதது ஆகிய) எத்தகைய அதிகாரம் வகிப்பவரையும் பொதுப்படையாய் "அமீர்" என்று அழைப்ப துண்டு. இஸ்லாத்தில் மிகவுமுயரிய தலைமையதிகாரத்தை வகிப்பவர்—(க'லீ'பாவானவர்) அமீருல் மூமினீன்—(ஈமான் கொண்டவர்களின் அதிகாரத் தலைவர்) என்று அழைக்கப்படுகிறார்; 'அமீர்', அல்லது 'இமாம்' என்பவர் இங்கே ஜுன்னு—(தற்காப்பிற்குரிய கேடகம், அல்லது கவசம்) என்று அழைக்கப்படுகிறார். இவ்வுலகில் இமாரத்—(அதிகாரத்துக்கு அடங்கி நடத்தல்) என்பது இல்லாதுபோய் விடின், புறப்பகைவரை விட்டு, அல்லது அகப்பகைமையாகிய ஒருவரை யொருவர் அக்கிரமமாய்த் துன்புறுத்துவதை விட்டுப் பொதுமக்களைக் காப்பாற்றி வைப்பது இயலாது.

5. "அரசனென்பான் தவறே செய்யமாட்டான்,"— அஃதாவது, அரசன் செய்வன அனைத்தும் சரியானவையே— என்னும், பொய்வாதம் இஸ்லாத்தில் செல்லுபடியாக மாட்டாது; எனினும், சட்டப்படி நியமனம் பெற்றுள்ள அதிகாரி சட்டமுறைப் பிரகாரம் விடுக்கும் கட்டளை ஒருவனுக்குப் பிடிக்கவில்லையாயின், அவன் அவருக்கு விரோதமாய்க் கிளர்ச்சியோ, கலகமோ செய்வது கூடாதென்று 'ஹதீ'. 6 கூறுகின்றது.

5. அ’லீ(ரலி’) கூறினர்கள்: நபிகள் நாயகம் (சல்அ’ம்) நவின்றருளினர்கள்:—

“நன்மையான காரியத்திலேதான் (மேலதிகாரிக்குக்) கீழ்ப்படிந்து நடத்தல் வேண்டும்.”[6]— (பு’க’ா. 64 : 61)

6. இப்’னு அ’ப்’ப’ாஸ் கூறினர்: நபிகள் திலகம் (சல்அ’ம்) நவின்றருளினர்கள்:

தன்னுடைய அமீரின் உத்தரவை வெறுக்கிற ஒருவன் எதிர்த்து (விஷமஞ்) செய்யாது வாளா இருக்கக் கடவன்; என்னெனின், (தன்னுடைய) அரசனுக்கு விரோதமாய் ஒரு சாண் அளவேனும் கலகஞ் செய்கிறவன் ஜாஹிலிய்யத்தான— (மடத்தனமான) மரணத்தை யடைகிருன்.”— (பு’க’ா. 93 : 2)

---

6. இஃதொரு நீளமான ‘ஹதீ’:தின் இறுதிப் பகுதியாயிருக்கிறது; அதில் கூறப்பட்டுள்ள விஷயமாவது: ஒரு சிறு சைன்யத்தின் தளகர்த்தரா யிருந்த அமீர் தமதுசேனையைத் ‘துப்பாக்கிப்’பிரயோகம் செய்யுமாறு கட்டளையிட்டார்; ஆனல், அப்படையினர் அவ் வுத்தரவுக்குக் கீழ்ப்படிய மறுத்துவிட்டனர். அது கேட்டு, நபிபெருமானர் அவர்களது செயலை ஆமோதித்து, இறுதியிலே மேற்கூறிய வசனங்களைச் செப்பினர்கள். இனியொரு ‘ஹதீ’:தின் பிரகாரம் (பு’க’ா. 64 : 60) ‘க’ாலித்’ ஒரு சிறு சேனையின் தலைவரா யிருந்தபொழுது, ஒருசில யுத்தக் கைதிகளைக் கொன்றுவிடுமாறு கட்டளை யிட்டார். இவ்வுத்தரவு :குர்ஆன்ஷரீ‘பின் வெளிப்படையான கட்டளைக்கு நேர்மாருயிருந்தபடியால், இப்’னு உ’மர் முதலியோர் அக்கைதிகளைக் கொல்ல மறுத்துவிட்டார்கள். நபிகள் திலகம் (சல்) இந்தச் செய்கையையும் ஆமோதித்துவிட்டார்கள். எனவே, இஸ்லாத்தின் ஸ்பஷ்டமான நியாயப் பிரமாணங்களுக்கு நேர்முரணுயுள்ள கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்கத் தேவையில்லை யென்பது இவற்ருலெல்லாம் செவ்விதாய் விளங்கக் கிடக்கின்றது.

7. அபூ' ஸஈ'த்' கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ'ம்) சொன்னர்கள் :—

"ஜிஹாதி'ல் மகா சிரேஷ்டமானது, நீதியற்ற மன்னன் முன்னிலையில் உண்மையை (ஒளிக்காது) உரைப்பதே யாகும்."[7] — ('திர்மி—மிஷ். 17)

8. உ'ப'ாத'(த்) திப்'னுஸ்' ஸ'ாமித் கூறினர்: நபிகள் நாயகர் (சல்அ'ம்) எங்களை அழைத்தார்கள்; ஆகையால், நாங்கள் அவர்கட்கு விசுவாசப் பிரமாணம் செய்து கொடுத்தோம்; இன்னம், (நாங்கள்) பின்பற்றி நடக்க அவர்கள் எங்கள்மீது சுமத்திய நிபந்தனைகளுள் ஒன்று இதுவாகும்: அஃதாவது, (ஒருத்தரவை) நாங்கள் விழைவதா யிருப்பினும், வெறுப்பதா யிருப்பினும், இன்னம் நாங்கள் கஷ்டதசையிலிருப்பினும், சுகவாழ்விலிருப் பினும், எங்களுரிமைகள் (எங்களுக்குக்) கொடுக்கப் படாமலே (மறுக்கப்பட்டுப்) போய்விடினும், செவி தாழ்த்தி வழிபட வேண்டுமென்று எங்கள் பாலிருந்து அவர்கள் ஒரு வாக்குறுதியை வாங்கிக் கொண்டார்கள்; மேலும், அதிகாரம் ஒப்படைக்கப் பெற்றவர்களின் அதிகாரத்தை நாங்கள் ஆக்ஷேபிக்கக் கூடாதென்றும் (நிபந்தனை ஏற்படுத்தினர் கள்); — "எதிலே உங்களுக்கு அல்லா(ஹ்)வின்

---

7. என்னையெனின், "செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன், கவிகைக் கீழ்த் தங்கும் உலகு," என்பது குறள். ஒருவன் தன்னைத் திருத்திக்கொள்வான்; ஆயின், தனக்கு மேலேயுள்ள அதிகாரியின் தவற்றைத் திருத்தத் தைரியங் கொள்ளான். எனவேதான், இவ்வாறு தைரியங்கொள்வது மகா சிரேஷ்டமுள்ள ஜிஹாதென்று கூறப்பட்டுள்ளது.

பிரத்தியக்ஷமான பிரமாணம் இருக்கிறதோ, அதில் பகிரங்கமான கு‘புரியத்தை நீங்கள் கண்டு கொண்டாலன்றி,”[8] (என்பதை மட்டும் அவர்கள் ஒரு விலக்குவிதியாய்ச் செய்து வைத்தார்கள்).— (பு’க’ா. 93 : 2)

9. ஆ’யிஷாபிராட்டி கூறியுள்ளார்: அல்லா(ஹ்)வின் திருத்தூதர் (சல்அ’ம்) நிர்யாண மடைந்தார்கள்.... மேலும், அன்சார்கள் ப’னீ ஸாஇ’த’ாக்களின் வெளி மண்டபத்திலே ஸஃ’தி’ப்’னு உ’ப’ா’த’ாவைச் சூழ்ந்து ஒருமிக்கக் குழுமிக் கொண்டு, ‘எங்களுள் ளிருந்து ஓர் அமீரும், உங்களுள்— (:குறைஷிகளுள்)ளிருந்து ஓர் அமீரும் ஏற்படுத்தப்படட்டும்,’ என்று கூறினார்கள். அதன்மீது அபூ’ப’க்ரும் உ’மரும் அபூ’உ’ப’ய்த’ாவும் அவர்கள் — (அன்சார்கள்)பால் சென்றார்கள்; மேலும், உ’மர் பேசநாடினார்; ஆனால், அபூ’ப’க்ர் அவரை

---

8. கு‘புர் என்பது, இதற்கு முன்னே கூறப்பட்டிருப்பதே போல் (பு’க’ா. சுருக். 2: 13) “இஸ்லாத்தை நிராகரித்தல்”, அல்லது “அத்தகைய நிராகரிப்புக் குரிய செயல்”, அல்லது “ஒரு தீய செய்கை” என்று கருத்துக் கொள்ளும். எனவே, இந்த ‘ஹதீ’:தில் கூறப்பட்டுள்ள கு‘புர்ப’வா‘ஹ் என்பது, சாதாரணப் புறக் கண்ணுக்குப் புலப்படக்கூடிய “வெளிப்படையான நிராகரிப்பையும், தீச்செயல்களையும்” சுட்டிக் காட்டும். இப்படிப்பட்ட அரசனது அதிகாரத்தை எவரும் எதிர்த்துத் தர்க்கிக்கலாம். இத்தகைய ஆதாரத்தைக் கொண்டே இமாம் ‘ஹுஸைன்’ (ரலி’) எ‘ஜீதி’ன் அதிகாரத்தை எதிர்த்து, ‘அவனது ஆட்சியையும் நிராகரித்துப் போர்புரியத் துணிந்தெழுந்தார்கள். “கொடுங்கோலரசு நெடுங்காலம் நில்லாது,” என்னும் பழமொழி அந்த எ‘ஜீது’க்கே பொருந்திற்று.

மௌனமா யிருக்குமாறு கேட்டுக் கொண்டார்.... அப்பால் அபூ'ப'க்ர் பேசினர்; மேலும், எல்லா ஜனங்களுள்ளும் மகா சொற்சாதுரிய முடையவரே போல் சொல்லத் தலைப்பட்டார்; இன்னம், அன்னவர் தமது பேச்சிலே (இவ்வாறு) கூறினர்: நாங்கள்—(:குறைஷியர்) அமீராயிருக்கிறோம்; நீங்கள்—(அன்சார்கள்) வ'ஜீர்களா யிருங்கள்.' அதன்மீது 'ஹ¬ப'ாப்' இப்'னு முன்'திர் கூறினர்: 'இல்லை! அல்லா(ஹ்)வின்மீது ஆணையாக! நாங்கள் இதனை ஏற்கவே மாட்டோம்; எங்களுள்ளிருந்து ஓர் அமீர் நியமிக்கப்பெறல் வேண்டும்; உங்களுள்ளிருந்தும் ஓர் அமீர் (நியமிக்கப்பெறல் வேண்டும்).' ஆனல், அபூ'ப'க்ர் மீட்டும் கூறலுற்றார்: 'இல்லை! நாங்களே அமீராயிருக்கிறோம்; நீங்கள் வ'ஜீர்களாயிருங்கள்; அவர்களே—(:குறைஷியர்) அந்தஸ்தில் அரபிக ளெல்லாருள்ளும் மிகவுஞ் சிறந்தவர்க ளாகவும், குலப்பெருமையில் அவர்களுள்ளே மகாசிரேஷ்டர் களாகவும் இருந்து வருகிறார்கள்; ஆகையால், உ'மருக்கு, அல்லது அபூ' உ'ப'ய்'த'ாவுக்கு விசுவாசப் பிரமாணம் பண்ணிக் கொடுக்கக் கடவீர் கள்.' (அப்பொழுது) உ'மர் கூறுவா ராயினர்: 'அதைவிட நாங்கள் உமக்கே விசுவாசப்பிரமாணம் பண்ணித்தருகிறோம்; என்னெனின், நீரே எங்கள் தலைவராகவும், எங்களுள்ளே மிகச் சிறந்தவராகவும் அல்லா(ஹ்)வின் திருத்தூதர்பால் (சல்அ'ம்) எங்களுள்ளே மகா பிரீதியுள்ளவராகவும் இருந்திருக் கிறீர்.' ஆகவே, உ'மர் அவரது கரத்தை யெடுத்து, அவருக்கு விசுவாசப் பிரமாணமும் பண்ணிக்

கொடுத்தார்; மேலும், ஜனங்கள் (எல்லாருங்கூட) அன்னாருக்கு (அவ்வாறே) விசுவாசப் பிரமாணம் பண்ணிக் கொடுத்தார்கள்.[9] — (பு’க’ா. 62 : 6)

---

9. இஸ்லாமிய அரசாங்கம் ஒரு ஜனநாயக ஆட்சியேயென்பதும், அதன் தலைவர் பொதுமக்களாலேயே தேர்ந்தெடுக்கப்படவேண்டு மென்பதும் இந்த ‘ஹதீ’:தால் முடிவாக வெளிப்படையாய்ப் புலப்படாநின்றது. நபி பெருமானாரின் தோழர்களுள்ளெல்லாம் ‘ஹ’ஜ்ரத் அபூ’ப’க்ரே(ரவி’) ஐயமற முதன்மையானவராயிருந்தார்; இவரே அதுகாலை இஸ்லாமிய ராஜ்யத்தின் தலைமைப் பதவியை வகிக்கத்தக்க யோக்கியதையும் வாய்க்கப்பெற்றவராகவும், அதன் காரியாதிகளை யெல்லாம் ஒழுங்குசெய்து செங்கோல் நடாத்தக்கூடிய அருகதை வாய்ந்தவராகவும் மிளிர்ந்து வந்தா ரென்னும் உண்மை இந்த ‘ஹதீ’:தாலும் இதனையடுத்து வரும் ‘ஹதீ’:தாலும் தெற்றெனப் புலப்படாநின்றது. அன்சார்கள் ஆதியிலே, இரண்டு அமீர்கள், அல்லது இரண்டு க’லீ‘பாக்கள் இஸ்லாமிய ராஜ்யத்திலே இருக்கலாமென்று எண்ணத் துணிந்தார்கள் ; இறுதியிலே இவ்வாறு செய்வது நன்றன் றென்பதை நன்குணர்ந்து கொண்டார்கள். அப்பால், அரசாங்கத்தின் தலைவர் ஒருவராகத்தான் இருக்கவேண்டு மென்றும், அவருக்கு உதவிபுரிய அமைச்சர்களும் ஆலோசகர்களும் இருக்கலா மென்றும் ஓர் ஒப்பந்தம் உண்டுபண்ணப் பட்டது. வ’ஜீர் என்பார், “உதவிபுரிகிறவர்” என்று பொருள்தரக் கூடியவரா யிருக்கிறார் ; எனவேதான், “அரசனுக்குரிய அமைச்சரா” யிருக்கின்றார் அந்த “வ’ஜீர்” என்பார். ‘ஹ’ஜ்ரத் அபூ’ப’க்ர் அவர்கட்குப் பின்வந்த உ’மர்(ரவி’) சிறிது வேறுவிதமாய் நியமிக்கப்பெற்றார் : அபூ’ப’க்ர் (ரவி’) தங்கள் மரணத்துக்கு முன்னே முஸ்லிம் பிரமுகர்களையும் பெரியார்களையும் கலந்தாலோசித்து, தங்களுக்குப் பின்னே க’லீ‘பாவாக வருதற்கு ‘ஹ’ஜ்ரத் உ’மரை(ரவி’) நியமித்து விட்டுச் சென்றார்கள் ; இப்பெரியார் முதல் க’லீ‘பாவின் ஆட்சியின்பொழுது அவருக்கு வலக்கரத் துணைவரா யிருந்துவந்தார் ; மேலும், அபூ’ப’க்ர்(ரவி’) அவர்களுக்கு அடுத்தபடியில் உ’மர்(ரவி’)

10. அனஸ் கூறியுள்ளார்: ('ஹ'ஜ்ரத்) உ'மர் மின்பர்மீது ஏறியபொழுது, அவரது இரண்டாவது உபன்யாசத்தை அவர்— (அனஸ்) கேட்டார்; மேலுமது நபிகளுதர் (சல்அ'ம்) நிர்யாண மடைந்த தற்கு மறுநாளா யிருந்தது....அவர் சொன்னர்:.....

---

அவர்களே அப்பொழுது க'லீ'பாப் பதவிக்கு அதிக அருகதை வாய்ந்த பெரியாரா யிருந்து வந்தார்கள். ஆயின், 'ஹ'ஜ்ரத் உ'மர்(ரலி') தங்கள் மரணத்துக்கு முன்னே வேறொரு முறையினை மேற் கொண்டார்கள்; அதுகாலை அந்த க'லீ'பாவின் பதவிக்கு வரத் தகுந்த அருகதைவாய்ந்த பெரியவர்கள் அம்முஸ்லிம் சமுதாயத்தில் அறுவராய்க் காணப்பட்டார்கள்; அவ் வாறு பெரியார் களையும் உ'மர்(ரலி') ஓர் ஆலோசனைச் சபையாக நியமித்து, அவர்கள் தங்களுக் குள்ளே ஒருவரைத் தலைவராகத் தேர்ந் தெடுத்துக்கொள்ளக் கடவர்களெனப் பணித்துச் சென்றார்கள். அந்தத் தேர்தலில் 'ஹஜ்ரத் உ':துமான்(ரலி') அவர்களுக்கு அம் மூன்றாவது க'லீ'பாவுக்குரிய உயர்பதவி கிடைக்கலாயிற்று. உ':துமான்(ரலி') கொலையுண்ட பிறகு க'லீ'பாப் பதவிக்குத் தேர்தல் நடத்துவதில் சிறிது அபிப்பிராயபேதம் தோன்றலா யிற்று; ஆனாலும், பெரும்பான்மையோர்கள் 'ஹ'ஜ்ரத் அ'லீ(ரலி' அவர்களையே நான்காவது க'லீ'பாவாகத் தேர்ந்தெடுத்தார்கள். ஆழ்ந்து நோக்குமிடத்து, அந்நான்கு க'லீ'பாக்களும் ஜனநாயகத் தேர்தல்முறைப்படியேதான் அதிபதிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட் டிருக்கிறார்க ளென்னும் உண்மை நன்கு விளங்கக் கிடக்கும். ஒவ் வொருமுறையும், பிளவில்லா திருக்கும்பொருட்டு, வெவ்வேறுவித மாய்த் தேர்தல்முறை நடைபெற்ற போதினும், ஜனநாயகக் கொள்கைதான் அவ் இஸ்லாமிய குடியரசுக்குரிய அடிப்படையா யிருந்துவந் திருக்கிறதென்னும் உண்மையைமட்டும் ஒருவராலும் மறுத்துரைப்பது இயலாது. (எம்முடைய கு'ல'பாயெராஷிதீ'ன் வரிசை நூல்களில் பரக்கக் காணலாம்).

'ஆயின், மு'ஹம்மத்' (சல்அ'ம்) இறந்துபோய் விட்டால், அல்லா(ஹ்) உங்களுக்கு ஒளியை[10] யளித்துள்ளான்; அதனுதவி கொண்டு நீங்கள் நேர்வழி பெறலாம்; (அதைக்கொண்டே) அல்லா(ஹ்) மு'ஹம்மதை' (சல்அ'ம்) நேர்வழியில் நடாத்தினான்; இன்னம், அபூ'ப'க்ர் அல்லா(ஹ்)வின் திருத்தூதரின் (சல்அ'ம்) தோழராக, இருவருள் இரண்டாமவராக[10A] இருக்கின்றார்; அவரே உங்களுடைய காரியங்களை (யெல்லாம்) கண்காணித்து ஆட்சிபுரிய முஸ்லிம்க ளுள்ளே அதிக அருகதை வாய்ந்தவரா யிருக்கின்றார்; ஆகவே, நீங்கள் எழுந்திருந்து, அவருக்கு விசுவாசப்பிரமாணம் பண்ணிக்கொடுக்கக் கடவீர்கள்.'

அவர்க ளுள்ளே சிலர் இதற்கு முன்னே ப'னீ ஸாஇ'த'ாவின் வெளிமண்டபத்திலே அன்னவருக்கு விசுவாசப்பிரமாணம் பண்ணிக் கொடுத்திருந்தார்கள்; இன்னம், பொதுமக்கள் அவருக்கு, அன்னார் மின்பர்மீது அமர்ந்திருந்த பொழுது, விசு

---

10. ஒளி யென்பது :குர்ஆன் மஜீத்'. இஸ்லாமிய சட்டதிட்டங்களுக் கெல்லாம் :குர்ஆன்-ஷரீ'ப அஸ்திபாரமா யிருந்து வருகிறது; எனவே, இஸ்லாமிய மன்னுதி மன்னர்களும் அல்லா(ஹ்) வின் ஆணையின் முன்னே சிரம் வணங்கியே யாதல் வேண்டும். எனவே, அல்லா(ஹ்)வுக்கும், அவனுடைய திருத்தூதருக்கும் மாறாக ஒருவரும் ஒன்றும் செய்வது கூடாதென்க.

10 A. 'ஹ'ஜ்ரத் அபூ'ப'க்ரை(ரலி') அல்லாஹுத் தஆ'லாவே, "இருவருள் இரண்டாமவர்" என்று வருணித்துள்ளான் (:குர். 9 : 40). என்னெனின், இப்பெரியார் நபிபெருமானுருடனே ஹிஜ்ரத்தின்பொழுது தௌர்க்குகை யுள்ளே உறுதுணையா யிருந்தார் என்பதனு லென்க.

வாசப் பிரமாணம் பண்ணிக் கொடுத்தார்கள்.— (பு'க'ா. 94 : 51)

11. ஆ'யிஷா பிராட்டியார் கூறினார்; (நபிகள் நாயகத்துக்குப் பின்னே) அ'பூப'க்ர் க'லீ'பாவாகத் தேர்ந் தெடுக்கப்பட்ட பொழுது, அவர் சொன்னார்: 'நான் பின்பற்றிவந்த (ஜீவனோபாயத்) தொழில் என் குடும்பத்தை யாதரிப்பதில் எவ்வாற்றானும் குறைவுற்றதா யிருக்கவில்லை யென்பதை என்னுடைய ஜனங்கள் அறிந்திருக்கிறார்கள்; மேலும், இப்பொழுதோ, யான் முஸ்லிம்களுக் குரிய காரியங்களிலே ஈடுபட் டிருக்கிறேன்; ஆதலால், அபூ'ப'க்ரின் குடும்பம் இந்த(ப் பொது)ப் பொக்கிஷத்திலிருந்தே (செலவுக்குப் பெற்றுப்) புசிக்கும்; இன்னம், அன்னவரோ— (அபூ'ப'க்ர்) முஸ்லிம்களுக்காக வேலைபார்த்து வருவார்.'[11]— (பு'க'ா. 34 : 15)

12. மஃகி':கில் கூறினார்: நபிகள் பெருமானார் (சல்அ'ம்) (இவ்வாறு) சொன்னதை யான் கேட்டேன்:—

"ஜனங்களை ஆளு அல்லா(ஹ்) அருள்புரிந்து, அப்பாலவன்— (அவ்வரசன்) அன்னவர்களுடைய காரியங்களை (அவர்களது) நன்மைக்காகக் கண்காணித்து மேற்பார்வையிட வில்லையாயின், அவன் சுவர்க்கத்தின் நறுமணத்தைச் சுவாசிக்க முடியாத

---

11. எனவே, இஸ்லாமிய ராஜ்யத்தின் தலைவரும் ஏனையெல்லா உத்தியோகஸ்தர்களையும் போலவே பொது க''ஜானாவிலிருந்து ஒரு குறிப்பிட்ட மாத நிவேதனமே பெற்றுவந்துள்ளார் என்பது அறியக்கிடக்கின்றது.

முறையிலே யன்றி (வேறுவிதம்) செய்யப்படக் கூடிய மனிதன் ஒருவனும் இல்லை.''[12]— (பு’க’ா. 94 : 8)

13. அபூ’ பு’ர்த’ா கூறினர்: அல்லா(ஹ்)வின் திருத் தூதர் (சல்அ’ம்) அ பூ’ மூஸாவையும், முஆ’‘திப்’னு ஜப’லையும் எமனுக் கனுப்பினர்கள்; இன்னம், அன்னவர் இருவரிலிருந்து ஒவ்வொருவரை யும் எமனின் ஒவ்வொரு பகுதியை ஆட்சிபுரிய நியமித்து வைத்தார்கள்; மேலும், எமன்(மாகாணம்) இருகூறுய்ப் பிரிக்கப்பட்டு விட்டதென்று (நம்பெரு மானர்) நவின்றருளி, அப்பால் (இப்படிச்) சொன் னர்கள் :—

“(ஜனங்கள்பால்) மரியாதையுடன் மிருதுவாக நடந்துகொள்ளக் கடவீர்; இன்னம், (அன்னவர் கள்மீது) கடினமாயிருக்க வேண்டாம்; மேலும், (அவர்களைச்) சந்துஷ்டியடையச் செய்யும்; மேலும், (உம்மீது) வெறுப்புக்கொள்ளுமாறு (அவர்களை நீர்) சீண்டி விடாதீர்.”— (பு’க’ா. 64 : 62)

14. (‘ஹ’ஜ்ரத்) உ’மர் தம்முடைய மாகாணதி பதிகளை நியமித்த பொழுது, அவர் அன்னவர்கள் மீது சில நிபந்தனைகளை ஏற்படுத்துவ துண்டென அவர்— (உ’மர்)குறித்துக் கூறப்பட்டு வருகிறது :

‘அரப் நாட்டு அசுவமல்லாத குதிரையின் மீதேறி நீங்கள் சவாரி செய்வது கூடாது; நேர்த்தி

12. ஆகையால், அரசாங்க உத்தியோகஸ்தர்கள் பொது ஜனக் காரியங்களை அப் பொதுமக்களின் நன்மையின் பொருட்டே நன்கு கவனித்துவர வேண்டியவர்களா யிருக்கிருர்கள். அவர்கள் பொதுஜன ஊழியர்களே யல்லது, பொதுஜன அதிகாரிகளல்லர்.

யான மாவைக்கொண்டு செய்யப்படும் ரொட்டியை நீங்கள் புசிப்பது கூடாது; நேர்த்தியான உடைகளை நீங்கள் உடுத்துவது கூடாது; இன்னம், (பொது) ஜனங்களின் தேவைகளுக்கு இடங் கொடாது நீங்கள் உங்கள் வாயிற் கதவுகளைச் சார்த்திக் கொள்வது கூடாது. இக் காரியங்களில் ஏதேனு மொன்றை நீங்கள் செய்வீர்களேல், அப்பால் உங்கள்மீது தண்டனை வந்திறங்கும்.'

அப்பால், அவர்கட்குப் பிரயாணஞ் சொல்லி வழியனுப்ப அவர்— (உ'மர்) அவர்களுடனே புறப் பட்டுச் செல்வார்.[13]— (மிஷ். 17 : 1)

15. 'ஹஸன்(ரலி') கூறினர்: ஆட்சி புரிகிற வர்கள் தங்கள் இழிய இச்சைகளைப் பின்பற்றி நடக்கக்கூடா தென்றும், (பொது) ஜனங்களுக்கு (அ காரணமாய்)ப் பயப்படக்கூடா தென்றும்,

---

13. மாகாணாதிபதிகள் "கவர்னர்" பதவியை வகித்து வரினும், ஒரு சாதாரண முஸ்லிம்குடியைப் போலவே உயிர் வாழ்க்கை நடாத்தவேண்டியவர்களா யிருக்கின்றார்கள். அவர்கள் அரப் நாட்டு அசுவங்கள்மீதே ஏறிச் சவாரிசெய்ய வேண்டு மென்பது, அன்னவர்கள் நல்ல ராவுத்தர்— (குதிரை வீரர்)களாக இருக்கவேண்டு மென்னும் கருத்தையே குறித்துக் காட்டுகின்றது; இன்னம், அன்னவர்கள் பொதுமக்களால் எளிதில் எட்டக்கூடிய எளிய தன்மையுள்ளவர்களா யிருந்துவருதல் வேண்டும். "காட் சிக்(கு) எளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல், மீக்கூறும் மன்னன் நிலம்," என்பது குறள். நபிபெருமானா ரவர்களே இதனைச் செய்து காண்பித்துள்ளார்கள்; எவ்வாறெனின், அம்மஹானுபாவர் அரப் நாடு முழுமைக்கும் இணையிலா ஏகசக்ராதிபதியாய் உயர்ந்திருந்த பொழுதுங்கூடத் தங்கள் விடுதிமுன்பினில் வாயில்காப்போனை— (த்'ர்வானை) வைத்துக்கொண் டிருந்ததில்லை என்க (பு'க'ா. 23 : 31).

அல்லா(ஹ்)வின் அறிவிப்புக்களுக் காக யாதொரு சிறு கிரயமும் பெறக்கூடா தென்றும், அல்லா(ஹ்) அவர்களுக்குக் கட்டளை யிட்டுள்ளான்.[14]— (பு'க'ா. 94 : 16)

16. அ'ம் ரிப்'னு மய்மூன் கூறினர்: உ'மர் (குத்தப்பட்டுக்) காயமுண்டாக்கப் பட்டதற்குச் சில தினங்களுக்கு முன்னே நான் அவரை மதீனவில் கண்டேன். அவர் 'ஹு'தய்'பா இப்'னுல் யமானுடனும், உ':துமான் இப்'னுல் 'ஹுனய்'புடனும் பேசுவதற்காக நின்றார். 'நீங்கள் (இ'ரா:க்கில்) எவ்வாறு நடந்து கொண்டீர்கள்? நிலத்தின்மீது அதனல் தாங்கமுடியாத சுமையைச் சுமத்திவிட்டதாக நீங்கள் நினைக்கின்றீர்களோ?' என்று அன்னவர் அவர்களைக் கேட்டார். (அதற்கு) அவர்கள் சொன்னர்கள்: 'அஃது எளிதில் சுமக்கக் கூடிய சுமையையே அதன்மீது நாங்கள் சுமத்தினேம்.'[15] அப்பால் உ'மர் கூறினர்: 'அல்லா(ஹ்)

---

14. ஆட்சிபுரியும் அதிகாரத்தை வாய்க்கப்பெற்றவர்கள் சுயநலத் தியாகமும் பரநலப் பேணலுமே முதன்முதலாக மேற்கொள்ளக் கடமைப்பட் டுள்ளார்கள். எக்காரியத்திலும் "இனிய பரிதானம்"— இலஞ்சம்— கிடைக்கு மென்று எதிர்பார்ப்பது அன்னவர்கட்கு அழகான செய்கையாக மாட்டாது. இத் துர்வழக்கம் பலமாய்க் கண்டிக்கப்பட் டுள்ளது. இக்கால சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் இதனைக் கவனிப்பார்களா?

15. 'ஹு'தய்'பாவும் உ':துமானும் சென்று நிலவரியை நிச்சயம் செய்துவருமாறு உ'மர் (ரலி') அவர்களால் நியமித்தனுப்பப் பட்டார்கள். இ'ரா:க்கில் அவ்விருவரும் விதித்த வரி ஒரு பெருந் தொகையாக உயர்ந்துவிட்டது; எனவேதான், அந்நாட்டு மக்கள் ஒருகால் அளவுக்குமீறிய வரியை விதிக்கப் பெற்றுவிட்டார்களோ

என்னை உயிருடனே (விட்டு) வைத்தால், இ’ரா:க் ஜனங்களின் விதவைகளை, எனக்குப் பின்னே எவருடைய உதவியையும் அவர்கள் நாடவேண்டுவ தில்லாத வாறு (அத்துணை க்ஷேமமாக) நான் செய்து வைத்துவிடுவேன்.’[16].... இன்னம், அன்ன வர் சொன்னார்: ‘எனக்குப் பின்னே க’லீ‘பாவாக வருகிறவருக்கு,

‘ஆதியில் வந்த முஹாஜிரீன்கள் குறித்து, அவர் அன்னவர்களின் உரிமைகளை மதித்து, அவர் களுடைய கண்ணியத்தைக் காப்பாற்றவும் வேண்டு மென்று நான் நல்லுபதேசம் புரிகின்றேன். இன்னம்,

‘அன்சாரிய்யீன்கள் பால், அவர்களுள்ளே நற் கருமம் புரிகிறவர்களின் (காரியங்களைத்) திருப்தி யுடனே ஏற்றுக்கொண்டும், அவர்களுள்ளே தீக் கருமம் புரிகிறவர்களை மன்னித்துக் கொண்டும் பக்ஷத்துடனே இருந்து கொள்ள வேண்டுமென்று

---

வென்று ‘ஹ’ஜ்ரத் உ’மரவர்கள் ஐயங்கொண்டு அவ்வாறு வினவி னார்கள். அதற்கு விடை கூறுகையிலே, அந்நாட்டு நிலம் சுமக்கக் கூடிய வரியையே அதன்மீது விதித்ததாக அவ்விருவரும் கூறிச் சமாதானம் சொன்னார்கள்.

16. உ’மர்(ரலி’) அவர்கள் விதவைகளின் சம்ரக்ஷணைக்காக அரசாங்கமே செலவுசெய்து அவர்களைக் காப்பாற்ற வேண்டு மென்று செய்துவிட நாடியிருந்தார்கள் என்பது இதனால் நன்கு விளங்கக் கிடக்கின்றது. இதற்கு முன்பே அப்பெரியார் வயோ திகர்களுக்கு உபகாரச் சம்பளத்தை நிச்சயப்படுத்தி, பலஹீனர் களுக்கும் அங்கஹீனர்களுக்கும் உபகார உம்பளம் கொடுக்க வேண்டியதற் குரிய ஏற்பாட்டினைத்தையும் ஏற்படுத்திவிட்டிருந் தார்கள்.

நான் அவருக்கு நல்லுபதேசம் புரிகின்றேன். இன்னம்,

'நகர்ப்புற வாசிகளுக்கு நன்மை செய்ய வேண்டுமென்றும்—என்னெனின், இன்னவர்களே இஸ்லாத்தின் ஆதரவாகவும் செல்வத்தைச் சேகரிப்பவர்களாகவும் பகைவருக்குப் பயங்கரர்களாகவும் இருக்கிறூர்கள்,— அவர்கள் மிச்சப்படுத்திக் கொடுக்கக்கூடியதைத் தவிர்த்து, வேறொன்றும் அவர்கள்பாலிருந்து எடுக்கப்படுவது கூடாதென்றும், அவர்களது அனுமதி கொண்டே (மேற்கூறியதும் வாங்கப்படவேண்டும்) என்றும் நான் அவருக்கு நல்லுபதேசம் புரிகின்றேன். இன்னம்,

'காட்டுப்புற வாசிகள்பால் நல்லவிதமாய் நடக்க வேண்டுமென்றும்— என்னெனின், அன்னவர்களே அரபிகளின் அஸ்திபார மாகவும், இஸ்லாத்தின் ஆணிவேராகவும் இருந்து வருகிறூர்கள்,—ஆதலால், அவர்களுடைய கால்நடைகளிலிருந்து விலை மலிவாயுள்ளவைகளே ['ஜ(க்)காத் தாக] வாங்கப்பட வேண்டு மென்றும், இவைகளும் அவர்களுள்ளே ஏழைகளா யுள்ளவர்களுக்கே திருப்பிக் கொடுக்கப்பட வேண்டுமென்றும் நான் அவருக்கு நல்லுபதேசம் புரிகின்றேன்.[17] இன்னம்,

---

17. நகர்ப்புற வாசிகளும், நாட்டுப்புற வாசிகளும் வாழ்ந்து வந்த நிலைமைகளே வெவ்வேறுவிதமா யிருந்துவந்தன ; ஆகையால், அவ்விரு திறத்தாரின் க்ஷேமத்தையும் கருத்திலிருத்தியே காரியாதிகள் நடைபெறுமாறு முஸ்லிம் அரசாங்கம் கவனித்துக் கொள்ள வேண்டுமென்பது உ'மர்(ரலி') அவர்களின் உயரிய நோக்கமா யிருந்துவந்தது. மேலும், பொதுஜனங்களின் ஆமோ

'அல்லா(ஹ்)வின் பாதுகாப்பின் கீழே, அவனுடைய திருத்தூதரின் (சல்அ'ம்) பாதுகாப்பின் கீழே இருந்துவரும் மக்களைக் குறித்து[18] அவர்களுடனே செய்யப்பட்டிருக்கும் உறுதிமொழி

---

திப்பைக் கொண்டே அன்னவர்களுக்கு வரிவிதிக்க வேண்டுவதாயிருந்தது; இதனாலும் அம் முஸ்லிம் ராஜ்யம் ஜனநாயக முறையையே அடிப்படையாகக் கொண்டு ஆட்சிபுரிந்து வந்ததென்பது வெள்ளிடை விலங்கலா யிருக்கிறது.

18. முஸ்லிம் அரசாங்க எல்லைக்குள்ளே வாழ்ந்துவந்த முஸ்லிமல்லாதார் அஹ்லல்'திம்மா, அல்லது 'திம்மீகள் என்று அழைக்கப்பட்டு வந்தார்கள். ('திம்மா என்பது உறுதிமொழி யொப்பந்தத்தைக் குறிக்கும்). இவ்விடத்தில் அவர்கள் அல்லா(ஹ்)வின் பாதுகாப்பிலும், அவனுடைய திருத்தூதரின் பாதுகாப்பிலும் இருந்துவருவதாகக் கூறப்பட்டிருக்கிறார்கள்; இதனால் அவர்களுடைய உரிமைகளின் உயர்வு மிக நன்றாய் விளங்கக் கிடக்கின்றது. இவர்கள் முஸ்லிம் ராஜ்யத்தி லுள்ள மற்றெல்லா முஸ்லிம் குடிமக்களையும் போலவே சுயேச்சையையும் சுதந்தரத்தையும் பெற்றுக்கொண் டிருந்தார்கள்; இன்னம், அன்னவர்கள் சேனையில் சேர்ந்துகொள்ள வேண்டிய அவசியத்தி னின்றும் விடுவிக்கப்பெற் றிருந்தார்கள்; இதற்காக அவர்கள் ஒரு சிறு வரியே கொடுத்து வந்தார்கள்; அத்தொகை முஸ்லிம் குடிகள் கொடுத்துவந்த 'ஜ(க்)காத் தொகையைப் பார்க்கினும் மிகவுங் குறைவுள்ளதாகவே இருந்துவந்ததெனல் வேண்டும். அம்முஸ்லிம் மக்கள் 'திம்மீகள் கொடுத்துவந்த வரியைப் பார்க்கினும் மிகப் பெருந் தொகையான 'ஜ(க்)காத்தைக் கொடுப்பதோடு நின்றுவிடாது, முஸ்லிம்களையும், மூஸ்லிமல்லாதார்களையும் தற்காத்து நிறுத்தவேண்டிய போர்களி லெல்லாமும் படை வீரர்களாய்ச் சேர்ந்து சண்டைக்குச் செல்லக் கட்டாய ராணுவ சட்டத்திற்கும் உட்பட்டவர்களா யிருந்துவந்தார்கள்.

யொப்பந்தம் நிறைவேற்றி வைக்கப்பட வேண்டு மென்றும், அவர்களது தற்காப்பிற்காகப் போர்கள் புரியப்பட வேண்டு மென்றும், அன்னவர்கள் சுமக்கக் கூடியதைக் கொண்டு மட்டுமே (வரி) சுமத்தப்பட வேண்டு மென்றும் நான் அவருக்கு நல்லுபதேசம் புரிகின்றேன்.'— (பு’க’ா. 62 : 8)



# ஷாஜஹான் புக் டெப்போ

30, சாந்தோம் :: சென்னை - 4

"தாருல் இஸ்லாம்" ஆசிரியர்

அல் ஹாஜ் பா. தாவூத்ஷா பீ. ஏ.,

அவர்களால் எழுதப்பட்ட

## ஒரு சில அரிய நூல்கள்

### " ஜவாஹிருல் புர்க்கான் "—அம்மயத் ஜுஜு

குர்ஆன் ஷரீப் 30-ஆம் பாகத்தின் தமிழ் மொழிபெயர்ப்பும் அதன் விரிவான வியாக்யானமும் ஒருங்கே கூடியன; 201 பக்கங் கொண்டதாய்த் தலைப்பில் குர்ஆன் அரப் ஆயத் மிகப் பெரிதாய்ப் போடப்பட்டு அதன்கீழ் அதன் சரியான செந்தமிழ் மொழி பெயர்ப்பும், பிறகு விரிவான அருந்தமிழ் வியாக்யானமும் (தப்ஸீர்) அச்சிடப்பட்டு, கெட்டியான காலிகோ பைண்டும் செய்யப்பட்டது. விலை ரூ. 2—8—0.

### ஷை அம்மயத் ஜுஜு

அரபிலேயே ஆயாத்துகளைத் தலைப்பில் போட்டு, அதன் கீழே பெரிய எழுத்தில் அதன் அர்த்தம் மட்டும் எழுதி, மிக அழகான திக் பேப்பரில் அச்சிட்டிருக்கிறோம். இது பள்ளி மாணவர்களுக்குப் பெரிதும் பயன்படக் கூடியது.

விலை ரூ. 1—4—0.

### அல்ஹம்து தப்ஸீர் (சூர்த்துல் பாத்திஹா) - விரிவுரை

அல்ஹம்து சூராவுக்குத் தப்ஸீர். "அல்ஹம்துசூரா" குர் ஆன் ஷரீபின் தோற்றுவாயே யாயினும், இதுவே அவ்வேதத்தின் முழுக்கருத்தின் சுருக்கமாக (உம்முல் குர்ஆனாக) இருக்கிறது. எனவே, இந்த அல்ஹம்தின் முழுக்கருத்தையும் அறிந்தால், குர் ஆன் ஷரீபின் பூராத் தாத்பரியத்தையும் உணர்ந்தது போலாகும். ஆகையால், குர்ஆனின் கருத்தை யுணருமுன்னே அல்ஹம்தின் ஆழிய கருத்தினை அறிந்துணருதல் அவசியமேயாம். இன்னம், இச்சிறு நூலில் பல மதங்களுக்கும் தக்க ரத்து கூறப்பட்டிருக் கிறது. அனைவரும் ஆவலுடனே அறிந்துணரல் அத்யாவசியமே. (மேலேயுள்ள 'அம்மயத்' தப்ஸீரில் இந்த அல்ஹம்து சேர்க்கப் படவில்லை.) மிகத் தெளிவாய், முத்துப்போன்ற எழுத்தால், அரப் ஆயாத்தும் அர்த்தமும் "கொட்டையெழுத்தால்" அழகிய தாளில்

நேர்த்தியாய் அச்சிட்டுப் பூர்த்தியான பைண்டும் செய்துள்ளது. மலிவான விலை. தெளிவான உரை. விலை ரூ. 1—0—0.

## குலபாயெ ராஷிதீன் வரிசை:—

### மஹான் முஹம்மத் நபி (சல்) இரண்டாம் பதிப்பு

நபிகள் நாயகம் முஹம்மத் நபி (சல்அம்) அவர்களின் (சரித்திர) சம்பந்தமான பூர்விகமானதும் சரியானதும் உண்மை யானதுமான சரித்திரம் சுருக்கமாகவும் விளக்கமாகவும், விரிவாக வும் வரையப்பட்டுள்ள அழகிய நூல். இவ்விரண்டாம் பதிப்பில் பல தலைவர்களின் அபிப்பிராயங்கள் சேர்க்கப்பட்டு விரிக்கப் பட்டிருக்கிறது. நேர்த்தியான அச்சு. கிளேஸ் காகிதம்.

விலை ரூ. 1—12—0.

### அபூபக்ர் சித்தீக் (ரலி) இரண்டாம் பதிப்பு

குலபாயெ ராஷிதீன் என்றழைக்கப்படும் முதல் நான்கு கலீபாக்களுள் முதல்வராய் விளங்கிவரும் ஹஜ்ரத் அபூபக்ர் சித்தீக் அவர்களுடைய ஜீவிய சரித்திரம் தக்க ஆதாரங்களுடன் மிக்க விளக்கமாக எழுதப்பட்டிருக்கிறது. திக் கிளேஸ் காகிதம். விலை ரூ. 2—0—0.

### உமறெ பாரூக் (ரலி) இரண்டாம் பதிப்பு

குலபாயெ ராஷிதின் என்றழைக்கப்படும் முதல் நான்கு கலீபாக்களுள் இரண்டாவதாய் விளங்கிவரும் ஹஜ்ரத் உமறெ பாரூக் அவர்களுடைய ஜீவிய சரித்திரம் தக்க ஆதாரங்களுடன் மிக்க விளக்கமாக எழுதப்பட்டிருக்கின்றது. நல்ல முத்துப் போன்ற எழுத்தில் 253 பக்கம்; நல்ல திக் காகிதத்தில் மிக்க அழகாக அச்சிடப்பட்டிருக்கிறது. விலை ரூ. 2—4—0.

### உதுமான் (ரலி) அலீ (ரலி) சரிதை

குலபாயெ ராஷிதீன் என்றழைக்கப்படும் முதல் நான்கு கலீபாக்களுள் மூன்றுவது நான்காவதாய் விளங்கிவரும் ஹஜ்ரத் உதுமான்(ரலி), அலீ(ரலி) சரிதை தக்க ஆதாரங்களுடன் மிக்க விளக்கமாக எழுதப்பட்டிருக்கிறது. காகிதப் பஞ்சம் மிக்குள்ள இக்காலத்தில் நல்ல முத்துப்போன்ற எழுத்தில் நல்ல கிளேஸ் காகிதத்தில் அழகாக அச்சிடப்பட் டிருக்கிறது. [மஹான் முஹம்மத் நபி (சல்) முதல், அபூபக்ர் சித்தீக், உமறெ பாரூக்,

உதுமான் அலீ (ரலி) முடிய நான்கு நூல்களும் குலபாயெ ராஷிதீன் வரிசை யென்று பெயரிடப்பட்டு ஒரு செட்டாக உபயோகிக்கத்தக்கன.] விலை ரூ. 2—0—0.

## ஈமான் (இஸ்லாத்தின் மூலக் கொள்கைகள்)

இவ்வழகிய நூல் இஸ்லாம் மார்க்கத்தின் ஈமான் சம்பந்தமான மூலக் கொள்கைகளாகிய ஏழு அம்சங்களைப் பற்றி விரிவாகவும் விளக்கமாகவும், புத்திக்கும் யுக்திக்கும் பொருந்தும் வண்ணமாகவும் இனிய தமிழில் எழுதப்பட்டுள்ளது. இஸ்லாத்தில் ஈமான் கொள்ளவேண்டிய விஷய விளக்கமும் அதன் துஆவும் உடன் காணப்படும். 4-ஆம் பதிப்பு. திக் கிளேஸ் காகிதம். விலை அணு 8.

## இஸ்லாம் (சித்திரப் படங்களுடன்)

**தக்க ஆதார கிரந்தங்களைக்கொண் டெழுதப்பட்டது ; படங்கள் பல நிறைந்தது.**

**முழுதும் திருத்திப் புதுப்பித்து விரித்தெழுதியுள்ள 8-ஆம் பதிப்பு**

ஹனபீ ஷாபீஈ, இருதிறத்தாருக்கும் அத்யாவசியமானது.

இது முஸ்லிம்களெல்லோருக்கும் அவசியமான ஒரு மகா சிறந்த தமிழ் நூல். இதில் இஸ்லாத்தின் ஐந்து பர்ல்களும் (கடமைகளும்) மிகத் தெளிவாகவும் விளக்கமாகவும் புத்திக்கும் யுக்திக்கும் மிகப் பொருத்தமாகவும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு கடமையின் சார்பான தத்துவமெல்லாம் (மஸ்அலாக்கள்) விஸ்தரிக்கப்பட் டிருப்பதுடன், அனுஷ்டானத்திற்கு வேண்டிய விவரங்களனைத்தும் சாங்கோபாங்கமாகக் கூறப்பட்டிருக்கின்றன. இஸ்லாத்தின் கடமைகள் சார்பான எந்த விஷயத்தையும் இதில் அதி சுலபமாக எடுத்துத் தெரிந்துகொள்ளலாம். அவசியமான இடங்களில் அரபு வாக்கியங்களும் அவற்றின் தமிழ் மொழிபெயர்ப்புக்களும் நிரம்பக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இதிலுள்ள மஸ்அலாக்களெல்லாம் சரியான மூலக் கிரந்தங்களிலிருந்து தழுவிப் படிப்போருக்கு மிக எளிதில் விளங்குமாறு விளக்கமாகப் புதிய முறையில் அழகிய எளிய செந்தமிழ் நடையில் எழுதப்பட்டிருக்கின்றன.

இதில் தொழுகைக்கு வேண்டிய 10 நிலைகளும் ஒருவரும் இதுவரையில் பார்த்திராத அதி விசித்திரமான 10 சித்திரப் படங்களால் ஆங்காங்கே விளக்கப்பட் டிருக்கின்றன. இதனால் ஒவ்வொரு நவ் முஸ்லிமும்கூடப் பிறர் உதவியின்றித் தாமே தொழுகையைக் கற்றுக்கொள்ளலாம்.

இன்னம் இப்புதிய 8-ஆம் பதிப்பில் இஸ்லாத்தின் இறுதிக் கடமையான ஹஜ்ஜின் விஷயமும் மிக விரிவாகவும் விளக்கமாகவும் சொல்லப்பட் டிருக்கிறது: ஹஜ்ஜுக்குச் செல்லக் கூடியவர்கள் தங்கள் வீட்டை விட்டுப் புறப்பட்டது முதல் மக்கா மதீனா சென்று ஹஜ்ஜு செய்து திரும்பி வரும் வரையில் வேறெவருடைய துணையு மில்லாமல் சுயமே எல்லா விஷயங்களையும் தாங்களே தெரிந்துகொள்ளுமாறு சகல விஷயங்களும் மிகத் தெளிவாக விளக்கிக் காட்டப்பட் டிருக்கின்றன. இப்புதிய பதிப்பில் புதிதாகக் கஃபத்துல்லாஹ்வுடன் அதற்குச் சம்பந்தமான முக்கிய புண்ணிய ஸ்தலங்களின் படமும், இஹ்ராம் எங்ஙனம் கட்டி நிற்றல் வேண்டும்? தவ்வாப்ரமல் செய்யுங்கால் முந்திய மூன்று சுற்றில் வஸ்திரத்தை எவ்வண்ணம் போட்டுக் கொண்டிருக்க வேண்டும்? என்ற படமும், கஃபத்துல்லாஹ்வின் பொதுவான தோற்றத்தைக் காட்டும் இன்னமொரு படமும் பெருநாள் தொழுகைப் படங்களும் சேர்க்கப்பட் டிருக்கின்றன. அழகான மேலட்டையும் போடப்பட்டுள்ளது. விலை ரூ. 2—8—0.

## இஸ்லாமிய ஞானபோதம்

(அஞ்ஞானத்தைப் போக்கவல்லது சுஞ்ஞானத்தைத் தரவல்லது)

[மதங்களின் மாபெரும் மகாநாட்டில் முதற்பரிசு பெற்ற புத்தகம்]

மேல் நாடுகளில் இஸ்லாத்தின் போதனைகள் தீவிரமாய்ப் பரவுவதற்கு இப்புத்தகத்திலுள்ள விஷய ஞானங்களே உதவியளித்திருக்கு மென்பதில் கிஞ்சித்தும் ஐயமில்லை. இந்நூலின் கண்ணே இஸ்லாத்தின் பல்வேறு உண்மைத் தத்துவச் சிறப்புக்கள் தூய்மையாக விளக்கப்பட்டிருப்பதுடன், சிருஷ்டி கர்த்தா ஒருவன் இருக்கிறு னென்றும் இதில் மெய்யாக ருஜுப்பிக்கப்பட்டுள்ளது. ஆஸ்திகரா யிருப்பவருக்கும், கடவுளே இல்லையென்று கூறிக்கொண்டு நாஸ்திகரா யிருப்பவருக்கும், ஒவ்வொரு முஸ்லிம் அல்லாத கிறிஸ்தவருக்கும் இந்நூல் பகுத்தறிவுக்கொத்த நன்னூலாகும். விலை ரூ. 4.

## நாயகத்தின் நற்குணங்கள்

நபிகள் திலகத்தின் குணாதிசயங்களும் நன்னடக்கைகளும் இப்படி இருந்தனவென்று அறிந்துகொள்ள இஃதொரு முதன்மையான நூல். இதனை எல்லா முஸ்லிம்களும் வாசித்தறிதல் வேண்டும். அப்பெருமானாரைப் பின்பற்றி யொழுக விரும்பும் சன்மார்க்கர்களுக் கெல்லாம் அத்தியாவசியமானது. சஹீஹ் புகாரீயும் இந்நூலும் எம்பெருமானாரை உள்ளபடியே உணர்ந்து கொள்ள விழையும் ஒவ்வோர் ஏனை மதத்தினருக்கும் அத்யாவசியமானவையே. இதன் விலை ரூ. 1—8—0.

## நாயக வாக்கியம் 451 (புதிய பதிப்பு)

நபிகள் நாயகம் அவர்கள் மனிதகோடிகளின் நன்மையைக் கோரித் திருவாய் மலர்ந்தருளிய 451 திருவாக்கியங்களும் (ஹதீது ஷரீபுகளும்) அச்சிடப்பட் டிருக்கின்றன. இவ் வாக்கியங்கள் சிறந்த சன்மார்க்கத்தைப் போதிக்கக் கூடியவைகள். இப்புத்தகத்தைப் படிப்பதனால் சகல முஸ்லிம்களும் நாயகமவர்களின் திருவாக்கியங்களின் உண்மைக் கருத்துக்களை அறிந்து அவற்றின் படி நபிகள் நாயகத்தைப் பின்பற்றி நடத்தற் கேது உண்டாகும். இப்புத்தகம் சட்டைப் பைக்குள் அடங்கும் விதமாக அச்சிடப் பட்டிருக்கிறது விலை ரூ. 1—8—0.

## இஸ்லாம் இணையிலாச் சாந்தி

(முன் 'இஸ்லாம் எப்படிச் சிறந்தது' என்னும் பெயருடன் வெளியிடப்பட்டிருந்த நூலை இப்பொழுது மேற்கண்ட பெயருடன் திருத்தி வெளியிட்டிருக்கிறோம்.)

இது டாக்கா சர்வகலாசாலை அறிஞர் (நவ்முஸ்லிம்) ஸிராஜுல் இஸ்லாம் (முன் பெயர் தாஸ் குப்தா) என்பவரால் எழுதப்பட்ட விஷயங்களும், இதர பல அரிய விஷயங்களும் சேர்ந்து மூன்று பாகங்களாக அமையப்பெற்ற ... கிறிஸ்து மதம், பௌத்த மதம், ஜைனம், ஹிந்து மத... ... இஸ்லாம் ஒப்பிட்டுக் காட்டப்பட்டிருக்கிறது. சித்திரப் படங்களுடன் விலை ரூ. 1—8—0.

## ஆரம்ப தினத்தை ஆவலுடன் எதிர்பாருங்கள்!

தூங்கிக் கிடந்த தமிழகத்தைத் தட்டியெழுப்பி, மூடிக்கிடந்த கண்களை முழுக்கத் திறந்துவைத்து, மூடக்கொள்கைகளை மூன்று காதம் முடுக்கி விட்டு, மார்க்க பக்தியை அனைவர்க்கும் அள்ளிச் சொரிந்து, சமூக அனுசார விபரீதப் போக்கை வேருடன் களைந்து, முஸ்லிம் வாலிபர்களின் உதிரத்துள் உணர்ச்சி மிக்க உத்வேகத்தை ஊட்டி, கல்வித்துறையில் முன்னேற்றத்துக்கு வழி கோலி, உங்களெல்லாரின் உள்ளத்துள்ளும் என்றென்றும் மிகப் பெருமையுடன் நின்றிலங்கித் திகழ்ந்து மிளிரும்

# "தாருல் இஸ்லாம்"

இன்னம் சில வாரங்களில் மாதப் பத்திரிகையாக வெளிவரப் போகிறதென்னும் மகிழ்ச்சிக்குரிய நற்செய்தியை யாம் பெருமையுடன் அறிவிக்கிறோம். "தாருல் இஸ்லாம்" ஏற்கெனவே எல்லார் மனத்துள்ளும் ஆணி வேரூன்றிப் பதிந்திருப்பதால், அம் மாசிகை, ஒப்பற்ற மாதிரியில் சிறந்த முன் மாதிரியாகவே தமிழுலகில் மீட்டும் ஒளிவீசி ஜொலிக்க ஆண்டவன் அருள் புரிவானாக! ஆமீன்!

நிர்வாக ஆசிரியர்:

**அல்ஹாஜ் பா. தாவூத்ஷா, பீ.ஏ.**

பொறுப்பாசிரியர்:

**N. B. அப்துல் ஜப்பார், பீ.ஏ.**

